# முன்னுரை

சங்க கால மூவேந்தர்களில் செங்குட்டுவன் சேரர் மரபிலும் கரிகாலன் சோழர் மரபிலும் நெடுஞ்செழியன் பாண்டியர் மரபிலும் பெரும் சிறப்போடு அரசாண்டார்கள் என்று வரலாறு கூறுகிறது மூவரது காலமும் வேறுவேறு ஒவ்வொருவரும் தங்கள் ஆட்சியின் போது மற்ற இரு அரச மரபினை அடக்கி ஆண்டார்கள். சேரமன்னன் செங்குட்டுவன காலத்திலும் அப்படித்தான் அவனுக்கு அடங்கியவர்களாகவே சோழமன்னர்களும் பாண்டியர்களும் இருந்தார்கள் இவர்களில் சேரன் செங்குட்டுவனுக்கு மட்டுமே இருந்த தனிப் பெருமை என்ன வென்றால் அவனது வில் கொடியில் சோழர் மற்றும் பாண்டியர் சின்னமும் பொறிக்கப் பட்டிருந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன இப்பெருமை சோழருக்கோ பாண்டியருக்கோ எந்த காலத்திலும் இருந்ததாகச் சான்றுகள் இல்லை

அப்படிப் பட்ட தனிப் பெருமைக்குரிய சேர மாமன்னன் செங்குட்டுவனின் வாழ்க்கையில் வியப்பான ஒரு நிகழ்ச்சியாக ஒன்றை இலக்கியங்கள் கூறுகின்றன அதாவது செங்குட்டுவன் தனது மகனை தன் மதிப்பிற்குரிய புலவர் பெருமான் பரணருக்கு பரிசாக அளித்தான் என்பது தான் அந்த வியப்பூட்டும் நிகழ்ச்சி உண்மையாகவே புலவருக்குப் பரிசாக அளித்த இந்தப் பின்னணியில் சேரன் செங்குட்டுவன்

'கடல் பிறகோட்டிய செங்குட்டுவன்' என்று சிறப்புப் பெயர் பெற்றதற்குக் காரணமான கடல் கொள்ளையர்களை அழிக்க கடல் போரை இந்நாவல் தருகிறது.

இக்கதை நடந்த காலம் - அதாவது சேரன் செங்குட்டுவன் இருந்த காலம் கி.பி. இரண்டாவது நூற்றாண்டு என்று பொதுவாகப் பேசப் பட்டாலும் அது குறித்த சர்ச்சைகள் ஓயவில்லை. ஆராய்ச்சி என்ற பெயரில் பொருந்தாத கருத்துகளையெல்லாம் பலரும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். செங்குட்டுவனின் வீரச்செயல்கள் கற்பனை என்றும் அவனுக்கும் அவனது சகோதரன் இளங்கோவடிகளுக்கும் தொடர்பில்லை என்றும், சிலப்பதிகாரத்தில் இருக்கும் வஞ்சிக் காண்டம் (செங்குட்டுவனைப் பற்றியது) பிற்காலத்தில் சேர்க்கப் பட்ட பிற சேர்க்கை என்றும் விபரீத ஆராய்ச்சிகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் நுழைய நான் விரும்பவில்லை. அது என் வேலையும் அல்ல. அதோடு நான் எழுதுவது சரித்திர நவீனமேயன்றி சரித்திரமல்ல. கதை எழுதும் போது நம் களத்திற்குப் பொருத்தமான குறிப்புகளை ஏற்றுக் கொண்டு கதையைப் புனைய வேண்டுமேயன்றி மாறுபட்ட கருத்துகளையெல்லாம் போட்டு குழப்பிக் கொள்ளக் கூடாது.

இக்கதையைத் துவங்கவிருந்த போது 26.12.2006 அன்றைய தினத்தந்தி நாளேட்டில் செய்தி ஒன்று வெளியானதைக் கண்டேன். 'முசிறியில் அகழ்வு ஆராய்ச்சி செய்தால் இலங்கையின் வரலாறு தெரிய



வரும்' என்ற தலைப்பில் செய்தி வெளியாகியிருந்தது. அதில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒரு மிகப்பெரிய விண்வெளிக்கல் சேர நாட்டில் விழுந்து சேரநாட்டுத் துறைமுகமான முசிறி பூமிக்குள் புதைந்து போனதென்று ஜேம்ஸ் ராஜ் என்பவர் அறிக்கை விட்டிருந்தார். சமீப கால இச்செய்தியின் மூலம் செங்குட்டுவனின் காலத்தில் முக்கிய துறைமுகமாக விளங்கிய முசிறி கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு இல்லை என்றாகிறது. இதுவே செங்குட்டுவனின் காலம் எது என்பதை உணர்த்த போதுமானதாக இருந்ததால் கதையை எழுதத் தொடங்கினேன். நாளேட்டில் வந்த செய்தியின் ஒளிநகல் பின் இணைப்பாகத் தரப்பட்டுள்ளது.

இந்நாவலில் வரும் பெரும்பாலான பாத்திரங்கள் சரித்திரத்தில் இருந்த பாத்திரங்கள். அவர்களை இளங்கோவடிகளின் சிலப்பதிகாரமே குறிப்பிடுகிறது. இவர்களைத் தவிர கதை ஓட்டத்திற்காக கற்பனை பாத்திரங்கள் சிலரைப் படைத்திருக்கிறேன். அவர்கள் வாசகர்கள் ரசிப்பார்கள் என்று நம்புகிறேன். வழக்கம் போல வாசகர்களுக்கென்று சில அரிய விஷயங்களையும் நூலில் தந்திருக்கிறேன். இந்த நூலை உருவாக்க உதவிய நூல் பட்டியலையும் கடைசியில் குறிப்பிட்டிருக்கிறேன்.

முற்போக்குச் சிந்தனையாளரும் நல்ல எழுத்தாளருமான திருமதி. ரேவதி பாஸ்கரன் அவர்கள் இந்நூலுக்கு அரிதான அணிந்துரை வழங்கி

சிறப்பித்திருக்கிறார்கள் அது வெறும் அணிந்துரையன்று நல்லதோர் ஆய்வுரை அவருக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

சத்புருஷரும் நல்ல விமரிசகருமான ஸ்ரீமான் கிருஷ்ணமாச்சாரி அவர்கள் இந்த நூலுக்கு பாராட்டுரையை அளித்திருக்கிறார்கள். இந்நூல் அச்சாவதற்கு முன் முழுவதுமாக பிழை திருத்தம் பார்த்து உதவிய இப்பெரியவருக்கு எனது நன்றியை நெஞ்சார்ந்த முறையில் தெரிவித்துக் கொள்கிறேன்

இந்நூல் தயாரிப்பிலும் வடிவமைப்பிலும் சித்திரங்களை ஒழுங்கு படுத்தி அமைப்பதிலும் திறமையோடும் உள்ளன்போடும் உதவிய திரு கோ. பாஸ்கரன் அவர்களுக்கும் திருமதி ரேவதி பாஸ்கரன் அவர்களுக்கும் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

அட்டைப்பட ஓவியம் வரைந்தளித்த கன்னா அவர்களுக்கும் முகப்பு அட்டையை நல்ல விதத்தில் வடிவமைத்துத் தந்த திரு. விஜயன் அவர்களுக்கும் என் நன்றியை மனமாற தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நாவலுக்காக தனது தள்ளாத பருவத்திலும் ஆர்வத்துடன் ஓவியமொன்றை வரைந்து தந்த திரு. சுண்ணப்ப தேவதாஸ் (வசந்தம்) அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றி

எல்லா பணிகளையும் ஒருங்கிணைத்து நல்ல நூலாக உருவாக்கிய இன்செட் கோ-அப் தலைமை நிர்வாகியும் என் நண்பருமான திரு. கோ. பாஸ்கரன்



அவர்களுக்கும் அச்சிட்ட எஸ் எஸ். பைண்டிங் செய்து தந்த சேகர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றிகள்

என் நூல்கள் பலவற்றை வெளியிட்டுள்ள வைதேகிப் பதிப்பகம் இந்நூலையும் சிறப்பாக வெளியிட்டுள்ளது. அப்பதிப்பகத்தாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

எல்லாவற்றுக்கும் மேலாக வாசகர்களுக்கு என் வணக்கம் கலந்த நன்றி அவர்களின்றி எழுத்துக்களும் நூல்களும் மலருவதில்லை. எத்தனையோ குடும்ப இடர்பாடுகளுக்கிடையில் இந்த நூல் மலர்ந்திருப்பதற்குக் காரணம் வாசக அன்பர்கள் தான்

வழக்கப்படி இந்த நாவலும் பகவான் ரமணர் அவதரித்தத் திருநாளில் வெளியாகிறது

அவருக்காக இந்த நூல் அர்ப்பணம்

30.12.2007
சென்னை - 61

உதயணன்

# பதிப்புரை

தமிழரது பொற்காலம் சங்க காலம் தான். அக்கால மூவேந்தர்களில் முதன்மையானவனான சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எடுத்து பத்தினி தெய்வ வழிபாட்டிற்கு அடிகோலினான். அவனது இச்சம்பவத்தைப் பற்றியும், அவனது இமயப்படையெடுப்பு பற்றியும், அவனது பண்புகளைப் பற்றியும் சிலப்பதிகாரத்தின் வஞ்சிக் காண்டம் விரிவாக கூறுகிறது. அவனது வரலாற்றைப் புலவர் பரணர் பதிற்று பத்தில் விவரிக்கிறார். அந்த மாமன்னனின் வரலாற்றில் ஒரு பகுதியை ஆபுத்திரன் நாவில் அழகாகச் சொல்லியிருக்கிறார் திரு உதயணன். வரலாற்றுக் கதைகளை படைக்கும் மாபெரும் எழுத்தாளர்களை காலம் கொள்ளை கொண்டு விட்ட நிலையில் திரு. உதயணன் தனிமனிதராக நின்று அப்பணியை மிகவும் சிறப்பாகச் செய்து வருகிறார் என்பது மிகையில்லை. அவரது மாபெரும் படைப்பான மௌரியப் புயலைத் தொடர்ந்து 'ஆபுத்திரன்' நாவலை வெளியிடுவதில் நாங்கள் பெருமையடைகிறோம். இந்நூலைப் படித்து வாசகர்கள் பயனடையுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

சென்னை - 61. வைதேகி பதிப்பகம்.



# பாராட்டுரை

திரு. கே. எஸ். கிருஷ்ணமாச்சாரி BSc.,

திரு நரசிம்ஹன் அவர்களை எங்கள் குடியிருப்புவாசி என்ற நிலையில் பல வருடங்களாய்த் தெரியும், என்றாலும் திரு 'உதயணன்' அவர்களைக் கடந்த இரண்டு வருடங்களாகத் தான் அறிவேன். வேலையிலிருந்து ஓய்வு பெற்றதற்காக அவர் கொடுத்த ஒரு விருந்து உபசாரத்தின் போது தான் அவர் திரு உதயணன் என்ற ஓர் எழுத்தாளர் என்ற உண்மை தெரிந்தது. அச்சமயம் அவர் படைப்புகளில் ஒன்றான 'சமுத்திர கோஷம்' என்ற சந்திர நாவலைப் பரிசாக அளித்தார். அப்போது தான் அந்த உண்மை புலனாயிற்று. அதிலிருந்து அவருடனான நட்பு மொட்ட விழ்ந்து மலரலாயிற்று. அவருடைய மற்ற படைப்புகளையும் படித்து அனுபவிக்கும் பேறு கிட்டியது. அவருடைய சிந்தனை மலர்களிலும் சரி, சிறு கதைகளிலும் சரி, சரித்திரப் புதினங்களிலும் சரி தர்மத்திற்கும் நீதிக்கும் குரலெடுத்து அநீதியை எதிர்க்கும் அவருடைய குண நலன் புலனாகும்.

அவருடன் ஏற்பட்ட நட்பின் பலனாக, அவருடைய புதிய படைப்பான, வஞ்சிக் கோட்டை வாலிபனான ஆபுத்திரனின் வரலாற்றை, புத்தகமாக வெளிவரும் முன்பே படித்து இன்புறும் வாய்ப்பு கிட்டியது. அவருடைய மற்றைய படைப்புகளைப் போலவே இச்சரித்திர நாவலும் தொய்வில்லாமல் விறுவிறுப்பாய் ஓரே மூச்சில் படித்து முடிக்கத் தூண்டுகிறது. கதை சொல்லும் நேர்த்தியில் திடீர்த்திருப்பங்களை ஏற்படுத்தி ஆவலைக் கிளறி விடுகிறார்

சேரன் செங்குட்டுவன் காலத்தில் அம்மன்னனை மையமாகக் கொண்ட நிகழ்ச்சிகளின் பின்னணியில் ஆபுத்திரன் என்ற கற்பனைப் பாத்திரத்தை வளைய விட்டு, ஆசிரியர் தமது கொள்கைகளான நேர்மை, நீதி, சமுதாய நன்மை ஆகியவைகளை நிலை நிறுத்துகிறார். அக்காலத்திய உண்மை நிகழ்ச்சிகளையும், சரித்திர ஆராய்ச்சியாளர்களின் ஆதாரங்களோடு நாவலில் கலந்து கதை சொல்லும் பாங்கு நேர்த்தியாயிருக்கிறது

சுயநலம், அநீதி, கொலை கொள்ளை போன்ற வற்றின் இருப்பிடமான பங்களன், அவனுடைய அதிசயப் பிறவியான, நேர்மையே உடலான அவனது மகள் சௌமிய குமாரி, அவனது குணங்களே கொண்ட அவனது ஆசை நாயகி பவானி, சேர நாட்டு மக்களின் அன்பிற்கும், சேரன் செங்குட்டுவனின் பூரண அன்பிற்கும் பாத்திரமான ஆபுத்திரன், ஆபுத்திரனின் அன்பின் நினைவில் நிற்கும் பூங்கொடி. இன்னும் பல பாத்திரங்கள் உயிருடன் உலவி வருகின்றனர். பூங்கொடியை தவிர வேறு ஒரு மாதையும் நினைவில் கொள்ளாத ஆபுத்திரன் அவளை மணந்திருந்தால் மகிழ்ச்சியாயிருக்கும். கதையின் முடிவு சோகமாயிருந்தாலும், ஏற்றுக்கொள்ளும்படி இருப்பது கதைக்கு மகுடம் சூட்டியது போல் இருக்கிறது.

திரு. உதயணன் அவர்கள் இது போன்று இன்னும் பல புதினங்களை எம்போன்றோருக்கு அளிக்க எனது மனப்பூர்வமான வாழ்த்துக்கள்

K. S. கிருஷ்ணமாச்சாரி

3 F, ஸ்ரீராம் ப்ளாட்ஸ்
22வது தெரு
தில்லை கங்கா நகர்
சென்னை - 600 061





# அணிந்துரை

வரலாற்று நாவல்கள் கண்ணுக்கு தெரியாத கனவுகளின் ஒளிப்பேழை போன்றது. கனவு கண்டு விழித்தவன் இப்படி இருந்தது இப்படி தெரிந்தது என்று கூறலாம், ஆனால் மற்றவருக்கு அவை யூகங்களே. அதற்காக சரித்திர நாவல்கள் அடிப்படை ஆதாரங்கள் அற்றவை என்பது இல்லை.

ஆதாரங்களின் அடிப்படையில் அழகுற கோர்க்கப்பட்ட பூமாலை போன்றது ஆபுத்திரன் நாவல்.

1. செங்குட்டவன் வாலிப வயதில் இலங்கை சென்றான்,
2. அவன் தன் மகனை பரணருக்கு (குருகுலத்திற்கு) தானமாக

வழங்கினான் அல்லது பரிசு அனுப்பினான்

3. சிறந்த கடற்படை அமைத்து கடற் கொள்ளையரை அடக்கி வியாபார அபிவிருத்திக்கு அவன் ஆட்சி காலத்தில் அடி கோலினான் என்பது ஆதார சான்றுகள்.

இந்த மூன்று முக்கிய சான்றுகளை வைத்து நண்பர் உதயணன் உருவாக்கி இருக்கும் ஆபுத்திரன் நாவல் படிக்க மிக சுவாரஸ்யமாக கிட்டதட்ட ஒரு திரைப்படத்தை பார்த்த அனுபவத்தை தருகிறது.

திரைப்படம் தயாரிப்பிற்கு ஒரு வரையறை உண்டு அதைப் போல் இந்த சரித்திர நாவல் முழுவதும் ஒரு வரையறை உள்ளது.

தனிமனித நேர்மை, வீரம், போர் தந்திரங்கள், காதல், காமம், அரச நீதியை நிலை நாட்டல், கட்டளை இடல், கீழ்படிதல், துரோகம், விசுவாசம், என்று 53 அத்தியாயத்திலும் தனித்தனியே பிரித்து நாவல் முழுவதும் இழையோட விட்டுள்ளார் ஆசிரியர்.

தனிமனித நேர்மைக்கு செங்குட்டுவன், பரணர், வீரத்திற்கு ஆபுத்திரன், போர் தந்திரத்திற்கு



ஆபுத்திரன் & உதயணன், காதலுக்கு பூங்கொடி & செவியகுமாரி காமத்திற்கு பவானி & பகவதி துரோகத்திற்கு பங்களன் விசுவாசத்திற்கு ஆபுத்திரன், இராவணன் & குண்டோதரன் ஆகிய கதாபாத்திரங்கள் மூலம் இப்பணியை செய்துள்ளார்.

பொதுவாக ஆன்மீக கருத்துக்களை தன் எழுத்துகளில் நுழைத்து இழையோட விடுவார் உதயணன். ஆனால் இந்நாவல் முழுவதும் ஆன்மீக கருத்தை எங்கும் காண முடியவில்லை.

கதை ஓட்டத்திற்கு தேவைப்பட்டால் ஒழிய அதற்கான ஆதாரங்கள் இருந்தால் ஒழிய வலிந்து சொந்தக் கருத்துகளை தன் நாவல்களில் புகுத்தும் மலிவான பண்பு அவரிடம் இல்லை என்பது குறித்து மகிழ்ச்சி.

தங்கள் கருத்தை வலியுறுத்த ஒரு சம்பவத்தை விலாவாரியாக வியாக்கியானம் செய்து கதையையும் தங்கள் கதாபாத்திரத்தையும் சிதைத்து நியாய படுத்தும் மலிவான கருத்தியலுக்கு உதயணன் ஆளாக வில்லை என்பது மட்டற்ற மகிழ்ச்சி.

பங்கம் 503ன் மதம் குறித்து செங்குட்டுவன் பாத்திரம் மூலம் உதயணன் கூறியுள்ள கருத்துக்கள் இன்றைய அரசியல் சூழலுக்கு மிகவும் பொருந்தும்

"உண்மையில் மதம் என்பது என்ன? அது ஒரு கொள்கை. மக்களின் நல்வாழ்விற்காகவும் உயர்விற்காகவும் அவ்வப்போது அவதரிக்கும் மகான்கள் ஒரு கொள்கையைச் சொல்கிறார்கள். மகான்களுக்கு ஏற்பவும் காலமாற்றத்திற்கேற்பவும் மக்களின் பக்குவத்திற்கு ஏற்பவும் அக்கொள்கைகள் மாறுபடலாம். எதை ஏற்பது எதை விடுவது என்பது மக்களின் சுதந்திரம். கொள்கைவாதிகள் வேண்டுமானால் தன் கொள்கையே சிறந்தது என்று கூறலாம். அதனைப் பரப்பவும் கடைப்பிடிக்கவும் முயலலாம். இதில் அரசனாக இருப்பவன் எல்லாவற்றுக்கும் பொதுவானதாக இருக்கவேண்டும். அவன் உயர்வு தாழ்வு காண்பிக்க முற்பட்டால் மன்னன் எவ்வழியோ மக்களும் அவ்வழி என்று அவர்களும் உயர்வு தாழ்வுகளைப் பேசுவார்கள். பூசல்கள் பெருகும்."

காதல் உணர்வுகளை மென்மையான வார்த்தைகளாலும் காம உணர்வுகளை ஆபாசமில்லாமலும் சொல்ல முற்பட்டுள்ளார். 116ம் பக்கத்தில் பவானியை பங்கஜன் பார்த்த காம பார்வையை சொல்லும் போது "பார்த்த அழகு தான் என்றாலும் பூத்திருந்த விதம் புதுமையாக இருந்தது." என்று சொல்வது என பல விஷயங்கள்



இந்நாவலில் நம்மை கவர்ந்தாலும் நாவல் முழுவதும் உள்ள பெண்கள் வாழ்நிலை குறித்து சில ஐயப்பாடுகள் எழுகின்றன. இக்கதையில் வரும் பெண் கதாபாத்திரங்கள் அனைத்தும் மிக சுதந்திரமாக இரவு நேரத்திலும் உலாவுகின்றனர். முடிவுகளை அவர்களே எடுக்கின்றனர் என்பது போலவும் நாவல் முழுவதும் அமைந்துள்ளது.

நாம் பார்க்கும் இந்த நவீன சமுதாயத்தில் பெண்கள் வாழ்நிலை இரண்டாம் நிலையில் இருக்கும் போது சரித்திர கால பெண்கள் வாழ்நிலை இவ்வளவு உயர்வாக இருந்திருக்குமா என்பது கேள்வியே!

கற்கால மனித வாழ்வில் பெண்களுக்கு இப்படி ஒரு நிலை இருந்ததாக அறியப்படுகிறது. நாகரீக மனித வாழ்வு தோன்றியவுடன் அவன் உடமைகளில் ஒன்றாக பெண்ணை எப்படி இத்தனை சுதந்திரமாக நடமாட விட்டிருப்பார்கள் என்பது வியப்பாக உள்ளது.

மதம் என்பது தனிமனித நம்பிக்கை என்பது போல் சங்க காலம் குறித்த உதயணன் விருப்பம் மற்றும் நம்பிக்கை குறித்து விவாதிக்காமல் மொத்தத்தில் சில ஆதாரங்களை மையமாக வைத்து மூன்று மணிநேரம் ஓடும் நவீன இலக்கிய பாதைகளில் ஒன்றான சினிமாவை போல் விறுவிறுப்பான ஒரு நாவலை அதுவும்

சரித்திரம் சார்ந்த ஒரு நாவலை நமக்கு அளித்துள்ளது பாராட்ட தக்கது.

ஜெயிக்கும் குதிரையின் மீது பந்தயம் கட்டும் இந்த காலத்தில் வெற்றி பெறும் அணியில் நில் என்று சொல்லும் இந்த காலத்தில் சரித்திர நாவல்களின் வாசிப்பு தளம், அது சேரும் வாசகர் வட்டம், சரித்திர நாவல்களின் நுகர்வு நிலை இவை குறித்து தளர்ந்து போகாமல் இந்த தளத்தில் இருந்து இயங்கி கொண்டிருக்கும் அவர் மன உறுதி பாராட்ட தக்கது.

உண்மையைச் சொல்ல வேண்டுமானால் அவர் மனம் வெதும்பி சொன்னது. வரலாற்று நாவலுக்கு அட்டை படம் அமைக்க கூட ஓவியர் இல்லை. அப்படி இருந்தால் அது மற்ற நூலுக்கு ஆகும் செலவை காட்டிலும் இருமடங்கு. ஆயினும் அவர் சரித்திர நாவல் ஆசிரியர்கள் குறைந்து வருவதை தன் புத்தகங்கள் மூலம் நிரப்புகிறார் என்பது மகிழ்ச்சி.

அவர் பணி சிறக்க என் வாழ்த்துக்கள்.

ரேவதி பாஸ்கரன்



## அத்தியாயம் ஒன்று



# வஞ்சிக் கோட்டை வேங்கை

வடநாட்டவர்களால் ஸ்யாத்திரி என்றும் தமிழர்களால் வாசமலை என்றும் அழைக்கப்பட்ட மேற்கு தொடர்ச்சி மலைகளில் தென்மேற்கு பருவக் காற்று பலமாக மோதுவதால் பெருக்கெடுக்கும் பெருமழையானது மலையின் மண்ணை அடித்து வந்து தள்ளியதால் உண்டான நாடு என்றும் * வியாச பாரதம் மட்டுமின்றி வேதங்களிலேயே குறிப்பிடப்பட்ட நாடு என்றும் ** இந்தியாவிலேயே முதன் முதலாக அமைக்கப் பட்ட அசோகரது கல்வெட்டுகளிலேயே குறிப்பிடப் பட்ட நாடு

* பக்கம் 9 - 3000 ஆண்டுகள் தமிழனின் கடல்வாணிபம் - ஆர்.என். சாமி

** 'ப்ரஜா : தீஸ்ரோ அத்யாயம் அயூஹ்' ரிக்வேதம் 101 14:3

அருமை தெரிந்து அதைப் பழக்கித் தனது தனையனைப் போலவே கருதிய அவ்வாலிபன் அதற்குப் பூர்ணா நந்தன் என்றே பெயரைச் சூட்டியிருந்தான். அந்த அற்புதப் புரவி சேரமா மன்னனால் அவனது வீரத்திற்குப் பரிசாக அளிக்கப் பட்டது. எனவே அதைத் தன் கண் போலவே பாதுகாத்த ஆபுத்திரன் அன்பு காரணமாகவே அக்கடற்கரையில் அந்த நேரத்தில் அதன் மீது அமர்ந்து பயணம் செய்த அவன், சிறிது நேரத்திற்குப் பிறகு இறங்கி தன் ஆசைப் புரவியை நடத்தி வந்தான். அவனது அன்பைப் புரிந்து கொண்டு புரவியும் அவனோடு உவகை பொங்க நடந்து சென்றது.

சேரமாமன்னனுக்கு மிகவும் வேண்டப்பட்டவன் என்பது பிரசித்தமாயிருந்த படியால் சேர நாட்டில் அவனைக் காணாதவர்களோ தெரியாதவர்களோ யாரும் இல்லை. அது மட்டுமின்றிச் சேரர் தலைநகரான வஞ்சிக் கோட்டையில் அவன் சதா வீர பிரதாபங்களின் விளைநிலமாக இருந்து வந்த காரணத்தால் மக்கள் பெரும் பாலும் அவனை வஞ்சிக் கோட்டை வாலிபன் என்றும், வஞ்சிக் கோட்டை வேங்கை என்றும் வாஞ்சையோடு அழைத்து வந்தார்கள். வீரத்தைக் காட்டுவது மட்டும் அவனது வேலையாக இல்லை. மனத்தில் ஈரத்தைக் காட்டுவதும் அவனது வாடிக்கையாக இருந்தது. உதவி என்று கேட்போருக்கு தட்டாமல் சென்று உதவுவதும், கேளாமலேயே இருக்கும் இடங்களில் கூட முன் சென்று நின்று வேண்டியதைச் செய்யும் அருங்குணம் அவனிடம் இருந்தது. மாமன்னர் அளிக்கும் செல்வங்களையும் பரிசுகளையும் எல்லாம் இல்லத்திற்குக் கொண்டு போய் பூட்டி வைக்காமல் இல்லாதவர்க்கு வழங்கும் காரியத்தை அந்த இளவயதிலேயே செய்து வந்தானானதால் அவன் வஞ்சி நகர் வள்ளல் என்றும் போற்றப் பட்டான். பெரியோர்களின் வாழ்த்தும், வாலிபர்களின் நட்பும்



இளமங்கையர்களின் ஏக்கமும் அவனை எப்போதும் ஆட்கொண்ட போதும் அதனால் ஆணவத்திற்கு ஆளாகி விடாமல் மிகவும் பக்குவப் பட்டவனைப் போலவே நடந்து வந்தான் ஆபுத்திரன்.

அவன் நடந்து சென்று கொண்டிருந்த போது மாலைநேரம் மயங்கிக் கொண்டிருந்த நேரமாதலால் முசிறித் துறைமுகக் கடற்கரைப் பகுதி மிகவும் ரம்மியமாகக் காட்சியளித்தது. இந்திய நாட்டின் முதல் சந்தை * என்று வெளி நாட்டவர் குறிப்பிட்ட துறைமுகமான முசிறி சேர நாட்டுத் துறைமுகங்களிலேயே சிறப்பானது என்று கருதப் பட்டது. இருந்த போதும் மரக்கலங்கள் துறைமுகத்துக்குள்ளே வரமுடியாதவாறு கள்ளியாறு மணலை வாரியடித்திருந்ததால் வணிக மரக்கலங்கள் கடலிலேயே நங்கூரமிட்டு நின்றன. அவற்றிலிருந்து சரக்குகள் சிறு படகுகள் மூலம் துறை முகத்துக்கு கொண்டு வரப்பட்டன. அங்கிருந்து மரக்கலங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. இதன் காரணமாக அக்கடற்பகுதியில் கணக்கற்ற படகுகள் பல்வேறு சரக்குகளுடன் பல்வேறு வணிகர்களைச் சுமந்து இயங்கிய படியால் கடற்பகுதி மிகவும் பரபரப்பாக இருந்தது. சேரநாட்டிற்கு ரோம நாட்டவர்கள் மட்டுமின்றி கிரேக்கர்கள், சீனர்கள், ஆர்மீனியர்கள், யூதர்கள், சிரியர்கள், இஸ்ரேலியர்கள், அராபியர்கள் என்று பலரும் வணிகம் செய்யும் பொருட்டு வந்து சென்ற படியால் பல்வேறு இனத்தவர்களின் வரவும் அவர்களது பல்வேறு பட்ட உருவ அமைப்புகளும், ஆடை

* Periplus of the Erythrean sea

அணிகலன்களும் சேர்ந்து அப்பகுதியை ஒரு விநோதமான காட்சிக்கு வழிவகுத்தன. அக்காலத்தில் சேர நாட்டிலிருந்து பிற நாடுகளுக்கு மிளகு அதிக அளவில் ஏற்றுமதி செய்யப் பட்டது. கருமிளகு, பச்சை மிளகு என்று இருவகை மிளகுகள் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டு அதற்கு பதிலாகத் தங்கமும் வெள்ளியும் பெறப் பட்டு வந்தன. அதோடு மிளகு வகைகளிலேயே சிறந்ததான முத்து நாடன் என்னும் வகையைச் சேர்ந்த மிளகு * சேர நாட்டில் பெருமளவில் பயிரிடப் பட்டதால் அவற்றை மேற்கத்திய நாடுகள் போட்டி போட்டுக் கொண்டு வாங்கிச் சென்றன. அதிலும் யவனர்கள் மிளகை மிகவும் விரும்பும் உணவுப் பொருளாகவும் மருந்துப் பொருளாகவும் ஏற்று அதிக அளவில் இறக்குமதி செய்து வந்தார்கள். அவர்கள் பெரும் மிளகிற்கு 'யவனப் பிரியா' என்ற பெயர் அவர்களால் சூட்டப்பட்டிருந்தது. **

மிளகு மட்டுமின்றி, மயில், கிளி, பாம்பு போன்ற உயிரினங்களும் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டு வந்தன. கிரேக்க நாட்டிலும் எகிப்து நாட்டிலும் இவ்வுயிரினங்கள் அரச குடும்பத்தினரின் செல்லப் பிராணிகளாக வளர்க்கப் பட்டு வந்தன. இந்த வகையில் முசிறிஸ் என்று யவனர்களால் அழைக்கப்பட்டதும வால்மீகி ராமாயணத்திலேயே குறிப்பிடப்பட்டதுமான ***

---

* பக்கம் 51 '1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்' - கனகசபை பிள்ளை

** பக்கம் 146 'The History of the Tamils by P.T. Srinivasa Iyengar

*** கிஷ்கிந்தா காண்டம 43ம் ஸர்கம் 15ம் ஸ்லோகம்



## ஆபுத்திரன்



மிகத் தொன்மையான அத்துறைமுகத்தில் பண்டமாற்று வாணிபம் துலங்கிய காரணத்தால் வாணிபம் பெருகியபோது கலவரங்களும் அடிக்கடி தோன்றி வந்த படியால் அத்துறைமுகக் காவல் பொறுப்பைச் சேரர்கள் மட்டுமின்றி அவர்களால் நியமிக்கப்பட்ட யவனர்களும் ஏற்றிருந்தார்கள். புரவிகளில் இருந்த வண்ணம் அக்காவல் வீரர்கள் படகுகளையும் வணிகர்களையும் ஒழுங்கு படுத்தும் பொருட்டு எழுப்பிய எச்சரிக்கை குரல்கள் அரபிக் கடலின் அலைகளோடு போட்டிடுவது போலிருந்தது. அக்காவல் வீரர்கள் கடலுக்குள் கணிசமான தூரம் வரை புரவிகளில் செல்வதற்கு ஏற்ப பலஇடங்களில் மணற்பகுதிகள் பாதைகளைப் போல நீர்ப் பகுதிகளுக்குள் நீண்டிருந்தன. இத்தகைய கோவனங்களில் * காவல் வீரர்கள் இருபுறமும் நின்று எச்சரித்தபடியால கலவரங்கள் ஏற்படவில்லை. ஆனாலும் கூச்சல்கள் மட்டும் குறைவில்லாதிருந்தது. துறைமுக அதிகாரிகளும் ஊழியர்களும் துறைமுகத்திற்குள் நுழையும் படகுகளை உடனுக்குடன் கவனித்து சரக்குகளை அகற்றி சுங்கச் சாவடிக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்களாதலால் படகுகள் அதிக நேரம் காத்திராமல் திரும்பிக் கொண்டிருந்தன. அதே சமயம் இனம் பிரிக்கப் பட்ட மிளகுப் பொதிகள் துறைமுகத்தின் மற்றொரு பகுதியில் படகுகளில் ஏற்றப்பட்டு கடலில் நங்கூரமிட்டு நின்ற மரக்கலங்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. இறக்குமதியாகும் பொருட்கள் சுங்கச் சாவடியில்

* கடலுக்குள் துருத்திக் கொண்டு நின்ற மணல் மேடுகள் கோவனங்கள் என்று அழைக்கப்பட்டன. பக்கம் 50 'ஊரும் பேரும்' by ரா. பி. சேதுப்பிள்ளை



முத்திரையிடப்பட்ட பின், வஞ்சி, தொண்டி, மாந்தை முதலிய நகரங்களுக்குச் செல்லும் ராஜபாட்டை வழியே பாரவண்டிகள் மூலமாக அனுப்பப் பட்டுக் கொண்டிருந்தன.

கடலுக்கு வருவதும் கடலிலிருந்து வருவதுமான விவகாரங்கள் ஒருபுறமிருக்க, கடற்கரையில் பல்வேறு இனத்தைச் சேர்ந்த வணிகர்கள் கடை விரித்திருந்திருந்தார்கள். ஒரு சில வணிகர்கள் தங்களிடம் விலையுயர்ந்த பொருட்கள் இருந்ததால் அவைகளை கடற்கரை மணலில் இறக்கி வைக்காமல் பெரும் பாரவண்டிகளில் வைத்தே விலை பேசினார்கள். அந்த வண்டிகளைச் சுற்றி பலர் காவல் செய்தபடி இருந்தார்கள். அவர்களது பொருட்களை வாங்கும் ஆர்வத்தில சேர நாட்டு மக்கள் குழுமியிருந்து பேரம் பேசுவதில இறங்கியிருந்த காரணத்தாலும் அவர்களின் போட்ட கூச்சலாலும் கடற்கரை முழுவதும் ஆரவாரப் பட்டுப் போயிருந்தது. வியாபார நிமித்தமாகவும் கடற் காற்றை அனுபவிக்கும் நிமித்தமாகவும் அங்கே கூடியிருந்த வாலிபர்கள் பலரும் பெண்கள் பலருமாய் ஆபுத்திரனைக் கண்டு உற்சாகத்துடன் கைகளை ஆட்டவே செய்தார்கள். அவர்களுக்குப் பொதுவாக கைகளை ஆட்டி விட்டு நடந்து கொண்டேயிருந்தான் அவன். இப்படிப் 'பொன்னொடு வந்து கறியொடு பெயரும் வளங்கெழு முசிறி'யின் ஆர்ப்பட்டங்கள் எதுவும் அவனுக்குப் புதியனவல்ல என்பதால ஆனந்த மார்க்கத்தில் தன்னை மறந்து செல்பவனைப் போலச் சென்றான்.

நீண்ட தூரம் அவன் அப்படி கடற்கரை மணலை சளைக்காமல் சென்றதை அவன் புறப்பட்ட இடத்திலிருந்தே

"ஆனால் நாங்கள் தற்போது இருப்பது அரபு நாடல்ல, சேர நாடு"

"அதனால் என்ன?"

"அரபு நாட்டுச் சூரர்களும் கிரேக்க நாட்டு வீரர்களும் இங்கே அடையாளம் தெரியாமல் போயிருக்கிறார்கள். சேர நாட்டை விழுங்க வந்த யவனர்கள் இன்று சேர நாட்டிற்கு ஊழியம் புரிகிறார்கள். சேரமாமன்னர் அவர்களுக்கென்று ஒரு குடியிருப்பை முசிறியில் உருவாக்கித் தந்திருக்கிறார். சேரருக்கு அடங்கி அவர்கள் மன்னர் அனுமதியோடு அகஸ்டஸுக்கு கோயிலொன்றையும் கட்டியிருக்கிறார்கள்.* நமக்கு முன்னால் தெரிவது அக்கோயில் தான்"

பலகாலமாக தமிழகத்திற்கு கடல் மூலம் வருவதற்கு வழிதெரியாமல் சுற்றி வந்தும் தொலை தூரம் பயணம் செய்தும் காலவிரயத்திற்கும் பொருள் விரயத்திற்கும் ஆளாகிக் கொண்டிருந்தார்கள் மேலை நாட்டு வணிகர்கள். கி.பி. முதல் நூற்றாண்டில் யவன மாலுமியான ஹிப்பலாஸ் என்பவன் அரபிக் கடலில் எழும் தென்மேற்கு பருவக் காற்றை அறிந்து அதன் வீச்சையும் போக்கையும் வைத்து மேற்கத்திய நாடுகளிலிருந்து தமிழகக் கடற்கரைக்கு எளிதில் வந்து சேரக் கூடிய நேர் வழியைக் கண்டு பிடித்தான். அது முதல் எகிப்திலிருந்து புறப்பட்ட வணிகர்கள் 40 நாட்களில் சேரர் துறைமுகமான முசிறிக்கு வந்து சேர்ந்தார்கள். ** அவர்களில்

* பக்கம் 41. 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் by கனகசபை பிள்ளை.

** பக்கம் 54 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் by கனகசபை பிள்ளை.



யவனர்களே அதிகமாய் இருந்தார்கள். எளிய வழியில் காலவிரயமின்றி தமிழகத்திற்கு வந்து கொண்டிருந்த யவனர்களுக்கு சேரநாட்டின் வளமையைக் கண்டு ஆசை உண்டாகி பேராசையாக விரிந்து வணிகர்கள் போர்வையில் போர் வீரர்களாக வந்து வந்து சேர்ந்த அவர்கள் சேரநாட்டைக் கவரமுற்பட்ட போது வீரத்திலும் விவேகத்திலும் சிறந்திருந்த சேரமன்னர்கள் அவர்களைத் தலையெடுக்கவிடாமல் தோற்கடித்துச் சேதப் படுத்தியதால் சேதாரத்தைத் தாங்க முடியாத யவனர்கள் சேரர்களுக்கு நண்பர்களாகி பின் ஊழியர்களாகவும் ஆனார்கள். அவர்கள் சேரநாடு மட்டுமின்றி சோழ பாண்டிய நாடுகளிலும் குடியேறி தமிழக மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டார்கள். மதுரைக் கோட்டையில பொறிகளை அமைத்து கோட்டைக் காவலை யவனர்கள் செய்து வந்ததாகக் கூறுகிறது சங்க இலக்கியமான மதுரைக் காஞ்சி.

சேர நாட்டில் காவல் பிரிவு, படைப் பிரிவு என்று எல்லாவற்றிலும் யவனர்களின் பங்களிப்பு இருந்தது. அவர்களுக்கென்று யவனர்களின் பங்களிப்பு இருந்தது. அவர்களுக்கென்று தனியாக குடியிருப்பு பகுதியொன்றையும் வழங்கிய சேரமன்னர்கள் யவனர்களின் மிகச் சிறந்த மன்னனும் அவர்களால் தெய்வமாகக் கருதப் பட்டவனுமான அகஸ்டஸ் மன்னனுக்கு கோயில் ஒன்றையும் அமைத்துக் கொள்ள அனுமதித்தார்கள். அந்த அடிப்படையில் முசிறி கடற்கரையில கோயிலைக் கட்டி அகஸ்டஸீக்கு பளிங்குக் கல்லால சிலையை எழுப்பி யவனர்கள் தொழுது வந்தார்கள்.

இந்த விஷயங்கள் முழுமையாக இல்லாவிட்டாலும் ஓரளவிற்காவது தெரிந்திருந்த அராபிய மனிதன் தனது சகாக்கள் தன்னைப் பயமுறுத்துவதைக் கண்டு சிரித்தான்.

“உங்களுக்கு என் மீது நம்பிக்கையில்லையென்றால் இங்கேயே இப்போதே என்னை விட்டு நீங்கி விடலாம். ஆபுத்திரனை எப்படிப் பிடிக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும்” என்றான்.

அவன் பேசிய தோரணை மற்றவர்களுக்குச் சற்றே நம்பிக்கையை வரவழைத்தது.

அதையடுத்து அராபிய வீரன் குறுவாள் ஒன்றை எடுத்துக் கொண்டான். அனைவரையும் மூக்கை மறைக்கும் படியான துணியைக் கட்டிக் கொள்ளும் படிக் கூறினான். எல்லோரும் ஆயத்தமான பிறகு தனது குறுவாளை எடுத்து பூர்ணாநந்தம் என்ற புரவியின் மீது வீசிவிட்டு உடனடியாகக் கையில் பொடியை எடுத்துத் தூவினான். அவன் தூவிய பொடி காற்றில் கலந்து வீசவே ஆபுத்திரன் அதைச் சுவாசிக்க வேண்டியதாயிற்று. சுவாசித்த சில நிமிடங்களிலேயே மயங்கி விழுந்தான் அவன். அவனை அந்தப் பத்து பேரும் நெருங்கிய போது புரவி அவர்களை நெருங்க விடாமல் கால்களைத் தூக்கித் தாக்க முற்பட்டது. மயக்கப் புகை ஏன் புரவியிடம் வேலை செய்யவில்லை என்று கேட்ட படி அராபிய மனிதன் மற்றவர்களிடம் ஏதோ சைகை செய்ததும் அவரவர்களும் தங்கள் குறுவாளை வீச முற்படவே வெண்ணிறப் புரவி அத்தாக்குதலிலிருந்து தப்பி ஓடியது.

அதற்குப் பின் காரியங்கள் வேகமாக நடை பெற்றன. அவர்களுக்குச் சற்று தொலைவில் வந்து கொண்டிருந்த



பாரவண்டியை துரிதமாக வரச் சொல்லி மயங்கிக் கிடந்த ஆபுத்திரனைத் தூக்கி அதில் ஏற்றிய அந்த மர்ம மனிதர்கள் வடக்கு நோக்கிப் பயணித்தார்கள்.

கண்களை விழித்த போது தன் முன்னால் நின்ற மனிதனைக் கண்டதும் ஸ்தம்பித்துப் போனான் வஞ்சிக் கோட்டை வாலிபன்.

அந்த மனிதனின் கோரிக்கையைக் கேட்ட போது தலை சுற்றியது அவனுக்கு.



# அத்தியாயம் இரண்டு



## பங்களன் கட்டளை

**கூ**ட்டத்திற்குள் இருந்தாலும் தனித்து இருந்தாலும் தனது யோகப் பயிற்சிகளின் காரணமாக புலன்களை எப்போதுமே விழித்த நிலையில் வைத்திருக்கக் கூடியவனான வஞ்சிக் கோட்டை வாலிபன் காற்றில் திடீரென மயக்கப் பொடி வாடை வந்ததுமே ஏதோ அசாதாரணம் நடக்கிறது என்பதை உணர்ந்து சுவாசத்தை அடக்கிக் கொண்டானாதலால் அவனுக்குப் பின்னால் வந்தவர்கள் எதிர்பார்த்த மாதிரி அவன் நினைவிழந்து விழுந்து விடவில்லை. மாறாகத் தனக்குப் பின்னால் பலர் நெருங்கு வதையும் புரவி ஓடத் துவங்கியதையும் உணர்ந்த அவன் நடக்கப் போகும் காரியங்களை அறிய விரும்பும் ஆவலில மயங்கியவனைப் போல மணலில் விழுந்தான். அவன் மயக்கப் பொடியின்



வாடையில் மயங்கி விட்டதாக எண்ணிய அந்த மனிதர்கள் உண்மையிலேயே ஆனந்த மடைந்தார்கள். தங்களது அச்சுறுத்தல்களைப் பற்றியெல்லாம் கவலைப் படாமல் அராபிய மனிதன் எந்த விதமானச் சிரமமுமின்றி மிகவும் வீரமும் தந்திரமும் பொருந்தியவனான ஆபுத்திரனை சேதாரமின்றி மடக்கி விட்டதைக் கண்டு வியந்தவர்களாக "எங்களை மன்னிக்க வேண்டும். உங்களைப் பற்றித் தவறாக எண்ணி விட்டோம்" என்று எக்காளமாகச் சொன்னார்கள். அவர்களது வார்த்தைகளை லட்சியம் செய்யாத அராபிய மனிதனான அமீர் "பேச்செல்லாம் இருக்கட்டும். இவனைத் தூக்கிப் பின்னால் வரும் பார வண்டியில் ஏற்றுங்கள். நீண்ட தூரம் போக வேண்டும்" என்றான் அதட்டும் குரலில். தற்போது இதர மனிதர்கள் அமீருக்கு மரியாதை காட்டி பின்னால் வந்து கொண்டிருந்த பாரவண்டியைத் துரிதமாக வரும்படி கைகளை ஆட்டினார்கள். இதற்கிடையில் காற்றில் கலந்த மயக்கப் பொடியின் வாடை செயலிழந்து போனதால் அடக்கிக் கொண்டிருந்த சுவாசத்தை விடுதலை செய்து கண்களையும் திறந்தான் ஆபுத்திரன். கடற்கரை பகுதி அப்போது நன்றாக இருட்டி விட்டிருந்ததால் அவனால் அவனுக்கருகில் நின்றிருந்த மனிதர்களைக் காண முடிந்தாலும் யாரென்று அடையாளம் காண முடியவில்லை. தன்னை எங்கே எதற்காகக் கடத்திச் செல்ல முயல்கிறார்கள் என்பதையும் அவனால் ஊகிக்க முடியவில்லை. இதற்கிடையில் பாரவண்டி வந்து சேர்ந்ததும் அதில் ஆபுத்திரனை ஏற்றிப் படுக்க வைத்தார்கள். ஆபுத்திரன் தலையில் பெரிய கட்டொன்றை போடும்படி உத்தரவிட்டான் அராபிய அமீர். அது ஏன் என்று தெரியாவிட்டாலும் அவனது ஆட்கள் கேள்வி ஏதும் கேட்காமல் சொன்னதை

செய்தார்கள். "இவ்வண்டி புறப்பட்டதும் வண்டிக்கு இருபுறமும் நான்கு நான்கு பேர் காவலாக நடப்பார்கள். வண்டிக்கு முன்னால் ஒருவன் செல்லட்டும் வண்டிக்குப் பின்னால் நான் வருகிறேன். குறிப்பிட்ட இடம் வந்ததும் நமக்காகப் புரவிகள் காத்திருக்கும்" என்றான் அமீர். வண்டி புறப்பட்டது.

சிறிது தூரம் சென்றதும் யவனர்கள் கடற்கரையில் எழுப்பிய சிலை ஒன்றைக் கண்டதும் "நாம் அகஸ்டஸ் ஆலயத்திற்கு அருகில் வந்து விட்டோம்" என்றான் ஒருவன். யவனர்களின் அகஸ்டஸ் ஆலயத்திலிருந்து யவனர்கள் சாரிசாரியாக வெளியேறி வரும் காட்சி அவர்களுக்குத் தெரிந்தது. அவர்களின் கண்களில் படாவண்ணம் வண்டியை ஆலயத்திற்கு அப்பால் செலுத்தும் படி அமீர் கட்டளையிட்டாலும் ஆலயத்தின் காவல் வீரர்கள் கண்களில் பட்டுவிட்டதால் நான்கு புரவி வீரர்கள் விடுவிடுவென வண்டியை நோக்கி விரைந்தார்கள். அதைக் கண்ட அமீர் தனது ஆட்களிடம் யாரும் பேச வேண்டாம் என்றும் பேசும் வேலையை நான் பார்த்துக் கொள்கிறேன் என்று கூறினான்.

விரைவிலேயே காவல் வீரர்கள் வண்டியை நெருங்கி "வண்டியை நிறுத்துங்கள்" என்று உரக்க குரலிட்டதும் வண்டி நின்றது. வண்டிக்குள் யாரோ படுத்திருப்பதைக் கண்ட அவர்கள் "வண்டிக்குள் இருப்பது யார்? இந்த நேரத்தில் எங்கே செல்கிறீர்கள்?" என்று கேட்டதும் "தலைவருக்கு தலையில் பலமாக அடிப்பட்டு விட்டது. அதனால் தான் கொண்டு செல்கிறோம்" என்றான் அமீர் பணிவான குரலில்.

"காயப்பட்டிருந்தால் வைத்தியம் பார்க்க முசிறிக்குத் தானே அழைத்துப் போக வேண்டும்? நீங்கள் நேரெதிராகப் போகிறீர்களே?" - கேட்டான் யவன வீரன்.



## யவனர் சிலை



"வைத்தியம் செய்து கொண்டு தான் புறப்பட்டோம். வேண்டுமானால் பாருங்கள். தலையில் கட்டு போடப் பட்டிருக்கிறது" என்றான் அமீர்

அதை அருகில் வந்து பார்த்து யவன வீரன் உறுதி செய்து கொண்டாலும் இருட்டாக இருந்தபடியால் ஆபுத்திரனை கண்டு கொள்ள முடியவில்லை.

"இப்போது எங்கே செல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"அருகேயுள்ள கிராமத்திற்குத் தான்" - என்றான் அமீர்.

யவன வீரர்கள் சிறிது நேரம் யோசித்து விட்டு "சரி சரி. புறப்படுங்கள்" என்று கூறிவிட்டு அகன்றார்கள்.

"தலைவரே, உங்கள் முன் யோசனையை எப்படி பாராட்டுவதென்றே தெரியவில்லை" என்றான் ஒருவன்.

"எப்படிப் பாராட்ட வேண்டும் என்பதை போக வேண்டிய இடத்தை அடைந்தபின் கற்றுத் தருகிறேன்" என்று இடக்காக பதில் சொன்னான் அமீர்.

அனைத்து உரையாடல்களையும் கேட்டு அமைதியாகப் படுத்திருந்தான் ஆபுத்திரன்.

அதற்குப் பிறகு கடத்தல்காரர்களுக்கு பிரச்சனை எதுவும் எழவில்லை. அதற்கு ஏற்றாற் போலவே அராபிய அமீரும் திட்டம் தீட்டியிருந்தான். ஆபுத்திரனை மயக்குவதற்கு வேறு வழியில்லாமல் மயக்கப் பொடியை காற்றில் கலக்க விட்டு மயங்க வைத்திருந்தானாதலால் மயக்க வாடை அதிக நேரம் வேலை செய்யாது என்பதை உணர்ந்திருந்த அமீர் பாரவண்டியில் ஆபுத்திரனைக் கிடத்தி அகஸ்டஸ் ஆலயத்தைக் கடந்த சிறிது நேரத்திற்கெல்லாம் மயக்கத் துளிகள்



கொண்ட குப்பியை அவனது நாசியில் அழுத்தினானதால் ஆபுத்திரன் உண்மையாகவே நினைவை இழந்தான். அமீர் அதை உறுதி செய்து கொண்டாலும் அலட்சியம் கூடாது என்ற முன்னெச்சரிக்கையுடன் அவனது கைகளையும் கால்களையும் கயிற்றால் பிணைத்தான். விரைவிலேயே அவன் கூறியபடி ஓரிடத்தில் புரவிகள் தயாராக இருக்கவே அமீர் உட்பட பத்து பேர்களும் அவற்றின் மீது ஏறிக் கொண்டனர். ஆபுத்திரனை ஏற்றிய பாரவண்டி விரைவிலேயே தோப்பு ஒன்றிற்குள் திரும்பியது. தோப்பின் விளிம்பை நெருங்கியதும மேற்கொண்டு பயணம் செய்யாமல் எல்லோருமே சிறிது நேரம் காத்திருந்தார்கள். கால்நாழிகைப் பொழுது கழிந்ததும் தோப்புக்கு மேற்கே கடல்பகுதியிலிருந்து இரண்டு விளக்குகள் கண்ணுக்குத் தெரிந்ததும் "அடையாளம் கிடைத்து விட்டது. வண்டியை கடலை நோக்கிச் செலுத்துங்கள்" என்றான் அமீர். வண்டி கடற்கரையை அடைந்ததும் அங்கே தயாராக இருந்த படகுகளில் அமீர் உட்பட அனைவரும் ஏறிக் கொண்டு மயக்க நிலையில் இருந்த ஆபுத்திரனையும் ஏற்றிக் கொண்டதும படகு கடலில் பயணப்பட்டது. பாரவண்டி தோப்பை நோக்கித் திரும்பிச் சென்றது. படகுகள் கணிசமான தூரத்திற்கு கடலில் பயணம் சென்றதும் அங்கே தயாராக இருந்த வணிகக் கப்பல் அவர்களுக்கு வழி காட்டியது. அனைவரும் அக்கப்பலுக்கு மாறினார்கள். கப்பலும் புறப்பட்டது.



முசிறிக்கு வடக்கே இருந்த சேரர் தலைநகர் வஞ்சியின் கண்களுக்குப் புலப்படாமல் சாமார்த்தியமாக தோப்பில் நுழைந்து கடல் மார்க்கமாக மிகவும் விலகி மரக்கலத்தை வஞ்சி

துறைமுகத்தாரும் கவனிக்க முடியாமல் போயிற்று. அதோடு அமீரின் மரக்கலமும் வணிகக் கப்பலாக இருந்ததால் பிரச்சனை எதுவும் எழவில்லை.

ஆபுத்திரனின் முகத்தில் வெய்யில் சுள்ளென்று வீசியதே கண்களைக் கசக்கிய படி திறக்க முயன்றான். கண்களைத் திறக்க கஷ்டமாக இருந்தது. வெய்யிலிருந்து ஒதுங்க புரண்ட போது உடம்பை அசைக்க முடியாமல் கனத்துப் போயிருந்ததோடு மட்டுமின்றி அங்கமெல்லாம் வலித்தது. "ஏன் இப்படி இருக்கிறது? தனக்கு என்ன நேர்ந்தது?" என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு நடந்ததை நினைவூட்ட முயன்ற போது ஆளரவம் கேட்டது. அவனது இருப்பிடத்திற்கு ஒரு சிலர் வருவதை உணர்ந்தான் ஆபுத்திரன். வந்தவர்களில் ஒருவர் அவனருகில் குனிந்து நாடியைச் சோதித்தார். உடம்பில் பல இடங்களில் அழுத்தினார். உள்ளங் கால்களைக் கீறினார். கண்களைத் திறந்தும் வாயைத் திறந்தும் பரிசோதித்த அவர் கூட வந்திருந்த அமீரை நோக்கி "அமீர், உனக்கு மூளையில்லை" என்றார் உக்கிரமாக.

அமீர் சற்று நிதானப் பட்டு "நான் செய்த முட்டாள் தனமென்ன வைத்தியரே?" என்று மெதுவாகவே கேட்டான்.

"எச்சரிக்கையாக இருக்க வேண்டியது தான். அதற்காக அளவுக்கு அதிகமான மயக்கத் துளிகளை முகரவிட்டது முட்டாள் தனம். ஆபத்தானது. இதனால் இவனது நாடி தளர்ந்து விட்டது. இரத்தம் உறையும் நிலைக்குப் போய்க் கொண்டிருக்கிறது. பலவந்தமாக வாயைத் திறந்து அடிக்கடி பாலை இவனுக்கு ஊட்டியிருக்க வேண்டும். அதையும் நீ செய்யாமல் விட்டு விட்டாய். இன்னும் அரை நாழிகையில் இவன் உயிர் போய் விடும்" என்றார் வைத்தியர்.





"வைத்தியரே, இவன் உயிர் போனால் எஜமானர் என் உயிரைப் போக்கி விடுவார்" என்றான அமீர்.

"உன் போன்ற ஆயிரம் பேரின் உயிர்களுக்குச் சமமானது இவன் உயிர். ஆகவே நீ சாவது ஒரு பொருட்டல்ல" - தாட்சண்யமின்றிச் சொன்னார் வைத்தியர்.

"எங்கள் இருவரது உயிரையும் நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்" என்று கெஞ்சினான் அமீர்.

"உன் எஜமானரே வந்தாலும் முடியாது அமீர். நிலைமை மிஞ்சி விட்டது"

"நீங்கள் அப்படிக் கூறக் கூடாது. மருத்துவத்தில் நீங்கள் நிபுணர். ஆகவே தான் எஜமானர் உங்களைத் தேடிப் பிடித்து தன்னோடு வைத்திருக்கிறார்"

"இதை நீ சொல்ல வேண்டியதில்லை. என் நிலை எல்லோருக்கும் தெரியும்" என்று கூறிய வைத்தியர் "உன்னைப் பற்றிய கவலை எனக்கில்லை. எஜமானர் எனக்குத் தந்திருக்கும் கௌரவத்திற்கும் என் மீது வைத்திருக்கும் நம்பிக்கைக்கும் தான் நான் கவலைப்படுகிறேன். அதற்கு பங்கம் வந்து விடுமோ என்று தான் அஞ்சுகிறேன்" என்று சொல்லி விட்டு "இவனை ஒரு மஞ்சத்தில் படுக்க வையுங்கள். சுடு நீரைக் கொண்டு வாருங்கள். என்று பல்வேறு கட்டளைகளையிட்டார்.

அதையடுத்து வேலைகள் மடமடவென நடந்தன. வைத்தியமும் மும்முரமாக நடந்தது. வைத்தியர் தன் காரியத்தை நல்லபடியாகச் செய்தாலும் அவரது முகம் கவலையில் தோய்ந்திருந்தது. அடிக்கடி நாடியைப் பரிசோதித்த அவர் கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கையை இழக்கலானார்.



ஆபுத்திரனை பிழைக்கச் செய்யாவிட்டால் போகப் போவது அமீரின் உயிர் மட்டுமல்ல தன் உயிர் கூடத்தான் என்பது அவருக்குத் தெரிந்தே இருந்தது. தன எஜமானர் எந்த அளவுக்கு தனக்கு கௌரவம் அளித்திருந்தாலும் அதெல்லாம் ஆபுத்திரனின் மரணத்திற்கு முன்னால் செல்லாக் காசாகி விடும் என்பதும் அவருக்குத் தெரிந்திருந்தது. எஜமானர் எதற்காக ஆபுத்திரனை கடத்தியிருக்கிறார் என்பது திட்டமாகத் தெரியாவிட்டாலும் அக்கடத்தலுக்கு மிக முக்கியமான காரணம் இருக்க வேண்டும் என்று கருதியதால அதற்குக் களங்கம் ஏற்பட்டால் சும்மா விடமாட்டான் என்பதை உணர்ந்தார்.

ஒரு நாழிகை நேரம் கழிந்த பின் ஏதோ ஒரு கலவையைத் தயாரித்த அவர் அதை நீரில் கரைத்து ஆபுத்திரனின் வாயில் கட்டாயமாகச் செலுத்தி "இனி நடப்பது நடக்கட்டும்" என்று கூறிவிட்டு அகன்றார். அடுத்த அரை நாழிகை நேரத்தில் அமீர் அவரிடம் வந்து ஆபுத்திரன் கண்களை விழிப்பதாகக் கூறியதும் ஓடோடி வந்த அவர் பரிசோதித்து விட்டு "கடவுள் கை விடவில்லை. காப்பாற்றி விட்டார். இனி இவனுக்கு எந்த ஆபத்தும் இல்லை. சிறிது நேரத்தில் இவன் எழுந்து உட்கார்ந்து கொள்வான். நல்லதும் சத்தானதுமான ஆகாரத்தைக் கொடுங்கள். இவன் விரும்பினால் மதுவையும் புகட்டுங்கள். ஒருநாள் வரை இவனைப் பாதுகாத்தால் போதும். இவன் தேறி விடுவான்" என்று சந்துஷ்டியுடன் கூறிவிட்டு அகன்றார்

அவர் கூறியவாறே அனைத்தும் நடந்தன. விரைவிலேயே தேறினான் ஆபுத்திரன். நாளாகவே நிராபு

ஆடைகளைப் புனைந்து விரும்பியதைக் கேட்டுச் சாப்பிட்டான். நினைவும் தெளிவாக இருந்ததோடு மட்டுமின்றி முசிறியிலிருந்து புறப்பட்டது முதல் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் ஞாபகத்திற்கு வரவும் செய்தன. தான் இருக்குமிடம் எது என்பதையும் அறிந்து கொண்ட அவன் எதற்காகவும் கவலைப் படவில்லை. இருக்கும் இடத்தை விட்டு நகரவில்லை. யாரோடும் பேசவில்லை. அன்று மாலை முரசுகள் ஒலிக்கும் ஓசைகள் எழுந்தன. அதையடுத்து இரண்டு மனிதர்கள் வந்து ஆபுத்திரனின் கண்களைக் கட்டினார்கள். வேறிடத்திற்கு அழைத்துச் சென்று அங்கே நிற்க வைத்தார்கள். முரசொலிகளைத் தொடர்ந்து பறையொலிகளும் மங்கள வாத்தியங்களின் கீதங்களும் எழுந்தன. வேட்டொலிகளும் கேட்டன. அனைத்துமே சில நிமிடங்களில் அடங்கியதும் அந்த இடத்தில் யாரோ ஒரு மனிதன் பாதக் குறட்டொலி எழுப்பியபடி நடந்து வருவதை உணர்ந்தான் ஆபுத்திரன்.

அதையடுத்து "வஞ்சிக் கோட்டை வேங்கையே வா. உன் வரவு நல்வரவாகட்டும்" என்று கரகரத்த குரலொன்று எழுந்தது.

அக்குரலைக் கேட்டு அதிர்ந்தான் ஆபுத்திரன்.

"ஆபுத்திரா, உன்னைப் பற்றிச் சேர நாடும் துளு நாடும் பிரமாதமாகப் பேசிக் கொள்கின்றன. அவை உண்மை என்று எனக்கும் தெரியும். இருந்தாலும் உன் திறமையைச் சற்று பரிசோதிக்க விரும்புகிறேன். கண்கள் கட்டப்பட்டிருக்கும் நிலையில் இருக்கிறாய் நீ. நான் யார் என்பதைச் சொல் பார்க்கலாம்" என்றான் அந்த மனிதன்.



யார் என்பதை ஆபுத்திரன் கூறியதும் "அதெப்படி உறுதியாகச் சொல்கிறாய்?" என்று கேட்டான் அந்த மனிதன்.

"நான் கடத்தப் பட்டது எனக்குத் தெரியும். கண் விழித்த போது நான் இருக்கும் இடம் ஒரு மரக்கலம் என்பதும் தெரிந்தது. துளுநாடு என்னைக் கடத்தியிருந்தால் மரக்கலத்திற்கு வர அவசியமில்லை. துளுநாட்டைத் தவிர என்னைக் கடத்தி மரக்கலத்தில் வைக்கப் பட்டிருந்ததால் அது வெள்ளைத் தீவுக் காரர்களின் வேலையாகத் தான் இருக்க வேண்டும். வெள்ளைத் தீவுக்காரர்களில் என்னை இத்தனை தோரணையுடன் அழைக்கக் கூடியவர் நீங்களாகத் தான் இருக்க வேண்டும்" என்றான் ஆபுத்திரன்.

"பலே" - என்று பாராட்டிய அந்த மனிதன் "இவனது கண்கட்டை அவிழ்த்து விடுங்கள்" என்று உத்தரவிட்டான்.

கண்கள் கட்டப்பட்டிருந்த நிலையில் தன்னோடு பேசிய மனிதனை அடையாளம் கண்டு கொண்டாலும் கட்டவிழ்க்கப் பட்ட நிலையில் அந்த மனிதனின் தோற்றத்தைக் கண்டு அசந்து போனான் வஞ்சிக் கோட்டை வாலிபனான ஆபுத்திரன். ஏறக்குறைய புராண கால அரக்கனைப் போல பிரம்மாண்டமாகவும் பயங்கரமாகவும் இருப்பான் என்று எதிர்பார்த்ததற்கு மாறாக ஒற்றை நாடி சரீரத்தில் ஏழடி உயரத்திற்கு காட்சியளித்தான் அந்த மனிதன். நன்றாக முறுக்கி விடப்பட்ட மீசையுடன் கூடிய முகமும் அகன்று விரிந்த கண்களும் ஆடை ஆபரண நேர்த்தியும் அவனை ஒரு கொள்ளைக்காரத் தலைவனாக அடையாளம் காட்டவில்லை. வேற்று நாட்டு அரசகுமாரனைப் போலவே எண்ண வைத்தது. ஆனால் அவன் நின்றிருந்த தோரணை இடையில் தொங்க விடப்பட்டிருந்த நீண்ட வாளின் கோர்த்தி. தீட்சண்யமான

கண்கள் ஆகியவை அவனை ஆபத்தான மற்றும் கடுமையான மனிதனாகவே எண்ண வைத்தன. ஆபுத்திரன் கடத்தப் பட்ட போது தன்னைக் கடத்துவது யாராக இருக்கும் என்று எண்ணிப் பார்த்த போது யார் யாரோ அவனது நினைவுக்கு வந்தார்களே தவிர கடல் கொள்ளைக்காரனான பங்களன் வரவே இல்லை. தேன் சொட்டுவது போல் அக்கொள்ளைக் காரன் பேசினாலும் தேள் கொட்டுவதைப் போன்ற குரூர மனம் கொண்டவன் என்பதும், அரபிய கடற்கடல் பகுதியில் எந்த மரக்கலத்தையும் நிம்மதியாகச் செல்லவிடாதவன் என்பதும், மரக்கலச் சொந்தக்காரர்களுக்கு சிம்மசொப்பனமாய் இருப்பவன் என்பதும் நன்றாய் அறிந்திருந்த வஞ்சிக் கோட்டை வாலிபன் அப்பேர்ப் பட்டவனிடம் போய் சிக்கிக் கொண்டதை எண்ணி சிறிது கலக்கமடையவே செய்தான்.

அவனது மனதில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்டவனைப் போல் அவனை நோக்கிய கொள்ளையர் தலைவன் "என்ன யோசனை ஆபுத்திரா? என்னிடம் வந்து சிக்கிக் கொண்டதை நினைத்துப் பார்க்கிறாயா?" என்று கேட்டான்.

ஆபுத்திரன் சுதாரித்துக் கொண்டு "கொள்ளையர் தலைவரே. நீங்கள் என்னைக் கடத்தி வந்திருப்பதாக எண்ணுவது தவறு. நானாகத் தான் விரும்பி வந்தேன் உன் வீரர்களுடன்" என்றான்.

"இதென்ன புதுக்கதை வாலிபனே?"- கேட்டான் பங்களான்.

"கதையல்ல. உண்மை. உங்களைச் சேர்ந்தவர்கள் மயக்கப் பொடியை காற்றில் கலக்க விட்ட போது



மயக்கமானவனைப் போலக் கீழே விழுந்தேனே தவிர வேகமாகப் பிராணாயாமத்தால் சுவாசத்தை அடக்கிக் கொண்டேன். மயக்கப் பொடியின் வீரியம் அகன்றதும் மூச்சை விட்டு எழுந்து போரிட்டிருக்க என்னால் முடியும். அப்படிச் செய்து நான் தப்ப முயற்சிக்கவில்லை. ஏன்?"

"நீயே எங்களோடு வர விரும்பியதால் தானா?"

"ஆம். அது மட்டுமல்ல. அகன்படல் ஆலய காவல் வீரர்கள் நானிருந்த பாரவண்டியை நெருங்கிய போது நான் விழித்தபடி தானிருந்தேன். வாயைத் திறந்திருந்தால் உமது ஆட்கள் கைதாகியிருப்பார்கள். கடத்துவது யாரென்று தெரியவில்லையே தவிர மற்றபடி யார் என்னைக் கடத்தியிருந்தாலும் அவர்களைச் சந்திக்க விரும்பியே வந்தேன்"

"உண்மையாகத் தான் இருக்கும். அப்படி நீயாக விரும்பித் தான் இங்கே வந்தாய் என்றால் உனக்கு நன்றியைச் சொல்ல வேண்டியது என் கடமையாகிறது. என் வேலையும் சுலபமாகிறது" என்றான் பங்களன்.

"கொள்ளைக்காரர்களுக்கு என் உதவியா?"- என்று ஆபுத்திரன் பேசிக் கொண்டிருக்கும் போதே "நிறுத்து வாலிபனே. நிறுத்து. இன்னொரு முறை சேர மன்னர்கள் செய்து வரும் குற்றத்தைச் செய்யாதே" என்று இரைந்தான் பங்களன். அவனது குரல் கடுமையாக மாறியதுடன் கண்களும் சிவந்து பயங்கரமாகக் காட்சியளித்தன. அவனையும் அறியாமல் ஆபுத்திரனை வெட்ட தனது வாளையும் உயர்த்தினான் பங்களன்.

## பங்களன்





"சேர மன்னர்கள் என்ன குற்றத்தைச் செய்தார்கள்" - என்று நிதானமாகவே வினவினான் ஆபுத்திரன்.

இதைக் கேட்டதும் அங்கேயே சிறிது உலாவிய பங்களன் "ஆதி காலம் தொட்டே சேர மன்னர்கள் எங்களைக் கடற்கொள்ளைக்காரர்கள் என்று இழிவு படுத்தி வருகிறார்கள். உண்மையை மறுத்து பொய்யைப் பேசி எங்களை அவமானப் படுத்தி வருகிறார்கள்" - என்றான்.

"துளுநாட்டு மன்னர்கள் (கன்னட நாடு) ஆளும் கடற்பகுதியில் கடல்துறுத்தி என்னும் இத்தீவுக் கூட்டங்களில் வாழ்ந்து கொண்டு துளு நாட்டு மன்னர்களுக்கு அடங்கி அவர்களுக்காக கடலில் கொள்ளைகளை நிகழ்த்தி வரும் கொள்ளையர்கள் நீங்கள் என்று தானே சொல்லப் படுகிறது? * இது எப்படிப் பொய்யாகும்" கேட்டான் ஆபுத்திரன்.

"நீ மீண்டும் இந்த வார்த்தையைச் சொன்னால் இங்கேயே உன் தலையைத் துண்டிப்பேன். நீயாக விரும்பி இங்கே வந்த ஒரே காரணத்திற்காக உன்னை மன்னிக்கிறேன். எங்கள் விஷயத்தில் சேர நாடும் துளுநாடும் வடிகட்டிய பொய்யைச் சொல்லி வருகின்றன. எங்கள் இருப்பிடம் கடலும் அல்ல. கொள்ளை எங்கள் தொழிலும் அல்ல. நாங்கள் அரசவம்சத்தைச் சார்ந்தவர்கள். கொங்கண நாட்டின் வட பகுதியே (மகாராஷ்டிர தென்பகுதி) எங்கள் நாடு. கடம்பர் இனமே எங்கள் இனம். நாங்கள் பங்கள கடம்பர் என்று

* பக்கம் 264 'கொங்கு நாடும் துளு நாடும்' by மயிலை. சீனி வேங்கடசாமி

அழைக்கப்பட்டோம். * அதையொட்டியே என் பெயரையே பங்களன் என்று வைத்துக் கொண்டேன். ஒரு காலத்தில் அரச குலமான எங்கள் கடம்பர் இனம் மதுரையை ஆண்டது. தெரியுமா உனக்கு? பிறகு பாண்டியர்களால் மதுரை மீட்கப்பட்டது. நாங்கள் ஆண்ட காரணத்தை யொட்டியே மதுரைக்கு கடம்பவனம் என்று பெயர் இன்றும் வழங்கப்பட்டு வருகிறது. ** இப்படி ஆதி அரசான கடம்பன் பரம்பரையில் வந்த எங்களைக் கொள்ளைக் காரர்கள் என்று சேரமன்னர்கள் இழிவு படுத்தி வருவது தண்டனைக் குரிய குற்றம். அதோடு இந்த நாட்டு மன்னர்கள் எங்கள் எஜமானர்களும் அல்ல. நாங்கள் அவர்களது அடிமைகளும் அல்ல. பங்கள நாட்டை எதிர்த்தீவின் (கோவா) கொள்ளைக் காரர்களின் அட்டகாசம் பெருகவே இந்த அரபுக் கடலின் வெள்ளைத் தீவுகளுக்குக் குடி பெயர்ந்தோம். அதை உணராமல் எங்களை இழிவு படுத்தி எங்களைக் காரணமின்றித் தாக்கி எங்கள் கடம்ப மரத்தை அழித்து அதில் முரசுகளைத் தயாரித்து கொண்டவர்கள் சேர மன்னர்கள். அவர்களைப் பூண்டோடு அழிப்பது என்று முடிவு செய்து விட்டேன். அதன் பூர்வாங்கம் தான் உன் வரவு" என்றான் பங்களன்.

பங்களன் உண்மையைப் போல் பேசுகிறனே தவிர உண்மையில் அவன் பேச்சு முழுதும் பொய் என்பதையும் சேரர்களைப் பழிதீர்க்க பொய்யான காரணத்தைக் கற்பிக்க

* பக்கம் 112 'சேர மன்னர்கள் வரலாறு' by ஔவை. துரைசாமிப் பிள்ளை.

** பக்கம் 90 'தென்னாட்டுப் போர்க்களங்கள்' by கா. அப்பாதுரை



முயல்கிறான் என்பதை திட்ட வட்டமாகப் புரிந்து கொண்ட ஆபுத்திரன் நிதானமாகவே பேசமுற்பட்டு "உண்மைகள் இப்படி இருக்குமானால் நீங்களே இவற்றைச் சேரமாமன்னரிடம் தெரிவிக்கலாமே. பேச விரும்புவோர்களை வரவேற்பவர் தான் சேர மாமன்னரே தவிர தங்களைப் போல் ஆட்களை கடத்துபவரல்ல" என்றான்.

"உன் உபதேசங்களைக் கேட்க உன்னை நான் வரவேற்க வில்லை ஆபுத்திரா. என் கட்டளையை நிறைவேற்றவே உன்னை வரவழைத்தேன்"

"உங்கள் கட்டளைதான் என்ன?"

சொன்னான் பங்களன்.

தலையில் இடி விழுந்தது போல் இருந்தது ஆபுத்திரனுக்கு.



## அத்தியாயம் மூன்று



## பொன்வாத்து

**எ**ந்த நேரத்திலும் நிதானமிழக்காதவன் என்று பெயர் பெற்றிருந்த ஆபுத்திரன், கொள்ளையர் தலைவன் தனக்கிட்ட கட்டளையைக் கேட்டதும் நிதானமிழந்து மரியாதையை அறவே கைவிட்டவனாய்

"பங்களா, என்ன கட்டளையிட்டாய்? இன்னொருமுறை சொல்" என்றதும் பங்களனின் இதழ்களில் புன்முறுவல் தவழ்ந்தது.

"உன் பதட்டம் எனக்குச் சந்தோஷமா இருக்கிறது ஆபுத்திரா" என்றான்.

"மற்றவரின் பதட்டத்தைக் கண்டு சந்தோஷப் படுவது தான் கொள்ளையரின் நாகரீகம் போலிருக்கிறது" என்றான் ஆபுத்திரன்.





"வார்த்தைகளில் என்ன இருக்கிறது வாலிபனே? என் நிலையில் இருந்து கொண்டு யோசித்துப் பார். சேர மன்னரை இங்கே தனியாக அழைத்து வரும்படி கட்டளை யிட்டேன். சேர மன்னரை இங்கே சிறையில் வைத்து வஞ்சிக் கோட்டையைப் பிடிக்கத் திட்டமிட்டேன். இதைச் செய்து முடிக்கும் தகுதி உன் ஒருவனுக்கு மட்டுமே உண்டு என்பதால் உன்னைக் கடத்தி வந்தேன். கட்டளையைக் கேட்டு நீயே பதட்டப் படுகிறாய் என்றால் அது என் திட்டத்தின் கச்சிதத்தையல்லவா காட்டுகிறது? இதையெண்ணி சந்தோஷப் படாமல் எப்படி இருக்க முடியும்?" - என்று கேட்டான் கொள்ளையர் தலைவன்.

இதைக் கேட்டதும் வஞ்சிக் கோட்டை வாலிபன் எதுவும் பேசவில்லை. மாறாக இழந்து விட்ட நிதானத்தை மீண்டும் கொண்டு வந்து சுதாரித்துக் கொண்டு பிறகு கேட்டான்.

"உங்களைக் கொள்ளைக்காரர் என்று கூறியதற்காகக் கோபப் பட்டீர்கள். மதுரையை ஆண்ட அரச பரம்பரை என்றும் சூரபத்மனின் வம்சம் என்றெல்லாம் சொல்லிக் கொண்டீர்கள். அரச வம்சத்தை சேர்ந்தவர்கள் என்பது உண்மை தான் என்றால் ஒன்றைச் சொல்லிக் கொள்கிறேன். அரச குலத்தவர்கள் இது போன்ற இழிவான காரியங்களில் இறங்க மாட்டார்கள்" -

வாலிபனின் பதட்டத்தைப் பார்த்துச் சந்தோஷப்பட்ட பங்களான் அவன் திடீரென நிதானத்திற்கு வந்து விட்டதைக் கண்டதும் ஒருபுறம் வியப்பும் மறுபுறம் வருத்தமும் அடைந்தான். ஆயினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் "எதுவுமே சந்தர்ப்பத்தைப் பொறுத்தது வாலிபனே. இதற்கு குலமும் கோத்திரமும் என்ன செய்யும்?" என்று கேட்டான்.

"சந்தர்ப்பம் எதுவானாலும் நேர்வழி ஒன்றையே நாடுபவர்கள் தான் நீதிமான்கள். தர்மவான்கள். அத்தகைய போர் வழியில் வந்தவர் தான் சேரமன்னர் செங்குட்டுவர். அது தான் பேரரசர் பண்பு. தங்கள் லாபத்திற்காக நீதியையும் தர்மத்தையும் சந்தர்ப்பம் என்ற பெயரில் குழி தோண்டி புதைப்பது உங்களைப் போன்ற கொள்ளையர்களுக்கு மட்டுமே சாத்தியம்" - என்றான் வஞ்சிக் கோட்டை வாலிபன்.

அவனது வார்த்தைகள் பங்களனுக்குச் சினத்தை ஊட்டினாலும் சினத்தினால் தனது நோக்கம் வெற்றி பெறாது என்பதை உணர்ந்து கொண்டு அடக்கிக் கொண்டான்.

ஒரு வாரத்திற்கு முன்னால் இது பற்றிய ஆலோசனைகளை தன் சகாக்களோடு நடத்திய போது சினத்திற்கு ஆளானான்.

கொள்ளைக்கார உபதலைவர்கள் சேரரோடு போர் புரிய பல்வேறு யோசனைகளைக் கூறியபோது ஆத்திரத்தில் நறநறவென பற்களைக் கடித்தான் பங்கனன்.

"வீர வசனங்களைப் பேசலாம். ஆனால் பேசுவதற்கும் செயலில் காட்டுவதற்கும் ஏராளமான வித்தியாசங்கள் உண்டு. போர் பிரகடனம் செய்வதற்கு நான் தயார். போரில் வெற்றியைக் கொண்டு வர உங்களில் எத்தனை பேர் தயாராக இருக்கிறீர்கள்?" என்று கேட்டான் கோபத்துடன்.

"வெற்றி அல்லது வீரமரணம். இது தான் போரின் கோட்பாடு" - என்றான் ஓர் உபதலைவன்.

"வெறும் கோட்பாடுகளைச் சுமந்து கொண்டு போரிடுபவன் முட்டாளாகத் தான் இருக்க முடியும். சேரர்கள்



தற்போதிருக்கும் நிலையில் போரில் இறங்கினால் வெற்றியும் கிடைக்காது வீர மரணமும் கிடைக்காது. தோல்வியும் கோர மரணமும் தான் கிட்டும். போர் என்பது யானைக்கும் யானைக்கும் நடக்கலாம். யானைக்கும் சிங்கத்திற்கும் நடக்கலாம். யானைக்கும் பூனைக்கும் நடைபெறமுடியாது" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினான் கொள்ளையர் தலைவன்.

"நம்மை நாமே குறைத்து எண்ணத் தேவையில்லை. துளுநாட்டு மன்னர் துணையைக் கொண்டால் துளுவப் படைகளை தரையிலும் நம்படைகளை கடலிலும் நடத்தினால் சேரர்களை வெற்றி கொள்ள முடியும்" என்றான் ஒருவன்.

"நல்ல கதை. துளு நாட்டு மன்னனின் உதவியை நாடுவதென்பது நரியின் உதவியை நாடுவது போன்றது. ஏற்கனவே நம்மைச் சுரண்டி வாழும் அவன் தற்போது நம் போர்வையில் நுழைந்து கொண்டு நமது காலைத் தான் வாருவான். அதற்கு பதிலாக நாமே நரியாக மாறினால் என்ன?"

"நாங்கள் சொல்வது புரியவில்லை".

"நரியொன்று சிங்கத்தை வெற்றி கொண்டதாக குழந்தைக் கதையொன்று தமிழகத்தில் இருக்கிறது. சேரர் என்னும் சிங்கத்தை போரால் நாம் வெற்றி கொள்ள முடியாது. தந்திரத்தால் தான் முடியும். சேர மன்னனை இங்கே கொண்டு வந்து சிறை வைத்து விட்டால் சேரநாட்டைப் பிடிப்பது எளிது".

"சுகமான கனவு இது தலைவரே. காற்றைப் போய சிறை வைக்க முடியுமா?"

"நான் சிங்கத்தைப் பற்றிப் பேசுகிறேன். நாயைப் பற்றியும் தீயைப் பற்றியும் பேச வில்லை. நீங்களும் அர்த்தமில்லாமல் பேச வேண்டாம். சிங்கத்தை ஏமாற்ற என்னால் முடியும் கேளுங்கள். இது தான் என் திட்டம்" என்று கூறி தனது திட்டத்தை எடுத்துரைத்தான் கொள்ளையர் தலைவன்.

திட்டம் இனிப்பாக இருந்தாலும் நடப்பது வெறும் கனவு தான் என்று நினைத்தார்கள் சகாக்கள்.

ஆனால் திட்டத்தின் முதற்பகுதியான ஆபுத்திரனை கடத்தும் காரியம் வெற்றி பெற்றதுமே அவர்கள் வியந்தார்கள். தலைவனின் திட்டம் வெற்றி பெற வாய்ப்பிருப்பதாகவும் நினைத்தார்கள்.

அந்த ஆலோசனையின் போது தான் கோபாவேசமடைந்ததை எண்ணிப் பார்த்து கொண்ட பங்களன் தற்போது ஆபுத்திரன் கேலவமாகப் பேசிய போது சினத்தை அடக்கிக் கொண்டான். "வஞ்சி கோட்டை பிடிபடட்டும். பிறகு இந்த வஞ்சிக் கோட்டை வாலிபனை அதே கோட்டை வாசலில் தோலை உரித்துத் தொங்க விடுகிறேன்" என்று உள்ளுக்குள் கறுவிக் கொண்டு, "வாலிபனே., சேரமன்னர்கள் எங்களுக்கு இழைத்த அவமானத்தை விட உனது வார்த்தைகளொன்றும் பெரியவையல்ல. காலம் காலமாக எங்களை அவமானப் படுத்திய அந்த சேரர்களை இப்போது அதுவும் என் ஆட்சி காலத்தில் பழி வாங்காவிட்டால் வேறு எப்போதும் முடியாது. ஆகவே எப்படியாவது இக்காரியத்தை வெற்றிகரமாக முடிப்பது என்று உறுதி பூண்டு விட்டேன். சேர நாட்டை



வென்று பின் துளுநாட்டை வென்று முடிவில் நாங்கள் அரசாண்ட கடம்ப நாட்டை மீட்பதே என் லட்சியம். கடலில் அதுவும் சின்னஞ்சிறு தீவுகளில் வாழ்ந்த அற்ப வாழ்க்கைக்கு முடிவுகட்டி மேலைக் கடற்கரை முழுவதையும் என் ஆட்சியின் கீழ் கொண்டு வருவேன். பெரிய காரியங்களை முன்னே வைத்துக் கொண்டு உன்னுடைய சிறிய வார்த்தைகளுக்காக சீற்றமடைய நான் தயாராக இல்லை. ஆகவே என் கட்டளையை நீ நிறைவேற்றப் போகிறாயா இல்லையா என்று சொல்" என்றான் திடமான குரலில்.

அவனது வார்த்தையில் இருந்த உறுதியைக் கண்ட ஆபுத்திரன் "இவன் தன் லட்சியத்திற்காக எதையும் காவு கொடுக்கத் தயங்க மாட்டான்" என்று நினைத்தான். சாதாரணமாகவே மேலைக் கடல் பிராந்தியத்தின் பிரதான கொள்ளைக்காரன் என்ற முறையில் அவனது செயல்பாடுகள் வெறித்தனமாக இருக்கும் என்பது சேரநாட்டில் பிரசித்தமாய் இருந்தது. கொள்ளையிடும் மரக்கலங்களில் கொள்ளைப் பொருட்களை கவர்ந்தபின் அவற்றில் இருப்பவர்களை தானிருக்கும் தீவுக் கூட்டங்களில் பிரத்தியேகமான ஒரு தீவில் வைத்து கைகால்களை வெட்டி இம்சை செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தான் பங்களன். சில சமயங்களில் மரக்கலங்களைச் சேர்ந்தவர்களை ஏதாவது ஒரு மரக்கலத்தில் வைத்து அவர்களை உயிரோடு எரித்து மகிழ்வதும் அவனது வழக்கங்களில் ஒன்றாக இருந்தது. அவனது இருப்பிடமான வெள்ளைத் தீவு துளுநாட்டு கடற்கரைக்கு நேரெதிரில் இருந்தாலும் தீவுகளுக்கு அருகில் அலைகள் இல்லாமல் கப்பல்கள் தங்குவதற்கு ஏதுவாக இருந்தாலும் துளுநாட்டிற்கு வரும் வணிக மரக்கலங்களை அத்தீவுகள் பக்கத்தில்

வரவழைத்து வியாபாரம் செய்ய உசிதமாக இருந்தது துளுநாட்டு மன்னர்களுக்கு. எனவே துளுநாட்டு மன்னர்கள் அவனோடு பிணக்கு வைத்துக் கொள்வதற்கு பதில் ஆதாயம் கருதி நட்பு வைத்துக் கொண்டு தங்கள் நாட்டைக் காப்பாற்றி வந்தார்கள். நட்பு முற்றிய நிலையில் அக்கொள்ளைக்காரர்களை கொள்ளைகளுக்கு ஊக்குவித்தும் உதவியும் வந்ததால் மேலை நாடுகளிலிருந்து வந்து கொண்டிருந்த வணிகர் மரக்கலங்களை பெருமளவில் மடக்கியும் பிடித்தும் ஆதிக்கம் செலுத்தி வந்தார்கள் கடம்பர்கள். இக்கதை நடக்கும் காலத்திற்கு சில ஆண்டுகளுக்கு முன்னால் சேரமன்னன் செங்குட்டுவனின் தந்தையான இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் இந்தக் கொள்ளையரின் அட்டகாசத்திற்கு முடிவு கட்டத் தீர்மானித்து வெள்ளைத் தீவுகள் மீது படையெடுத்து கடம்பர்களை அழித்தான். அவர்களது கௌரவச் சின்னமான கடம்ப மரங்களை வெட்டி அதில் சேர நாட்டு முரசுகளை தயாரிக்கச் செய்தான். சூரனை அழித்த முருகனைப் போன்று கடம்பர்களை அழித்தான் என்று சங்க இலக்கியங்களில் போற்றப்பட்ட சேரலாதன் மாண்ட பின் மீண்டும் கடம்பர்களின் ஆதிக்கம் மேலோங்கத் துவங்கியது. ஆனால் முன்பு போல் துளு நாட்டின் உதவி பெருமளவில் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. துளு மன்னன் தனது வாணிபத்தை உள்நாட்டு வாணிபமாக மாற்றிக் கொண்ட படியால் அவர்களை கடல் கொள்ளைகளுக்குத் தூண்டி விட மட்டுமே பயன்படுத்திக் கொண்டார்கள். இந்த நேரத்தில் விழித்துக் கொண்டான் பங்களன்.

துளு நாட்டிற்குச் சேவகம் செய்வது போலிருந்த நிலையிலிருந்து மீள முடிவு கட்டிய அவன் துளு நாட்டிற்கும்



சேர நாட்டிற்கும் பாடம் கற்பிக்கத் தீர்மானித்தான். யாருக்கும் அடி பணியாமல் எல்லோரையும் தனக்கு அடி பணிய வைக்கத் துணிந்து சேரமன்னனைச் சிறை செய்ய எண்ணி ஆபுத்திரனைக் கருவியாகப் பயன்படுத்த நினைத்து அவனைக் கடத்தி வரவும் செய்தான்.

இப்படி சுயநலத்தையும் பேராசையையும் பின்னால் வைத்துக் கொண்டு ஏதோ பெரிய லட்சியவாதி போல் நடித்த பங்களனை நன்றாகப் புரிந்து கொண்ட ஆபுத்திரன், "சேரமாமன்னரை இங்கே அழைத்து வர என்னை எதற்காக அழைத்தீர்கள்? என்னால் எப்படி இக்காரியம் முடியும்?" என்று கேட்டதும் இடி போலச் சிரித்தான் கொள்ளையர் தலைவன்.

"இதென்ன முட்டாள் தனமாக கேள்வி வாலிபனே! தெரிந்து பேசுகிறாயா அல்லது தெரியாமல் பேசுகிறாயா என்று தெரியவில்லை. சேரமன்னரோடு தோள் கொடுக்கும் அமைச்சர் அழும்பில்வேள், படைத்தலைவன் வில்லவன் கோதை, கருமத்தலைவன் சஞ்சயன், தூதர் தலைவன் நீலன், ஆலோசனைக் குழுத் தலைவர் புலவர் பரணர் என்று பலர் இருந்தாலும் உனக்குள்ள தனிப்பட்ட செல்வாக்கு எப்படிப் பட்டது என்பது சேரநாட்டிற்கு மட்டுமல்ல எங்களுக்கும் தெரியும். மன்னருக்கு அடுத்த நிலை உனக்குத் தான் என்பதும், சேரநாட்டில் எங்கு வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் நுழையக் கூடிய உரிமை உனக்கு உண்டு என்பதும், உன் பேச்சை மன்னர் தட்டுவதே இல்லை என்பதும் எல்லோருக்கும் தெரிந்த உண்மைகள். இப்படி இருக்கும்

போது உன்னைத் தவிர வேறு யாரை நான் தேர்ந்தெடுக்க முடியும்?" என்று கேட்டான் கொள்ளையர் தலைவன்.

"நான் சொன்னால் சேரமாமன்னர் என்னோடு இங்கே துணிந்து வந்து விடுவாரா?"

"நிச்சயமாக வருவார்"

"உன்னிடம் காவு கொடுப்பதற்காக நான் இக்காரியத்தைச் செய்வேன் என்று நினைக்கிறாயா நீ?"

"நீ எங்களிடம் சிக்கியிருப்பதை தெரிவித்தாலே போதும் சேர மன்னன் உடனடியாக இங்கு வந்து விடுவான். அக்காரியத்தை நான் விரும்பவில்லை. அப்படிச் செய்வதில் பலசிரமங்கள் இருக்கின்றன"

"நான் உன் கட்டளையை மறுத்தால் என் உயிர் போய் விடும். அவ்வளவு தானே?"

"நீ ஒரு பொன்வாத்து வாலிபனே. யோசி. நன்றாக யோசி ஒருநாள் வரை உனக்கு அவகாசம் தருகிறேன். அதற்குப் பின்பும் நீ மறுத்தால் அப்போது சொல்கிறேன் என் முடிவை" என்று கூறி விட்டு அகன்றான் பங்கனன்.

அவனது சகாக்களும் அகன்றார்கள்.



தனியாக விடப்பட்ட வஞ்சிக் கோட்டை வாலிபன் தன்னைத் தடை செய்ய யாருமில்லாததால் மரக்கலத்தின் மேல் தளத்திற்கு வந்து சுற்றிலும் நோக்கினான். தானிருந்த மரக்கலத்தை யொட்டி வெள்ளைத் தீவுகள் ஆங்காங்கே



இருந்ததால், அங்கே வசித்த மக்கள் இராப் பொழுதான காரணத்தால் தங்கள் இருப்பிடங்களில் தீபங்களை ஏற்றி விட்டிருந்ததால், கடற்பகுதியில தோன்றிய ஒளிப் பூக்களைப் போல காண்பதற்கு அழகாக இருந்தது. பல இடங்களில் கொள்ளையர்கள் மீனையும் இறைச்சியையும் தீயில் வாட்டி வறுத்துக் கொண்டிருந்ததால் மூக்கைத் துளைக்கும் மாமிச வாடை எங்கேயும் வீசிக் கொண்டிருந்தது. பவழப் பூச்சிகளால் ஆன கடல் தீவுகளான வெள்ளைத் தீவுக் கூட்டங்களில் கொள்ளையர் தலைவன் பங்கனன் வசித்த தீவுப் பகுதி மட்டும் இதர தீவுப் பகுதிகளை விட பெரிதாக இருந்தது. வெறும் மணல் திட்டாக இருந்த அத்தீவை சேர மன்னன் சேரலாதன் சூழ்ந்து கொண்டு தாக்கி வெற்றி கொண்டதற்குப் பிறகு பல விதங்களில் பாடங்கற்றிருந்த பங்கனன் அவனிருந்த தீவைப் பாதுகாக்கும் வகையில் கோட்டையொன்றைக் கட்டியிருந்தான். கோட்டையைச் சுற்றி நாற்புறமும் கடல் சூழ்ந்திருந்ததால் கடலே அகழி போல் அமைந்து கோட்டைக்கு பாதுகாப்பை அளித்தது. போதாத குறைக்கு கோட்டையை சுற்றியிருந்த கடல்நீரில் ஏராளமான முதலைகளை வேறு விட்டிருந்தானதலால் அவை அடிக்கடி சண்டையிட்டுக் கொண்டு கடல்நீரைக் கலக்கியடித்துக் கோட்டைச் சுவர்களில் சுளீர் சுளீரென தெறிக்க வைத்ததால் அந்த ஓசை இரவு நேரத்தில் வெள்ளைத் தீவின் பயங்கரத்தைப் பறைச் சாற்றியது. கோட்டையின் மேலே நாற்புறங்களிலும் காவற் கூடங்கள் அமைக்கப் பட்டு அவற்றில் பெரும் முரசுகள் வைக்கப்பட்டு கூடவே கொள்ளையன் ஒருவனும் நிறுத்தப்பட்டிருந்தான். ஒவ்வொரு நாழிகை கழியும் போதும் முரசுகள் லேசாக ஒலித்து ஆபத்து எதுவும் இல்லை என்று அறிவித்துக் கொண்டிருந்தன அத்தீவுகளுக்கப்பால் கொள்ளையர் கலங்கள் கடலில்

தங்கூரமிட்டு நிறுத்தப்பட்டிருந்தன. பெருங்காற்றில் அவை ஆடிய போது அவற்றில் தொங்கிய மணிகளும் விளக்குகளும் ஆடிய காட்சியானது கடலில் தனியொரு கலை நிகழ்ச்சி நடப்பது போல் இருந்தது. தீவுகளுக்கு கிழக்குப் பக்கத்தை நோக்கினான் வஞ்சிக் கோட்டை வாலிபன். நெடுந் தூரம் வரை பொட்டு பொட்டாக விளக்கொளிகள் காணப் பட்டாலும் பெரும்பாலும் இருட்டே கவிந்திருந்தது. அந்த இருட்டுக்குப் பின்னால் இயற்கையே எழுப்பிய தூணைப் போல் பிரம்மாண்டமாய் தெரிந்த மேற்குமலைத் தொடர் பெரும் பிசாசு ஒன்று படுத்திருப்பது போல் காட்சியளித்தது.

இயற்கையின் அழகு அமைதியாக இருந்தாலும் பயங்கரமாக இருந்தாலும் அது ரசிக்கத் தக்கதாகவே இருப்பதை உணர்ந்த சேர நாட்டின் வாலிபன் 'இயற்கையின் சிறப்பே அது தான்' என்று நினைத்தான். ரசனையில் சிறிது நேரம் கழிந்த நிலையில் பணியாட்கள் சிலர் அவனுக்கு உணவளித்து விட்டுப் போனார்கள். அதோடு மரக்கலத்தில் தலைவனின் அறை காலியாக இருப்பதாகவும் இரவில் தூங்குவதற்கு அந்த அறையைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றும் தெரிவித்தார்கள். அவன் எந்த பதிலையும் சொல்லிக் கொள்ளவில்லை.

மரக்கலத்தளத்திலேயே படுத்துக்கொண்டு கொள்ளையர் தலைவன் கூறியதையெல்லாம் எண்ணிப் பார்த்துக் கொண்டான். கொள்ளையர் தலைவனின் பேராசையான திட்டங்கள் அவனைப் பொருத்தவரை நியாயங்களாகவே கருதப்படுமாதலால் அதைப்பற்றி அவன் யோசிக்கவில்லை. காலஞ் சென்ற சேரலாதன் பூண்டோடு அழித்திருந்த கடம்பர்களை மீண்டும் தலையெடுத்து வெள்ளைத் தீவில்



பெரிதாக கோட்டை கட்டிக் கொள்ளும் அளவிற்குச் சேரமாமன்னர் செங்குட்டுவர் ஏன் அனுமதித்தார் என்பது மட்டும் அவனுக்குப் புதிராக இருந்தது. கொள்ளையரின் வளர்ச்சி எந்த விதத்திலும் நல்லதல்ல என்பது வெளிப்படையானதாக இருக்கும் போது கூரிய மதி நுட்பம் வாய்ந்த செங்குட்டுவர் என்ன காரணமாக விட்டு வைத்திருக்கிறார் என்று யோசித்துப் பார்த்த அவனுக்கு விடை கிடைக்கவில்லை. அவரைத் தவிர்த்தாலும் கூட மாபெரும் தளபதியான வில்லவன்கோதைக்குக் கூடவா இது தோன்றாமல் போயிற்று'. இப்படியெல்லாம் எண்ணிப் பார்த்த அவன் 'சரி இது முடிந்து போன விஷயம் இப்போது யோசிப்பதில் அர்த்தமில்லை' என்று சொல்லிக் கொண்டு கொள்ளையர் தலைவனின் கட்டளையைப் பற்றி யோசிக்கலானான்.

சேரமாமன்னரை அழைத்து வந்து கொள்ளையனிடம் ஒப்படைப்பது என்பது கனவிலும் முடியாத காரியம் என்பது அவனைப் பொருத்தவரை தீர்மானமாகி விட்டிருந்த படியால் அக்காரியத்தை மறுக்கும் பட்சத்தில் என்ன தண்டனை கிடைக்கும் என்று யோசித்துப் பார்த்தான். தன்னை அயன் ஒரு பொன் வாத்து என்று கூறி விட்டுப் போனதிலிருந்து தன்னை உடனடியாகக் கொல்ல மாட்டான் என்றும் தன்னைப் பணயமாக வைத்து மன்னரை மிரட்ட நினைப்பான் என்றும் தோன்றியது அவனுக்கு. அந்த நிலை விரும்பத்தக்கதல்ல என்பதால் தன்னால் மாமன்னருக்குச் சங்கடம் உண்டாவதை அவன் விரும்பவில்லை. எனவே பங்களனிடமிருந்து தப்பிச் செல்வது தான் உசிதம் என்று முடிவு செய்து மேல்தளத்தை விட்டு இறங்கி மரக்கலம் முழுவதும் சென்று பார்த்தான். மரக்கலம் காலியாக இருந்தது. அதைக் கண்டு ஆபுத்திரன்

ஏமாந்து விடவில்லை. மரக்கலத்தில் யாரையும் இல்லாமல் செய்திருப்பது தன்னைச் சோதிப்பதற்காகத்தான் என்பதையும் மற்றபடி தனது அசைவுகளை மறைவிலிருந்து கண்காணிக்க ஏற்பாடு செய்திருப்பான் என்று உணர்ந்து கொண்ட அவன் தான் தப்பக் கூடிய சமயம் அதுவல்ல என்று முடிவு செய்து கொண்டு மரக்கல அமைப்பை ஆராய்ந்தான். அது போர்க்கப்பல் அல்ல என்பதும் தொலைவிடப் பயன்படுத்தக் கூடிய கப்பலும் அல்ல என்பதும் வெறும உல்லாசக் கப்பல் என்பதும் அவனுக்குப் புரிந்தது.

மேற்கொண்டு எதையும் ஆராயாமல் மேல் தளத்திற்கு வந்த போது அதிர்ச்சியடைந்தான் ஆபுத்திரன். அங்கே அவன் இருந்த இடத்தில் மரக்கலத்தில் பக்கப் பலகையில் சாய்ந்த படி ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். பெண்ணாக இருந்தாலும் அழகிலும் ஒய்யாரத்திலும் தேவதை போல் இருந்தாள் அவள். அவளது முகத்தைப் பார்க்க முடியவில்லை என்றாலும் அவனுக்கென்னவோ அவள் பேரழகியாகத் தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. ஆடைகளையும் ஆபரணங்களையும் நேர்த்தியாக அவள் அணிந்திருந்ததால் அவளது தோற்றம் சந்திர ஒளியில் ஒளிர்ந்து வஞ்சிக் கோட்டை வாலிபனை ஒரு கணம் உன்மத்தம் கொள்ளவைத்தது. இரவு நேரத்தில் அதுவும் கடல் பிராந்தியத்தில் யாருமில்லாத மரக்கலத்தில் துணை யாருமின்றி நிர்ப்பயமாக அவள் நின்று கொண்டிருந்ததிலிருந்தே இவள் சாமானியமானவளாக இருக்க முடியாது என்று நினைத்தான் ஆபுத்திரன். எதற்கும் அவளைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் "பெண்ணே, யார் நீ" - என்று கேட்டான்.



அந்தப் பெண் முகத்தை மட்டும் திருப்பி அவனை ஒரு கணம் பார்த்து விட்டு பழையபடியே திருப்பிக் கொண்டாள். எதுவும் பேசவில்லை.

ஆபுத்திரன் ஒரு கணம் யோசித்து விட்டு மேற்கொண்டு அவளிடம் ஏதும் பேசாமல் தளத்தின் மற்றொரு மூலைக்குச் சென்று கால் நீட்டிப் படுத்துக் கொண்டான்.

தனக்குப் பின்னாலேயே அவன் நின்று கொண்டிருப்பான் என்று அவள் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். சில நிமிடங்கள் கழித்து அவளாகத் திரும்பிய போது அவன் அங்கில்லாமல் போனதால் வியப்படைந்த அவள் சுற்றும் முற்றும் பார்த்தாள். பிறகு மரக்கல தளத்தின் மறுமூலைக்குப் போனாள். அங்கே அவன் சுவாதீனமாகக் காலை நீட்டிப் படுத்திருந்ததைக் கண்ட போது அவளுக்கு ஏனோ பொறாமையாகவும் கோபமாகவும் இருந்தது.

அருகே சென்ற அவள் "தூங்கி விட்டீர்களா" என்று ஒரு வித தோரணையுடன் கேட்டாள்.

"ஏன்? நான் தூங்குவதற்கு உன் அனுமதியைக் கேட்க வேண்டுமா?" என்றான் ஆபுத்திரன்.

"வீணாக எதற்கு இந்த கற்பனை"- கேட்டாள் அவள் சுமுகமான குரலில்.

"கற்பனையை நான் விரும்புவதில்லை. ஆகவே நான் உன்னைப் பார்த்ததும் யாராக இருப்பாய் என்ற கற்பனையில் இறங்காமல் நீ யாரென்று கேட்டேன். பதில் வராததால் இங்கே வந்து விட்டேன்"

"நீங்கள் கேட்டால் நான் பதில் சொல்லி விட வேண்டுமா என்ன?"

"தேவையில்லை. அதைப் புரிந்து கொண்டு தான் மேலே எதுவும் கேட்காமல் இங்கே வந்ததோடு நீ கேட்கும் கேள்விகளுக்கு பதிலும் சொல்லிக் கொண்டிருக்கிறேன்"

அவன் மிகச் சரியாகவும் அளவோடு பேசி விட்டதால் மேற்கொண்டு எப்படிப் பேசுவது என்று தெரியாமல் சற்றே சங்கடப் பட்டு "நான் உங்களுக்கு பதில் சொல்லாமல் இருந்தது தவறு தான்" என்றாள் இணக்கமான குரலில்.

"விருப்பமில்லை என்றால இப்போது கூட சொல்ல வேண்டியதில்லை. ஏனென்றால் நான் இங்கே இருக்கும் இருப்பிற்கு யாரைப் பற்றியும் தெரிந்து கொண்டு ஆக வேண்டியது ஒன்றுமில்லை"

"நான் கடம்ப மன்னரின் மகள். என் பெயர் சௌமிய குமாரி" என்றாள் அந்த அழகி. கேட்டு விட்டு அங்கிருந்த மர ஆசனத்தில் அமர்ந்து கொண்டு ஒருகாலைத் தூக்கி மேலாக வைத்துக் கொண்டு ஒய்யாரமாக பார்த்தாள்.

"மகிழ்ச்சி" என்றான் ஆபுத்திரன்.

"நீங்கள் உண்மையான மகிழ்ச்சி அடைய வேண்டுமா?"-

"உண்மையான மகிழ்ச்சியா?"

"இங்கிருந்து தப்பினால் அது உங்களுக்கு உண்மையான மகிழ்ச்சியாக இருக்குமல்லவா?"

"என்னை உன்னால் தப்ப வைக்க முடியுமா?"



"மன்னன் மகளால் முடியாதது எதுவுமில்லை. உங்களைத் தப்புவிக்க என்னால் முடியும். ஆனால் ஒரு நிபந்தனைக்கு நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும்"

"என்ன நிபந்தனை?"

சொன்னாள் அவள்.

அதிர்ந்தான் ஆபுத்திரன்.





## அத்தியாயம் நான்கு



# சௌமிய குமாரி

கொன்னையர் தலைவன் பங்களனின் மகள் என்று சொல்லிக் கொண்ட சௌமியகுமாரி ஆபுத்திரன் தப்பிச் செல்ல உதவுவதாகத் தெரிவித்து அதற்கு விதித்த நிபந்தனையைக் கேட்டதும் ஆபுத்திரன் பெரிதும் அதிர்ந்து போனதில் காரணமிருக்கவே செய்தது. அவன் விதித்த நிபந்தனையை விட அப்படியொரு நிபந்தனையை திடீரென்று தோன்றிய ஒரு பெண் நான்கு வார்த்தைகளை மட்டுமே பேசிய நிலையில் எப்படி விதிக்க முடியும் என்பது அவனுக்கு பேராச்சரியமாய் இருந்தது. அவளது நிபந்தனை உண்மையானது தானா அல்லது பங்களன் மூலம் உருவாக்கப் பட்ட சதியா என்றச் சந்தேகம் கூட அவனுக்கு உண்டாயிற்று. ஒருவாறு தன் அதிர்ச்சிகளையும் உணர்ச்சிகளையும் அடக்கிக்



கொண்ட அவன் "பெண்ணே, உன் தந்தையின் விருப்பத்திற்கு மாறாகவும் அவரது பெரிய திட்டம் குலைந்து விடும் படியாகவுமான ஓர் உதவியை எனக்குச் செய்வதாகச் சொல்கிறாயே இது நீ உன் தந்தைக்குச் செய்யும் துரோகம் இல்லையா?" என்று கேட்டான்.

சௌமியகுமாரி இதைக் கேட்டு லேசாக புன்னகை செய்து சற்றே அசைந்தாள் மயில் போல்.

ஆபுத்திரனும் எழுந்து மரக்கலத்தின் பக்கப் பலகையில் சாய்ந்து கொண்டு அவளது முகத்தைக் கூர்ந்து நோக்கினான்.

தன்னை அவனப்படி கூர்ந்து நோக்குவதைக் கண்டு இன்பமடைந்த அவள், "வீரரே, என் தந்தையின் செயல்கள் நியாயமானவை என்று நீங்கள் சொல்கிறீர்களா?" என்று கேட்டாள் அழகான குரலில்.

"அதெப்படி சொல்லமுடியும்?" - என்றான் அவன்

"அவர் புரிவது அதர்மம் தானே?" - என்று தலையைச் சாய்த்து குயில் குரலில் கேட்டாள் அவள். அவளது அங்கங்கள் அசைந்து அவனது உணர்ச்சிகளை அசைக்க முயன்றன.

அந்த முயற்சிக்கு ஆளாகிவிடாமல் சுதாரித்துக் கொண்ட ஆபுத்திரன் "ஆம். அதர்மம் தான்" என்றான் அவளது பேச்சின் போக்கை ஓரளவிற்கு உணர்ந்தவனாய்.

"அதர்மத்தை சேரர்கள் மட்டும் தான் எதிர்க்க வேண்டுமா? நான் எதிர்க்கக் கூடாதா" என்று கிண்டலான குரலில் கேட்டாள் அவள்.

"நாங்கள் எதிர்க்கலாம். ஏனென்றால் நாங்கள் கடம்பர்களின் எதிரிகள். ஆனால் கடம்ப மன்னனுக்கு நீ மகள். நீ எதிர்க்க வேண்டிய அவசியமில்லை"

"தர்மமும் அதர்மமும் பொதுவானவை வீரரே. என் தந்தைக்கு ஒன்று மற்றவர்க்கு ஒன்று என்று தனியான தர்மங்கள் ஏது?"

"பெண்ணே, எங்கள் நாட்டில் மகாபாரதம் என்ற ஓர் இதிகாசம் உண்டு. உனக்கது தெரியுமா?"

"ஓரளவிற்குத் தெரியும்"

"கௌரவர் தரப்பில் பீஷ்மர், துரோணர், கிருபாச்சாரியார் போன்ற பெரியோர்கள் இருந்தார்கள். துரியோதனன் செய்வதெல்லாம் அதர்மம் என்று தெரிந்திருந்தாலும் உறவு முறை காரணமாகவும் செஞ்சோற்றுக் கடன் காரணமாகவும் அவனுக்காகவே கடைசி வரை போரிட்டு மாண்டார்கள்"

"நல்ல கருத்தை எடுத்துச் சொன்னதற்காக நன்றி வீரரே. அதர்மம் என்று தெரிந்தும் உறவு முறை காரணமாக அதர்மத்தை ஆதரித்தது சிறந்ததா? உறவு எதுவாக இருந்தாலும் அதர்மத்தை எதிர்க்க முன் வருவது சிறந்ததா?" இப்படிக் கேட்டு அவனைச் சரியாக மடக்கி விட்டதாகக் கருதி புன்னகை செய்தாள் சௌமியகுமாரி.

"நீ உன் தந்தையின் செயல்களை அதர்மம் என்று முடிவு கட்டி விட்ட பின் அவரிடம் சொல்லி அவரைத் திருத்துவது தானே முறை? அதை விட்டு விட்டு என்னோடு சேர்ந்து கொண்டு துரோகம் செய்வது முறையா?"

"மீண்டும் உங்கள் பேச்சிற்காக என் நன்றி. நீங்கள் குறிப்பிட்ட மகாபாரதத்தில் துரியோதனிடம் அவனது அதர்மங்களை பீஷ்மர் முதலான பெரியோர்கள் சுட்டிக் காட்டினார்கள். தட்டிக் கேட்டார்கள். யாருடைய



ஆலோசனைகளையும் துரியோதனன் ஏற்க வில்லை என்று தெரிகிறது. நல்ல ஆலோசனைகளைக் கூறும் போது திருந்த வேண்டியவர்கள் அவற்றை அலட்சியம் செய்தால் விபீஷணனைப் போல் விலக வேண்டியது தான்"

"விபீஷணனா?"

"ஆமாம். உங்கள் நாட்டின் இன்னொரு இதிகாசத்தைத் தான் சொல்கிறேன். ராவணனின் அதர்மத்தை விட்டு விட்டு ராமனின் தர்மத்திடம் சரணடைந்தான் அரச குமாரனான விபீஷணன். அவனது செயலை ராமாயணம் துரோகம் என்று சொல்கிறதா? இல்லை வீரரே. அரச குமாரரின் செயலை ராமாயணம் ஏற்கும் போது அரசகுமாரியான என் செயலை மட்டும் எப்படி துரோகம் என்று சொல்கிறீர்கள்?"

சௌமியகுமாரியின் வார்த்தைகளை கேட்டு மிகவும் திருப்தியடைந்த ஆபுத்திரன் "பெண்ணே, உன் அறிவுக் கூர்மையை நான் மெச்சுகிறேன். சேற்றிலிருந்து இப்படியொரு தாமரை முகிழ்த்திருப்பதைக் கண்டு வியக்கிறேன்" என்றான்.

"வியப்பதற்கு எதுவுமில்லை வீரரே. தாமரை பூக்கள் சேற்றில் தான் முளைக்கும். தோட்டத்தில் முளைப்பதில்லை"

"தாமரையே, இத்தனை மதி நுட்பத்துடன் பேசும் உனக்கு நீ போட்டிருக்கும் நிபந்தனை தவறானது என்று தோன்றவில்லையா?"

"ஏன், நான் அழகாய் இல்லையா?" என்று கேட்டு விட்டு கடைக்கண்ணால் பார்த்தாள் சௌமியகுமாரி.

"தாமரைப் பூ அழகில்லை என்று குருடன் கூட சொல்ல மாட்டான். அழகு இங்கே பிரச்சனை இல்லை"

"கொள்ளைக்காரனின் மகள் என்று தயங்குகிறீர்களா?"

"சேற்றில் பூக்கும் தாமரை பூக்கள் தான தெய்வத்தின் தோள்களையும் திருவடி களையும் அலங்கரிக்கின்றன. திருமகள் தாமரையில் அமர்ந்திருப்பதாக எங்கள் நாடு பாராட்டி மகிழ்கிறது. ஆகவே குலம் பிரச்சினை இல்லை"

"உங்கள் குடும்பத்தார் என்னை ஏற்க மாட்டார்களா?"

"நான் அனாதை. பசுக்களின் கொட்டடியில் குழந்தையாகக் கிடந்தவன் நான். அதன் காரணமாகவே பசுக்களின் புத்திரன் என்று கருதி ஆபுத்திரன் என்ற பெயரைச் சூட்டி என்னை வளர்த்தார்கள் இடையர் குல பெருமக்கள்"

"அனாதை எப்படி சேர மாமன்னரின் அன்புக்குப் பாத்திரமானார்?"

"அன்பும் கருணையும் பிறவியைப் பார்ப்பதில்லை பெண்ணே. அதுவும் நீதிமான்களும் சான்றோர்களும் பெருந்தன்மைக்குப் பேர் போனவர்கள். அதிலும் எங்கள் சேரமன்னர் செங்குட்டுவர் வெறும் அரசரல்ல. தெய்வாம்சம் பொருந்தியவர். திருமாலின் அவதாரம் அவர். * அவரது அன்பிற்கு நான் பாத்திரமானது நான் செய்த பாக்கியம். என் பிறவி செய்தபேறு" -

* செங்குட்டுவனை சிலப்பதிகாரம் திருமாலின் அவதாரம் என்றே பாராட்டுகிறது. (ஆய்ச்சியர் குரவை)
'முந்நீரின் உட்புக்கு மூவாக் கடம்பெறிந்தான்
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கன்னவில் தோள் ஓச்சிக் கடல் கடைந்தான் என்பரால்'



"பிறகு என்னை மணப்பதற்கு உங்களுக்கென்ன கஷ்டம்?"

"திருமணங்கள் நிபந்தனைகளால் நடைபெறுவது அழகல்ல பெண்ணே. அறிவாளியான நீ எப்படி இதைப் புரிந்து கொள்ள மறுக்கிறாய்?"

"நான் புரிந்து கொண்டு தான் பேசுகிறேன் வீரரே. மன்னர் குலத்தில் காந்தர்வ முறையில திருமணங்கள் நடப்பதில்லையா? அது சரி தானா! அரச குமாரிகளை பணயமாகக் கேட்டு போர் உடன்படிக்கைகள் நடப்பதில்லையா? அது முறைதானா? நம் விஷயத்தில் அப்படிப் பட்ட குரூரம் எதுவும் இல்லை. நானே நேரில் உங்களிடம் விருப்பத்தைக் கேட்கிறேன். இது எப்படித் தவறாகும்?"

"நிபந்தனையின் பேரில் தர்மத்திற்கு உதவுவதை விட நிபந்தனையின்றி உதவுவது சிறப்பானது இல்லையா?"

"வீரரே, நிபந்தனை என்ற ஒரு வார்த்தையை வைத்துக் கொண்டு ஏன் இப்படி குழப்பமடைகிறீர்கள்' என் இதயத்தை ஏன் நீங்கள் புரிந்து கொள்ளவில்லை? ஏங்கும் உள்ளங்களைப் புரிந்து கொள்ள முடியாத மனிதரா நீங்கள்? எதற்கும் ஒருநாள் அவகாசம் தருகிறேன். நன்றாகச் சிந்தித்து முடிவைச் சொல்லுங்கள்" என்று கூறி மயில் பறந்து போவது போல் ஓடி மறைந்தாள் சௌமியகுமாரி.

அன்றிரவு தூக்கமில்லாமலேயே கழிந்தது ஆபுத்திரனுக்கு. சௌமியகுமாரி வெளிப்படையாகவும்

அறிவும் பூர்வமாகவும் பேசியதிலிருந்து அவள் உண்மையாகவே சௌனையர் அவையினை எதிர்க்கிறாள் என்று நம்பினான் அவன். அவள் தன்னை மணந்து கொள்ளும் படி கேட்டது கூட இதைப் பூர்வமானது தான் என்றே கருதினான். அவனுக்கு உதவுவதற்கு வகையாக திருமணத்தை முன் வைத்தாள் அவள். திருமணம் செய்து கொள்ளும் படி மன்றாடியிருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ளும் நிலையில் அவன் இல்லை. தந்தையும் மகளுமாக தனக்கு அவகாசம் கொடுத்து விட்டு தன்னைத் தூக்கமில்லாமல் செய்து விட்டதை எண்ணி தனக்குள் சிரித்துக் கொண்டான். இந்தச் சிந்தனைக் கிடையில் சௌமியகுமாரியின் முகலட்சணத்தையும் பங்களனின் முகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்த அவனுக்கு இருவரது முகலட்சணத்திற்கும் பெருத்த வேறுபாடு காணப்பட்டதால் சௌமியகுமாரி உண்மையிலேயே பங்களனின் மகள் தானா என்ற சிந்தனையும் எழுந்தது.

இதற்கிடையில் இவ்விருவரும் பேசிய பேச்சுக்களை மரக்கூத்தில் மறைவிலிருந்த படி கேட்ட ஒற்றன் ஒருவன் பங்களனிடம் சென்று விவரத்தைக் கூறியதும் "என் மகளுக்கு இத்தனை அறிவிருக்கிறதா" என்று வியப்போடு கேட்டான் சௌனையர் தலைவன்.

அந்தப்புரத்தில் அந்தப்புர அழகி ஒருத்தியின் நடனத்தை ரசித்தபடி இருந்த பங்களன் பதட்டப்படாமல் சர்வசாதாரணமாக பேசுவதைக் கேட்டுப் பதட்டப் பட்ட ஒற்றன் "ஐயா, தாங்கள் சிரமப் பட்டுக் கடத்தி வந்தவனை தங்கள் அரசகுமாரி தப்பச் செய்வதாகக் கூறியிருக்கிறார். தங்களிடம் இது விஷயமாக பதட்டம் ஏதும் இல்லை" என்றான்.




பங்களன் அந்தப்புரம்

"எதற்காகப் பதட்டப்பட வேண்டும்"

"வஞ்சிக் கோட்டை வாலிபன் தப்பிப் போவது பதட்டப் பட வேண்டிய விஷயமில்லையா?"

"அந்த வாலிபனை சௌமியகுமாரியால் காப்பச் செய்ய முடியும் என்று நினைக்கிறாயா?"

"ஐயா, தங்களுக்குள்ள எல்லா அதிகாரமும் அரசகுமாரிக்கு உண்டு"

"அது உண்மைதான்" என்ற கொள்ளையர் தலைவன் "அரசகுமாரியை கைது செய்து விடலாமா?" என்று கேட்டான்.

"அது முடியுமா"

"முடியாதா?"

"ஐயா, தங்களுக்குத் தெரியாததல்ல. இங்குள்ள என்போன்ற கொள்ளையர்களுக்கும், மாலுமிகளுக்கும் இத்தீவுகளில் வசிப்பவர்களுக்கும் அரசகுமாரி ஒரு செல்லப் பெண். அவர்கள் எல்லோருமே அரசகுமாரியை தங்கள் சொந்தக் குழந்தை போலவே எண்ணி வளர்த்தவர்கள். அப்படியே நினைப்பவர்கள். அவர்களுக்கு நீங்கள் அரசகுமாரியை கைது செய்வது தெரிந்தால் சும்மாயிருக்க மாட்டார்கள்."

"என்ன செய்வார்கள்?"

"எதுவும் செய்வார்கள்."

"என்னைக் கொன்று விடுவார்களோ?"

"அப்படி நான் சொல்லவில்லை...."



"ஒற்றனே, அரசகுமாரி செய்வது ராஜ துரோகம். அதை எடுத்துச் சொன்னால் ஒப்புக் கொள்ள மாட்டார்களா"

"ஏதோ தர்மம் அதர்மம் என்று..."

"சரி, சரி. நடப்பதெல்லாம் நன்றாகவே நடக்கிறது. நீ போய் வா" என்று கூறி ஒற்றனை அனுப்பி விட்டு சிறிது யோசனையில் ஆழ்ந்தான் பங்களன்.



அன்று மாலை மரக்கலத்தின் தலைவனுடைய அறையில் ஆபுத்திரனைச் சந்தித்தான் கொள்ளையர் தலைவன். அப்போது அவனது சகாக்கள் சிலரும் இருந்தார்கள்.

"என்ன முடிவெடுத்தாய் வாலிபனே?" - என்று கேட்டான் கொள்ளையர் தலைவன்.

"என்னைப் பணயப் பொருளாக வைத்து சேரமன்னரை இங்கே வரவழைக்க முடியாதா உன்னால்?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"உன் யோசனைகளைக் கேட்பதற்கு உன்னை நான் கடத்தவில்லை. உன் முடிவை மட்டுமே கேட்கிறேன். சொல்"

"நான் மறுத்தால்?" -

"உன்னைக் கொல்லமாட்டேன். உன்னை பணயப் பொருளாகவும் பயன்படுத்தமாட்டேன். உன்னை நான் கடத்தியது சேரநாட்டில் யாருக்கும் தெரியாது. ஆகையால் என்மீது அவர்களுக்குச் சந்தேகம் வராது. ஒரு வேளை வந்து இங்கே தேட முற்படுவதற்குள் நீ இங்கே இருக்க மாட்டாய். உன்

முகம் விகாரப் படுத்தப் பட்டு அரபு நாட்டிற்கு அனுப்பப்படுவாய். அங்குள்ள அடிமைச் சந்தையில் விற்கப் படுவாய். அதற்குப் பின் நீ விரும்பினாலும் தாய்நாடு திரும்ப முடியாது. திரும்பினாலும் குரூர முகம் கொண்ட உன்னை யாரும் ஏற்கமாட்டார்கள்"

"என்னை நீ எது செய்தாலும் எனக்குக் கவலையில்லை. உன் கனவு நிறைவேறாது. அது போதும் எனக்கு"

"முட்டாள். நெடு நாளைய கனவு நனவாகப் போகும் மிகப் பெரும் காரியத்தில் உன்னை மட்டுமே நம்பி திட்டம் தீட்டுவேன் என்று நினைக்கிறாயா? இல்லை வாலிபனே பற்பல திட்டங்கள் தயாராக இருக்கின்றன. உன் மூலம் காரியம் நடந்தால் எளிதில் நடக்கும். வெற்றி சீக்கிரம் கிடைக்கும் அதற்காகவே உன்னை வைத்து திட்டம் தீட்டினேன்" என்று கூறிய கொள்ளையர் தலைவன் தன் சகாக்களை எல்லோரையும் வெளியேறும் படி கட்டளையிட்டான். தனிமையில் இருந்த ஆபுத்திரனிடம் இணக்கமாகப் பேச முற்பட்டு "என் கட்டளையை ஒப்புக் கொள் ஆபுத்திரா. வறட்டு வேதாந்தங்களைப் பேசி வாழ்க்கையின் வசந்தங்களை இழக்காதே. வசந்தங்கள் தேடி வரும் போது ஏற்று மகிழ்வது தான் வாழ்க்கையே தவிர வேதாந் தங்களைப் பேசி மறுப்பது முட்டாள் தனம். முகம் கோரமாகி அரபு நாட்டிலோ எகிப்து நாட்டிலோ அடிமையாக அவதிப் பட நீ பிறக்கவில்லை. இன்னொன்றையும் சொல்கிறேன். நீ மட்டும் நான் சொன்ன காரியத்தைச் செய்தால் நீ இதுவரை அறியாத பிரமிக்கக் கூடிய உன் பிறவி ரகசியம் ஒன்றை உனக்குச் சொல்வேன். அது உன்னை இமயமலை உயரத்திற்கு உயர்த்தும். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான்.



"நான் இப்போது நிறைவாகவே தான் வாழ்கிறேன் பங்களா. இதைவிட உயர்வு என்ன வந்து விடப் போகிறது"

"மீண்டும் முட்டாள் தனமாகப் பேசாதே வாலிபனே. ஒரு வேளை நீ இங்கிருந்து தப்பிச் சென்று விடலாம் என்று எண்ணுகிறாயா? அது மட்டும் முடியாது ஆபுத்திரனே. யார் உதவ நினைத்தாலும் அது நடவாது" என்றான் பங்களன்.

அப்போது திமுதிமுவென உள்ளே நுழைந்த நான்கைந்து கொள்ளையர்கள் "தலைவரே. ஆபத்து ஆபத்து" என்று பரபரப்புடன் கூறினார்கள்.

அதைக் கேட்டு சற்றே அசதியுற்ற பங்களன் "ஆபத்தா! என்ன ஆபத்து? எங்கே ஆபத்து?" - என்று வினவினான் சந்தேகத்துடன்.

"மேலைக் கடலில் பெருமளவில் மரக்கலங்கள் காணப்படுகின்றன. எண்ணிக்கை அதிகம். நம்மிடையே தற்போது பத்து மரக்கலங்கள் தான் இருக்கின்றன. மற்றவை ஏகபுத் தீவில் பழுது பார்க்க அனுப்பப் பட்டிருக்கின்றன" என்றான் கவலை தோய்ந்த குரலில்.

"நான் போய் பார்க்கிறேன். நீங்கள் இவனது கைகளையும் கண்களையும் கட்டி போர்க்கலத்திற்குக் கொண்டு வாருங்கள்" என்று கூறிவிட்டு வெளியேறினான்.

வெள்ளைத் தீவிற்கு மேற்கே கடலில் கோடு வரைந்த மாதிரி ஒரே நேர்க்கோட்டில் நங்கூரமிட்டிருந்த தனது போர்க் கலங்களை அடைந்தான் பங்களன். அவற்றின் மத்தியில் இருந்த மரக்கலத்திற்கு வந்ததும் அவனது சகாக்களில் உபதலைவர்களாக நியமனமாகியிருந்த கொள்ளையர்கள் அவனை வரவேற்றார்கள்.

தொலை நோக்கு கண்ணாடி மூலம் தொலைதூரத்தே தெரிந்த மரக்கலங்களைக் கண்ட பங்களன் உண்மையிலேயே அதிர்ந்தான். சமீபகாலங்களில் சேரரது கடற்படையின் பலம் அதிகரித்து விட்டதாலும், சேர நாட்டிற்கு வந்து போகும் வணிக மரக்கலத்திலும் படைவீரர்கள் கொண்ட பிரிவை சேரமன்னன் செங்குட்டுவன் அமைத்திருந்த காரணத்தாலும் அவைகளும் தனியாகச் செல்லாமல் கூட்டம் கூட்டமாக சென்று வந்த படியாலும், பங்களனின் கொள்ளைக் கூட்டம் கொள்ளைத் தொழிலை லாபகரமாகச் செய்ய முடியாமலிருந்தது. அதோடு கொள்ளையர் மரக்கலங்களின் மாலுமிகள் தங்கள் கப்பல்களைப் பழுது பார்க்க வேண்டியது அவசியம் என்று சொல்லிக் கொண்டு வந்தனர். நீண்ட காலமாக கடலில் ஓடிக் கொண்டிருந்த காரணத்தால் பல கப்பல்களின் அடிப்பாகம் பாசிபடிந்து கிடந்ததால் அவற்றின் ஓட்டம் குறைந்திருந்தது. வேறு சில மரக்கலங்கள் போர்க்காலத்தில் பல இடங்களில் தீப்பிடித்து சேதாரமாகியிருந்தன. எனவே அவைகளைப் பழுது பார்த்தாலொழிய அவற்றைக் கொண்டு ரொம்ப காலத்திற்குப் பயன் படுத்த முடியாது என்று மாலுமிகள் அறிவுறுத்தியதால் கொள்ளைத் தொழிலைச் சிறிதுகாலம் நிறுத்தி வைத்து விட்டு மரக்கலங்களை பழுதுபார்ப்பதற்கு ஏகடித் தீவுக்கு அனுப்பி வைத்தான் பங்களன். தென்னிந்தியாவில் மட்டுமே கிடைக்கும் தேக்கு மரங்களை அதிகவிலை கொடுத்து வாங்கி அத்தீவுக்கு அனுப்பியும் வைத்தான் அவை பழுதுபார்த்து வருவதற்குள் சும்மாயிருக்க விரும்பாத பங்களன் சேரநாட்டைக் கவர்வதற்கான முயற்சிகளை மேற்கொண்டான். அதன் முதல் கட்டமாக ஆபுத்திரனை கடத்தியிருந்தான்.



இந்த நிலையில் முதலுக்கே மோசம் போவது போல கொள்ளையர்களான தங்களையே தாக்க கொள்ளையர் கலங்கள் பெரும் எண்ணிக்கையில் வருவதாகச் சகாக்கள் கூறிய போது தொலைநோக்கு கண்ணாடி மூலம் பார்த்த பங்களன் அம்மரக்கலங்களில் எந்த விதமான கொடியும் காணப்படாததைப் பார்த்து விட்டு "இந்த மரக்கலங்கள் ஏன் சேரர்களது மரக்கலங்களாக இருக்கக் கூடாது?" என்று கேட்டான்.

"ஏன் அப்படி சொல்கிறீர்கள்? மரக்கலங்களில் கொடி பறக்கவில்லை என்பதாலா?" என்று கேட்டான் ஒரு உபதலைவன்.

பங்களன் ஏதோ பேசமுற்பட்ட போது உபதலைவனே குறுக்கிட்டு "தலைவரே, கொள்ளையர் மரக்கலங்களின் போக்கு பற்றி தங்களுக்கு நான் கூறுவது சரியில்லை. கொடியில்லாமல் வருவது, கொள்ளையர் கொடிக்குப் பதிலாக வேறு கொடிகளை ஏற்றி வருவது, சமாதான கப்பல் போல வேஷமிட்டு வந்து தாக்குவது, இலக்கு நெருங்கும் வரை குழப்புவது ஆகியவை கொள்ளையர்கள் சமயங்களுக்கு ஏற்ற மாதிரி மாற்றிக் கொள்வது இயற்கை. அதோடு நமது கண்ணில் படும் மரக்கலங்கள் சேரர்களது மரக்கலங்களாக இருக்க முடியாது. அவர்களது கலங்களெல்லாம் தலைநகர் அருகிலும் துறைமுகங்களுக்கு அருகிலும் தான் காத்துக் கிடக்கின்றன. தங்களைத் தாக்க வரும் மரக்கலங்களை தாக்குவது தான் சேரர்களின் வேலை. நம்மைப் போல கொள்ளையடிப்பது அல்ல. ஆகவே நாம் காணும் மரக்கலங்கள் கொள்ளையர் மரக்கலங்கள் தான். நம்மைப் பற்றிய தகவலறிந்து நமது நிலையும் அறிந்து நம்மைத் தாக்க

வருகின்றன. நாம் கொள்ளையர் வேலையை தொழிலாக விட்டுவிட்டாலும் கொள்ளையடித்த செல்வங்கள் நம்மிடம் நிறைய இருக்கின்றன. இதையெல்லாம் அறிந்தும் நம் நிலையை அறிந்தும் தாக்குதல் தொடுக்க வந்திருக்கிறார்கள்" என்றான்.

"அந்த மரக்கலங்களோடு நாம் போரிட முடியாதா?" கேட்டான் பங்களன்.

"எதற்காக இந்தக் கேள்வியைக் கேட்கிறீர்கள்?" கேட்டான் உபதலைவன்.

"நாம் மிகவும் சிரமப் பட்டு இந்த வெள்ளைத் தீவில் கோட்டையைக் கட்டியிருக்கிறோம் ரணதீரா. இக்கோட்டையை பாதுகாப்பாக வைத்துக் கொண்டு வருகின்ற கொள்ளையர் கலங்களோடு போரிடமுடியாதா?"

"வந்திருப்பவர்கள் கொள்ளைக்காரர்கள். மகா முரடர்கள். படை வீரர்கள் அல்ல. இவர்களுக்கு முரட்டுத் தனமாகக் கொள்ளைச் செயல்களில் ஈடுபட மட்டுமே தெரியும் இவர்களோடு நம்மால் போரிட முடியாது. அதற்கான அவகாசத்தையும் தரமாட்டார்கள். நமது பத்து மரக்கலங்களை அழித்து விட்டு நமது தீவுகளைச் சூழ்ந்து கொண்டு தாக்கினால் நாம் அழிவது நிச்சயம்"

"வேறென்ன வழி?"

"சரணடைவது தான். அப்போது தான் நம்மிடமுள்ள கொள்ளைப் பொருட்களைப் பாதியாவது காப்பாற்ற முடியும்"

ரணதீரன் சொல்வதைத் தவிர வேறுவழியில்லை என்பது பங்களனுக்கும் நன்றாகவே தெரிந்து தான் இருந்தது.



இருப்பினும் தன்னிடம் உள்ள ஏராளமான செல்வங்களை யாருக்கும் பங்கு போட்டுத் தர அவனது மனம் தயாராக இல்லை. எனவே "ரணதீரா, படகுகளில் வெள்ளைக் கொடியை ஏந்தி சமாதானம் கேட்டபடி நாம் செல்வோம். அவர்கள் சம்மதிக்கும் பட்சத்தில் கொள்ளை மரக்கலத்தலைவனை இங்கே வரச் சொல்லி வரவேற்போம். இங்கே அவனை மடக்கி வைத்துக் கொண்டு அவனது மரக்கலங்களைக் கைப்பற்றினால் என்ன!" என்று கேட்டு விட்டு அருகில் கைகளும் கண்களும் கட்டப்பட்டிருந்த ஆபுத்திரனைப் பார்த்து "வாலிபனே, நீ என்ன சொல்கிறாய்?" என்றான்.

இதைக் கேட்டுப் புன்னகை செய்த ஆபுத்திரன் "எல்லா விஷயத்திலும் உனக்குப் பேராசைதான் முன்னால் நிற்கிறது பங்களா. பேராசை பெருநஷ்டம் என்பது தான் முதுமொழி" என்றான்.

அவனை அலட்சியப் படுத்திய பங்களன் உடனடியாக சமாதானத்திற்கான காரியங்களில் இறங்கினான். பத்து படகுகளில் ரணதீரனின் தலைமையில் வெள்ளைக் கொடிகளை ஏந்திக் கொண்டும் சமாதான தாரைகளை ஊதிக் கொண்டும் சென்றன.

கணிசமான நேரம் கடந்த நிலையில் ரணதீரனைத் தவிர இதரப் படகுகளும் ஆட்களும் திரும்பலானார்கள்.

அப்போது கொள்ளையர் மரக்கலங்களிலிருந்து பேரொலி ஒன்று எழுந்தது.

அதைக் கேட்டதும் பேரதிர்ச்சி அடைந்தான் பங்களன்.

## அத்தியாயம் ஐந்து



# மாயாஜாலம்

சமாதானத்திற்கு அனுப்பிய தனது சகாக்கள் படகுகளில் திரும்பி வந்து கொண்டிருந்த நிலையில் கொள்ளையர் மரக்கலங்கள் பக்கத்திலிருந்து பேரொலி ஒன்று எழுந்ததைக் கண்டதும் பங்கவன் பெரும் அதிர்ச்சியடைந்து அருகிலிருந்த உபதலைவன் ராவணனிடம் "இது என்ன பயங்கரமான ஒலி? வித்தியாசமாக அல்லவா இருக்கிறது" என்று மிரட்சியுடன் கேட்டான்.

ராவணன் என்னும் உபதலைவனும் ஏற்கனவே மிரட்சியில் இருந்தான் "வந்திருப்பது அராபியக் கடல் கொள்ளைக் காரர்கள் தான். அவர்கள் தான் இத்தகைய



வித்தியாசமான சத்தங்களை எழுப்புவார்கள். நம் கதி அதோ கதிதான்" என்றான்.

ராவணன் கூறியது அனைத்தும் உண்மை என்பது நன்றாகவே தெரிந்திருந்தது பங்கனுக்கு. அரபு நாட்டில் பெரும்பாலும கொள்ளைக்காரர்களே அதிகம் என்பதும் அராபியக் கடலிலும் செங்கடலிலும அவர்களின ஆதிக்கமே அதிகம் என்பதையும் * அவர்களைக் கண்டு இதர கொள்ளைக் காரர்கள் கூட அஞ்சி வந்ததையும், அக்கொள்ளையர் மரக்கலங்களுக்கு 'நடமாடும் நரகம்' என்ற பெயர் செங்கடல் பகுதியில் நிலவி வந்ததையும் அறிந்திருந்த பங்கவன் தனது நிலை குறித்து பெரும் அச்சத்தை அடைந்தான். இருந்தாலும் அச்சப்படுவது அப்போதைக்கு எந்தப் பலனையும் தராது என்பது தெளிவாகத் தெரிந்திருந்ததால் ராவணனிடம் "நாம் தான் சமாதானப் படகுகளை அனுப்பினோமே? அப்படியிருந்தும் இவ்வாறு ஒலி எழுப்ப வேண்டிய அவசியம் என்ன?" என்று கேட்டான்.

"அதை அவர்கள் ஏற்கவேண்டிய கட்டாயமில்லை தலைவரே. எதற்கும் திரும்பி வரும் நம்மவர்களை விசாரிப்போம்" என்றான் ராவணன்.

---

*அராபியர்களின் கடல்வழி வாணிகம் நபிகள் நாயகம் தோன்றி இஸ்லாமிய மதத்தை நிறுவிய பிறகே தொடங்கியது. அதற்கு முன்பாக அவர்கள் கடல் கொள்ளையர்களாகவே இருந்தார்கள். P 22. '3000 ஆண்டுகள் தமிழனின் கடல் வணிகம்' by ஆர். என். சாமி

இதற்கிடையில் சமாதானப் படகுகளில் சென்றவர்களில் ரணதீரனைத் தவிர மற்றவர்கள் வந்தார்கள். அவர்களது முகங்கள் பேயறைந்தமாதிரி இருந்தது. "நமது சமாதானத்தை நிராகரித்து விட்டார்கள். ரணதீரனைப் பிடித்து வைத்துக் கொண்டார்கள்" என்று அனைவரும் ஒரு சேரச் சொன்னார்கள்.

"சமாதானத்தை நிராகரித்தது யார்?" கேட்டான் பங்கன்.

"மரக்கலத் தலைவன் நிராகரித்து விட்டதாகச் சொன்னார்கள்"

"தலைவனை நீங்கள் சந்திக்கவில்லையா?"

"உபதலைவனைக் கூடச் சந்திக்க அனுமதி தரவில்லை. நாங்கள் மரக்கலங்களை அணுகி வெள்ளைக் கொடிகளை ஆட்டிச் சமாதானத் தாரைகளை ஊதி அராபிய மரக்கலத் தலைவரைச் சந்திக்க வந்திருப்பதாகச் சொன்னோம். நீங்கள் யாரென்று கேட்டதும் பதிலைச் சொன்னோம். தலைவரைச் சந்திக்க யாரையும் அனுமதிக்க முடியாது என்று அவர்கள் சொன்னார்கள். அனுமதி தரும்படி ரணதீரர் அவர்களிடம் மன்றாடினார். சற்று பொறுத்திருக்கும் படி சொன்ன அவர்கள் தலைவரிடம் விஷயத்தைக் கூறி விட்டு வருவதாகச் சொல்லி விட்டுப் போனார்கள். சிறிது நேரம் கழித்த பின் திரும்பிய அவர்கள் எங்கள் எல்லோரையும் மேலே வரச்சொல்லி நூலேணிகளை இறக்கினார்கள். மேலே சென்ற பின் எங்கள் அனைவரையும் தளத்திலேயே மண்டியிட்டு அமரச் செய்தார்கள். பின்னர் அராபியன் ஒருவன் முன்னால் வந்து எல்லோரையும் நோட்டம் விட்டான்.



"உங்களைச் சமாதானத்திற்கு அனுப்பிய முட்டாள் யார்? என்று கேட்டான் அராபியன். ரணதீரர் உங்கள் பெயரையும் உங்களைப் பற்றிய விவரங்களையும் சொன்னார். உங்கள் சமாதானத்தை ஏற்பதற்காக நாங்கள் அராபிய நாட்டிலிருந்து வரவில்லை என்றும் தாக்கி அழிக்கவே வந்திருப்பதாகவும் சொன்னான் அராபியன். ரணதீரர் தாங்கள் கட்டியுள்ள கோட்டையைப் பற்றிச் சொன்னார். கோட்டையை அழிக்கும் கருவிகள் தங்களிடம் இருப்பதாகச் சொன்ன அராபியன் "உங்களிடம் இருக்கும் கொள்ளைச் செல்வத்தையெல்லாம் ஒப்படைத்தால் வெள்ளைத்தீவைத் தாக்காமல் போகிறேன் என்றும் செல்வங்களை பங்களனே நேரில் கொண்டு வர வேண்டும் என்றும் கூறி எங்களையெல்லாம் அனுப்பி விட்டு ரணதீரரை மட்டும் தங்கள் வசம் வைத்துக் கொண்டார்கள். ஒரு நாழிகைக்குள் தாங்கள் கொள்ளைச் செல்வங்களோடு வராவிட்டால் ரணதீரரின் தலையைச் சீவி வீசிவிட்டு தாக்குதலைத் துவக்குவோம் என்று நிர்தாட்சண்யமாகக் கூறிவிட்டார்கள்" -

இதைக் கேட்டதும் பங்களின் முகத்தில் ஈயாட வில்லை. பணிவது போல் நடித்து அராபிய கொள்ளையர் தலைவனை வெள்ளைத் தீவிற்கு அழைத்து அங்கேயே மடக்கிப் போட்டு அராபியர் மரக்கலங்களை விழுங்கி விடலாம் என்ற பேராசை எண்ணம் தரைமட்டமாகி விட்டதையும் அனைத்துமே தலைகீழாகி விட்டதையும் எண்ணிக் கலங்கினான் பங்களன். தனது கொள்ளைச் செல்வங்கள் அனைத்தையுமே கேட்டது மட்டுமின்றி அவற்றைத் தானே கொண்டு வரவேண்டும் என்று அராபியன் கட்டளையிட்டதிலிருந்து தன் கதி அதோகதி தான் என்று முடிவுகட்டிக் கொண்டான். கொள்ளையர் உள்ளத்தைக் கொள்ளையரைத் தவிர வேறு யாரும்

அறிய முடியாதாகையால் அராபியனின் உள்நோக்கத்தை அவனால் நன்றாகவே அறிய முடிந்தது. செல்வங்களோடு வரும் தன்னை மரக்கலத்தில் வைத்து சித்திரவதை செய்து உயிரை வாங்கி விட்டு பின் வெள்ளைத் தீவுக் கூட்டங்களை நிர்மூலம் செய்து பத்து மரக்கலங்களையும் பிடிக்கவே அராபியன் திட்டமிட்டிருக்கிறான் என்று கருதிய பங்களனுக்கு என்ன செய்வது என்று தோன்றாததால் சற்று யோசித்தான்.

அச்சமயத்தில் "என்ன யோசிக்கிறீர்கள் அப்பா?" என்ற சின்னக் குரலொன்று அங்கே ஒலித்தது. அதையடுத்து சௌமிய குமாரி அங்கே தென்றல் போல் பிரவேசித்தாள். அவளை அந்த நேரத்தில் எதிர் பார்க்காத பங்களன் "நீ எதற்காக வந்தாய் இங்கு?" என்று மூர்க்கமாகவே கேட்டான. அவன் ஆபுத்திரனோடு சதியாலோசனை நடத்தியிருந்ததால், ஆபுத்திரனும் இருக்கும் சமயத்தில் அவளங்கு வந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை. இதற்கிடையில் அவளாகவே பேச முற்பட்டு "பேசாமல் நமது செல்வங்களையெல்லாம் எடுத்துக் கொண்டு எழில் மலைக்கு ஓடி விட்டால் என்ன?" என்று கேட்டாள்.

அசந்து போனான் பங்களன். கிட்டத்தட்ட அந்த அபிப்ராயத்திற்குத் தான் வந்திருந்தான் அவன். அதை சௌமிய குமாரி அப்படியே கூறிவிட்டதால் திணறிப் போன அவன் "நீ எதற்கு வந்தாய்? பேசாமல் உள்ளே செல்" என்றான் கோபத்துடன்.

அராபிய கொள்ளையர் வரவு அவனை வெகுவாகவே பாதித்து திணறச் செய்திருந்தது. இந்த நிலையில் நிதானமிழந்திருந்த அவன் சௌமிய குமாரியின் பேச்சால் மேலும் சீர்குலைந்து கடுகடுத்தான். அவளோ சிறிதும் அச்சப்படவோ பதட்டப் படவோ இல்லை.



"இந்தச் சேர நாட்டு வாலிபரைத் தான் கேட்டுப் பாருங்களேன் அப்பா! ஏதாவது யோசனை சொல்கிறாரா என்று பார்க்கலாம்" என்று அவளாகவே முன்வந்து சொன்னதும் பங்களன் நறநற வென்று ஒருமுறை கடித்து தன் உணர்ச்சிகளை சற்றே அடக்கிக் கொண்ட பங்களன் "இவன் என்ன பிரமாதமான யோசனையைக் கூறிவிடப் போகிறான்? அராபியர் கொள்ளை மரக்கலங்களைப் பற்றியோ அவற்றின் நிலைமையைப் பற்றியோ நம்மை விட இவனுக்குத் தெரிந்து விட முடியுமா? என்னையே அலட்சியப் படுத்தும் அராபியனுக்கு இந்த வாலிபன் எம்மாத்திரம்?" என்று அலட்சியமாகப் பேசிவிட்டு ஆபுத்திரனுக்காகத் திரும்பி "என்ன வாலிபனே, பேசுவதெல்லாம் உன் காதில் விழுகிறதா? என் மகள் உன் யோசனையைக் கேட்கிறாள். ஏதாவது யோசனை கைவசம் வைத்திருக்கிறாயா அராபியனை மடக்க" என்று கேலியாகக் கேட்கவும் செய்தான்.

"முதலில் என் கட்டுகளை அவிழ்த்து விடுங்கள். கண் கட்டையும் அகற்றுங்கள்" என்றான் ஆபுத்திரன்.

"மகளே, சேரநாட்டு வாலிபர் கட்டுகளை அவிழ்க்கச் சொல்கிறார். அவர் சொல்கிற வேகத்தைப் பார்த்தால அராபியர்களை துவம்சம் செய்து தூக்கி நட்டி விடுவார் போலிருக்கிறது" என்று அவநம்பிக்கையும் ஆத்திரமும் கலந்த குரலில் சொன்னான் பங்களன்.

"நம்மால் தான் எதுவும் முடியவில்லையே! இவரால் ஏதாவது முடிகிறதா என்று தான் பார்ப்போமே" என்றாள் சௌமியகுமாரி.

"இவனது கட்டுகளை அகற்றுங்கள்" - என்று கட்டளையிட்டான் பங்களன்.

அவனது கட்டளை உடனடியாக நிறைவேற்றப் பட்டது.

தளைகளிலிருந்து விடுபட்ட ஆபுத்திரன் தொலை நோக்கு கண்ணாடியை வாங்கித் தொலைவில் தெரிந்த அராபியர் மரக்கலங்களை நீண்ட நேரமாக நோக்கினான். அதை அருவருப்போடு பார்த்த பங்களன் "அராபியன் கொடுத்த காலக்கெடு முடியப் போகிறது. இன்னும் இவன் வேடிக்கை தான் பார்த்துக் கொண்டிருக்கிறான். முடிவில் அழிவு தான் விளையப் போகிறது" என்று அலுப்பாகச் சொன்னான் பங்களன்.

ஆபுத்திரனும் ஒரு வழியாகத் தன் ஆராய்ச்சிகளை முடித்துவிட்டு "யாரும பயப்பட வேண்டிய அவசியம் இல்லை" என்றான்.

"யோசனையைத் தீட்டி விட்டாயாக்கும்" என்றான் பங்களன் இகழ்ச்சியான குரலில்.

அவனது இகழ்ச்சிகளை அலட்சியப் படுத்திய ஆபுத்திரன் 'பங்களரே, படகொன்றில் உங்கள் ஆட்களை அனுப்புங்கள். சமாதானக் கொடியோ தாரைகளோ வேண்டாம். அராபியனைச் சந்தித்து இந்த மரக்கலத்தில் நானிருக்கிறேன் என்று மட்டும் சொன்னால் போதும். பிரச்சனை விலகி விடும்" என்றான்.

இதைக் கேட்டு இடியெனச் சிரித்த பங்களன் "வாலிப முட்டாளே, அராபிய கொள்ளையன் உன்னுடைய உறவினனா அல்லது பணியாளா? என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய் அவனை? அவனை யாராவது வெறுப்படைய வைத்தால் அவனைக் கீழே படுக்க வைத்து மேலே ஏறி மிதித்து ஆடுவான். அவனது காலடியில்



சிக்கியவன் வதையுண்டு அலறுவான். அலறியபடியே இறப்பான். தெரிந்து கொள்" என்றான்.

"எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை பங்களா. பிரச்சனை தீர வேண்டுமானால் நான் சொல்வதைக் கேள். இல்லையென்றால் உன்னிஷ்டம்" என்று கூறிவிட்டு கைகளை தானே கட்டிக் கொண்டு கண்களையும் கட்டிக் கொண்டு கீழே இறங்கினான்.

பங்களனின் சகாக்கள் அவனைத் துளைத்தெடுத்தார்கள்.

வேறு வழியின்றி ஐந்தாறு படகுகளில தன் ஆட்களையும் அவர்களுக்குத் தலைமை தாங்க ராவணனையும அனுப்பி வைத்தான். அப்படகுகள் வெள்ளை கொடிகள் இல்லாமலும் சமாதான தாரைகள் ஊதப்படாமலும் சென்றன. அராபிய மரக்கலங்களை நெருங்கியதும் அங்கே இருந்த சிலர் "செல்வங்கள் எங்கே? உங்கள் தலைவன் எங்கே?" என்று கேட்டார்கள்.

"முக்கியமான செய்தி ஒன்றைச் சொல்லவேண்டும். அராபியரைச் சந்திக்க வேண்டும்" என்றான் ராவணன்.

"நீ மட்டும் மேலே வா" - என்று கூறிய மரக்கல மனிதர்கள் நூலேணியை இறக்க அதன் மூலம் மேலே ஏறிய ராவணன் மரக்கல தளத்தில் அராபியனை எதிர் கொண்டான்.

"என்ன அப்படிப் பட்ட முக்கியமான செய்தி?"

"எங்கள் மரக்கலத்தில் ஆபுத்திரர் இருக்கிறார். இதை உங்களிடம் தெரிவிக்கச் சொன்னார் தலைவர்"

"இதையேன் முன்பே தெரிவிக்க வில்லை" - என்று பதட்டத்துடன் கேட்ட அராபியன் தலைவனைச் சந்தித்து விட்டு வருவதாகச் சொல்லிச் சென்றான்.

இவற்றையெல்லாம் தொலை நோக்கு கண்ணாடி மூலம் பார்த்து கொண்டிருந்த பங்களனுக்கு அடுத்ததாக நடந்த நிகழ்ச்சி பெரும் வியப்பாக இருந்தது. மரக்கலத்திலிருந்து ராவணன் மட்டுமின்றி ரணதீரனும் இறக்கப்பட்டு அவர்கள் படகில் ஏறித் திரும்பலானார்கள். அராபிய மரக்கலங்கள் அடுத்த சில நிமிடங்களில் கண்களிலிருந்து மறைந்தன.

விரைவிலேயே தனது ஆட்களும் வந்து சேர்ந்ததைக் கண்ட போது தன் கண்களையே நம்ப முடியவில்லை பங்களனால். வந்தவர்கள் சொன்னதெல்லாம அவன் காதில் விழவில்லை. அராபியரது மாபெரும் கொள்ளையர் படை ஆபுத்திரனின் ஒரு வார்த்தையைக் கேட்டதும் வெள்ளைத் தீவு தாக்குதலை கைவிட்டு கடல் பிராந்தியத்தை விட்டு அகன்றது மாயாஜாலமாகவே தோன்றியது. பெரியதோர் அழிவும் நஷ்டமும் இமைப்பொழுதில் அகன்று விட்டதால் பெரும் சந்துஷ்டியை அடைந்த பங்களன் வஞ்சிக் கோட்டை வாலிபனைத் தேடிச் சென்று பாராட்டினான். உன்னை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை ஆபுத்திரா. கடுமைக்கும கொடுமைக்கும் பேர்போன எங்கள் வார்த்தைகளுக்குச் சிறிதும் செவிசாய்க்காத அராபியர்கள் உன்னுடைய ஒரே வார்த்தைக்கு இணங்கியது எப்படி? எதற்குமே அசையாத உலகமகா கொள்ளைக்காரர்களை முகத்தைக் கூடக் காட்டாமல் அசைத்து விட்டாயே? இமயமலை உன்னைக் காட்டிலும் சிறியது வாலிபனே. அப்படி நீ இன்று உயர்ந்து விட்டாய். நாங்கள் கண்டும் கேட்டுமிராத சந்தோஷத்தை எங்களுக்கு அளித்து விட்டாய். இன்று எங்கள் குலத்தவர்களுக்குப் பெருநாள், திருநாள். நண்பர்களே, செல்லுங்கள். சேரநாட்டு வாலிபனின் மாயாஜாலத்தை



நம்மவர்களுக்கும் சொல்லுங்கள் இன்றிரவு கொண்டாட்ட இரவாக இருக்கட்டும். எல்லோரும் கூடி கொண்டாடி மகிழுங்கள்" என்று உற்சாகக் குரலை எழுப்பியதும அனைவருமே கடலதிரும்படி ஆரவாரம் செய்தும் தாரைத் தப்பட்டைகளை முழக்கியும் சென்றார்கள். கடலோர இளங்கள் பல கொள்ளையர்களுக்கு விருந்தாயின. இரவு பகலாயிற்று. பங்களன் தன் இனத்தோருடன் கூடி மகிழ்ந்தான்.

ஆனால் மரக்கலத்தில் தனித்திருந்த ஆபுத்திரன் பங்களன் அழைத்தும் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளவில்லை. முதலில் தானிருந்த மரக்கலத்திலேயே தனியே இருந்தபடி சுற்றுப் புறத்தை பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்போது "விழாவின் நாயகரான நீங்கள் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ள வில்லையா?" என்று கேட்டபடி அங்கு வந்தாள் சௌமியகுமாரி.

அவளது கோலம் அளப்பறிய அழகோடு காட்சியளித்தது. ஊரெல்லாம் கொண்டாடும் படி பங்களன் ஆணையிட்ட போது குதூகலமடைந்த அவள் கொள்ளையர் செல்வங்களிலிருந்து இஷ்டப்பட்ட நகை வகைகளை தேர்ந்தெடுத்து நேர்த்தியாக அணிந்து கொண்டிருந்த காரணத்தால் நகையே நங்கை வடிவம் பெற்று வந்தது போல் இருந்தது அவளது தோற்றம். அவளது கோலத்தையும குதூகலத்தையும் கண்ட ஆபுத்திரன் லேசாகப் புன்னகையொன்றை வெளிப்படுத்தினான்.

"ஏன், நீ போகவில்லையா கொண்டாட்டத்திற்கு?" என்று கேட்டான் அவளிடம்.

# சௌமியகுமாரி





"நான் கொண்டாட்டத்தில் தான் இருக்கிறேன்" என்றான் அவன் உற்சாகமான குரலில்.

"மகிழ்ச்சி"-

"எதற்கு மகிழ்ச்சி?"

"எல்லோரும் குதூகலக் கொண்டாட்டத்தில் இருப்பதற்கு"

"இதற்கெல்லாம் காரணம் நீங்கள் தானே"

"நானா? இல்லை சௌமியகுமாரி. ஆண்டவன் அருள் தான் காரணம்."

"எதற்காக இவ்வளவு அடக்கம்? உங்கள் வார்த்தைகள் தானே மரக்கலங்களை விரட்டின"

"என் வார்த்தைகள் அல்ல ஈசனின் வார்த்தைகள்"

"உங்கள் திறமையை ஏன் மறுக்கிறீர்கள்? யாரிடமும் இல்லாத ஒன்று உங்களிடம் இருக்கிறது. ஆகவே தான் எதையும் செய்ய முடியாமல் திணறிய என் தந்தையிடம் உங்களிடம் யோசனை கேட்கும் படி கூறினேன்"

"எப்படியோ. நடந்து முடிந்த கதை அது"

"அப்படியே இருக்கட்டும். இப்போது நல்ல சந்தர்ப்பம் நிலவுகிறது. நீங்கள் தப்பிச் செல்லலாம அல்லவா?"

"இப்போது தப்பினால் அது கோழைத் தனம். நான் தப்புவதானால் எல்லோரும் விழித்திருக்கும் நேரத்தில் சாமர்த்தியத்தால் தான் தப்புவேன்"

"உங்களிடம் தப்பும் விஷயத்தில் கூட வீரமும் பெருந்தன்மையும் இருக்கிறது. அவை என் தந்தையிடம்

இருக்கும் என்று எதிர்பார்க்கிறீர்களா? எதிர் பார்த்தால் ஏமாந்து தான் போவீர்கள். உங்களைத் தப்புவிக்க எனக்கு கிடைத்திருக்கும் அருமையான சந்தர்ப்பம். தாமதிக்காமல் என்னோடு புறப்படுங்கள் என்றான்.

அச்சமயத்தில் அங்கே பிரவேசித்த பங்களன் "என் மகள் என்ன சொல்கிறாள் ஆபுத்திரா?" என்று கேட்டான்.

"தப்பும் படி சொல்கிறாள்"- என்று கூறாமல "கொண்டாட்டத்தில் ஏன் பங்கு கொள்ள வில்லை என்று கேட்கிறார் அரசகுமாரி"- என்றான் ஆபுத்திரன்

"உண்மை தான். நான் அழைத்த போதும் மறுத்து விட்டாய். கொண்டாட்டம் என்றால் உனக்குப் பிடிக்காதா?" என்று கேட்டான் பங்களன்.

"குதூகலிக்கவும் கொண்டாடவும் உங்களுக்குச் சம்மந்தமிருக்கிறது. கொண்டாடுகிறீர்கள். எனக்கும் இதற்கும் சம்மந்தமில்லை.

"சரி, சரி. அது பற்றிய விவாதம் வேண்டாம்" என்று சொன்ன பங்களன் "என் மகள் உன்னோடு சதி செய்ய முயன்றாள். உன்னை இங்கிருந்து தப்புவிக்கவும் விரும்பினாள். அதையெல்லாம் நான் மன்னித்து விட்டேன். ஏன் தெரியுமா? நீ எங்களை அராபியர்களிடமிருந்து காத்ததற்காகத் தான். அது மட்டுமல்ல. சேர மன்னரை இங்கே அழைத்துவர உனக்கு கட்டளையிட்டேனே - அதையும் விலக்கி விடுகிறேன். நாளை இரவு வெள்ளைத் தீவில் பெரிய விழா ஒன்றுக்கு ஏற்பாடு செய்கிறேன். அதற்கு நீ கட்டாயமாக வந்து கலந்து கொள்ள வேண்டும். அங்கே உனக்கு இரண்டு



பரிசுகள் காத்திருக்கின்றன. விலைமதிக்க முடியாத பரிசுகள்" என்று கூறி விட்டு அகன்றான் பங்களன்.

அவன் தன் மீது திடீரென காட்டும் வாஞ்சையினை ஆபுத்திரனால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை நல்லவனாக மாறியிருப்பானோ என்று நினைத்தான்.

"இல்லை" என்று கூறிய சௌமியகுமாரி பங்களனின் ஆசை வார்த்தைகளுக்குப் பின்னால் அவன் தோண்டியிருந்த படுகுழியைப் பற்றி விவரித்தாள்.

பெரிதும் அதிர்ச்சியடைந்தான் வஞ்சிக் கோட்டை வாலிபன்.



# அத்தியாயம் ஆறு



## பங்களன் திட்டம்

"என்ன வீரரே. தந்தையின் தாராளத்தைக் கேட்டு மயங்கி விட்டீர்களா?" என்று சீண்டுவது போல் ஆபுத்திரனைக் கேட்டாள் சௌமியகுமாரி.

எதையோ சிந்தித்துக் கொண்டிருந்த சேரநாட்டு வாலிபன் அவளது கேள்வியைச் சரியாக செவிமடுக்காததால் "என்ன சொன்னாய்?" - என்று கேட்டான்.

"தந்தையின் பேச்சில் உலகையே மறந்து விட்டீர்கள் போலிருக்கிறது! அவரது தாராளப் பேச்சில் மயங்கி விட்டீர்களா என்று கேட்டேன்" என்றாள் அவள்.

"மயங்குபவனாக இருந்தால் கொண்டாட்டத்திற்கு அவர் அழைப்பு விடுத்ததுமே போயிருக்க மாட்டேனா?"



"மயங்கவில்லை என்றால் ஏமாந்து விட்டீர்கள் என்று தான் சொல்ல வேண்டும்"

"நான் ஏன் ஏமாற வேண்டும்?" -

"உண்மை தெரியாததால் ஏமாந்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன்"

"என்ன சொல்கிறாய் பெண்ணே?"

ஆபுத்திரனுக்கு உண்மை விளங்கவில்லை என்பதை அறிந்து அவன்மீது அனுதாபம் கொண்டவளாய் பேசத் தொடங்கி "வீரரே, என் தந்தை நாளை இரவு நடத்தப் போவது விழாவல்ல. விழா என்ற போர்வையில் நடத்தப் போகும் மிகப் பெரிய சதி" - என்றாள்.

"சதியா?"

"ஆமாம் வீரரே, உங்களை நினைத்தால் எனக்குக் கவலையாக இருக்கிறது. என் நிபந்தனையை ஏற்று உடனே நீங்கள் சம்மதித்திருந்தால் இந்நேரம் நாம் தப்பியிருக்கலாம். இனி அதுவும் என்னால் செய்ய முடியாது. அவரது திட்டத்தில் எனக்கும் பங்கிருக்கும்"

"எதற்காக நீண்ட பீடிகையைப் போடுகிறாய்? சதியைப் பற்றிச் சொல்" -

"வீரரே, அராபியர் மரக்கலங்களிடமிருந்து ஒரு துளி ரத்தமும் சிந்தாமல் என் தந்தையைக் காத்தீர்களல்லவா! அச்செயல் என் தந்தையை ரொம்பவும் அசத்தி விட்டது"

"அது இயற்கை தான்" -

"அவரது சகாக்களும் மிகவும் அசந்து போய் வாயகுர வாய் பாராட்டிக் கொண்டிருக்கிறார்கள். என் தந்தையிடம

அவர்கள் பாராட்டும் விதம் இருக்கிறதே அது உங்களது நாட்டுப் புலவர்களைக் கூட தோற்கடித்து விடும்"

"இதெல்லாம் எதிர்பார்க்கக்கூடிய விஷயங்கள் தானே பெண்ணே? இது போன்ற நிகழ்ச்சி எங்கே நடந்தாலும் பலனடைந்தவர்கள் இவ்வாறு நடந்து கொள்வது இயற்கை தானே?"

"அது உண்மையென்றால் என் தந்தை உங்களை என்ன செய்திருக்க வேண்டும்? நன்றியோடு உங்களை விடுதலை செய்து அனுப்பியிருக்க வேண்டும். இல்லையா?"

"தன் கட்டளையிலிருந்து விடுவிப்பதாகச் சொன்னாரே அதற்கு அர்த்தம் இது தானே?"

"கட்டளையிலிருந்து விடுவித்தவர் உங்களையும் விடுவிக்க வேண்டியது தானே?"

"இன்று இரவாகி விட்டது. நாளை விடுவிக்கலாம்"

"நாளைக்கு இரவு பெரிய விழா எடுக்கப் போவதாகவும் நீங்கள் அவசியம் கலந்து கொள்ள வேண்டும என்று கூறினாரே - நாளை எப்படி உங்களை விடுவிப்பார்?"

"நாளை போனால் என்ன? மறுநாள் இருக்கிறது"

மறுநாள் என்ன, இனி எத்தனை நாள் வந்தாலும் உங்களை அவர் விடுவிக்கப் போவதில்லை"

"ஏன்?"

"உங்களை இங்கேயே இருத்திக் கொள்ள தந்தை தீர்மானித்து விட்டார்"-



இதைக் கேட்டு சற்று ஸ்தம்பித்துப் போன ஆபுத்திரன் சற்றே சுதாரித்துக் கொண்டு இதற்கு அவர் தீர்மானித்து விட்டால் மட்டும் போதுமா? நான் ஒப்புக் கொள்ள வேண்டாமா?"- என்று கேட்டான்.

"நீங்கள் ஒப்புக் கொள்ளும் படியான சூழ்நிலையை உருவாக்குவார்"

"எப்படி?"-

"நாளை இரவு நடக்கப் போகும் விழாவில் பல முக்கியஸ்தர்கள் இடம் பெறுவார்கள். அவர்களுக்கு அவரே அழைப்பு விடுத்திருப்பார். அவர்கள் முன்னிலையில் வாட்போர் நடக்கும். உங்களையும் அதில் பங்கு கொள்ளச் செய்வார். அப்போரில் நீங்கள் தான் வெல்வீர்கள் அல்லது வெல்லும் படி செய்யப் படுவீர்கள்_"

"வெல்லும் படி செய்வதா?"

"ஆமாம் வீரரே, உங்களுடன் போரிட வருபவர்களுக்கு போருக்கு முன்னதாகவே சன்மானங்கள் வழங்கப்பட்டு உங்களிடம் தோற்கும் படி உடன்படிக்கை செய்து கொள்வார்"

"ஏன் அப்படி?"-

"நீங்கள் வென்றாக வேண்டும். வென்றதும் முக்கிய பதவி ஒன்று வழங்கப்படும். தனது பரிசாக என்னை உங்களுக்கு மணம் முடிப்பார். இது எல்லோரது முன்னிலையிலும் நடக்கும். உங்களுக்குப் பதவி வழங்கப் படுவதை ஓலை ஒன்றில் பதிவு செய்யப் படும் முக்கியஸ்தர்கள் அதில் சாட்சி கையெழுத்திடுவார்கள். அதற்குப் பிறகு நீங்கள் இந்த இடத்தை விட்டுப் போகவே முடியாது"

"வைத்தியக்காரத்தனமாக இருக்கிறது. உங்கள் தந்தையின் இந்த ஏற்பாடுகளையெல்லாம் இப்போதே நான் நிராகரித்து விட முடியாதா?"

"முடியாது. ஏற்கனவே உங்கள் பிரதாபங்களைப் பற்றியும் நடக்கப் போகிற விழா பற்றியும் உங்களுக்குக் கிடைக்கவிருக்கும் பதவி பற்றியும் முக்கியமாக என்னை உங்களுக்கு மணம் செய்யப் போவது பற்றியும் தீவு வாசிகளுக்கு செய்தி பரப்பியிருப்பார். இனி உங்களை இத்தீவு வாசிகள் சூழ்ந்து கொள்வார்கள். அதர்ம வளையத்தை உடைக்க உங்களால் முடியலாம். அன்பு வளையத்தை உடைக்க முடியாது. ஏற்கனவே அப்படியொரு அன்பு வளையத்தில் நானே சிக்கித் தவிக்கிறேன். எனக்கும் உங்களுக்கும் திருமணம் என்றால் தீவு வாசிகள் பெரும் சந்தோஷமும் பரபரப்பும் அடைவார்கள். இதில் நீங்கள் மறுப்பு தெரிவித்தாலோ பிடிவாதம் பிடித்தாலோ அவர்கள் உங்களை விடமாட்டார்கள். புரட்சி செய்வார்கள். எனக்காக எது வேண்டுமானாலும் செய்வார்கள். என் பேச்சைக் கூட கேட்காமல் திருமணத்தை முடிப்பதில் கண்ணும் கருத்துமாய் இருப்பார்கள். நீங்கள் எப்படி தப்ப முடியும்?"

"ஏன் சௌமியகுமாரி, உன்னை நான் மணப்பதாக இருந்தால் என்னைத் தப்புவிப்பதாகச் சொன்னாயே. அப்போது இத்தீவு மக்கள் கைகளை கட்டிக் கொண்டு நிற்பார்களா?"

"ரகசியமாக நடக்கும் விஷயத்திற்கும் பகிரங்கமாக நடக்கும் விஷயத்திற்கும் வித்தியாசமில்லையா வீரரே? நம் இருவருக்கும் திருமணம் என்று பகிரங்கமாகி விட்ட பின் தீவு





வாசிகளிடமிருந்து தப்புவது கஷ்டம். ஆனால் நான் உங்களைத் தப்பச் செய்வது ரகசியமான விஷயம். என்னையும் உங்களையும் தவிர ஒரு சில அந்தரங்கமானவர்களும் மட்டுமே சேர்ந்து நடத்தக் கூடிய விஷயம். அதைச் செய்ய என்னால் முடியும்"



"உன் மீது உயிரையே வைத்திருக்கும் மக்களை ஏமாற்றி விட்டு என்னோடு தப்புவது நீ இந்த அன்பு மக்களுக்குச் செய்யும் துரோகமில்லையா?"

"உங்களுக்கு ஏன் சில நேரங்களில் சாதாரண விஷயங்கள் கூடப் புரியாமல் போகிறது! மாவீரர்கள் ஒருவேளை இப்படித் தான் இருப்பார்களோ?"

"நீ என்ன சொல்கிறாய்?"

"நீங்கள் என்னை மணக்கிறீர்கள் எனகிற போது எனது வாழ்வே நீங்களாகி விடுகிறீர்கள். அதற்குப் பின் யாரை நான் பொருட்படுத்த வேண்டும்? திருமணமானதும் பெற்ற தாயைத் துறந்து விட்டு கணவனோடு வந்து விடுகிறவள் பெண். அச்செயல் தாய்க்குத் துரோகம் செய்வதாக ஆகி விடுமா?"

"இந்த தர்மம் பகிரங்கமான சந்தர்ப்பங்களில் வேலை செய்யாதா?"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"பெண்ணே, உன் தந்தை நமது விஷயத்தையெல்லாம் பகிரங்கப் படுத்தட்டும். உன்னை மணந்து கொண்டு நான் என் தாய் நாட்டிற்கு உன்னோடு செல்ல முனைந்தால் அது தர்மம் தானே? அதை இத்தீவு மக்கள் அனுமதிக்க மாட்டார்களா?"

"என் தந்தை தலையிடாமல் இருந்தால் அது நடக்கும். அவர் தான் தந்திரமாக ஒரு பதவியை அளித்து இத்தீவைக் காக்கும் படி மக்களை வைத்துக் கொண்டு வேண்டிக் கொள்வாரே! என்னை மணந்து கொண்டு நீங்கள் இங்கே காவல் தெய்வமாய் இருப்பதை அவர்கள் எப்படி வேண்டாம் என்று சொல்வார்கள்? அவர்களுக்கு இது இரட்டிப்பு மகிழ்ச்சியல்லவா?"

"தன்னை நம்பி, தன் சகாக்களை நம்பி, தன் அடாவடித் தனங்களை நம்பி காரியத்தில் இறங்காமல் தன் மக்களை நம்பி திட்டம் தீட்டும் விதத்தைப் பார்க்கும் போது உன் தந்தையை அறிவாளி என்று தான் சொல்ல வேண்டும். ஆனாலும் ஒரு விஷயம் நான் ஊமையல்ல. என்னால் பேச முடியும். உன் தந்தை யாரையெல்லாம் சாட்சியாக வைத்துக் கொண்டு பேசுகிறாரோ அதே இடத்தில் என் நியாயத்தை நான் பேசினால் உன் மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்களா? அவர்களுக்கு நியாயத்தை உணரும் புத்தி இல்லையா?"

"நியாயம் என்று எதைச் சொல்கிறீர்கள்?"

"என்னை இங்கேயே இருத்திக் கொள்வது தவறு. என் தாய் நாடான சேரநாட்டிற்குப் பணிபுரிய நான் கட்டுப்பட்டவன் என்று நான் வலியுறுத்தினால் அது உன் மக்களுக்கு நியாயம் என்று புரியாதா?"

"அப்படியானால் என்னை மணப்பது உங்களுக்குச் சம்மதமா?" ஆர்வத்துடன் கேட்டாள் சௌமியகுமாரி.

"விவாதத்திற்காகச் சொன்னேன். வேறு எதுவும் இல்லை"-



இப்பேச்சைக் கேட்டதும் வருந்திய அவள் ஏன் இந்த விஷயத்தில் மட்டும் பிடி கொடுக்காமல் இருக்கிறீர்கள்! நான் அழகாக இல்லையா?" என்று கேட்டாள்.

"இது அர்த்தமில்லாத கேள்வி"- என்றான் ஆபுத்திரன்.

"அது போகட்டும். என் தந்தையை எப்படிச் சமாளிக்கப் போகிறீர்கள்?"- என்று கேட்டாள்.

"அவரிடம் இரண்டு தவறுகள் இருக்கின்றன. முதலாவது தாய நாட்டுக்கு எதிராக இருந்து கொண்டு இங்கே நான் பணிபுரிவேன் என்று எதிர்பார்ப்பது. இரண்டாவது இந்தச் சின்னஞ்சிறிய தீவில் காலமெல்லாம் என்னை வைத்திருக்க முடியும் என்று நம்புவது. இந்த இரண்டு தவறுகளை அவர் செய்கிறார். அது அவருக்குப் பாதகமாகத் தான் அமையும்"-

"வீரரே, நான் ஒரு திட்டத்தை வைத்திருக்கிறேன் அதன் படி நீங்கள் நடந்து கொண்டால் இந்தச் சிக்கல்களிடமிருந்து விடுபட முடியும்"

"சொல்"-

"விழாவுக்கு என் தந்தை பலமுக்கியஸ்தர்களை வரவழிக்கப் போவதாகச் சொன்னேன் அல்லவா! அது போல் நானும் ஒருவரை என் தந்தையே எதிர்பார்க்காத விதத்தில் வரவழைக்கிறேன். நீங்கள் பலரோடு போரிட்டு வெற்றி வாகை சூடும் போது என் விருந்தாளியை உங்களிடம் போர் புரியும் படி அனுப்புகிறேன். அவரோடு நீங்கள் போரிட்டு தோற்று விடுங்கள். நீங்கள் தோற்று விட்டால் தந்தையின் திட்டங்களும் தோற்று விடும்"

"நான் தோற்றால் என்ன விளைவு உண்டாகும்?"

"உங்களை அவர் நினைத்துள்ள பதவியில் அமர்த்த முடியாது. மாறாக எனது விருந்தினரைத் தான் அமர்த்த முடியும். நான் மாண்டு விடுவேன். நீங்கள் சிக்கலிலிருந்து விடுபடுவீர்கள்"

"இதில் உனக்குப் பூரண சம்மதமா?"

"வேறு வழியில்லை வீரரே" என்றாள் அவள். அவளது கண்கள் கலங்கியிருந்தன.



**சௌ**மியகுமாரி சென்று விட்டபின் பங்களனின் சதி திட்டங்களைப் பற்றி நீண்ட நேரம் வரை யோசித்துக் கொண்டிருந்தான் ஆபுத்திரன். சுயநலத்திற்கு எதை வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் பலி கொடுக்க அவன் தயங்கமாட்டான் என்பதையும் அதற்கு அவனது மகளும் ஒரு பொருட்டல்ல என்பதையும் சந்தேகமற உணர்ந்து கொண்ட அவன் இனி அங்கிருந்து தப்புவது தான் சரியானது என்று தீர்மானித்து அது விஷயமாக யோசிக்கலானான்.

அன்றிரவும் அவனால் தூங்கமுடியவில்லை. சௌமியகுமாரி சொன்னதைப் போலவே அனைத்தும் நடந்தன. வெள்ளைத்தீவின் மக்கள் கூட்டம் கூட்டமாக அவன் இருப்பிடத்திற்கே வந்து அவனைப் பாராட்டி விட்டுச் சென்றார்கள். அராபியக் கொள்ளையர் மரக்கலத்திலிருந்து காப்பாற்றியது குறித்து ரொம்பவும் பாராட்டிப் புகழ்ந்த



தீவுவாசிகள் "நீங்கள் வெள்ளைத் தீவின் காவல் தெய்வம். எங்கள் மன்னர் எடுக்கும் விழாவில் நீங்கள் அவசியம் கலந்து கொள்ள வேண்டும். அவர் அளிக்கும் பதவியை ஏற்பதோடு அவரது அன்புப் பரிசையும் ஏற்க வேண்டும்" என்றெல்லாம் அவனிடம் அன்போடு கேட்டுக் கொண்டார்கள்.

மறுநாள் அவன் வெள்ளைத் தீவுக் கோட்டைக்குள் தேரின் மூலம் அழைத்துச் செல்லப்பட்டான். அவனைக் கண்ட மக்கள் பெரிதும் ஆரவாரம் செய்தார்கள். கோட்டை மாளிகையில் இருந்த பங்களன் நேரில் வந்து வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றான். மாளிகை வட்டாரம் மிகவும் பரபரப்புடன் காணப்பட்டது. பலரும் வருவதும் போவதுமாக இருந்தார்கள். உள்ளே அழைத்துச் செல்லப்பட்ட ஆபுத்திரனுக்கு அனைத்து வசதிகளும் கொண்ட அறையொன்று ஒதுக்கப்பட்டது. உணவு மற்றும் அனைத்துத் தேவைகளையும் பூர்த்தி செய்து வைக்க பல பணிப்பெண்கள் அமர்த்தப் பட்டார்கள்.

ஆபுத்திரனைப் பொறுத்தவரை பூரண சுதந்திரத்தைத் தந்திருந்தான் பங்களன். அதைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்ட சேரநாட்டு வாலிபன், ராவணன் என்ற கொள்ளையர் உபதலைவனை உடன் அழைத்துக் கொண்டு கோட்டையைச் சுற்றிப் பார்த்தான். கோட்டையின் நட்ட நடுவே பிரம்மாண்டமான சிலை ஒன்றிருந்தது. இடக்கையிலே நீண்ட கோலை ஊன்றிய படியும் வலக்கையில் செண்டு கோலைப் பிடித்துமாய் இருந்த அச்சிலையின் தலையில் நாக முடி கவசம் அணிவிக்கப் பட்டிருந்தது. "இது எங்கள் மூதாதையரது உருவம். எங்கள் வழிபாட்டிற்கு உரியது" என்று கூறி அதை வணங்கினான் ராவணன். ஆபுத்திரன் அச்சிலையைப் பார்த்ததும் அது பங்கள வம்சத்துடன் எந்த

சம்மந்தமும் இருக்க முடியாதது என்றும் ஏதோ ஒ
பழங்காலத்து எகிப்து நாட்டு சிலையைக் கொண்டு வந்
நிறுவி விட்டு பங்களன் பொய்க்கதை சொல்லியிருக்க
வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டே கோட்டை
சுவற்றை நோக்கினான். கோட்டைச் சுவர் முப்பது
உயரத்திற்கு பிரம்மாண்டமாக எழுப்பப் பட்டிருந்ததைக் கண்
ஆபுத்திரன் "ராவணா, இந்தக் கோட்டைச் சுவற்றின் உயர
எங்கள் வஞ்சிக் கோட்டைக்குக் கூட கிடையாது
அங்குமட்டுமல்ல. வேறு எங்குமே கிடையாது. அப்படியிருக்க
இங்குமட்டும் ஏன் இத்தனை உயரத்திற்கு எழுப்ப
பட்டிருக்கிறது?" என்று கேட்டான்.

"நீங்கள் இந்தச் சுவற்றில் இன்னொன்றையும் கவனிக்க
வேண்டும். சுவற்றின் உட்புறம் படிக் கட்டுகள் ஏதாவது
இருக்கிறதா என்று பாருங்கள். எதுவும் இல்லை. உள்ளே
இருப்பவர்கள் எப்படி மேலே போவார்கள் என்று
யோசித்தீர்களா?" என்று கேட்டான் ராவணன்.

அதையடுத்து கோட்டைச் சுவற்றை ஒருமுறைப் பார்த்து
விட்டு 'ஆமாம்' என்பது போல் தலையை ஆட்டியது
அவனது வியப்பைக் கண்டு சந்துஷ்டி அடைந்த ராவணன்
"சுவற்றில் உட்புறமும் சரி வெளிப்புறமும் சரி கொக்கிகளும்
இல்லை. இப்படி எதுவும் இல்லாத நிலையில் சுவற்றின் மீது
எப்படி ஏறமுடியும்?" என்று கேட்ட ராவணன் "ஐயா, இப்படி
வாருங்கள்" என்று கூறி கோட்டைச் சுவற்றின் ஒரு மூலையில்
விசையொன்றை முடுக்கினான். அந்த இடத்தில் இரண்டு
ஆட்கள் ஒருசேர நுழையும் அளவிற்கு மதில் சுவர் திறந்து வழி
விட்டது. பந்தம் ஒன்றைக் கொளுத்திக் கொண்டு அதற்குள்
ராவணனும் ஆபுத்திரனும் நுழைந்தார்கள்.



## பங்களன் மூதாதையர்



"இப்போது புரிகிறதா? உள் சுவருக்கும் வெளிச் சுவற்றுக்கும் இடையே போதுமான இடைவெளி இருக்கிறது. வெளிச் சுவற்றில் ஆங்காங்கே துளைகள் இருக்கின்றன. பகைவர்கள் இக்கோட்டையை நெருங்கும் போது அவர்களுக்குத் தெரியாமல் இந்த இடைவெளியில் இருந்து கொண்டு யந்திரங்களின் உதவியால் நச்சுப் புகையையும் மயக்கப் புகையையும் வெளியே வீசும்படிச் செய்வோம். எதிரிகள் இந்தப் புகைக்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் மயக்கமடைவார்கள் அல்லது சாவார்கள். அதையும் மீறி முன்னேறினால் கோட்டையைச் சுற்றியிருக்கும் கடல் நீர் அகழிபோல் செல்கிறது. அப்பகுதி ஆழப்படுத்தப் பட்டு முதலைகள் கணக்கின்றி விடப்பட்டுள்ளன. எனவே எதிரிகள் அந்த அகழிகளில் விழுந்து முதலைகளுக்கு இரையாவார்கள். அதோடு இந்த இடைவெளிப் பகுதியில் நான்கு இடங்களில் படிக்கட்டுகள் இருக்கின்றன. அவற்றின் மூலம் மேலேறி தளத்திற்கு நம்மவர்கள் வரலாம். அப்படி மேலேறி வந்து அங்குள்ள பொறிகளை இயக்கி விட்டால் பத்து நிமிடங்கள் வரை அவை தானாகவே சுழன்று கணக்கற்ற விஷ அம்புகளை வீசும். பத்து நிமிடங்கள் கழித்து அவற்றில் அம்புகளை அடுக்கி இயக்கி விட்டால் அடுத்த பத்து நிமிடங்களுக்குப் பொறிகள் தாமாகவே சுழன்று அம்புகளை வீசும். இவற்றையெல்லாம் மீறி எதிரி கோட்டைக்குள் நுழைய முடியாது. வட்டவடிவலான இக்கோட்டைக்கு ஒரே ஒரு வாயில் தான். அதன் வழியாக யமன் கூட நுழைய முடியாது" என்றான்.

எதையும் பேசாத ஆபுத்திரன் "கோட்டைக்கு நடுவே உயரமாக நிற்கிறதே ஒரு கல் தூண், அது தான் காவற் கூடம் இல்லையா?" என்று கேட்டான்.

"ஆம். அங்கிருந்த படி சுற்றையும் பார்க்கலாம்



கடலையும் பார்க்கலாம். ஆபத்து நெருங்குகிறது என்று தெரிந்தால் பகல் நேரத்தில் அங்கிருந்தபடி கண்ணாடியை ஒளிரச் செய்வான் காவலாளி. உடனே உள்ளே இருப்பவர்கள் செயல்படத் தயாராவார்கள்"

"ராவணா, முன்னேற்பாடுகள் எல்லாம் சரிதான். ஆனால் நீங்களெல்லாம் வெறும் கொள்ளைக்காரர்கள் தானே? உங்களுக்கு முறையாகப் போரிடத் தெரியுமா?" என்று கேட்டான் ஆபுத்திரன்

"ஆறு மாதங்களுக்கு முன்னால் இந்தக் கேள்வியை நீங்கள் கேட்டிருந்தால் தெரியாது என்று நானும் பதில் சொல்லியிருப்பேன். ஆனால் நாங்கள் எல்லோருமே முறையான போர்ப் பயிற்சியைப் பெற்றிருக்கிறோம்"

"எப்படி?"

"கோட்டையை நிர்மாணம் செய்யத் தொடங்கிய போதே எங்களுக்குப் போர்ப் பயிற்சியை அளிக்க விரும்பினார் எங்கள் தலைவர். அப்பயிற்சியை அளிக்க எங்கிருந்தோ ஒரு வீரப் பெண்மணியை அழைத்து வந்தார். அந்தப் பெண்மணியே பெரும் சாகசக்காரியாக இருந்தார். அவருக்குத் தெரியாத போர் முறையே இருக்காது போலிருக்கிறது. நாங்கள் எல்லோரும் அசந்து போய் விட்டோம். தலைவரே கூட சில போர் முறைகளை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருப்பார்".

ராவணன் இவ்வாறு கூறியதும் அந்தப் பெண் யாராக இருக்கும் என்று யோசித்தான் ஆபுத்திரன்.

ஆனால் அதே வேளையில் இந்திர போகத்தில் ஆழ்ந்து கொண்டிருந்தான் கொள்ளையர் தலைவன் பங்களன்.

# அத்தியாயம் ஏழு



## வெள்ளைத்தீவு விழா

உண்மையிலேயே இந்திர போகத்தில தான் இருந்தான் பங்களன். தன்னை விட அதிஷ்டசாலி உலகில் வேறு யாரும் இருக்க முடியாது என்று நினைத்தான். அராபியக் கொள்ளையர் மரக்கலங்களை ஆபுத்திரன் வெறும் வார்த்தைகளால் விரட்டியடித்த நிமிடத்திலிருந்தே அந்த அதிஷ்டம் தொடங்கி விட்டதாக கணக்கு போட்டான். கொள்ளையர்களே அஞ்சும் மகா கொள்ளையர்களான அராபியர்களை விரட்டியடித்த ஆபுத்திரனின் செயலை இன்னதென பெயரிட முடியாவிட்டாலும் அற்புதமான காரியம் என்று வியந்த அவனது சகாக்கள், ஆபுத்திரனைத் தங்களோடு வைத்துக் கொண்டால் அவனது திறமைக்கும்



கோட்டையின் பலத்திற்கும் முன்பாகச் சேரனே வந்தால் கூட எதுவும் செய்ய முடியாது என்று அறிவுறுத்திய போது பங்களனின் கண்கள் பளிச்சிட்டன. பலமான கோட்டை அமைந்திருக்கும் நிலையிலும், கொள்ளையர்கள் முறையான போர்ப் பயிற்சியைப் பெற்றிருக்கும் நிலையிலும், ஆபுத்திரனைப் போன்ற அளவிடமுடியாத அரிய திறமைகளைப் பெற்ற மாவீரனும் கிடைத்து விட்டால் வெள்ளைத் தீவை அசைக்க முடியாத தளமாக அமைக்கலாம் என்றும் பின்பு அவனது துணையைக் கொண்டே தனது கனவுகளை நிறைவேற்றி விடலாம் என்றும் முடிவு கட்டினான் பங்களன். அநத திட்டத்திற்கு ஆபுத்திரன் சம்மதிக்க மாட்டான் என்பதாலேயே விழா என்ற பெயரில் தனது வம்சத்தவர்களை முன்னால் வைத்துக் கொண்டு செளமியகுமாரியையும் மணம் செய்து முறி எழுதி விட்டால் அவனுக்கு வேறு வழி இல்லாமல் போய் விடும் என்று வஞ்சகமாகத் திட்டமிட்டான். தான் ஆசைப்பட்ட விஷயம் நிறைவேறுவதற்கு பாதி காரணம் கொள்ளையர்களுக்கு போர்ப் பயிற்சியளித்த ஆடலழகி பவானியே என்பதை உணர்ந்த அவன், அவளைச் சந்திக்க கரைபுரண்ட உற்சாகத்துடன் அவளது எழில் மாளிகைக்குப் போனான்.

அவனது அகால வரவைக் கண்ட பணிப் பெண்கள் தலையைத் சாய்த்து வணங்கியபடி வெளியேறினார்கள். வெள்ளைத் தீவு கோட்டையில் அவனால் உருவாக்கப் பட்ட செயற்கை வனம் ஒன்று இருநதது. கொள்ளையடிக்கப் படும் கலங்களிலிருந்து பிடிபடும் அழகிகளை அவ்வனத்திற்குக் கொண்டு வந்து இச்சிக்க வேண்டும் என்ற இன்பமான எண்ணத்தோடு உருவாக்கிய செயற்கை வனத்திற்கு காவலாய

## சுவர்க்கமாளிகை





என்று சுகமான பெயரினையும் இட்டான் அந்தப் பேராசைக்காரன். ஆனால் கோட்டையும் உருவாகி வனமும் உருவாகியதே தவிர அவன் நினைத்தபடி கடல் கொள்ளை எதுவும் நிகழவில்லை. பெண்களும் பிடிபடவில்லை. ஆழ்கடல் பகுதியில் மூச்சடக்கிய படி பரதவர்களை இறக்கி பெரும் கடல் நண்டுகளைப் பிடிக்கச் சொல்லி அவற்றை உண்ணும் வழக்க முடையவனான பங்களன், அவ்வாறு பரதவர்களை கடல் நண்டுகளை பிடிக்க அனுப்பிய போது, ஆளில்லாத படகொன்றில் கிடந்தாள் இப்பவானி. குற்றுயிரும் கொலையுயிருமாய் சிக்கிய அவள் திகட்டக் கூடிய அழகியாக இருந்தாள். அவளை கோட்டைக்குள் கொண்டு வந்து வைத்தியர்களை வைத்து சிகிச்சையளித்தான் பங்களன். ஒருவார கால சிகிச்சைக்குப் பின்னர் தேறிய அவள் தன்னைக் காப்பாற்றி சிகிச்சையளித்த பங்களனுக்கு நன்றியைத் தெரிவித்தாள்.

விழுங்குவது போல் அவளது அழகைக் கண்டு மலைத்துப் போன அவன் "எனக்கு உன் நன்றி தேவையில்லை பெண்ணே" என்றான் காமந்தக உள்ளுணர்வோடு.

"என் உயிர் வேண்டுமா? கேளுங்கள் தருகிறேன்" என்றாள் பவானி.

"உனது உயிரைப் பெறுவதற்காகவா உன்னைக் காப்பாற்றினேன்? இல்லை அழகி" - நாக்கில் ஈரம் சொட்டப் பேசினான் பங்களன்.

"வேறு என்ன வேண்டும் சொல்லுங்கள்" -

"முதலில் நீ யார்? இங்கே எப்படி வந்தாய்? விவரங்களைச் சொல்" -

சொன்னான் அவன்.

"இதெல்லாம் உண்மைதான் என்று எப்படி நம்புவது?"

"சத்தியம் செய்யத் தயாராக இருக்கிறேன்"

"வேண்டியதில்லை. நீ சொல்வது பொய் என்று எனக்குத் தெரியவந்தால் அன்றைய தினம் தான் உன் வாழ்வின் கடைசி நாளாக இருக்கும்" என்று சொன்ன பங்களன் "உன் விருப்பம் என்ன? நீ எங்கிருந்து வந்தாயோ அங்கேயே போக விரும்புகிறாயா? அல்லது இங்கேயே இருக்க விரும்புகிறாயா? என்று கேட்டான்.

"வந்த இடத்திற்குத் திரும்பிப் போவதால் எனக்கு எந்த லாபமும் இல்லை. நான் உயிரோடு இருப்பது தெரிந்தால் என் தலையைச் சீவாமல் விடமாட்டார்கள்."

"அப்படியானால் உன்னை அரபு நாட்டில் விற்று விடவா?"

"ஏன், உங்கள் தீவில் எனக்கு இடமில்லையா?"

"நான் கொள்ளைக்காரன்."

"அதனால் என்ன?"

"என் வாழ்க்கை முறைகள் கரடுமுரடானது."

"அதனால் என்ன?"

"நீ விரும்பும் படி என்னால் இருக்க முடியாது."

"எதற்காக இப்படியெல்லாம் சுற்றி வளைத்துப் பேசுகிறீர்கள்?"



"பெண்ணே, எனது விருப்பங்கள் இரண்டு. இங்குள்ள கொள்ளையர்களுக்கு நீ தான் போர்ப் பயிற்சி அளிக்க வேண்டும்."

"நாளையிலிருந்தே துவங்கி விடுகிறேன்"

"எனது இரண்டாவது விருப்பத்தை அப்புறம் சொல்கிறேன்"

இரண்டாவது விருப்பம் என்னவென்று பங்களன் கூறவில்லை. அவன் கூறாமலேயே அது என்ன என்பதைப் புரிந்து கொண்ட அவள் அதை நிறைவேற்றவும் தயாராக இருந்தாள்.

அதையறிந்த பங்களன் சுகவனத்தில அழகிய ஒரு மாளிகையைக் கட்டி அதற்கு சொர்க்கம் என்று பெயரிட்டு அங்கே அவளை குடியமர்த்தி குடியும் கூத்துமாக அவளோடு அவ்வப்போது சொர்க்க போகத்தை அனுபவித்தான். இரண்டு நாட்கள் அனுபவித்து விட்டு மூன்றாம் நாள் கடலில் வெட்டி வீழ்த்தி விடும் கடல் கொள்ளைக்காரர்களைப் பற்றி அவள் கேள்விப் பட்டிருந்தாள். அப்படியெல்லாம் இல்லாமல் தனக்கென்று ஒரு மாளிகையைக் கட்டித் தனது ராணியைப் போல் நடத்துவதாக எண்ணி மகிழ்ந்த அவள் தன் உடலை முழுதுமாக அவனுக்குத் தந்தாள். மறுபுறம் கொள்ளையர்களுக்கு போர் பயிற்சியையும் தந்தாளாதலால் அவளை எண்ணும் போதே இன்பக் கிளர்ச்சியடையலானான் பங்களன்.

அந்தக் கிளர்ச்சியோடு சுகவன மாளிகைக்குள் நுழைந்து உள்கட்டை அடைந்த போது உள்ளே பட்டு மஞ்சத்தில் பவானி அமர்ந்திருந்த கோலம் அவனை உன்மத்தம் கொள்ள வைத்தது.

சாலையில் போர்ப் பயிற்சி அளித்து விட்டு ஆயாசத்தைப் போக்கிக் கொள்ள சுடுநீரில் குளித்திருந்த அவள் ஈரகேசத்தைப் பரவ விட்டபடி அமர்ந்து கொண்டு அரபிய வாசனை திரவியங்கள் அடங்கிய குப்பிகளிலிருந்து சிலபல துளிகளை உடலெங்கும் தெளித்துக் கொண்டிருந்தாள். மிகவும் புதுமையான ஆடைகளையும் நேர்த்தியாக அணிந்து கொண்டு பங்கஜன் தந்திருந்த நகைகளில் ஓரிரண்டைக் கச்சிதமாகத் தேர்ந்தெடுத்து அங்கங்களை அழகு செய்து கொண்டு வித்தியாசமான கவர்ச்சியுடன் மாய மோகினியைப் போல தோன்றினாள் அவள். கண்களில் போதையை வரவழைத்துக் கொண்டு அந்தப் போதைக் கண்களையே வலையாக்கி விரித்தாள். வலையேதும் இல்லாமலேயே சிக்கி விடக் கூடிய காமுகனான பங்கஜன் அவளது காமவலையில் அசாத்திய விருப்பத்துடன் வேகமாக விழுந்தான். அவளை விழுங்கி விடுவது போல் மேலும் கீழுமாகப் பார்த்தான். பார்த்த அழகு தான் என்றாலும் பூத்திருந்த விதம் புதுமையாக இருந்தது. எனவே அவளை நெருங்கி "உன் அலங்காரம் அட்டகாசமாக இருக்கிறது. இனி நீ இப்படித் தான் இருக்க வேண்டும்" என்றான்.

"இதென்ன உங்கள் ஆசையா? கட்டளையா?" - கிறங்கும் குரலில் கேட்டாள் பவானி லேசாக அசைந்த படி.

நெருங்கிச் சென்று அவளை இறுகக் கட்டிப் பிடித்தான்.

"ரொம்பவும் இறுக்காதீர்கள். வலிக்கும்" என்று கொஞ்சினாள் பவானி.

மேலும் இறுக்கினான் பங்கஜன். "இன்னும் இறுக்கக் கூடாதா?" என்றது அவளது மனம்.



இறுக்கத்தை விடாமல் அவளது உதடுகளை தன் உதடுகளால் அழுத்தி எடுத்தான் பங்கஜன்.

"கடித்து விடாதீர்கள். ரத்தம் வந்து விடும்" என்றாள் பவானி.

அவன் உடனே அவளது உதடுகளைக் கவ்வி கடிக்கவும் செய்தான் பங்கஜன்.

இப்படியே வேண்டாம் வேண்டாம் என்று சொல்லியே ஒவ்வொரு இன்ப இம்சையை அவனிடமிருந்து பெற்றுக் கொண்டே போனாள் பவானி.

அவளது இந்தப் புதுமையான முறை அவனுக்கு மிகவும் பிடித்தமானதாக இருந்தது. அதோடு அவன் அதுவரை அனுபவித்தறியாத காமச் சூட்சமங்களை எல்லாம் எடுத்துச் சொல்லி அவனை பங்கேற்க வைத்தாள் அவள். இது போன்ற ஒரு பெண்ணும் காமமும் வேறு எங்கும் இருக்க முடியாது என்று சொல்லிக் கொண்ட அவன் தன் இஷ்டப்படி இயங்க முற்பட்டான். ஆடவனுக்கு காமத்தின் போது ஏற்படும் வெறி மிகவும் முரட்டுத் தனமானது. கண்ணில்லாதது. எனவே பவானி ஒரு பெண் என்பதையே மறந்து மஞ்சத்தில் அவளை வாட்டி எடுத்தான். போதாத குறைக்கு ஒரு கிண்ணம் நிறைய மதுவையும் குடித்து வைத்தானாதலால் ஒரே நேரத்தில இரண்டு மிருகங்கள் தன்னை இம்சிப்பதாக உணர்ந்தாள் பவானி. அதே சமயம் காம இம்சை என்பது அனுபவிக்கும் போது இன்பமாகவே இருக்குமாதலால் அவனது இழுப்புகளுக்கெல்லாம் இடம் கொடுத்து பூரணமாகத் தன்னை அவனுக்கு அவள் ஒப்படைத்து விட்டதால் இருவருக்குமே காமநுகர்ச்சி பூரணமாக இருந்தது

போதும் போதும் என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளும் வரை காமவெள்ளத்தில் நீந்திய அவர்கள் கரையேறி சிறிது நேரம் வரை ஆசுவாசமாகப் படுத்துக் கிடந்தார்கள். சுவாசம் சீரான நிலையில் பங்களனின் மார்பில் வேகமாகக் கையை வைத்து தடவிய பவானி "இன்றென்ன பகலிலேயே வந்து இப்படி ..." என்று கிறங்கிய குரலில் கேட்டாள்.

"ஏன், பகலில் இதற்கு தடை விதித்திருக்கிறாயா என்ன?" - என்று கேட்டான் பங்களன் அவளை அப்படியே தூக்கித் தன் மேல் போட்டுக் கொண்டு.

"இதற்கு என்ன கால நேரம் வேண்டியிருக்கிறது? நான் அதற்காக கேட்கவில்லை. இதுவரையில் பகலில் வந்ததில்லையே என்பதற்காகக் கேட்டேன்" என்றாள் அவனது மார்பில் புரண்டபடி.

"சந்தோஷம் வந்து விட்டால் வந்து விடுவேன். எனக்கின்று பூரண சந்தோஷம். போதுமா?" கேட்டான் பங்களன் தன் மீதே அவளைப் புரட்டியபடி.

"எல்லாம் சரி. ஆனால் உங்கள் வேகம்."

"வேகமா?"

"இதுவரை இப்படியொரு வேகத்தைப் பார்த்ததில்லை."

"அதுவா? சாதாரணமாக கொள்ளையிடும் கப்பல்களிலிருந்து அழகான பெண்களைப் பிடித்து வருவார்கள் என் சகாக்கள். அப்போதெல்லாம் எனக்கு உண்டாகும் வேகம், புயலைப் போல இருக்கும். அந்த வேகத்தில் நான் மிருகமாகி விடுவேன். அது போன்ற சில



நேரங்களில் என்னிடம் சிக்கிய சில பெண்கள் செத்துப் போயிருக்கிறார்கள். அப்படிப் பட்ட வேகம் தான் இன்று எனக்கு வந்து விட்டது. நல்லவேளை. நீ சாகவில்லை" - என்று கூறி ராட்சசனைப் போல சிரித்த பங்களன் பவானியை மீண்டும் வாட்டியெடுத்து விட்டு எழுந்து தன் இருப்பிடத்திற்குச் சென்றான்.

அங்கேயே குளித்து உணவருந்தி விட்டு உபதலைவர்களை அழைத்து "விருந்தாளிகள் எல்லோரும் வந்து விட்டார்களா?" என்று கேட்டான்.

"இல்லை தலைவரே. ஓரிருவரைத் தவிர வேறு யாரும் வரவில்லை. அவர்களுக்குத் தகவல் கொடுத்து இன்றைக்குள் இங்கு வரவழைக்க முடியாது" என்றான் ரணதீரன்.

"இன்று வராவிட்டால் பரவாயில்லை. ஒருவாரத்திற்குள் கட்டாயம் அவர்கள் எல்லோரும் இங்கு வந்தாக வேண்டும். இல்லையென்றால் நான் என்ன செய்வேன் என்று சொல்லமுடியாது" -

இவ்வாறு கூறிய பங்களன் பிறகு ஆபுத்திரனிடம் சென்று. "ஆபுத்திரர் என்னை மன்னிக்க வேண்டும் நான் அழைப்பு விடுத்த விருந்தாளிகள் இன்றைக்குள் வந்து சேரமுடியாது போலிருக்கிறது. தயவு செய்து ஒரு வாரம் அவகாசம் வேண்டும்" என்றான் பணிவான குரலில்.

"வரும் போது வரட்டும் பங்களரே. நான் காத்திருக்கிறேன். நீங்கள் நம்பிக்கையோடு இருந்தால் சரி"

"நம்பிக்கைக்கு என்ன பங்கம் வந்து விட்டது ஆபுத்திரரே?" - என்று சந்தேகம் மண்டுறும் குரலில் கேட்டான் பங்களன்.

"நான் தப்பி விடுவேன் என்று நீங்கள் நினைக்கலாம் அல்லவா? அதனால் தான் கேட்டேன்"

"அந்தச் சந்தேகம் எனக்கு இருந்தால் விழா ஏற்பாடுகளையெல்லாம் நான் எதற்காகச் செய்யப் போகிறேன்? உங்களைச் சுதந்திரமாக எப்படி விடுவேன்?". கேட்டான் பங்களன்.

"என் கண்களையும் கைகளையும் கட்டி காவலில் வைத்திருந்தது நீங்கள் தானே?"

"அது பழைய நிலை. பழைய கதை. அதை மறந்து விடுங்கள். இப்போது நீங்கள் எங்களையெல்லாம் காத்த மாவீரர். இனிமேல் பாருங்கள். நீங்களே எதிர்பாராத அதிசயங்கள் இங்கே நடக்கும்" என்று கூறிவிட்டு அகன்றான் பங்களன்.

அவன் அதிசயங்கள் என்று கூறியதையும் அதே சமயம் அவனது மகள் கூறியிருந்த சதி திட்டங்களையும் எண்ணிப் பார்த்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான் ஆபுத்திரன். நடப்பது நடக்கட்டும் என்ற ரீதியில் ராவணனோடு வெள்ளைத் தீவு கோட்டையை மட்டுமின்றி எல்லாத் தீவுகளையும் சுதந்திரமாகச் சென்று பல்வேறு விவரங்களையும் அறிந்து கொண்டான். விழா ஏற்பாடுகளால் கோட்டையும் தீவுகளும் திமிலோகப் பட்டன. அதுவரை அப்படியொரு விழா அங்கே நடந்ததில்லை என்று உணர்த்துவது போல ஆரவாரமும் ஏற்பாடுகளும் பிரமாதப் பட்டுக் கொண்டிருந்தன. மக்கள் இதைத் தங்கள் விழாவாகவே கருதிக் கொண்டார்களாதலால் தங்கள் இருப்பிடங்களை அலங்கரித்தும் கண்பட்ட இடங்களில் எல்லாம்



கொடிகளையும் தோரணங்களையும் கட்டிக் குதூகலித்தார்கள். கடலுக்குள் பகைமைத் திட்டுக்களாய் இருந்த தீவுகள் வண்ண மொட்டுக்களாய் மாறி விட்டிருந்தன. வெள்ளைத் தீவு கோட்டையோ தேவலோகமாய உருமாறியிருந்தது. நாகரீக மற்ற கொள்ளைக்காரர்களாக இருந்த தீவு வாசிகளால் இப்படியொரு அழகான மயக்கத்தைத் தரக்கூடிய மாற்றத்தை உண்டாக்க முடியும் என்று எதிர் பார்க்க முடியாதவனாய் இருந்த ஆபுத்திரனே தீவுகளின் தற்போதைய மாற்றங்களைக் கண்டு வியந்தான்.

ராவணனை மட்டுமின்றி மக்கள் கூட்டம் அவனை அடிக்கடி சூழ்ந்து கொண்டு மகிழ்வித்தது. சில நேரங்களில் அவனால் தனித்து உலவவும் முடிந்தது. ஒரு நாள் சௌமியகுமாரி அவனுக்குத் துணையாக இருந்து சுதந்திரமாக உலவினான்.

"தீவுகள் எப்படி மாறிவிட்டன பார்த்தீர்களா?" என்று கேட்டாள் சௌமியகுமாரி அவனிடம்.

அவனும் "ஆச்சரியமாகத் தான் இருக்கிறது" என்று சொல்லிவிட்டு "இரண்டு நாட்களாக உன்னைக் காணவில்லையே! எங்கே போய் விட்டாய்?" என்று கேட்டான்.

"என் சார்பில் ஒரு விருந்தினரை அழைத்து வரப் போவதாகச் சொல்லியிருந்தேன் அல்லவா! அது விஷயமாக ஏற்பாடுகளைச் செய்யத்தான் போயிருந்தேன்" என்றாள் சௌமியகுமாரி.

"உன் முயற்சிகள் உன் தந்தைக்குத் தெரியாமல் போகுமா?"

"புலிக்குப் பிறந்து பூனையாக இருக்காது வீரரே அவரை ஏமாற்ற எனக்குத் தெரியும்" - என்ற அவள் "என் தந்தை உங்களை இத்தனைச் சுதந்திரத்தோடு விட்டிருப்பது உங்களுக்கு வியப்பாக இல்லையா?" என்று கேட்டாள்.

"எல்லாமே ஒரு சதியை முன் வைத்துத் தானே நடக்கிறது அரசகுமாரி? ஆகவே எது நடந்தாலும் வியப்படைய எதுவும் இல்லை."

"நீங்கள் விரும்பினால் உங்களால் தப்ப முடியும். ஏன் முயற்சிக்கவில்லை?"

"உன் தந்தையின் முழு நாடகத்தையும் காண விரும்புகிறேன்."

"அப்படியா?" என்றவள் சட்டென்று அவனது கன்னத்தில் ஒரு பூ முத்தத்தைக் கொடுத்து விட்டு மான் போல் ஓடினாள்.

மக்களில் சிலர் இதைக் காணவே செய்தனர்.



இப்படியாக நான்கு நாட்கள் கழிந்த நிலையில் பங்களனின் விருந்தாளிகள் மொத்தம் ஆறு பேர் வந்தார்கள். அவர்களை யெல்லாம் உபசரித்து தனித்தனியாக தங்குவதற்கான வசதிகளை செய்தான் பங்களன். ஆபுத்திரனுக்குச் சகல சுதந்திரங்களை வழங்கியிருந்தாலும் தன் விருந்தாளிகள் யாரையும் சந்திக்காமல் பார்த்துக் கொண்டான் கொள்ளையர் தலைவன். மறுநாள் விழா நடைபெறும் என்று பங்களன் அறிவித்ததும் விருந்தாளிகள் அறுவரும் அவனைச்



சந்திக்க விரும்பினார்கள். அச்சந்திப்பை விரும்பாவிட்டாலும் வேறு வழியில்லாமல் ஏற்றுக் கொண்டான் பங்களன்.

விருந்தாளிகள் எல்லோருமே கோபமாக இருந்தார்கள்.

"எங்களையெல்லாம் எதற்காக அழைத்தாய் பங்களா?" - என்று காட்டத்துடன் கேட்டார்கள்.

"பங்காளிகளான உங்களையெல்லாம் எதற்காக வரவேற்பேன்? முக்கியமான காரணத்தால் தான்" என்று பங்களன் காரணத்தை விளக்கினான்.

"உனக்குத் தேவைப்படும் போது தான் எங்களைப் பற்றிய நினைவு வருகிறதா?"

"உங்களையெல்லாம் வெள்ளைத் தீவிற்கு வரக் கூடாது என்று நானொன்றும் தடை விதிக்கவில்லையே."

"பசப்பாதே பங்களா. ஏதோ கடம்பர் குலம் என்று சொல்லிக் கொண்டு எங்களையெல்லாம் அழைத்து நீ நாடகமாடுகிறாய் என்பது எங்களுக்குத் தெரியாது என்று நினைக்காதே. வனவாசியை விட்டு ஓடி வந்த நீ கடல் கொள்ளைக் காரனாக மாறி அரபிக்கடலையே கலக்கி ஏராளமான பொருள் சேர்த்தாய். எங்களை முழுதுமாக மறந்தாய். எங்கள் நிலையைப் பற்றி நீ கவலைப்படவில்லை. நாங்கள் இதையெல்லாம் மறந்து விட்டோம் என்று எண்ணாதே"

"யாரும் கோபப்படாதீர்கள். உங்களையெல்லாம் நான் இப்போது வரவழைத்தது கூட உங்களுக்கெல்லாம் நிறைந்த பரிசுகளைத் தந்து கௌரவிக்கத் தான். விழா முடியட்டும். உங்கள் வறுமையை நான் போக்குகிறேன்"

இவ்வாறு பங்களான் கூறியதும் விருந்தாளிகள் ஓரளவிற்குச் சமாதானமும் திருப்தியும் அடைந்தார்கள். ஆனால் பங்களானோ அவர்களுக்கு எந்த விதமான பரிசையும் வழங்கத் தயாராக இல்லை. அவனது திட்டமே வேறாக இருந்தது. அவர்களெல்லாம் கடம்பர் குலத்தைச் சேர்ந்தவர்கள் தவறாது ஏதாவது ஒருவகையில் பிற்காலத்தில் தலையெடுத்து வாரிசு பிரச்சனையைக் கிளப்பக்கூடும் என்று எதிர்பார்த்தான். கடம்ப அரசை ஒருவேளை மீண்டும் ஸ்தாபிக்க தான் முற்படும் போது இந்தப் பங்காளிகளால் உபத்திரவம் வரக்கூடாது என்று கருதியே இந்த விழாவிற்கு அழைத்து ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழ்த்தப் பார்த்தான். இவர்களிடம் ஆபுத்திரன் சம்மந்தமான உடன்படிக்கை முறியில் கையெழுத்து வாங்கி ஒரு வெற்றியைப் பெற்று விட்டால் பிறகு இவர்களைச் சிறையில் வைத்து சித்திரவதை செய்து கொன்று விடலாம் என்று நினைத்தான். அதோடு வந்திருந்த விருந்தாளிகளும் தங்கள் குடும்பத்தாருடன் வந்திருந்ததால் அவர்களைப் பூண்டோடு அழிக்க இதை விட்டால வேறு சந்தர்ப்பம் கிடையாது என்று தீர்மானித்திருந்த அவன் அதை யாரிடமும் சொல்லவில்லை.

மறுநாள் விழா விஸ்தாரமாகவும் பிரம்மாண்டமாகவும் ஆரம்பித்தது. வெள்ளைத் தீவு கோட்டையின் மத்தியில் அமைக்கப்பட்டிருந்த கலையம்சம் பொருந்திய பெரும் வட்ட வடிவமான வெளியில் எடுப்பான மேடைகள் போடப்பட்டு விருந்தாளிகள் தன் குடும்பத்தாருடன் அமர்ந்தார்கள். பங்களான் மற்றொரு திசையில் இருந்த மூன்று தங்க சிம்மாசனங்களில் நடுவே அமர்ந்து கொண்டு ஆபுத்திரனை ஒருபுறமும் சௌமியகுமாரியை மறுபுறமும் அமர்த்திக் கொண்டான். அதையடுத்து அவனது உபதளபதிகள் அமர, மற்ற



இடங்களிலெல்லாம் தீவு வாசிகள் அமர்ந்து கொண்டார்கள். பிறகு காதுகளைப் பொடியாக்கும் அதிர வேட்டுகளும் பூரிகைகளும் தாரை தப்பட்டைகளையும் பலமாக ஒலித்தன. வாண வேடிக்கைகள் நடந்தன. இசைவாணர்கள் நல்லிசையை இசைத்தார்கள். தீவைச் சேர்ந்த கலைவாணர்கள் காட்டுவாசிகளுக்குரிய பாரம்பரிய நடனத்தை ஆடினார்கள். எல்லா நிகழ்ச்சிகளையும் கண்டு மக்கள் ஆரவாரித்தார்கள். அதையடுத்து கண்டாமணி ஒன்று ஒலித்தது.

பங்களான் எழுந்து நின்று "இப்போது எனது விருந்தாளிகளது நாட்டிலிருந்து வந்த மல்லர்களும் வாள் வீரர்களும் நமது உயிரைக்காத்த மாவீரர் நமது நன்றிக்குரிய ஆபுத்திரருடன் போரிடுவார்கள். கண்டு களியுங்கள். பாராட்டுங்கள்" - என்றான்.

மக்கள் கைகளை அசைத்தார்கள். தோல் கருவிகளை முழக்கினார்கள். அடுத்து ஆபுத்திரனுக்கும் விருந்தாளிகளுடன் வந்திருந்த வீரர்களுக்கும் போர் துவங்கியது. தன்னை எதிர்ப்பது மல்லனாக இருந்தாலும் சரி வாள் வீரனாக இருந்தாலும் சரி அவர்களோடு அனாயாசமாகப் போரிட்டு ஒருவர் பின் ஒருவராக அனைவரையும் வீழ்த்தி வாளை உயர்த்தினான் வஞ்சிக் கோட்டை வாலிபன். அவனது வீரத்தையும் திறமையையும் கண்டு அரங்கமே எழுந்து நின்று ஆரவாரம் செய்தது.

அதையடுத்து உடன்படிக்கை ஓலையை எடுத்து வரச்சொன்ன பங்களான் அது சம்மந்தமாக எழுந்து பேசிமுடித்த போது தனிப் பேரிகை ஒன்று ஒலித்தது.

அதையடுத்து வெண்புரவியொன்றில் அந்த அரங்கத்தில் புயலென நுழைந்த ஒரு மனிதன் "பங்களா, நிறுத்து உன் காரியத்தை" என்றான்.

தான் கூறியபடியே சரியான நேரத்திற்கு வந்து சேர்ந்த மனிதனைக் கண்டு மகிழ்ந்தாள் சௌரியகுமாரி.

ஆனால் அவன் வைத்த கோரிக்கையைக் கேட்டதும் சௌரியகுமாரிக்கு தலையே சுற்றியது.







# அத்தியாயம் எட்டு



## மூஷிகன்

**தா**ன் திட்டமிட்டபடி கலை நிகழ்ச்சிகளை நடத்திய பங்களன் தனது விருந்தாளிகளின் நாட்டி விருந்த மல்லர்களையும் வாள் வீரர்களையும் ஆபுத்திரனிடம் போர் செய்யும் படி பணித்த போது அவன் எதிர் பார்த்தபடியே அவர்கள் அனைவரும் ஒருவர் பின் ஒருவராக தோற்று வீழ்ந்தார்கள். அவர்களையெல்லாம் அதிகச் சிரமம் ஏதும் இல்லாமல் எளிதாக வென்றான் ஆபுத்திரன். அதுவரையில் தனது திட்டங்கள் கச்சிதமாக நிறைவேறியதைக் கண்டு திருப்தியடைந்த பங்களன் ஆபுத்திரனை மேடைக்கு வரச் செய்து பெரும் மாலையொன்றை அணிவித்தான். அவனது விருந்தாளிகளும் மாலைகளை அணிவித்து கௌரவித்தார்கள். மிகவும் விலை உயர்ந்த முத்துமாலை யொன்றையும் அவனது

கழுத்தில் சூட்டிய பங்களன் "தன்மையில்லாமல் அராபிய கொள்ளையர்களிடமிருந்து மீட்ட சேர நாட்டு மாவீரருக்கு இந்த வெள்ளைத் தீவு தலை வணங்குகிறது. அவரது அற்புதச் செயலை பாராட்டி மகிழவே இந்தப் பாரம்பரியம் மிக்க விழாவினை அனைவரையும் கூட்டி நடத்தினோம். விழா வெறும் கொண்டாட்டம் தான். ஆனால் இந்த மாவீரருக்கு இது நன்றிக் கடனாகாது. எனவே தான் இந்த வெள்ளைத் தீவின் அரியணைக்கு ஈடான அரியணை ஒன்று உருவாக்கப்படுகிறது. அது இம்மாவீரருக்கு உரியதாக்கப் பட்டு 'வெள்ளைத் தீவின் வேந்தன்' என்ற பட்டமும் பதவியும் அளிக்கப் படுகிறது. இந்த வெள்ளைத் தீவின் தலைவன் மட்டுமே நான். அதன் காவல் தெய்வம் இந்த மாவீரர் தான். அதோடு இவருக்கு என் சார்பில் என் அன்புப் பரிசாக என் மகளையே அளிக்கிறேன். அடுத்த வாரமே இவர்களது திருமணம் நடைபெறும். நீங்கள் எல்லோரும் இன்று போலவே வந்திருந்து கண்டு களிக்க வேண்டும். நான் இங்கு பேசியவை ஒரு அட்சரமும் விடாமல இந்த முறி ஓலைகளில் பொறிக்கப் பட்டுள்ளன. இதை அங்கீகரிக்கும் விதத்தில் இங்கே வந்திருக்கும் கடம்பர் குல அரச வம்சத்தினர் சாட்சிக் கையெழுத்தை பொறிப்பாரகள்" என்று கூறிமுடித்தான்.

ஆபுத்திரன் ஏதோ சொல்ல முற்பட்ட போது ஒற்றை முரசொன்று பெரிதாக ஒலித்தது. அதையடுத்து வெண்ணிறப் புரவியில் மனிதன் ஒருவன் அப்பெருவெளியில் பிரவேசித்து "பங்களா, நிறுத்து உன் காரியங்களை." என்று பெரும் குரலில் தெரிவித்தான்.

தான் திட்டமிட்டு அழைத்த மனிதன் சொன்னபடி சரியான நேரத்தில் வந்து விட்டதைக் கண்டு திருப்தியடைந்த



சௌமியகுமாரி தன் விழிகளாலே அச்செய்தியை ஆபுத்திரனுக்கு அறிவித்தாள்.

இதற்கிடையில் அங்கே பிரவேசித்த மனிதனைச் சற்றும் சகிக்காத பங்களன் "யார் நீ? இங்கு வருவதற்கு உனக்கு யார் அனுமதி கொடுத்தது?" என்று எழுந்து நின்று சீறினான்.

"நீ என்னை அழைக்காமல் விட்டதால் தான் நானே வந்திருக்கிறேன்" என்றான் அந்த மனிதன் துணிச்சலுடன்.

"உன்னை அழைக்க வேண்டுமா? உனக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? எனது ஆட்கள் உன்னை வெட்டித் துண்டாக்குவதற்கு முன் மேற்கொண்டு பேசாமல் வந்த வேகத்திலேயே ஓடி விடு. என் சீற்றத்திற்கு ஆளாகாதே" என்று சத்தமிட்ட பங்களன் நிதானத்தை அறவே இழந்து தன் குறுவாளை எடுத்து அந்த மனிதனின் மீது வீசியும் விட்டான்.

ஆனால் அந்த மனிதனும் உஷாரானவனாக இருக்க வேண்டும். பங்களனிடமிருந்து இப்படிப்பட்ட துர்ச்செயலை எதிர் பார்த்திருந்த அவன் குறுவாள் வரும் போதே மின்னல் வேகத்தில் சாய்ந்து கொண்டானாதலால் குறுவாள் அவனைத் தாண்டிப் போய் மண்ணில் விழுந்தது.

பங்களனைப் போல நிதானத்தைக் கைவிடாத அந்த மனிதன் "என்னை அற்பமாக எடை போடாதே பங்களா. என்னை வெட்டிப் போட முயன்றால் அதே நிமிடத்தில் இங்கே ஆயிரக் கணக்கான உடல்கள் வெட்டப் பட்டு விழும். தனியாக வந்து உன்னிடம் தலையைக் கொடுக்க நான் ஒன்றும் முட்டாள் அல்ல. நான் என் படைகளுடன் தான் வந்திருக்கிறேன். வீரர்கள் உன் கோட்டையை வளைத்து நிற்கிறார்கள்.

திணைவிருந்தூட்டும்" என்று எச்சரிக்கை விடுத்தான்.

இதைக் கேட்டதும சௌமியகுமாரியே முதலில் அதிர்ச்சியடைந்தாள். "இவரிடம் படையெடுத்து வரும் படிச் சொல்லவில்லையே! எதற்காகப் படைகளோடு வந்திருக்கிறார்? இவரது நோக்கம் என்னவாக இருக்கும்?" என்று எண்ணத் தொடங்கினாள்.

இந்த நிலையில் ஏதோ கூற முற்பட்டான் ஆபுத்திரன். பங்களனோ அதைக் கவனிக்காமல் தன்னை எச்சரித்த மனிதனிடம் "யார் நீ?" என்று கேட்டான்.

"மூஷிக நாட்டு மன்னன். மூஷிகன்" என்றான் அந்த மனிதன்.

"மூஷிக நாடா? எலிகளுக்கென்று ஒரு நாடா? அதற்கு நீ மன்னனா? உளறாதே பைத்தியக்காரனே" என்றான் பங்களன் வெறுப்போடு.

"ஒன்றும் தெரியாதது போல் வேஷம் போடாதே பங்களா. மூஷிக நாடு பற்றி உனக்கு ஒன்றுமே தெரியாதா? கடம்ப நாட்டிலிருந்து குடிபெயர்ந்த பலர் நீண்ட காலத்திற்கு முன்பாகவே துளுநாட்டின் தெற்கே இருந்த எழில்மலைக்கு வந்து குடியேறினார்கள். பலகாலம் வரை எழில்மலை அதே பெயரிலேயே பல நாட்டினராலும் வழங்கப் பட்டு வந்தது. எழில் என்பது ஒரு இசைக் கருவியின் பெயர். அந்த இசைக் கருவியின் உருவத்தைப் போலவே அமைந்திருந்த காரணத்தால் இந்த மலை எழில்மலை என்று அழைக்கப் பட்டது. இங்கு பிற்காலத்தில் வந்தவர்களும், கேள்விப் பட்டவர்களும் - முக்கியமாக வடநாட்டவர்கள் - எழில் மலையை எலி மலை என்று அழைக்கலானார்கள். எலி என்ற வார்த்தைக்கு



வடமொழியில் மூஷிகம் என்ற சொல் வழங்கப் பட்டதால் இம்மலை மூஷிக மலை என்றும் இதையொட்டிய நாடு மூஷிக நாடு என்றும் இதை ஆண்டவர்கள் மூஷிக வம்சத்தவர்கள் என்று தவறாக அடையாளம் காட்டி விட்டுப் போனார்கள்.* தவறான அடையாளத்தை நீக்க இது வரை ஒருவரும் முன்வரவில்லை. ஆகவே அது தொடர்கிறது. இதெல்லாம் உனக்குத் தெரியாதென்று என்னை நம்பச் சொல்கிறாயா! உன் பங்காளிகளுக்குத் தெரியாது என்று உன்னால சொல்ல முடியுமா? அனைத்து பங்காளிகளையும் விருந்திற்கும் விழாவிற்கும் அழைத்த நீ என்னை ஏன் அழைக்கவில்லை? ஒரு வகையில பார்த்தால் சௌமியகுமாரிக்கு நான் முறைமாமன் ஆக வேண்டும். அவளை மணந்து கொள்ளும் உரிமை எனக்குத் தான் உண்டு. இந்த உண்மையை முழுமையாக மறைத்து விட்டு, எவனோ ஒரு சேர நாட்டுக்காரனை அழைத்து வந்து, அவனுக்குப் போய் பதவியை அளித்து சௌமியகுமாரியை மணம் செய்விக்கவும் முயலகிறாயே இது என்ன அயோக்கியத்தனம்? இதோ பார் பங்களா! உன் விருந்தாளிகளைப் போல் இந்த சேரநாட்டு வாலிபனோடு சண்டையிட சோணழகன் யாரையும் அனுப்பவில்லை. நானே நேரில் வந்திருக்கிறேன். சண்டைக்கு அனுப்பு அவனை. அவன் மண்டையை உடைத்து விட்டு அரசகுமாரியின் கரம பிடிக்கிறேன் நான்".

---

* பக்கம் 73 'பண்டைய சேர மன்னர் வரலாறு' ஔவை துரைசாமிப் பிள்ளை.
வியாசரது பாரதத்தில் கூட மூஷிக நாட்டைப் பற்றி குறிப்பிடுவதாக மேற்கண்ட வரலாற்று ஆசிரியர் கூறியுள்ளார்.
"திராவிடா கேரளா ப்ராச்யா மூஷிகாவானவாசிகா"






மூஷிக நாட்டு மன்னன் என்று சொல்லிக் கொண்ட மூஷிகன் என்ற மனிதன் இவ்வாறு பேசி நிறுத்திய போது செளமியகுமாரியே முதலில் அதிர்ச்சியடைந்தாள். மூஷிகன் தன் படைகளோடு வந்திருப்பதாகச் சொன்னது, தனது மாமன் என்று கூறிக் கொண்டது, ஆபுத்திரனை சபையில் வென்று தன்னைத் திருமணம் செய்து கொள்வதாகச் சவாலிட்டது அனைத்தும் தனது திட்டத்தில் இல்லாத எதிர் பாராத விஷயங்கள் என்பதை அறிந்த போது 'இதென்ன விபரீதம்' என்று செய்வதறியாமல் தவித்தாள்.

இந்த எதிர்பாராத நிலை பங்கனுக்கும் அதிர்ச்சியாகத் தான் இருந்தது. அவனைப் பற்றி நன்கு அறிந்திருந்ததாலும் அவனை அழைத்தால தன் இஷ்டம் போல் வளைக்க முடியாது என்பதால் தான் அவனை அழைக்காமல் இருந்தான் பங்கனன். மூஷிகனோ அழைக்காத விருந்தாளியாக வந்து எல்லா விஷயங்களையும் போட்டு உடைத்துத் தனது திட்டங்களையும் கனவுகளையும் தகர்த்து விடுவது போலத் தோன்றவே என்ன செய்வது என்று யோசித்தான்.

சிறிது நேரம் கழித்து "மூஷிகா, இந்த விழா சேரநாட்டு மாவீரருக்கு பாராட்டு தெரிவிக்கவே ஏற்பாடு செய்யப் பட்டது. இதற்கு யார் யாரை அழைக்க வேண்டும் என்று விரும்பினேனோ அவர்களையெல்லாம் அழைத்து விட்டேன். அழைக்கப் படாத உனக்கு இங்கு நடக்கும் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவோ அதைப் பற்றிப் பேசவோ உரிமையில்லை. ஆகவே போய் விடு" - என்றான்.

"பங்கனா, இது வெறும் பாராட்டு விழா என்கிறாய். பாராட்டு விழாவில் உன் மகனை அவனுக்கு மணம்

முடிப்பதாகச் சொல்கிறாயே அது என்ன விஷயம்?" என்று கேட்டான் மூஷிகன் மூர்க்கமாக.

"அது என் விருப்பம்."

"பங்களா, இந்த விழாவில் கலந்து கொள்ளும் சகல உரிமையும் எனக்குண்டு."

"உரிமையா? எப்படி?"

"என்னை இந்த விழாவிற்கு வந்து பங்கேற்கும் படி நேரில் வந்து அழைத்தது யார் தெரியுமா?"

"யார்?"

"உன் மகள்."

"சௌமிய குமாரியா?"

"ஆம்."

"இருக்காது. இது பொய்."

"அவள் மேடையில் தானே இருக்கிறாள்? கேட்டுப் பார்."

பங்களன் மகா கோபத்துடன் சௌமியகுமாரியை நோக்கி "இது உண்மையா?" என்று கத்தினான்.

அவள் தலையைக் குனிந்து கொண்டான்.

அதைக் கண்டு கோபம் தலைக்கேறிய அவன் தன் மகளை வெட்டத் துணிந்த போது அதைத் தடுத்த ஆபுத்திரன் "பிரச்சனைக்கு முடிவு இதுவல்ல பங்களரே. ஆரம்பத்திலிருந்தே தவறான அனுமானங்களின் பேரில் காரியம் செய்கிறீர்கள். இருமுறை நான் பேசமுற்பட்டேன்.



நீங்களோ கவனிக்காமல் ஏதேதோ பேசிக் கொண்டே போகிறீர்கள். பிறகு பேசுகிறேன் அதைப் பற்றி. இப்போது என் கடமை அந்த மூர்க்கத்தனம் மிகுந்த மூஷிகனோடு போரிடுவது தான். போரின் முடிவிற்குப் பிறகு மற்றதைப் பார்க்கலாம்." என்று கூறி விட்டு பெருவாளை உருவிக் கொண்டு பாய்ந்தான். கூடியிருந்த மக்கள் மீண்டும் உற்சாகம் கொண்டு ஆரவாரம் செய்தார்கள். மூஷிகனும் புரவியை விட்டு இறங்கி ஆக்ரோஷத்துடன் முன்னேறி வந்தான்.

அது வரையில் நடந்த வாட்போரைப் போல் அல்லாமல் மூஷிகனுடன் நடத்திய போர் உண்மையானதாகவும் உக்கிரமானதாகவும் இருந்தது. மூஷிகன் தானொரு அரசன் என்பதையும் வாட்போரில் சிறந்தவன் என்பதையும் போர் தொடங்கிய கொஞ்ச நேரத்திலேயே நிரூபித்தான். நீண்ட வாளும் அழுத்தமான கைப்பிடியும் கொண்டிருந்ததால் வாளை நிர்ப்பயமாக வீசியும் சுழற்றியும் ஆபுத்திரனைச் சற்றே திணறடித்தான். ஆபுத்திரனின் வாள் கனமானதாகவும் உயரம் சற்றே குறைவானதாகவும் இருந்ததால் மூஷிகனின் உடலில் வாளைப் பாய்ச்சவோ காயத்தை உண்டாக்கவோ முடியவில்லை. மாறாக மூஷிகனின் நீண்ட வாள் ஆபுத்திரனின் உடலில் ஆங்காங்கே லேசாகக் கீறியது. வாள் வித்தியாசத்தை வைத்துக் கொண்டு தான் பின்னடைவது போல் தோன்றியதால், அதற்கு மேன்மேலும் இடம் தருவது ஆபத்து என்பதை உணர்ந்த ஆபுத்திரன் ஓரிடமாக நில்லாமலும் ஒரே நிலையில் போரிடாமலும் நின்றும் குனிந்தும் விலகியும் சுற்றியும் பாய்ந்தும் போரிட்டதால் மூஷிகன் அவனோடு போரிடுவது கஷ்டமாக இருந்தது. அதே சமயம் நீண்ட நேரமாக பங்களனது உறவினர்களது வீரர்களோடு

போரிட்டதாலும், அதுபோது ஓரிடமாய நிற்காமல் அலைக்கழிக்கும் போரைச் செய்ததாலும் ஆபுத்திரன் சற்று சோர்வடைந்த நேரத்தில், மூஷிகனின் பின்னால் தோன்றிய அவனது வீரனொருவன் திடீரெனத் தன் குறுவாளை எடுத்து ஆபுத்திரனின் இடையில் வீசிவிட, அது சரியாக இடுப்பில் தைத்து விட்டதால், ஏற்கனவே சோர்வடைந்திருந்த ஆபுத்திரன் தடுமாறி வீழ்ந்தான்.

அதைக் கண்டதுமே மக்கள் கூட்டம் வாயடைத்துப் போய் நிற்க, மூஷிகன் வெற்றிக் கூச்சலிட்ட படி மேடையை நோக்கி ஓடி சௌமியகுமாரியின் கையைப் பிடித்து இழுத்துத் தன் வாளை பங்களனின் மார்பில் ஊன்றியபடி "பங்களா, உன் சட்டப்படியே போரில் ஆபுத்திரனை வீழ்த்தி வென்று விட்டேன். எனவே அவனுக்கு அளிக்கவிருந்த பதவியை எனக்கு மாற்றி எழுதச் சொல். இவளை மூஷிக நாட்டிற்கு கொண்டு போய் காந்தர்வ மணம் செயது கொள்கிறேன்" என்று அலட்சியமும் அகங்காரமும் நிறைந்த குரலில் கூறினான்.

அப்போது பங்களனின் பங்காளிகள் அனைவரும் அங்கே வந்தனர்.

"மூஷிகா, நீ நடத்தியது போரல்ல வஞ்சகம். வாட்போர் நடக்கும்போது பின்னால் இருந்த படி உனது வீரன் குறுவாளை வீசுவது போரல்ல. பேடித்தனம். இதை நாங்கள் ஒப்புக் கொள்ள முடியாது" என்று ஒரே குரலில் சொன்னார்கள்.

"கொள்ளைக்காரன் இட்ட விருந்து உங்களை பேச வைத்திருக்கிறதா? வாளைத தூக்கவும் தைரியமில்லாத கோழைகளை அனுப்பி வைத்த மகா கோழைகளே!



உங்களுக்கெல்லாம் பேச்சு ஒரு கேடா? உங்களை ஒப்புதல் யாருக்கு வேண்டும்? உங்கள் பதவி கூட எனக்கு வேண்டியதில்லை. இப்பங்களனை இங்கேயே கொன்று விட்டு இவளைத் தூக்கிச் செல்லப் போகிறேன். மரியாதையாக எல்லோரும் வாட்களைப் போட்டு விட்டு ஓரமாகப் போய் நில்லுங்கள். இல்லையென்றால் தந்தையும் மகளும் இங்கேயே இறப்பார்கள். எனது படைகள் உள்ளே நுழைந்து அனைவரையும் வெட்டி எறிவார்கள். பங்களனே! என்ன வாய் மூடி ஜபம் செய்கிறாய்? வாயைத் திறந்து சொல். இந்த (சோற்றுப்) பிண்டங்களையும் உபதலைவர்களையும் வாட்களை அகற்றி விட்டு ஓரமாகப் போய் நிற்கச் சொல்" என்று எச்சரித்ததும் பங்களன் கூறாமலேயே அனைத்தும் நடந்தன.

அச்சமயத்தில் சௌமியகுமாரி பேசமுற்பட்டு "மூஷிக நாட்டு மன்னரே, தாங்கள் செய்வது உங்களுக்கே நன்றாக இருக்கிறதா? நான் உங்களிடம் வந்து என் நிலையைக் கூறி தந்தையின் திட்டங்களைச் சொல்லி உதவி தானே கேட்டேன்? நீங்கள் நேர் மாறாகச் செய்கிறீர்களே, இது எந்த தர்மத்தில் சேரும்?" என்று கேட்டாள்.

"தர்மமா? அப்படியென்றால் என்ன? அதைப் பற்றி உங்களுக்கெல்லாம் தெரியுமா? உன் தந்தை தர்மவானா? அவன் அதர்மன் என்று நீ தானே சொல்லி என்னை அழைத்தாய்? தந்தைக்கு எதிராக சதி செய்ய என்னை வந்து அழைத்ததற்குப் (பெயர்) தர்மமா? அதர்மமே வாழ்க்கையாகக் கொண்ட உங்களுக்கெல்லாம் தர்மத்தைப பற்றிப் பேச அருகதையில்லை" என்றான் மூஷிகன்.

"எங்களை விடுங்கள். நாங்கள் அதர்மர்களாகவே இருக்கட்டும். சேர மாவீரர் உங்களிடம் தர்ம முறையில் தானே போரிட்டார்? போரிட்டுக் கொண்டிருக்கும் போது குறுவாளை வீசுவது எந்த விதத்தில் நியாயம்?" கேட்டாள் சௌமியகுமாரி.

"நியாய அநியாயங்களைப் போரின் போது பார்த்துக் கொண்டிருக்க முடியாது. அப்படிப் பார்த்திருந்தால் பீஷ்மரையும், துரோணரையும், கர்ணவீரனையும், துரியோதனனையும் வீழ்த்தியிருக்க முடியுமா பாண்டவர்களால்? மன்னர் பரம்பரையில் வந்த உன் தந்தை கொள்ளைக் காரனாக மாறினான். அரபிக் கடலில் வந்த வணிகர்களது கலங்களையும் பிறரது கலங்களையும் தாக்கினான். ஒன்றுமறியாத அப்பாவிகளைக் கொன்றான். பெண்களைக் கற்பழித்தான். மானுமிகளை அடிமைகளாக விற்றான். மரக்கலங்களில் இருந்தவற்றையெல்லாம் கொள்ளையடித்தான். இதெல்லாம் நியாயமா?" என்று கேட்டான் மூஷிகன்.

இதற்கு யாராலும் பதில் கூற முடியவில்லை. அதற்கு மேல் பேச அவசியமில்லாத நிலையில் சௌமியகுமாரியின் கழுத்தை வளைத்து அவளது மார்பில் குறுவாளை ஊன்றியபடி "யாரும் அசையாதீர்கள். ஒருவர் அசைந்தாலும் இவள் கந்தர்வ உலகை அடைவாள்" என்று கூறியபடி அவளோடு மேடையை விட்டு இறங்கினான். அங்கிருந்த தீவு மக்கள் செய்வதறியாமல் திகைத்தார்கள். சௌமியகுமாரி கதறினாள். அவளது கதறலொலி பெருவெளியையே அசைத்த போது அதில் வீழ்ந்து கிடந்த ஆபுத்திரனுக்குக் கேட்காமல் இருக்குமா? அவனது இதயத்திற்குள் பாய்ந்த கதறல் ஒலி அவனைச் சிலிர்க்க



வைத்தது. உறங்கிக் கிடந்த வேங்கை சீறி எழுந்தாற் போல எழுந்து நின்றான். அவனது இடையில் மூஷிகன் ஏலவே எறிந்த குறுவாள் அப்படியே இருந்தது. அப்படிப்பட்ட நிலையில் சிலிர்த்தெழுந்த ஆபுத்திரனைக் கண்டதும் அடுத்து என்னாகுமோ என்று அச்சத்தில் அனைவரும் கவனித்தார்கள்.

"மூஷிகா, நில்" என்று குரல் கொடுத்து விட்டு அவனை நோக்கிச் சென்றான் சேரநாட்டு வாலிபன்.

சற்றும் எதிர்பாராத இந்தத் திருப்பத்தைக் கண்டு லேசான ஏமாற்றமடைந்த மூஷிகன் சற்றே நின்று "என்ன ஆபுத்திரா, உன்னை உயிரோடு விட்டது தவறு போலிருக்கிறது. வா, முதலில் களப் பலியாக உன்னை அனுப்பி வைக்கிறேன்" என்றான்.

அவனது கேலியைப் பொருட்படுத்தாத ஆபுத்திரன் "முதலில் அவள் மேலேயிருந்து உன் கையை எடு" என்றான் சீரான குரலில்.

"எடுக்கவில்லையென்றால் என்ன செய்வாய்?" என்று அவன் சொல்லி முடித்த வினாடியிலேயே அந்த விபரீதம் நடந்து விட்டது.

"செய்வதைச் சொல்ல மாட்டேன்" என்று கூறி விட்டு அதே நேரத்தில் தனது வாளை மூஷிகனின் கழுத்தை நோக்கி வீசினான். வாளின் கனமும் அதை ஆபுத்திரன் தனது பலத்தையெல்லாம் பயன்படுத்தியதுமாகச் சேர்ந்து, இமைப் பொழுதில் அந்த வாள் மூஷிகனின் தலையை வெட்டிச் சாய்த்தது. தலைகீழே விழுந்து துடித்தது. சில நொடிகளில் மண்ணில் செருகி நின்றது. விரிந்த கண்கள் வானத்தைப் பார்த்தன. தலையற்ற உடலும் சாய்ந்தது. அந்த கோரத்தைக்

கண்டு சகிக்காமல் வீறிட்டாள் செண்பககுமாரி. மயங்கியும் விழுந்தாள். அதே சமயம் பங்களனும் மற்றவர்களும் அங்கே வந்தார்கள். ராவணனை அழைத்த ஆபுத்திரன் "ராவணா, மூஷிகன் மாண்ட செய்தி எட்டுவதற்குள் கோட்டைக் காவர்கள் மூலம் விஷப்புகையைப் பாய்ச்சு. கோட்டையைச் சுற்றி நிற்கும் மூஷிக நாட்டுப் படைகள் சாகட்டும் அல்லது ஓடட்டும் அல்லது மயக்கமடையட்டும். சீக்கிரம். சீக்கிரம்" - என்றான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும் போதே இடையில் ரத்த கசிவு ஏற்படவே ஆபுத்திரனைத் தாங்கிக் கொண்ட பங்களன் "ம்... வைத்தியரை வரச் சொல். என் மாளிகைக்குத் தூக்கிச் செல்லுங்கள் இவரை" என்று உரத்த குரலில் கூச்சலிட்டான்.



**ப**ங்களனைப் பொறுத்தவரை அந்த நாள் மறக்கமுடியாத நாளாயிற்று. பற்பல திருப்பங்களை ஏற்படுத்திய அந்த நாளை மிகவும் போற்றினான் அவன். மூஷிகன் மாண்டு போன கொஞ்ச நேரத்திலேயே கொள்ளையர் உபதலைவர்களும் மற்றவர்களும் வேகமாகச் செயல்பட்டதில் வெள்ளைத் தீவுக் கோட்டையை முற்றுகையிட்டிருந்த மூஷிக நாடுப் படைகள் எதிர்பாராத விஷவாயுத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பலர் மாண்டார்கள். பலர் மயக்கமடைந்தார்கள். பலர் தட்டுத் தடுமாறி கரையை நோக்கி ஓடினார்கள். ஒரு சிலர் தவறிப் போய் கோட்டைக்கு முன்னாலிருந்த அகழியில் விழுந்து விட்டதால், எதிர் பாராமல் தங்களுக்குக் கிடைத்த உணவைக்



கண்ட முதலைகள் போட்டி போட்டுக் கொண்டு உடல்களைக் கவ்வி பற்களால் கறகறவெனக் கடித்து விழுங்கின. ஏறக்குறைய ஒரு நாழிகைப் பொழுதில மூஷிகனின் படை இருந்த இடம் தெரியாமல் சிதறி விட்டதாகவும், மயக்க மடைந்து விழுந்தவர்களை சிறை பிடித்து விட்டதாகவும் உபதலைவர்கள் செய்தி கூறிய போது, கனவில் மிதப்பது போல் இருந்தது பங்களனுக்கு. அனைத்தும் ஓய்ந்து நள்ளிரவு நேரமானதும் கண்டாமணி பெரிதாக ஒலித்த போது, அந்த ஒலி என்றுமில்லாத பயங்கர ஒலியாக இருந்தது. தீவு மக்கள் அச்சம் பாதியும் ஆனந்தம் பாதியுமாய் நள்ளிரவுப் பொழுதில் தங்கள் இருப்பிடங்களுக்கு ஆடிப்பாடிச் சென்ற விதமானது பயங்கரத்திற்கிடையே தென்றல் வீசியது போல் இருந்தது.

இதற்கிடையில் தனது மாளிகையில் வைத்தியர்களின் சிகிச்சையில் இருந்த ஆபுத்திரனைப் போய் பார்த்தான் பங்களன்.

தலைமை வைத்தியரை அழைத்து "என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"வைத்தியம் செய்கிறோம்" என்றார் வைத்தியர், இவன் ஏன் இப்படிக் கேட்கிறான் என்று புரியாமல்.

அவனோ "அது தெரிகிறது. உருப்படியாக சிகிச்சை செய்கிறீர்களா? என்று கேட்டேன்" என்றான்.

"ஒருகவலையும் வேண்டாம். இவரது உயிருக்கு ஆபத்தில்லை"

"அதுவும் தெரியும். தானை மாளிகைக்குள் காயத்தின் வடுவே தெரியக் கூடாது. இவர் சகஜமாக எழுந்து நடக்க வேண்டும். தெரிகிறதா?"

"எங்களால் முடிந்த அனைத்து சிகிச்சைகளையும் செய்கிறோம்."

"முடியாததையும் செய்ய வேண்டும். இல்லையென்றால் உங்கள் தலைகளெல்லாம் சீவப்பட்டு அகழியில் உள்ள முதலைகளுக்கு வீசப்படும்" என்று வார்த்தைகளை பயங்கரமாக வீசிவிட்டுச் சென்றான்.

அவனது கால்கள் அவனையும் அறியாமல் சுகவனத்தை நோக்கிச் சென்றன.







## அத்தியாயம் ஒன்பது



# மரக்கலமர்மம்

**வ**ருவான் என்று காத்திருந்த பங்களன் நள்ளிரவு தாண்டி விட்ட நிலையில் தன் இருப்பிடத்திற்கு வந்ததைக் கண்ட பவானி, பெரும் விரகதாபத்தில இருந்தானாதலால், அவன் உள்ளே நுழைந்ததுமே கைகளைப் பிடித்து உள்ளறைக்கு அழைத்துச் சென்று அவனது உடைகளைக் களைய முற்பட்டான். என்றுமில்லாத அவனது செய்கைகளையும் வேகத்தையும் கண்ட பங்களன் உள்ளுக்குள் ஆனந்தமே அடைந்தாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல் "என்ன இத்தனை அவசரம் பவானி? நான் தான் வந்து விட்டேனே?" என்று கேட்டான்.

"இப்போது நேரம் என்ன தெரியுமா? உலகத்தொடங்கி பேய்கள் கூட ஓய்வெடுக்கப் போகும் நேரம். இவ்வளவு காலம் கடந்து வந்தால் எப்படி? எத்தனை நேரத்திற்குத் தான் காத்திருப்பது" கிறக்கத்துடன் கேட்டாள் அவள்.

"இதென்ன இப்படிச் சொல்கிறாய்? நாமென்ன ஆறு மாதங்களுக்கு ஒருமுறையா சந்திக்கிறோம்? நேற்று கூடத் தானே வந்து போனேன்?"

"அதுவும் ஒரு காரணம் தான்."

"நேற்று வந்தும் கூடவா இன்று இவ்வளவு அவசரம் வேகம்?"

"உங்களுக்குப் பெண்களைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை?"

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?"

"நீங்கள் என்றைக்காவது பெண்களின் மனதை அறிய முயற்சித்தீர்களா?"

"இல்லை என்கிறாயா?"

"ஆமாம். கொள்ளைக்காரர்களாகிய நீங்கள் கொள்ளையடிக்கும் கலங்களில் இருக்கும் பெண்களைப் பார்க்கிறீர்கள். அவ்வளவு தான். அவர்களிடம் பேசுகிறீர்களா அவர்கள் என்ன நிலையில் இருக்கிறார்கள் என்றோ என்ன எதிர்பார்க்கிறார்கள் என்றோ அறிய முற்படுகிறீர்களா கவலைப் படுகிறீர்களா? பார்த்ததும் வெறி. மிருக வெறி. பிறகு உங்கள் இச்சை பூர்த்தியாகி விடுகிறது. அவ்வளவு தானே."

பவானியின் இப்பேச்சைக் கேட்டு சிரித்து பங்களை



"இதென்ன பைத்தியக்காரத்தனமான பேச்சு? கொள்ளையின் போது நானும் இதர கொள்ளைக் காரர்களும் எத்தனையோ பெண்களைப் பார்க்கிறோம். அந்த சமயங்களில் யார் யோசனை செய்து கொண்டிருப்பார்கள்? நீ சொல்வது போல பெண்களின் மனதை அறிந்து கொண்டிருக்க ஒவ்வொருவனும் முயன்றால் வேறு காரியம் எதுவும் நடக்காது. அதோடு மனதை அறிந்து நடந்து கொள்ள அப்பெண்களைக் கொள்ளைக் காரர்கள் திருமணமா செய்து கொள்கிறார்கள்? நிலத்தில் நடந்து கொள்வது போல் நீரில் நடந்து கொள்ள முடியாது. அதற்குக் காரணம் பெரும் பாலான கடல் கொள்ளைக் காரர்களுக்கு கடலும் கப்பலும் தான் இருப்பிடமாக இருக்கும். இப்படி நிச்சயமற்ற இருப்பிடத்தைக் கொண்ட அவர்கள் பெண்களைக் கண்டதும் அனுபவிக்கத் தான் செய்வார்களே தவிர அவர்களின் மனதை அறிய முயல மாட்டார்கள்" என்றான்.

"இத்தனைக் கதை இப்போது தேவைதானா? நாமிங்கே கடலிலா இருக்கிறோம்? இருப்பிடம் இல்லாமலா தவிக்கிறோம்? எனக்கென்று தனி மாளிகையை கோட்டைக்குள் கட்டியிருக்கும் தாங்கள் என்னிடம் போய் கடல் சட்டங்களைப் பேசி வருத்துகிறீர்களே! நான் சொல்ல வந்ததே வேறு"

"என்ன சொல்ல வந்தாய்?"

"நீங்கள் ஒவ்வொரு முறை என்னிடம் வரும் போதெல்லாம் புதுமைகளைக் காட்டி அசத்தி விடுகிறீர்கள். அதை எண்ணும் போது எனக்கு எவ்வளவு ஏக்கமாக இருக்கிறது தெரியுமா? எப்போது வருவீர்கள் எப்போது வருவீர்கள் என்று தாபத்துடன் தவித்துக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் என் மனமும் உடலும் படும பாட்டை அறியாமல் இவ்வளவு நேரம் கழித்து வருகிறீர்கள். வேண்டாத கதை பேசாதீர்கள்"

"பூ. இவ்வளவு தானா? இதற்குத் தானா இவ்வளவு கோபம்? உன் மனதை இன்றுச் சரியாகப் புரிந்து கொண்டேன். விடியும் வரையில் உன் சொற்படி கேட்கிறேன். போதுமா?" என்று கூறிய பங்களன் அவளது அங்கங்களின் மீது ஒரு பார்வையை ஓட்டினான். அவனது கண்கள் ஓடிய விதத்தைக் கண்டு "என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்! பார்த்த அங்கங்கள் தானே?" என்று மயக்கப் பார்வையுடன் கேட்டாள் பவானி.

அவள் அப்போது மிகவும் எளிமையான ஆடையை அணிந்து கொண்டு கழுத்தில் மட்டும் கனமான தங்கமாலையை போட்டுக் கொண்டிருந்தாள். சிங்களப் பெண் சாயலுடன் எளிமையாக அவள் இருந்த விதமே பங்களனின் கழுகுப் பார்வையில் அபாரமாகத் தெரிந்தது.

அவளது அங்கங்களின் மீது தனது கையை ஓட்டிய பங்களன் "இது ஒன்று தான் தினம் தினம் புதுமையாகவும் புதியதாகவும் இருக்கும். எத்தனை முறை பார்த்தாலும் புதிதாகவே தோன்றக் கூடியவை தான் இந்த அங்கங்கள்" என்றான் உன்மத்தம் கொண்ட நிலையில்.

"இவையெல்லாம் உங்களுக்குப் புளிக்காதா?" என்று மயக்கும் குரலில் கேட்டாள் மஞ்சத்தில் உருண்ட படி.

அவள் உருண்டதால் அங்கங்கள் புரண்டதைக் கண்ட பங்களன், "புளிக்கவே புளிக்காது. என்றும் இனிக்கும்" என்று





பவானி

கூறி மேற்கொண்டு பேச்சிற்கு இடமளிக்காத வகையில் அவளது வாயை மூடினான் தனது முரட்டு இதழ்களால்.

அவளும் சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது என்ற முடிவுடன் தன்னை அழுத்திய அவனது உதடுகளைக் கடித்தாள். கைகளால் அவனது உடலை அழுத்தினாள். அழுத்தியபடியே புரண்டாள்.

தனது காரியங்களை அவள் செய்வதைக் கண்ட அவனுக்கு அவளது தேவையைப் புரிய வைத்தது. அவள் எதிர் பார்ப்பது மிக அதிகம் என்பதை உணர்ந்த அவன், அவளது எதிர்பார்ப்பை விட அதிகமாகவே அவளைத் திருப்தியடையச் செய்தான். பொழுது புலர்ந்தது கூடத் தெரியாத நிலையில் பூரணமாகக் காமத்தில் இருவருமே தங்களை இழந்து விட்டிருந்தார்கள்.

காமத்திற்கு விடிவு வந்த போது "கொஞ்ச நாட்களாக வெள்ளைத் தீவு அமர்க்களப் பட்டுக் கொண்டிருக்கிறதே என்ன நடக்கிறது இங்கே? சுக வனத்தை விட்டு வெளியே வரக் கூடாது என்று என்னைச் சொல்லி விட்டீர்களாதலால நானும் வெளியே வரமுடியவில்லை. இங்கே வரும் பணிப் பெண்களும் அரைகுறையாகத் தான் சொல்கிறார்கள். பிரதி தினம் வரும் நீங்களும் எதையும் சொன்னதில்லை" என்று பிறங்கிய குரலிலும் கலங்கிய காமத்திலும் கேட்டாள் பவானி.

"நானே உனக்குச் சொல்லியிருக்க வேண்டும். இப்போது நீயாகவே கேட்டதும் நல்லதாகப் போய் விட்டது. பவானி, சில நாட்களுக்கு முன்னால் அராபியர் கொள்ளைக் கலங்கள் நம்மைத் தாக்க விருந்தன. அது மட்டும் நடந்திருந்தால் இந்த வெள்ளைத் தீவு நாசமாகிப் போயிருக்கும். கோட்டை



குலைபாடப் பட்டு சேதமாகி விட்டிருக்கும். நீயும் யாரிடமாவது சிக்கிச் சிதிலமாகி மீன்களுக்கு இரையாகியிருப்பாய். இப்பெரும் அவலத்திலிருந்து நம்மைக் காப்பாற்றினான் ஒரு மாவீரன். அவனுக்கு நன்றி தெரிவித்துப் பாராட்டவும் பரிசளிக்கவுமே இந்த அமர்க்களங்கள், கொண்டாட்டங்கள்." என்றான் பங்களன்.

"யாரந்த மாவீரர்?"

"சேரநாட்டைச் சேர்ந்தவர் தான். உனக்கும் தெரிந்திருக்கும்"

"யாரது?"

"ஆபுத்திரன்"

இந்தப் பெயரைக் கேட்டதுமே பவானியின் முகம் எரிமலையாய் மாறியதை பங்களன் கவனிக்கவில்லை. மாறாக அவளது வழவழுப்பான பளபளத்த தொடையை பார்த்து மயங்கி அதைக் கடித்தான். "ஆ என்ன இது?" என்று கேட்டு அவள் நெளிந்தாள். அவனது வாயோ தொடையோடு நில்லாமல் எங்கெங்கோ ஊர்ந்து கடித்தது.



நீண்ட நேரம் கழித்து அரண்மனைக்கு வந்த பங்களன், ஆபுத்திரன் இருந்த இடத்திற்குச் சென்றான். அங்கே அவனில்லாததால் வைத்தியரிடம "எங்கே அவர்?" என்று கேட்டான்.

"மேமேல தளத்தில் இருக்கிறார்."

"இரவெல்லாம் நன்றாகத் தூங்கினாரா?"

"நாங்கள் தான் தூங்கவில்லை."

"முட்டாளே, என்ன உளறுகிறாய்"

"நாங்கள் உறங்காமல் இருந்து அவரை நன்றாக உறங்க வைத்தோம்."

"உடல்நிலை எப்படி இருக்கிறது?"

"உடம்பெல்லாம் வலி. தலை பாரமாக இருக்கிறது."

"இந்த நிலையில் அவரை வைத்திருப்பதற்கு உனக்கு மிகவும் துணிவு வேண்டும்."

"நான் என் நிலையைச் சொன்னேன்."

"உன்னைப் பற்றி யார் கேட்டார்கள்?"

"சேரநாட்டு வாலிபர் சௌக்கியமாக இருக்கிறார். ஒரு குறையும் இல்லை."

"எதற்கும் நீ போய் உணவருந்தி விட்டு மீண்டும் இங்கு வா. அவர் இன்று முழுவதும் வைத்திய கண்காணிப்பிலேயே இருக்க வேண்டும்." என்று கூறி விட்டு பதிலுக்குக் காத்திராமல் மாளிகையின் மேல் தளத்திற்குச் சென்றான் பங்களன்.

அங்கே வெயில் வந்து விளையாடும் தாழ்வரையில் புத்தாடைகளைப் புனைந்து அரசகுமாரனைப் போல் நின்று கொண்டு சுற்றுப் புறத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான் வஞ்சிக் கோட்டை வாலிபனான ஆபுத்திரன்.

அவனது நிலையைக் கண்டு மகிழ்ச்சியடைந்த பங்களன் 'வணக்கம் மாவீரரே. உமது நிலை எனக்குப் பெரிதும்



திருப்தியை அளிக்கிறது. நேற்றிருந்த நிலையைக் கண்டு பெரிதும் பயந்து போய் விட்டேன் நான்." என்றான்

"எல்லாம் உங்கள் வைத்தியரின் கைவண்ணம் தான். அவருக்கு நன்றி. உங்களுக்கும் நன்றி" என்றான் ஆபுத்திரன்.

"வைத்தியன் அவனது தொழிலைச் செய்தான். இல்லையென்றால் அவனது தோலை உரித்திருப்பேன் நான். அதே போல் நானும் என் கடமையைத்தான் செய்தேன். இதில் நன்றிக்கு இடமில்லை" - என்று சொன்ன பங்களன் "நேற்றும் நீங்கள் தான் எங்கள் கௌரவத்தைக் காப்பாற்றியிருக்கிறீர்கள். இல்லையென்றால் ஏழவிகள் எங்களை என்ன வேண்டுமானாலும் செய்திருப்பான்." என்று பணிவோடு கூறிக் கொண்டான்.

அப்போது அங்கே உபதலைவர்கள் பிரவேசித்தார்கள். அவர்கள் கையில் இருந்த ஓலையை வாங்கி ஒருமுறை படித்த பங்களன் "வீரரே, நான் கூறிய படி ஓலையை எழுதி அதில் நானும் எனது அரசகுல விருந்தினர்களும் கையெழுத்திட்டிருக்கிறோம். இதை நீங்களும் படித்துப் பாருங்கள். தங்களுக்காக தங்க சிம்மாதனம் தயாராக இருக்கிறது. இன்றே நீங்கள் காவல் தெய்வமாகப் பதவி ஏற்க வேண்டும்." என்று கேட்டுக் கொண்டான்.

உபதலைவர்களும் அவ்வாறே கேட்டுக் கொண்டார்கள்.

ஆபுத்திரன் சங்கடத்துடன் அசைந்தான். "என்னைக் கொஞ்சம் பேசுவதற்கு அனுமதிக்கிறீர்களா? நேற்று மேடையில் கூட குறுக்கிட்டுப் பேச இருமுறை முயன்றேன். முடியவில்லை." என்றான்.

"அப்படியா? எங்களை மன்னித்து விடுங்கள். என்ன சொல்ல வேண்டுமோ சொல்லுங்கள்."

"முதலில் இந்த விழா, பாராட்டுவிஷயங்கள் எதிலும் எனக்குச் சம்மதமில்லை. நீங்கள் அளித்துள்ள பதவியில் அமர எனக்கு இஷ்டமில்லை. அப்பதவியை ஏற்க எனக்குத் தகுதியும் இல்லை."

"உங்களுக்குத் தகுதி இல்லையென்றால் வேறு யாருக்கு இருக்கிறது?"

"தகுதி என்று எதைச் சொல்கிறீர்கள்?"

"உங்களது அபார அறிவு, சாமர்த்தியம், துணிச்சல், சக்தி இவைகளைத் தான் சொல்கிறோம்."

"நான் இவற்றையெல்லாம் வெளிப்படுத்தவே இல்லை."

"இவ்வளவு அடக்கம் எதற்கு வாலிபரே? அனைத்திற்கும் சாட்சி இருக்கிறது. கண்ணால் கண்டவர்கள் இங்கே இருக்கிறார்கள்"

"நீங்கள் நினைப்பதெல்லாம் பொய்."-

"எது பொய்? மாபெரும் அராபியக் கொள்ளையர் கலங்களை திரும்பச் செய்தது பொய்யா?"

"திரும்பியது உண்மை தான். ஆனால் அவை அராபியர் கொள்ளை மரக்கலங்களல்ல."

"பின்? கிரேக்கர் கலங்களா? இருக்க முடியாது. அராபியனிடம் ரணதீரன் பேசிவிட்டு வந்திருக்கிறானே, அது பொய்யா?"



"பேசியது உண்மைதான். ஆனால் ரணதீரன் பேசியது அராபியனோடு அல்ல."

"இதென்ன புதிய கதை?"-

"உங்களுக்கு வேண்டுமானால் புதியதாக இருக்கலாம். எனக்கல்ல."

"என்ன குழப்பம் இது? ஆபுத்திரரே, சற்று விளங்குவது போல் சொல்லுங்கள்."

"பங்களரே, நாமெல்லாம் கண்டது அராபியர் மரக்கலங்களுமல்ல. நம்மை அவை தாக்கவும் வரவில்லை. நீங்களாகவே அப்படியெல்லாம் கற்பனை செய்து கொண்டு திணறி விட்டீர்கள். உண்மையில் அவை யாவும் சேரர் மரக்கலங்கள்."-

இதைக் கேட்டதும் பங்களன் உட்பட அனைவரும் ஸ்தம்பித்துப் போனார்கள். ஆபுத்திரன் கூறியதை நம்ப முடியவில்லை அவர்களால்.

பங்களனை பெரும் குழப்பமும் சந்தேகமும் சூழ்ந்து கொண்டன. பல விஷயங்கள் புரிந்த மாதிரியும் பல விஷயங்கள் புரியாத மாதிரியும் இருந்தன. சேரர் மரக்கலங்களாக இருந்ததால் தான் ஆபுத்திரனின் வார்த்தைகளைக் கேட்டதும் நம்மை நெருங்காமல் போய் விட்டனவா? ஏன் போக வேண்டும்? நம்மைத் தாக்கி அழித்திருக்கலாமே? அதை விட வேறு சந்தர்ப்பம் இருக்க முடியுமா? என்றெல்லாம் தனக்குள் கேட்டுக் கொண்டு தெளிவு பெறமுடியாமல் தவித்த பங்களன் ஆபுத்திரனின் மீது அதுவரை காட்டி வந்த மரியாதையைக் கைவிட்டு "ஆபுத்திரா,

என்னிடம் விளையாடுவது ஆபத்து!" என்று மிரட்டும் குரலில் சொன்னான்.

"இன்று வரை நான் விளையாடவில்லை என்பது அனைவருக்கும் தெரியும். ஆபத்தைக் கண்டு அஞ்சாதவன் ஆபுத்திரன் என்பதும் உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்க வேண்டும்" என்றான் ஆபுத்திரன் நிதானமாக.

"வந்தது சேர மரக்கலங்கள் என்று எப்படிக் கண்டு பிடித்தாய்? எங்கள் கண்களுக்குப் புலப்படாத சூட்சமம் எதை நீ பார்த்து விட்டாய்?"

"உங்களுக்கெல்லாம் இருக்கும் கண்கள் தான் எனக்கும் இருக்கின்றன. நீங்களெல்லாம் பார்த்த தொலை நோக்கு கண்ணாடியில் தான் நானும் பார்த்தேன்" அது மட்டுமல்ல அந்த மரக்கலங்களிடமிருந்து எழுந்த வித்தியாசமான ஒலியைக் கேட்டதுமே அவை சேரர் மரக்கலங்கள் தான் என்பது தெரிந்து விட்டது. அந்த ஒலி கடி கரடிகை ஒலி. கரடிகை என்பது சேரநாட்டிற்கு மட்டுமே உரிய ஒரு ஒலிக்கருவி. அதற்கும் கடற் கொள்ளைக்காரர்களுக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. நீங்களெல்லாம் தான் தவறாகப் புரிந்து கொண்டீர்கள். கரடிகை ஒலியை எழுப்பியதிலிருந்து அந்த மரக்கலங்கள் சேருடையது என்பது எனக்கு உறுதியாகி விட்டது. ஆனால் அந்த ஒலி ஏன் எழுப்பப்பட்டது என்பது எனக்குத் தெரியவில்லை"

இதைக் கேட்டு உறுமிய பங்களன், "தொலை நோக்கு கண்ணாடியில் நீண்ட நேரம் பார்த்தாயே. அதில் என்ன பார்த்தாய்?" என்று கேட்டான்.



"மரக்கலங்களின் பக்கங்களையும் பாய்மரத் தண்டுகளையும் பார்த்தேன். அவைகளெல்லாம் புதியவைகளாக இருந்தன. கொள்ளையர் கலங்களாக இருந்தால் பாசி பிடித்திருக்கும், நீண்ட காலமாக கடலில் ஓடிய காரணமாக. பல இடங்கள் சேதமாகி இருக்கும், தாக்குதலில் அடிபட்ட காரணத்தால். ஆனால் பெயருக்குக் கூட அந்த வடுக்களை அந்த மரக்கலங்களில் என்னால் காண முடியவில்லை. அதோடு கொள்ளையர் மரக்கலங்களாக இருந்தால் எடை குறைந்து நீளம் அதிகமாக இருக்கும். அப்போது தான் தப்பி ஓடும் வணிகர் மரக்கலங்களை வேகமாக ஓடித் துரத்திப் பிடிக்க முடியும். நீங்கள் வைத்திருக்கும் மரக்கலங்கள் கூட அப்படித் தான் இருந்தன. ஆனால் நான் பார்த்த மரக்கலங்களோ கர்ப்பிணி வகை கப்பல்களாக இருந்தன. இந்த வகை கப்பல்கள் எடை அதிகமாகவும் உயரம் அதிகமாகவும் நீளம் குறைவாகவும் இருக்கும். இத்தகைய கப்பல்கள் போர்ப்படையிலேயே அதிகமாக இருக்கும். எதிரிக்கப்பல்களோடு மோதுவதற்கும் சாய்ப்பதற்கும் அதிக எடையுள்ள கப்பல்களே ஏற்றவை. அதிகமான வீரர்களை ஏற்றிச் செல்லவும் போர்ப் பொறிகளை அமைக்கவும் தகுந்ததாக இருப்பது கர்ப்பிணி வகை மரக்கலங்கள் தான். நான் பார்த்த மரக்கலங்கள் பெரும்பான்மையான வற்றில் ஆட்கள் இருப்பது புலப்படவில்லை. எனவே இவை புதியதாக கட்டுமானம் செய்யப்பட்ட மரக்கலங்கள் என்றும், அநேகமாக கிரேக்க நாட்டில் வடிவமைக்கப்பட்டுச் சேரநாட்டிற்குச் செல்லும் மரக்கலங்களாக இருக்க வேண்டும் என்றும் நினைத்தேன். சேர நாட்டில் இருந்த போதே புதிய மரக்கலங்கள் வாங்கப்

போவது பற்றிய செய்திகள் எனக்கு வந்தன. ஆகவே வந்து கொண்டிருந்த கலங்கள் சேரருடையவை என்று நினைத்தேன்".

"சேரரது கலங்களாக இருந்தால் ஏன் "சேரர் கொடி ஏற்றப் படவில்லை?"

"புதிய மரக்கலங்களாக இருந்தால் அவை உரிய முறையில் மன்னரது தலைமையில் பூஜைகள் செய்யப்பட்டு நாட்டுக்கு அர்ப்பணம் செய்வதாக மன்னர் பூமி மீதும் கடல் மீதும் ஆணையிடுவார். வெற்றுக் கலங்கள் போர்க் கலங்களாக மாற்றப்படும். அதன் பிறகே சேரர் கொடி அவற்றில் ஏற்றப்படும். கொள்ளையர்களுக்கு வேண்டுமானால் இந்த பழக்கமில்லாமல் இருக்கலாம்"

இதைக் கேட்டதும் பற்களை நறநறவென்று கடித்தான் பங்கனன்.

இருப்பினும் குழப்பம் தீராத காரணத்தால் "சேரர் மரக்கலத்தில் அராபியன் வந்தது எப்படி?" என்று கேட்டான் கரகரத்த குரலில்.

"என்னை அழைப்பதற்கு முன்னால், நீங்கள் எல்லோரும் சேரர் மரக்கலங்களை அராபியர் கொள்ளைக் கலங்கள் என்று அஞ்சி, அவற்றோடு போரிடவோ போராடவோ தயங்கி சமாதானத்தில் இறங்கும் முயற்சியில் வெள்ளைக் கொடிகளோடு மரக்கலத்தை நோக்கி ரணதீரனும் பிறரும் சென்றீர்கள். இப்படி சமாதானப் படகுகள் தங்களை நோக்கி வருவதைக் கண்டு சேரர் மரக்கலத்தில் இருந்தவர்கள் வியந்து போயிருக்க வேண்டும். சேரமன்னரிடம் தெரிவித்திருக்க வேண்டும்"-



"யார்? சேரமன்னன் செங்குட்டுவனிடமா? அவனா மரக்கலத்தில இருந்தான்? இதென்ன உளறல்?" சீறினான பங்கனன்.

"சொல்வதைக் கேளுங்கள். சேரர் கலங்கள் உங்களைத் தாக்குவதற்காக வரவில்லை. சேரமன்னரே கிரேக்க நாட்டிற்கு நேரில் சென்று புதிதாகக் கட்டப்பட்ட மரக்கலங்களோடு திரும்பிக் கொண்டிருக்க வேண்டும். இந்த நிலையில் உங்கள் சமாதானப் படகுகள் வருவதாக சேரமாமன்னர் செய்தியறிந்ததும் உண்மையை அறிய விரும்பி நாடகமாடியிருக்கிறார். முதலில் சமாதானத்தை ஏற்க முடியாது என்றுச் சொல்லியிருக்கிறார். உங்கள் தரப்பிலிருந்து அராபியர் தலைவனைப் பார்க்க வேண்டும் என்று கூறப்படவே சேரர் வீரன் ஒருவனை அராபியன் வேடத்தை போட்டுக் கொள்ளச் செய்து ரணதீரனையும் மற்றவர்களையும் சந்திக்கச் சொல்லியிருக்கிறார். ரணதீரன் சமாதான பேச்சுக்களைப் பேசி வெள்ளைத் தீவை ஒப்படைப்பதாகவும் அராபியத் தலைவர் வெள்ளைத் தீவுக்கு வரவேண்டும் என்றும் சொன்னதுமே வெள்ளைத் தீவில் ஏதோ நடக்கிறது என்பதை உணர்ந்த அறிவுச் சுடரான சேரமாமன்னர், ரணதீரனை மரக்கலத்திலேயே இருத்திக் கொண்டு சமாதானத்தை மறுத்து விட்டு வெள்ளைத் தீவில் உள்ள கொள்ளைச் செல்வம் எல்லாவற்றையும் உங்கள் மூலமாகவே கொண்டு வரவேண்டும் என்று கூற வைத்திருக்கிறார். உங்களுக்கோ உங்கள் உயிர் மீதும் ஆசை. கொள்ளைப் பொருட்களின் மீதும் ஆசை. செய்வதறியாமல் தவித்தீர்கள்." அந்த நேரத்தில் தான் என்னிடம் யோசனை கேட்கும் படி கூறியிருக்கிறாள் சௌமியகுமாரி. என்னிடம் யோசனை கேட்க உங்களுக்கு

வழியில்லை என்றாலும் வேறு யோசனை உங்களுக்குத் தோன்றாததால் என்னிடம் கேட்கிறீர்கள். நான் உடனடியாக எதுவும் கூறாமல் தொலை நோக்கு கண்ணாடி மூலம் நீண்ட நேரம் ஆராய்ந்து கடலில் இருப்பது சேரர் கலங்களே என்பதை உணர்ந்தேன். தூது சென்ற ரணதீரனை மரக்கலத்திலேயே வைத்துக் கொண்டு சமாதானத்தை மறுத்து கொள்ளைப் பொருட்களோடு உங்களையே வரச் சொல்லும் தோரணை சேரமாமன்னரைத் தவிர வேறு யாருக்கும் இருக்க முடியாது என்பதை ஊகித்தேன். ஆகவே தான் அந்த ஊகத்தைச் சரி பார்க்க விரும்பி நான் இங்கு இருப்பதாகச் செய்தி சொல்லச் சொன்னேன். மதியூகியான சேரமான் என்னைத் தவிர வேறு யாரும் இப்படிச் செய்தி சொல்ல முடியாது என்பதை உணர்ந்து கொண்டார். வெள்ளைத் தீவை அவர் நினைத்திருந்தால் அப்போதே சூறையாடியிருக்க முடியும். அப்படிச் செய்வதால் எனக்கு ஆபத்து ஏற்படலாம் என்று எண்ணியே ரணதீரனை விடுவித்து விட்டு அந்தப் பகுதியை விட்டே அகன்றார். மொத்தத்தில் அராபியர் கொள்ளையர் கலங்களிடமிருந்து நான் உங்களைக் காப்பாற்ற வில்லை. சேரர் கப்பல்கள் என்பதை அறிந்து என்னைக் காப்பாற்றிக் கொண்டேன். இதையறியாது நீங்களே ஏதேதோ கற்பனை செய்து, விழா நடத்தி, பாராட்டி பரிசளிப்பதாகச் சொல்கிறீர்கள். இதையெல்லாம் பெற எனக்கு ஏது தகுதி?"

ஆபுத்திரன் சொன்ன செய்திகளில் மற்ற எல்லாவற்றையும் விட அந்த மரக்கலத்தில் சேரன்



செங்குட்டுவன் இருந்தான் என்ற செய்தியே பங்களனை பெரிதும் நிலைகுலைய வைத்தது.

"துரோகி. இந்த விவரங்களையெல்லாம் அப்போதே என்னிடம் ஏன் சொல்ல வில்லை? சொல்லியிருந்தால் போர்வீரர்கள் இல்லாத வெற்று மரக்கலங்களோடு சென்ற செங்குட்டுவனைக் கொன்று கப்பல்களைக் கைப்பற்றியிருப்பேனே! அருமையான சந்தர்ப்பம் போய் விட்டதே" என்று குமுறினான் பங்களன்.

"அப்படி நீ செய்வாய் என்று அறிந்து தான் உன்னிடம் அந்த விவரங்களைக் கூறவில்லை பங்களா. மரக்கலங்கள் அகன்று விட்ட நிலையிலும் நீ விழாவினை அறிவித்து விட்ட நிலையிலும் உன்னிடம் உண்மையைக் கூறி விழா கொண்டாட்டங்களைத் தடுத்து விட நினைத்தேன். நீ எதையும் கேட்கும் நிலையில் இல்லை" -

பங்களனால் மேற்கொண்டு அவனது பேச்சை சகிக்க முடியவில்லை. "இந்தத் துரோகியைப் பிடித்து அந்த அறையில் அடையுங்கள். இவனுக்கான தண்டனையை நான் அறிவிக்கிறேன்" என்று கூறிவிட்டு கோட்டையை விட்டே வெளியேறினான்.

அன்று மாலைக்குள்ளாகவே ஆபுத்திரனுக்கும் பங்களனுக்கும் நடந்த உரையாடல்களும் அதன் முடிவும் வெள்ளைத் தீவு மக்களுக்குத் தெரியவந்தது. அவர்களைப் பொறுத்தவரை பங்களனின் சதி பற்றி எதுவும் தெரியாதாகையால் ஆபுத்திரன் துரோகம் எதையும் செய்ததாகக் கருதவில்லை. சேரர் கலங்களை வெள்ளைத் தீவுபக்கம் வராமல் தீவுக்கு நல்லது செய்ததாகவே

நினைத்தார்கள். எனவே அவனைத் தனி அறையி
அடைத்ததையும் மறுநாள் தண்டனை வழங்குவதாக பங்கள
அறிவித்ததையும் ஜீரணிக்க முடியவில்லை. பங்களனி
செயல் நியாயமற்றது என்று ஆங்காங்கே பேசி
கொண்டார்கள். பலர் தமது செல்வமகளான சௌமி
குமரியிடமே போய் நியாயம் கேட்டார்கள். "உங்கள் திருமண
நின்று விடுமா?" என்று கவலைப்பட்டார்கள்.

அவர்களையெல்லாம் ஒருவாறு சமாதானப் படுத்தி
சௌமியகுமாரி ஆபுத்திரனைச் சந்திப்பதற்காக அவன்
அடைக்கப் பட்டிருந்த அறைக்குப் போனாள்.

அறைகாலியாக இருந்தது.

உள்ளே ஆபுத்திரனைக் காணவில்லை.







# அத்தியாயம் பத்து



## மலையாழ பவானி

தனியறையில் தான் அடைக்கப்பட்டதும் ஆபுத்திரன் சிரித்துக் கொண்டானே தவிர பதட்டப் படவில்லை. தனக்கு ஆதாயமாகத் தென்பட்ட போது காவல் தெய்வம் என்று பாராட்டி மகிழ்ந்த கொள்ளையர் தலைவன் தனக்குப் பாதகமாகி விட்டதாகக் கருதியதுமே துரோகி என்று பழித்து தண்டனையை அளிக்க முடிவு கட்டியதை எண்ணிய போது பங்களனின் சுயநலம் எப்படிப் பட்டது என்பது தெளிவாகப் புரிந்தது ஆபுத்திரனுக்கு. சுயநலத்திறகாகவும் சுயலாபத்திற்காகவும் எந்த நேரத்திலும் தலைகீழாக மாறக் கூடியவன் என்பதையும் எதையும் செய்யக் கூடியவனே இந்த பங்களன் என்பதையும் உணர்ந்த அவன், வெள்ளைத் தீவை விட்டுத் தப்புவது தான் சரியான வழி என்று கருதினான்.

தப்பும் எண்ணம் தனியறையில் அடைத்த பின்பு தான் அவனுக்கு வந்தது என்று சொல்ல முடியாது. கொள்ளையர் தலைவன் தனக்குப் பதவியளித்து வெள்ளைத் தீவிலேயே இருத்திக் கொள்ள சதி செய்வதாக அவனது மகள் கூறியபோதே வந்து விட்டது என்று சொல்ல வேண்டும். அதற்குக் காரணம் மக்கள் சக்தியை பங்களன் தனக்கு ஆதரவாகத் திருப்பி விட்டது தான். அராபிய கப்பல்களிடமிருந்து வெள்ளைத் தீவை ஆபுத்திரன் காப்பாற்றினான் என்றும் அவனே காவல் தெய்வம் என்றும் மக்களிடம் சொல்லி ஆபுத்திரனுக்குப் பதவியையும் தனது மகளையும் பரிசாகத் தரப்போவதாக மக்களிடம் அறிவித்த போது அவர்கள் மிகவும் மகிழ்ந்தார்கள். அதற்குக் காரணம் தாயில்லாத சௌமியகுமாரிக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து பாசத்தைப் பொழிந்து தங்களது குழந்தையாகவே பாவித்த தீவு மக்கள், சௌமியகுமாரிக்கும் வெள்ளைத் தீவைக் காத்த காவல் தெய்வம் ஆபுத்திரனுக்கும் திருமணம் என்றதுமே பங்களனின் விருப்பத்தை ஏற்றதோடு மட்டுமின்றி அவன் ஏற்பாடு செய்த விழாவில் பரம உற்சாகத்துடன் கலந்து கொண்டார்கள். இந்த நிலையில் பங்களனது ஏற்பாடுகளைத் தடை செய்யவோ மக்களை ஏமாற்றி விட்டு தப்பி ஓடவோ ஆபுத்திரன் விரும்பவில்லை. எந்த மக்களை முன் வைத்து சதியை பங்களன் தொடங்கினானோ அந்த மக்களிடம் மரக்கல மர்மத்தை உடைத்து விட்டால் அவர்கள் தன் மீது வைத்திருக்கும் அபிமானமும் பக்தியும் போய் விடும் என்றும் அவர்கள் தன்னைத் தூற்றியபடி விலகி விடுவார்கள் என்றும். அப்படி விலகி விட்டால பங்களனை ஏமாற்றி விட்டுத் தப்பிவிடலாம் என்றும் கணக்கிட்ட ஆபுத்திரன் பங்களனிடம் மரக்கல



மர்மத்தை உடைத்து வெள்ளைத் தீவை நெருங்கிய கப்பல்களை [illegible] கலங்களே என்று உண்மையைக் கூறினான்.

இதைக் கேட்டதும் பங்களன் நடந்து கொண்ட விதம் அவன் எதிர்பார்த்த விஷயமாகத் தான் இருந்தது. ஆனால் மக்களோ அவன் எதிர்பார்த்த மாதிரி அவனைத் தூற்றவோ அவனை விட்டு விலகவோ முற்படவில்லை. மக்களைப் பொறுத்த வரை பங்களனின் சதி பற்றி எதுவும் தெரியாது ஆகையால் ஆபுத்திரன் மரக்கல உண்மையை தெரிவித்த போது "பங்களர் ஏன் கோபப்பட வேண்டும்? எந்த மரக்கலமாக இருந்தால் என்ன? வெள்ளைத் தீவை ஆபுத்திரர் காப்பாற்றியது உண்மை தானே? அவருக்குப் போய் எதற்காக தண்டனை?" என்ற ரீதியில் பேசத் தொடங்கினார்கள். பலர் சௌமியகுமாரியிடமும் போய் நியாயம் கேட்டார்கள். முழுவிவரம் ஏதும் அறியாத அவள் மக்களைச் சமாதானப் படுத்தி விட்டு ஆபுத்திரன் அடைக்கப்பட்டிருந்த அறைக்கு வந்தான். ஆனால் அங்கே அவன் இல்லை. அறை காலியாகக் கிடந்தது.

'தப்பிவிட்டானோ ஒருவேளை' என்று நினைத்தாள் அவள்.

'தனக்குச் சொல்லாமல் தப்பமாட்டான்' என்றது அவளது மனம்.

உண்மையிலேயே ஆபுத்திரன் தப்பிவிட நினைத்தானே தவிர தப்பவில்லை. நள்ளிரவு நேரத்தில் திடீரென அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான் பங்களனின் உபதலைவனான ரணதீரன். தரையில் படுத்துக் கிடந்த ஆபுத்திரனிடம் "எழுந்திருங்கள் ஆபுத்திரரே" என்றதும் எழுந்து கொண்ட ஆபுத்திரன் "என்ன விஷயம்?" என்றான்.

"எதுவும் பேசவேண்டாம். இதோ இந்த போர்வையை முழுவதுமாகப் போர்த்திக் கொண்டு எனக்குப் பின்னால் நடந்து வாருங்கள்" என்று கூறிவிட்டு போர்வையை வீசினான் ரணதீரன்.

ஆபுத்திரன் எதையும் பேசவில்லை. இருவரும் அந்த அறையை விட்டு வெளியேறி பிரதான சாலையில் போகாமல் குறுகிய சந்துகள் வழியாக நடந்தார்கள். முடிந்த வரை இருண்டு கிடந்த சந்துகளின் வழியாகவே நடந்து சுகவனத்தை அடைந்தார்கள். உள்ளே நுழைந்ததும் "ஆபுத்திரரே, பக்கத்து அறைக்குச் செல்லுங்கள். அங்கே உணவு தயாராக இருக்கிறது. உண்டு விட்டு முகம் கழுவிக் கொண்டு தயாராயிருங்கள். நான் சற்று வெளியே போய் விட்டு மீண்டும் வருகிறேன். தயவு செய்து தப்பிக்க மட்டும் முயல வேண்டாம்" என்று கூறிவிட்டு வெளியேறினான் ரணதீரன்.

ஆபுத்திரன் அவனது சொற்படியே நடந்து கொண்டான். சுகவனத்தைப் பற்றி அவனுக்கு எதுவும் தெரியாதாகையால் இயல்பாக உணவுண்டு விட்டு முகத்தைக் கழுவிக் கொண்டு சற்றே ஆசுவாசப் படுத்திக் கொண்டான்.

சில நிமிடங்கள் கழிந்த பின் பணிப் பெண்ணொருத்தி உள்ளே நுழைந்து "ஐயா, சற்று வருகிறீர்களா?" என்று பணிவோடு கேட்டாள்.

அவன் எதுவும் பேசாமல் அவள் பின் சென்றான். இருவரும் பெரியதோர் அறையை அடைந்தார்கள். அந்த அறைக்கு வந்ததும் "இங்கேயே அமருங்கள்" என்று கூறி விட்டு வெளியேறினாள் பணிப் பெண்.

அறையானது கனிசமானதாக இருந்ததோடு பல்வேறு விளக்குகளால பிரகாசமாக இருந்தது. அறையில்



அமர்வதற்குரிய ஆசனங்கள் இரண்டிருந்தன. ஒன்றில் அவன் அமர்ந்திருந்தான். அதைத் தவிர பொன்னாலான கட்டில் ஒன்றிருந்தது. அதில் நேர்த்தியான பட்டு மஞ்சம் போடப்பட்டிருந்தது. அதில் ஏராளமான மலர்கள் தூவப் பட்டிருந்ததால் மலர் மணம் அறை முழுதும் வீசியது. அதோடு வாசனைத் திரவியங்கள் அறையில் தூவப்பட்டிருந்ததால் அறையே சுகந்தப் பிரதேசமாய் இருந்தது.

தான் வந்திருப்பது ஒரு பெண்ணின் அறைதான் என்பதை உணர்ந்து கொண்ட ஆபுத்திரன் "யாரிங்கே வரப்போகிறார்?" என்று எண்ணி முடிப்பதற்குள் ஜல்ஜல் என்ற சலங்கையொலி முன்னே வர அதன் பின்னே மோகினிப் பெண்ணைப் போல் வந்து நின்றாள் பவானி.

அவளைப் பார்த்ததுமே எங்கோ பார்த்தது போல் இருந்ததே தவிர ஆபுத்திரனுக்குச் சரியாகத் தெரியவில்லை.

ஆனால் அவளோ அவனை அறிந்திருந்தாளாதலால் "நலமா ஆபுத்திரா?" என்று சகஜமாக விசாரித்தபடி அலட்சியப் பார்வையோடு மஞ்சத்தில் போய் அமர்ந்து கால் மீது காலைப் போட்டுக் கொண்டாள். மகாராணி ஒருத்திக்கு உரிய தோரணையை அளித்தது அவளது அமர்ந்த கோலம்.

"என் நலத்தை விசாரிக்கும் நீ யார்?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"சொன்னால் நம்பத் தயாராக இருக்கிறாயா?" என்று கேட்டு ஒரு வெட்டுப் பார்வையை அவன் மீது வீசினாள் பவானி.

"பிறர் நம்பினால் தான் உன்னைப் பற்றிச் சொல்லவேண்டுமா என்ன?"

"நான் சேர நாட்டில் பிறந்த இலங்கை ராஜகுமாரி பவானி." என்றாள் அவள் பிடிவாளை நீட்டிக் கொண்டிருப்பாமலே.

"சேர நாட்டில் பிறந்தவள் எப்படி இலங்கை அரசகுமாரியாக இருக்க முடியும்" கேட்டான் ஆபுத்திரன்.

"அந்தக் கதை உனக்கு வேண்டாம் ஆபுத்திரா. எனக்கே கூட அதை நினைவுபடுத்திக் கொள்ளும் விருப்பமில்லை. ஏனென்றால் நான் இப்போது ராஜகுமாரியும் இல்லை. இலங்கையிலும் இல்லை" - என்றாள் பவானி தேவையில்லாத விஷயங்களைப் பேச விரும்பாமல்.

"இலங்கையை விட்டு ஏன் வந்து விட்டீர்கள் ராஜகுமாரி?" - என்று மரியாதையோடு கேட்டான் ஆபுத்திரன்

"என்னை ஒருமையிலேயே அழைக்கலாம்" என்றாள் அவள்.

அவன் மௌனமாய் இருக்கவே "உனக்கு என்னைப் பற்றிய விவரங்கள் தெரியுமென்று நினைத்திருந்தேன். சேரமன்னரின் அபரிமிதமாக செல்வாக்கைப் பெற்றவன் நீ. உன்னை அறியாதவர் சேர நாட்டில் இல்லை. ஆகவே உனக்குத் தெரியாத விஷயங்கள் இருக்க முடியாது என்று நினைத்தேன்" என்றாள் பவானி.

"பல விஷயங்களைக் கேள்விப் பட்டதுண்டு. ஆனால் கண்ணால் கண்டதில்லை. கண்ணால் கண்ட பல விஷயங்களுக்கு விவரங்களைத் தேடி நான் போனதில்லை"

ஆபுத்திரனின் பேச்சைக் கேட்டு கலகலவெனச் சிரித்தாள் பவானி. "நீ மிகவும் சாமர்த்தியசாலி" என்று பாராட்டி விட்டு "சேரநாட்டு அரசகுமாரியாக இலங்கையை



விட்டு வந்தேன். ஆனால் எனது தமிழக வரவு அத்தனை மோசமானதாக அமையும் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை" இப்படி சொன்ன அவள் "சேர நாடே நீ அழிந்து போ எரிந்து போ" என்று திடீரென வெறிபிடித்தவளைப் போல உரக்கக் கத்தினாள்.

உடனடியாக அவளை எதுவும் கேட்காமல் சற்று பொறுத்திருந்து விட்டு "என் தாய் நாட்டை என் கண் முன்னே சபிக்கும் உன்னை உயிரோடு விட்டிருக்கிறேன் என்றால் உன் சாபத்துக்கான காரணம் தெரியாததால் தான். இப்போது சொல். சேர நாட்டை சபிக்கும் அளவிற்கு உனக்கு என்ன தீங்கை இழைத்தது சேர நாடு?" என்று கேட்டான் ஆபுத்திரன்

"சேரநாட்டு ஆடவர்கள் பெண்ணின் அன்பை புரிந்து கொள்ளத் தெரியாதவர்கள். பெண்களை அலட்சியம் செய்வதில் முதன்மையானவர்கள்" - என்று குற்றம் சாட்டினாள் பவானி.

"உன் அன்பு நிராகரிக்கப் பட்டு விட்டதால் சேரநாட்டவர்கள் அனைவருமே குற்றவாளியாகி விடுவார்களா?"

"ஆபுத்திரா, விவரம் தெரியாமல் பேசாதே. அரச வம்சத்தவளான நான் அரச வம்சத்தவரைக் காதலிப்பது தவறா?"

"இல்லை."

"நான் காதலித்த அந்த அரசகுமாரர் என் அன்பை நிராகரித்தார்."

"நீ என்ன செய்தாய்?"

"இன்னொரு அரச குமாரரைக் காதலித்தேன்."

"அவரும் மறுத்து விட்டாரா?"

"ஆமாம். அதனால் மூன்றாவதாக இன்னொருவனிடம் அன்பை வெளியிட்டேன். அவன் என்னை மரக்கலத்தில் ஏற்றி கடலில் இத்தீவுகளுக்கருகில் படகில் எறியும் படி செய்து விட்டான்."

இதைக் கேட்டுச் சிரித்தான் ஆபுத்திரன்.

"என் அவலம் உனக்குச் சிரிப்பாக இருக்கிறதா ஆபுத்திரா?"

"அவலம் எங்கே இருக்கிறது இதில்? சொல்லப் போனால் நீ வெளிப்படுத்தியது அன்பே அல்ல."

"என்ன சொல்கிறாய்?"

"அன்பு என்பது ஒருவரிடம் பூத்து விட்டால் அவரிடமே மணம் வீச வேண்டும். இல்லையென்றால் வாடி உதிர வேண்டும். மாறாத நேசமே காதல். நீயோ ஒருவர் நிராகரித்ததும் மற்றொருவர், அவரும் நிராகரித்தபின் இன்னொருவர், என்று உறவை மாற்றிக் கொண்டே சென்றிருக்கிறாய். இதற்குப் பெயரா அன்பு? எந்த இடத்தில் அன்பு நிராகரிக்கப் படுகிறதோ அங்கே தான் அது ஆழப் பதிய வேண்டும். லாபங்களை எதிர்பார்க்காமல் அர்ப்பணிப்பிற்கு எப்போதும் தயாராக இருக்கும் உறவுக்குப் பெயர் தான் அன்பு. அதோடு அன்பு என்பது உன்னைப் போல் சம அந்தஸ்து பார்த்துக் கொண்டு நெருங்காது. அது தேடுவது உண்மையான இதயத்தைத் தான். நீ தேடியதோ அப்படிப் பட்ட இதயத்தையல்ல. ஆதாயத்தை மட்டும் தான். உன் விஷயம் இப்போது நினைவிற்கு வருகிறது. நீ சேர



நாட்டுத் தொண்டியில் பிறந்த மலையாழ பவானி * என்று சொல்லிக் கொண்ட ஈழத்துப் பெண். அங்கிருந்து இங்கே வந்த சேர அரசகுமாரிடம் அன்பு என்ற பெயரில் உறவாடினாய். நீ உறவாடியதின் காரணம் தானோ என்னவோ - அந்த அரசகுமாரரான இளங்கோ அரியணையே வேண்டாமென்று துறவியாகி இன்றைக்கு இளங்கோ அடிகளாக வலம் வருகிறார். அவருக்குப் பின் நீ உறவாட முற்பட்டது சேரமாமன்னர். அவர் ஏற்கனவே திருமணமாகி குழந்தையைப் பெற்றவர். எனவே உன்னை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அப்போதாவது அன்பு என்பது என்ன என்பதைப் புரிந்து கொண்டு நீ தெளிவடைந்திருக்கலாம். மாறாக மகா முரடரான சேர நாட்டுப் படைத் தலைவர் வில்லவன் கோதையிடம் சென்று அன்பென்றும் காதலென்றும் உருகியிருக்கிறாய். வாளையும் வில்லையும் தவிர வேறு எதையும் விரும்பாத அந்த மகாவீரர் உனக்கு வெறும் மறுப்பு மட்டும் சொன்னால் போதாது என்று தீர்மானித்து கைகால்களைக் கட்டி கடலில் வீசியிருக்கிறார். போன ஜன்மத்தில் நீ செய்த புண்ணியம் கடலில் சாகாமல் எப்படியோ உயிர் பிழைத்து இங்கே வந்திருக்கிறாய். தவறுகளை உன் மீது வைத்துக் கொண்டு சேரநாட்டின் மீது சாபங்களை அள்ளி வீசுகிறாய். பெண்ணே, கற்புடைய பெண் சாபமிட்டால் நாடு எரியக் கூடும். ஆதாயம் தேடும் ஆசைக்காரிகள் சாபமிட்டால் அவர்கள் தான் அழிவார்கள்"-

இவ்வாறு அவளைப் பற்றி ஆபுத்திரன் விஸ்தாரமாகப் பேசி விட்டதைக் கேட்டு அசந்து போய்

* மலையாழம் (மலையின் அடிவாரம்) என்ற சொல் தான் பின்னாளில் மலையாளம் என்று திரிந்தது.
History of Malabar.

சிறிது நேரம் வரை பேச்சற்று அமர்ந்து போனாள் பவானி. அவளது மனதைப் போலவே அறை விளக்குகள் கொஞ்சம் கொஞ்சமாக மங்கிக் கொண்டு வந்தன. அதைக் கண்ட ஆபுத்திரன் கைகளைத் தட்டினான். இரண்டு பணிப் பெண்கள் உள்ளே நுழைந்தார்கள். அவர்களிடம் அணைய விருந்த விளக்குகளுக்கு எண்ணெய் ஊற்றும் படி கேட்டுக் கொண்டான் ஆபுத்திரன். அவர்களும் மறுப்பேதும் சொல்லாமல் அந்தப் பணியை நிறைவேற்றி விட்டுச் சென்றார்கள். அறை மீண்டும் பிரகாசப் பட்டு ஒளிர்ந்தது.

இதையெல்லாம் மௌனமாகவே இருந்தபடி கவனித்த பவானி, "என்னைப் பற்றி எல்லாவற்றையும் சொல்லி விட்டாய் ஆபுத்திரா! அந்த விதத்தில் எனக்கு மகிழ்ச்சி தான். ஆனால் அன்பைப் பற்றி நீ கூறியதெல்லாம் நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. சில விஷயங்களை அறிந்து வைத்திருப்பதை விட அனுபவப்படும் போது தான் உண்மை புலப்படும். ஒருவரிடம் மிகவும் எதிர்பார்த்து அன்பு செலுத்தும் போது அவர் அதை மறுப்பதற்குக் காரணங்கள் இருக்கலாம். இல்லாமலும் போகலாம். அதற்காக அன்பு செலுத்தியவர்கள் துறவியாகி விட வேண்டுமா?" என்று கேட்டாள்.

"சொல்லப் போனால் நீ அன்பு காட்டி அதை மறுத்த காரணத்தால் தான் அரசகுமாரரான இளங்கோ துறவியானாரோ என்னவோ? காதல் கிடைக்காதவர்கள் துறவியாவது நல்லது தான். ஆனால் அப்படிச் சொல்லவில்லை பவானி. அன்பு என்பது வாழ்வில் ஒருமுறை தான் தோன்றும் ஒருவரிடம் மட்டுமே தோன்றும். முடிவு தோல்வியாக



இருந்தாலும் அன்பு மட்டும் நிலைத்து நிற்கும். அப்படியில்லாமல் அடுத்தவர் மீது அன்பு செலுத்துவது என்றால் அதற்குப் பெயர் அன்பு அல்ல. ஆசை. ஆசை எப்போது வேண்டுமானாலும் யார் மீது வேண்டுமானாலும் வரும். பவானி. நீ விரும்பிய உறவுக்குப் பெயர் ஆசையே தவிர அன்பு அல்ல"

"ஆசை என்றே வைத்துக் கொள்வோம் ஆபுத்திரா. விவாதம் எதற்கு? அன்பை நிராகரித்தவர்கள் ஆசையையும் நிராகரித்தால் நான் என்ன செய்ய முடியும்? அந்தக் கொலைவெறிப் பாதகன் வில்லவன் கோதை என்னை ஏற்றுக் கொள்ளாமல் விட்டதோடு கடலில் தூக்கி எறிந்தது என்ன காரியம்? நியாயம் என்கிறாயா?" என்று கேட்டாள் பவானி.

"மண் தரையில் விதையைப் போட்டால் அது செடியாக முளைக்கலாம். கல் தரையில் எத்தனை விதைகளைப் போட்டாலும் முளைக்காது. மனித மனமும் இப்படிப் பட்டது தான். படைத்தலைவர் மனம் கல்தரை போன்றது. நான் ஏற்கனவே சொன்னபடி வாளையும் வில்லையும் தவிர எதையும் விரும்பாத அவரிடம் விவரம் தெரியாமல் போய் நீ காதல் விதையைத் தூவியது உன் அறியாமை. ஆகவே அவர் உன்னிடம் விவாதிக்க விரும்பாமல் கடலில் தூக்கி எறியச் சொன்னார். ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டு மூழ்கிப் போவதைப் பற்றி கவலைப் பட்டு என்ன பயன்?"

பவானி மிகவும் தடுமாற்றம் அடைந்தவளாய் காணப்பட்டாள். சற்றே எழுந்து உள்ளே சென்று விட்டு சிறிது நேரம் கழித்து வந்து அவனது பக்கத்தில் இருந்த ஆசனத்தில் அமர்ந்து "என் மனதை மிகவும் நோகடித்து விட்டாய் ஆபுத்திரா. இதைச் சொன்னால் நீ தானே என்னை

வரவழைத்தாள் என்று கேட்டாய். உன்னைப் பற்றியே என் மனதை ஏகப்பட்டவர்கள் பேசக்கூடிக்கொண்டிருக்கிறார்கள். கடலில் இருந்து என்னைக் காப்பாற்றிய பங்களனிடமே [illegible] என் போர்த்திறமைகளையும் என்னுடைய அழகையும் பயன்படுத்தி என்னை வெறும் போகப் பொருளாக்கி விட்டான். என் வாழ்க்கையைச் சீரழித்து விட்டான்" என்றாள்.

"உன் ஆசையை சேரநாட்டவர்கள் நிராகரித்தது போல பங்களனின் ஆசையை நீ நிராகரித்திருக்கலாமே?"

"சேர நாட்டு அரசகுமாரர்கள் நிலையும் என் நிலையும் ஒன்றா ஆபுத்திரா? பங்களனால் காப்பாற்றப் பட்ட நிலையில் இருக்கும் நான் அவனது ஆசைகளை எப்படி மறுக்க முடியும் அவன் விரும்பியிருந்தால் என்னை மணந்து கொண்டு வெள்ளைத் தீவின் ராணியாக்கி கௌரவித்திருக்க முடியும் ஆனால் அவனுக்கு மனித மனமே இல்லை. கொள்ளைக்கார மனமே இருந்தது. ஆகவே நான் அவனது ஆசையை ஏற்று அவனைப் பழிவாங்குவது என்று தீர்மானித்தேன் உடனடியாகச் செயல்பட்டு அவனது உபதலைவன் ரணதீரனை அவனுக்குத் தெரியாமல் என் பக்கம் சேர்த்தேன் என் வலையில் இப்போது இரண்டு பேருமே இருக்கிறார்கள் நான் நினைத்தால ரணதீரனை வைத்துக் கொண்டு பங்களனை அழிக்க முடியும்"

"செய்ய வேண்டியது தானே?"

"நேற்று தான் உன்னைப் பற்றியும் நீ இங்கு இருப்பது பற்றியும் கேள்விப் பட்டேன். உனது திறமையும் பராக்கிரமும் எப்படிப்பட்டவை என்பது எனக்குத் தெரியும். நீ மட்டும் என் பக்கம் சேர்ந்து விட்டால் பங்களனையும் அவனது



கூட்டத்தையும் அழித்து விட்டு இந்த வெள்ளைத் தீவின் ராஜா-ராணியாகலாம் என்று நினைத்தேன். உன் விருப்பத்தை அறியவே ரணதீரனைக் கொண்டு சிறையிருந்த அறையிலிருந்து உன்னை அழைத்து வந்தேன். என்ன சொல்கிறாய்?"

"போயும் போயும் இந்தக் கொள்ளையர் தீவுகளுக்கு ராணியாகவா நீ விரும்ப வேண்டும்? இதற்குப் போயா நான் உதவ வேண்டும்? இக்கொள்ளையரைப் பூண்டோடு அழிக்க சேரமன்னரோடு தோள் கொடுக்க வேண்டிய நானா இத்தீவுகளுக்கு ராஜா ஆக வேண்டும்? உன் புத்தி ஏன் இப்படி மட்டரகமாக வேலைசெய்கிறது? இதைவிட பங்களனிடம் வெட்டுப் பட்டு உயிரை விடலாம்"

இதைக் கேட்டதும் ஆபுத்திரனின் கையொன்றை வலிய எடுத்து தனது மடியில் வைத்துக் கொண்டு "முட்டாளைப போல் பேசாதே ஆபுத்திரா. நீயும் நானும் தியாகிகளாவதற்கோ ஏமாளிகளாகி அனாதைகளாகச் சாவதற்கோ பிறக்கவில்லை எதிரிகளையும் மோசக்காரர்களையும் நாசம் செய்து நாடாளப் பிறந்தவர்கள். அதற்கான வாய்ப்பு நம்மைத் தேடி வரும்போது வேதாந்தம் பேசி வீணாய்ப் போவது அர்த்தமற்றது. வெள்ளைத் தீவு மட்டும் தான் நம் ராஜ்யம் என்று ஏன் நினைக்க வேண்டும்? இத்தீவு நம வசமானதும் குமரி முனையிலிருந்து இமயம் வரை உள்ள அனைத்து நாடுகளையும் வெல்வோம் பெரும் கடற்படையைத் திரட்டி மேலை நாடுகளுக்குச் செல்வோம். கிரேக்க நாடு, அராபிய நாடு, எகிப்து என்று கடல் கடந்த நாடுகளை நம் வசப்படுத்துவோம். உலகையே ஆள்வோம்" என்றாள் பரவசமான குரலில்.

அவளது மடியிலிருந்து தன் கையை எடுத்துக் கொண்ட ஆபுத்திரன் "பங்கனனை விட பெரிய பேராசைக்காரியாக இருக்கிறாய் பவானி. விரக்தி உன்னைப் பெரிதும் மாற்றியிருக்கிறது. நீ எல்லாவற்றையும் விட்டு என்னோடு சேரநாட்டிற்கு வா. வஞ்சி மாநகரில் உள்ள திருமாலின் ஆடல்மாடத்தில் வந்து உன்னை ஆண்டவனுக்கு அர்ப்பணித்துக் கொள். அது உனக்கு அமைதியையும் ஆனந்தத்தையும் தரும்" என்றான்.

அவளிடத்தில - அதுவும் தனிமையில் - இரவில் வேறு யாரும் இப்படிப்பட்ட உபதேசத்தைச் செய்ய முடியாது.

ஆனால் அவள் அந்த உபதேசத்தை எதிர் பார்க்கவுமில்லை. விரும்பவில்லை. ஆண்டவனுக்கு அர்ப்பணித்துக் கொள்ளும் மனோபாவமோ தனக்கில்லை என்றும் கருதிய அவள் சற்று உள்ளே சென்றுவிட்டு வேறு ஆடைகளை அணிந்து கொண்டு அவனது முன்னே நின்றாள். சாதாரணமாக அவள் அணிந்திராத ஆடைகள் அவை. ஆவியன்ன ஆடை என்று அழைக்கப் பட்ட, அதாவது ஆவி அளவிற்கு அத்தனை மெலிதான ஆடையை அவள் அணிந்து வந்ததால் ஆடைகளை அவள் அணிந்த மாதிரியே தோன்றவில்லை. தன் பேச்சுக்கு இசையாத ஆபுத்திரன் இந்த ஆடைக்காவது இசைகிறானா என்று பார்க்க இச்சை கொண்டே அவள் இப்படி வெட்கங்கெட்டவளாய் வந்து நின்றாள். இதை கண்டு கதிகலங்கிப் போனான் ஆபுத்திரன்.

தனது கோலத்தைப் பார்த்துச் சங்கடப்பட்ட அவனைக் கண்டு மனம் குளிர்ந்த அவள் "கண்களால் நன்றாகப் பார் ஆபுத்திரா. கண்கள் பெற்ற பயனை ஏன் மறுக்கிறாய்? நான் அழகாக இருக்கிறேனா?" என்று மயக்கும் குரலில் கேட்டாள்



"அருவெறுப்பாக இருக்கிறது" - என்றான் ஆபுத்திரன்

"இந்த கோலத்தில் என்னைப் பார்த்து அருவெறுப்படைவதாகச் சொன்ன முதல் ஆடவன் நீ தான். ஆனாலும் உன் மீது தான் எனக்கு ஆசையாக இருக்கிறது. வேறெதையும் எண்ணாமல் அருகே வா. பொழுது விடியும் வரை இந்த உலகையே மறந்திருப்போம்" என்று கூறி அவனே சிறிதும் எதிர்பாராத விதத்தில் அவனை இறுகக் கட்டி அணைத்தாள்.

அவளது மிருதுவான அங்கங்கள் தன் தேகத்தில் அழுந்தும் போது ஆபுத்திரனின் உணர்ச்சிகள் கொந்தளித்தாலும் அவளை பலவந்தமாக விலக்கி விட்டு "பவானி, இது உனக்கு நல்லதல்ல. பெண்ணுக்குரிய செயல இதுவல்ல. என்னைப் போகவிடு" என்றான்.

"நான் பெண்ணல்ல பேய். உன்னைப பிடிக்காமல் விடமாட்டேன்" என்று கூறி மறுபடியும் அவனைக் கட்டிப் பிடிக்க அவள் சென்ற போது மாளிகை வாசலில் பலர் வருகிற சத்தம் கேட்டது.

ஆபுத்திரனை இறுகக் கட்டிக் கொண்ட அவள் "ஐயோ, என்னை விடு. ஆபுத்திரா நான் அனாதை. கணவர் பங்கனுக்கு உரியவள். என்னை விடு" என்று உரத்த குரலில் பேசினாள்.

அதற்குள் அறைவாசலுக்கு ரணதீரனும், பங்கனும், சில கொள்ளையரும் வந்து நின்றார்கள்.

அவர்களைக் கண்டதும் ஆபுத்திரனை விட்டு விலகி மஞ்சத்தில் இருந்த போர்வையை இழுத்து உடலைப் போர்த்திக்

கொண்டு "என்னைக் காப்பாற்றுங்கள் பிரபு. இந்த அயோக்கினிடமிருந்து என்னைக் காப்பாற்றுங்கள்" என்று கதறினாள் பகவதி.

பங்களனின் கண்கள் சிவந்தன.

பற்கள் நறநறவென்று கடியுற்றன.

"இந்தத் துரோகியைக் கைது செய்யுங்கள்" என்று கட்டளையிட்டான் தன் சகாக்களிடம்.







# அத்தியாயம் பதினொன்று



## தண்டனை

**கை**து செய்யும் படி பங்களன் உத்தரவிட்டதும் ஆபுத்திரனைக் கைது செய்ய விரைந்தான் உபதலைவன் ரணதீரன்.

"ரணதீரா, நான் கைது செய்யச் சொல்லியது அவனை அல்ல. அவளை" என்றான் பங்களன்.

ரணதீரனுக்கு எதுவும் புரியவில்லை.

"தலைவரே, இவரையா கைது செய்ய வேண்டும்? இவரா துரோகி?" என்று கேட்டான்.

"ஏன் இருக்கக் கூடாதா?"-

"தலைவரே, ஆபுத்திரன் இந்த இடம் தேடி வந்து

பலாத்காரம் செய்ய முயற்சி செய்திருக்கிறான். பவானியே சொன்னார். உங்களுக்குக் கேட்கவில்லையா?"

"ஆபுத்திரனுக்கு இந்த இடம் எப்படித் தெரியும்? அதுவும் இங்கே இவள் இருப்பது எப்படி தெரியும்?"

"அவன் ஜகஜாலப் பிரதாபன். அவனுக்குத் தெரியாதது எதுவுமில்லை."

"அப்படியா? பெண் வேண்டுமென்றால் இங்கே ஏன் அவன் வரவேண்டும்? அவனிருக்கும் இடத்திலேயே பெண்கள் இருக்கிறார்களே?"

"அவனுக்குப் பிடித்த பெண் பவானியாக இருக்கும் போது இங்கே வருவதில் வியப்பென்ன தலைவரே?"

"ரணதீரா, அவன் விரும்புவது இருக்கட்டும். அவனையே விரும்பினாள் ஒரு பெண். மணந்து கொண்டால் தப்புவதாகவும் கூறினாள். அவனைப் பல நேரங்களில் தனிமையில் சந்தித்தாள். அவள் யார் தெரியுமா? என் மகள் சௌமியகுமாரி"

"தலைவரே!"

"தன்னைத் தேடி வந்த பெண்ணையே அவன் தொடவில்லை. அவனா பெண்ணைத் தேடிக் கொண்டு இங்கே வரப்போகிறான்? அவனை எந்த விஷயத்தில் வேண்டுமானாலும் சந்தேகிக்க முடியும். ஆனால் பெண்கள் விஷயத்தில் இம்மியளவும் சந்தேகிக்க மாட்டேன். எனக்கு ஆபுத்திரனையும் தெரியும். பவானியையும் தெரியும். இந்த விஷயத்தில் யார் எது சொன்னாலும் நான் கேட்கத் தயாராக இல்லை" என்று கூறிய பங்களன் தன்னுடன் வந்த இதர



ஆட்களை அழைத்து "இந்த மூவரையும் தனித்தனி அறைகளில் அடைத்து வையுங்கள். நாளை விசாரிக்கிறேன்" என்று கூறி விட்டு அகன்றான்.

தனி அறையில் அடைக்கப் பட்ட மூவரும் மூன்று விதமாக நினைத்தார்கள்.

"வீணாக அரசியலில் தலையிட்டு சந்தோஷத்தைக் கெடுத்துக் கொண்டோமே" என்று நினைத்தாள் பவானி.

"பவானியின் பேச்சைக் கேட்டு மோசம் போனோமே" என்று கவலைப் பட்டான் ரணதீரன்.

"இருக்கும் பிரச்சனைகள் போதாதென்று இது வேறா?" என்று சங்கடப் பட்டான் ஆபுத்திரன்.



மறுநாள் தனது அறையில் பகவதியையும் ரணதீரனையும் வரவழைத்தான் கொள்ளையர் தலைவன்.

"ரணதீரா, ஒரே ஒரு விஷயம். அதற்கு நீ பதில் சொல்லி விட்டால் நடந்தது என்ன என்பதை நான் கூறுகிறேன்" என்று சொன்ன பங்களன் "தனியறையில் சிறையிருந்த ஆபுத்திரனை விடுவித்தது யார்?" என்று கேட்டான்.

ரணதீரன் சிறிது நேரம் யோசித்து விட்டு "நானாக அக்காரியத்தைச் செய்யவில்லை. பவானி கேட்டுக் கொண்டதினால் தான் செய்தேன்" என்று கூறினான்.

"நல்லது ரணதீரா. பவானி கேட்டுக் கொண்டதினால் ஆபுத்திரனை விடுவித்தாய் சரி. பின் எதற்காக பவானியும்

ஆபுத்திரனும் இருந்த அவனை மாளிகைக்கு என்னை அழைத்து வந்தாய்?" கேட்டான் பங்கனன்.

"அதுவும் பவானி சொன்னதால் தான்" என்றான் ரணதீரன்.

"நன இருப்பிடத்திற்கு ஆபுத்திரனை வரச் சொன்ன பவானி. எதற்காக என்னையும் வரச் சொன்னாள்?"

"ஆபுத்திரனை உங்களுக்குக் காட்டிக் கொடுக்கத் தான்"

"அதாவது தன்னைப் பலாத்காரம் செய்ய ஆபுத்திரன் முயன்றான் என்பதை நான் காணும் படி செய்வது அவளது நோக்கம். இல்லையா?"

"ஆமாம்"

"ஆபுத்திரனை இந்த விஷயத்தில் பவானி எதற்காக காட்டிக் கொடுக்க வேண்டும்?"

"அவனைத் தாங்கள் தண்டிக்கத் தான்"

"அவனைத் தண்டிக்கப் போவதாக நான் தான் ஏற்கனவே கூறி விட்டேனே? இது எதற்கு தேவையில்லாமல்?"

இதைக் கேட்டு விழித்தான் ரணதீரன்.

அப்போது குறுக்கிட்ட பவானி "ஐயா, உண்மையை நான் சொல்லி விடுகிறேன். பிறகு நீங்கள் யாரைத் தண்டித்தாலும் தண்டியுங்கள்" என்று கலங்கிய கண்களோடு கூறத் தொடங்கினாள்.

"ஒரு நாள் ரணதீரர் என் மாளிகைக்கு ரகசியமாக வந்தார். அவர் எதற்காக வந்தாரோ என்று பதறிப் போன



நான் அவரை உள்ளே வரக்கூடாது என்று தடுத்தேன். உன்னோடு நானொன்றும் சரசமாட வரவில்லை என்று சொல்லி விட்டு மேலே பேச முடியாமல் தவிப்போடு உட்கார்ந்திருந்தார். அவரது நிலையைக் கண்டு பச்சாதப்பட்டு நான் தான் என்ன விஷயம் என்று விசாரித்தேன்.

"நான் தலைவரது முடி வெவளிலிருந்து மாறுபடுகிறேன். சமீபகாலங்களில் அவரது நடவடிக்கைகள் எனக்குப் பிடிக்கவில்லை கொள்ளைக்காரர்களுக்குரிய தைரியம் அவரிடம் இல்லை. தந்திரமும் வஞ்சகமும் தான் இருக்கின்றன என்றார்.

"அதையெல்லாம் நாம் எதற்கு ஆராய வேண்டும்? நாம் பிழைப்பதே அவரால் தானே என்றேன்.

"யாரும் தண்டச் சோறு சாப்பிடவில்லை. அவரவர்களும் தங்களுக்குரிய வேலைகளைச் செய்து தான் பிழைக்கிறோம். அவரது தயவால் அல்ல என்றார்.

"அதற்கென்ன இப்போது என்று கேட்டேன். நீ மட்டும் என்னை ஆதரித்தால் போதும். அவருக்கு எதிராகக் கிளம்பி இத்தீவை இரண்டாக்கி விடுவேன் என்றார்.

"எதற்கு என்றேன் நான். அவருக்கு வேலை செய்து காலம் கடத்தியது போதும். அவருக்குச் சமமாக வாழ இனி விரும்புகிறேன். முடிந்தால் அவரை வீழ்த்தவும் தயார் என்றார்.

"நான் வேண்டாம் என்றேன். நீ இப்படியே கடைசி வரை போகப் பொருளாக இருந்து விடுவதாக உத்தேசமா? பெரிய ஆளாக வர ஆசையில்லையா? ஏன் இந்தத் தீவுக்கு நீ ராணியாகக் கூடாதா என்றார்.

"என்னைக் காப்பாற்றி உயிரைத் தந்தவர் தலைவர். அவரது ஆணைகளுக்கு நான் கட்டுப்பட்டவள். அவருக்கு நானெப்படி துரோகம் செய்ய முடியும்" என்றேன் நான்.

"அவரென்னும் தயாளரவை விசுவாசம் காட்டுவதற்கு. பிடிக்கவில்லையென்றால் எதையும் யோசிக்காமல் உன்னைத் துரத்தியடித்து விட்டு இன்னொருத்தியை இங்கு கொண்டு வரவும் தயங்க மாட்டார். இதை நீ புரிந்து கொள். நாமிருவரும் ஓர் அணியில் திரளுவோம். அந்த அபாயகரமான ஆபுத்திரனையும் அழிப்போம். அதற்கு உபாயம் இருக்கிறது. அவனை உன் மாளிகைக்கு அழைத்துக் கொண்டு வருகிறேன். நீங்கள் இருவரும் இங்கே இருக்கும் போது நான் போய் தலைவரை அழைத்து வருகிறேன். தலைவரிடம் ஆபுத்திரன் பலாத்காரம் செய்ய முற்பட்டதாகக் கூறு. அங்கே தலைவர் அவனை வெட்டிப் போடுவார். அவன் ஒழிந்து விட்டால் நமது வழி எளிதாகி விடும். நாம் ஒன்று சேர்ந்து அவரை எதிர்ப்போம். அல்லது ஒருநாள் தலைவர் இங்கே வந்து தங்கும் போது விஷம் வைத்துக் கொன்று விடு. பிறகு நம் ராஜ்யம் தான் என்றார்.

"நான் இதற்குச் சம்மதிக்கா விட்டால்? என்று கேட்டேன். உன்னைப் பற்றித் தாறுமாறாகத் தலைவரிடம் செய்தி சொல்லி வருவேன். மக்களிடமும் உன்னைத் தரங்கெட்டவள் என்று செய்தியை பரப்புவேன். அதன் முடிவு கோரமாக இருக்கும் என்றார். என்ன ஆகப் போகிறது மரணம் தானே என்றேன் நான். மரணமல்ல பெண்ணே. சித்திரவதை. நீ இதுவரை கேட்டிராத கண்டிராத கொடுமை உனக்கு நடக்கும். நீ நிர்வாணப் படுத்தப்பட்டு தெருக்களில் விரட்டியடிக்கப் படுவாய். மக்கள் உன்னைக் கல்லால் அடிப்பார்கள். வேட்டை



நாய்கள் உன் மீது பாயும். பிறகு உன் தோலை உரித்து அதோ அந்த உயரமான தூணில் வைத்து விடுவார்கள். உனது தோலற்ற உடலைக் கழுகுகள் பட்சணம் செய்யும். போதுமா என்று அச்சுறுத்தினார். நான என்ன செய்ய முடியும் ஐயா? யாருக்கு நான் பயப்படுவேன்? ஏற்கனவே பலரிடம் அவமானப் பட்டுச் சேதாரப் பட்டிருக்கும் நான் இவர் கூறுவதை ஏற்க மறுத்தால் மேன்மேலும் அவஸ்தைப் படத் தான் வேண்டும். நான் பெண். அனைவராலும் அறுத்து விடப்பட்ட அனாதை. நான் வேறென்ன செய்ய முடியும் பிரபு? ரணதீரருக்கு உடன்படுவது போல் நடித்துத் தனிமையில் உங்களிடம் சொல்லி விடலாம் என்றிருந்தேன். அதற்குள் அவர் இப்படியெல்லாம் செய்து விட்டு என்மீது பழியைப் போடுகிறார். ஐயா நான் வாழ்ந்தது போதும். தங்களிடம் வாழ்ந்த கொஞ்ச நாள் வாழ்க்கை தான் என் சொர்க்கம். இனி எந்த நரக வேதனைக்கும் நான் தயார்" என்று கூறி பங்களனின் காலில் விழுந்து மயக்கமானாள்.

"இது அபாண்டம். தலைவரே! இவள் கூறியது பொய்" என்று கத்தினான் ரணதீரன்.

பங்களன் அதைக் காதில் வாங்கவில்லை. "இவளது மயக்கத்தைத் தெளிவியுங்கள்" என்றான். பணிப்பெண்கள் வந்து தண்ணீரை முகத்திலடித்து அவளை தெளிவடையச் செய்தார்கள்.

தெளிவடைந்த பவானி "ஐயா, எனக்கு இன்னமும் தண்டனையளிக்கவில்லையா?" என்று தீனமான குரலில் கேட்டாள்.

பங்களன் அவளைப் பார்த்து "இந்தச் சதி என்று

ஆரம்பித்தது" என்று கேட்டான் பவானி.

"நேற்று நான் இல்லையென்றால் உங்களுக்குச் சொல்லியிருக்க மாட்டேனா?" என்று கூறிய பவானி மீண்டும் கலங்கினான்.

அதையடுத்து நெருப்புப் பார்வையை ரணதீரனின் மீது வீசினான் பங்கனன். "துரோகி" என்று முனகியது அவனது உதடு. ரணதீரனோ ஏதேதோ பேசினான். பங்கனனோ அவற்றைக் காதில் வாங்காமல் "இந்த நாயை மரக்கல தளத்திற்கு கொண்டு வாருங்கள்" என்றான்.

சிறிது நேரத்தில் அவனது கட்டளை நிறைவேறியது.

மரக்கல தளத்தில் ரணதீரன் படுக்க வைக்கப் பட்டான். அவனது கைகளும் கால்களும் நீட்டப்பட்டு மரக்கல கொக்கிகளில் கட்டப் பட்டன.

"ம். ஆகட்டும்" - என்று பங்கனன் கூறியதும் கொடுமையான தண்டனை துவங்கியது.

கொள்ளைக்கார சகாக்கள் கும்பலாக வந்து ரணதீரனின் உடலை மிதித்தார்கள் கண்மூடித்தனமாக. சேற்றை மிதிப்பது போல் ஈவிரக்கமின்றி அந்த மனிதர்கள் மிதித்ததால் கண்டபடி மிதியுண்ட ரணதீரன் "ஐயோ! ஐயோ" என்று கத்தினான். மிதித்தவர்களோ அவனை தங்கள் உபதலைவன் என்ற எண்ணத்தையே துறந்தவர்களாயும் மனித உடலை மிதிக்கிறோம் என்ற எண்ணமில்லாதவர்களாயும் காட்டு மிராண்டித் தனமாக நடந்து கொண்டார்கள். சித்திரவதைக்கு ஆளாகி ரணதீரன் மரண ஓலமிட்ட போது மரக்கலமே அதிர்ந்த மாதிரி இருந்தது. அவன் இறந்து போனதை உறுதி



செய்து கொண்ட பங்கனன் "இவனது உடல் இங்கேயே இருக்கட்டும். பறவைகள் பார்த்துக் கொள்ளும்" என்று கூறி விட்டு அகன்றான். வெறும் மாமிசக் குவியலாய் கிடந்த ரணதீரனின் உடலை மோப்பம் பிடித்து விட்ட கழுகுகள் விரைவிலேயே மரக்கலத் தளத்தில் கூடின. வட்டமிட்டன. மாமிசத்தைக் கொத்தின. தேவையில்லாமல் அடித்துக் கொண்டன. ஒரு சில கழுகுகள் மட்டும் இந்த வீண் சண்டையில் இறங்காமல் மாமிசப் பகுதிகளை கௌவிக் கொண்டு மரக்கல உச்சிக்குச் சென்று கடலை நோட்டமிடுவது போல் பார்த்தன. தன் கண்முன்னே நிறைவேற்றப்பட்ட மிருகத் தனமான தண்டனையைக் கண்ட பவானி நடுநடுங்கினான்.



இதே நேரத்தில் ஆபுத்திரனுக்கு முன் நாள் நடந்த சம்பவத்தைக் கேள்விப் பட்டு அவனிருந்த அறைக்குச் சென்றாள் சௌமியகுமாரி. ஆபுத்திரனை எப்போது சந்திக்க அவள் விரும்பினாலும் அதற்குத் தடை செய்ய வேண்டாம் என்று பங்கனன் திட்டமான கட்டளையிட்டிருந்தானாதலால் அவளைக் கண்டதும் காவலாளிகள் அவளுக்குத் தலையைத் தாழ்த்தி அறைக் கதவைத் திறந்து விட்டார்கள். உள்ளே தரையில் படுத்துக் கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த ஆபுத்திரனைக் கண்டதும் கண் கலங்கினாள்.

அவளைப் பார்த்ததும் எழுந்து அமர்ந்து கொண்ட ஆபுத்திரன் லேசாக சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" கலங்கிய நிலையிலேயே கேட்டாள்.

"நீ ஏன் கலங்கியிருக்கிறாய்?" அவளைத் திருப்பிக் கேட்டான் சேர வாலிபன்.

"என்னால் தான் உங்களுக்கு இந்த நிலை" என்றாள் அவள். இதைச் சொல்லும் போது அழுகையே வந்து விட்டது அவளுக்கு.

"எதற்காக அழுகிறாய்? என் நிலைமைக்கு யாரும் காரணமில்லை. நான் தான். அழாதே" என்றான்.

"இல்லை. நான் தான் காரணம். உங்களைத் தப்புவிக்க எனக்கு வாய்ப்பு கிடைத்தது. ஆனால் நான் தான் பாழாய்ப் போன நிபந்தனையை விதித்து வாய்ப்பை நழுவ விட்டேன். அதோடு விட்டிருக்கலாம். அராபியர் மரக்கலங்கள் பிரச்சனை வந்த போது யோசனையைக் கேட்கும் படி உங்களை இழுத்து விட்டதும் நான் தான். அதனால் தான் நீங்கள் யோசனையைச் சொல்லி, பிறகு உண்மையைச் சொல்லி, என் தந்தையின் சீற்றத்திற்கு ஆளாகி, குற்றவாளியைப் போல் இங்கே அனாதையாகத் தரையில் கிடக்கிறீர்கள்".

"அதெல்லாம் இல்லை. நான் இங்கு வந்தபோதே சூட்டோடு சூட்டாகத் தப்பியிருக்க வேண்டும். யாருக்கும் எந்தப் பிரச்சனையும் வந்திருக்காது. இந்த வெள்ளைத் தீவை பற்றியும் புதியதாகக் கட்டப் பட்ட கோட்டையைப் பற்றியும் தெரிந்து கொள்ள ஆசைப் பட்டது தான் இந்த நிலைக்கு இழுத்து விட்டது. வீணாகக் கவலைப் படாதே. நீ எனக்காக எதையும் செய்யத் தயாராக இருப்பவள் என்று எனக்குத் தெரியும்".

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போது சௌமிய குமாரிக்கு வேண்டிய ஒருவன் வந்து அவளது காதில் ஏதோ கூறி விட்டுப் போனான். அதைக் கேட்டதும்



பேச்சறுப் போன அவள், "பார்த்தீர்களா இந்த மாயாவி பவானி ஆடிய நாடகம் வெற்றி பெற்று விட்டது. அவள் சொன்ன பொய்யையெல்லாம் நம்பி ரணதீரர் கூறியதை ஒதுக்கித் தள்ளி துரோகிப் பட்டம் கட்டி விட்டார் என் தந்தை ரணதீரரை கொடுமையான முறையில் தண்டித்தும் விட்டாராம். எப்படித் தெரியுமா? ரணதீரரை கீழே கிடத்தி கொள்ளையர் அவரது உடலின் மீது ஏறி மிதித்துக் கொன்றார்களாம்" என்றாள்.

"இதென்ன காட்டுமிராண்டித் தனமாக இருக்கிறது?"

"தந்தை ரொம்பவும் மாறிவிட்டார். அரசகுலம் என்று பேசுகிறாரே தவிர கொள்ளையர்கள் குணம் தான் நிரம்ப இருக்கிறது. கொள்ளைக்காரர்களால் தான் இப்படி இரக்கமில்லாத தண்டனைகளை அளிக்க முடியும். அவர் நடத்தை எல்லாவற்றையும் பாருங்கள். திருமண வயதில் என்னைப் பெண்ணாக வைத்துக் கொண்டு என் வயதில் உள்ள பவானியோடு உறவாடுகிறார். மரக்கலங்களிலிருந்து தூக்கி வந்த அழகிகளை அந்தப்புரத்தில் வைத்து ஆனந்தப் படுகிறார். இதெல்லாம் ஒரு கவலையும் அற்ற கொள்ளையர் குணம்"

"உன் தாய் யார்? அவள் என்ன ஆனாள்?"

ஆபுத்திரனின் இந்தக் கேள்வியைக் கேட்டதும் கோமுகியின் கண்களில் நீர்முத்துக்கள் தோன்றின.

"என் தாய் சாதவாகன நாட்டில் பிறந்தவள். அவளை கள்வனாகச் சென்று கவர்ந்து வந்தார் என் தந்தை. பிரசவ காலத்தில் என் தாயை கவனிக்காமல் கொள்ளையிடப் போய் விட்டார் தந்தை. என்னைப் பெற்றுத் தந்து விட்டு இந்த உலகை விட்டுப் போய் விட்டாள் என் தாய். அன்று முதல் தீவு மக்கள்

தான் என்னைத் தங்கள் குழந்தையாய் எண்ணி வளர்த்தார்கள். இன்னமும் அதே பாசத்தோடு இருக்கிறார்கள்" என்று சொல்லிக் கொண்ட சௌமியகுமாரி. பழைய கதை சோகக் கதை. அது போகட்டும் வீரரே. இனியும் சோகம் தொடரக் கூடாது. என்னை நீங்கள் மணக்க வேண்டும் என்ற நிபந்தனையை கைவிட்டு விட்டேன். நீங்கள் தப்பினால் போதும். நீங்கள் இங்கேயே இருங்கள். இன்றிரவு தப்புவதற்கான ஏற்பாடுகளுடன் வருகிறேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள்.



ரணதீரனைத் தண்டித்த கையோடு பவானியை அவளது மாளிகைக்கு அனுப்பிய பங்களன் கூடவே வைத்தியனையும் பணிப்பெண்களையும் அனுப்பி வைத்தான்.

வைத்தியனிடம் "உனக்கு இரண்டு நாட்கள் அவகாசம் தருகிறேன். பவானியை உடல் ரீதியாகவும் மனரீதியாகவும் குணமடையச் செய்ய வேண்டியது உன் பொறுப்பு. இல்லையென்றால் உனக்கு வைத்தியம் பார்க்க வேண்டிய நிலை உண்டாகும்" என்று மிரட்டி அனுப்பி வைத்தான்.

அந்தரங்க ஒற்றர்களை அனுப்பி ரணதீரனைப் பற்றி கொள்ளையர்களும் தீவு வாசிகளும் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை ரகசியமாக அறிந்து வரும் படி கட்டளையிட்டான்.

"வைத்தியத்தைப் பற்றி எதுவும் அறியாத நிர்மூடன்" என்று முணுமுணுத்துக் கொண்டே போனார் வைத்தியர்.



பிறகு பங்களன் தன் உபதலைவர்களை எல்லாம் கூட்டி "உங்களையெல்லாம் நான் எதற்காக அழைத்திருக்கிறேன் தெரியுமா?" என்று கேட்டான்.

"ஆலோசனை நடத்தத் தான்" என்று கூற நினைத்த ஓர் உபதளபதி அதைக் கூறாமல் "தெரியவில்லை" என்று சொன்னான்.

உபதளபதியின் பயத்தைக் கண்டு உள்ளுக்குள் சிரித்துக் கொண்ட கொள்ளையர் தலைவன் "ரணதீரன் விஷயத்தில் நான் மேற்கொண்ட நடவடிக்கையைப் பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?" என்று கேட்டு எல்லோரது முகங்களையும் உற்று நோக்கினான்.

உபதலைவர்கள் திணறினார்கள்.





## அத்தியாம் பன்னிரண்டு



# அந்தப்புர அதிர்ச்சி

ராவணன் மட்டும் சற்றே பேச முற்பட்டு "தலைவர் சற்று நிதானித்திருக்கலாம்" - என்றான்.

"எதற்கு, அவன் என்னைக் கொல்வதற்கா?" -

"அதில்லை தலைவரே. ரணதீரர் நம்மோடு நீண்ட காலம் இருந்து தோள் கொடுத்தவர். பவானியோ திடீரென சில நாட்களுக்கு முன் வந்தவன்"

"அதனால்?"

"ரணதீரரை நீங்கள் சந்தேகித்தது அவசரமானது. அதில் கொஞ்சம் நிதானத்தைக் காட்டியிருக்கலாம். பவானியை நீங்கள் நம்பியதும் அவசரமானது. சற்று யோசித்திருக்கலாம்"



"நீண்ட நாள் தோள் கொடுத்தவர்கள் நிமிட நேரத்தில் காலைவார நினைப்பதும் சில நாட்களே பழகியவர்கள் உயிரையே தர முன் வருவதும் சகஜம். கொள்ளையர் வாழ்வில் இது தான் நிலை ரணதீரன் தண்டிக்கப் பட்டது சரிதான்"

"அப்படியே இருந்தாலும் தண்டனை நிறைவேற்றிய விதம் கொடுமையானது" என்றான் ராவணன்.

"ராவணா, நீ பேசுவதைப் பார்த்தால் நீ இங்கிருக்க வேண்டிய ஆளே இல்லை என்று தான் எண்ணத் தோன்றுகிறது. தலைவனுக்கு யார் மீதாவது சந்தேகம் வந்தாலே போதும் அவனது தலையைச் சீவ அதிகாரம் உண்டு. இது தெரியாதா உனக்கு? அதோடு நாம் அளிக்கும் தண்டனையைப் பார்க்கும் போதே பலபேர் சதி செய்யவோ புரட்சி செய்யவோ அஞ்சுவார்கள். பயம் தான் இங்கே மருந்து. இதோடு ரணதீரன் விஷயம் நிற்கட்டும். அவனைப் போன்று யாராவது முயற்சித்தாலோ அல்லது அவனை ஆதரித்தாலோ இதை விட பயங்கரமான தண்டனையை வழங்குவேன். நினைவிருக்கட்டும்" என்று கூறி விட்டு "விழாவிற்கு வந்த எனது விருந்தாளிகளை நான் சிறையில் அடைத்திருக்கிறேன். இதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"எதிர்கால எதிரிகளை வெளியே விட்டு வைப்பது ஆபத்து. அவர்களை கைது செய்து சிறையில் வைத்தது மிகவும் சரியான செயல்" என்று பாராட்டினான் அமீர்.

"நீ என்ன சொல்கிறாய் ராவணா?"

"அரசியலில் இது போன்ற காரியங்கள் தேவை தான். இல்லையென்றால் அவர்கள் வளர்ந்து நமக்குத் தொல்லையளிப்பார்கள்" என்றான் ராவணன்.

"மூன்றாவது ஆபுத்திரனின் விஷயம். அவனை நாளை தண்டிக்கவிருக்கிறேன்" என்றான் பங்கனன்.

"ஆபுத்திரன் செய்த தவறென்ன?" - கேட்டான் ராவணன்.

"மரக்கல விஷயத்தில் அவன் உண்மையை மறைத்தது."

"உண்மையை அவன் மறைக்கவில்லை. சொல்லத்தான் செய்தான்."

"சொல்ல வேண்டிய நேரத்தில் சொல்ல வில்லை ராவணா!"

"அப்போதே சொல்லியிருந்தால் உங்களால் என்ன செய்திருக்க முடியும்?"

"செங்குட்டுவனை பிடித்திருப்பேன்"

"அது முடியும் என்று தோன்றவில்லை. அதனால் என்ன? ஆபுத்திரன் இங்கு தான் இருக்கிறான். அவனை எதற்காகக் கடத்தினோமோ அக்காரணமும் அப்படியே இருக்கிறது. அவனைப் பழைய படியே சேர மன்னனை இங்கே அழைத்து வர கட்டாயப் படுத்துவோமே? தண்டனை எதற்கு?"

"ராவணா, இனிமேலும் அவன் என் சொற்படி நடப்பான் என்று என்ன நிச்சயம்? அதோடு அவன் அடிபட்ட பாம்பு. அது கடிக்காமல் விடாது. நமது கோட்டையின் சூட்சமங்களும், தீவுகளைப் பற்றியும் மரக்கல எண்ணிக்கை பற்றியும், தற்போது பெரும்பாலான கப்பல்கள் பழுதுபார்க்க அனுப்பப்பட்டுள்ளன என்பதும் அவனுக்குத் தெரிந்து விட்டது. இந்த நிலையில் அவனைச் சேரநாட்டிற்கு அனுப்பினால் அவன் சேரமன்னனை அழைத்து



வரமாட்டான். சேரர் படையை அழைத்து வருவான். அதை எதிர் கொள்ளும் பலம் நம்மிடம் இருக்கிறதா?"

"இல்லை இல்லை, இல்லவே இல்லை. இப்போதைக்கு ஆபுத்திரனை அனுப்பக் கூடாது. மிகவும் கஷ்டப்பட்டு அவனைக் கடத்தி வந்தவன் நான்" என்றான் அமீர்.

அவனை இகழ்ச்சியுடன் பார்த்த ராவணன் பங்கனனை நோக்கி "தலைவரே, ஆபுத்திரனுக்கு நீங்கள் என்ன தண்டனையை வழங்குவதாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"முகத்தைச் சேதாரப்படுத்தி பார்ப்பதற்கே அருவருப்பாக இருக்கும் படிச் செய்து ஏகடித் தீவில் அடிமை வர்த்தகனிடம் விற்று விடப் போகிறேன்"

"ஏன், கொலை தண்டனை அளிக்க வில்லையா?"

"கொல்வதை விட இது குரூரமானது. வாழ்நாள் முழுதும் தன் முகத்தை எண்ணி எண்ணி அவன் அழவேண்டும்."

"நீங்கள் சொல்வது தவறு தலைவரே. அந்த தண்டனைக்கு ஏற்றவன் அவனல்ல. அந்த அளவிற்கு அவன் பெரும் பாதகம் எதுவும் செய்யவில்லை"

"ராவணா, எனக்கு எதிரான ஆலோசனைகள் எனக்குப் பிடிக்காது. இது உனக்குத் தெரியுமல்லவா?"

"தெரியும். ஆனால் உங்களுக்கு எதிரான ஆலோசனை எதையும் நான் கூறவில்லை. உங்கள் நன்மைக்காகவே சொல்கிறேன். ஆபுத்திரனை சேரநாட்டுக்கு அனுப்பாமல் இங்கேயே வைத்துக் கொண்டு தண்டனையும் அளித்து

விட்டால் சேரர் படை பேசாமல் இருந்து விடுமா? சொல்லப் போனால் ஆபுத்திரன் இங்கிருப்பது சேரமன்னனுக்குத் தெரிந்து விட்டது. தனக்கு மிகவும் வேண்டிய வீரனைக் காக்க சேர மன்னர் ஏற்கனவே முடிவெடுத்திருக்கலாம் அல்லவா? இந்த கோணத்தில் நீங்கள் ஏன் சிந்திக்கவில்லை? தற்போதைய நிலையில் சேரர் படை வந்தால் உங்கள் எதிர்காலக் கனவுகள் தகர்ந்து விடும்"

சாதாரணமாக தனக்குப் பிடிக்காத விஷயங்களைச் சொல்பவர்களை வெறுப்பவனான பங்களன் ராவணன் கூறுவதில் உண்மையிருப்பதை உணர்ந்ததால் பொறுமையோடு கேட்டு விட்டு "இப்போது நீ என்ன சொல்கிறாய் ராவணா!" என்று அக்கறையோடு கேட்டான்.

"நீங்கள் செய்த புண்ணியம் காரணமாக உங்கள் மகள் ஆபுத்திரனை நேசிக்கிறாள். எனவே விஷயத்தை அவள் மூலமாக அவனுக்குச் சொல்ல வைத்து நிறைவேற்றப் பாருங்கள்"

"ஆபுத்திரன் இங்கிருந்து தப்புவதற்குச் சதி செய்தவள் அவள். சற்று முன்பு கூட அவனைப் போய் சந்தித்து விட்டு வந்ததாக என் ஒற்றர்கள் சொன்னார்கள்."

"அது பழையகதை. உங்கள் மீதிருந்த கோபமே அதற்குக் காரணம். இப்போது கூட அவள் முயற்சி செய்வதெல்லாம் அவனைத் தண்டனையிலிருந்து காப்பாற்றுவதற்காகத் தான். நீங்கள் தண்டனையை ரத்து



செய்து அவளிடமே உதவி கோரினால் நிச்சயமாக அவள் கேட்பாள். ஆபுத்திரனின் மனதை மாற்றும் திறமை அவளிடம் உண்டு"

"ராவணா, அவனை நான் சந்திப்பதற்கு முன் நீ அவனை ஒருமுறை பார்த்துப் பேசு. பிறகு நான் பேசுகிறேன்"

"நல்லது தலைவரே" என்றான் ராவணன். ஆனால் இந்தப் பேச்சும் முடிவும் அபிநந்தருக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை.



பலத்த யோசனையில் இருந்த பங்களன் நெடுநேரம் வரை கோட்டைக்குள்ளேயே பல இடங்களுக்குச் சென்றானே தவிர ஒருவரோடும் பேசவில்லை. கணிசமான நேரமான பின் அவனது மனம் சுகவனத்தை நாடினாலும் கால்கள் அந்தப் புரத்திற்கு அழைத்துச் சென்றன. அங்கே ராணி என்ற அந்தஸ்திற்கு உரியவள் யாரும் இல்லை என்றாலும் பல அழகிகள் இருந்தார்கள். அவனுக்கென்று. ஒவ்வொரு கொள்ளையின் போதும் தவறாமல் அவன் கைப்பற்றும் பொருள் 'அழகி' என்ற பொருள் தான். அப்படிக் கைப்பற்றிய அழகிகளைத் தனக்கே சொந்தம் என்று ஓரிடத்திற்கு கொண்டு வந்து சேர்த்த இடம் அவனது அந்தப்புரமாகியது. கொள்ளையிட்ட ஆடை அணிகளில் கணிசமான பகுதி அந்த அழகிகளுக்குப் போய்ச் சேர்ந்ததால் அவற்றை அணிந்து கொண்டு ஒவ்வொருத்தியுமே ஓர் ராணி

போலவே ஜொலித்தாள். உணவு வகைவராக்களும் அவர்களது இஷ்டத்திற்கு வந்து கொண்டிருந்ததால், மலை தேசத்து பூச்செடிகளைப் போல செழித்திருந்த அவர்கள் சுகமென்ற மனைத்தை பங்களனுக்கு திகட்டும் வரை அளித்து அவர்களும களித்து வந்தார்கள். எந்த வேலை இருந்தாலும் நள்ளிரவு நேரத்திற்கு அந்தப் புரத்திற்கு வந்து விடும் பஙகளன் பொழுது விடியும் வரை அவர்களது இடுப்பை ஒடிப்பதை வாடிக்கையாகக் கொண்டிருந்தான். கதிரவனை எதிர் பார்த்து மலர்வதற்கு ஏங்கிக் கொண்டிருக்கும் தாமரை மொட்டுக்களைப் போன்ற அழகிகள் அவன் வந்ததும் அவனிடம் தங்கள் திறமைகளைக் காட்டிப் போரிடுவார்கள். இடுப்பு ஒடிந்த பின் இரிசு ஒடிந்த தேரைப போல உருண்டு விழுவார்கள். இந்த நிலை அவர்களுக்கு ஆனந்தமாக இருந்தது.

ஆனால் பவானி வந்த பின்பு பங்களன் அந்தப் புரத்திற்குச் சரிவர வரவில்லை. காரணம் என்ன என்று அழகிகளுக்குத் தெரியவில்லை என்றாலும் அவனிடம் கேட்பதற்கு அச்சபபட்டு அவனது வரவை எதிர் பார்த்தவர்களாய், ஏக்கக் குவியல்களாய் கிடந்தார்கள். இந்த நிலையில் என்றுமில்லா பெரும் விருந்து போல நள்ளிரவுக்குச் சற்று முன்பாகவே அந்தப் புரத்திற்குள் நுழைந்த பங்களனைக் கண்டதும் அமுதம் பருகிய அரக்கிகளைப் போல் மகா கிளர்ச்சியடைந்தனர்.

ஆனால் பங்களனோ மாமிச மலையாக வராமல் வெறும் பாறைமலையாக வந்து கொண்டிருந்ததை



அறியாத அவர்கள் தங்களை ஒருவருக்கொருவர் கட்டிப் பிடித்துக் கொண்டு கூத்தாடினர்.

"பேய்களே! நிறுத்துங்கள் உங்கள் ஆட்டங்களை" என்று கூச்சலிட்டான் அவன்.

அழகிகள் பேரதிர்ச்சியடைந்தார்கள். பெண் என்றால் பிரதானமானது முதலில் அழகு தான். அந்த வலையில் விழாத ஆடவர்களே இருக்க முடியாது. அதிலும பங்களன் அழகைப் பார்த்துத் தான் பெண்களையே அந்தப்புரத்திற்குக் கொண்டு வந்திருந்தான். தான் கவர்ந்து வந்த அழகிகளின் பேரழகில் மயங்கி, அழகான பொருட்களையெல்லாம் தேடித் தேடி அவர்களோடு ஒப்பிட்டு, அசடு வழிவான் அவன். அழகான பெண்களின் அழகை வர்ணிப்பதில திருப்தியடையாத ஆண்களோ, ஆண்களால் தங்களது அழகு பாராட்டப்படுவதைக் கண்டு மகிழாத பெண்களோ பெரும்பாலும் இருக்க மாட்டார்கள். பஙகளனோ அதை ஒரு வேலையாகவே தினம் செய்து வந்தான். அவனது அறையில் அவனும் அந்தப்புரப் பெண்களும் சரசமாடும் லீலைகளை ஓவியங்களாகச் சுவற்றில் எழுதச் சொல்லி அழகிகளுக்குக் காட்டி ரசிப்பவன் அவன். அப்படிப்பட்டவன் தங்களைப் பேய்களாகச் சொன்னதும தங்கள் அழகெல்லாம் பறிபோய் விட்ட மாதிரி இருந்தது அந்தப்புரப் பெண்களுக்கு. எந்தத் துன்பத்தையும மறக்கடிக்கும் இடத்திற்கு வந்து துன்பத்தை துரப்பதை விட்டு விட்டு இன்பத்தை துறக்க முயலும் பங்களன் மீது

அவர்களுக்குக் கோபமாக வந்தது. பதைபோ பறிகொடுத்து விட்ட மாதிரி தவித்தார்கள்.

பங்களன் வேறு விதமான தவிப்பில் இருந்தான். ராவணன் கூறிய யோசனையை ஏற்றுக் கொண்டு வந்திருந்தாலும் ஏகப்பட்ட சந்தேகங்கள் அவனை வாட்டின. ரணதீரன் பவானியோடு சேர்ந்து கொண்டு தன்னைக் கவிழ்க்க நினைத்தது போல் ராவணனும் சௌமியகுமாரியுடன் சேர்ந்து கொண்டு சதி செய்கிறானோ என்று சந்தேகப் பட்டான். ஏறக்குறைய சௌமியகுமாரியும் ராவணனும் ஒரே சிந்தனையில் இருப்பதாகவும் ஆபுத்திரனை ஆதரிப்பதாகவும் தோன்றியதால் இந்த மூவருமே தனக்கு எதிராகக் கிளம்பி விட்டார்களோ என்று எண்ணிக் கொண்டு பெரிதும் தவித்தான் அவன். சந்தேகத்தை மற்றொரு சந்தேகம் தீர்க்காது. நம்பிக்கை தான் சந்தேகத்தை அழிக்கவல்லது. அதை உண்டாக்கிக் கொள்ளாமல் மேன்மேலும் புதிய சந்தேகங்களை உருவாக்கிக் கொண்டதால் சந்தேகச் சிறையில் தானே அடைபட்டது போலத் தோன்றியது கொள்ளையர் தலைவனுக்கு. பேசாமல் ரகசியமாக கொலைகாரனை அனுப்பி ராவணனைக் கொன்று விட்டால் என்ன என்று நினைத்தான்.

அந்த நேரத்தில் முகப்பு வாசல் மணி ஒலிக்கவே பணிப்பெண் ஒருத்தி வாசலுக்குச் சென்று வந்தாள். வந்தவள் பங்களனிடம் "ஐயா, உபதளபதி ராவணன் வந்திருந்தார். தனது காரியம் சுபமாக முடிந்து விட்டதாகவும் தாங்கள் சந்தோஷமாக இருக்க வேண்டும்



என்றும் சொல்லச் சொல்லி விட்டுப் போய்விட்டார்" என்றாள்.

"அப்படியா சொன்னான்!" என்று மகிழ்ச்சியோடு கேட்ட கொள்ளையர் தலைவன் பணிப் பெண்ணைப் பார்த்து "வா, இப்படி" என்றான். அவள் அருகே வந்ததும் அப்படியே வாரி அணைத்தான்.

எதிர்பாராத இன்ப அதிர்ச்சியால் தவித்துப் போன பணிப்பெண், "ஐயா, நான் பணிப்பெண்" என்றாள். அவனிடமிருந்து உதடுகளை விலக்கிக்கொண்டாள்.

"அதனால் என்ன பெண்ணே? அழகிகள் தான் இன்பத்தைத் தருவார்களா? அமுதச் செய்தியைச் சொன்ன பணிப் பெண்கள் தரமாட்டார்களா? ஏன் பதட்டப் படுகிறாய்? ஆடைக்குள்ளே எல்லோரும் ஒன்று தான்" என்று கூறி அவளை அப்படியே அள்ளிக் கொண்டு பள்ளியறைக்குச் சென்றான். கதவைச் சாத்தினான்.

அவனுக்காக ஏங்கிக் கொண்டிருந்த அழகிகளின் நிலை சொல்லும் நிலையில் இல்லை. பணிப்பெண்ணுக்கு வந்த வாழ்வை எண்ணி அவர்களது மார்புகள் விம்மிப் புடைத்துப் படபடத்தன. பணிப் பெண்ணை அவன் தூக்கிச் சென்றதை விட அவன் வீசிய வார்த்தைகள் அவர்களைப் பெரிதும் கலக்கின. "அப்படியென்ன அமுத வார்த்தைகளைக் கூறியிருப்பாள்? நாங்கள் வீசாத வார்த்தைகளா? எத்தனை முறை வார்த்தைகளால் அவரைக் குளிப்பாட்டியிருப்போம்? அதெல்லாம் மறந்து போய் விட்டதா அவருக்கு? ஆடைக்குள் எல்லோரும் ஒன்று தானாமே? அதெப்படி சரி? எங்களால் வாரி

இறைக்க முடியாத எதை இந்தப் பணிப் பெண் அன்
வீசிவிடுவாள்?" என்று முணுமுணுத்துக் கொண்டார்கள்

பங்கனனோ விடியும் வரை அந்தப் ப
பெண்மணியிடமே காலத்தைக் கழித்தான். விடி
கொஞ்ச நேரத்திலேயே அறைக்கதவுகள் தட்டப்பட்டன

"எழுந்திருங்கள் தலைவரே. எழுந்திருங்கள். நா
மோசம் போய்விட்டோம்" என்று அவனது சகாக்க
அலறினார்கள்.







# அத்தியாயம் பதிமூன்று



## கொள்ளையர்கள்

தனது சகாக்கள் தானிருந்த அறைக்கதவை மூர்க்கமாகத் தட்டி எழுந்து கொள்ளும் படியும், மோசம் போய் விட்டதாகவும் அலறிய போது பணிப்பெண்ணை உதறிவிட்டு ஓரளவிற்கு ஆடைகளை சரி செய்து கொண்டு கதவைத் திறந்தான் பங்களன்.

வந்தவர்கள் எரிமலை போல் காணப்பட்டார்கள்.

"என் அந்தப் புரத்திற்குள் அத்து மீறி நுழைந்து அகால வேளையில் கதவைத் தட்டும் அளவிற்கு என்ன நடந்து விட்டது?" - என்று எரிந்து விழுந்தான் பங்களன்.

"வந்து பாருங்கள்" என்றார்கள் சகாக்கள்.

"விரைவென்ன என்பதை நீங்கள் வாயைத் திறந்து சொல்லமாட்டீர்களோ!" - மீண்டும் சீறினான் பங்களன்.

"அராபியக் கொள்ளையர்கள் மரக்கலங்களில் வந்து கொண்டிருக்கிறார்கள்" - என்றான பிருதாபத்திரன் என்ற உபதளைவன்.

அதை உறுதிசெய்வது போல் கொள்ளையர் மரக்கலங்களிடமிருந்து எழும்பும் கொம்பொலி கடல் பகுதியிலிருந்து பேரிரைச்சலாக எழுந்தது. அதைத் தொடர்ந்து வெள்ளைத் தீவுகளுக்கு ஆபத்து வரும் காலங்களில் எழுப்பப்படும் பஞ்சமுகப் பேரிகையின் சப்தமும் பயங்கரமாகக் கேட்டது.

உண்மையிலேயே விபரீதம் உண்டாகி விட்டதை உணர்ந்த பங்களன் தனது அரண்மனையின் மேல விதானத்திற்கு வந்தான். வெள்ளைத் தீவுகளுக்கு நேரெதிரில் கடல் பகுதியில் புகைமண்டலத்தைக் கிளப்பிக் கொண்டு வந்த படகு அவனது கண்ணில் புலப்பட்டது. காலை நேரமாக இருந்தாலும் கதிரவனின் கதிர்கள் புறப்பட்டு விட்டதாலும் புகை மண்டலமானது விரைவிலேயே விலகி விட்டதால் அதற்குப் பின்னால் கரும் பிசாசுகள் போல் வந்து கொண்டிருந்த மரக்கலங்களையும் காணமுடிந்தது அவனால். கொள்ளையர் கலங்களில் பறக்கும் சிவப்பு நிற கொடிகளும் அவற்றிலிருந்த மண்டையோட்டு அடையாளங்களும் அவை கொள்ளையர் கலங்கள் தான் என்பதைப் பறைசாற்றின. அரபுக் கடல் பிராந்தியத்தில் தன்னை விட்டால் கொள்ளைத் தொழிலைச் செய்வது அராபியர் மரக்கலங்கள் தான் என்பது உண்மையானதாக இருந்ததால், தன்னை நெருங்கும் ஆபத்து எது என்பது தெளிவாகப் புரிந்தது பங்களனுக்கு.



சாதாரணமாக அவனது கப்பல்கள் அரபுக் கடலில் கூட்டமாகத் திரியும். வணிக மரக்கலங்கள் கண்ணில் பட்டால் அவற்றைச் சூழ்ந்து கொண்டு சூறையாடும். வணிகக் கலங்களில் இருப்பவர்கள் பெரும் பாலும் வெட்டி வீழ்த்தப் படுவார்கள். தேவைப் பட்டால் கைது செய்யப்பட்டு வெள்ளைத் தீவுகளில் அடிமைகளாகப் பணியமர்த்தப் படுவார்கள். ஒருசில நேரங்களில் அடிமை வர்த்தகர்களுக்கு விற்கப்படுவார்கள். வணிக கப்பல்கள் கைப்பற்றப் பட்டு அதிலிருக்கும் பொருட்கள் வெள்ளைத் தீவுக்கு கொண்டு செல்லப்படும். கப்பல்கள் பழுது பார்க்கப்பட்டு கொள்ளையர் கலங்களாக மாற்றப்படும். பெரும்பாலும் இவை தான் பங்களன் தொழிலாக இருந்தன. அவன் வெள்ளைத் தீவுகளின் ஆதிக்கத்தை பெற்ற போது அவை யாவும் சீரழிந்த நிலையில் இருந்தன. சேரரது படைகள் ஒவ்வொரு முறையும் வெள்ளைத் தீவு கொள்ளையர்களை அழிப்பதை லட்சியமாகக் கொண்டு செயல்பட்டு வந்ததால் தீவுகள் சேரர் படையால் தாக்கப்பட்டுச் சீரழிந்தன. அதுவும் செங்குட்டுவனின் தந்தை இத்தீவுகளை உக்கிரமாகத் தாக்கி அத்தீவின் கௌரவச் சின்னமான கடம்ப மரங்களை ஒன்று விடாமல் அழித்தான். அம்மரங்களைக் கொண்டு முரசுகளை செய்து அவற்றை வெள்ளைத் தீவில் வெற்றி முரசுகளாக ஒரு வார காலத்திற்கு ஒலிக்கச் செய்தான். அவனது தாக்குதலில் குற்றுயிரும் கொலையுயிருமாய தப்பிய கொள்ளையர்கள் எழில் மலைக் காடுகளில் ஒளிந்து வாழ்ந்தார்கள். பங்களன் தான் அவர்களை ஒன்று திரட்டினான். அவர்களை உற்சாகப் படுத்தி வெள்ளைத் தீவுகளுக்கு அழைத்து வந்தான். சேதமாகிக் கிடந்த மரக்கலங்களில் இரண்டைப் பழுது பார்த்து அவைகளைக் கொள்ளையர் கலங்களாக மாற்றினான். வெள்ளைத் தீவை

பழைய நிலைக்குக் கொண்டு வருவதற்காக கொள்ளைத் தொழிலைத் துவக்கினான். சேரலாதன் மாண்ட பிறகு சேரரது கவனம் கொள்ளியர் மீது சற்றே விலகியதால அச்சந்தர்ப்பத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்ட பங்களன் கடல் கொள்ளைகளை முழுமூரப் பற்றி செல்வங்களை ஏராளமாகச் சேர்த்துத் தன்னைக் கடம்ப அரசனாக முடிசூட்டிக் கொண்டான். அதற்குப் பிறகு அவனது மரக்கலங்களின் எண்ணிக்கையும் பெருகியது. கொள்ளையர்கள் மற்றும் மாலுமிகளின் எண்ணிக்கையும் பெருகியது. அவனது வளர்ச்சியைக் கண்டு அத்தீவுகளுக்கு நேரெதிரே கடற்கரை நாடாக இருந்த துளு நாட்டு மன்னன் பங்களன் மீது பொறாமையும் அச்சமும் கொண்டு அவனுடன் நட்பு கொண்டான். பங்களன் தன் மீது தாக்குதல் தொடுக்காமலிருக்க அவனை கடற்கொள்ளைகளுக்குத் தூண்டி விட்டும் அதற்கு உதவியும் வந்தான் துளு நாட்டு மன்னன். அவனது உள் நோக்கத்தை அறியாத பங்களனும் அவனை நண்பனாகக் கருதி தனது கவனம் முழுவதையும் கடல் கொள்ளை மீது செலுத்தினான். வெட்ட வெளியாய் இருந்த வெள்ளைத் தீவுக் கூட்டத்தில நடுநாயகமாக இருந்த பெரிய தீவினை தனது இருப்பிடமாகத் தேர்ந்தெடுத்து அதைப் பாதுகாக்க பெரும் கோட்டை ஒன்றையும் கட்டினான். அதைச் சுற்றி காலவாய் அமைத்து அதற்குள் கடல் நீரைச் செலுத்தி அகழியாக மாற்றினான்.

இப்படி படிப்படியாக வளர்ந்த நிலையில் தான் பங்களனுக்கு பேராசை எழுந்தது. சேர நாட்டையும் துளு நாட்டையும் கவர ஆசைப்பட்டான். முதல் படியாக துளுநாட்டின் நட்பை துண்டித்துக் கொண்டான். அதற்கேற்ப



துளுநாட்டு மன்னனும் அவனிடமிருந்து ஒதுங்கி வந்தபடியால் பங்களனுக்கு அவனது நட்பைத் துண்டிக்க எளிதாக இருந்தது. சேரநாட்டை எப்படி விழுங்குவது என்று யோசித்த போது தான் ஆபுத்திரனை கடத்தினான்.

மொத்தத்தில வெள்ளைத் தீவுகளை புனர் நிர்மாணம் செய்து அதன் மன்னனாகத் தன்னை அறிவித்துக் கொண்டதிலிருந்து அவனது மரக்கலங்கள் கடலில் திரிந்து கொள்ளைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தன. மற்றபடி அவனது இருப்பிடத்தைத் தேடி எந்த கொள்ளை மரக்கலங்களும் வந்து தாக்கியதில்லை. அராபியக் கொள்ளையர்களைப் பற்றி அவன் அறிந்திருந்தான். தன்னை விட அவர்களது பலம் அதிகம் என்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் அவர்களது மரக்கலங்கள் பெரும்பாலும் அராபிய வளைகுடா பகுதியிலேயே கொள்ளைத் தொழிலைச் செய்து வந்தன. சேரர் கடற்கரைப் பகுதியில் தான் இருந்த காரணத்தாலேயே, அராபியர்கள் வெள்ளைத் தீவின் பக்கமாகவோ சேரரது கடற்கரை பக்கமாகவோ தலைகாட்டாமல் இருந்தார்கள். அப்படிப் பட்டவர்கள் திடீரென தனது தீவை நோக்கியே கொள்ளையடிக்க வந்து விட்டதைக் கண்ட போது அவனுக்கு வியப்பாகவும் இருந்தது. திகிலாகவும் இருந்தது.

நடுக்கடலில் கொள்ளையடித்து செழிப்பாக இருந்து வந்த அராபிய கொள்ளையர்கள் வெள்ளைத் தீவைத் தாக்க வர வேண்டிய அவசியமென்ன என்பது பங்களனுக்கு விளங்காதப் புதிராக இருந்தது.

காரணம் எதுவாக இருந்தாலும் இந்தத் தாக்குதல் நடைபெற்றால வெள்ளைத் தீவுக் கோட்டையில் உள்ள

கொள்ளையில் பெறப்பட்ட அனைத்துச் செல்வங்களும் அராபியர் வசம் போய்விடும் என்பது மட்டும் சந்தேகத்திற்கிடமின்றி தெரிந்தது பங்களனுக்கு. அப்படியொரு நிலை ஏற்படும் பட்சத்தில் அராபியன் தன்னை உயிரோடு விட்டு வைக்க மாட்டான் என்பதும் அவனுக்குத் தெரிந்தது. அவனைப் பொருத்த வரை தன்னிடம் இருக்கும் கொள்ளையர்கள் என்னதான் பலாளியிடம் போர் பயிற்சியைப் பெற்றிருந்தாலும் மூர்க்கத்தனம் மிகுந்த அராபிய கொள்ளைக் காரர்களிடம் போரிட்டு வெல்ல முடியாது என்பதே தீர்மானமாக இருந்தது. எனவே தன்னை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு பிருதாபத்திரனிடம் தனது திட்டத்தை பங்களன் கூறிய போது பிருதாபத்திரன் பெரிதும் அதிர்ச்சியடைந்தான்.

அதைக் கண்ட பங்களன் "என்ன அப்படிப் பார்க்கிறாய்? கோழைத் தனமான யோசனையைச் சொல்கிறேனே என்று நினைக்கிறாயா?" என்று கேட்டான்.

"உங்களுக்கு இது வீரமுள்ள செய்கையாகத் தெரிகிறதா?" - கேட்டான் பிருதாபத்திரன்.

"பிருதாபத்திரா, நமது கோட்டையில் குவிக்கப் பட்டுள்ள செல்வங்களைப் பெற நாம் என்னென்ன கஷ்டங்களையெல்லாம் அனுபவித்திருக்கிறோம்? உனக்குத் தெரியாதா? உயிரைப் பணயம் வைத்து கொள்ளையடித்து சேர்த்த செல்வங்கள் இவை. இவற்றையெல்லாம் அராபிய நாய்களுக்கு விட்டுவிட்டுப் போகச் சொல்கிறாயா?" -

"தலைவரே, இக்கெட்டு வரும்போது ஓடி விடவா இக்கோட்டையைக் கட்டினீர்கள்?"



"பாதுகாப்பிற்காகக் கட்டினேன் பிறகு போரிடுவதற்கு ஏற்ற மாதிரி மாற்றங்களைச் செய்தேன் உங்களுக்கெல்லாம் போர்ப்பயிற்சியளித்தேன் இதெல்லாம் எதற்காக? பகைவர்கள் போர் தொடுக்கும் போது எதிர்ப்பதற்காக. அதுவும் குறிப்பாகச் சேரப்படையை எதிர்க்கவே கோட்டையை கட்டினேன். ஆனால் தற்போது வந்திருப்பது போர்தொடுக்கப் போகும் முறையான கடற்படையல்ல. நம்மைப் போன்ற கடல் கொள்ளைக்காரர்கள். இவர்களோடு நாம் போர் புரிய முடியாது. அதோடு நம்மிடம் இருப்பது வெறும் பத்து கப்பல்கள் தான். மற்றவை பழுது பார்ப்பதற்காக ஏகடித் தீவுக்குப் போய் விட்டன. தெரியுமா?"

"அப்படியானால் உங்கள் முடிவு இது தானா?"

"ஆமாம்"

"நமது சகாக்களையும் தீவு மக்களையும் அராபிய கொள்ளைக் காரர்களுக்கு காவு கொடுத்து விட்டு செல்வங்களை அள்ளிக் கொண்டு நீங்கள் மட்டும் எழில் மலைக்கு ஓடி விடுவதாகச் சொல்கிறீர்களே, இது துரோகமில்லையா?" -

"நான் தப்பி ஓடவில்லை. வெற்றி பெற முடியாத போது விலகிப் போய் பதுங்குகிறேன். புலி பதுங்குவது பாய்வதற்காகத் தான்"

"வெள்ளைத் தீவு முற்றிலுமாக அழிந்து இங்கிருப்பவர் அனைவரும் மாண்டு வீழ்ந்தபின் புலி பாய்ந்தால் என்ன சீறினால் என்ன? தாங்கள் வீரர் என்றால் அராபியர்களுடன் மோதி, தோற்றாலும் பரவாயில்லை என்று முயல வேண்டும்

அதுதான் உங்களுக்கு கௌரவத்தை அளிக்கும். சரித்திரத்தில் நிலையான இடத்தைப் பிடிக்கும்"

"கொள்ளைக் காரர்கள் சரித்திரத்தில் இடம்பெற ஆசைப்படுவதில்லை. கொள்ளையடிக்கவும் செழிப்பாக வாழவும் பிறருக்குச் சிம்ம சொப்பனமாக இருக்கவுமே ஆசைப்படுவார்கள்"

"தாங்கள் என்னவோ தங்களை மன்னர் குலம் என்றும் கடம்பவம்சம் என்றுமல்லவா சொன்னீர்கள்? ஆபுத்திரனிடம் வாதாடினீர்கள்? அதெல்லாம் பொய்யா? நீங்கள் வெறும் கொள்ளைக்காரர் தானா?"

"பிருதாபத்ரா" - என்று ஓங்கி அழைத்த பங்களன், "என்னை வசை பாடவா எனக்கு உபதலைவனாக இருக்கிறாய்? வெந்த புண்ணில் வேலை பாய்ச்சவா என்னைத் தேடி வந்தாய்? உன் பேச்சைக் கேட்டுக் கொண்டு போர் என்ற பெயரில் வீணாகச் சாகச் சொல்கிறாயா? இல்லாத ஊருக்குப் பயணம் செல்ல நான் தயாராக இல்லை" என்று கடுகடுத்தான்.

"மோத வேண்டாமென்றால் ஏதாவது தந்திரம் செய்யலாமே?"

"யாரிடம்? அராபிய கொள்ளையரிடமா? கொள்ளையர் தந்திரம் கொள்ளையரிடம் பலிக்குமா? அதுவும் தாவூத்திடமா? கல்லில் கூட நாரை உரிக்கலாம். தாவூத்திடம் தந்திரம் செய்ய முடியாது பிருதாபத்திரா? இவ்வளவு பேசுகிறாயே, ஏன் ஏதாவது உபயோகமான யோசனை ஏதாவது சொல்வது தானே?"

"தலைவரே, அராபியருக்கு பயந்து நாம் ஓடுவதை விட அவனுக்குப் பணிவோம். வெள்ளைத் தீவை ஒப்படைப்போம்.



தாவூத் நமது கோட்டைக்குள் வந்து விட்டால் அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் தந்திரமாக அழிப்பது பெரிய விஷயமல்ல. இது கொள்ளையருக்கு ஏற்ற திட்டம்"

"நீ நினைப்பது போல எல்லாம் நடக்கும் என்று எப்படி நம்ப முடியும்? கோட்டைக்குள் பிரவேசிக்கும் தாவூத் முதலில் நமது தலையைக் கொய்து கழுகுகளுக்கு போட்டு விட்டால் என்னாவது"

"அதைரியமானவர்கள் அவநம்பிக்கையோடு இருந்தால் பேசிக் கொண்டிருக்க வேண்டியது தான். கொள்ளையர் வாழ்க்கை என்றுமே நிச்சயமில்லாதது தான். ஆகவே தயங்கிக் கொண்டிருக்காமல் முயற்சி செய்வோம்"

பிருதாபத்திரன் இவ்வாறு கூறிக் கொண்டிருந்த போது கடல் பகுதியில் பெரும் இரைச்சல் கேட்கவே அப்புறம் திரும்பினான் பங்களன். அங்கே கண்ட காட்சியை அவனாலேயே நம்ப முடியவில்லை. வெள்ளைத் தீவுகளின் மேற்கே கடற்புறத்தில் கோடு போட்டது போல் வரிசையாக நங்கூரமிட்டு நின்றிருந்த அவனது பத்து மரக்கலங்களில் நடுவில் இருந்த இரண்டு மரக்கலங்கள் பற்றி எரிந்தன. மற்ற எட்டு மரக்கலங்களும் நான்கு நான்கு கலங்களாக வெள்ளைத் தீவின் பக்கவாட்டில் திரும்பிக் கொண்டிருந்தன.

"பிருதாபத்ரா, என்ன இது? நாம இங்கே இருக்கிறோம். அங்கே யார் செயல் படுவது? நமது மரக்கலங்களைப் பற்ற வைத்தது யார்? ஏன்?" - என்று பதறும் குரலில் கேட்டான் பங்களன்.

"ஆபுத்திரன் தான் தந்தையே" - என்று கூறியபடி அங்கே பிரவேசித்தாள் சௌமியகுமாரி.

"ஆபுத்திரனா? அவன் ஏன் இங்கு வந்தான்? மரக்கலங்களுக்கு எதற்காகத் தீ வைக்கிறான்?" என்று இரைந்தான் பங்கனன்.

"அவரை அனுப்பியது நான் தான் தந்தையே. அபாய மணி ஒலித்ததைக் கேட்டதுமே உங்களைத் தேடித் தான் வந்தேன் நான். ஆனால் நீங்கள் பேசிய பேச்சு எனக்கு அருவெறுப்பைத் தந்தது. வெள்ளைத் தீவுகளை உங்களால் காப்பாற்ற முடியாது என்பதை அறிந்தேன். இத்தீவைக் காப்பாற்ற வேண்டிய கடமை உங்கள் மகள் என்ற முறையில் எனக்கும் உண்டு என்பதால் ஆபுத்திரரிடம் உதவும் படி கேட்டேன். முதலில் மறுத்த அவர் இத்தீவின் அப்பாவி மக்களைக் காப்பாற்றுவதற்காக முன் வந்தார். அவர் கட்டளைப் படி கலங்கள் இயங்குகின்றன" என்றாள் சௌமியகுமாரி.

"மரக்கலங்களை எதற்காகப் பற்ற வைத்தான்? அவற்றில் பாய்களை வேறு விரித்திருக்கிறான். தீ விரைவாகப் பரவி கப்பல்களை அழித்து விடாதா? இதென்ன பைத்தியக்காரத் தனமான திட்டம்?" - கடுகடுத்தான் பங்கனன்.

"தெரியாது அப்பா. அவரது திட்டம் என்ன என்பது எனக்குத் தெரியாது. பார்த்தால் தான் தெரியும்" என்றாள் அவள்.

"நானிருக்கும் போது கலங்களை இயக்க இவன் யார்? என்னிடம் திட்டத்தைப் பற்றிக் கூறாமல் எப்படி இவன் செயல்படலாம்?" என்று ஏதேதோ பேசினான் பங்கனன்.

"உங்கள் லட்சணத்தைத் நான் கேட்டேனே? இதில் உங்களிடம் வேறு ஆலோசனை கேட்க வேண்டுமா?" என்று



மனதிற்குள்ளாகவே எண்ணிக் கொண்ட பிருதாபத்திரனும் சௌமியகுமாரியும் அவனிடம் எதுவும் பேசாமல் மேலே என்ன நடக்கிறது என்பதை அறிய எரிந்து கொண்டிருந்த கப்பல்களைக் கவனிக்கலானார்கள்.



பங்கனனின் மாளிகை விதானத்தில் இருந்த பங்கனனும் முதலானோர் கடற்பகுதியைக் கவனித்த போது தீப்பற்றி எரிந்த இரண்டு மரக்கலங்களும் அராபியர் மரக்கலங்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. மரக்கல மாலுமிகள் ஆபுத்திரனின் கட்டளையின் படி வேகமாகத் துடுப்புகளைத் துழாவிய காரணத்தால் கலங்கள் இரண்டும் வேகமாக முன்னேறின. அக்கலங்களின் உச்சியில் இருந்த மாலுமிகள் சுக்கானைப் பிடித்திருந்த விதமானது இரு கலங்களும் அராபியர் மரக்கல கூட்டத்திற்கு நடுவே செல்லும்படியாக இருந்தது.

இப்படி வெள்ளைத் தீவிலிருந்து இரண்டு மரக்கலங்கள் தமக்குத் தாமே தீ வைத்துக் கொண்டு தங்களை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்ததை அராபிய கொள்ளையர்களும் கவனிக்கவே செய்தனர். சுமார் இருபது மரக்கலங்களுடன் வந்து கொண்டிருந்த அராபிய கொள்ளைக் கூட்டத்தின் தலைவனான தாவூத் அவற்றின் மைய கப்பலில் தனது அறையில் இருந்தான். வழுக்கை விழுந்த தலையின் இரு பக்கமும் சிறகுகளைப் போல ரோமங்கள் தொங்கி காற்றில் பறந்து கொண்டிருந்தன. ஏறக்குறைய கடலிலேயே காலம் தள்ளியிருந்த காரணத்தாலும் உப்புக் காற்றும் உப்பு நீருமே அவனது உடம்பில் பட்டுக் கொண்டிருந்ததாலும் ஒட்டிப் போயிருந்த முகத்தை. உயர்ரக மதுபானங்களை உண்டு

## தாவூத்





ஏராளமான பெண்களை அனுபவித்து ஆசை உணர்வு வகையறாக்களைக் கண்டபடி தின்றிருந்த காரணத்தால் உப்பிப் போன முகம் வயோதிகம் காரணமாக சப்பிட்டுப் போய் தாடைப் பகுதியை அலங்கோலமாக்கியிருந்தது. கண்கள் இரண்டில் ஒன்று கொள்ளைத் தாக்குதலின் போது காயம் பட்டிருந்த காரணத்தால் அவனது ஒரு கண் சற்றே கிழிந்து தாறுமாறாக தைக்கப் பட்டிருந்ததால் பிதுங்கிய நிலையில் மகா கோரமாக காட்சியளித்தது. கழுத்திலிருந்து கால்வரை ஒரே ஒரு சராயை அவன் அணிந்திருந்தான். அவனது தோற்றமே பயங்கரமானதாக இருக்க அந்த பயங்கரத்தை அதிகரிப்பது போல் அகலமான பட்டாக் கத்தியொன்று அவனது இடையில் தொங்கியது. அது தவிர இடுப்பில் நான்கைந்து குறுவாட்களையும் செருகியிருந்தான் அராபிய கொள்ளையர் தலைவனான தாவூத்.

இப்படி பேயைப் போல காட்சியளித்த அவனிடம் வந்த கொள்ளையன் ஒருவன் தீப்பற்றிய கப்பல்கள் தங்களை நோக்கி வருவதைச் சொன்னான். இதைக் கேட்டு தனது கோரமான கண்களை பயங்கரமாக உருட்டிய தாவூத் "இதற்கென்ன அர்த்தம்?" - என்று கேட்டான்.

"நமது கப்பல்களை கொளுத்த நினைக்கிறார்கள் என்று தோன்றுகிறது" என்றான் அராபிய கொள்ளையன்.

"இத்தனை துணிவு எங்கிருந்து வந்தது பங்களனுக்கு" என்று தன் அடுத்த கேள்வியைக் கேட்டு விட்டு சந்தேகத்துடன் பார்த்தான் தாவூத்.

"வியப்பாகத் தான் இருக்கிறது"-

"அவனது பெரும்பாலான மரக்கலங்கள் பழுது பார்க்க அனுப்பப் பட்டிருக்கின்றன என்ற செய்தி உண்மைதானே"

"உன்னை எதிர்த்த தீயில் காலை நேரில் போய் பார்த்து விட்டு வந்தேன்"

"பங்களனிடம் வசம் இருப்பது பத்து கப்பல்கள் தானே?"

"ஆமாம்"

"எந்த தைரியத்தில் அவன் இரண்டைப் பற்ற வைத்துக் கொண்டு நம்மிடம் மோத வருகிறான்?"

அப்போது அங்கே வந்த மற்றொரு அராபிய கொள்ளையன் "தலைவரே, பங்களனின் வேறு இரண்டு மரக்கலங்கள் தனித்தனியாக இருபக்கங்களில் வருகின்றன" என்றான்.

தாவூத் தனது ஆசனத்தை விட்டு எழுந்து பெரும் பூதம் போல் நின்றான். எழுந்து நின்ற போது அவனது ஏழடி உயரம் தெரிந்ததோடு அவனது உடம்பின் பெரும் குறுக்களவும் நன்றாகத் தெரிந்தது. உடல் உழைப்பை விட்டு நீண்ட காலமாகியிருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்தியது மாமிசமலை போன்ற அவனது அரக்க உடல். அந்த மலைபோன்ற உடலை மகா சங்கடத்துடன் அசைத்தபடி மரக்கலத்தின் தளத்திற்கு வந்து எதிரே விரிந்த காட்சியைக் கண்டான்.

தீப்பற்றி எரிந்த கலங்கள் தன் மரக்கலங்களை நெருங்கிக் கொண்டிருந்தன. வெள்ளைத் தீவின் இரு பக்கங்களிலிருந்தும் இரண்டு மரக்கலங்கள் அவனது கப்பல்கள் பக்கமாக வந்து கொண்டிருந்தன. அவற்றை ஒரு கணம் பார்த்தவுடனேயே எதிரியின் நோக்கத்தைப் புரிந்து கொண்ட தாவூத் பக்கத்தில் இருந்த கொள்ளையனை நோக்கி "நடக்கப் போவது என்ன என்பது புரிகிறதா? அதோ வெள்ளைத் தீவின் இருபுறங்களிலிருந்தும் இரண்டு மரக்கலங்கள் வருகிறதல்லவா.



அவைகளும் தங்களைப் பற்ற வைத்துக் கொண்டு நம்மை நோக்கி முன்னேறும். சிறிது நேரத்தில் மேலும் இரண்டு கப்பல்கள் இதே போல் தீயை வைத்துக் கொண்டு நம்மை நோக்கி வரும். இப்படியே வந்து கொண்டிருந்தால் நாம் தாக்க முடியாது. தீயிலிருந்து தப்புவதற்காக விலகத்தான் முடியும். ஆனால் அதற்குக் கூட இடமளிக்காத வகையில் தீக்கப்பல்கள் நம்மிடையே புகுந்து சுழலும் மோதும். நமது மரக்கலங்களுக்கும் தீ தொற்றிக் கொள்ளும். அந்நேரமாக அக்கப்பல்களில் துடுப்பு போடும் மாலுமிகள் மட்டுமே இருப்பார்கள். கப்பல்களை இயக்கி நம்மை முழுவதுமாக அழிக்க நினைக்கிறான் எதிரி. தனது மரக்கலங்கள் அழிந்தாலும் பரவாயில்லை என்று தைரியமாக முன்னேறி நம்மை அழிக்க வருகிறான். இது நிச்சயமாக பங்களனின் செய்கையாக இருக்க முடியாது. அவன் கடைந்தெடுத்த கோழை" என்று வார்த்தைகளை நெருப்பைப் போல் உதிர்த்தான்.

அவனது வார்த்தைகளை அங்கீகரிப்பது போல அம்பொன்று அவனது காலடியில் வந்து விழுந்தது எரிந்து கொண்டிருந்த கப்பலிலிருந்து. அந்த அம்பில் சுற்றப் பட்டிருந்த சீலையை எடுத்துப் பிரித்தான். அதில் இருந்த அராபிய வரிகளைப் படித்தான்.

"நினைத்தேன் அப்போதே. பாருங்கள் இதை" என்று கூறி சீலையை சகாக்களிடம் கொடுத்தான் தாவூத்.

அதைப் படித்ததும் கொள்ளையர் கண்கள் விரிந்தன வியப்பால்.

# அத்தியாயம் பதினான்கு



## தாவூத்தின் பேச்சு

"தாவூத்திற்கு வெள்ளைத் தீவின் உபதலைவன் ராவணன் விடுக்கும் செய்தி. சேரமாமன்னரின் பிரதான படைத்தலைவர்- எதிரிலி சேனாதிபதி-வில்லவன் கோதை உங்களைச் சந்திக்க விரும்பி எரியும் கலத்தில் என்னுடன் இருக்கிறார். அழிவைத் தவிர்க்க விரும்பினால் உடனடியாக சந்திக்க ஏற்பாடு செய்யவும். தாமதித்தால் உங்கள் மரக்கலங்களெல்லாம் கொளுத்தப் படும்" -

இச்செய்தியைப் படித்த கொள்ளையர்கள் விரிந்த கண்களுடன் தலைவன் தாவூதைப் பார்த்ததும் கறைபடிந்த தன் காரைப் பற்களைக் காட்டி இடியென நகைத்தான் அராபிய கொள்ளையர் தலைவனான தாவூத்.



"பங்களனாவது! என்னை எதிர்ப்பதாவது? வில்லவன் கோதை சேர சேனாதிபதி. தைரியத்திற்குப் பேர் போனவன். அவனால் தான் இப்படி நடந்து கொள்ள முடியும். ஆனால் அவன் தரைப் படைக்குத் தானே தலைவன். கடலுக்கு எப்போது வந்தான்? அதையும் நான் தெரிந்து கொள்ளவேண்டும்" என்று சொல்லிக் கொண்ட தாவூத் "வருகிறவர்களை அழைத்து வாருங்கள். படகை இறக்குங்கள்." என்று கூறி விட்டுத் தன் அறைக்குச் சென்றான்.

அதே சமயம் எரிந்து கொண்டிருந்த கலத்தின் தளத்தில் ஆபுத்திரனின் உருவமும் ராவணனின் உருவமும் புலப்பட்டன.



சௌமியகுமாரி தன்னிடம் வந்து அராபியர் கொள்ளை மரக்கலங்களைப் பற்றியும் பங்களனின் கோழைத் திட்டத்தைப் பற்றியும் கூறி "நீங்கள் தான் வெள்ளைத் தீவைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள்.

"சௌமியகுமாரி, வெள்ளைத் தீவை நான் எதற்காகக் காப்பாற்ற வேண்டும்? அதுவும் சேரர்களது பகைவர் பட்டியலில் இருக்கும் பங்களனை நான் ஏன் காப்பாற்ற வேண்டும்? என்னை இங்கே கடத்தி வந்து சிறை வைத்திருப்பவனுக்கு நான் ஏன் உதவ வேண்டும்? இந்த வெள்ளைத் தீவும் கோட்டையும் சேரரால் அழிக்கப்பட வேண்டியவை. அவற்றை அராபிய கொள்ளைக்காரர்கள் அழித்தால் எனக்கு மட்டுமல்ல சேர நாட்டுக்குமே மகிழ்ச்சி தான்" - என்றான் ஆபுத்திரன்.

இதைக் கேட்டதும சங்கடத்துடன் அனைத்து சௌமியகுமாரி "நீங்கள் சொல்வதெல்லாம நியாயம தான். என் தந்தையின் துரோகத்திற்கும் நன்றி கெட்ட செயலுக்கும் வேறொருவராக இருந்திருந்தால் அவரைக் கொலையே செய்திருப்பார்கள். ஆனால் என் தந்தை மட்டும் தான் உங்களுக்கு அநீதி இழைத்து இப்படியெல்லாம் நடந்து கொள்கிறாரே தவிர. மற்றவர்களெல்லாம் உங்களை மதிக்கிறார்கள். குறிப்பாக இந்தத் தீவு வாசிகளை எடுத்துக் கொள்ளுங்கள். ஒன்றுமறியாத அந்த அப்பாவிகள் அழிந்து போவதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா? உங்களை என் தந்தை தண்டிக்கப் போவதாகச் சொன்னதுமே ஒட்டு மொத்தமாக எதிர்ப்பு தெரிவித்து என்னிடம் வந்து அதைத் தடுக்கும் படி வேண்டிக் கொண்ட அந்த அன்புள்ளங்களைச் சற்று யோசித்துப் பாருங்கள். அவர்களுக்காகத் தான் நான் உங்களிடம் வந்தேன். மக்கள் எக்கேடு கெட்டாலும பரவாயில்லை. கோட்டையிலுள்ள செல்வங்களோடு எழில்மலைக்கு ஓடி விடலாம் என்று கோழைத்தனமாகத் திட்டமிட்டு ஓடவிருக்கும் என் தந்தையிடமிருந்தும் அராபிய கொள்ளையரிடமிருந்தும் மக்களைக் காப்பாற்ற உங்களால் மட்டுமே முடியும். அராபியர்களுக்கு பயந்து என் தந்தை ஓடி விட்டால் அக்கொள்ளைக் காரர்கள் அவரது சகாக்களைப் பூண்டோடு அழித்து விட்டு வெள்ளைத் தீவைத் தங்கள் தளமாக்கிக் கொள்வார்கள். அரபுக் கடல் பகுதி ரணகளப் பகுதியாகி விடும். சேரநாட்டிற்கும் அது சவாலாக இருக்கும்" என்றாள்.

ஆபுத்திரன் சற்று யோசித்த பின் "ராவணனை வரச்சொல் சௌமியகுமாரி. நீ புறப்படு." என்றான்.



சௌமியகுமாரியின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டாலும் எப்படி அதை நிறைவேற்றுவது என்று புரியவில்லை ஆபுத்திரனுக்கு. தனி ஆளாக இருந்து கொண்டு அராபிய கொள்ளையர்களை எதுவும் செய்ய முடியாது என்பதை தீர்க்கமாக உணர்ந்து கொண்ட அவன் ராவணன் வந்து சேர்ந்ததும் "சௌமியகுமாரியின் வேண்டுகோளை நிறைவேற்ற நான் விரும்புகிறேன். உனக்கு இதில் ஏதாவது ஆட்சேபனை உண்டா?" என்று கேட்டான்.

"வீரர்களுக்கு என்றுமே உறுதுணையாக இருக்க விரும்புவன் நான் ஆபுத்திரரே. உங்கள திட்டத்திற்கு என் முழு ஒத்துழைப்பு உண்டு." என்றான் ராவணன்.

"நீ மட்டும் போதாது ராவணா. உங்களது மரக்கலங்கள், மாலுமிகள் ஆகியோரது துணையும் தேவை."

"அவர்களது ஒத்துழைப்பு உங்களுக்கு நிச்சயம் கிடைக்கும்."

"எப்படி?"

"இத்தீவு மக்களைப் போல மாலுமிகளும் உங்களை நேசிக்கிறார்கள்."

"அது உண்மையானால் உடனடியாக நடவடிக்கையில் இறங்க வேண்டும்" என்று சொல்லி "என் திட்டம் இது தான். இது பலிப்பதும் பலிக்காததும் ஆண்டவனிடம் இருக்கிறது" என்றதும் "மிகவும் அபாயகரமான திட்டம் ஆனால் துணிகரமான திட்டம் இந்த அபாயகரமான திட்டத்தில் பங்குபெறுவதை நான் பெருமையாக நினைக்கிறேன்" என்றான் ராவணன்.

அதையடுத்து ஆபுத்திரனின் திட்டங்கள் அனைத்து மரக்கல உபதலைவர்களுக்கும் அறிவிக்கப் பட்டன.

ஆபுத்திரன் தன்னை சோர சேனாதிபதி வில்லவனை கோதையைப் போலத் தோரணையை உருவாக்கிக் கொண்டு ஒப்பனைகளை செய்து கொண்டு மரக்கலத்திற்குச் சென்றான். அவனது கட்டளைப்படி இரண்டு மரக்கலங்களில் பாய்கள் விரிக்கப்பட்டிருந்தன. ஆபுத்திரன் அங்கு சென்றதும் தீ வைக்கப் பட்டு அராபியர் கலங்களை நோக்கி நகர்ந்தன.

"ராவணா, நமது திட்டப்படி காரியம் தொடங்கி விட்டதற்கு நீதான் காரணம். அதற்காக உனக்கு நன்றி" என்று ஆபுத்திரன் கூறியதும் "நான் கூற வேண்டிய வார்த்தைகள் ஐயா இது. நீங்கள் இல்லாமல் நான் எப்படி இயங்க முடியும்? அதுவும் நீங்கள் ஈடுபடும் இந்த அபாயகரமான காரியம் எங்களுக்காக. நீங்கள் தான் என் தலைவர்" என்றான் ராவணன்.

"ராவணா, வெள்ளைத் தீவைத் தாக்க வந்திருக்கும் அராபிய கொள்ளையர்களுக்கு யார் தலைவன்? அவன் பெயர் என்ன தெரியுமா?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"அராபிய கொள்ளைக் கூட்டம் இரண்டாகப் பிரிந்து கடலை கலக்கிக் கொண்டிருந்தது. போன வருடம் தான் அந்த இரண்டு பிரிவுகளுக்கிடையே தாக்குதல் நடைபெற்று தாவூத் வெற்றி பெற்றான். இப்போது இருப்பது அவனது தலைமையில் இயங்கும் ஒரே கொள்ளையர் பிரிவு தான்"

"தற்போது வந்திருக்கும் மரக்கலங்களில் அவன் இருப்பான் என்று எப்படிச் சொல்ல முடியும்?"

"தாவூத் நிலத்தில் இருக்கும் நாட்கள் குறைவு. கடல் தான் அவனுக்கு இருப்பிடம். மரக்கலம் தான் அவனது மாளிகை. அவனது மரக்கலமே மாளிகையைப் போலத் தான் இருக்கும்



அப்படி தனது கப்பலை மட்டும் சொகுசுக் கப்பலாக மாற்றிக் கொண்டு அதிலேயே காலம் கழிப்பவன் தான் தாவூத். அதோ பாருங்கள். எதிரே இருக்கும் மரக்கலங்களில் நடு நாயகமாக இருக்கும் கப்பலை கவனியுங்கள். எல்லா கலங்களிலும் மண்டையோடு சின்னம் தாங்கிய கொடிகள் பறப்பது போல இந்த கலத்திலும் பறக்கின்றன. ஆனால் இக்கப்பலில் பறக்கும் கொடி பெரியதாகவும் கூர் வடிவில் ஒரே கொம்பில் மூன்று கொடிகளுமாகப் பறக்கின்றன. இது தாவூத் இருக்கும் மரக்கலத்திற்கு மட்டுமே இருக்கும் சிறப்பு. இக்கலத்தில் தாவூத் இருப்பது உறுதி."

"வெள்ளைத் தீவு மிகவும் சிறியது. இதைத் தாக்க தாவூத் வரவேண்டுமா?"

"பெரும் மன்னர் பரம்பரையைச் சேர்ந்த சோழ மன்னர்கள் வெள்ளைத் தீவைத் தாக்க வரும் போது தாவூத் வரக் கூடாதா ஐயா? அவன் நேரில் வருவதற்குக் காரணம் வெள்ளைத் தீவில் பங்கனர் குவித்து வைத்துள்ள செல்வங்களின் பரிமாணம் தான். அவனுக்குத் தீவு முக்கியமல்ல. இங்கிருக்கும் செல்வம் தான் முக்கியம். ஆகவே தான் அராபிய வளைகுடாவில் திரிந்து கொண்டிருந்த அவன் இக்குட்டித் தீவுகள் பால் ஈர்க்கப்பட்டிருக்கிறான்."

"நல்லது. உனக்கு அராபிய மொழி தெரியுமல்லவா?"

"தெரியும்."

"ஒரு சீலையில் நான் சொல்லும் செய்தியை எழுதி அம்பொன்றில் சுற்று. நான் கூறும் போது அந்த அம்பு அவனது மரக்கலத்தில் போய் விழவேண்டும்"

அராபிய கொள்ளையர் தலைவன் தாவூத்தின் உத்திரவின் படி படகு ஒன்று இறக்கப் பட்டு எரிந்து கொண்டிருந்த கப்பலை நோக்கிச் சென்றது. அதிலிருந்து ஆபுத்திரன், ராவணன் ஆகியோரை நோக்கி அராபிய மரக்கலத்திலிருந்து கொள்ளையர் சிலர் கொடிகளை கைகளில் ஏந்தி அசைத்தனர். அவர்களது படகு நெருங்கி வந்ததும் நூலேணியை இறக்கி ஆபுத்திரனும் ராவணனும் இறங்கினார்கள். படகில் இருந்த ராவணன் கொம்பு ஒன்றை எடுத்து ஊதினான் எரியும் கப்பலைகளில் இருந்த மாலுமிகளுக்கு தெரிவதற்காக. பிறகு படகு தாவூத்தின் மரக்கலத்தை அடைந்து நூலேணி மூலம் மேலேறி தலைவனின் அறைக்கு வந்தார்கள்.

அங்கே பூதம் போல சர்வ அலட்சியமாக அமர்ந்திருந்த தாவூத்தைக் கண்டதும் ராவணனுக்கு உள்ளூர அச்சமாக இருந்தது. ஆனால் ஆபுத்திரனோ அசர வில்லை. மாறாக அவனைக் கண்ட தாவூத் தான் அசந்து போனான். வில்லைன் கோதையாக வந்திருந்த ஆபுத்திரனின் கம்பீரமான தோற்றம் அவனை ஒரு கணம் அசர வைத்தது. சேரர் சேனாதிபதி பற்றி ஓரளவு அறிந்திருந்த தாவூத் அவனை நேரில் கண்டபோது தான் கேள்விப் பட்டதெல்லாம் உண்மை என்பதைக் கண்கூடாக உணர்ந்தான். மேற்கத்திய நாடுகளெல்லாம் தாவூதின் பெயரைக் கேட்டாலேயே அச்சத்தில் உறையக் கூடிய நிலையில் சேர நாட்டுச் சேனாதிபதி தன் மரக்கலத்திலேயே வந்து சர்வ அலட்சியமாக நின்றதைக் கண்ட போது, இவனுக்கும் அச்சத்திற்கும் அணுவும் சம்மந்தமிருக்காது என்று மனதிற்குள் ஒப்புக் கொண்ட அராபிய கொள்ளையர் தலைவன் "சேர நாட்டு சேனாதிபதி



இந்த அராபியனின் மரக்கலத்திற்கு வந்திருப்பது எனக்கு பெருமை சேர்க்கிறது." என்றான் சாதாரணமான குரலில்.

அதுவரை அசராதிருந்த ஆபுத்திரன் அவனது பேச்சைக் கேட்டுச் சற்று அசரவே செய்தான். தாவூத் பேசுவது உண்மையா அல்லது வஞ்சகப் புகழ்ச்சியா என்பதை அவனால் உடனே அறிய முடியவில்லை. எனவே சாதுரியமாகவே பேசமுற்பட்டு "உங்களது புகழ்ச்சி உண்மையானால் அது சேர நாட்டையே சேரும்" என்றான் லேசாக புன்னகை செய்தபடி.

ஆபுத்திரன் அராபிய மொழியிலேயே பேசியதைக் கேட்ட தாவூத் "சேரர் சேனாதிபதி அராபிய மொழியில் பேசுவது எனக்கு நிரம்ப மகிழ்ச்சியை அளிக்கிறது" என்றான் தலையை ஆட்டியபடி.

"நியாயமான மகிழ்ச்சிதான்."

"நியாயமான மகிழ்ச்சியா?" - வியப்போடு கேட்டான் தாவூத்.

"செய்யும் தொழில் எதுவாக இருந்தாலும் தாய்மொழி என்பது எல்லோருக்குமே இனிக்கக் கூடிய ஒன்று. அந்த மொழியை பிறநாட்டவர் பேசும் போது கேட்பதற்கு மகிழ்ச்சியாகத் தான் இருக்கும். இது நியாயம் தானே"

இவ்வாறு ஆபுத்திரன் கூறியதும் பெரிய நகைச்சுவையை அனுபவித்தது மாதிரி கடகடவென சிரித்தான் தாவூத். அவன் இப்படி அமர்ந்து சிரித்துப் பேசுவது அவனைச் சுற்றியிருந்த கொள்ளையர்களுக்கு பெருவியப்பாக இருந்தது. தலைவன் இப்படியெல்லாம் சாவகாசமாக உட்கார்ந்து பேசியதை அவர்கள் பார்த்ததில்லை. அதுவும் எதிரிகளிடம் அவனது

பட்டாக் கத்தி பேசுவதைத் தான் கண்டிருந்தார்களே தவிர இது போன்ற ரசிக்கக் கூடிய உரையாடல்களைக் கேட்டதுமில்லை, கண்டதுமில்லை. எனவே அந்த வகையில் சேரர் சேனாதிபதி மீது அவர்களுக்கு ஒரு வித மரியாதையும் ஏற்பட்டது. ராவணனின் நிலையோ சொல்லும் தரத்தில் இல்லை. கனவுலகில் சஞ்சரிப்பது போலிருந்தது அவனது நிலை.

ஆபுத்திரனின் பேச்சைக் கேட்டதும் அதை அங்கீகரித்து "உண்மை. உண்மை!" என்ற தாவூத் "நானும் பல இடங்களில் சுற்றி அலைவதால் பலநாடுகளின் மொழிகளையும் தெரிந்து வைத்திருக்கிறேன். உங்கள் தமிழ் மொழி எனக்கும் தெரியும். நாம் தமிழிலேயே பேசலாமே?" என்றான்.

"மிகவும் மகிழ்ச்சி." என்றான் ஆபுத்திரன்.

"விஷயத்திற்கு வருவோம்." என்று ஆரம்பித்த தாவூத் "சேரர் சேனாதிபதி வெள்ளைத் தீவின் தூதுவராக வருவது வியப்பைத் தருகிறது." என்றான்.

"அந்த துர்ப்பாக்கியம் எனக்கில்லை." என்றான் ஆபுத்திரன்.

"பின்?"- வியப்புடன் கேட்டான் தாவூத்.

"வெள்ளைத் தீவு பங்களனின் ஆதிக்கத்தில் இல்லை. சேரரது ஆதிக்கத்தில் இருக்கிறது."- என்றான் ஆபுத்திரன்.

இதைக் கேட்டு இடியென நகைத்த அராபிய கொள்ளைக் காரனான தாவூத் "சேனாதிபதி, என்னிடம் பொய் உதவாது. அதோடு எனக்குப் பிடிக்காத ஒரே விஷயம் பொய்." என்றான் விழிகளை உருட்டி.



ஆபுத்திரன் அசரவில்லை. "இதோ என்னுடன் வந்திருக்கும் ராவணன், பங்களனின் உபதலைவன். நான் சொல்வது உண்மையா பொய்யா எனக் கேட்டுப் பார்த்துக் கொள்வாய்" என்றதும்-

"உண்மைதான் ஐயா. எங்கள் வெள்ளைத் தீவு எங்களை விட்டு சேரர் வசம் போய் விட்டது"- என்றான் ராவணன்.

"நான் நம்பத் தயாராக இல்லை" என்றான் தாவூத் கறாராக.

"ஏன்?"- கேட்டான் ஆபுத்திரன்.

"சேனாதிபதி, எனது ஒற்றர்கள் சுற்றாத இடமில்லை. அறியாத விஷயமில்லை. மூன்று நாட்களுக்கு முன்பு தான் வெள்ளைத் தீவுக்கு போய் விட்டு வந்திருக்கிறான் என் ஒற்றன். அப்போது வெள்ளைத் தீவின் நிலை இது வல்ல. பங்களன் வசம் தான் இருந்தது." என்றான் தாவூத்.

"அராபிய கொள்ளையர் தலைவரது அறிவு விசாலமானது என்று நான் எண்ணியிருந்தேன்." என்றான் ஆபுத்திரன்.

"இப்போது அந்த எண்ணம் பொய்த்து விட்டதா?"

"தாவூத், வெள்ளைத் தீவு எங்கே? சேரர் கடற்படை எங்கே? மாபெரும் சேரர் கடற்படைக்கு வெள்ளைத் தீவைத் தாக்கவும் அழிக்கவும் அரைநாள் போதாதா?"

"அப்படியென்றால்?"

"நேற்று தான் வெள்ளைத் தீவு தாக்கப்பட்டு சேரர் வசமானது."

"அப்படியானால் சேரர் படை எங்கே?"

"உங்களுக்கு ஒறறர்கள் மூலம் சேரர்களை பற்றிய இன்னொரு உண்மை தெரிந்திருக்க வேண்டும். சில நாட்களுக்கு முன்பு தான் கிரேக்க நாட்டிலிருந்து 50 போர்க்கப்பல்கள் சேர மன்னரது நேரடி பார்வையில் வாங்கப் பட்டு சேரநாட்டிற்கு கொண்டு வரப்பட்டன."

"கேள்விப் பட்டேன்."

"அவைகளுக்குச் சடங்குகள் நடந்து போர் ஆயத்தம் செய்யப்பட்டு அனுப்பி வைக்கப்பட்டன."

"வெள்ளைத் தீவை அழிக்க 50 மரக்கலங்கள் எதற்கு?"

"எத்தனை கப்பல்கள் தேவை என்று நினைக்கிறீர்கள்?"

"எனக்கு 10 கப்பல்கள் போதும்"

"ஆனால் நீங்கள் 50 கப்பல்களோடு வந்திருக்கிறீர்கள். அது போகட்டும். வெள்ளைத் தீவை அழிக்க சேரர்களுக்கு 5 மரக்கலங்கள் போதும். 50 மரக்கலங்கள் வந்திருப்பது வெள்ளைத் தீவை அழிக்க அல்ல, துளு நாட்டை எதிர்க்க."

"எங்கே அந்த மரக்கலங்கள்?"

"வெள்ளைத் தீவின் மறுபக்கம் துளு நாட்டை நோக்கி குறி வைத்து நிற்கின்றன. சேரரது தரைப் படை வந்ததும் எங்களது கடற்படையில் உள்ள வீரர்கள் இறங்கி பாரகப் போரைச * செய்வார்கள். இந்த இருபுறத் தாக்குதலில் துளுநாட்டுப் படை நசுங்கிப் போய்விடும்"-

ஆபுத்திரனின் பேச்சு சரியாக இருந்தாலும் அதை நம்ப தாவூத்திற்கு கஷ்டமாக இருந்தது. சிறிது நேரம் சிந்தனையை

* கடலில் இருந்து தரைக்கு வந்து செய்யும் போர் பாரகப் போர் என்று அழைக்கப் பட்டது



ஓடவிட்ட தாவூத் "சரி, உமது செய்தி என்ன? ஏதோ என் மரக்கலங்களை அழித்து விடுவதாகச் சீலையில் சொல்லியிருந்தீர்கள் என்று நினைக்கிறேன்." என்றான்

"ஆமாம்" ஒப்புக் கொண்டான ஆபுத்திரன்

"என்னை மிரட்டியவர்கள் பிழைத்ததாகச் சரித்திரமில்லை சேனாதிபதி" என்று அலட்சிய புன்னகையோடு கண்களை உருட்டிச் சொன்ன தாவூத், வேண்டுமானால் என் பின்னால் நிற்கும் சகாக்களைக் கேட்டுப் பார்" என்றான் மரியாதையை மறந்து.

ஆபுத்திரனும் அதுவரைக் காட்டி வந்த மரியாதையை கைவிட்டு விட்டு "இதோ பார் தாவூத். உன்னைப் பற்றி நீ சொல்லி தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் எனக்கு எதுவும் இல்லை. அதோடு உன் மிரட்டலைப் பற்றித் தெரிந்தும் நான் மட்டும் தனித்து இந்த ராவணன் என்னும் உன்னைப் போன்ற கொள்ளைக் காரனுடன் உன் மரக்கலத்தைத் தேடி வந்திருக்கிறேன் என்றால், என் உயிரைப் பற்றி எள்ளளவும் நான் கவலைப்படவில்லை என்பதை நீ புரிந்து கொள். என் ஒருவனது உயிர் உன்னால் போக்கப் பட முடியும் என்று வைத்துக் கொண்டாலும் நீங்களும் உங்கள் மரக்கலங்களும் அழிவது உறுதி. அதன் பின் அராபியர் கொள்ளையர் என்ற சொல் அராபியக் கடல் பிராந்தியத்தில் இல்லாமல் போய் விடும். பங்களக் கூட்டத்தாரும் ஏற்கனவே அழிக்கப் பட்டு விட்டதால் இக்கடல் பகுதியில் வணிகர் கப்பல்கள் பயமின்றி இயங்கும். எதற்கும் கடற்பகுதியை வந்து பார்" - என்றான்.

ஆபுத்திரனின் சொற்கள் சாதாரணமானவைகள் போல தோன்றினாலும் அவற்றுக்குள் எச்சரிக்கை தொடுபவதை தாவூத் கவனிக்கத் தவறவில்லை. எதற்கும் கடற்பகுதியில்

அப்படி என்ன தான் இருக்கிறது என்பதைப் பார்க்க எல்லாரி கப்பலின் மேல் தளத்திற்கு வந்தான் தாவூத்.

எதிரே எரிந்தபடி வந்து கொண்டிருந்த வெள்ளைத் தீவு கப்பல்கள் இரண்டிலும் தீ அணைக்கப்பட்டு பாதி எரிந்த நிலையில் நங்கூரமிட்டு நின்றிருந்தன. அதே சமயம் வெள்ளைத் தீவின் இரண்டு பக்கங்களிலிருந்தும் இரண்டிரண்டு கப்பல்கள் பாய் விரித்த நிலையில் மெதுவாக வந்து கொண்டிருந்தன.

ஆபுத்திரன் அதைச் சுட்டிக் காட்டி 'தாவூத், நான் நாகேஸ்வரியில் இறங்கும் போது கொடியூதி மரக்கல மாலுமிகளுக்கு சமிக்ஞையை அனுப்பி விட்டதால் அவர்கள் தீயை அணைத்து விட்டு எனது உத்தரவுக்காகக் காத்திருக்கிறார்கள். அதோ வெள்ளைத் தீவின் இரண்டு புறங்களிலிருந்தும் 4 மரக்கலங்கள் முன்னேறிக் கொண்டிருக்கின்றன. அவற்றின் மாலுமிகளுக்கு நான் திட்டமான கட்டளைகளை இட்டிருக்கிறேன். உன் மரக்கலத்திற்கு நான் வந்து ஒருநாழிகைக்குள் திரும்பவில்லை என்றால், மரக்கலங்களைக் கொளுத்திக் கொண்டு வேகமாக முன்னேறி உங்களது மரக்கல கூட்டங்களுக்குள் நுழைந்து விடும். அவற்றுக்குப் பின்னால் மேலும் நான்கு தீக்கப்பல்கள் இதே ரீதியில் முன்னேறும். இதோ முன்னால் அரை வாசி எரிந்த நிலையில் உள்ள கப்பல்களும் கொளுத்திக் கொண்டு வந்து மோதும். இப்படி வெள்ளைத் தீவின் பத்துகப்பல்களும் தீக்கப்பல்களாக மாறி உங்கள் மரக்கலங்களைக் கொளுத்த முற்படும் சமயத்தில், சேரரது மகத்தான கடற்படையை செலுத்தி வருவார் சேரரின் கடற்படை தளபதி. விளைவு பற்றி நான் சொல்ல வேண்டியதில்லை" என்றான் ஆபுத்திரன்.



"சேரர் கடற்படை தளபதியா! அது யார்! அவன் எங்கிருக்கிறான்?" என்று சற்று நிதானமிழந்தவனாய் கேட்டான் தாவூத்.

அதற்கு ஆபுத்திரன் சொன்ன பதில் தாவூத்தை மட்டுமல்ல பங்களனின் உபதலைவனான ராவணனையும் அசர வைத்தது.

"ஆபுத்திரர். அவர் தான் கடற்படை தளபதி. தற்போது வெள்ளைத் தீவு கோட்டையில் இருக்கிறார். தரைப் படையை வைத்து துளு நாட்டைத் தாக்க வந்த நான், அவரோடு கடற்படையில் வந்தேன். உன்னிடம் என்னை அனுப்பியது அவர் தான். நான் சொன்ன எல்லா திட்டங்களும் அவரது திட்டங்கள் தான்"

ஆபுத்திரனின் இந்தக் கோட்டை புளுகைக் கேட்டு ராவணன் அசந்து போனானென்றால் தாவூத்தோ ஆழ்ந்த சிந்தனையில் வீழ்ந்தான். சேரர் சேனாதிபதி வில்லவன் கோதையை விட ஆபுத்திரனின் பெயர் மேலைக் கடல் பகுதியில் பிரசித்தமாய் இருந்தது. அக்கடலில் கொள்ளைகளை நடத்தி வந்த கொள்ளையர்களுக்கும் அவனது பிரசித்தி நன்றாகத் தெரிந்திருந்தது. சேரன் செங்குட்டுவனுக்கு மிகவும் வேண்டப் பட்டவன் என்ற விஷயமும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. ஆனால் அவன் கடற்படை தளபதியான விஷயம் தெரிந்திருக்கவில்லை. அதனால் சமீப காலத்தில் தான் அவன் அப்பதவியை ஏற்றிருக்க வேண்டும் என்று நினைத்தான் தாவூத். 'வில்லவன் கோதை' சொல்லிய இந்த விவரங்களெல்லாம் உண்மை என்றால் ஆபுத்திரனின் வலையில் தனது மரக்கலங்கள் சிக்கி அழிவது உறுதி என்று கருதிய தாவூத்

தன் அச்சத்தை மறைத்துக் கொண்டு "என்னுடைய 30 மரக்கலங்களை மடக்க எதற்கு அவருக்கு 50 மரக்கலங்கள்!" என்று வீம்புக்குக் கேட்டுப் பார்த்தான்.

"தாவூத், நீ 30 மரக்கலங்களுக்கு மேலாக கொண்டு வந்திருப்பாய் என்று சொன்னார் கடல் படைத் தளபதி. ஆகவே தான் வெள்ளைத் தீவின் மரக்கலங்கள் பத்தையும் தீக்கப்பல்களாக மாற்றி உங்கள் மரக்கலங்களைக் கொளுத்தவும் அதையும் மீறி நீ தப்ப நினைக்கும் பட்சத்தில் தனது கப்பல் படை முழுவதையும் செலுத்தி உன்னை அழிப்பது என்று திட்டம் தீட்டினார். இந்நேரம் அவரது மரக்கலங்களும் துளுநாட்டு கடற்கரையை விட்டு உன் பக்கம் திரும்பியிருக்கும்" என்றான் ஆபுத்திரன்.

அதற்கு மேல் வீண் பேச்சு பேச தாவூத் விரும்பவில்லை. உண்மையிலேயே அவன் 30 மரக்கலங்களோடு தான் வந்திருந்தான். அவைகளை வைத்துக் கொண்டு வெள்ளைத் தீவைக் களிபரம் செய்து செல்வங்களை அள்ளிக் கொண்டு, முடிந்தால் கடற்கரை பட்டினமான துளுநாட்டிலும் கொள்ளையடிக்கலாம் என்ற பேராசையுடன் வந்திருந்த அவனுக்குத் தற்போதைய நிலை முதலையின் வாயில் தலையை விட்டது போன்றிருந்தது.

எதற்கும் உண்மை நிலையை அறிய அவனது உள் மனம் ஆணையிட்டதால் "நான் கடற்படைத் தளபதி ஆபுத்திரனைச் சந்திக்க வேண்டும்" என்றான் தாவூத்.

இதைக் கேட்டதும் ராவணனின் தலை சுற்றியது.





# அத்தியாயம் பதினைந்து



## வெள்ளைத் தீவில் விருந்து

தாவூத்தின் இந்த கோரிக்கையால் தனது நாடகம் வெளிப்பட்டு விடும் என்று கலங்கிய உபதலைவன் ராவணன் இதற்கு ஆபுத்திரன் என்ன செய்யப் போகிறான் என்று எண்ணி அவனது முகத்தை அச்சத்தோடு பார்த்தான். ஆபுத்திரனோ ராவணனின் பக்கமாகக் கூட திரும்பவில்லை.

"எதற்காக கடற்படைத் தளபதியைச் சந்திக்க வேண்டும்?" என்று தாவூத்திடம் கேட்டான் ஆபுத்திரன்.

"அவரோடு ஓர் உடன்படிக்கை செய்து கொள்ள விரும்புகிறேன் சேனாதிபதி."

"உடன்படிக்கைக்கு அவசியம் என்ன தாவூத்! உன்னை அழிக்கும் பலம் அவரிடம் இருக்கும் போது உன்னோடு

உடன்படிக்கையை எதற்காக அவர் செய்து கொள்ள வேண்டும்?"

"சண்டையை விட சமாதானம் நல்லது அல்லவா?"

"கொள்ளையர்கள் சமாதானம் பேச விரும்புவது வேடிக்கை. அதோடு தாவூத் உங்களுடன் சமாதானம் செய்து கொள்வதை விட உங்களை வேரோடு அழிப்பது தான் சேரரின் எதிர் காலத்திற்கு நல்லது."

"இருந்தாலும் கடற்படை தளபதியிடம் நேரில் பேசிப் பார்ப்பது நல்லது."

"பிறகு உன் இஷ்டம் தாவூத். நீ வெள்ளைத் தீவுக்கு எத்தனை பேரை வேண்டுமானாலும் துணைக்கு அழைத்து வரலாம். ஆனால் உனது மரக்கலங்கள் அனைத்தும் இங்கேயே நங்கூரமிட்டு நிற்கவேண்டும். இதற்கு உரிய ஆணைகளை உடனடியாக இடு. அப்போது தான் நானும் எனது கப்பல்களுக்கு ஆணையிட முடியும்." என்றான் ஆபுத்திரன்.

அதையடுத்து உரிய ஆணைகளை அனுப்பினான் தாவூத். தனது சொகுசுக் கப்பலில் நூறு பேரை துணையாக வைத்துக் கொண்டு அந்த மரக்கலத்தை வெள்ளைத் தீவு கோட்டையை நோக்கிச் செலுத்தும் படி மாலுமிகளுக்கு உத்தர விட்டான். அதே சமயம் ஆபுத்திரனும் நான்கு விதமான கொம்புகளை ஊதினான். அதையடுத்து வெள்ளைத் தீவின் இருபக்கங்களிலிருந்து வந்து கொண்டிருந்த நான்கு மரக்கலங்களும் நங்கூரமிட்டன. பாதி எரிந்திருந்த இரண்டு கப்பல்களும் தாவூத்தின் கலத்திற்கு இரு புறங்களிலும் காவலாக வந்தன.



தாவூத்தின் மனம் போர்க்களமாக இருந்தது. எப்படிப் பார்த்தாலும் தனது தலை தப்பாது என்று கருதிய காரணத்தால் தான், சேரர் கடற்படை தளபதியைச் சந்தித்து தன் தலையையும் காப்பாற்றிக் கொண்டு தன் மரக்கலங்களையும் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற முடிவில் வெள்ளைத் தீவிற்குப் புறப்பட்டான். அதே சமயம் அச்சத்தை வெளிக்காட்டாமல் தனது தாடியை தடவிய படி இருந்தான்.

ராவணனின் மனமோ சங்கடத்தில் ஆழ்ந்து கிடந்தது. தன்னை வில்லவன் கோதை என்று தாவூத்திடம் அறிமுகப் படுத்திக் கொண்டு எப்படியாவது கொள்ளையர் தலைவனை மடக்கி விடலாம் என்ற அளவில் மட்டுமே தனது திட்டமாக அவனிடம் கூறியிருந்தான் ஆபுத்திரன். ஆனால் தாவூத்திடம் சேரர் கடற்படை தளபதி ஆபுத்திரன் என்றும் அவன் வெள்ளைத் தீவு கோட்டையில் இருப்பதாகவும் ஆபுத்திரன் தெரிவித்த போது இதென்ன ஆபத்தான பேச்சு என்று குழம்பினான் இராவணன். அக்குழப்பமானது தாவூத் ஆபுத்திரனைப் பார்க்க வேண்டும் என்று கூறிய போது கலக்கமாக மாறியது. தாவூத்தின் விருப்பத்தை ஏற்று ஆபுத்திரன் அவனை வெள்ளைத் தீவுக்கு அழைத்துச் செல்வதாகக் கூறிய போது வியப்பின் எல்லையை அடைந்தான் ராவணன். நிலைமையை அவன் எப்படி சமாளிக்கப் போகிறான் என்பது குறித்து பெரும் கவலையாக இருந்தது ராவணனுக்கு.

ஆபுத்திரனோ எந்த விதமான சலனமும் அடையவில்லை. எப்படியாவது தாவூத்தை வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வரவேண்டும் என்பது தான் அவனது தீர்மானமாக இருந்தது. மரக்கலங்களிடமிருந்து தனிமைப் படுத்தி தீவுக் கோட்டைக்குள் அவனைக் கொண்டு வந்து விட்டால

தனது பொய்களை எப்படியாவது சமாளித்துக் கொள்ளலாம் என்றும் வெள்ளைத் தீவுகளைக் காப்பாற்ற ஏதாவது வழி தேடலாம் என்றும் நினைத்தான்.

அதே சமயம் தாவூத்தும் ஆபுத்திரனும் தன் கோட்டையை நோக்கி மரக்கலத்தில் வந்து கொண்டிருந்ததை தொலை நோக்கு கண்ணாடி மூலமும் பிறகு சுயமாகவும் பார்த்துக் கொண்டிருந்த பங்கனன் தனக்குப் பக்கத்தில் இருந்த பிருதா பத்திரனைப் பார்த்து "தாவூத் வருகிறான் பார்த்தாயா?" என்று கேட்டு விட்டு "இவனை ஏன் நம்மிடம் அழைத்து வருகிறான் இந்த சேர நாட்டு வாலிபன்?" என்று கேட்ட போது பிருதாபத்திரன் சிரித்தான்.

அதைக் கண்டு வெகுண்ட பங்கனன் "பிருதாபத்ரா, இது சிரிக்கும் விஷயமல்ல." என்றான்.

"உண்மை தான் தலைவரே. ஆனால் நான் சிரித்தது எதற்குத் தெரியுமா?"

"எதற்கு?"

"உங்களது கேள்வியைப் பார்த்து."

"என் கேள்விக்கென்ன?"

"தாவூத்தை எதற்காக சேரநாட்டு வாலிபர் அழைத்து வருகிறார் என்று கேட்டீர்கள்."

"அதற்கென்ன?"

"எப்படி அழைத்து வருகிறார் என்றல்லவா கேட்டிருக்க வேண்டும்? தாவூத் என்ன உங்கள் நண்பனா வரவேற்று அழைத்து வருவதற்கு? கிரேக்க நாடுகளே அஞ்சும் மகா



கடற்கொள்ளைக் காரனை ஏதோ விருந்தாளியை அழைத்து வருவது போல ஆபுத்திரர் அழைத்து வருகிறாரே அது எப்படி? மாயாஜாலத்தாலா?" என்று கேட்டான் பிருதாபத்திரன். அவனது குரலில் கிண்டல் வெளிப்படையாகவே இருந்தது.

பங்கனன் அவனது கேள்விக்குப் பிறகே தெளிவடைந்தான். தாவூத்தை ஆபுத்திரன் அழைத்து வருவது உண்மையிலேயே மாயாஜாலமாகத் தான் அவனுக்குத் தோன்றியது.

"பிருதாபத்ரா, இந்த ஆபுத்திரன் மனிதனே அல்ல. தாவூத்திடம் பேசுவதே முடியாததொரு விஷயம். அப்படி இருக்கும் போது அவனிடம் பேசி அழைத்தும் வருவதென்றால் இது மனிதர் செயலே அல்ல" என்றான் பங்கனன்.

அதை ஒப்புக் கொள்ளுவது போல் சிரித்த பிருதாபத்திரன் "தாவூத்தை அழைத்து வருவதென்றால் அதற்குப் பின்னால் பெரிய முகாந்திரமோ திட்டமோ இருக்க வேண்டும். ஆகவே ஆபுத்திரர் பேசுவதற்கு முன்னால் தாங்கள் எதுவும் பேசாமலிருப்பதே நல்லது." என்றான்.

பிருதாபத்திரன் கூறுவது சரியே என்றாலும் தனக்கு கட்டளையிடுவது போல் அவன் பேசியது பங்கனனுக்குப் பிடிக்கவில்லை.

எனவே அவனை அருகே வைத்திருக்க விரும்பாமல் தாவூத்தை வரவேற்க ஏற்பாடுகளைச் செய்யும் படி அனுப்பி வைத்தான். அவன் அகன்ற பின் அமீரை அழைத்தான். சுற்றும் முற்றும் ஒரு முறை பார்த்து விட்டு அவன் காதில் ரகசியமாக எதையோ சொல்லி அவனையும் அனுப்பி வைத்தான்.

அதே சமயம் விதானத்தின் இன்னொரு பகுதியில் இருந்த சௌமியகுமாரி தாவூத்தும் ஆபுத்திரனும் மரக்கலத்தில் வருவதைக் கண்டு பெருமகிழ்ச்சியடைந்தாள். தாவூத்தை ஆபுத்திரன் எதற்காக அழைத்து வருகிறான் என்பதற்கான காரணத்தை அவளால் அறியமுடியவில்லை என்றாலும் நிச்சயமாக வெள்ளைத் தீவுக்கு இனி ஆபத்தில்லை என்பதை மட்டும் உறுதியாக நம்பிய அவள், பங்களனிடம் சென்று "பார்த்தீர்களா தந்தையே! வெள்ளைத் தீவை ஆபுத்திரர் காப்பாற்றி விட்டார்?" என்றாள்.

அவளது வார்த்தைகளை அவன் ரசிக்கவில்லை. "எல்லாம் தாவூத் வந்த பிறகு தான் தெரியும். ஆபுத்திரன் தாவூத்தை அழைத்து வருகிறானா அல்லது ஆபுத்திரனை தாவூத் கைது செய்து அழைத்து வருகிறானா என்பதெல்லாம் தெரியாமல் வெள்ளைத் தீவு காப்பாற்றப் பட்டதாகச் சொல்ல முடியாது. நீ இங்கே நிற்காதே. உன் இருப்பிடத்திற்குப் போ. தாவூத் கண்ணில் மட்டும் நீ பட்டு விட்டால் எல்லாவற்றையும் மறந்து விட்டு உன்னிடம் வந்து விடுவான் அந்த அயோக்கியன். போய் விடு சீக்கிரம்." என்றான் பங்களன்.

அவனை வெறுப்போடு பார்த்து விட்டு அகன்றாள் சௌமியகுமாரி.

பிறகு பங்களனும் கோட்டையை விட்டு வெளியேறி வெள்ளைத் தீவுகளின் முகப்புத் தீவிற்குச் சென்றான். அங்கே அவன் வருவதற்கு முன்னால் வரவேற்பு கோஷ்டியினர் வந்து சேர்ந்திருந்தார்கள். முகப்புத் தீவின் முன்புறம் கணிசமான தூரத்தில் தாவூத்தின் மரக்கலம் நங்கூரமிட்டது.

அதிலிருந்த தாவூத் ஆபுத்திரனைப் பார்த்து "சேனாதிபதி



நாம் இங்கேயே இருப்போம். இந்த உபதலைவனை அனுப்பி ஆபுத்திரனை இங்கே வரச்சொல்லுங்கள்" என்றான்.

இதைக் கேட்டு ராவணன் அதிர்ச்சியடைந்தான். அதைத் தன் கடைக் கண்களால் கவனித்த ஆபுத்திரன் தாவூத்தைப் பார்த்து "தாவூத், நீ யார் உன் நிலை என்ன என்பதை மறந்து விடாதே. நீ எத்தனை பயங்கரமானவனாக இருந்தாலும் மக்களால் வெறுக்கப்படும் வெறும் கொள்ளைக் காரன். நீ இருக்கும் இடத்திற்குச் சேரர் கடற்படைத் தளபதியை வரச்சொல்வதை - அதுவும் என்னிடம் சொல்வதைக் கேட்ட பின்பும் நான் மௌனமாய் இருப்பதற்கு காரணம் உன்னைக் கொல்ல நான் விரும்பவில்லை என்பது தான். உன்னை இந்த வெள்ளைத் தீவின் முகப்பு வரை அழைத்து வந்து கொண்டிருந்த நேரத்திலேயே உன்னை என்னால் அழித்திருக்க முடியும். உன்னை இங்கே அழைத்து வருவதே என் அனுமதியின் பேரில் தான் என்பதை மறந்து விடாதே. நீ ஏதாவது கபட நாடகம் ஆடமுயற்சித்தால் உன் மரக்கலங்களை அழித்து விடுவேன். நீயும் தப்ப முடியாது. அதோ பார் உன்னை வரவேற்க பங்களனும் அவனது சகாக்களும் காத்திருக்கிறார்கள். நூலேணியில் இறங்கு. நீ அழைத்து வந்தவர்களையும் இறங்கச் சொல். நம்மை நோக்கி வரும் படகில் ஏறி முகப்புத் தீவை அடையலாம்." என்றதும் தாவூத் எதுவும் பேசாமல் நூலேணியில் இறங்கினான்.

விரைவிலேயே அனைவரும் முகப்புத் தீவில் இறங்கியதும் மங்கள வாத்தியங்களும், கொம்புகளும் பேரிகைகளும் முழங்கின. தாவூத்தைக் கண்டதும் அராபிய பாணியில் உடலை வளைத்து வணக்கம் தெரிவித்தான் பங்களன். அவன் ஏதும் பேசுவதற்கு முன் ஆபுத்திரனே பேச

# பங்களனின் கோட்டை





முற்பட்டு "பங்களா, முதலில் அனைவரும் விருந்துண்ண வேண்டும். பிறகு தாவூத் விரும்பும் சந்திப்பு நடக்கும்" என்றதும் "விருந்து தயாராகி விட்டது. இத்தீவிலேயே ஏற்பாடாகியிருக்கிறது. அனைவரும் வர வேண்டும்" என்றான் பங்களன்.

தாவூத் வெள்ளைத் தீவின் நடுவிலிருந்த கோட்டையைக் கண்டு ஒரு கணம் பிரமித்தான். அவன் கண்டிருந்த கிரேக்க நாட்டுக் கோட்டைகளை விட உயரமாகவும் பிரம்மாண்டமாகவும் இருந்த அக்கோட்டை அவனை மிகவும் கவர்ந்தது. கோட்டையின் முகப்பில் இரண்டு நெடிதுயர்ந்த தூண்கள் இருந்ததையும் அதில் ஒன்று கலங்கரை விளக்கமாகவும் மற்றொன்று பங்களனின் கொள்ளைக் கூட்டத்தின் அடையாளமான கொம்புகள் கொண்ட மனிதத் தலை ஓட்டு உருவமும் கம்பீரமாயும் பயங்கரமாயும் காட்சியளிப்பதைக் கண்டான். அதைப் பார்த்தபடியே விருந்துண்ணும் இடத்திற்குச் சென்றான் தாவூத். அவனோடு அவனது சகாக்கள் மட்டுமின்றி மரக்கலத்தை இயக்கிய மாலுமிகளுமாக சுமார் 150 நபர்களும் அவனுக்கு பின்னால் சென்றார்கள். முகப்பும் தீவின் மையப் பகுதி சுத்தம் செய்யப்பட்டு தோரணங்களாலும் மலர்களாலும் நேர்த்தியாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. அங்கே தரையில் விரிக்கப்பட்டிருந்த பீதாம்பரங்களில் அனைவரும் அமர வைக்கப் பட்டார்கள். நீண்ட காலமாக கடலில் திரிந்த கொள்ளையர்களுக்கு சாற்றோட்டமான பசுமையான தீவின் தரைப் பகுதியில் பீதாம்பரங்களின் மீது காலை நீட்டிச் சுதந்திரமாக அமர்வது பேரின்பமாக இருந்தது.

"எங்கே தளபதி? விருந்துக்கு வரவில்லையா?" என்று

கேட்டபடி அருகிலிருந்த ஆசனம் ஒன்றில் அமர்ந்தான் தாவூத்.

"அவர் உணவருந்தும் வேளையில் இருப்பார். அதோடு அவர் விருந்துகளில் கலந்து கொள்வதில்லை. நீங்கள் அருந்துங்கள் முதலில்" - என்று பதில் சொன்ன ஆபுத்திரன், "பங்களா, ஆரம்பியுங்கள்" என்றதும் விருந்து ஆரம்பமாயிற்று.

உயர்ரகமான மதுவகைகள், தென்னங்கள், இறைச்சி, மீன் உணவுகள், கனி வகைகள் என்று பலரகமான உணவு வகைகள் பரிமாறப் பட்டதால் கொள்ளையர்கள் ஒரு பிடி பிடித்தார்கள். தாவூத்தும் ஒவ்வொன்றாகப் பார்த்து "பலே பலே! இது என்ன பங்களனின் விருந்தா?" எறு கேட்டுக் கொண்டே வாயில் தள்ளிக் கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் வைக்கப் பட்ட உணவு வகைகள் ஒவ்வொன்றும் ஏதோ ஒரு குகைக்குள் சென்று மறைவது போல் அவனது வாயில் போய் மறைந்து கொண்டிருந்ததைக் கண்ட பங்களனே அசந்து போனான்.

இதற்கிடையில் திடீரென்று எதையோ உணர்ந்தவனைப் போல் தலையைத் தூக்கிய தாவூத், வாயில் கடித்துக் கொண்டிருந்த எலும்பு ஒன்றை கையில் எடுத்துக் கொண்டு, "நீங்கள் விருந்துண்ணவில்லையே ஏன்? பங்களனும் சும்மா நிற்கிறான்! இரண்டு பேரும் விரதமா இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"நான் மாமிச உணவு உண்பதில்லை. பங்களன் மரியாதை காரணமாக உண்ணாமல் இருக்கிறான். விருந்தாளிகளான நீங்களெல்லாம் முதலில் அருந்துவது தானே சரி" என்றான் ஆபுத்திரன்.

"ரொம்ப சரி. ரொம்ப சரி" என்று தலையை ஆட்டிக



கொண்டு தென்னங்கள்ளை எடுத்து மடமடவென்று குடித்தான் தாவூத்.

அந்த நேரத்தில் ஆபுத்திரன் பங்களனிடம் "பங்களா, வெள்ளைத் தீவு சேரா வசம் இருப்பதாகச் சொல்லி ஏமாற்றி இவனை அழைத்து வந்திருக்கிறேன். இவன் நம வழிக்கு வரும் வரை நீயோ உன் சகாக்களோ யாரும் பேச வேண்டாம்" என்று எச்சரித்தான்.

ஒருவாறாக விருந்து முடிந்தது. வயிறார உண்டிருந்த கொள்ளையர்கள் கள்ளையும் மதுவையும் மிதமிஞ்சி குடித்திருந்தார்களாதலால் எழுந்து கொள்ள முடியாமல் பீதாம்பரங்களிலேயே உருண்டார்கள். அதைக் கண்ட தாவூத் இவர்களுக்கு இந்த விருந்தே தள்ளாட வைத்து விட்டது. எனக்கு இது சர்வ சாதாரணம். நான் எப்படி விறைப்பாக நிற்கிறேன் பார்" என்றான். பிறகு அவனாகவே "இந்த சோம்பேறிகள் உருளட்டும். உறங்கட்டும். நாம் போகலாம் கோட்டைக்கு" என்றான்.

அதையடுத்து அவனோடு ஆபுத்திரன், பங்களன், அமீர், ராவணன், ஒரு சில கொள்ளையர்கள் கோட்டையை நோக்கிச் சென்றார்கள். சிறிதும் தடுமாற்றமில்லாமல் நடந்த அராபிய கொள்ளையர் தலைவனான தாவூத் கோட்டையைக் கண்களால் அளந்தான்.

"பலமான கோட்டை தான்" என்று முணுமுணுத்த தாவூத் "கடற்படை தளபதி ஆபுத்திரர் எங்கே இருப்பார்" என்று கேட்டான்.

அவனது கேள்வியைக் கேட்டதும் ஆபுத்திரன் பதில் சொல்வதற்குள் அவன் மீது ஆரம்பத்திலிருந்தே பகைமையும்

பொறாமையும் கொண்டிருந்த அமீர், "இவர் தான் ஆபுத்திரர். இது கூட உங்களுக்குத் தெரியாதா?" என்றான்.

தெளிவான நிலையில் இருந்த தாவூத்திற்கு அமீர் வார்த்தைகள் நன்றாகவே கேட்டன.

அவனது சிவந்த கண்கள் உருண்டு ஆபுத்திரனை எரிப்பது போல் பார்த்தன. "இது உண்மையா!" என்று இடி இடிப்பது போல் கேட்டான் இடையிலிருந்த வாளைத் தொட்டபடி.

அமீரின் இந்தக் குறுக்கீட்டைச் சிறிதும் எதிர்பாராத ஆபுத்திரன் "தாவூத் நான் வில்லவன் கோதையல்ல. ஆபுத்திரன் தான். இந்த வெள்ளைத் தீவை உன்னிடமிருந்து காப்பாற்றும்படி பங்களனின் மகள் கேட்டு கொண்டதால் பொய் வேஷம் போட்டு நாடகமாட வேண்டியதாயிற்று. உன்னைக் கொல்வது என் எண்ணமல்ல. எப்படியாவது உன்னை வெள்ளைத் தீவுக்கு அழைத்து வந்து உன் எண்ணங்களை மாற்ற திட்டமிட்டிருந்தேன். நல்ல வேளையாக நீயே இங்கு வர விரும்பினாய். அழைத்து வந்தேன்" என்றான்.

தாவூத்தின் முகம் கோபத்தால் சிவந்தது.

"தாவூத்தை ஏமாற்றியவர்கள் இதுவரை பிழைத்ததில்லை ஆபுத்திரா" என்று கூறியபடி தனது பட்டாக் கத்தியை உருவினான் தாவூத்.

"உன்னை ஏமாற்றியது உண்மை தான். ஆனால் அது நல்லதிற்காகத் தான். உனக்கு இதில் உடன்பாடு இல்லையென்றால் போர் புரிவோம் வா. நாமிருவரும் போரிடுவோம்." என்றபடி தன் வாளையும் உருவினான் ஆபுத்திரன்.



தாவூத் இடிபோல நகைத்து "நான் தரையில் போரிட்டு ரொம்ப காலமாகி விட்டது. இருந்தாலும் வாளும் சண்டையும் எனக்குப் புதியதல்ல. ஆரம்பிக்கலாம் சண்டையை. அரை நாழிகைக்குள் உன்னை இங்கேயே வீழ்த்துகிறேன் பார்" என்று கூறியதும் உடனடியாக வாட்போர் அங்கே துவங்கியது.

தாவூத் பெரும் மாமிசமலையாக இருந்தாலும் சண்டை மூண்டு விட்ட பின், உற்சாகத்துடன் குதித்தும் தாவியும் தன் பட்டாக்கத்தியை ஆபுத்திரனின் வாளுடன் மோதவிட்டான். ஆரம்பத்தில் அவனது சண்டை மூர்க்கமானதாகத் தோன்றினாலும் போகப் போக முறையான வாள் வீரனைப் போல் வாளை அவன் சுழற்றிய விதத்தைக் கண்ட ஆபுத்திரன் 'இவன் லேசுப் பட்டவனல்ல' என்பதை உணர்ந்தவனாய் எச்சரிக்கையோடு போரிடலானான். அவனுக்கு காயங்களை உண்டாக்கி தோல்வியடையச் செய்து பிறகு தன் வழியில் கொண்டு வர வேண்டும் என்பது ஆபுத்திரனின் நோக்கமாக இருந்தது. இதற்கிடையில் பங்களன் அமீரை நோக்கி ஏதோ கண்ணால் குறிப்பு காட்டவே அங்கிருந்து அகன்ற அமீர் சிறிது நேரத்திலேயே வந்தான். வரும் போதே வேகத்துடன் வந்த அவன் தனது கையிலிருந்த ஈட்டியைத் தாவூத்தின் முதுகில் பாய்ச்சியதால் ஈட்டியானது தாவூத்தின் முதுகில் துளைத்து வயிற்றுப் பகுதியில் நுனியைக் காட்டியது.

எதிர்ப் பாராத தாக்குதலால் நிலை தடுமாறி கீழே விழுந்தான் தாவூத். அப்போது பங்களனும் தன் வாளால் தாவூத்தின் காலை வெட்டினான். வெட்டி விட்டுப் பேய் போலச் சிரித்தான்.

இந்த அநாகரீகமானதும் கோழைத்தனமானதுமான செயலைக் கண்ட ஆபுத்திரன் "பங்களா, இத்தகைய

கோழைத்தனம்? இப்படிச் செய்ய உனக்கு வெட்கமாக இல்லையா? தாவூத்தைக் கொல்ல வேண்டும் என்றால் நான் கொன்றிருக்க மாட்டேனா? உன்னிடமா அழைத்து வருவேன்? உன் கொள்ளையர் புத்தியைக் காட்டி விட்டாயே" என்றான்.

"சரியாகச் சொன்னாய் ஆபுத்திரா. கொள்ளையர் புத்தியைத் தான் காட்டி விட்டேன். கொள்ளையர் தலைவனான தாவூத்திடம் இப்படி நடந்து கொள்வது தான் சரி. ஏற்கனவே விருந்தில் விஷம் வைத்து இவனது சகாக்களை கொன்று விட்டேன். இப்போது இவனும் சாகப் போகிறான். ஆபுத்திரா, நரகம் என்று சொல்வார்களே கேள்விப் பட்டிருக்கிறாயா? அதை பற்றியும் அங்கு தரப்படும் சித்திரவதைகளைப் பற்றியும் உனக்குத் தெரிந்திருக்கும். ஆனால் அவற்றையெல்லாம் நாம் பார்த்ததில்லை. நாம் பார்க்காத கொடிய நரகச் சித்திரவதைகளைச் செய்தவன் இந்த தாவூத். நான் இங்கே வருவதற்கு முன்னால் மாலுமியாகப் பணியாற்றிய போது பல நாடுகளுக்குச் சென்று வந்திருக்கிறேன். இந்த தாவூத்திடமும் பணிசெய்திருக்கிறேன். அப்போது இவனது சித்ரவதைகளைக் கண்டிருக்கிறேன். காட்டில் வேட்டையாடிய விலங்குகளை ஒரு கொம்பில் கட்டித் தொங்க விட்டு கீழே அடுப்பை மூட்டி விலங்குகளின் இறைச்சியைக் காய்ச்சுவதைப் பார்த்திருப்பாய். அந்த விலங்குகளைக் கூட சாகடித்த பின்பு தான் இவ்வாறு செய்வார்கள். ஆனால் தாவூத் மனிதர்களை - அதுவும் அப்பாவிகளை உயிரோடு கட்டித் தீயில் தொங்க விடுவான். எதிரிகளின் உடம்பில் உள்ளத் தோலை உரித்து மிளகாய் தூளைத் தடவி கழுகுப்பாறையில் கம்பங்களில் கட்டி வைப்பான். பிடிபடும் பெண்களை அனுபவித்து விட்டு



அவர்களை நிர்வாணமாக்கி வேட்டை நாய்களை விட்டு குதறியெடுக்கும் படிச் செய்வான். வேண்டாதவர்களைத் துண்டு துண்டாக வெட்டி சுறாக்களுக்கு இரையாக்குவான். இப்படியெல்லாம் தன் கண் முன்னாலேயே செய்து குதூகலப்பட்டுச் சிரிப்பான். தெரியுமா?"

"நீ மட்டுமென்ன? ரவீந்திரனைக் கொன்றாயே- அது சித்ரவதையைச் சேர்ந்ததில்லையா? உன் கொள்ளைக்கார வாழ்வில் நீ கடைப்பிடித்தது என்ன? அஹிம்சையா?"

"என்னைப் பற்றிப் பிறகு பேசலாம் ஆபுத்திரா. உலகிலேயே மாபெரும் கொள்ளைக்காரனும் கொடுங்கோலனும் நம் கையில் சிக்குவதென்பது கனவிலும் நடக்காத காரியம். ஏறக்குறைய நான் இதுவரை சொன்ன சித்ரவதைகளை இத்தாவூத் இந்த வெள்ளைத் தீவில் செய்திருப்பான். என்னைப் பாறையில் கட்டிப் போட்டு இன்னொரு பாறையால் அரைத்துப் பொடியாக்கியிருப்பான். இப்ப ப் பட்ட பயங்கரன் நம்மிடம் சிக்கியது நமது புண்ணியம். இவனை ஒரு நிமிடம் கூட உயிரோடு வைத்திருக்கக் கூடாது. ஆகவே தான் தாமதமில்லாமல் கொன்றேன். இவனை எப்படிப் பெட்டிப் பாம்பாக அடக்கி இங்கே கொணர்ந்து வந்தாய்?"

இதற்குப் பதிலாக நடந்தவை அனைத்தையும் விவரமாக சொன்னான் ராவணன்.

"உன் திறமைக்கும் துணிவிற்கும் எல்லையே இல்லை ஆபுத்திரா. புராணங்களில் வரும் அபார [illegible] மனிதனைப் போன்றவன் நீ. நீ மட்டும் இல்லாது போயிருந்தால் என் நிலை என்னாகியிருக்கும் என்பதை நினைத்தாலே [illegible]

நடுங்குகிறது. நீ தாவூதை இங்கு கொண்டு வந்தது வரை சரி. நான் இவனைக் கொன்று விட்டால் கதை முடிந்து போயிற்று இல்லையென்றால் கூட்டாளிகளை சந்தித்தால் நான் ஆயிற்று என்று அவன் அடம்பிடித்தால் கூட வெளிப்பட்டு நம் கதி அதோ கதியாகி விட்டிருக்கும் இல்லையா?" கேட்டான் பங்களன்.

"கோழைத்தனமும் துரோகபுத்தியும், பயமும் கொண்ட உனக்கு வேறெப்படி சிந்தனை போகும்? பங்களா, இங்கு வந்தபின் நான் சொன்ன பொய்கள் வெளிப்பட்டாலும் தாவூத்தால் என்ன செய்ய முடியும்? அவனை உயிர் மீதான பயத்தில் வைக்க என்னால் முடியாதா? இங்கு வந்தபின் அவன் நாம் சொல்கிறபடி தான் நடக்க முடியும். உண்மையிலேயே நான் அவனை எப்படியாவது மிரட்டியோ ஏமாற்றியோ இங்கு கொண்டு வந்து அவனுக்கு உண்மையான வாழ்க்கை மீதான அர்த்தத்தை விளக்கி அதன் மீது பற்றுதலை உண்டாக்கி கொள்ளைத் தொழிலை விட்டு விட்டு அமைதியான வாழ்க்கையை மேற்கொள்ளும் படிச் செய்யலாம் என்றிருந்தேன். அவனது கொள்ளையர்களையும் அவனது வழியில் வீரர்களாக மாற்றி மூஷிகன் ஆண்டு வந்த எழில்மலை சூழ்ந்த பூழி நாட்டை அவனுக்களித்து சேரமன்னரது தலைமையின் கீழ் ஒழுங்காக ஆளும் ஒரு அரசனாக மாற்ற தீர்மானித்திருந்தேன். என்னை கௌரவம மிகுந்த சேரர் சேனாதிபதி வில்லவன் கோதையாகவே மதித்து நம்பி என்னோடு வந்தான். என்னை நம்பி வந்தவனை உன் கீழ்த் தரமான துரோக புத்தியால் கோழையைப் போல் நடந்து கொண்டாய். உன்னைப் பார்க்கவே எனக்கு அருவெறுப்பாக இருக்கிறது."



"அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை ஆதித்ரா. இதோ பார். இந்த தாவூத் மரண பொறியில் கிடக்கிறான். இவன் மூலம் இவனது மரக்கலங்களையும் பிடித்திருக்கிறேன்" என்று சொன்ன பங்களன் "அமீர், இவனை சாய்த்து உட்கார வை" என்றான்.

அமீரும் சில சகாக்களுமாய் சேர்ந்து குற்றுயிரும் கொலையுயிருமாய் கிடந்த தாவூத்தை நிமிர்த்தி சுவற்றில் சாய்த்து வைத்தனர். அமீர் எய்த ஈட்டி அவனது உடலை துளைத்திருந்ததால் ரத்தம் பெருமளவில் பெருகி உடலின் கீழ்ப்பகுதிகளை நனைத்திருந்தது. பங்களனால் வெட்டுப்பட்ட அவனது கால் துண்டாகி தனியாகக் கிடந்ததால் கால்களிலிருந்தும் ரத்தம் பெருகி வழிந்து கொண்டிருந்தது. பெரும் உடல் வேதனையைத் தாங்கிக் கொண்டு தனது விழிகளை நிமிர்த்தி பங்களனைப் பார்த்த தாவூத் அவனது பார்வையில் வறட்சியும் வெறுப்புமே தெரிந்தது.

பங்களனோ அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அமீரிடம் ஒரு ஓலையில் செய்தியொன்றை எழுதும் படிச் செய்து "தாவூத், இதில் உன் கையெழுத்தைப் போடு" என்று மிரட்டினான்.

"எதற்கு?" - கேட்டான் தாவூத் அமுங்கிய குரலில்.

"உனது மரக்கலங்கள் என்னிடம் சரணடைய" என்றான் தாவூத்.

"அது நடக்காத காரியம்."

"எப்படி நடக்காது என்று பார்த்து விடுவோம்." என்று கூறிய பங்களன் தாவூத்தின் அறுபட்ட காலின் தொடைப் பகுதியில் தன் கால்களை வைத்து அழுத்தினான்.

இது பெரும் இம்சையாக இருக்கிறதே அலறினான் தாவூத் வலி பொறுக்க முடியாமல்.

ஆபுத்திரன் குறுக்கிட்டு "பங்களா, நிறுத்து உன் சித்திரவதையை. இனியும் இதை நான் அனுமதிக்க முடியாது" என்றான்.

"அப்படியானால் இதில் இவனது கையெழுத்தைப் போடச் சொல்"

"பங்களா, உன் வீரமெல்லாம் எங்கே போயிற்று போசிட்டு மரக்கலங்களைப் பிடிப்பதை விட்டு விட்டு மரணவாயிலில் இருப்பவனை சித்திரவதை செய்து மரக்கலங்களைப் பிடிக்க முயல்வது அவமானப் படக் கூடிய செயல்" - என்றான் ஆபுத்திரன்.

"உன் அறிவுரைகளை தாவூத்திடம் சொல். சாகும் நேரத்தில் உன் அறிவுரைகளையாவது அவன் சுமந்து செல்லட்டும்" என்றான் பங்களன்.

ஆபுத்திரன் ஏதோ பேசமுற்பட்ட போது குறுக்கிட்டுப் பேசிய தாவூத். "ஆபுத்திரரே, நீங்கள் என்ன சொன்னாலும் பங்களன் கேட்கமாட்டான். நானாக இருந்தாலும் கேட்க மாட்டேன். நாங்கள் ஒரே இனம். எங்களுக்கு ஒரே குணம். அதை மாற்ற முடியாது. ஓலையில் என்ன இருக்கிறதென்று படியுங்கள்." என்றான்.

ஆபுத்திரன் அந்த ஓலையை வாங்கிப் படித்தான். "என் அன்பான உபதலைவர்களே, சகாக்களே, மாலுமிகளே! நான் சேரரிடமும் பங்களனிடமும் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டேன். நாம் இனி ஒன்று பட்டுச் செயல்படுவோம்



ஆகவே உங்கள் மரக்கலங்களை வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வாருங்கள். இனி அரபிக் கடலும் நமது கொள்ளைக் களமாகும் - தாவூத்."

"பங்களா, கொடு அந்த ஓலையை கையெழுத்திடுகிறேன்" என்றான் தாவூத்.

ஓலையை நீட்டினான் பங்களன். தாவூத் மிகவும் சிரமப்பட்டு தூக்கமுடியாத கையை சிரமப்பட்டுத் தூக்கி கையெழுத்து இட்டு விட்டு 'பங்களா, என் சாவு அராபியா கொள்ளையருக்கு சமாதியாகி விடும் என்று கனவு காணாதே. என் சாவுக்குப் பழிவாங்குவதற்கு அரபு நாட்டிலிருந்து என் மகன் வருவான். இதே சித்ரவதை உனக்கும் நடக்கும்" என்றான்.

"உன் மகனையும் விட்டு வைக்கமாட்டேன் தாவூத் அது எப்போதோ நடக்கக் கூடிய கதை. இப்போது நடக்கப் போவதைப் பார்ப்போம்." என்று கூறிய பங்களன் தன் சகாக்களை அழைத்து "பத்து பா[illegible]களில் தகுந்த ஆயுதங்களுடன் சென்று மரக்கலங்களுக்கு அருகே சென்று இந்த ஓலையை அம்பில் கட்டி எறியுங்கள். மரக்கலங்கள் பணியும். வெள்ளைத் தீவுக்கு வரும் அவை வரும் வரை இவனை விடாதீர்கள். மரக்கலங்கள் வரத் தாமதமானால் இவனைச் சித்ரவதை செய்யுங்கள் இவன் அலறும் ஒலி கேட்டு அவர்கள் இங்கே வரவேண்டும் தெரிகிறதா? ஜாக்கிரதை. பிறகு நமது முகப்புத் தீவில் செத்து கிடக்கும் இவனது சகாக்களின் உடல்களை அகழியில் தூக்கி வீசுங்கள். முதலைகளுக்கு [illegible] விருந்தாகட்டும்." என்று கட்டளையிட்டான்.

பிறகு ஆபுத்திரனிடம் திரும்பி "ஆபுத்திரா, நாளைக்கு சேர நாடு செல்ல எல்லா ஏற்பாடுகளையும் செய்து தருகிறேன். எதற்குத் தெரியுமா? முன்பே நான் சொன்னபடி சேர மன்னனைத் தனியே இங்கு அழைத்து வருவதற்காகத் தான். எவ்வளவு சீக்கிரமாகச் சேர நாட்டிற்குச் செல்கிறாயோ அது நல்லது. தாமதம் செய்தால் சேரநாட்டு மன்னனின் உயிர் வேறு விதத்தில் போய் விடும். அவனை விஷம் வைத்து கொல்ல என் அந்தரங்க ஒற்றர்கள் இருவரை இரண்டு நாட்களுக்கு முன்பாகவே சேரர் தலைநகருக்கு அனுப்பி விட்டேன்" என்று கூறி பேய் சிரிப்பது போலச் சிரித்து விட்டுச் சென்றான் பங்களன்.

அதையடுத்து ஆபுத்திரன் பழையபடியே தனிச் சிறையில் வைக்கப்பட்டான்.

மறுநாள் மிகுந்த தெம்போடு ஆபுத்திரனை வஞ்சிக்கு அனுப்பி வைக்க வந்தான் பங்களன்.

அதே சமயம் பங்களனைத் தேடி வந்தான் வேறொரு மனிதன்.

அவனைக் கண்டதும் பங்களனுக்குச் சப்த நாடியும் ஒடுங்கியது. சிலையாகிப் போனான் அக்கொள்ளையன்.





# அத்தியாயம் பதினாறு



## தேவேந்திரன்

தனியறையில் அடைக்கப்பட்ட ஆபுத்திரன் தீவிரமான ஆலோசனையில் ஆழ்ந்தான். வெள்ளைத் தீவுக்கு வந்ததிலிருந்து தனது செயல்பாடுகளையெல்லாம் எண்ணிப் பார்த்தபோது அவனுக்கு வேடிக்கையாகவும் வருத்தமாகவும் இருந்தது. சேர நாட்டிற்கு கேடு விளைவிக்கும் காரியத்தில் தன்னை இறங்கச் சொல்லி அதற்காக கடத்தியிருந்த வெள்ளைத் தீவு கொள்ளையர் தலைவன் பங்களனுக்கு எதிராகச் செயல்பட வேண்டிய கடமை தனக்கிருக்கும் போது ஒவ்வொரு கட்டத்திலும் அவளையும் வெள்ளைத் தீவையும் காப்பாற்றிக் கொண்டு வந்ததை எண்ணிய போது "நான் ஏன் இப்படி மாறினேன்? என்ன தான் சௌமியகுமாரி வேண்டிக் கொண்டாலும் நான் எதற்காக ஒப்புக் கொண்டேன்? அவள்

மீது எனக்கெப்படி காதல் வர முடியும்! வேறென்ன காரணம்? பொன்னைத் தீவின் மக்களைக் காப்பாற்றும் படி சௌமியகுமாரி சொன்னாளே அதற்காகவா? சேர நாட்டு மக்களை விட இந்தக் கொள்ளையர் தீவு மக்கள் உயர்ந்தவர்களா? இல்லையே! சேர நாட்டு மன்னனும் மக்களும் என் இருகண்கள் அதற்காகப் போராட வேண்டிய நான் இங்கே தேவையில்லாமல் போராடிக் கொண்டிருப்பது ஏன்? என்ன போராடி என்ன பயன்? எல்லாமே விழலுக்கு இறைத்த நீராக அல்லவா போய்விட்டது? தான் போட்ட திட்டம் எதுவும் நிறைவேறவில்லையே! கொள்ளையர்கள் அவர்களது நன்றி கெட்ட செயலை அல்லவா வெளியிட்டுக் கொண்டார்கள்? இவர்களிடம் போராடியதற்கு பதில் சேரநாட்டிற்குப் போயிருந்தால் உபயோகமான காரியங்களைச் செய்திருக்கலாமே? இனிமேல் தாமதிக்கக் கூடாது. நாளை பங்களனாக அனுப்பாவிட்டால் அவனை வெட்டிப் போட்டு விட்டு இத்தீவை விட்டுப் போக வேண்டியது தான்." என்று தீர்மானித்த போது பங்களன் தன் ஒற்றர்களைச் சேர மன்னருக்கு விஷம் வைத்துக் கொல்வதற்கு அனுப்பியிருப்பதாகக் கூறியது நினைவிற்கு வந்தது.

"பங்களன் கூறிய செய்தி உண்மையாக இருக்குமா? உண்மையாகத் தான் இருக்க வேண்டும். தாவூத்திற்கு பேசிக் கொண்டே விஷம் வைத்ததைத் தான் பார்த்தோமே கொஞ்ச நேரத்தில் எத்தனை பேரை விஷத்தால் கொன்று விட்டான்! இவனுக்கு இக்காரியம் தான் சுலபமானது போலிருக்கிறது! இருந்தாலும் சேர மாமன்னரை விஷம் வைத்துக் கொல்வது அத்தனை எளிதா? மாமன்னர் எங்கே சென்றாலும் உணவருந்துவதற்கு மட்டும் அந்தப் புரத்திற்கு வந்து



அரசியாரோடு சேர்ந்தல்லவா உண்ணுவார்! அதுவும் எந்த உணவானாலும் சமையல் சாலையிலிருந்து அவருக்கு நேரடியாக வர முடியாதே! அரசியாரோடு இருக்கும் குறள்களும், கூனர்களும், ஆலிகளும் * சாப்பிட்டு உறுதி செய்த பிறகு தானே மன்னர் அருந்த முடியும்? இதில் நஞ்சை எப்படி உணவில் சேர்க்க முடியும்? அந்தப் புரத்திலேயே பங்களனின் உளவாளி யாராவது இருப்பார்களா? அப்படி இருந்தால் அந்த உளவாளி ஒருநாள் கூட அங்கிருக்க முடியாதே? சேனாதிபதி வில்லவன் கோதையின் கண்களுக்கு அவர்கள் தப்ப முடியாதே! ஐயோ! என் மனம் சமாதானமடைய வில்லையே! ஆண்டவா! மாமன்னர் வணங்கும் சர்வேஸ்வரா! வஞ்சியின் ஆடகமாடத்தில் உறையும் திருமாலே! நீங்கள் தான் சேர மாமன்னரை இந்த இக்கட்டிலிருந்து காப்பாற்ற வேண்டும். இந்நேரம் எதுவும் நடக்காமல் இருக்க வேண்டுமே" என்று உள்ளுக்குள் பதறினான் ஆபுத்திரன்.

அப்போது அறைவாயிலுக்கு வந்தார்கள் சௌமியகுமாரியும் ராவணனும்.

"ஐயா, என்னை மன்னிக்க வேண்டும். பங்களர் இப்படி மோசம் செய்வார் என்று நான் நினைக்கவில்லை." என்றான் ராவணன்.

"சேர நாட்டு வீரரே, உங்களுக்கு நேர்ந்த துன்பங்களுக்கும் அவமானங்களுக்கும் நான் தான் காரணம். உங்கள் முகத்தில் விழிக்கவே எனக்கு வெட்கமாக இருக்கிறது." என்று கலங்கினாள் சௌமியகுமாரி.

---

* சிலப்பதிகாரம் XX 17 மற்றும் XXVII 53-54

"ஐயா, நீங்கள் ஒரு வார்த்தை சொல்லுங்கள் பங்களனை என் வாளால் நானே வெட்டி எல்லாவற்றுக்கும் பிராயச் சித்தம் செய்கிறேன்." என்றான் ரணவீரன் உணர்ச்சி கொந்தளிப்போடு.

"போதும், போதும் நிறுத்துங்கள். சேர நாட்டவனாக இருந்து கொண்டு இங்கே நான் செய்த நல்லது கெட்டது போதும். எல்லாவற்றுக்கும் நானே காரணம். நாளை பங்களன் என்னை விடுவித்தாலும் சரி விடுவிக்காவிட்டாலும் சரி - நாளைக்கு வெள்ளைத் தீவை விட்டு நான் வெளியேறுவது உறுதி. இன்று வரை நீங்கள் பார்த்த ஆபுத்திரனை நாளை பார்க்க மாட்டீர்கள். என் மறுபக்கத்தை நீங்கள் பார்க்கப் போகிறீர்கள். போய் வாருங்கள்." என்று கூறி படுத்துக் கொண்டான் வஞ்சிக் கோட்டை வாலிபன்.



ஆனால் ஆபுத்திரனைப் போன்று தேச பக்தியோ மனசாட்சியோ ஏதுமற்ற பங்களன் தனது வாழ்நாளின் மற்றொரு வெற்றித் திருநாளாக தாவூத்தை கொன்ற நாளைக் கருதி, அதை அதிகப் படியான உற்சாகத்தோடு கொண்டாட விரும்பி சுகவனத்துச் சொர்க்க மாளிகைக்குச் சென்றனான். ரணதீரனுக்கு தண்டனையளித்த நாளுக்குப் பிறகு சுகவனம் பக்கமே போகாமல், பவானியைப் பக்குவப் படுத்தி சிகிச்சையளிக்க வைத்தியர்களை மட்டுமே அனுப்பி வைத்துக் கொண்டிருந்தான் பங்களன். அந்த வைத்தியர்களும் அவனது மிரட்டல்களுக்கு பயந்து தாங்கள் கற்றிருந்த மற்றும் கேள்விப் பட்டிருந்த வைத்தியங்களையெல்லாம் செய்தார்களாதலால்



மனதாலும் உடலாலும் பூரண குணமடைந்திருந்த பவானி புதுப்பொலிவு பெற்று புத்தம் புதியதாய் பூத்த பூவைப் போல செழிப்பாகவும் சிறப்பாகவும் இருந்தாள். அவளது மாளிகைக்கு பங்களன் போனபோது என்றுமில்லாத தடையாக பணிப்பெண் ஒருத்தி வாயிலில் நின்று "ஐயா உள்ளே போக வேண்டாம். அம்மணி விரதத்தில் இருக்கிறாள்" என்றாள்.

அவளது கன்னத்தில் பளாரென்று அறைந்த பங்களன் "விரதமா? இவளுக்கென்ன விரதம்? பார்த்து விடுகிறேன் அதையும் இனி அவள் இந்த வார்த்தையையே மறந்து விட வேண்டும்." என்று கூறி மூர்க்காவேசமாய் உள்ளே நுழைந்தான்.

மாளிகையில் வழக்கமாக இருக்கும் அறையில் அவள் இல்லை. பல அறைகளிலும் பார்த்தான் அவளைக் காணவில்லை. மாடிக்குச் சென்றான். அங்கே வானமே கூரையாக இருந்த திறந்த வெளியில் மரகதக் கட்டில் ஒன்றில் பட்டு மஞ்சம் விரிந்து கிடக்க அதில் கவிழ்ந்து கிடந்தாள் பவானி வழக்கமாக பங்களன் விரும்பும் ஆவி போன்ற மெல்லிய ஆடையை மட்டும் அணிந்து கொண்டு, மாலையொன்று விழுந்தது கிடந்ததைப் போல் இருந்த அவளது கோலத்தைக் கண்ட பங்களனின் உணர்ச்சிகள் கொப்பளித்தன. 'இது தான் விரதமா? விரதம் இது தான் என்றால் இவள் இப்படியே இருக்கலாமே' என்று தனக்குத் தானே பேசிக் கொண்ட அவன் "வைத்தியர்கள் நன்றாகத் தான் கவனித்திருக்கிறார்கள்" என்று அவர்களைப் பாராட்டி விட்டு பூனை போல் நடந்து கட்டிலருகே சென்று அவளை பூரணமாக ஒருமுறை பார்த்து விட்டு 'பவானி' என்று மெல்ல அழைத்தான்.

அவள் பதில் பேசாமல் மௌனமாய் அமர்ந்தாள். அதைக் கண்ட போது அவனது தேகம் சூடாகியது. "இவள் எதற்குப் பேச வேண்டும். பேச்சு யாருக்கு வேண்டும்?" என்று முணுமுணுத்தவனாய் அவளது கனகளை உயர்த்திய கவர்ச்சிப் பிரதேசத்தின் மீது கையை வைத்தான்.

அவள் "களுக்" என்று சிரித்தாள். சிரித்தபடி புரண்டாள்.

அடுத்த கணம் அவனது காம ஆதிக்கத்தில் இருந்தாள் பவானி. தனது பலத்தையும் காம வெறியையும் செழிப்பான பவானியின் தேகத்தின் மீது பிரயோகித்தான். அவளும் தனது ஆதிக்கத்தை அவன் மீது முழுமையாகக் காட்டினாள். சுதந்திரமான சூழ்நிலையில் அனுபவத்தில் மூழ்கும் ஆசையும் வெறியும் அபரிமிதமாக மூண்டு விட்ட காரணத்தால் இருவருமே உலகத்தை மறந்து காமச் சுகமே உலகம் என்று கருதியவர்களாய் அந்த இரவை ஓட்டினார்கள். விடியும் வரை பங்களான் மஞ்சத்தில் படுக்கவில்லை.



**வி**டிந்த பின் எழுந்து நீராடி உணவருந்தி படாடோபமான ஆடைகளை அணிந்து அசல் கொள்ளைக் காரனைப் போல வெளிப்பட்ட பங்களானுக்கு உள்ளமெல்லாம் மகிழ்ச்சி கரை புரண்டோடியது. "இந்நேரம் நம்மவர்கள் தாவூத்தின் மரக்கலங்களை மடக்கி வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வந்திருப்பார்கள். எந்தெந்த மரக்கலத்தில் என்னென்ன இருக்கிறதோ? இளம் பெண்களும் பலர் இருப்பார்கள். அதில் அழகிகளை மட்டும் பொறுக்கியெடுத்து அவர்களுக்கென்று தனி மாளிகை கட்டி குடியும் கூத்துமாக



நாட்களை ஓட்ட வேண்டும்." என்று ஆதாகவித்தபடி கோட்டைக்குச் சென்ற அவனுக்கு ஏமாற்றமே பலனைக்காட்டி வரவேற்றது.

"தலைவரே, தாங்கள் சொன்னபடியே அனைத்தையும் செய்தோம். பதிலுக்கு எங்கள் மீது ஒரு அம்பு வீசப்பட்டது ஒரு சீலையுடன். அச்சீலையில் "எங்கள் தலைவர் வெள்ளைத் தீவிலேயே வாழட்டும். எங்களுக்கு அங்கே வர விருப்பமில்லை என்றச் செய்தி இருந்தது. அதையடுத்து தாவூத்தின் மரக்கலங்கள் நங்கூரத்தை எடுத்து ஓடி விட்டன. எங்களால் எதுவும் செய்யமுடியவில்லை." என்று அவனது சகாக்கள் தெரிவித்தார்கள்.

இதைக் கேட்டு கோபாவேசத்தில் பற்களை நறநறவென்று கடித்த பங்களான் ஏதோ கேட்க வாயெடுத்தான். அராபிய கொள்ளையர்கள் தன் தலைவனைப் பற்றி கூட கவலைப் படாமல் ஓடி விட்ட விதம் அவனை வாட்டியது.

"தாவூத் என்ன ஆனான்?" என்று சீறினான் பங்களான்.

"அவர் இரவிலேயே இறந்து விட்டார்" என்றனர் சகாக்கள்.

"போய் அவனைச் சிங்காரித்துச் சிரித்துக் கொண்டாடுங்கள். முட்டாள்களே. மடையர்களே" என்று கண்டபடி திட்டி விட்டு ஆபுத்திரன் இருந்த அறைக்குச் சென்றான். கதவு திறந்து விடப்பட்டது. ஆபுத்திரனை எரித்து விடுவது போல் பார்த்த பங்களான் "உன்னை அப்படியே கழுத்தை நெறித்தும் கொன்று விடத் தோன்றுகிறது." என்றான்.

"வேறெப்படி உனக்குத் தோன்றும்! அவரவர் புத்தி அவரவர்களுக்கு." என்றான் ஆபுத்திரன்.

"எரிச்சலைக் கிளப்பாதே ஆபுத்திரா. கொடுங்கோலன் தானூத்தின் ஓலையை அனுப்பியும் கூட அவனது மரக்கலங்களை என்னால் பிடிக்க முடியவில்லை. ஓடி விட்டன." என்றான் பங்களன் ஆங்காரத்துடன்.

"ஏன்?"

"தலைவனே வேண்டாமென்று அவர்கள் ஓடிவிட்டார்கள்."

"இரக்கம் என்றால் என்னவென்று தெரியாதவர்கள் நீங்கள். உங்களுக்கெல்லாம் தலைவனும் சரி சாதாரண மாலுமியும் சரி எல்லோரும் துச்சம் தான்".

"அது போகட்டும். நீ தயாராகி விட்டாயா சேரநாடு செல்ல?"

"தயாராகத் தான் இருக்கிறேன் எதற்கும்." என்றான் ஆபுத்திரன் உள்ளர்த்தத்தோடு.

"சேர மன்னனைத் தனியே இங்கே அழைத்து வருவதாக உன் நாட்டின் பேரில் ஆணையிடு." என்றான் பங்களன்.

அதையடுத்து "அது தேவையில்லை." என்ற ஒரு குரல் ஒலித்தது.

குரலையடுத்து அங்கு பிரவேசித்தான் ஒருவன்.

தலைமுதல் கால்வரை போர்வை ஒன்றைப் போர்த்தியிருந்த அந்த மனிதன் தன் போர்வையை நீக்கி விட்டு நின்றான்.

அவனை யாரென அறிந்ததும் பங்களனின் சப்த நாடியும் ஒடுங்கியது. சிலையாகிப் போனான் அவன்.



## சேரன் செங்குட்டுவன்





அதே சமயம் ஆபுத்திரனோ அந்த மனிதனின் கால்களின் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினான்.

'செஞ்சடை வானவன் அருளினில் விளங்க வஞ்சி தோன்றிய வானவன்' என்று சிலப்பதிகாரத்தில் தேவர்களுக்கு இணையாகப் போற்றப்பட்டவனும் வானமே வரம்பு என்று சொல்லக் கூடிய வகையில் பேராட்சி புரிந்து 'வானவரம்பன்' என்றச் சிறப்புப் பெயரைப் பெற்றவனும் ஏழு வேந்தர்களை வென்று அவர்களது மணிமுடிகளை மாலையாக்கி அணிந்த காரணத்தால் 'எழுமுடி மார்பன்' என்று அழைக்கப்பட்டவனும், சோழன் கிள்ளி வளவனை எதிர்த்து ஒன்பது சோழர் மன்னர்களைப் போரிட்டு வீழ்த்தியதால் 'வெந்திறல் ஆராச் செருவில் சோழர் குடிக் குரியோர் ஒன்பதின்மர் வீழ்ச் செய்தவன் என்று பதிற்றுப் பத்தில் பெரும் புலவர் பரணரால் பாராட்டப் பட்டவனும், அப்பரணருக்குத் தன் மகன் குட்டுவன் சேரலையே பரிசாக அளித்து புதிய சரித்திரம் படைத்தவனும், கண்ணகியின் கணவனான கோவலனின் நண்பனாக இருந்து அறிவுரை வழங்கி வந்த மறையவனான மாடலனுக்கு துலாபாரத்தில் அமர்ந்து தனது எடைக்கு ஈடான பொன்னைப் பரிசாக அளித்தவனும், வீரமும் வள்ளல் தன்மை வாய்ந்தவனும், சோழர்களையும் பாண்டியர்களையும் அடக்கி மூவேந்தரில் முதன்மையானவனாக விளங்கித் தனது கொடியில் மூவேந்தருக்குரிய சின்னங்களைப் பொறித்த ஆற்றல் மிகுந்தவனும், இமயத்தை வென்ற இமயவரம்பன் சேரலாதனின் புதல்வனும், தனது சகோதரன் இளங்கோ தனக்கு அரசுரிமை வேண்டாம் என்று துறவறம் பூண்டதால் அரியணை ஏறி சேரநாட்டிற்கும் அதன் மக்களுக்கும்



தெய்வமாகவும் மாமன்னனாகவும் விளங்கி சேரர்களுக்கு பொற்காலத்தைப் படைத்துக் கொண்டிருந்தவனுமான செங்குட்டுவன் வானிலிருந்து வந்து இறங்கியது போல வந்து நின்றதைக் கண்ட போது, பங்களனின் உடல் ஒரு கணம் நடுங்கியது. தான் காண்பது கனவா என்று எண்ணி அதற்கு பதிலைக் காணவும் முடியாமல் தன்னை மறந்து சிலைபோல நின்றான் கொள்ளையர் தலைவன்.

தேவதூதன் போல் வந்திருந்த செங்குட்டுவன் வேந்தனுக்குரிய அணிகலன்களை அணிந்திருந்ததால், அவன் நின்ற தோரணை வெகு கம்பீரமானதாகவும் அவனது திடமான உடல் கட்டை உணர்த்தக் கூடியதாகவும் இருந்தது. போர்வையை விலக்கியிருந்ததால் செங்குட்டுவனின் அழகிய முகம் பூரண நிலவு போல் ஒளிர்ந்தது. அந்த அழகிய முகத்தில் இலங்கிய கண்களில் கருணையும் வீரமும் கலந்து கிடந்ததால் அவற்றின் தீட்சண்யம் கண்கொள்ளா காட்சியாக இருந்தது. நெற்றியில் இருந்த சந்திரத் திலகமும் சிற்பியால் செதுக்கப்பட்ட நாசியும் உதடுகளும், மற்றும் அளவாக வளர்க்கப் பட்டிருந்த மீசையும் அவனது முகத்தில் தேவ களையை உண்டாக்கியிருந்தன.

தனது காலில் விழுந்த ஆபுத்திரனைத் தன் கைகளால் தொட்டு எழுப்பி தன் பக்கத்தில் நிறுத்திக் கொண்ட செங்குட்டுவன் ஒரு சீலையை எடுத்து பங்களனிடம் வீசி "இதைப் படி" - என்றான்.

பங்களனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. சீலையை ராவணனிடம் கொடுக்க அதை வாங்கிய அவன் படித்தான்.

"மாமன்னர் - சேர நாட்டு தெய்வம் அவர்களது தாள்

பணிந்து எழுதும் விண்ணப்பம்

"மன்னவா, தாங்கள் புதிய மரக்கலங்களோடு வந்து என் சொல்லையும் ஒரு பொருட்டாக மதித்து வெள்ளைத் தீவை அணுகாமல் சென்றதற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள வார்த்தைகள் இல்லாமல் தவிக்கிறேன்.

"என்னைப் பற்றிய கவலை தங்களுக்கு வேண்டாம். பங்களர் என்னை எதற்காகக் கடத்தியிருந்தாலும் அவரது கட்டளைக்கு நான் ஒரு போதும் உடன்பட மாட்டேன். எனது உடலும் பொருளும் தங்களுக்காகச் சமர்ப்பிக்கப் பட்டவை. அவை பிறருக்கு ஆட்படாது.

"மன்னவா, பங்களர் தற்போது பலவீனமான நிலையில் இருக்கிறார். அவரது பெரும்பாலான மரக்கலங்களை பழுது பார்ப்பதற்காக ஏசுடித தீவுக்கு அனுப்பியிருக்கிறார். இப்போது தாங்கள் வெள்ளைத் தீவைத் தாக்கினால் ஒரே நாழிகையில் அதை அழிக்கலாம். தாங்கள் உலகம் போற்றும் தர்மவான். சிறகிழந்த பறவையாய் பலவீனமாக இருக்கும் நிலையில் இத்தீவைத் தாக்குவது தர்மமாகாது. தங்களது படையெடுப்பைச் சற்று தள்ளி வையுங்கள். பங்களரின் மரக்கலங்கள் பழுது பார்க்கப்பட்டு வெள்ளைத் தீவுக்குத் திரும்பி அவர் பலம் பெறட்டும். பிறகு படையெடுப்பைத் துவக்குங்கள். அதுவே தர்மம். தர்மத்தைத் தங்களுக்கு நான் கூறுவது அபவாதம். அதற்காக என்னை மன்னியுங்கள்.

- தங்கள் ஆபுத்திரன்".

சேர மன்னனுக்கு ஆபுத்திரன் எழுதிய சீலைச் செய்தியைக் கேட்ட போது பங்களனின் தலை கிறுகிறுத்தது.



"கேட்டாயா பங்களா? சேரரது கண்ணியத்தையும் தர்மத்தையும் கேட்டாயா? என்னை அடக்குவதற்காக அதர்மமாக நீ கடத்தி வந்த எங்கள் நாட்டு மாவீரன் உனக்காக தர்மம் பேசுகிறான். தனக்கு என்ன நேர்ந்தாலும் கவலையில்லை என்று தன் உயிரைப் பற்றிக் கவலைப்படாமல் உன் உயிரைப் பற்றிக் கவலைப்பட்டு எனது படையெடுப்பை தள்ளிப் போடும்படி வேண்டுகிறானே - இப்படிப்பட்ட தர்ம வீரனை நீ எங்காவது பார்த்திருக்கிறாயா? கேள்விதான் பட்டிருக்க முடியுமா நீ? இப்படிப்பட்ட குணசீலனை இங்கே காவு கொடுத்து விட்டு வஞ்சி நகர் கோட்டையில் நான் சுகமாகத் தூங்கிக் கொண்டிருப்பேன் என்று நினைத்து விட்டாயா? பேராசையும் அதர்ம வேட்கையும் கொண்ட கடம்பனே, இதோ நான் தனியாகத் தான் உனக்கு முன்னால் வந்து நிற்கிறேன். உன்னால் என்ன செய்ய முடியுமோ செய்" என்று வெண்கலக் குரலில் கம்பீரமாகவும் சிறிதளவும் அச்சமில்லாமலும் பேசினான் செங்குட்டுவன்.

பங்களன் என்ற சிலை ஏதும் பேசவில்லை.

"எனக்கு எப்படி செய்தி வந்து சேர்ந்தது என்று நினைக்கலாம். இந்த வெள்ளைத் தீவின் மக்கள் இவனை இத்தீவின் காவல் தெய்வமாகக் கருதி இவனுக்காக எதையும் செய்யத் தயாராக இருந்த போது அவர்களில் இருவரைத் தேர்ந்தெடுத்தான். சீலைச் செய்தியை எனக்கு அனுப்பினான். சீலையைச் சுமந்தவர்கள் புதியவர்களாக இருந்தாலும் ஆபுத்திரன் அனுப்பினான் என்றச் சொல், கோட்டை வாயிலிலிருந்து எனது இருப்பிடம் வரையிலான எல்லாத் தடைகளையும் நீக்கியது. அந்த இருவர் மூலமாகவே நானிங்கு

வந்தேன். அதோடு அவ்விருவர் வெள்ளைத் தீவை விட்டு வந்த பின் இங்கு நடந்த பிற நிகழ்ச்சிகளையும் நான் அறிந்து கொண்டேன். யாரிடமிருந்து தெரியுமா? எனக்கு விஷம் கொடுப்பதற்காக இரண்டு அந்தரங்க ஒற்றர்களை அனுப்பினாயே அவர்கள் மூலம் தான். எனக்கு உணவு தயாரித்து அனுப்பியதிலிருந்து எல்லாமே வழக்கப்படி தான் நடந்தன. ஆனால் எல்லோரும் சாப்பிட்டுப் பார்த்து பரிசோதனை செய்த பிறகு தான் உனது ஒற்றர்கள் உணவில் விஷத்தைக் கலந்தார்கள். நானும் இறந்திருப்பேன். ஆனால் சிவனருள் என்னைக் காத்தது. எப்போதும் அந்தப்புரத்தில் ராணியோடு அமர்ந்து உண்பது தான் என் வழக்கம். ஆனால் அன்று நான் ஈசனுக்காக விரதமிருக்கும் சோமவார நாள். ஆகவே நான் உணவு உண்ண அந்தப்புரத்திற்குப் போகவில்லை. அதை அறியாத உன் ஒற்றர்கள் உணவை என் இருப்பிடத்திற்கே கொண்டு வந்தார்கள். இந்த விஷயத்தில் அந்தப் புர வாசிகள் ஏமாந்து போனாலும் ஆயிரம் கண்ணனான வில்லவன் கோதை ஏமாறவில்லை. என் இருப்பிடம் தேடி உணவு செல்லும் அதிசயத்தைக் கண்ட அவன் உன் ஒற்றர்களைத் தொடர்ந்தான். உணவைக் கண்டு நானும் வியந்தேன். 'உணவை யார் அனுப்பியது?' என்று கேட்டேன். நான் கேட்டு முடிப்பதற்கும் படைத்தலைவன் வில்லவன் கோதை வந்து சேர்வதற்கும் சரியாக இருந்தது. ஒற்றர்கள் உண்மையைச் சொன்னார்கள். நான் பிழைத்தேன். விஷம் வைக்க வந்த இருவரும் வஞ்சியின் சிறையில் இருக்கிறார்கள். இதோ பார் பங்களா. உன்னையும் உன் வெள்ளைத் தீவையும் அழிக்க வேண்டிய விருப்பமோ அவசியமோ எனக்கு இல்லை. என் அருமைத் தந்தை சேரலாதர் இங்கே தாக்குதல் நடத்தியதற்குக்



காரணம் உனது கடற்கொள்ளையும் உன்னால் வணிகர்களுக்கு நேர்ந்த இன்னல்களும் தான். நீ கொள்ளைகளை நிறுத்தி விட்டு இதே தீவில் ஒழுங்காக ஆட்சி செய்வாயானால் உன்னைத் தாக்க சேரநாடு விரும்பாது. அப்படியின்றி கொள்ளைத் தொழில் தான் உன்னால் முடிந்த காரியம் என்றால் ஆபுத்திரன் கூறியபடி ஏகடித் தீவில் இருக்கும் உனது மரக்கலங்கள் மீண்டும் வரட்டும். போரில் உன்னை நான் சந்திக்கிறேன்." என்று மேலும் கூறி விட்டு பதிலுக்குக் காத்திராமல் ஆபுத்திரனை அழைத்துக் கொண்டு சென்றான் சேரமன்னன்.

அவனது உயிருக்காக அலைந்த பங்களாவும் சரி இரக்கமற்ற கொள்ளையரும் சரி ஏதோ கனவு நடப்பதாக எண்ணி ஸ்தம்பித்துக் கிடந்தார்கள்.

விரைவிலேயே கடற்கரையை அடைந்தான் சேரமன்னன். அங்கே அவனது புரவியின் பக்கத்தில் ஆபுத்திரனின் புரவியான பூர்ணாநந்தமும் நின்றிருந்தது.

வியந்தான் வஞ்சிக் கோட்டை வாலிபன்.



# அத்தியாயம் பதினேழு



## வஞ்சி மாநகர்

"என்ன ஆபுத்திரா, உன் புரவி எப்படி இங்கே வந்தது என்று பார்க்கிறாயா?" - கேட்டான் சேர மன்னன்.

ஆபுத்திரன் ஏதோ பேசமுற்பட்ட போது "உன் புரவியை எங்கே தவறவிட்டாய்?" - என்று சேர மன்னனே கேட்டான்.

"முசிறி கடற்கரையில் என்னைக் கடத்தியவர்கள் இதை விரட்டி யிருக்க வேண்டும் மன்னவா." என்றான் ஆபுத்திரன்.

"உன் புரவி உன்னைத் தேடி வஞ்சிக்கு வந்து விட்டது. அங்கே உன்னைக் காணாததால் கோட்டைக்கு வெளியே வந்து விட்டது."



"பாவம் மன்னவா. மயக்கமடைந்ததற்குப் பிறகு புரவியை நான் மறந்தே போனேன்"

"ஆனால் புரவி உன்னை மறக்கவில்லை. எங்கே போயிருந்தாலும் நீ வஞ்சிக்குத் தானே வரவேண்டும் என்று கோட்டையை சுற்றியபடியே இருந்திருக்கிறது."

"நமது வீரர்கள் யாரும் இதைக் கண்டு கொள்ளவில்லையா?"

"நல்ல கதை. இப்புரவி உன்னையும் என்னையும் தவிர வேறு யாரையாவது அருகில் வர விட்டிருக்கிறதா?"

"இல்லை."

"வஞ்சியின் கோட்டைத் தலைவன் முசிறிப்பித்தன் தன்னால் முடிந்த தந்திரங்களையெல்லாம் செய்து பார்த்தான் உன் புரவியைப் பிடிக்க. அவனால் வெற்றி பெற முடியவில்லை. நீ ஆயிற்று உன் புரவியாயிற்று என்று அனைவரும் விட்டு விட்டார்கள். இந்த நிலையில் உன்னைத் தேடி கோட்டை வாசலுக்கு வந்த போது எனக்குப் பின்னால் வந்து விட்டது உன் பூர்ணாநந்தம்."

"தங்களை அடையாளம் கண்டு கொண்டதா இது?"

"இல்லை என்று தான் தெரிகிறது."

"ஏன்?"

"பூரணமாக போர்வையை அல்லவா நான் அணிந்திருந்தேன்? என்னை எப்படி இது அறிந்திருக்க முடியும்?"

"பின்?"

"அப்போது எனக்குப் புரியவில்லை ஆபுத்திரா, இப்போது தான் புரிகிறது."

"ஏது மன்னவா?"

"உன் புரவி என் புரவியை அடையாளம் தெரிந்து கொண்டிருக்கிறது. அதன் மூலம் நான் தான் செல்கிறேன் என்று ஊகித்திருக்க வேண்டும். அந்த நம்பிக்கையில் தான் என்னைத் தொடர்ந்திருக்கிறது. கெட்டிக்காரப் புரவி!"

"மன்னவா, தாங்கள் இங்கே வந்தது அங்கே உளவவர்களுக்குத் தெரியுமா?"

"ஆகா! எல்லோருக்கும் தெரிந்தால் என்னை அனுமதிப்பார்களா? எனவே தான் பூரணகவசம் அணிந்து கொண்டு ரகசியமாகப் புறப்பட்டேன். பதட்டம் உண்டாகி விடக் கூடாது என்பதற்காக ராணியிடமும் கோட்டைத் தலைவன் முசிறி புத்தனிடமும் சொல்லி விட்டு வந்தேன்."

"விஷயத்தை வெளியே சொல்ல வேண்டாம் என்று சொல்லியிருப்பீர்கள்."

"ஆமாம்."

"மன்னவா, வெள்ளைத் தீவிலிருந்து என்னால் தப்ப முடியாதா? என்னை விடுவிக்கத் தாங்கள் வர வேண்டுமா?"

"உன் வீரத்தையும் சாமத்தியத்தையும் நான் குறைவாக எண்ணி விட்டதாக நினைக்காதே ஆபுத்திரா. நீ சென்றுள்ள இடமும் அதன் சொந்தக் காரர்களும் எப்படிப்பட்டவர்கள் என்று எண்ணிப் பார்? கயவர்கள். தர்மசிந்தனையற்றவர்கள். அவர்கள் உன்னிடம் வீரத்தை மட்டும் காட்டினால் நீ வெற்றி



பெறமுடியும். அபிமன்யுவைப் பற்றி உனக்குத் தெரியும். வீரமும் சாமர்த்தியமும் நிறைந்தவன் அவன். ஆனால் பத்ம வியூகத்திற்குள் நுழைந்து விட்ட பிறகு அவனிடம் கௌரவர்கள் வீரத்தைக் காட்டவில்லை. பத்ம வியூகத்தில் பாண்டவர்கள் நுழையாமல் தடுத்து விட்டு அவனை நிராயுதபாணியாக்கிச் சூழ்ந்து நின்று அதர்ம வழியில் கொன்றார்கள். என்னைப் பொறுத்த வரை நீவேறு அபிமன்யூ வேறு என்று நான் நினைக்கவில்லை. அதனால் நான் அபிமன்யுவிற்கு நேர்ந்த கதி உனக்கு நேர்ந்து விடக் கூடாது என்று தீர்மானித்து நான் வந்தேன்."

"என் மீது தாங்கள் வைத்திருக்கும் பாசத்திற்கு விலையில்லை மன்னவா. நான் பெரும் பாக்கியசாலி. இருந்தாலும் தாங்கள் நேரில் வரவேண்டுமா?" இப்படிக் கேட்ட போது வஞ்சிக் கோட்டை வாலிபனின் குரல் நெகிழ்ந்தது.

"மகன் ஆபத்திலிருக்கிறான் என்று பெற்ற தாய் கேள்விப் பட்டால் உதவிக்கு ஆளைத் தேடிக் கொண்டிருக்க மாட்டாள் ஆபுத்திரா. தானே புறப்பட்டு விடுவாள்." என்றான் சேரமன்னன் சாதாரணமான குரலில்.

ஆபுத்திரன் ஏதோ கேட்க முற்பட்ட போது "நான் நேரில் வந்ததால் வெள்ளைத் தீவைப் பற்றித் தெரிந்து கொண்டேன். என்னை அறியாமல் எனக்கு தீங்கு ஏதும் நேராது ஆபுத்திரா. இனி அந்தப் பேச்சைவிடு. வெள்ளைத் தீவுக்கு நீ வந்ததிலிருந்து நடந்தவைகளைக் கூறு" என்றான்.

ஆபுத்திரன் சொன்னதையெல்லாம் கேட்ட சேரமன்னன் "நீ சொன்னதைப் பார்க்கும் போது பலவன்

திருந்த மாட்டான் என்றே தோன்றுகிறது. கயநலம் கொண்டவனுக்கு பேராசையும் தொடர்ந்து இருந்து வந்தால் அவன் தர்ம நெறிகளை உதாசீனப் படுத்தவே பார்ப்பான். எதற்கும் கொஞ்ச காலம் விட்டு வைப்போம். அவனை அழிப்பதோ வெற்றி கொள்வதோ என் லட்சியமல்ல ஆபுத்திரா. இவன் விஷயம் என்றில்லை சோழர்கள் போன்ற மன்னர் மரபுகள் விஷயத்தில் கூட எனது நோக்கம் வெற்றியோ அழிவோ அல்ல. தர்மநியாயம் மட்டும் தான். அதற்கு ஆபத்து ஏற்படும் போது நான தர்மத்தை நிலை நாட்டும் லட்சியத்திற்கு ஆட்படுத்திக் கொள்கிறேன். இது வரை நான் பெற்ற வெற்றிகள் இந்த அடிப்படையில் தான ஆபுத்திரா. பங்களனை அழிக்க எண்ணியிருந்தால் எப்போதோ அதைச் செய்திருப்பேன் நான். உன்னை விடுவிக்கும் சாக்கில் கடற்படையை அனுப்பி இந்நேரம் அவனை அழித்திருப்பேன். நான் விரும்புவது அதுவல்ல. தன்னை அரச வம்சத்தவனாய் கூறிக் கொள்ளும் அவன் ஒரு நல்ல அரசனாக தர்ம பரிபாலனம் செய்யட்டும். அவனுக்குப் பாதுகாப்பாகவும் நானிருக்கிறேன். அவனோ அப்பாவி வணிகர்களை அச்சுறுத்தியும் துன்புறுத்தியும் கொள்ளையிட்டு வருகிறான். அவனும் அவனது காட்டு மிராண்டித் தனமும் மாற வேண்டும் ஆபுத்திரா. அது தான் என் விருப்பம்" என்றான்.

இதைக் கேட்டுப் பரவசப் பட்ட ஆபுத்திரன் "மன்னவா, தமிழக வரலாற்றில் தங்களது ஆட்சிகாலம் மகோன்னதமான பொற்காலம் தான். வரலாறுகள் வரும். ஆனால் அதில் தங்களைப் போன்றவர்கள் அதிகம் பேர் தோன்றுவதில்லை" என்றான்.

"இல்லை ஆபுத்திரா. என் இதயம் ஏனோ படபடக்கிறது.



ஏதேதோ துன்பமான காட்சிகள் என் கனவுகளில் அடிக்கடி தோன்றுகின்றன. சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் துயரமான சம்பவங்கள் நடைபெற விருப்பது போல என அடிமனம் சொல்கிறது. என் கனவில் அடிக்கடி ஒரு பெண்மணி தோன்றிக் கொண்டிருக்கிறாள். யாரவள்? என் கனவில் எதற்காகத் தோன்றுகிறாள்? அவளுக்கு என்ன நேர்ந்தது அல்லது நேரப் போகிறது என்றெல்லாம் எண்ணி விடை தெரியாமல் நான் தவிக்கிறேன் ஆபுத்திரா. இதனால் சேர நாட்டிற்கு ஏதாவது கேடு விளையுமா என்றும் யோசிக்கிறேன்." என்று கனத்த இதயத்தோடு பேசிய சேரமன்னன் "எல்லாம் நல்ல படியாக நடக்க வேண்டும். நீ உன் இஷ்ட தெய்வமான ஆடகமாடத் திருமாலை வேண்டிக் கொள் ஆபுத்திரா." என்று திடமான குரலில் சொன்னான்.

மன்னனின் மனப்பாரம் அவனுக்கு விளங்கவில்லை என்றாலும் தெய்வாம்சம் பொருந்தியவனாகக் கருதப்படும் அவனது சொற்களில் ஏதாவது உண்மை இருக்கும் என்று நினைத்த அவன் தனது இஷ்ட தெய்வத்தை வேண்டிக் கொண்டான்.

சேரமன்னன் பழையபடி போர்வையை அணிந்து கொண்டு தனது புரவியில் ஏற, ஆபுத்திரனும் தனது பூர்ணாநந்தத்தின் மீது பாய்ந்தேறிக் கொண்டதும் இருபுரவிகளும் சேர நாட்டை நோக்கிப் பாய்ந்து சென்றன. அன்றிரவு இருவரும் தொண்டி நகரில் ஓய்வெடுத்துக் கொண்டனர்.

மறுநாள் புறப்பட்ட போது "நான் முதலில் செல்கிறேன் ஆபுத்திரா. நீ சற்று தாமதமாக வந்து சேர். உன்னைப்

பங்களைனிடமிருந்து காப்பாற்றி விட்டேன். வஞ்சிக்குப் போனபின் அந்த ஐவரிடமிருந்து உன்னை எப்படிக் காப்பாற்றப் போகிறேன் என்று தெரியவில்லை. ஏனென்றால் அந்த ஐவரது ஆணையை நான் கூட மீற முடியாது" என்று ஒரு புதிரைப் போட்டு விட்டுச் சென்றான் சேரமன்னன்.



பூவாவஞ்சி என்று சிலப்பதிகாரமும் வாடா வஞ்சி என்று மணிமேகலையும் சிறப்பித்துக் கூறியதும், பொழில்கள் நிறைந்த கோட்டை என்றும், வடக்கில் கொண்டித் துறைமுகமும் தெற்கே முசிறித்துறைமுகமும் பாதுகாக்க, பேரியாற்றின் கரையில் அமைந்திருந்ததுமான வஞ்சிமாநகரை ஆபுத்திரன் நெருங்கினான். வஞ்சிக் கோட்டையைச் சுற்றி காவற்காடும் அதையடுத்து அகலமான அகழியும் அதையடுத்துப் புற மதில்களும் அதையும் அடுத்து உள் மதில்களுமாய் அமைந்து கோட்டைக்குப் பெரும் பாதுகாப்பை அளித்திருந்தது. காவற்காட்டு மரங்கள் பெரும்பாலும் முள் மரங்களாகவும் அவைகளும் அடர்த்தியாகவும் இருந்தன. பேரியாற்றின் நீர் அந்த மரங்களுக்குப் பாய்ந்து வந்ததால் எப்போதும் கிளைகளோடு பசுமையாய் இருந்த அம்மரங்கள் அகன்றும் உயர்ந்தும் வளர்ந்திருந்ததால் கோட்டையின் சுவர்களையே அவை மறைத்திருந்தன. பேரியாறு ஓடிக் கொண்டிருந்த ஒரு புறத்தைத் தவிர மற்ற மூன்று புறங்களிலும் வளர்ந்திருந்த அக்காவல்காட்டின் ஊடே கோட்டைக்குச் செல்வதற்காக உண்டாக்கியிருந்த பாதையில் காவல் வீரர்கள் வாளும் ஈட்டியும் ஏந்திய படி எப்போதும் காவலிருந்தார்கள். தெரிந்தவர்களையும் மன்னர் முதலான



பிரபலமானவர்களையும் விசாரணையின்றி அப்பாதையில் அனுமதித்த அவர்கள், மற்ற அனைவரையும் விசாரணை செய்துமாடைகளை பரிசோதித்தும் கவனமாக கண்காணித்த பிறகே உள்ளே அனுமதித்தார்கள். அக்காவற்காட்டைக் கடந்தால் கோட்டையைச் சுற்றி ஓடும் அகழியில் பெருக்கெடுத்த நீரில் நீண்ட முதலைகள் சண்டையிட்டும் புரண்ட வண்ணமுமாய் இருந்தன. அந்த அகழிக்கும் கோட்டையின் வெளிமதிலுக்கும் மரப்பாலம் இருந்தது. அதைத் தேவையான போது தூக்குவதற்கும் இறக்குவதற்கும் அகழியோரமாக சிறந்த உடல்கட்டு வாய்ந்த பணியாட்கள் எப்போது மிருந்தார்கள். கோட்டை வாசல் பெரும் பாலும் திறந்தேயிருக்கும். ஆபத்து நேரம் காலங்களில் கோட்டைச் சுவர்களின் மேலே இருக்கும் உயர்ந்த காவல் கூடங்களில் உள்ளவர்கள் மணியொலி எழுப்பியும் சங்கொலித்தும் எச்சரிக்க வேண்டும் என்றும் அவ்வாறு எச்சரிக்கை ஒலி எழுந்தால் மட்டுமே கோட்டை வாசல்கள் மூடப்பட வேண்டும் என்பதும் அரசகட்டளையாக இருந்தது. நீண்ட காலமாகவே அப்படியொரு சூழ்நிலை வஞ்சி மாநகருக்கு ஏற்படாத காரணத்தால் கோட்டைக் கதவுகள் திறந்தே இருந்தன. ஆனாலும் கோட்டை வாசலில் கண்காணிப்பு குறைய வில்லை. சந்தேகப் பட்டவர்களை விசாரிக்கும் வழக்கம் நிற்கவில்லை. கோட்டை மதிள் மீதிருந்த தளங்களில் வீரர்கள் காவல் செய்து வந்த முறையும் நிறுத்தப்படவில்லை. அவ்வாறு பலமான கோட்டைக் காவலைத் தாண்டி உள்ளே நுழைந்தால் அங்கே உள்மதின் சுவர் ஒன்றிருக்கும். வெளிமதிலுக்கும் உள்மதிலுக்கும் ஏறக்குறைய கணிசமான தூரம் இருந்ததால், உள்ளே நுழைந்த மற்றும் வெளியேறவிருந்த வணிகர்களுக்கும் ஒற்றர்களுக்கும், தூதுவர்களுக்கும் சேர இலச்சினை பொறித்த

[illegible] வழங்கப்பட்டன. அதற்கென தனியாக கட்டடங்கள் கட்டப்பட்டு அதிகாரிகள் அப்பணிகளைச் செய்து வந்தார்கள். உள்ளிருக்கு அப்பால படைவீரர்கள் வசித்து வந்தனர். பாழு வீடுகள் நிறைந்த பல தெருக்களும் அமையப்பெற்ற வணிகர்கள் நிறைந்த புறஞ்சேரியும், அதையும் அடுத்து முத்து மற்றும் ரத்தினம் போன்ற விலையுயர்ந்த பொருட்களை விற்பனை செய்யும் தன வந்தர்கள் வாழ்ந்த வீதிகளும் இருந்தன. அதற்கப்பால் மிளகுச் சந்தை பிரபலமாக இருந்தது. எங்கு பார்த்தாலும் மிளகு மூட்டைகளும் மிளகைத் தரம் பிரிக்கும் கூடங்களும், பக்குவப் படுத்தும் நிலையங்களும் இருந்தன. எங்கும் இல்லாத கூட்டமும் காவல் படையும் அச்சந்தையில் இருந்தது. முக்கியமாக மிளகை வாங்குவதற்காக பொதிவண்டிகளுடன் ஏராளமான யவனர்கள் அங்கே காத்திருந்தார்கள். அக்காலத்தில் மிளகு சேர நாட்டில் மட்டுமே விளைந்ததால் அந்த இந்திய உள் நாட்டிலும், வெளிநாட்டிலும் பெரும்பாலானவர்கள் அதிக விலைகொடுத்து வாங்கிச் சென்றார்கள். அதுவும் யவனர்கள் மிளகை மருந்து உணவாகவே கருதி பொன் கொடுத்து வாங்கிச் சென்றார்கள். மிளகின் மீது அவர்கள் காட்டிய ஆர்வம் காரணமாக மிளகிற்கு 'யவனப் பிரியா' என்ற சிறப்புப் பெயர் வழங்கப்பட்டு வந்தது. சேர நாட்டிற்கு பெரும் செல்வத்தை ஈட்டித் தருவதில் மிளகு முதலிடம் வகித்த படியால் சேரர்கள் மிளகை முத்துக்களை விட பெரியதாகக் கருதினார்கள். முத்துக்கள் சிதறினாலும் கண்டு கொள்ளாத சேரர்கள் மிளகுகள் சிந்தினால் அதற்குக் காரணமானவர்களைத் தண்டிக்கவும் தலைப்பட்டார்கள். பொன்னைக் கொடுத்து மிளகுப் பொதிகளை வாங்கும் யவன வணிகர்கள் அவற்றைப் பெரும் பார வண்டிகளில் ஏற்றி, மேற்கு வாயிற்புறமாக



வெளியே கொண்டு சென்று கடற்கரையில் சுங்கச் சாவடியில் இறக்கி அனுமதி பெற்று, படகுகளில் ஏற்றிச் சென்று நடுக்கடலில் நங்கூரமிட்டு நின்ற அவர்களது மரக்கலங்களில் ஏற்றி, யவன நாட்டிற்குக் கொண்டு சென்றார்கள். அதனாலேயே 'யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்' என்று அகநானூற்றில் மிளகின் சிறப்பு எடுத்துக் கூறப்படுகிறது.*

வஞ்சிக் கோட்டையின் காவல்காட்டின் முகப்பிற்கு ஆபுத்திரன் வந்ததுமே காவலர்கள் அவனுக்குத் தலைவணங்கி வழிவிட்டனர். அகழியைத் தாண்டி கோட்டை வாசலுக்கு வந்த போது அங்கேயிருந்த கோட்டைத் தளபதி முசிறிப் பிரகாசு அவனை நலம் விசாரித்து விட்டு "ஆபுத்திரா, உனக்கும் எனக்கும் ஒருகாலத்தில் பகையென்று ஒன்று வருமானால் முதலில் உன் புரவியைத் தான் நான் கொல்வேன்" என்றார் அது படுத்திய பாட்டை எண்ணியவராய்.

இதைக் கேட்டுச் சிரித்த ஆபுத்திரன் "புரவியின் மீது கோபப் படாதீர்கள் தளபதி. மனிதர்களை விட சில சமயங்களில் விலங்குகள் விசுவாசமாக இருக்கின்றன. அதை எண்ணி நாம் கோபப் படக் கூடாது" என்றான்.

தளபதி ஏதோ யதார்த்தமாகப் பேசினாரே தவிர குரோத எண்ணத்துடன் பேசவில்லை. எனவே புரவியைப் பற்றி விவாதத்தில் இறங்காமல் "நீங்களும் உங்கள் புரவியும் எப்படியாவது போய்த் தொலையுங்கள்" என்று சொல்லிவிட்டு அகன்றார்.

---

* அகநானூறு பாடல் 149 பாடியவர் தாயங்கண்ணனார்

ஆபுத்திரன் அதற்குப் பின் எங்கேயும் நிற்காமல் கோட்டைக்குள் சென்று புறஞ்சேரியையும் வணிகர் வீதிகளையும் கடந்து மீனக்குச் சந்தைக்கு வந்தான். அங்கு வரும் போதெல்லாம் சந்தையை ஒருமுறை நோட்டம் விடுவது போல் வலம் வந்து விட்டுப் போவது அவனது வழக்கமாக இருந்தது. ஆனால் தற்போது மிகவும் களைப்படைந்திருந்த காரணத்தால் சந்தையைச் சுற்றி வலம் வராமல் நேரே புறப்பட்ட போது தற்செயலாக அவனது பார்வை பட்ட இடத்தில் அவனது கண்கள் ஒரு மனிதனைக் கண்டன. 'இவனா! இவன் ஏன் இங்கு வந்தான்' என்று தனக்குள் வியப்புடன் கேட்டுக் கொண்ட ஆபுத்திரன் காவல் வீரர்களில் ஒருவனை அழைத்து அவனது காதில் ஏதோ கூறிவிட்டு புறப்பட்டான்.

அங்கேயிருந்து நேரே தன் வீட்டிற்குச் சென்ற அவன் பூட்டிக்கிடந்த வீட்டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். விரைவிலேயே அவனுக்கு வந்தது தெரிந்து பணிப்பெண்கள் வந்து இல்லத்தைச் சுத்தம் செய்து அவன் நீராடுவதற்கான வசதிகளையும் செய்து கொடுத்தனர். அவர்களுக்கு நன்றி கூறி அனுப்பிய ஆபுத்திரன் முதலில் தன் புரவியைக் குளிப்பாட்டி உணவளித்து விட்டுப் பின்பு அவனும் நீராடி உணவருந்தினான். புரவியிடம் "நீ இங்கேயே ஓய்வெடு. நான் விரைவில் வந்து விடுகிறேன்" என்று கூறி கொட்டடியில் கட்டி விட்டு இல்லத்திற்கு காவலாக நின்ற வீரனிடமும் சொல்லி விட்டு வெளியே புறப்பட்டான்.

வஞ்சிக் கோட்டை பொழில்கள் நிறைந்த நகரமாதலால் காணுமிடமெல்லாம் மலர்ச்செடிகள் நிறைந்து சோலைவனங்களே காட்சியளித்தன. மேற்கு தொடர்ச்சி மலைகளின் அடிவாரத்திற்கு அண்மையில் வேறு அசகோட்டை



அமைந்திருந்ததால் இதமான வெப்பமே எங்கும் நிலவியது. ஆங்காங்கே இருந்த சிறிய தடாகங்களில் தாமரையும் கழுநீர் பூக்களும் பூத்திருக்க அவற்றை அத்தடாகங்களில் இறங்கிய எருமைகள் வாய்களால் கடித்து மென்று கொண்டிருந்தன. இதையெல்லாம் கண்ட படி நகரின் மேற்கு கோடியில் இருந்த நடன இல்லமொன்றை நோக்கிச் சென்றான் ஆபுத்திரன். அங்கே மாலைக் கொடிகள் படர்ந்து கிடந்த எழிலார்ந்த மாளிகையொன்றை அடைந்தான். மாளிகையின் உள்ளேயிருந்து நெஞ்சையள்ளும் சகட யாழ் இசை காற்றிலே மிதந்து வந்து அவனை வரவேற்றது. மாளிகைக்குள் சென்றதுமே உள்ளேயிருந்த ஒரு தேவதை யாழ் மீட்டுவதை நிறுத்தி விட்டு நிலவைக் கண்டு சிலிர்த்தெழுந்த மானைப் போல் எழுந்து "வாருங்கள் வாருங்கள்" என்று அவனை வரவேற்றாள். அவளது குரல் யாழிசையை விட இனிமையாக இருந்தது. தெய்வத் திருமுகம் துலங்க வரவேற்ற அப்பெண் தேவதையல்ல தன் பூங்கொடி தான் என்பதை அறிந்த ஆபுத்திரனுக்கு சொர்க்கத்தின் படிகளில் ஏறுவது போல இருந்தது. நீள் கொண்டையுடன் செதுக்கப் பட்ட சிலை அழகு போன்ற முகமும் கொண்டு கயல்விழிகள் மொழிபேசும் விழிகளாய் மலர்ந்து அவனை வரவேற்ற போது ஆபுத்திரன் தன்னைப் பெரும் பாக்கியசாலியாகவே உணர்ந்தான். அவனைக் கண்டதும் அவளுடன் இருந்த தோழிப் பெண்கள் விலகி விடவே "நலமா இருக்கிறீர்களா, உள்ளே வாருங்கள்." என்று யாழை மிஞ்சும் தேன் குரலில் வினவினாள் பூங்கொடி.

அங்கிருந்த அன்னமுக மேடையில் போய் அமர்ந்த ஆபுத்திரன் "என் மீது உனக்குக் கோபமே இல்லையா பூங்கொடி? பலநாட்களாக நானிங்கு வரவும் இல்லை. உன்னிடம் எங்கே போகிறேன் என்று சொல்லவும் இல்லை" என்றான்

## பூங்கொடி





"கோபம் கொள்ள இதில் என்ன இருக்கிறது? ஆடவர்களுக்கு - அதுவும் தங்களைப் போன்ற மாவீரர்களுக்கு வெளிவேலைகள் எவ்வளவோ இருக்கலாம். அதற்கெல்லாம் வீட்டுப் பெண்கள் கோபப்பட முடியுமா?" என்று கேட்ட அவள் "நான் மீட்டும் யாழின் இசையாக தாங்கள் இருக்கும் போது அந்த இசையை அனுபவிப்பதிலேயே தங்களைக் காண்கிறேன் நான். எனக்கு ஒரு குறையும் இல்லை." என்றாள் இதமான குரலில்.

"நீ பேசுவது தெய்வம் பேசுவது போல் இருக்கிறது பூங்கொடி." என்றான் [illegible]ரன் பரபரப்புடன்.

"[illegible] நான் எங்கே? தங்கள் உள்ளம் பொன்[illegible] ஆகவே தான் என் சாதாரண [illegible] பெரிதாகப் போற்று[illegible] சொன்ன பூங்கொடி "பிரிந்த [illegible]யான அன்பின் ஆழமே எனக்குப் பு[illegible] அது மட்டுமல்ல. அன்பை நாம ஆளவில்லை. அ[illegible] நம்மை ஆள்கிறது. ஆட்டுவிக்கிறது என்பதையும் தெரிந்து கொண்டேன்." என்றாள்.

ஆபுத்திரனுக்கு பவானியின் பேச்சு நினைவிற்கு வந்தது. அவளுக்கும் பூங்கொடிக்கும் இடையே இருந்த பெரும் வித்தியாசமும் அவனுக்குப் புரிந்தது.

"உண்மை தான் பூங்கொடி. நீ சொல்லும் அந்த உண்மையான அன்பு தான் என்னை பவானியிடமிருந்து காத்தது. சௌமியகுமாரியிடமிருந்து காத்தது." என்றான்.

அவன் கூறிய பெண்களைப் பற்றி பூங்கொடி விசாரிக்க வில்லை.

"உண்மையானது இக்கெட்டிலிருந்து யாரையும் காப்பாற்றும். அதன் சிறப்பே இது தான்." என்றான் பூங்கொடி

அப்போது மாளிகை வாசலில் புரவிகள் வந்து நிற்கும் ஒலியும் வீரர்கள் அவற்றிலிருந்து குதிக்கும் ஓசையும் கேட்டன

ஆபுத்திரன் எழுந்து வாசலுக்கு வந்தான்.

அங்கே இருந்த புரவி வீரர்கள் அவனுக்குத் தலை வணங்கினார்கள். அவனிடம் ஒரு ஓலையைக் கொடுத்து "உடனே வரும் படி உத்தரவு" என்றார்கள்.

ஓலையைப் படித்தான் ஆபுத்திரன்.

அவனது கண்கள் விரிந்தன வியப்பால்.







# அத்தியாயம் பதினெட்டு



## ஐம்பெருங்குழு

ஆபுத்திரன் ஓலையைப் படித்து முடிப்பதற்கும் "என்ன ஓலை?" - என்று பூங்கொடி கேட்பதற்கும் சரியாக இருந்தது.

"ஐம்பெருங் குழுவிடமிருந்து ஓலை வந்திருக்கிறது பூங்கொடி. என் மீது விசாரணையாம். உடனடி வரும்படி ஆணையிட்டிருக்கிறது" - என்றான் ஆபுத்திரன்.

"ஐம்பெருங்குழு விசாரிக்கும் அளவிற்கு என்ன பெரிய விஷயத்தோடு நீங்கள் சம்மந்தப் பட்டிருக்கிறீர்கள்? அத்தனை அவசரமென்ன விசாரிப்பதற்கு?" என்று வினவினாள் பூங்கொடி. அவள் முகம் வியப்பால் விரிந்து விகசித்தது

"தெரியவில்லை பூங்கொடி. வஞ்சிக்கு இன்று நான் வந்தேன். அதற்குள் விசாரணைக்கு அழைத்திருக்கிறார்கள் என் வரவுக்காகக் காத்திருந்தார்கள் போலிருக்கிறது. எதுவானால் என்ன பூங்கொடி? நீ சொன்னது போல உண்மை என்பது என்னிடம் அன்பில் மட்டுமில்லை எல்லாவற்றிலுமே இருக்கிறது. ஆகவே கவலைப்பட எதுவுமில்லை. சேரமான் அவர்களே இக்குழுவின் விசாரணைக்கு உட்பட்டவர். அப்படி இருக்கும் போது நான் ஒரு துரும்பு தான்." என்றான் ஆபுத்திரன்.

"என் தந்தை இது பற்றி என்னிடம் எதுவும் கூறவில்லையே?"

"அதனால் தான் ஐம்பெருங்குழுவிற்கு அவரைத் தலைவராக்கி இருக்கிறார் நம் மன்னர்" - என்று சொன்ன ஆபுத்திரன் "சரி, நான் போய் வருகிறேன் பூங்கொடி." என்றான்.

பூங்கொடி என்ன சொல்வதென்று அறியாமல் சிலையாய் நின்றாள்.

"ஐயா, தாங்கள் பயணம் செய்ய புரவி ஒன்றையும் கொண்டு வந்திருக்கிறோம்" என்றான் வந்தவர்களில் ஒருவன்.

"மிகவும் நன்றி" என்று கூறிவிட்டு அந்தப் புரவியில் ஏறினான் ஆபுத்திரன்.

ஐம்பெருங்குழு என்பது நாட்டில் நடக்கும் பெருங்குற்றங்களை விசாரித்து தண்டனை வழங்கி வந்தது. இது சங்க காலத்திலேயே இருந்தது என்று கூறும் சிலப்பதிகாரம் இக்குழுவில் புரோகிதர், அமைச்சர், படைத்தலைவர், தூதுவர்,



சாரணர் ஆகியோர் இருந்து அலுவல்களை கவனித்ததாகச் சொல்கிறது. இக்குழுவிற்கு மன்னனை விசாரிக்கும் அதிகாரமும் இருந்தது. எனவே இக்குழுவில் இருந்தவர்கள் நேர்மையானவர்களாகவும் எதற்கும் அஞ்சாதவர்களாகவும் இருந்தார்கள். இதன் மீது நாட்டு மக்களுக்குப் பெருமதிப்பு இருந்தது. அதோடு செங்குட்டுவன் இக்குழுவில் புரோகிதர் வகிக்க வேண்டிய பதவியில் புலவர் பரணரை நியமித்திருந்தான். அதற்கு பரணரின் உன்னத குணமே காரணமாக இருந்தது. பிற புலவர்களைப் போல் அரசர்களிடம் யாசிக்கும் வழக்கமோ, போற்றிப் பாடி பரிசுகளைப் பெறும் இயல்பினராகவோ இவரில்லை. "பசித்தும் வாரேம் பாரமுமிலமே" என்று அவரே புறநானூற்றுப் பாடலில் * இந்த உண்மையைப் பாடியிருந்த காரணத்தாலும் மன்னர்களது ஆற்றல்களையும் வள்ளல் தன்மைகளையும் கண்டு அதனால் ஈர்க்கப்பட்டு அவர்களைப் புகழ்ந்து பாடிவந்த காரணத்தாலும் ** அவரை மதித்தான் செங்குட்டுவன். தனது அவைக்களப் புலவர் குழுவின் தலைவராக இருக்கும் படி கேட்டுக் கொண்ட போது அதை மறுத்து தான் சுதந்திரமாய் இருக்க விரும்புவதாகக் கூறிய போது வியந்தான் செங்குட்டுவன். தான் சிவபெருமானை வழிபட்ட போதும் அதைப் பலரும் [illegible] சிவபெருமானை வணங்கி வந்த போதும் பரணர் சிவன், திருமால் என்று எந்த தெய்வத்தையும் சாராது தெய்வம் ஒன்று என்று கொள்கையுடையவராய் பொதுமையுடன் இருந்ததைக் கண்டு அசந்தான் செங்குட்டுவன். இப்படிப் பட்ட

---

* புறநானூறு பாடல் 145

** பக்கம் 40-41 பரணர் by வே. வேங்கட [illegible]

## பரணர்





சிறப்புடையவர் ஐம்பெருங்குழுவின் தலைவராக இருப்பது நாட்டிற்கு பெருமை தரக் கூடியது என்று கருதி அவரை வற்புறுத்தி ஐம்பெருங்குழுவின் தலைவராக அமர்த்தினான்.

ஆபுத்திரன் ஐம்பெருங்குழு இயங்கிய அலுவல் மாளிகையை அடைந்த போது ஒரு வழக்கு விசாரிக்கப் பட்டு தீர்ப்பு வழங்கப் பட்டுக் கொண்டிருந்தது. தீர்ப்பை வாசித்த பரணரைப் பார்த்தான் ஆபுத்திரன். புலவர் என்ற முறையில அவருக்கே உரிய எளிமையுடன் தான் பரணர் காணப்பட்டாரே தவிர மிகப்பெரும் அதிகார அமைப்பின் தலைவர் என்ற படாடோபத்தில் அவர் இருக்கவில்லை. பரபரப்பு எதுவுமின்றி அவர் தீர்ப்பை வாசித்த விதமும அதிலும் ஒருவித கருணை இழையோடியதையும கண்ட ஆபுத்திரன் பெருமிதப்பட்டான். இத்தனைக்கும் பரணரும் சரி அங்கிருந்த அமைச்சர் அழும்பில் வேள், படைத் தலைவர் வில்லவன் கோதை, தூதவர் சஞ்சயன், ஒற்றர் தலைவர் நீலன் ஆகியோர் அவனுக்குப் புதியவர்கள் அல்ல. நன்கு தெரிந்த நன்றாகப் பழக்கப் பட்டவர்கள் தான். இருந்தாலும் அலுவல் மாளிகையில் அனைவருமே தத்தம் பரிச்சயங்களைக் காட்டிக் கொள்ளாமல் பக்குவப்பட்ட அதிகாரிகளாகவே நடந்து கொண்டார்கள்.

அனைவரையும் வணங்கி நின்றான் ஆபுத்திரன். அவனது வணக்கத்தை அனைவரும் அங்கீகரிப்பது போல் தலையை ஆட்டி நாகரீகத்தை வெளிப்படுத்திக் கொண்டார்கள்.

"ஆபுத்திரா. உன்னைப் பற்றிய விசாரணை அரசாங்க சம்மந்தப் பட்ட விஷயமாதலால் நீ வஞ்சிக்குள் பிரவேசிக்கு

விட்டதாக கோட்டைத் தளபதி தெரிவித்ததுமே உடனடியாக விசாரணைக்கு வரும்படி உனக்கு உத்திரவிட வேண்டியதாகி விட்டது. இந்த அசௌகரியத்திற்காக இந்த ஐம்பெருங்குழுவை நீ மன்னிக்க வேண்டும்" - என்றார் பரணர் சாதாரணமான குரலில்.

"கடமையுணர்ச்சியிடையில் மன்னிப்பிற்கு இடமில்லை ஐயா நீங்கள் விசாரணையைத் துவங்கலாம்" என்றான் ஆபுத்திரன்.

"நல்லது ஆபுத்திரா. விசாரணையைத் துவங்குவதற்கு முன் உனது நிலைமையைப் பற்றி உறுதி செய்து கொள்வது தான் முறை. நீ அனேகத் திறமைகளைப பெற்றவன். உனக்கு ஏற்ற பல பதவிகள் சேரநாட்டில் உண்டு. நீ சேரமாமன்னரின் அன்பிற்கு ஆளான பாக்கியசாலி. சேரமானுக்கு அடுத்தபடி நீதான் என்று சேர நாட்டில் பேச்சு வழக்கு இருப்பது எங்களுக்கும் தெரியும். உனக்கும் தெரியும். சேரநாட்டில் எங்கு வேண்டுமானாலும் நுழையவும் விசாரிக்கவும் எந்த விதமான தடையுமின்றி உனக்குப் பூரண சுதந்திரமும் உரிமையும் மன்னரால் வழங்கப் பட்டுள்ளது. இருப்பினும் உனக்கு மன்னர் பிரான் எந்த விதமான பதவியும் தரவில்லை. அதற்கென்ன காரணம் என்பது எங்களுக்குத் தெரியாது. அது பற்றி ஆராய நாங்கள் விரும்பியதுமில்லை. அதற்குக் காரணம் பதவியில் இருந்து கொண்டு செய்யக் கூடிய காரியங்களை விட பெரிய காரியங்களையெல்லாம் நீ செய்து வருவது தான். இவற்றை நீ உன் பெருமைக்காகச செய்யவில்லை என்பதும் நாட்டிற்கான சேவையாகச் செய்கிறாய் என்பதும வெளிப்படை. மொத்தத்தில் நீ அரச விசுவாசம் உள்ள, பொறுப்பும் திறமையும் கொண்ட மாவீரன்" என்று பெரும் பீடிகையைப் போட்ட பரணர் "இதை நீ ஒப்புக் கொள்வாய் என்று நம்புகிறேன்" என்றார்.



ஆபுத்திரன் எதுவும் சொல்லாமல் அமைதியாக இருந்தான்.

"ஆபுத்திரா, வெள்ளைத்தீவுக்குரிய கொள்ளையர் தலைவன் பங்களனின் ஆட்களால் நீ வெள்ளைத் தீவிற்குக் கடத்தப்பட்டது உண்மையா?" என்று கேட்டார் பரணர்.

"உண்மை" - என்றான் ஆபுத்திரன்

"கடத்தப் பட்டதை நீ எப்போது உணர்ந்தாய்? வெள்ளைத் தீவுக்குப் போன பின்பா?"

"இல்லை. முசிறியின் கடற்கரையிலேயே உணர்ந்து கொண்டேன்."

"ஏறக்குறைய ஆரம்பத்திலேயே அதுவும் சேர நாட்டிலேயே நீ கடத்தப் படுவதைப் பற்றி அறிந்து கொண்டிருக்கிறாய் இல்லையா?"

"ஆம்."

"அக்கடத்தலிலிருந்து விடுபட வழி இருந்ததா உனக்கு"

"இருந்தது."

"வழிஇருந்தும் ஏன் விடுபட வில்லை"

"என்ன தான் நடக்கப் போகிறது என்பதை அறிந்து கொள்ள விரும்பினேன்."

அவனது பதிலை குறித்துக் கொண்ட பரணர் "உன் செயல் உனது துணிச்சலையும் உன் மீது உனக்கிருக்கும் நம்பிக்கையையும் காட்டுகிறது" என்று சொன்ன பரணர் ஆபுத்திரன் வெள்ளைத் தீவை அடைந்தது முதல் ஏற்பட்ட பல

நிகழ்ச்சிகளை விவரித்து விட்டு "சேரமன்னரை வெள்ளைத் தீவுக்கு அழைத்து வர வேண்டும் என்ற கடுமையான கட்டளையை உனக்குப் பிறப்பித்தான் பங்களன். அதற்கு நீ சம்மதிக்க மாட்டாய் என்பது எங்களுக்குத் தெரியும். ஆனால் அங்கிருந்து தப்புவதற்கு பங்களனின் மகள் சௌமிய குமாரி உதவ முன் வந்த போது அதை நீ ஏன் ஏற்க வில்லை" என்று கேட்டார்.

"பெண்ணின் உதவியோடு கோழையைப் போல் தப்ப நான் விரும்பவில்லை."

"இதில் கோழைத் தனம் எதுவுமில்லை ஆபுத்திரா. உன்னால் நிறைவேற்ற முடியாத கொடுமையான கட்டளையிலிருந்து மீள்வதற்கு எந்த வழி கிடைத்தாலும் நீ தப்பியிருக்க வேண்டும்.. ஏனென்றால் நீ இருந்த இடம் தர்மலோகம் அல்ல. கொடிய கொள்ளையர்களின் அதர்மம் நிறைந்த வாழ்விடம். அங்கே நீ இருக்கும் ஒவ்வொரு கணமும் ஆபத்தானது. புதிய சிக்கல்களை உருவாக்கக் கூடியது. புரிகிறதா ஆபுத்திரா?"

"ஐயா, பங்களனின் மகள் என்னைத் தப்புவிக்க ஒரு நிபந்தனையை விதித்தாள்."

"என்ன நிபந்தனை?"

"அவளை நான் மணந்து கொள்ள வேண்டும் என்று."

"அந்த நிபந்தனை உனக்குப் பிடிக்கவில்லையா?"

இதற்கு ஏதோ பதில் கூறவந்த ஆபுத்திரன் அதைச் சொல்லாமல் "ஆமாம்." என்றான்.



"சௌமியகுமாரியை விட்டால் தப்புவதற்கு உனக்கு மார்க்கமே இல்லையா?"

"வீரனாக அங்கிருந்து வெளிவர விரும்பினேன். அதற்குள் பல நிகழ்ச்சிகள் நடந்து விட்டன."

"முதல் நிகழ்ச்சி சேரர் மரக்கலங்கள். அதைப் பொறுத்தவரை உன் செயல்பாடுகளில் தவறில்லை. சேரமன்னர் கிரேக்க நாட்டிலிருந்து வாங்கி வந்த மரக்கலங்களில் மாலுமிகள் மட்டுமே இருந்தார்கள். போர்வீரர்கள் இல்லை. அதோடு நீ வெள்ளைத் தீவில் இருக்கிறாய் என்று தெரிந்து கொண்ட சேரமான் உன்னைப் பத்திரமாகப் பாதுகாப்புடன் வெளியேற எண்ணியிருக்கிறார். ஆகவே தான் உன் செய்தியைக் கேட்டவுடன் வெள்ளைத் தீவை நெருங்காமல் வஞ்சிக் கோட்டைக்கு மரக்கலங்களுக்குடன் வந்து விட்டார். இந்த விஷயத்தை இன்று வரை அவர் யாருக்கும் தெரிவிக்க வில்லை."

"பிறகு எப்படி தங்களுக்கெல்லாம் தெரிந்தது?"

"அந்த விவரம் கடைசியாக தெரிவிக்கப்படும்" என்று அறிவித்த பரணர் "உன் பிரச்சனையானது அராபிய கொள்ளைக் காரன் தாவூத்தின் வரவுக்குப் பிறகு தான் துவங்குகிறது. கொள்ளையர்களைப் பொறுத்தவரை தாவூத்தும் சரி பங்களனும் சரி இருவருமே சேர நாட்டுக்கு எந்த நேரத்திலும் ஊறு விளைவிப்பவர்கள் தான். சேர நாட்டு அபிமானியான நீ, உன் திறமையையும் பங்களனின் துணையையும் கொண்டு அராபிய கொள்ளையரை அழித்திருக்க வேண்டும். அல்லாது தாவூத்தின் துணையைக்

கொண்டு பங்களன் கூட்டத்தை அழித்திருக்க வேண்டும். ஆனால் நீ இரண்டையும் செய்ய வில்லை. பங்களனையும் அழிக்கவில்லை. அராபிய மரக்கலங்களையும் அழிக்கவில்லை. பங்களனுக்கு உதவியிருக்கிறாய். இது ஏன்?" - என்று கேட்டார்.

"பங்களன் அதர்மனாக இருந்தாலும் அவனது மகள் நர்மதிநதிகளை மதிப்பவளாக இருந்தாள். அவள் வெள்ளைத் தீவு தாவூத்தினால் அழிந்து விடும் எனவும் அப்பாவி மக்கள் அனைவரும் பரிதாபமாக அழிவார்கள் என்றும் கூறி, அப்பாவி மக்களை காப்பதற்காக அராபிய கொள்ளையர்களை அழிக்க உதவும்படி வேண்டிக் கொண்டாள். வெள்ளைத் தீவு கையறு நிலையில் இருப்பது எனக்குத் தெரிந்தது. அப்பெண்ணுக்கு உதவுவது என்றில்லாமல் அராபிய கொள்ளையன் தாவூத்தை தந்திரமாக வெள்ளைத் தீவுக்கு வரவழைத்து அவனது மனதை மாற்றி கொள்ளைத் தொழிலிருந்து மீட்கவும் சேர நாட்டுக்குச் சேவை செய்யவும் விரும்பியே நடவடிக்கையில் இறங்கினேன்."

"உன் கணக்கீடுகள் தவறு ஆபுத்திரா. அதுவும் சேர நாட்டுக் காரனாக இருந்து கொண்டு இப்படியொரு திட்டத்தை தீட்டியது முட்டாள் தனமானது. வெள்ளைத் தீவின் அப்பாவி மக்களை அழிவிலிருந்து காப்பாற்ற பங்களனின் மகள் விரும்பியது சரியாக இருக்கலாம். உனக்கு அது எப்படி சரியானதாகும்? பங்களன் நம் பகைவன். அவன் மீதான போர் எப்போது வேண்டுமானாலும் நடக்கக் கூடும். அப்படி நடந்தால் அங்கேயுள்ள அப்பாவி மக்களும் சேர்ந்து அழிவதை தவிர்க்க முடியாது. உண்மையிலேயே போர் என்பது மன்னர்களுக்கிடையில் ஏதோ சில காரணங்களுக்காகத்தான் எங்குமே நடக்கிறது. அதில் அப்பாவி வீரர்களும் சம்பந்த



மில்லாத மக்களும் அழிவது போரின் விளைவுகளில் ஒன்று. ஒருவரும் ரத்தம் சிந்தாமலும் இறவாமலும் போரிடுவது என்பது இயலாதது. எனவே செளரிய குமாரியின் வேண்டுகோளை நீ ஏற்றது குற்றமானது. அடுத்தது அராபியக் கொள்ளைக்காரனை நல்லவனாக மாற்ற எண்ணியது. அதுவும் எங்கே? இன்னொரு கொள்ளையனின் இருப்பிடத்தில். நன்றாக யோசித்துப் பார் ஆபுத்திரா. கொள்ளைக் காரர்கள் அனைவருமே பேராசைக்கு ஆட்பட்டவர்கள். எந்த துரோகத்திற்கும் தயங்காதவர்கள். அப்படிப்பட்ட அராபிய கொள்ளைக் காரனை வெள்ளைத் தீவு கொள்ளைக்காரனின் இருப்பிடத்திற்கு அழைத்து வந்து மனமாற்றம் செய்யலாம் என்று நினைத்தது உன் விவேகமல்ல. அறிவீனம். உண்மையிலேயே நீ நினைத்தது நடக்கவில்லை. வெள்ளைத் தீவுக்கு வந்த தாவூத்தை எதிர் பாராத விதத்தில் கொன்று உன் முகத்தில் கரியைப் பூசினான் பங்களன். நல்ல வாய்ப்பு வந்த போது உன் திறமையை வீணடித்து சேர நாட்டிற்கு உதவாமல் சேர நாட்டின் எதிரியான பங்களனுக்கு உதவியிருக்கிறாய். சேர நாட்டுக் காரனாக இருந்து கொண்டு எதிரியைக் காப்பாற்றியது உன் இரண்டாவது குற்றம். கொள்ளைக் காரர்கள் இருவரும் மோதிக் கொண்டு போகட்டும் என்றெண்ணி நீ அச்சமயத்தில் சேர நாட்டிற்கு வந்திருந்தால் அவர்களுக்குள் யாராவது ஒருவர் அல்லது இரு தரப்பு அழிந்திருக்கும். அது ஒரு வகையில் சேர நாட்டிற்கு அனுகூலமாக இருந்திருக்கும். அந்த அனுகூலத்தை ஏற்படுத்தாதது உன் மூன்றாவது குற்றம். இக்கட்டான நேரத்தில் உதவி செய்து நீ காப்பாற்றிய பங்களன் உனக்கு செய்த கைம்மாறு என்ன? மீண்டும் பழைய [illegible]

சேர மன்னரைத் தனியே அழைத்து வரும் படி கட்டளையிட்டது மட்டுமல்ல மாயனையை விஷம் வைத்துக் கொல்ல இரண்டு ஒற்றர்களையும் அனுப்பினான். உனது மூன்று குற்றங்களும் ராஜ துரோகம் என்ற வகையில் சேருகிறது. அரசாங்கத்தை பொறுத்த வரை ராஜத்துரோகக் குற்றமே முதன்மையானது. மேற்கண்ட இக்குற்றங்களை நீ ஒப்புக் கொள்கிறாயா?"-

பரணரின் விவரணத்தைக் கேட்டு அசந்து போனான். தர்மம் அதர்மம் என்ற பாகுபாட்டின் படி தர்ம வழியில் செல்வதாக நினைத்துக் கொண்டிருந்த அவனை பரணரின் விளக்கம் ராஜ துரோகமானச் சித்தரித்து விட்டதைக் கேட்ட விதம் மிகவும் சரியானதாகத் தோன்றவே குற்றங்களை ஐம்பெருங்குழுவின் முன் ஒப்புக் கொண்டான்.

"வெள்ளைத் தீவில் நடந்த விவரங்கள் இக்குழுவிற்கு எப்படித் தெரியும் என்று கேட்டாய் அல்லவா? இதோ பார். பங்களனே எங்களுக்கு அனுப்பியுள்ள ஓலைச் செய்திகள். உனக்கு நன்றி தெரிவித்து அனைத்து விவரங்களையும் கூறியிருக்கிறான். எதற்கு நன்றி தெரியுமா? வெள்ளைத் தீவை நீ காப்பாற்றியதற்கு - அவனது மகளைக் கவர்ந்து செல்லாததற்கு - பங்களனின் மரக்கலங்கள் பழுது பார்க்கப் பட்டு வெள்ளைத் தீவிற்குத் திரும்பிய பின் போருக்கு வரும் படி நீ சேரமானுக்கு ஓலை அனுப்பி கேட்டுக் கொண்டதற்கு"- இப்படிக் கூறிய பரணர் பங்களனின் ஓலைநறுக்குகளை ஆபுத்திரனிடம் கொடுத்தார். அவற்றை வாங்கிப் படித்த ஆபுத்திரன் பங்களனின் அயோக்கியத் தனத்தைப் புரிந்து கொண்டு ஓலைகளைப் பரணரிடமே கொடுத்தான்.



குற்றங்களை ஆபுத்திரன் ஒப்புக் கொண்டதால் வழக்கு இழுபறிக்கு ஆளாக வில்லை. அவனைச் சிறிது நேரம் தனியறையில் இருக்கும் படி பணித்த பரணர் குழுவின் இதர உறுப்பினர்களோடு ஆலோசித்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு உள்ளே அழைக்கப்பட்டான் ஆபுத்திரன்.

பரணர் பேசமுற்பட்டு "ஆபுத்திரா, உன் மீது சுமத்தப் பட்ட மூன்று குற்றசாட்டுகளையும் குற்றம் என்று ஒப்புக்கொண்ட உன நேர்மையை இக்குழு பாராட்டுகிறது. நீ இந்நாட்டிற்கு பல சேவைகளைச் செய்திருக்கிறாய். ஆனால் அதற்காக நீ செய்துள்ள ராஜ துரோகத்தை மன்னிக்க முடியாது. சேரநாட்டைச் சேர்ந்த சாதாரண பிரஜை இப்படி செய்திருந்தால் பரவாயில்லை. பொறுப்புள்ளவனும், வேந்தருக்கு வலதுகரம் போலத் திகழ்பவனும் மக்கள் உட்பட அனைவருக்கும் தெரிந்து செல்வாக்கும் திறமையும் படைத்தவனான நீ ராஜத்துரோகம் செய்திருப்பது மன்னிக்க முடியாதது. உன் சேவைகளை நினைவில் வைத்துக் கொண்டு உன்னை இக்குழு மன்னித்து விட்டால் இந்நிகழ்ச்சி பிற்காலத்தில் ஒரு முன் உதாரணமாகி பலகுற்றவாளிகள் தப்பி விட வழி வகுத்து விடும். ராஜத்துரோகக் குற்றத்திற்கு சித்திரவதை செய்து பொதுவிடத்தில் கொல்வதுதான் ஐம்பெருங்குழுவில் விதிக்கப்பட்ட விதி. இதில் தலையை வெட்டுதல், கழுவில் ஏற்றுதல், யானையை விட்டு மிதிக்க வைத்தல், புலிக் கூண்டில் புலியோடு விடுதல், எருமைக் காலில் கட்டி ஓட்டுதல், தேர்க்காலில் கட்டி சாகும் வரை ஓட்டுதல் ஆகிய தண்டனைகள் விதிக்கப்பட்டுள்ளன. *

* பக்கம் 128 பழந்தமிழர் அரசியல் கோட்பாடுகள் by தேவநேயப்பாவாணர்

குற்றமிழைத்தவர்கள் பெண்களாகவோ முதியவர்களாகவோ இருந்தால் தூணில் கட்டி வைத்து 50 முதல் 100 வரை அடித்தல், கல் ஏற்றல், வெய்யிலில் நிறுத்தல், கிட்டி கட்டுதல், தலையில் விளக்கேற்றி ஊர்வலம் வருதல் * ஆகியவை தண்டனைகள். உனக்கு என்ன தண்டனை வழங்குவது என்பது குறித்து குழு விவாதித்தது. குழுவில் உள்ள ஐவரில் பெரும்பான்மையானவர்கள் கூறும் முடிவை தீர்ப்பாக வழங்குவது குழுவின் மரபு. உன் விஷயத்திலோ என்னைத் தவிர மற்ற நால்வருமே உனக்கு தண்டனை வழங்க ஒப்புக் கொள்ளவில்லை. உன் செயல்பாடுகளை மனித நீதி என்றும் பொது தர்மம் என்றும் இவர்கள் வாதாடினார்கள். உனக்கு உள் நோக்கம் எதுவும் கிடையாது என்று கூறினார்கள். உன்னுடைய திட்டம் தோற்று விட்டதால் உன்னைக் குற்றவாளி என்று கூறி விடக் கூடாது என்றார்கள். உன்னைப் போன்ற வீரமும் வள்ளல் தன்மையும் கொண்டவர்கள் சேர நாட்டில் யாருமில்லை என்று புகழ்ந்தார்கள். உன்னைத் தண்டிப்பது நாட்டிற்கும் மாமன்னருக்கும் பெரும் இழப்பு என்று சுட்டிக் காட்டினார்கள். உன்னைத் தண்டனை என்ற பெயரில் கொல்வது சேர நாட்டிற்கு அவமானச் சின்னமாக பதிவாகி விடும் என்று அமைச்சர் பெருமான் தெரிவித்தார். இவை அனைத்தும் உண்மைகளாகவே இருக்கலாம். ஆனால் பொது தர்மம் வேறு. தாய்நாட்டு தர்மம் என்பது வேறு. பொது தர்மத்தை வெளிப்படுத்தக் கூடிய உரிமை மாமன்னருக்கு மட்டுமே உண்டு. வேறு யாருக்கும் கிடையாது. அந்த வகையில் நீ செய்தது குற்றம் என்றே நான் எண்ணுகிறேன். ஆபுத்திரா, ஐம்பெருங்குழுவின் தலைவன் என்ற பதவிக்கு அப்பாற்பட்ட நிலையில் நின்று பார்த்தால் இந்த நால்வருக்கும்



உன் மீதுள்ள பாசமும் பற்றும் எந்த விதத்திலும் நான் உன் மீது கொண்ட பாசத்தை விட உயர்வானது அல்ல. எப்படி என்பது உனக்கும் தெரியும். இவர்களுக்கும் தெரியும். ஆனால் இது பாசத்தைப் பொறுக்கும் இடமல்ல. மாவீரனே, ஐம்பெருங்குழுவின் பெரும்பான்மையோரது விருப்பம் உனது விடுதலை என்றாலும் பெரும்பான்மையோரது முடிவிற்கு மேல் முடிவு எடுக்கும் அதிகாரம் ஐம்பெருங்குழுவின் தலைவன் என்ற முறையில் எனக்கு இருக்கிறது என்பதால் அதன் அடிப்படையில் ஐம்பெருங்குழுவின் மாட்சிமைக்கு மாசு ஏற்படாத வகையில் உனது குற்றங்களுக்காக உனக்கு மூன்றாண்டுகள் சிறைத் தண்டனை வழங்கித் தீர்ப்பளிக்கிறேன்." என்று கூறி அமர்ந்தார்.

தீர்ப்பையடுத்து அங்கே பயங்கர அமைதி நிலவியது. குழுவின் விசாரணை ரகசிய விசாரணையாக நடத்தப் பட்டதால் குழுவின் உறுப்பினர்கள் மற்றும் பணியாட்கள் சிலரைத் தவிர அங்கே வேறு யாருமே இல்லாததால் மயான அமைதி நிலவியது.

அந்நிலையில் அந்தப்புரக் காவலன் உள்ளே பிரவேசித்து "மகாராணியார் வருகிறார்." என்றான்.

பரணர் "அமைச்சர் பெருமானே, மகாராணியை எதிர் கொள்ளுங்கள். நாங்களும் வருகிறோம்." என்றார்.

மகாராணியை எதிர்கொண்ட அமைச்சர் அழும்பில் வேள் "ராணியாரே, தாங்கள் இங்கே வரவேண்டுமா? சொன்னால் நான் வரமாட்டேனா?" என்று வினவினார்.

"நீங்கள் யாரும் வராததால் தான் நானே வந்தேன்" என்றார் ராணி.

"தாயே! என்ன சொல்கிறீர்கள்?"

"சொன்னது இருக்கட்டும். சொல்வதை இனியாவது கவனியுங்கள். மாமன்னரை நான்கு நாட்களாகக் காணவில்லை"

மகாராணியின் வார்த்தைகளைக் கேட்டு அமைச்சர் மட்டுமல்ல அவருக்குப் பின்னால் வந்த பரணர் உட்பட அனைவருமே திகைத்து நின்றார்கள்.







## அத்தியாயம் பத்தொன்பது



# இளங்கோவடிகள்

மன்னர் காணவில்லை என்பதும் அதைப் பற்றி மகாராணியே வந்து புகார் செய்வதும் மிகவும அசாதாரணமாக இருந்தது.

"மகாராணி, முதலில் எல்லோரும் அரண்மனைக்குச் செல்வோம் வாருங்கள்" என்று அமைச்சர் கூறியதும அனைவரும் புறப்பட்டார்கள். புறப்படுவதற்கு முன் ஏதோ யோசித்த பரணர் ஆபுத்திரனையும் கூடவே வரச் சொன்னார்.

இலவந்திகை வெள்ளிமாடம் என்று அழைக்கப்பட்ட சேரமன்னரது பிரம்மாண்டமான மாளிகைக்கு அனைவரும் சென்றார்கள். ஐம்பெருங் குழுவைச் சேர்ந்தவர்கள் குழுவின் அதிகாரிகளாகச் செல்லாமல் தந்தம பதவிகளுக்குரிய அந்தஸ்திலேயே சென்றார்கள்.

அங்கே சென்று அமர்ந்ததும் "மாமன்னர் எங்கு சென்றார் என்று தங்களுக்குத் தெரியுமா மகாராணி?" என்று கேட்டார் அமைச்சர்.

"மன்னர் எங்கே போவதானாலும் என்னிடம் சொல்லாமல் செல்வதில்லை. பத்து நாட்களுக்கு முன்பாக ஆபுத்திரனைப் பார்த்து விட்டு வருவதாகப் புறப்பட்டுச் சென்றார். நான்கு நாட்களுக்கு முன்பு திரும்பி வந்தவர் வெளியில் போய் விட்டு வருவதாகச் சொன்னார். எங்கே என்று கேட்டேன். சற்றே கோபப்பட்டவராக இளங்கோவடிகளைப் பார்க்கச் செல்வதாகச் சொன்னார். இன்று வரை வரவில்லை. செய்தியும் அனுப்பவில்லை. இளங்கோவடிகள் இருக்கும் இருப்பிடத்திற்கு ஆட்களை அனுப்பி விசாரித்தேன். அவர் அங்கே வரவே இல்லையாம்"- இப்படி சொன்ன ராணியார் கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டார்.

மகாராணியின் பேச்சைக் கேட்ட பிறகு அங்கே இருந்த எல்லோருக்கும் ஒரு மாதிரியாகத் இருந்தது. கோட்டைக்குள் மன்னர் இருக்கும் போது தினமும் அந்தப்புரத்திற்கு வருவதை வழக்கமாகக் கொண்டிருப்பார். இளங்கோவடிகளின் இருப்பிடம் கோட்டைக்கு வெளியே குணவாயில் கோட்டத்தில் இருந்தது. அங்கு சென்று உடனே விடைபெற்றுக் கொண்டவர் எங்கே சென்றாலும் செய்தியனுப்பி விடுவாரே? ஏன் செய்தியைக் கூட அனுப்பவில்லை? அந்த அளவிற்கு என்ன இக்கெட்டு அவருக்கு? ஒருவேளை ஆபத்து ஏதாவதில் சிக்கியிருப்பாரோ என்று பலவாறு யோசனையில் இறங்கிய பெரு மக்கள் மகாராணிக்கு ஆறுதல் கூறிவிட்டு கோட்டைத் தளபதியை அழைத்து விசாரணை செய்தார் அமைச்சர். பிறகு



எல்லோருமாக ஒருமித்த முடிவுடன் மன்னரைத் தேட ஒற்றர் பிரிவின் தலைவன் நீலனுக்கு உத்தரவிட்டார்கள். நீலனும் உடனடியாக நடவடிக்கையில் இறங்கினான். மன்னர் கிடைக்கும் வரை ஆபுத்திரனை விருந்தினர் மாளிகையில் விட்டுச் சிறையில் இருக்கும் படி கேட்டுக் கொண்டார் பழனர். ஆபுத்திரன் எதுவும் கூறாமல் சிந்தித்தபடியே விருந்தினர் மாளிகைக்குச் சென்றான்.

மன்னரைத் தேட நீலனின் ஒற்றர்கள் கோட்டைக்குள் எல்லா பகுதிகளிலும் தேடி இரண்டு நாட்கள் கழித்து அமைச்சரிடம் வந்து கிடைக்கவில்லை என்ற செய்தியைச் சொன்னார்கள்.

"எல்லா இடங்களிலும் பார்த்து விட்டீர்களா?" என்று கேட்டார் ஒற்றர் தலைவன் நீலன்.

"எலிப் பொந்துகளிலும் பறவைக் கூடுகளிலும் தான் தேடிப் பார்க்கவில்லை." என்றார்கள் ஒற்றர்கள் சற்று சினந்த குரலில்.

அவர்களது அர்த்தமற்ற கோபத்தைக் கண்ட நீலன் "ஏன் அங்கும் தேட வேண்டியது தானே?" என்று கேட்டான்.

"அதற்கு எலிகளையும் பூனைகளையும் தான் அனுப்ப வேண்டும்." என்றார்கள் கிண்டலான குரலில்.

"அனுப்புவது தானே?"

"அவைகள் எங்கள் கைவசம் இல்லை. உங்களிடமிருந்தால் கொடுங்கள்."

இந்த பதிலால் மிகவும் கோபமடைந்தாலும் அதை

அடக்கிக் கொண்ட நீலன் "ஒற்றர்களே, நீங்களெல்லாம் சாதாரண வேலையாட்களைப் போல - ஏதோ தேடி வேலை கிடைக்கவில்லை என்று கூறி, வெளிப்படையாக மட்டுமின்றி ரகசியமாகவும் இயங்கி - தேவைப் பட்டால் மாறு வேடமும் பூண்டு - சந்தேகமான இடங்களில் விசாரணைகளை செய்து மிகவும் நுட்பமாக காரியமாற்றும் ஆற்றல் மிகுந்தவர்கள். இக்கோட்டையில் சேரமானுக்கு வேண்டாத ஒற்றர்கள் நிரம்ப இருப்பதாக அடிக்கடிச் சொல்லி வருகிறார் மதிப்பிற்குரிய அமைச்சர். * இது நமது மாமன்னருக்கு கோட்டைக்குள்ளேயே இருக்கும் ஆபத்தைக் குறிக்கிறது. இப்படிப் பட்ட நிலையில் மன்னர் காணாமல் போயிருக்கிறார் என்றால் பயிற்சி பெற்று அனுபவம் மிகுந்த ஒற்றர்களான நாம் எப்படிச் செயல்படவேண்டும் என்பதை நினைத்துப் பாருங்கள். சொல்லப் போனால் மன்னரைக் கண்டு பிடிக்க வேண்டியது ஒற்றர்களான நமது கடமை. நம்மால் அது முடியாமல் போனால் அதைவிட அவமானம் வேறு இருக்க முடியாது. புத்தியைத் தீட்டிக் கொண்டு செயல்படுங்கள். பல்வேறு யூகங்களை உண்டாக்கிக் கொண்டு ஆராயுங்கள். கோட்டையைத் தாண்டியும் உங்கள் பார்வை நீளட்டும். தொண்டியிலும் முசிறியிலும் கூட அவர் இருக்கலாம். நமது புத்தியும் சக்தியும் இலக்கை அடைவதற்குப் பயன்படுமே தவிர எலிவளைகளைப் பற்றியும் குருவிக் கூடுகள் பற்றியும் பேசிக் கோபப்படுவதில் பயன்படக் கூடாது. சென்று வாருங்கள்"

* சேரநாட்டில் சேர மன்னனுக்கு வேண்டாத ஒற்றர்கள் நிரம்ப இருப்பதாக அமைச்சர் அழும்பில் கூறும் கூற்று சிலப்பதிகாரத்திலேயே காணப்படுகிறது.



என்று கூறியதும் ஒற்றர்கள் சமாதானம் அடைந்தவர்களாய் அங்கிருந்து பிரிந்து சென்றார்கள்.

நாட்கள் மேலும் இரண்டு கடந்தனவேயன்றி ஒற்றர்களால் மன்னரைக் கண்டு பிடிக்க முடியாததால் அரண்மனைப் பகுதி சங்கடத்தில் ஆழ்ந்தது. ஒற்றர்களை மட்டுமே நம்பியிருக்காமல் ஆயிரம் கண்ணன் என்று பெயர் வாங்கியிருந்த வில்லவன் கோதையும் மன்னரைத் தேடும் பணியில் ஈடுபட்டு துப்பு கிடைக்காமல் விழித்தான். இந்த நிலையில் தூதுவனான சஞ்சயனுக்கு ஒரு யோசனை தோன்றியது.

"அமைச்சர் பெருமானே, மன்னர் இருப்பதாகவே கருதி அவர் பங்கு கொள்ளப் போவதாக ஒரு விழாவை ஏற்பாடு செய்து ஊரெங்கும் அறிவிப்பு செய்வோம். அது மன்னருக்கும் தெரியவரும். நமது சங்கடத்தைப் புரிந்து கொண்டு வெளிப்பட்டு விடுவார்" என்றான்,

"சஞ்சயா, நீ சொல்வதைப் பார்த்தால் மன்னர் எங்கோ ஒளிந்து கொண்டிருப்பது போலல்லவா எண்ண வைக்கிறது. அவர் யாருக்காக எதற்காக ஒளிய வேண்டும்? இப்படிப்பட்ட கற்பனை இழுக்கானது. உமது யோசனை விபரீத விளைவையே தரும்" என்றார் அமைச்சர்.

"அப்படியானால் எதிரிகள் அவரைக் கடத்தி விட்டார்களா?" என்று கேட்டான் சஞ்சயன்.

"அந்த துர்ப்பாக்கியம் நேர்ந்திருக்கக் கூடாது நேர்ந்திருந்தால் சேர நாட்டில் ரத்த ஆறு ஓடும்" என்றான் படைத் தலைவன் வில்லவன் கோதை.

பரணர் குறுக்கிட்டு "அமைச்சரே, மன்னரைத் தேடிப் பிடிக்கும் காரியத்தை ஆபுத்திரனிடம் விட்டால் என்ன" என்று கேட்டார்.

"நீங்கள் தான் அவனுக்குச் சிறைத் தண்டனை விதித்து விட்டீர்களே! அவனை எப்படி அழைப்பது?" என்று எல்லோருமே ஒரு சேரச் சொன்னார்கள்.

"ஆபுத்திரன் போன்றவர்களையெல்லாம் ஐம்பெருங்குழு தண்டித்து விட்டால் சேரநாட்டில் சுயநலவாதிகளும் கயவர்களுமே மிஞ்சுவார்கள்" என்றான் சஞ்சயன்.

"ஒற்றர்களுக்கு ஒற்றரான ஆபுத்திரனால் இந்தக் காரியம் வெற்றிகரமாக முடியும். ஆனால் அவன் தான் சிறையில் இருக்கிறானே" என்றான் நீலன்.

"அவனை நீங்கள் சிறையில் அடைத்திருந்தாலும் நாட்டிற்காக சேவை செய்ய அழைத்தால் தயக்கமின்றி முன்வரக் கூடியவன் ஆபுத்திரன்" என்றார் அமைச்சர்.

"இருங்கள். இருங்கள். நமது வேலை ஆபுத்திரனைப் பற்றி ஆராய்வதல்ல. அவனால் ஏதாவது உபயோகமிருக்குமா என்பதைப் பற்றித் தான் பேசவேண்டும்" என்று பரணர் கூறியதும் -

"சிறையில் இருப்பவனை அரசுப் பணியில் ஈடுபடுத்துவதற்கு சட்டத்தில் இடமிருக்கிறதா?" என்று கேட்டான் நீலன்.

"நான் தீர்ப்பைத் தான் கூறினேனே தவிர அதை இன்னும் நடைமுறை படுத்தவில்லை. மன்னர் கிடைக்கும் வரை



அவனை விருந்தினர் மாளிகையில் தான் கௌரவமாக வீட்டுச் சிறையில் வைத்திருக்கிறேன். அவனை அழைப்பதில் சிரமமில்லை. ஆனால் அவன் சம்மதிப்பானா என்று தான் தெரியவில்லை. அவன் பெரும் ரோஷக் காரன்" என்றார் பரணர்.

"உங்களுக்கு ஐம்பெரும் குழுதான் பெரியது. ஆபுத்திரனுக்கு அவனது தன் மானம் தான் பெரியது. வில்லவன் கோதைக்கு வில்லும் அம்பும் பெரிதாக இருக்கலாம். மன்னரைப் பெரிதாக நினைக்க யாரும் இல்லையா! இதோ பாரும் புலவரே. நாமிங்கே ஐம்பெருங்குழுவினராகப் பேசவில்லை. ஆபுத்திரன் தன்மானச்சிங்கம் தான். ஆனால் மன்னருக்கு முன்னால் அவனுக்குப் பெரியது ஒன்றுமில்லை. உடனடியாக அவனை அழைத்து பணியில் அமர்த்துங்கள். நிச்சயமாக அவன் மன்னரைக் கண்டு பிடித்து வருவான். அப்படிச் செய்யும் பட்சத்தில் அவனுக்குப் பரிசளிக்கும் விதமாக அவன் மீதான தண்டனையை ரத்து செய்து விடுவோம். எல்லா பிரச்சனைகளும் தீரும்" என்றார் அமைச்சர்.

அவர் கூறியது பரணர் உட்பட அனைவருக்குமே பிடித்திருந்தது.



**ம**ன்னரைத் தேடும் பணி தனக்கு இடப்பட்டதும் ஆபுத்திரன் முதலில் மன்னரது மாளிகைக்குப் போய் அவரது புரவி இருக்கிறதா என்று பார்த்தான். புரவி இல்லை. அவரது பட்டத்து யானையான வானமலை இருக்கிறதா என்று பார்த்தான். யானை இருந்தது. மன்னருக்கும் அவனுக்கும்

மனிதர்களிடமட்டுமின்றி விலங்குகளிடமும் அதிக அன்பும் பரிச்சயமும் இருந்தது. தனது புரவியை பெரிதும் விரும்பிய அவர் அதன்மீது பயணம் செய்வதாக இருந்தால் அதனிடம் கேட்பார். சரி என்றால் அது தலையை ஆட்டும். இல்லை என்றால் துள்ளி குதிக்கும். விலங்குகளின் மொழியை அறிந்தவர் மன்னர். அவரது பட்டத்து யானை அவரை தினந்தோறும் ஒரு முறையாவது சுமந்து செல்லவில்லை என்றால் தூங்காது. உணவை ஏற்காது. பிளிறும் மதம் வந்தது போல முரட்டுத் தனத்தைக் காட்டும். அதற்காகவே மாலை நேரங்களில் அதன் மீது ஏறி அரண்மனையிலிருந்து ஆடகமாடம் வரைச் செல்வது அவரது வழக்கமாக இருந்தது. கடந்த சில நாட்களாக அவர் காணாத பட்சத்தில் மதம் பிடித்திருக்க வேண்டிய பட்டத்து யானை சிலைபோல் நின்றிருந்ததைக் கண்ட ஆபுத்திரனுக்கு வியப்பாக இருந்தது. யானைக்குச் சரியான சமாதானத்தை மன்னர் சொல்லியிருப்பார் போலிருக்கிறது என்று எண்ணிக் கொண்ட அவன் மகாராணியிடம் சென்று ஆறுதல் சொல்லி விட்டு மிளகுச் சந்தைக்குச் சென்றான்.

தான் கோட்டைக்குள் நுழைந்து சந்தைக்கு வந்த போது ஒரு மனிதனைக் கண்டு வியந்திருந்த அவன் அம்மனிதனைப் பற்றி விசாரிக்கும் படி காவல் வீரன் ஒருவனிடம் கூறியிருந்தான். மிளகுச் சந்தையில் அவனைக் கண்டு பிடித்து விசாரித்த போது -

"நான் இது பற்றி காவலர் தலைவரிடம் விசாரித்தேன். அந்த மனிதர் மிளகு வியாபாரி தானாம். கொஞ்சகாலமாக அடிக்கடி வந்து மிளகுப் பொதிகளை வாங்கிச் செல்கிறாராம். வேறெங்கும் போவதில்லையாம்." என்றான் காவல் வீரன்.



"உன் பெயரென்ன வீரனே?" - என்று கேட்டான் ஆபுத்திரன்.

"வேலன்." என்றான் காவல்வீரன்.

"வேலா, நீ பார்த்தது மிளகு வியாபாரி அல்ல. வியாபாரப் போர்வையில் இங்கே உலவும் ஒற்றன். ஆபத்தானவனும் கூட. அவன் இங்கே [illegible] வேண்டிய அவசியமென்ன என்று தெரியவில்லை. ஆகவே இன்று முதல் உனது வேலை அந்த மனிதன் வந்தால் அவனை அறியாமல் பின் தொடர்ந்து அவன் செல்லும் இடங்களைக் கண்காணிக்க வேண்டும். என்னிடம் சொல்ல வேண்டும். உன் பணி மாற்றத்தைப் பற்றி உங்கள் தலைவரிடம் நான் சொல்லிக் கொள்கிறேன். நீ கவலைப்பட வேண்டாம்." என்று கூறிவிட்டு திருமால் கோயிலான ஆடகமாடத்திற்குச் சென்று இறைவனை வழிபட்டு விட்டு அங்கேயே சிறிது நேரம் வரை சிந்தனையில் ஆழ்ந்தான்.

மன்னர் கோட்டைக்குள் எங்கே செல்வதாக இருந்தாலும் காவலர்கள் சூழ தேரில் செல்வது தான் வழக்கம். கோட்டையை விட்டுச் செல்வதாக இருந்தால் தான் புரவியில் செல்வார். அரண்மனையில் அவரது புரவி இல்லாததாலும் அவரது பட்டத்து யானை அமளியில் ஈடுபடாமல் அமைதியாக இருந்ததாலும் மன்னர் ஏதோ திட்டத்துடன் கோட்டையை விட்டு போயிருக்க வேண்டும் என்று தோன்றியது ஆபுத்திரனுக்கு. ஆனால் இளங்கோவடிகளைச் சந்தித்து விட்டு வருவதாகச் சொன்னவர் இத்தனை நாளாக எங்கே இருக்கிறார்? என்ன செய்கிறார்? ஏதாவது இக்கட்டு நேர்ந்திருக்குமா? இக்கட்டுகளில் அவ்வளவு லேசில் சிக்குபவரில்லையே அவர்?

எனக்கு இக்கோட்டு வந்த போது சர்வசாதாரணமாக கொள்ளையர் இருப்பிடத்திற்கு வந்து இக்கொட்டிலிருந்து காப்பாற்றியவரல்லவா அவர்? தனது இருப்பிடத்தை தெரிவிக்காமல் இருப்பது பொறுப்பற்ற செயலாயிற்றே? அப்படி நடந்து கொள்ளக் கூடியவரும் அவரல்லவே! என்றெல்லாம் யோசித்த ஆபுத்திரன் ஒரு முடிவிற்கு வராமல் தன் புரவியில் ஏறி கோட்டைக்கு வெளியே இருந்த குணவாயில் கோட்டத்திற்குச் சென்றான். மன்னரின் சகோதரரும் சேர அரசப் பதவியைத் துறந்தவரும், மன்னர் சைவ சமயத்தின் பேரில் ஆர்வம் கொண்டவராக இருந்த போதும் சமணமதத்தை ஏற்று அதற்கேற்பவே துறவிக் கோலம் பூண்டு தனித்து வாழ்ந்து வருபவருமான, இளங்கோவடிகள் வசித்து வந்த குணவாயில் கோட்டத்தை அடைந்தான் ஆபுத்திரன். கோட்டத்தின் மையப் பகுதியில் இருந்த சமண விஹாரத்தை அடைந்தான். விடியல் காலை வேளையாக இருந்த படியால் அப்பகுதி ரமணீயமாக இருந்தது. கதிரவனின் காலை நேரக் கதிர்கள் முற்றிலும் தழுவிக் கிடந்தபடியால் விஹாரம் பொன்னிறம் பெற்று பேரழகோடு விளங்கியது. பற்றுகளை விட்டவர்களுக்கு விஹாரமாக இருந்த அதன் பொன்னிறத் தோற்றம் பற்றற்றவர்களைக் கூட கவரக் கூடியதாக இருந்தது. மரங்களிலிருந்து எழும்பிய பறவைகள் பல விஹாரத்தின் விதானத்தைச் சுற்றிச் சுற்றி வந்த விதமானது அளப்பரிய அழகோடு காட்சி அளித்தது. சமணர்களை விட அதிகமான பற்றுதலைக் கொண்டவைகளைப் போல் விஹாரத்தையடுத்த தடாகத்திலிருந்து மண்பானையொன்றில் நீரை எடுத்துக் கொண்டு வந்து கொண்டிருந்த அடிகளைக் கண்டதும் வணங்கினான் ஆபுத்திரன். இளங்கோவடிகளின் காலத்தில் சேர நாட்டில் ஆடையற்ற திகம்பர சன்னியாசிகள்





குறைவாகவே இருந்தார்கள். பற்றுகளை நீக்கும் காரியத்தில் ஆடைகளையும் சேர்த்துக் கொண்டு அவற்றை அணியாமல் வாழ்ந்த சமணர்கள் சிறந்த துறவிகளாக இருந்தார்கள்

சங்ககாலத்திலும் அதற்குச் சற்று முன்பும் பின்பும் நீண்டகாலமாகவே தமிழகத்தைப் பொறுத்த வரை மக்கள் அதிலும் பெண்கள் நாகரீக வளர்ச்சியற்றவர்களாகவே இருந்தார்கள். பெண்கள் பெரும்பாலும் இடுப்பிற்கு மேலே ஆடை அணியாதவர்களாகவே இருந்தார்கள். சாதாரணப் பெண்களின் மார்பகங்கள் மூடப்படாமல் இருந்தன. பலர் மார்பகங்களிலும் முகத்திலும் வண்ணங்களைத் தீட்டிக் கொண்டார்கள். நாகர் குலப் பெண்களும், பாணர் கூட்டத்தில் செல்லும் பெண்களும் அம்மணமாகவே சென்றார்கள் என்பதை இலக்கியங்களிலிருந்தே அறியலாம். * அரச மகளிர் மட்டுமே மார்பு கச்சைகளை அணிந்தார்கள். இது அக்கால நாகரீகமாக இருந்தபடியால் பெண்கள் அரைகுறை ஆடைகளுடனோ அம்மணமாகவோ திரிந்ததை யாரும் தவறாக எண்ணவில்லை. இதனால் தானோ என்னவோ துறவிகள் பலர் ஆடையின்றித் திரிந்ததை மக்கள் வெறுக்கவில்லை. அதே சமயம் சமண மதமே வேறொரு பிரிவினரை உருவாக்கி அவர்களை ஆடைகள் தரித்து சுவேதம்பரர் என்ற பெயருடன் உலவ விட்டது. வெள்ளாடையை

* கலித்தொகை பாடல் 111, 115

சிலப்பதிகாரம் VI காண்டம் அடி 88

பக்கம் 163 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் (by) கனகசபை பிள்ளை.



அணிந்த சுவேதம்பரராகத் திகழ்ந்த இளங்கோவடிகள விஹாரத்திலேயே ஒடுங்கிக் கிடக்காமல் பல இடங்களுக்கும் சென்று எளியவர்களுக்கு முடிந்த உதவிகளையெல்லாம் செய்து வந்தார்.

தன்னைப் பார்த்து வணங்கிய ஆபுத்திரனை கனிவோடு வரவேற்று மரமொன்றின் கீழே இருந்த பாறை மீது அமரும்படி கூறிவிட்டு நீர்ப்பானையை அறையொன்றில் இறக்கி வைத்து விட்டு வந்தார்கள். கடுமையான விரதங்களின் காரணமாக அவரது உடல் மெலிந்து காணப் பட்டாலும் முகத்தில் சாந்தம் குடி கொண்டு தனிக் களையை உருவாக்கியிருந்தது. வெள்ளாடை மட்டுமின்றி வெள்ளையுள்ளமும் கொண்ட அவர் "எங்கே ஆபுத்திரா இவ்வளவு தூரம்? வந்து வெகு நாட்கள் ஆகியிருக்கும் போலிருக்கிறதே" என்று வினவினார்.

"தங்களை தரிசனம் செய்வதற்கே வந்தேன் அரசே." என்றான் ஆபுத்திரன்.

"என்னையா அரசன் என்று அழைக்கிறாய்?" கேட்டார் அடிகள் புன்முறுவலுடன்.

"அரச பீடத்தில் ஏறுபவர்களை விட அரச பீடத்தை துறப்பவர்கள் தான் அரசர்கள். லேசில் அடக்க முடியாத மனதை அடக்கி ஆளும் துறவிகள் தானே ஐயா உண்மையான அரசர்கள்?" என்று கூறிய ஆபுத்திரன் "அரசர்கள் செங்கோலை செலுத்தி மண்ணை ஆண்டாலும் தங்களைப் போல ஒப்பில்லாத துறவிகளின் மௌனத்தாலும் தியாகத்தாலும் தான் நாடு செழிக்கிறது. மேன்மையடைகிறது. இதை நான் சொல்லவில்லை. மகான்களே சொல்லியிருக்கிறார்கள்" என்றான்.

அடிகளின் அமைதியான முகத்தில் மீண்டும் ஓர் அழகான புன்முறுவல் விரிந்தது.

"அரசன் என்ற சொல்லே ஆசையை உண்டாக்கக் கூடியது. அச்சொல்லை துறவிக்குச் சூட்டுவது அவர்களுக்கு ஆசையைத் தூண்டுவது போன்றது. ஆகவே துறவிகள் துறவிகளாகவே இருக்கட்டும். அதோடு நான் அரச பதவியைத் துறந்தது தியாகமல்ல. சுயநலம் தான்." என்றார்.

"தங்கள் செய்தி புதியதாக இருக்கிறது அடிகளே!" என்றான் ஆபுத்திரன்.

"உன் மன்னன் செங்குட்டுவனுக்குக் கூட இது தெரியாது" என்று அமைதியாக அதிர்வேட்டை வீசிய அடிகள், "ஆபுத்திரா, நான் சிறுவயதிலிருந்தே ஒதுங்கி வாழ்ந்தவன். ஆடம்பரங்களும் ஆரவாரங்களும் எனக்குப் பிடிப்பதில்லை. எதன் மீதும் எனக்கு ஆசை வந்தது கிடையாது. ஆனால் சிறு வயதில் இந்த விஷயங்களையெல்லாம் நான் பெரிதாக நினைக்கவில்லை. என் சுபாவங்கள் என்று எண்ணிக் கொண்டிருந்திருந்து விட்டேன். ஆனால் பெரியவன் ஆக ஆகத் தான் என் பெயருடன் அரசபதவி ஒட்டிக் கொண்டிருந்ததை உணர்ந்தேன். அது எனக்கு அசதியாகவும் அதிர்ச்சியாகவும் இருந்தது. ஆசையில்லாமல் நான் வாழ்ந்து கொண்டிருந்த போது என் மனதிலும் வாழ்க்கையிலும் நிலவிய அமைதி பறிபோய் விடுமோ என்று நான் அஞ்சினேன். பதவியும் ஆசையயும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்தவை. இரண்டிலிருந்து ஒன்றை பிரிக்க முடியாது. பதவியில் அமர்ந்து கொண்டு ஆசையில்லாமலும் பற்றில்லாமலும் இருப்பதென்பது இயலாத காரியம். நான் அறிந்த மட்டில் ராமாயண காவியத்தில் வரும் சீதையின் தந்தையும் மாமன்னருமான ஜனகர் மட்டுமே அவ்வாறு வாழ்ந்தார். அதற்கு முன்போ பின்போ அப்படி யாரும் இருந்ததாக எனக்குத் தெரியாது ஆபுத்திரா. மாமன்னர் ஜனகரைப் போல் அரசபதவியில் இருந்து கொண்டு துறவியாய் வாழ என்னால் முடியுமென்று தோன்றவில்லை எனக்கு. இல்லறத்தில் இருந்து கொண்டு பதவி வேண்டாம் என்றால் யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள் எப்படியாவது பதவியில் அமர்த்தி விடுவார்கள். மகனே, செங்குட்டுவனைப் போல எல்லோருமே அரசபதவியில் இருந்து கொண்டு நீதிமானாகச் சிறப்பாக ஆட்சி செய்து விட முடியாது. அரச பதவியை துன்பகரமானதாக எண்ணி மக்களை இன்பகரமாக வாழ்விக்க ஒரு சிலரால் தான் முடியும். * அவன் அரிதாகக் கிடைக்கும் வலம்புரிச் சங்கைப் போன்றவன். என்னால் அப்படி இயலாது. ஆசையை நீக்கி அமைதியாக வாழும் சுகத்தை இழக்க விரும்பாத சுயநலவாதியான நான் பதவி வேண்டாம் என்று சமணமதத்தில் சேர்ந்து துறவியானேன். இது எப்படித் தியாகமாகும்? நான் எப்படி ஒப்பிலாத் துறவியாவேன்?" என்று நிதானம் சிதறாமல் சொன்னார் அடிகள்.

அவரது கூற்றைக் கேட்டபின் அவன் அவர் தியாகி மட்டுமல்ல - துறவி மட்டுமல்ல - பெரும் மகான் என்றே

* அரச வாழ்வு துன்பமானது என்று செங்குட்டுவன் கருதியதாக இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்திலேயே சொல்லியிருக்கிறார்.

காட்சிக் காதை 7ம் அதிகாரம் வரி 103-104

நினைத்தான் ஆபுத்திரன். தவம் செய்திருக்கும் அப்பட்டமான தியாகத்தைக் கூட ஒப்புக் கொள்ளாமல் சுயநலம் என்று சொல்லிக் கொள்ளும் பக்குவம் ஆசை மட்டுமின்றி ஆணவத்தையும் கைவிட்டு ஆன்மாவில் ஒன்றியிருக்கும் மகான்களுக்கு மட்டுமே சாத்தியம் என்பதை உணர்ந்த அவன் புகழுரையை அவர் விரும்ப மாட்டார் என்பதையும் உணர்ந்து உள்ளுக்குள்ளேயே பாராட்டிக் கொண்டு "தங்கள் வாக்கினைப் பார்க்கும் போது அருள் வாக்கு என்பது இப்படித் தான் இருக்கும் என்று நினைக்கிறேன்" என்று சொல்லிவிட்டு "தாங்களோ பதவியைத் துறந்து விட்டீர்கள். மன்னரின் புதல்வர் - சேர இளவரசர் குட்டுவரோ பரணருக்குத் தானமாகக் கொடுக்கப் பட்டு விட்டார். இப்படியிருந்தால் மாமன்னருக்கு யார் வாரிசாக முடியும்?" என்று கேட்டான்.

"ஏன் நீ தான் இருக்கிறாயே! உனக்கில்லையா தகுதி? ஆபுத்திரா, துறவுக்குத் தான் ஆள் கிடைக்க மாட்டார்கள். பதவிக்கு நிறைய பேர் கிடைப்பார்கள்" என்றார் அடிகள்.

ஆபுத்திரன் பிறகு சேரமன்னர் அங்கு வந்த பிறகு அரண்மனைக்கு வந்து சேரவில்லை என்பதை தெரிவித்து விட்டு "தங்களிடம் ஏதாவது சொன்னாரா?" என்று கேட்டான்.

அதற்கு இளங்கோவடிகள் அளித்த பதில் ஆபுத்திரனை அசர வைத்தது.





# அத்தியாயம் இருபது



## கொடுமனம்

இளங்கோவடிகளின் வாக்கு சத்திய வாக்கு என்பதை ஆபுத்திரன் உணர்ந்திருந்தானாதலால் சேர மன்னர் காணாமல் போனது பற்றி அவர் கூறிய கூற்று உண்மையாகத் தான் இருக்க வேண்டும் என்று நம்பினான். அதே சமயம் மன்னரின் இருப்பிடத்தை எப்படி கண்டு பிடிப்பது என்பது அவனுக்கு விளங்கவில்லை. அதையடுத்து அவனுக்குள் ஏதேதோ யூகங்கள் தோன்றி மறைந்தன. அடிகளுக்கு வணக்கம் தெரிவித்து விட்டு மீண்டும் வஞ்சிக் கோட்டைக்கு வந்த அவன் நேரே பூங்கொடியின் இருப்பிடத்திற்குச் சென்றான். அங்கே மாளிகைக்குள் ஏதோ பேச்சுக் குரல் கேட்டது. இருவர் சண்டை போடுவது போல் இருந்தது. அதை ஒட்டுக் கேட்க விரும்பாத

அவன் ஒதுங்கி நின்றான். சிறிது நேரத்தில் உள்ளேயிருந்து பரணர் வந்து வெளியே இருந்த பல்லக்கில் ஏறி வெளியே சென்றார். அவர் சென்ற பின் வாயிற்கதவைச் சாத்த வந்த பூங்கொடி ஆபுத்திரனைக் கண்டதும் "நீங்களா? வாருங்கள்" என்று உள்ளே அழைத்தாள்.

"உன் முகம் ஏன் வாடிப்போயிருக்கிறது? சற்று முன் ஏதோ உரத்த குரல்கள் கேட்டதே! உன் தந்தையோடு ஏதாவது சண்டை போட்டாயா பூங்கொடி?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

பூங்கொடியின் கண்கள் கலங்கின. "என் தந்தை தங்களுக்கு சிறைத் தண்டனை விதித்து விட்டாராமே?" என்று கேட்டாள்.

"எனக்கில்லை பூங்கொடி. என் குற்றங்களுக்கு தண்டனை வழங்கியிருக்கிறார். அதுவும் புலவராக இல்லை. ஐம்பெருங்குழுவின் தலைவராக. அது சரிதான்."

"உங்களால் குற்றம் புரிய முடியும் என்று நம்புகிறவர்கள் கூட சேரநாட்டில் இல்லையே. ஐம்பெரும் குழு மட்டும் எப்படி குற்றம் சுமத்தியது?"

"அது தான் குழுவின் தனிப்பெரும் சிறப்பு. நான் செய்த காரியங்களை நல்லவைகளாக நான் தவறாக எண்ணிவிட்டேன். ஆனால் ஐம்பெருங்குழுவோ அவற்றை ராஜதுரோக குற்றங்களாக நிரூபித்து விட்டது."

"மன்னர் இதை ஏற்பாரா?"

"மன்னரும் குழுவிற்கு கட்டுப்பட்டவர்."



"அவருக்கு பிரச்சனை வரும் போது குழுவிற்கு அவர் கட்டுப்படட்டும். இப்போதைய பிரச்சினை உங்களுக்கு. இதை அவர் ஏற்றுக் கொள்வாரா?"

"குழுவின் செயல்பாடுகளில் மன்னர் குறுக்கிட மாட்டார்."

"அமைச்சர் முதலாக மற்றவர்களெல்லாம் உங்களை ஆதரிக்கும் போது என் தந்தைக்கு மட்டும் ஏன் இத்தனை பிடிவாதம்?"

"பிடிவாதமல்ல. நீதி. அதனால் தான் அவர் தலைவராக இருக்கிறார்."

"மன்னவர் வரட்டும். அவரிடம் இது குறித்து போராடுவேன். என் தந்தை உங்களைத் தண்டித்தது தவறு என்பதை சுட்டிக் காட்டுவேன். தண்டனையிலிருந்து உங்களை மீட்பேன்."

"கோபம் வேண்டாம் பூங்கொடி. அவர் சுயநலத்திற்காகவோ, நிதானம் தவறியோ என்னைத் தண்டிக்கவில்லை. சேர நாட்டின் நீதி, கௌரவம், பற்று இவை தான் அவரது முடிவிற்கான அடிப்படைகள்."

"இந்த மூன்றும் உங்களிடம் இல்லை என்றாரா? அப்படிச் சேர நாட்டில் ஒருவராவது கூற முன் வருவார்களா? அவரது முடிவு சரியில்லை. தனது மகள் இந்த தண்டனையால் எத்தனைத் துன்பமடைவாள் என்பதைக் கூட யோசிக்காமல் - நமக்கிடையே உள்ள அன்பின் இழைகளையும் மறந்து விட்டு மூன்றாண்டுகள் சிறை விதித்திருக்கிறாரே அவரது இதயம் என்ன கல்லா?"

"கடமைக்கு முன் மற்றவைகள் பின் தங்கிவிடுவது நேர்மை தவறாத அதிகாரிகளுக்கு அமையும் சிறப்பான குணம்."

"என்ன நீங்களே இப்படிப் பேசுகிறீர்கள்? என் வேதனை உங்களுக்குப் புரியவில்லையா?"

"அன்பின் ஆழத்தைப் புரிந்து கொள்ள முடிந்த எனக்கு வேதனையின் ஆழம் புரியாதா?" அதோடு பிரிவில் தானே அன்பின் ஆழத்தையும் உறுதியையும புரிந்து கொள்ள முடிகிறது என்று சொன்னாய் நீ?"

"இது பிரிவல்ல. கொடுமை. மூன்றாண்டுகள் சிறையில் நீங்கள் வாடுவது என்னைத் தினமும் சுட்டெரிக்கும். அங்கே இருக்கும் காலம் வரை நான் உண்ணமாட்டேன், உறங்கமாட்டேன். பட்டினி கிடப்பேன். நீங்கள் மீண்டு வரும்போது என் உடலில் உயிர் இருக்காது"

"இப்படியெல்லாம் நீ பேசக்கூடாது பூங்கொடி. நானும் நீயும் மட்டுமல்ல. அனைவருமே சட்டத்திற்கும் நீதிக்கும் கட்டுப் பட்டவர்கள். அவற்றை மதிக்க வேண்டியவர்கள். நான் சிறையிலிருந்து மீண்டு வரும் போது நீ இன்றிருப்பது போலவே பூத்தமலர் போல் வாடாமல் வதங்காமல் இருக்க வேண்டும். அந்த நினைப்பு தானே பூங்கொடி சிறையில் எனக்குப் புத்துயிரை அளிக்கும்."

அவனது பேச்சிற்கு மறுமொழி பேச முடியாத நிலையில் கண்ணீர் விட்டே அழுதாள் பூங்கொடி. "தடுக்கவும் முடியாமல் தடுக்காமல் இருக்கவும் முடியாமல் போகும் சந்தர்ப்பங்கள் காதலர்களுக்கு வருவது துரதிஷ்ட வசமானது." என்றாள்.



"காதலில் அதிஷ்டத்தைவிட துரதிஷ்டங்களும் தடைகளும் தான் அதிகமிருக்கும் பூங்கொடி. இதில நாம நம்பிக்கையினாலும் மனஉறுதியினாலும் தான் வெற்றி பெற வேண்டும்." என்றான் ஆபுத்திரன்.

"ஆறுதலான வார்த்தைகள் கூட ஆறுதல் தராமல போகும் அசந்தர்ப்பங்கள் பேதைகளுக்கு வந்து கொண்டே இருக்கும் போலிருக்கிறது."

"தவறு பூங்கொடி. அசந்தர்ப்பங்கள் தான் வார்த்தைகளின் அர்த்தங்களை தவறுதலாகக் காட்டுகின்றன. அந்தப் பொய்யில் நீ அசந்து போய் விடக்கூடாது." என்று கூறி அவளது கண்களைத் துடைத்து விட்டான் ஆபுத்திரன்.

அச்சமயத்தில் பணியாள் ஒருவன் வந்து "கொடுமணத்திலிருந்து உங்களுக்குச் செய்தி வந்திருக்கிறதம்மா. வணிகர் ஒருவர் வந்திருக்கிறார்." என்றதும "வரச்சொல்லுங்கள்" என்றாள் பூங்கொடி.

உடனே வணிகர் ஒருவர் வந்து "அம்மா உங்கள் தோழிப் பெண் வாணி உங்களை உடனடியாக கொடுமணம் வரச சொல்லியிருக்கிறாள். இந்தாருங்கள் ஓலை" - என்று ஓலையைக் கொடுத்தார். அதை வாங்கிப் படித்து விட்டு வணிகரை நன்றி சொல்லி அனுப்பிய பூங்கொடி ஏதோ யோசித்தாள்.

"என்ன யோசனை பூங்கொடி? கொடுமணத்திற்கு போகப் போகிறாயா?" - என்று கேட்டான் ஆபுத்திரன்.

"வாணி உடனடியாக வரச் சொல்லியிருக்கிறாள் என்றால் முக்கியமான விஷயமாகத் தான் இருக்கும் ஆனால் அவ்வளவு தூரம் அதுவும் கோட்டையைத் தாண்டி போக

வேண்டும் என்றால் தயக்கமாக இருக்கிறது. ஆற்றை வேறு தாண்டிப் போக வேண்டும்." என்று கூறிக் கொண்டே போன பூங்கொடி "தந்தையிடம் சொன்னால் சிவிகையில் அனுப்பி வைத்து காவலுக்கு வீரர்களையும் அனுப்புவார். எனக்கென்னவோ தனியாகப் போவது சரியாகப் படவில்லை" - என்றான்.

"கவலையை விடு பூங்கொடி. காவலுக்கு நான் வருகிறேன். ஆனால் உன்னோடு கூடவே வர முடியாது. உன் பார்வைக்கு எட்டிய தூரத்தில் நிச்சயமாக நான் பின் தொடர்வேன். நான் துணைக்கு வருவதாக உன் தந்தையிடம் சொல்லாமலிருந்தால் போதும்" என்று ஆபுத்திரன் கூறியதும் அவனது நெற்றியில் திடீரென ஒரு முத்தத்தைப் பட்டும் படாமலும் பதித்து, உடனே துள்ளி குதித்தபடி ஓடினான் பூங்கொடி.



கொடுமணம் என்ற ஊரும் பந்தர் என்ற ஊரும் அடுத்தடுத்த ஊர்களாய் முசிறித் துறைமுகத்திற்கு தெற்கே இருந்தன. துறைமுகத்திற்கு அப்பால் தெற்கே சற்று தொலைவில் முன்னாளில் கடல் நீர் இருந்து பின்னாளில் கடல் உள்வாங்கி விட்டதால் மணல் தீவுகளாக இரண்டு மணற்பரப்புகள் இருந்தன. இவற்றுக்கு மணலி என்ற பொதுப் பெயர் பலகாலமாக பல இடங்களிலும் வழங்கப் பட்டு வந்தது. காலம் செல்லச் செல்ல அந்த மணற் பரப்புகளில் மக்களின் குடியிருப்புகள் உண்டாகி மக்களும் பெருமளவில் குடிவந்து விட்ட படியால் அவ்விரண்டு மணற்பரப்புகளுக்கும்



தனித்தனி பெயர்களை சூட்ட வேண்டிய நிலைவந்ததால மணலிகள் இரண்டும் முறையே கொடுமணம் என்றும் பந்தர் என்றும் பெயர் பெற்றன. கொடுமணப் பரப்பு பந்தரை விட விசாலமாக இருந்தாலும் அதன் மேற்குப் பகுதியில் அடர்ந்த காடுகள் வளர்ந்து செழுமையாக அமைந்திருந்த காரணத்தால் யானைகள் அங்கே போர்ப் பயிற்சியைப் பெற இடமாக அமைந்தது. பூங்கொடி அந்த வனப் பகுதி வழியாகச் சிவிகையில் வந்த போது ஆங்காங்கே உலவிய யானைக் கூட்டங்களை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு வந்தான்.

கொடுமணத்தில் யவனர்கள் வணிகர்களாக இருந்து பொன்னையும், பந்தரில் அராபியர்கள் முத்தையும் விற்று வந்தார்கள். அவற்றின் தரம் உயர்தரமாக இருந்த காரணத்தால் வஞ்சியிலும் முசிறியிலும் மற்றும் உள்நாட்டிலும் இருந்த தனவந்தர்கள் அடிக்கடி வந்து அவற்றை வாங்கிச் சென்றார்கள். தற்போதும் அத்தகைய செல்வந்தர்கள் கணிசமாக வந்திருந்தார்கள் என்பதை மணற்பரப்பில் ஆங்காங்கே நின்றிருந்த தேர்களே நிரூபித்தன. மணற்பரப்பின் நடுவில் வட்டவடிவில் அங்காடி அமைக்கப் பட்டு அங்கிருந்த கடைகளில் யவனர்கள் தகுந்த பாதுகாப்புடன் வியாபாரத்தைச் செய்து வந்தார்கள். அங்காடியை நெருங்கியதுமே சிவிகையை விட்டு இறங்கிய பூங்கொடி சிவிகை தூக்கிகளையும் காவல் வீரர்களையும் உலைநதி ஓய்வெடுக்கும் படிச் சொன்னான்.

அப்போது மாலைமயக்கும் நேரமாகி விட்டதால் அரபிக்கடலின் மேலே செவ்வாடை விரித்த மாதிரி வானம் சிவந்திருக்க அந்த ஆடைக்குப் பின்னால் கடல் தேவதை

முகத்தைச் சிறிது சிறிதாக மறைத்துக் கொள்ள முற்பட்டது போல் தொடுவானத்தில் கதிரவனின் பெரும் பிம்பம் முழுகிக் கொண்டிருந்தது. முக்கியஸ்தர் சென்றபின் பணியாட்கள் அவரிருந்த இடத்தைச் சுத்தம் செய்ய வருவது போல ஆங்காங்கே நட்சத்திரங்களும் அவற்றை அதட்டி வேலை வாங்கும் தலைவியைப் போல பிறை நிலவும் வானத்தில் தோன்றி இயற்கையின் இணையற்ற அழகை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன. கடைகள் தோறும் மின்னலை விளக்குகளும் பாண்டில் விளக்குகளும் ஏற்றப் பட்டது மட்டுமின்றி கொடுமணத்தின் தெருக்களிலும் அங்காடிப் பகுதிகள் இருந்த விளக்குத் தூண்களில் பந்தம் ஏற்றப் பட்டிருந்தால் அந்த மணற்பரப்பு பட்டப்பகலாகப் பிரகாசப்பட்டது.

அங்காடி தொடங்கும் இடத்தில் பூங்கொடியோடு ஆபுத்திரனும் சேர்ந்து கொண்டு ஒன்றாகவே நடந்தார்கள். பூங்கொடி தோழியான வாணியின் அங்காடி கிழக்கு மூலையில் இருந்ததால் அவர்கள் இருவரும் சிறிது தூரம் நடக்க வேண்டியிருந்தது. இதற்கிடையில் ஆபுத்திரனை நெருங்கிய ஒரு மனிதன் "தங்களை அதோ - அந்த அங்காடிக் காரர் அழைக்கிறார்" என்றான். பூங்கொடியும் "நீங்கள் போய் விட்டு வாருங்கள். நானும் வாணியைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று கூறி விட்டுச் சென்றாள்.

ஆபுத்திரன் எதுவும் பேசாமல் குறிப்பிட்ட தங்கக் கடைக்குச் சென்றதும் கடையில் வணிகம் செய்து வந்த வணிகன் அவனைக் கண்டதும் வணங்கி கடையின் பின் கட்டிற்குப் போகும்படி கேட்டுக் கொண்டான். அவனிடமும் எதுவும் பேசாமல் பின்கட்டிற்குப் போன ஆபுத்திரன் அங்கே



நின்றிருந்த செங்குட்டுவனைக் கண்டதும் மயக்கமடையும் நிலைக்கு வந்து விட்டான். "மாமன்னவா, தாங்களா" என்று அவனையும் அறியாமல் சொற்கள் வெளிவந்தன. அவனது தோளின் மீது கையை வைத்து "பதட்டமடையாதே ஆபுத்திரா, நடப்பதெல்லாம் நன்றாகத் தான் நடக்கிறது" என்று சொன்ன மன்னன் "சாப்பிட்டாயா? சாப்பிட வேண்டுமா?" என்று கேட்டான்.

ஆபுத்திரனுக்கு வயிறு என்ற ஒன்று இருப்பதாக நினைவே இல்லை. மன்னனைக் கண்ட மயக்கத்தில் பேச்சிழந்து நின்றான். அதைக் கண்ட மன்னன் "ஆபுத்திரா, வெள்ளைத் தீவை விட்டு நாம் வெளியேறிய போது நானொரு வார்த்தையைக் கூறினேனே நினைவிருக்கிறதா?" என்று கேட்டான்.

ஆபுத்திரனுக்கு அவனிருந்த நிலையில் சரிவர நினைவிற்கு வரவில்லை. "உன்னை வெள்ளைத் தீவிலிருந்து காப்பாற்றி விட்டேன். வஞ்சிக்குப் போன பின் அந்த ஐவரிடமிருந்து உன்னை எப்படிக் காப்பாற்றப் போகிறேன் என்று தெரியவில்லை என்று சொன்னேனே நினைவிருக்கிறதா?" என்று மன்னனே நினைவு படுத்திய போது "ஆமாம் மன்னவா. நினைவுக்கு வருகிறது. ஐவர் என்று தாங்கள் கூறியதும் ஐம்பெருங்குழுவைத் தான் என்பது தற்போது தான் புரிகிறது. பல விஷயங்களும் புரிகின்றன." என்றான் ஆபுத்திரா.

"முடிந்த வரையில் நான் ஐம்பெருங்குழுவையோ அதைச் சேர்ந்தவர்களையோ சந்திப்பதை தவிர்த்து வந்தேன். நான் வெள்ளைத் தீவுக்குத் தனியாகப் போனதிலிருந்து உன்

சம்பந்தப் பட்ட விஷயங்களை அவர்கள் விசாரித்தால் சங்கடங்கள் வரும் என்றே அவ்வாறு செய்தேன். ஆனாலும் உன் விவகாரங்கள் ஐம்பெரும் குழுவிற்கு தெரியாமல் போகாது என்பது எனக்குத் தெரியும். ஆனால் பயங்களின் மூலம் இவை தெரியவரும் என்று நான் எதிர் பார்க்கவில்லை" என்றான் மன்னன்.

"ஐம்பெரும் குழுவால் எனக்குச் சிக்கல் வரும் என்று தாங்கள் எதிர்பார்த்துத் தான் அப்போது அவ்வாறு பேசினார்களா பிரபு?"

"ஆம். ஆபுத்திரா. உன்னையும் உன் குணத்தையும் நான் நன்கறிவேன். பரணர் முதற்கொண்டு குழுவில் உள்ள எல்லோருமே நன்கறிவார்கள். இருந்தாலும் ஐம்பெருங்குழுவாகக் கூடி உன்னை விசாரிக்கும் போது அவர்கள் அதிகாரிகளாக மாறி விடுவார்கள். அதிலும் பரணர் நிர்தாட்சண்யமும் நிர்ப்பயமும் கொண்டவர். உனக்கு ஏதாவது பிரச்சினை ஏற்பட்டால் நான் நேரடியாகக் குறுக்கிட்டு உதவ முடியாது. அந்த அளவிற்கு ஐம்பெருங்குழுவின் அதிகாரங்களை உயர்த்தி அதன் தலைவராக பரணரை நியமித்ததே நான் தான்."

"உண்மை தான் பிரபு. ஐம்பெருங்குழுவின் அணுகு முறையைக் கண்டு நான் உண்மையிலேயே அசந்து விட்டேன். என் மீது ராஜத் துரோகம் சுமத்தப் படும் என்பதை நான் எதிர் பார்க்கவில்லை."

"ஆனால் நான் எதிர்பார்த்தேன். அதனால் நான் நாடகமாட வேண்டியதாயிற்று."



"நாடகமா?"

"நீ வஞ்சிக் கோட்டைக்கு வந்தது முதல் நடப்பது ஒவ்வொன்றையும் என் அந்தரங்க ஒற்றர்கள் மூலம் கவனித்தேன். உன் மீது தண்டனை விதிக்கப் படும் என்பதை எதிர் பார்த்திருந்த நான் ராணியையும் என் நாடகப் பாத்திரமாக்கினேன். உனக்கு தண்டனை விதித்ததும் அவள் ஐம்பெருங்குழுவிற்கு வந்து என்னைக் காணவில்லை என்று சொன்னது நாடகத்தின் ஓர் அங்கம் தான்."

"தங்கள் திட்டம் என்ன பிரபு?"

"ஆபுத்திரா. ஐம்பெருங்குழு உனக்கு தண்டனையிட்டு நிறைவேற்றும் சமயத்தில் அதன் கவனத்தைத் திருப்பவே நான் காணாமல் போனதாக செய்தியை ராணியின் மூலம் அனுப்பினேன். அதிலிருந்து அனைத்துமே நான் எதிர் பார்த்த மாதிரியே நடந்தன. ஐம்பெருங்குழு ராணியின் செய்தியால் பரபரப்படைந்தது. என்னைத் தேட ஒற்றர்கள் அனுப்பப்பட்டார்கள். ஆனால் என்னைக் கண்டு பிடிக்க முடியவில்லை."

"தாங்கள் எங்கே இருந்தீர்கள்?"

"வஞ்சியில் தான் இருந்தேன். ஆபுத்திரா, நான் இத்தனை நாட்களுக்குத் தலைமறைவாக இருக்க வேண்டும் என்று முடிவு செய்து விட்டால் யாராலும் என்னைக் கண்டு பிடிக்க முடியாது. மாறு வேடத்தில் வஞ்சியிலேயே இருந்து கொண்டு நடப்பவைகளை என் அந்தரங்க ஒற்றர்கள் மூலம் அறிந்து வந்தேன். நான் எதிர் பார்த்த மாதிரியே என்னைத் தேட உன்னை நியமித்ததோடு மட்டுமின்றி என்னை நீ கண்டு பிடித்து விட்டால் உன் மீதான தண்டனை நீக்கப் படும் என்று

பரணர் ஒப்புக் கொண்ட செய்தி எனக்குக் கிடைத்தது. என் ஒற்றர்கள் அதையடுத்து உன்னைக் கண்காணித்தார்கள். நீ என் அரண்மனைக்குச் சென்றது, இளங்கோவைச் சந்தித்தது ஆகியவற்றை நான் அறிந்தேன். அதற்கு மேல் உனக்குச் சிரமத்தைத் தரக் கூடாது என்று கருதிய நான், நீ பரணர் மகளைச் சந்திக்கச் செல்வதாக அறிந்ததுமே நாடகத்தின் இறுதிப் பகுதியை நடத்தினேன். கொடுமணத்தில வாணியின் தந்தை வணிகம் நடத்துவதையும், அவரது மகள் வாணி பூங்கொடியின் உயிர்த்தோழி என்பதையும் அறிந்து அவளை கொடுமணத்திற்கு வரும்படி அழைத்தால் துணைக்கு நீயும் வருவாய என்று கருதி, வாணி எழுதுவது போல் ஓர் ஓலையை எழுதி பூங்கொடிக்கு அனுப்பி விட்டு, நான் வஞ்சியிலிருந்து உடனடியாக கொடுமணத்திற்கு வணிகர் வேடத்திலேயே வந்து வாணியையும் அவளது தந்தையையும் சந்தித்து விவரங்களைக் கூறிவிட்டு இந்த அங்காடிக்கு வந்தேன். பூங்கொடியும் நீயும் நான் எதிர்பார்த்த மாதிரியே இங்கு வந்தீர்கள். பிறகு நடந்தது உனக்கே தெரியும். நீ என்னை அரண்மனைக்கு அழைத்துச் சென்று நிறுத்தி விட்டால் தண்டனையிலிருந்து நீ விடுபடுவாய்."

மன்னனின் விவரத்தைக் கேட்டுப் பரவசமடைந்த ஆபுத்திரன் "தெய்வம் கூட வேண்டிக் கொண்டால்தான் வரம் தரும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். பரிபூரண பக்தியை செலுத்தினால் தான் இறைவனின் அருள் கிடைக்கும் என்று சொல்வதையும் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால் கேட்காமல் - எந்த பக்தியையும் காட்டாமல் கிடக்கும் எனக்கு அருள் தரும் தாங்கள் இறைவனைக் காட்டிலும் உயர்ந்தவர் பிரபு. என் மீது தங்களுக்கு இவ்வளவு பரிவு ஏன்?" என்று நாதழுதழுக்கக் கேட்டான்.



"என்னை உயர்த்தியும் உன்னைத் தாழ்த்தியும் பேசுவது தவறு ஆபுத்திரா. நீ நாட்டிற்குச் செய்யும் சேவையும் உன் தர்மமும் தான் உன்னைக் காப்பாற்றுகின்றன"

சிறிது நேரம் யோசித்து விட்டு "மன்னவா, ஐம்பெருங் குழு என்னை அரச துரோகி என்று கூறி குற்றவாளியாக்கியது சரியா?" என்று கேட்டான்.

"என் அந்தரங்க ஒற்றன் ஐம்பெருங்குழுவின் அனைத்து விவாதங்களையும் என்னிடம் சொன்னான். அமைச்சர், சேனாதிபதி, சஞ்சயன், நீலன் ஆகியோர் உன் சேவைகளை எடுத்துச் சொல்லி உனக்கு தண்டனை விதித்தது சரியல்ல என்று கூறியபோதும் பரணர் அதை ஏற்காமல் தனது விசேஷ அதிகாரத்தைப் பயன் படுத்தி குறைவான தண்டனையாக மாற்றியிருக்கிறார். அது சரி தான். ஆனால் பிரச்சனை உனக்கு வழங்கப் பட்ட தண்டனையைப் பற்றியல்ல. உன்னைக் குற்றவாளியாக ஆக்கியது பற்றியது. உன் நடவடிக்கைகளை சேர நாட்டு நீதிக்குப் புறம்பானது என்றும் பொது நீதிக்கு வேண்டுமானால் சரியாக இருக்கலாம் என்றும் நீதியைப் பிரித்து பரணர் முடிவு செய்தது சரியல்ல. நீதி என்பது எங்கேயும் எப்போதும் பொதுவாக இருப்பதில் தான் அதன் சிறப்பு இருக்கிறது. மனிதர்கள் பொதுவானவர்களாக இருக்கும் போது நீதியும் பொதுவானதாகத் தானே இருக்க வேண்டும்? சேர நாட்டிற்கென்று நீதியை தனியாகப் பிரித்துக் கொண்டு அதன் அடிப்படையில் பிரச்சனைகளை ஆராய்வது சரியல்ல. வெள்ளைத் தீவில் உனது அணுகுமுறை முழுவதும் பொது நீதிக்கு உட்பட்டது. மிகவும் கண்ணியமான அணுகுமுறை. இல்லையென்றால் நீ எனக்கு ஓலையை அனுப்பினாயே அதை நான் ஏற்றுக் கொண்டிருப்பேனா? சேரநாட்டின் ஆதாயத்தை

மட்டும் கருத்தில் கொண்டிருந்தால் உன் கோரிக்கையை ஒதுக்கி விட்டு வெள்ளைத் தீவுக்கு படைகளை அனுப்பியிருக்க மாட்டேனா? பங்களன் திருந்துவதற்கு நான் வாய்ப்பளிக்கும் போது தாவூத் திருந்த நீ முயற்சி செய்தது எப்படித் தவறாகும்? கெட்டவர்கள் திருந்த வேண்டுமென்றால் அவர்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டும். சில நேரங்களில் அவர்களை மன்னிக்கவும் தயாராக வேண்டும். இலங்கை வேந்தன் தெரிந்தே குற்றம் புரிந்தவன் அதைத் தட்டிக் கேட்டவர்களையும் சரி, சுட்டிக் காட்டி வேண்டிக் கொண்டவர்களையும் சரி அவன் உதாசீனப் படுத்தி போருக்கு வித்திட்டு போரில் அனைவரையும் இழந்து அவனும் தோற்றான். அந்த நேரத்தில் ராமன் அவனை இன்றைக்குப் போய் விட்டு நாளைக்கு வா என்று கூறினானே எதற்காக? அந்த ஒருநாள் பொழுதிலாவது அவன் தவற்றை உணர்ந்து திருந்தக் கூடும் என்ற எண்ணத்தில் வாய்ப்பளித்தான் ராமன். இது எத்தனை உயர்ந்த பண்பு? அரக்கனிடம் ராமன் காட்டிய பண்பை கொள்ளையரிடம் காட்ட முயற்சிப்பது தவறாகி விடாது ஆபுத்திரா. சேர நாடு வாழவேண்டும் என்பதல்ல என் நோக்கம். தர்மம் வாழ வேண்டும். இது தான் எனது குறிக்கோள். என் தவமே அது தான். அந்த விதத்தில் பரணரின் முடிவு தவறானது. அதை நான் வெளிப்படையாக எடுத்துரைப்பது இம்பெருங்குழுவிற்கு கண்ணியக் குறைவைக் கொடுக்கும். கண்ணியம் மிகுந்த பரணரின் கௌரவத்திற்கும் இழுக்காக அமையும். ஆகவே தான் நான் நாடகமாடினேன்."

"தாங்கள் தர்மவானாகவே இருப்பதால் தான் தங்கள் நாடகத்தில் எந்த இடத்திலும் பங்கம் ஏற்படவில்லை. பிரபு. தாங்கள் காணாமல் போய் விட்டதாக இளங்கோவடிகளிடம்



தெரிவித்து மன்னர் எங்கே போயிருப்பார் என்று நான் கேட்ட போது அவர் என்ன கூறினார் தெரியுமா? 'மன்னன் எதையோ வெளிப்படுத்தத் தான் தன்னை மறைத்துக் கொண்டிருக்கிறான். அவன் எதிர்பார்ப்பது நடக்கும் போது அவன் வெளிப்பட்டு விடுவான்' என்றார் அது தான் நடந்திருக்கிறது."

"இளங்கோ துறவியானது உண்மையிலேயே சேரநாட்டிற்கு இழப்பு ஆபுத்திரா. எனக்குப் பதில் அவர் அரசு கட்டில் ஏறியிருந்தால் சேர நாடு இன்னும் பிரகாசமாகியிருக்கும்" என்றான் செங்குட்டுவன்.

இதே செங்குட்டுவனை அரிதாகக் கிடைக்கும் வலம்புரிச் சங்கு என்று இளங்கோவடிகள் கூறியதை எண்ணிப் பார்த்தான் ஆபுத்திரன். இவர்களைப் போன்ற அபூர்வ சகோதரர்கள் இருக்க முடியுமா என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்ட அவன் ராமலட்சுமணர்கள் கூட இவர்களுக்கு ஈடாக முடியாது என்று கருதினான்.

இந்நிலையில் பூங்கொடி, வாணி, அவளது தந்தை ஆகியோர் அங்குவந்தார்கள். இரு பெண்களும் மன்னனின் கால்களைத் தொட்டு வணங்கினார்கள்.

"உனக்கு தொல்லை கொடுத்து விட்டேனா அம்மா" என்று பூங்கொடியிடம் பரிவாகக் கேட்டான் மன்னன்

"இதென்ன வார்த்தை பிரபு?" - என்று பரவசக் குரலில் நெகிழ்ந்த குரலில் கேட்டாள் பூங்கொடி

"உன் அனுமதியில்லாமல் என் நாடகத்தில் உன்னைப் பயன் படுத்தியது தவறு மகளே. என்னை மன்னித்து விடு"

என்று மன்னன் கூறியதும் பூங்கொடியின் கண்களிலிருந்து நீர் பெருகியது.

அதைக் கண்ட மன்னன் "வாணி! உன் தோழிக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டான்.

"மன்னவா, நடிகனுக்கில்லாத உரிமை யாருக்கு உண்டு? இதற்குப் போய் அவரிடம் மன்னிப்பு கோரினால் அவன் மனம் பாடுபடாதா? அதோடு ஆபுத்திரரையும் பூங்கொடியையும் வேறு வேறாக நாங்கள் நினைப்பது போலல்லவா தெரிகிறது? ஆகவே தான் அவள் அழுகிறாள்." என்றாள் வாணி.

"ஓ. விஷயம் அப்படி ஆகிவிட்டதா?" என்ற மன்னன் பொன்னாபரணக் கடையை ஒரு முறை நோட்டம் விட்டு தங்கச் சிலம்புகள் இரண்டை எடுத்தான். மாற்று குறையாத தங்கத்தால் ஆன அச்சிலம்பில் அரிய வேலைப்பாடுகள் இருந்தன. அதைச் சிறிது நேரம் பார்த்து விட்டு "இந்தா மகனே. இந்தச் சிலம்பைப் பெற்றுக் கொள். இது சாதாரணமான சிலம்புகளல்ல. வேறெங்கேயும் கிடைக்காத வேலைப்பாடுகள் அமைந்த பசும் பொன்னால் உருவாக்கப் பட்டச் சிலம்புகள். இச்சிலம்புகளின் ஒருபக்கம் அரிய வேலைப்பாடுகள் செய்யப் பட்டு மறுபக்கம் மாணிக்கப்பரல்கள் பதிக்கப் பட்டுள்ளன. இவற்றை வாங்கி உன் கால்களில் அணிந்து கொள்." என்று சொல்லி கொடுத்தான்.

"இவற்றைப் பெறும் அருகதை எனக்கு உண்டா பிரபு?" என்றாள் பூங்கொடி.

"ஆபுத்திரனுக்குக் கூட இத்தகைய பரிசை நான் வழங்கவில்லை. பெற்றுக் கொள் அம்மா."



பூங்கொடி அச்சிலம்புகளை வாங்கி கண்களில் ஒற்றிக் கொண்டு ஆபுத்திரனிடம் தந்தாள். அதை அவள் கால்களில் சூட்டினான் அவன்.

"மகிழ்ச்சி பூங்கொடி. உன் வாழ்வு மேன் மேலும் மலரட்டும். நீ, உன் தோழி, அவரது தந்தை ஆகிய எல்லோரும் வஞ்சிக்குப் புறப்படுங்கள். அதற்கான ஏற்பாடுகளை ஒற்றர்கள் செய்திருக்கிறார்கள். நானும் ஆபுத்திரனும் பிறகு வருகிறோம்."

இவ்வாறு மன்னன் கூறியதும் மூவரும் சென்றார்கள்.

இரண்டு நாழிகைகள் கழித்து சேர மன்னனும் ஆபுத்திரனும் வஞ்சிக்குச் சென்றார்கள்.

வஞ்சிக்குச் சென்றதும் மன்னன் எதிர்பார்த்த மாதிரியே அனைத்தும் நடந்தன.

ஒருவாறு விடைபெற்று தன் இல்லத்திற்குப் போனான் ஆபுத்திரன்.

அங்கே இருந்த நபரைக் கண்டதும் அவனது கண்கள் விரிந்தன வியப்பால்.



# அத்தியாயம் இருபத்தொன்று



## *அன்பின் அலைகள்*

பூங்கொடியும் மற்றவர்களும் அகன்ற பின், "ஆபுத்திரா, காணாமல் போன நான் கிடைத்து விட்டேன். என்னை நீ எப்படிக் கண்டு பிடித்தாய் என்று ஐம்பெருங்குழு கேட்டால் நீ என்ன பதில் சொல்லுவாய்?" என்று கேட்டான் சேர மன்னன்.

"வஞ்சிக் கோட்டையில் நீங்கள் அயல்நாட்டு ஒற்றன் ஒருவனை பார்க்கிறீர்கள். அவன் அபாயகரமானவன் என்பதை உணர்ந்த நீங்கள் வேறு யாரையும் நாடாமல் நீங்களாகவே தொடர்கிறீர்கள். போகும் வழியில் இளங்கோவடிகள் கண்ணில் படடு விடவே அவரிடம் சம்பிரதாயத்திற்குப் பேசி விட்டு ஒற்றனைப்



பின்தொடர்கிறீர்கள். அவன் கொடுமணத்திற்கு வருகிறான. இதற்கிடையில் பூங்கொடியைச் சந்திக்க வரும் நான் இந்த ஓலைச் செய்தியைக் கேட்டு சந்திக்கிறேன். அவனுக்குத் தெரியாமல் பின் தொடர்கிறேன். கொடுமணத்திற்கு வருகிறேன். அங்கே நீங்கள் ஒற்றனுடன் போர் புரிவதைக் கண்ட நான் உதவிக்கு வருகிறேன். உங்களை விலக்கிவிட்டு அவனோடு போர் புரிகிறேன். இதனால் அங்காடியில் குழப்பம் உண்டாகிறது. அதைப் பயன் படுத்தி ஒற்றன் தப்பி விடுகிறான். அவனைப் பிடிக்க காவலர்களுக்கு கட்டளையிட்டு விட்டு தங்களுடன் நான் வஞ்சிக்குத் திரும்புகிறேன்." என்றான் ஆபுத்திரன்.

"கௌரவமாகவும் கண்ணியமானதாகவும் இருக்கிறது அப்படியே சொல்லிக் கொள்வோம்." என்று மன்னவ சொன்னதும் ஆபுத்திரன் தன் வாள் எடுத்து உடலில் சில இடங்களில் கீறிக் கொண்டான். கீறல் விழுந்த இடங்களிலிருந்து ரத்தம் கசிந்தது.

"இதென்ன ஆபுத்திரா, நாடகத்தை மற்றவர்கள் நம்ப வேண்டும் என்பதற்காக காயங்களை நீ உண்டாக்கிக்கொள்ள வேண்டுமா?" என்று கேட்டான் மன்னன்.

"இதெல்லாம் காயங்களா மன்னவா? அதோடு ஒருதுளி ரத்தம் சிந்தாமல் வெள்ளைத் தீவிலிருந்து என்னைக் காப்பாற்றிய தங்களுக்காக ஒருசில துளிகளை நான் இப்போது சிந்துவது சரியானது தான். அதை விடுங்கள் பிரபு. ஒற்றனைப் பற்றிப் பேசிய போது தான் ஒரு விஷயம் என் நினைவிற்கு வந்தது. வஞ்சிக் கோட்டை மிளகுச் சந்தையில் நான் ஓர் ஒற்றனைப் பார்த்தேன்." என்று கூறி தான் பார்த்த ஒற்றனைப பற்றி விவரித்தான்.

"உனக்குத் தெரிந்து விட்டது அல்லவா? பிறகு என்னிடம் எதற்காகச் சொல்கிறாய்? அதையெல்லாம் நீயே கவனித்துக் கொள். நாம் இப்போதே புறப்படலாம். அப்போது தான் விடியும் வேளையில் வஞ்சிக்குச் செல்லலாம்."

"சரி மன்னவா." என்றான் ஆபுத்திரன்.

ஐம்பெருங்குழுவிடம் ஆபுத்திரன் மன்னனை அழைத்து வந்த 'கதை'யைக் கூறிய போது அதை நம்புவதைத் தவிர வேறு வழியில்லாமல் போயிற்று. அதோடு மன்னனைப் பார்த்து விட்டபின் அச்சம்பவம் பற்றிய முக்கியத்துவம் குறைந்து போயிற்று. ஏற்கனவே குழு முடிவெடுத்திருந்தபடி ஆபுத்திரன் மீதான தண்டனை ரத்து செய்யப்பட்டது.

அனைத்துப் பிரச்சனைகளும் ஓய்ந்து விட்ட நிலையில் தன் இல்லத்திற்குச் சென்றான். ஆபுத்திரன். தனது இல்லத்து உள் கூடத்தில் ஒய்யாரமாக அமர்ந்திருந்த நபரைக் கண்டதும் அவனது கண்கள் வியப்பால் விரிந்தன.

வெள்ளைத் தீவின் கொள்ளையர் தலைவனின் மகளான சௌமியகுமாரியைக் கண்டதும் பெரிதும் வியந்த அவன் அவளது கோலத்தைக் கண்டு ரசித்தான். கொள்ளையனான பங்களனின் சாயல் சிறிதும் இல்லை. மாறாகத் தாயின் சாயல் தான் அவளிடம் பூரணமாக இருக்க வேண்டும் என்றும் அவளது தாய் பேரழகியாக இருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றும் விதத்திலும், அவளது மாசற்ற முகம் பொன்னிறம் பெற்றுத் தன்னிகரற்றதாய், எடுப்பான நாசியும் அளவெடுத்துச் செதுக்கியது போன்ற வழுவழுத்த உதடுகளும், வளைவான நீண்ட புருவமும், சிமிட்டும் வண்டுக் கண்களும் அவளது முகத்திற்கு சிறப்பு சேர்க்க வந்தது போல் இருந்தன.





**சௌமியகுமாரி**

கூந்தலை அள்ளி முடி கூடாமல் அவிழ்த்து விட்டிருந்தபடியால் காடு போல பரவ விட்டிருந்த கூந்தலின் மெல்லிய இழைகள் அவளது கழுத்துப் பகுதியில் அணைந்து பார்ப்பவர்களை உன்மத்தம் கொள்ள வைக்கக் கூடியதாய் இருந்தது. நெற்றியின் வகிட்டில் பெரிதான தங்கப் பதக்கமொன்று நெற்றிக்குச் சிறப்பு பரிசாக அமைந்தது போல் விளங்க அவளது கைகளில் இரண்டு முத்து வளையல்களும் காந்தள் மலரைப் போன்ற கைவிரலொன்றில் மூன்று விதமான தங்க மோதிரங்களும் விளங்கிய விதம் தேவதையொன்றின் அபூர்வ அழகிற்கு எடுத்துக் காட்டாக இருந்தது. புதுமையானதும் புதியதுமான ஆடையை அவள் அணிந்திருந்த விதம் எளிமையிலும் இணையற்ற அழகை வாரியளிக்க முடியும் என்பதைப் பறைச் சாற்றியது.

இப்படிப்பட்ட எழிலார்ந்த சிறப்பழகை ஓரிரு கணங்களில் கண்டு ரசித்த ஆபுத்திரன் "இங்கேயும் வந்து விட்டாயா?" என்றான் புன்முறுவலோடு.

ஏறக்குறைய வெள்ளைத் தீவை விட்டு வெளியேறிய பின் அவளை அவன் மறந்து விட்டிருந்தான். இன்னும் சொல்லப் போனால் அவனது மனதிலிருந்தே அவள் மறைந்து போய் விட்டிருந்தாள். அவள் தர்மத்தை ஆதரித்துத் தன்னைக் கவர்ந்த அபூர்வப் பெண்ணாக இருந்தாலும் தன் இதயத்திலிருந்த பூங்கொடியை நீக்கி விட்டு அங்கே அவளை அமரச் செய்யும் எண்ணம் அவனிடம் உருவாகவில்லையாதலால் அவளது அன்பு வார்த்தைகளும் ஆசை உணர்வுகளும் அவனது மனதில் பதியவில்லை. அந்த நிலையில் திடீரென அவள் அங்கே வந்திருந்ததால் அவளைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் நினைவூட்டிக் கொண்டு இவ்வாறு வினவினான் அவன்.



"நான் இங்கே எப்படி வந்தேன் என்று நீங்கள் கேட்கவே இல்லையே?" என்று எழுந்து நின்று அவனிடம் கேட்டு விட்டு ஓரக் கண்ணால் அவனை நோக்கினாள்.

"உன் திறமையும் சாமர்த்தியமும் எனக்குத் தெரியும் சௌமியகுமாரி. ஆகவே நான் அந்தக் கேள்வியை நான் கேட்கவில்லை" என்றான் ஆபுத்திரன்.

"உங்களுக்குத் தெரிந்தது என் திறமையும் சாமர்த்தியமும் மட்டும் தானா? வேறு எதுவுமே இல்லையா?" என்று கள்ளத் தனம் சொட்டும் குரலில் கேட்டாள் சௌமியகுமாரி.

அவள் எதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறாள் என்பது அவனுக்குத் தெரிந்தே இருந்தது. ஆகவே "சௌமியகுமாரி, உன் அன்பை ஏற்க இயலாது என்பதை நான் உனக்குப் புரிய வைத்து விட்டதாகவே நினைக்கிறேன்." என்றான் சங்கடமான குரலில்.

"உண்மைதான். ஆனால் ஏற்க முடியாது என்று நிராகரிக்கும் அளவிற்கு என் அன்பில் என்ன குறை இருந்தது என்பது தான் எனக்குப் புரியவில்லை."

"ஒரு விஷயம் நிராகரிக்கப் படுகிறதென்றால் அதற்கு குறை இருக்கிறது என்று அர்த்தமல்ல சௌமியகுமாரி. உன் அன்பு அப்பழுக்கற்றது."

"அப்பழுக்கற்றதை ஏற்க மறுப்பவர்களை என்னவென்று அழைப்பது?"

"ஒரே உறையில் எப்படி இரண்டு வாட்கள் இருக்க முடியாதோ அதேபோல ஒரு இதயத்தில் இரண்டு பெண்கள் அன்பு செய்ய முடியாது."

"வாள் விஷயம் வேண்டுமானால் சரியாக இருக்கலாம். பெண்கள் விஷயத்தில் அப்படியில்லை. ஒரு இதயத்தில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் குடியிருக்க முடியும்."

"குடியிருக்கலாம். அன்போடு இருக்க முடியாது."

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"அன்பு என்பதின் சிறப்பே அதுதான் சௌமியகுமாரி. ஒரு பெண்ணின் மனமோ அல்லது ஆணின் மனமோ உண்மையான அன்பை ஒருவர் மீது தான் வைக்க முடியும். ஒருவருக்கு மேற்பட்டவர்கள் மனதில் இருக்கலாம். மாளிகைக்கும் வரலாம். ஆனால் அன்போடு இருக்க முடியாது. அன்பு வரையறையை மீறும் போது அதன் சிறப்பை இழந்து ஆசையாக மாறி விடுகிறது"-

"பெரிய தத்துவ மேதையைப் போலப் பேசுகிறீர்கள்!" என்று சொல்லி சிறிது நேரம் வரை மௌனமாய் இருந்த அவள் "உங்கள் காதலி யார்?"- என்று கேட்டாள்.

"புலவர் பரணரின் மகள் பூங்கொடி."

"புலவரது பூங்கொடி நல்ல இடத்தில் தான் படர்ந்திருக்கிறது. புலவரும் மகளும் பாக்கியசாலிகள் தான்." என்று சொன்ன அவள் "உங்கள் இதயத்தில் பூங்கொடி இருப்பதால் தான் என்னை ஏற்க மறுக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"உண்மை அன்பு வேறொருவரை அனுமதிக்காது."

"வீரரே. உங்கள் இதயத்தில் பூங்கொடி இல்லையென்றால் நான் இருக்க முடியுமா?"



"இக்கேள்வி எனக்கு விளங்கவில்லை."

"ஏன்?"

"பூங்கொடி இருக்கும் போது இல்லை என்று வாதாட நினைப்பது முறையற்றது."

"உண்மை தான் வீரரே. நானிங்கே எதற்காக வந்திருக்கிறேன் தெரியுமா?"

"சொல்."

சொன்னாள் அவள்.

ஸ்தம்பித்தான் ஆபுத்திரன்.



சேரன் செங்குட்டுவன் தனக்கு முன்னால் தேவேந்திரனைப் போல வந்து நின்ற போது பிரமிப்பில் ஆழ்ந்து போய் பேச்சற்றுக் கிடந்த பங்களன் நீண்ட நேரம் கழித்தே கண்விழித்தான். கண் விழித்த போது செங்குட்டுவன் மட்டுமின்றி ஆபுத்திரனும் மாயமாய் மறைந்து விட்டதை உணர்ந்து ஆவேசத்திற்கு ஆளாகி உபதலைவர்களையெல்லாம் அழைத்து கண்டபடி திட்டித் தீர்த்தான். "இருவரும் செல்லும் வரை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தீர்களா! முட்டாள்களா! மடையர்களா!" என்று நிதானமின்றி வார்த்தைகளைக் கொட்டினான் "உங்களையெல்லாம் கழுவில் ஏற்றினால் தான் எனக்கு ஆத்திரம் தீரும்" என்று பொருமினான்.

அவனது திட்டுகளுக்கு ஆளாகியிருந்த உபதலைவர்கள் உள்ளுக்குள் அவனை எள்ளி சிரித்துக் கொள்ளவே செய்தார்கள். ஆணையிட வேண்டிய அவனே சப்த நாடியும் அடங்கியது போல அசைவற்று நின்று விட்டு பழியை மற்றவர்கள் மீது சுமத்திய அவனை எண்ணிப் பச்சாதாபப் பட்டார்கள். ஏற்கனவே செங்குட்டுவன் வந்த போது பங்களன் மட்டுமின்றி அங்கிருந்த எல்லா கொள்ளையருமே வாயடைத்துத் தான் போயிருந்தார்கள். ராவணனும் ஒரு சிலரும் சுயநினைவோடு இருந்தாலும் பங்களன் ஏதும் சொல்லாததால் எந்த செயலிலும் இறங்கவில்லை. அதோடு தங்களைக் காப்பாற்றிய ஆபுத்திரனையும் அவனது மன்னனையும் தாக்க அவர்களது மனம் இடம் கொடுக்கவில்லை.

நீண்ட நேரம் வரை உபதலைவர்களை வசைபாடி விட்டுத் தன் அரண்மனைக்கு வந்த பங்களன் நடந்ததை எல்லாம் நம்பவும் முடியாமல் ஜீரணிக்கவும் முடியாமல் திணறினான். எந்த செங்குட்டுவனுக்காக பல்வேறு சதிகள் நடத்தியிருந்தானோ அச்சதிகளாலெல்லாம் கொண்டு வர முடியாத செங்குட்டுவன் தானாக வந்து நின்ற போது கோட்டை விட்டு விட்டு நின்றதை எண்ணி எண்ணி கொந்தளித்தான். ஆகா! எத்தனை அரிய சந்தர்ப்பம்! தாவூத் தானே சிக்கிய மாதிரி தானே செங்குட்டுவனும் தானே வந்தான்? தாவூதை கொலை செய்ய முடிந்த தன்னால் செங்குட்டுவனை மட்டும் எப்படி விட்டுவிட முடிந்தது? அப்படி என்ன வசீகரம் செங்குட்டுவனிடமிருந்து கொண்டு தன்னைத் தடுத்து விட்டது? இது போன்ற சந்தர்ப்பம் இனி எத்தனை ஜென்மம் எடுத்தாலும் கிடைக்காதே? அவனை



மட்டும் வெட்டிப் போட்டிருந்தால் அல்லது பிடித்து வைத்திருந்தால் தன் கனவுகளெல்லாம் நனவாகி இருக்கலாமே! அப்படியின்றி கஷ்டப்பட்டு எடுத்த முயற்சிகளும் சதிகளும் வீணாகி விட்டதே! ஆபுத்திரனும் போய் விட்டானே? இனி சேரமன்னனை எப்படி வீழ்த்துவது? தன் கனவுகளெல்லாம் கனவுகளாகத் தான் இருக்கப் போகிறதா? எத்தனை முட்டாளாகி விட்டேன் நான்! என்று புலம்பி அடிபட்ட சிங்கம் போல் நடந்து கொண்டிருந்தான் பங்களன்.

அவனது கொந்தளிப்பைக் கண்டு மனம் பொறுக்காத உபதலைவனான அமீர் அவனைச் சாந்தப் படுத்த விரும்பி "தலைவரே, கோபத்தைத் தணிக்க சுகவனம் இருக்கிறது போய்விட்டு வாருங்கள்." என்றான்.

அவனை எரித்து விடுவது போல பார்த்த பங்களன் "சுகவனமா? அங்கா போக வேண்டும் நான்? அமீர், நீ உடனே போய் சுகவனத்தை இடித்துத் தரைமட்டமாக்கிவிட்டு அந்த பவானியின் தலையைக் கொய்து என்னிடம் கொண்டு வா: போ." என்று சீற்றச் சொற்களைச் சிலிர்த்து கொட்டினான்.

அமீர் அங்கிருந்து போய்விட்ட கொஞ்ச நேரத்தில சுகவன நினைப்பு அவனுக்குச் சுகமாக இருந்தது. பவானியையும் அவள் 'விரத'த்தையும் எண்ணிக் கொண்டான். அவனது நரம்புகள் முறுக்கேறின. சுகவனத்தை நோக்கிச் சென்றான்.

சுகவனத்துச் சுந்தரியான பவானி தன்னை நோக்கி வந்து கொண்டிருந்த பங்களனையும் அவனது வேகத்தையும்

கண்டாள். "இந்த ஆடவர்களுக்கு வேலையே இல்லை. சந்தோஷமும் அதிகமானாலும் சரி, துக்கம் அதிகமானாலும் சரி பெண்கள் தான் இவர்களுக்குப் போக்கிடம்." என்றாள் பவானி பணிப்பெண்ணிடம்.

"பெண்கள் நிலை எங்கேயும் இது தானே அம்மா" என்று பணிவோடு கூறினாள் பணிப்பெண்.

"எனக்கது பொருந்தாது" - என்றாள் பவானி.

"இத்தனை நாட்களாக தாங்கள் பங்களரின் போக்கிடமாகவும் போகப் பொருளாகவும் தானே இருந்தீர்கள்? அவரது இஷ்டத்திற்கெல்லாம் ஈடுகொடுத்து அவருக்கு இரையாகித் தானே வந்தீர்கள்?" என்றாள் பணிப்பெண்.

"நான் யார் தெரியுமா? இலங்கையின் இளவரசி. இலங்கை சிம்மாசனத்தில் அமர்ந்து ஆண்களை அடிமைகளாக ஆக்கி என் காலின் கீழ் விழுந்து கிடக்கச் செய்யும் அதிகாரம் படைத்தவள். கொள்ளைக்கார நாய்களுக்கு உடலை படைக்க நான் பிறக்கவில்லை."

"பின் எதற்காக இத்தனை நாட்களாக அவருக்கு அடிமையாக இருந்தீர்கள்?"

"அது தான் விதியின் விளையாட்டு. அரியணையில் அமர வேண்டிய என்னை அந்த விதி அலை கடலில் வீசி விட்டது. கடலிலேயே நான் மாண்டிருக்கலாம். ஆனால் அதே விதி இக்கடல் கொள்ளைக்காரனிடம் சிக்க வைத்து விட்டது. அவன் என்னைத் தன் இரையாக்கி இச்சிக்கிறான். பணிப் பெண்ணே, நான் வெறும் அரச குமாரி மட்டுமல்ல. போர்க்கலையைக் கற்றவள் வாள்முனையில் பலபேரை



மடக்கிப் போரிடக் கூடியவள். என் திறமைகளை தன் கொள்ளையர்களுக்குப் பயன்படுத்திய பங்களன் எனக்கு ஒரு கௌரவமான அந்தஸ்தைத் தந்திருக்கலாம். ஆனால் அச்சுயநலக்காரன் என்னைப் போகப் பொருளாக்கி என்னிடம் மிருகத்தை விட கேவலமாக நடந்து கொள்கிறான் என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை."

"சகித்து கொள்வது தான் உங்கள் விதி அம்மா. வீணாக அவரிடம் பழையகதைகளைச் சொல்லி முரண்டு பிடிக்காதீர்கள். இங்கே அவர் வைத்தது தான் சட்டம் யாரும் அவரைத் தட்டிக் கேட்க முடியாது. இங்கே அவருக்கு ஆண் பெண் என்ற வித்தியாசம் கிடையாது. தன்னிடம் எதிர்ப்பு காட்ட முயற்சித்தாலோ சதி செய்ய நினைத்தாலோ பெண்களை வெட்டித் துண்டாக்கி முதலைகளுக்கு இரையாகப் போட்டு அவை சாப்பிடுவதைப் பார்த்து ரசிப்பார் அல்லது பெண்களை நிர்வாணமாக்கி தீவில் ஓடவைத்து நாய்களை ஏவி கடிக்கச் செய்து ரசிப்பார். ஆகவே விபரீத எண்ணங்கள் வேண்டாம் அம்மா. அவருக்கு அனுசரித்து போவது தான் உங்களுக்கு நல்லது."

"எத்தனை நாட்களுக்கு? அவன் சாகும் வரையிலா? முடியாது பெண்ணே. முடியாது. பெண்கள் போகப் பொருட்கள் அல்ல என்பதை அவன் உணர வேண்டும் அதை நான் செய்வேன்."

" அரசகுமாரி, நீங்கள் போகப் பொருட்கள் அல்ல என்பது பங்களனுக்கு மட்டுமல்ல எல்லா ஆடவர்களுக்கும் தெரியும். ஒரு சிலர் தான் பெண்களை மதிக்கிறார்கள். உயர்த்தவும் செய்கிறார்கள். ஆனால் பெரும்பாலானவர்கள் பெண்களை மதிக்கவோ அவர்களை உயர்த்தவோ

முன்வருவதில்லை. தங்கள் அதிகாரத்தையும் பயத்தையும் பயன்படுத்தி அடிமைப் படுத்துவதைத் தான் செய்கிறார்கள். அந்தப் புரம் என்பது என்ன? அடிமைப் பெண்களின் இருப்பிடம். போகப் பொருட்களின் சொர்க்கம்" -

"அப்படியானால் இது தான் சரி."

"எது?"

"பிணைய நீ சொன்ன காரியங்களையெல்லாம் செய்ய முடியுமா?"

"நீங்கள் சொல்வது?"

"பங்களனைக் கொன்று விட்டால் அவனால் என்னை அடிமைப் படுத்த முடியாதல்லவா?"

"இது ஆபத்தானது. வேண்டாம அரசகுமாரி."

"ஆபத்தில் தான் லட்சிய வெற்றிகள் வெளிப்படும். பங்களனைக் கொன்று வெள்ளைத் தீவுக்கு நான் ராணியாவேன். அந்தப்புரம் என்பது எங்கிருந்தாலும் அதை அழிப்பதையும், பெண்களை உயர்த்துவதையும் தான் இனி என் வாழ்க்கை லட்சயங்களாகக் கொள்வேன்." நீ போய் அவனை உபசரித்து வா. நான் போய் சில ஏற்பாடுகளைச் செய்கிறேன்." என்று கூறி விட்டு தன் அறைக்குச் சென்றாள் பவானி.



பெருத்த ஆவேசத்துடன் பங்களன் மூச்சிறைக்க மஞ்சத்தில் வந்து அமர்ந்த போது "இவனை இப்படியே



கழுத்தைப் பிடித்து நெறித்து விட்டால் என்ன?' என்று தோன்றியது பவானிக்கு.

"என் நெஞ்சம் பதைபதைக்கிறது பவானி. பெரிய நஷ்டம் வந்து விட்டது எனக்கு." என்று ஆற்றாமையுடன் சொன்னான் பங்களன்.

"நீ செய்யும் காரியங்களுக்கு வேறு என்ன வரும்?" என்று உள்ளுக்குள்ளேயே கேட்டுக் கொண்ட அவள் "என்ன ஆயிற்று உங்களுக்கு? என்றைக்கும் இப்படி நீங்கள் இருந்து நான் பார்க்கவில்லையே?" என்று வினவினாள் போலியான அன்புடன்.

"சுகவனத்திலேயே இருந்து சுகம தரும் உனக்குப் பல விஷயங்கள் தெரிவதில்லை. சுகம் மட்டுமே உலகம் என்று கருதி எனக்குச் சொர்க்க இன்பத்தை அளிப்பவள் நீ. உன்னை போன்றவர்கள் இருப்பதால் தான் பல்வேறு நரக கஷ்டங்களை அனுபவித்து விட்டும் எங்களைப் போன்றவர்கள் உயிர வாழ்கிறோம்." என்றான் அவளது கரங்களைப் பற்றியபடி.

"இன்று தான் உன் வாழ்க்கையின் கடைசி நாள். என்ன வேண்டுமானாலும் உளறிக் கொள்." என்று உள்ளூரச் சொல்லிக் கொண்ட அவள் "மனதை அலட்டிக் கொள்ளாதீர்கள். இங்கே வந்த பின் எலலா நரகங்களையும் நீங்கள் மறந்து விட்டு சொர்க்கத்தைப் பற்றி மட்டுமே எண்ண வேண்டும். அனுபவிக்க வேண்டும்." என்று கூறி மதுக் கிண்ணத்தை எடுத்து அவனிடம் கொடுத்து "அருந்துங்கள் இதை. அமைதியாகுங்கள்." என்றாள்.

மதுவை வாங்கி ஒரே இழுப்பில் வாய்க்குள் அனுப்பிய பங்களன் பவானியை முரட்டுத் தனமாக இழுத்து மஞ்சத்தில்

தள்ளி "இன்று நீ விரதத்தை கடைபிடிக்க வில்லையா?" என்று கேட்டு அவளது முதுகில் தனது உதடுகளை ஓடவிட்டான்.

"காமப் புத்தி உன்னை விட்டு இன்னும் ஓடவில்லையா! இரு இரு. இன்றோடு எல்லாவற்றையும் போக்கடித்து விடுகிறேன்" என்று கருவிக் கொண்ட அவள் அவனுக்குச் சந்தேகம் வராத வகையில் அவனது இழுப்புகளுக்கு இசைந்தாள். எந்த விஷயத்தில் தோற்றாலும் காம விஷயத்தில் மட்டும் என்றைக்கும் தோற்காதவனான பங்களன் மதுவினால் உண்டான போதை அதிகரித்ததும் மிருகமாக மாறி அவளை முரட்டுத் தனமாகப் புரட்டியதுடன் அவளது ஆடைகளை ஆங்காங்கே கிழித்தும் இழுத்துமாய் இம்சைப் படுத்தினான். அவனது உதடுகள் அவளது அங்கங்களில் பல இடங்களில் கடித்தன. "ஐயோ இதென்ன கொடுமை?" என்று அவள் அவஸ்தையில் உண்மையாகவே அலறிய போதும் அதையெல்லாம் அவனால் காதில் வாங்க முடியவில்லை. செங்குட்டுவனையும் ஆபுத்திரனையும் தப்ப விட்டு விட்ட ஆத்திரத்தையெல்லாம் அவள் மீதான காமத்தில் காட்டினான் பங்களன். அவள் செத்தாலும் பரவாயில்லை என்று அபரிமிதமான வெறியோடு எல்லா காம வக்கிரங்களையும் அவளிடம் பிரவேசித்தான். அதீதகாமம் அவனிடம் பெருமூச்சாக வெளிப்பட்டது. அதுதான் சமயம் என்று அவனை விட்டு விலகிய பவானி அவனை மஞ்சத்தில் சாய்வாக அமர்த்தி உடைகளைச் சரிசெய்து மார்பை தடவிவிட்டாள். ஏறக்குறைய தனது ஆடைகள் முக்கால் வாசி கிழிந்து விட்ட நிலையிலும் உடலில் பல இடங்களில் கீறல்களும் ரத்த மின்னல்களும் உண்டாகியிருந்ததைக் கண்ட அவள் இனியும் இவனை விடக் கூடாது என்று கருதி "சற்று



இருங்கள் மதுவைக் கொண்டு வருகிறேன்." என்று உள்ளே போனாள். காயங்களைக் கழுவிக் கொண்டு வேற்றுடைகளை அணிந்து விஷம் கலந்த மதுவைக் கொண்டு வந்து "இந்தாருங்கள். இன்று நீங்கள் ரொம்பவும் சோர்வாகி விட்டீர்கள். மதுவை அருந்தி இளைப்பாருங்கள்." என்று சொல்லி கிண்ணத்தைக் கொடுத்தாள்.

அதை வாங்கிய பங்களனும் கொஞ்சம் கொஞ்சமாக மதுவைக் குடித்த போது ஆறுதலாக இருந்தது. சிறிது நேரத்தில் தலைசாய்ந்தது.

"ஒழிந்தாய் கொடியவனே. இனி உனக்கு சொர்க்கமும் சுகவனமும் கிடைக்காது. கொடிய நரகம் தான். எமதூதர்கள் வந்து அழைத்துப் போகும் வரை காத்திரு" என்று உரக்கவே கூறி விட்டு வெளியே வந்தாள் பவானி.

வெளியே இருந்த பணிப்பெண் நடுநடுங்கினாள்.





## அத்தியாயம் இருபத்திரண்டு



## பவானியின் ஏமாற்றம்

**ப**ணிப் பெண்ணின் அதிர்ச்சியைக் கண்டு எல்லாம் முடிந்து விட்டதாக சர்வ அலட்சியத்தோடு கூறிய பவானி இதர பணிப் பெண்களையும் வரச் சொன்னாள். நடந்த நிகழ்ச்சி பற்றியும் தனது லட்சியம் பற்றியும் தெரிவித்த அவள் இன்றே வெள்ளைத் தீவின் ராணியாக தான் முடிசூடிக் கொள்ளப் போவதாகவும் அதை அறிவிக்க உபதலைவர்களை யெல்லாம் உடனடியாக கோட்டைக்கு அழைத்து வரும் படியும் கட்டளையிட்டாள்.

பணிப்பெண்கள் பெரிதும் குழம்பிப் போனாலும் என்னதான் நடக்கிறது என்று பார்ப்போம் என்ற ஆர்வத்தில் காரியத்தில் இறங்கினார்கள். கோட்டைக்குச் சென்ற பவானி



பூரண கவசங்களை அணிந்து கொண்டதோடு மட்டுமின்றி நீண்ட வாளையும் இடையில் செருகிக் கொண்டு அந்தப்புரத்திற்குச் சென்றாள். தான் தான் வெள்ளைத் தீவின் ராணி என்றும் பங்களன் மரணமடைந்து விட்டதாகவும் கூறிய அவள் அந்தப்புரப் பெண்களைப் பார்த்து "இனி நீங்கள் யாருக்கும் அடிமையில்லை. பங்களனின் போகப் பொருளுமில்லை. சுதந்திர வாசிகள். உங்கள் அனைவரையும் அடிமை மாளிகையான இந்த அந்தப்புரத்திலிருந்து விடுவிக்கிறேன். நாளை இந்த அடிமைப் புரம் அழிக்கப் படும். நீ இந்தத் தீவில் எங்கு வேண்டுமானாலும் உங்கள் விருப்பப் படி வாழலாம்" என்றாள்.

அந்தப்புரப் பெண்களுக்கு பவானியின் வார்த்தைகள் விநோதமாகவும் நம்பமுடியாதவையாகவும் இருந்தன. அவர்களைப் பொருத்தவரை அவர்களது தேவை பங்களனால் நிறைவேற்றப் பட்டு வந்ததினால் அவனுக்குப் போகப் பொருட்களாக இருந்து இன்பத்தை அளிப்பது இன்பகரமான விஷயமாகவும் திருப்திகரமான வாழ்க்கையாகவும் தான் இருந்தது. தங்களை அடிமைகளாக அவர்கள் எப்போதுமே கருதியதில்லை. எனவே நிம்மதியாக இருந்த அவர்களை விடுவிப்பதாக பவானி கூறியது பைத்தியக்காரத் தனமாக இருந்ததால் கேலியாகச் சிரித்தார்கள்.

"ஏன், நீங்களெல்லாம விடுதலையாவதை விரும்பவில்லையா?" என்று கேட்டான் பவானி.

"சுகமாகத் தானே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். எதற்கு விடுதலை?"

"அடிமைகளாக வாழ்வதும் ஆண்களுக்கு வெறும் போகப் பொருளாக இருப்பதும் தான் பெண்களுக்குரிய

வாழ்க்கையா? இது தான் சிறப்பான வாழ்க்கையா? உங்கள் இஷ்டப்படி வாழ்வதில உள்ள சுதந்திரம் இங்கே வாழுவதில் இருக்கிறதா? எங்கேயோ பிறந்து எங்கேயோ மரக்கலங்களில சென்று கொண்டிருந்த நீங்கள் எதிர்பார்த்தது இந்தக் கேவலமான வாழ்க்கையைத் தானா? நீங்களெல்லாம் உயர வேண்டாமா? உங்களுக்கான வாரிசுகள் உருவாக வேண்டாமா? நாடுகளைப் பிடித்து ஆள வேண்டாமா? ஆடவர்களின் வெறி பிடித்த அணைப்புகளும் அறுசுவை உணவுகளும் மட்டுமே போதுமா?" - என்று அடுக்கடுக்காக வார்த்தைகளை உதிர்த்த பவானி, "நாளைக்கு நான் ராணியாக இங்கே வரும் போது உங்களில் யாரும் இருக்கக் கூடாது. இருந்தால் அனைவரும் விரட்டப் படுவீர்கள். அந்தப்புரம் இடிக்கப் படும்." என்று கூறிவிட்டு அரண்மனைக்குச் சென்ற போது அங்கே எல்லா உபதலைவர்களும் ஒருசில கொள்ளைக்காரர்களும் கூடியிருந்தார்கள்.

அர்த்தராத்திரியில் வந்த அழைப்பை விட, அந்த அழைப்பை பவானி விடுத்தது தான் அனைவருக்குமே வியப்பாக இருந்தது. பங்களன் அவளோடு சரசமாடும் விஷயம் அனைவருக்குமே பரவலாகத் தெரிந்திருந்தாலும் ஒரு சிலரே அவளை நேரில் பார்த்திருந்தார்கள். அவர்களும் இந்த ராணுவ உடையில் பார்த்திராததால் தற்போது அவளை விநோதமாகப் பார்த்தார்கள்.

பவானி யாரையும் லட்சியம் செய்யவில்லை. "உங்களையெல்லாம் நான் அழைத்தது உங்களுக்கு எப்படிப்பட்ட உணர்வுகளை ஏற்படுத்தியிருந்தாலும் அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இத்தீவையும் உங்களையுமெல்லாம் வாட்டி வதைத்துக் கொண்டிருந்த



கொள்ளையர் தலைவன் பங்களனை நான் கொன்று விட்டேன். உங்கள் சகாவான ரணதீரரை ஈவு இரக்கமின்றி கொடூரமான முறையில் சாகடித்த கொடியவனை நான் கொன்று விட்டேன். இன்று முதல் இத்தீவுக்கு நானே ராணியாக முடிசூட்டிக் கொள்ள முடிவு செய்து விட்டேன். இதை அறிவிக்கவே உங்களையெல்லாம் இங்கே வரவழைத்தேன்." என்று கூறியதும் அங்கே இருந்த அனைவரும் சிரித்தார்கள்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று விறைப்புடன் கேட்டாள் பவானி.

"நீங்கள் யார்? பங்களரின் வாரிசா?" - கேட்டான் அமீர்.

"எதற்காக இந்த கேள்வி?" - என்று கேட்டாள் சந்தேகத்துடன்.

"எந்த உரிமையில் இந்தத் தீவின் ராணியாகப் போவதாகச் சொல்கிறீர்கள்?" - கேட்டான் அமீர் நிர்தாட்சண்யமான குரலில்.

"ஏன், உரிமையை நான் கோரக் கூடாதா?"

"அந்த உரிமைக்கு உரியவர் பங்களரின் மகள் சௌமியகுமாரி."

"சௌமியகுமாரியை அடக்கும் வழி எனக்குத் தெரியும்."

"ஏன், அவரையும் கொன்று விடுவீர்களா?"

"தேவைப் பட்டால் செய்வேன்."

"அந்த நிலை வந்தால் கூட நீங்கள் ராணியாக முடியாது."

"ஏன்?"

"பங்களரின் போகப் பொருட்கள் ஏராளம். அவர்களெல்லாம் பதவிக்குப் போட்டி போட முடியாது."

"அமீர், உன் பேச்சு அநாகரீகமானது. ஆடவர்கள் பேசும் ஆணவப் பேச்சு."

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"பெண்கள் ஆண்களின் போகப் பொருட்கள் அல்ல. அதுவும் நான் நிச்சயமாக அப்படி இல்லை."

"அப்படியானால் இத்தனை நாட்கள் நீங்கள் என்னவாக இருந்தீர்கள்? ராணியாகவா?" கிண்டலாகக் கேட்டான் அமீர்.

இதைக் கேட்டதும் கோபத்திற்கு ஆளான பவானி வாளை உருவினாள்.

அப்போது ராவணன் பேசமுற்பட்டு "வெள்ளைத் தீவில் இருப்பவர்கள் கொள்ளையர்களாக இருந்தாலும் அதன் தலைவனாக ஆவதற்கு விதிமுறைகள் உண்டு. தலைவராக இருப்பவர் மாண்டு போனால் அவரது புதல்வர்களோ புதல்விகளோ தான் தலைவராக முடியும். அப்படி யாரும் இல்லையென்றாலோ அல்லது பதவி வேண்டாம் என்று மறுத்தாலோ உபதலைவர்கள் கூடி தங்களுள் ஒருவரை தேர்ந்தெடுப்பார்கள்" என்று விளக்கமாகக் கூறிவிட்டு "நீங்கள் எதற்காக பங்களரைக் கொன்றீர்கள்?" என்று கேட்டான்.

"அது நடந்து முடிந்த கதை" என்றாள் பவானி.

"எங்கள் தலைவர் கொல்லப்பட்டார் என்றால் எங்களுக்குக் காரணம் தெரிய வேண்டும்."



"அதை விசாரிக்க நானிங்கு வரவில்லை."

"நாங்கள் வந்தது அதை அறிந்து கொள்ளத் தான். அது தெரியாமல் எதைப் பற்றியும் நாங்கள் பேச இயலாது."

"காரணத்தைச் சொன்னால் என்ன செய்து விடுவீர்கள்?"

"முதலில் காரணத்தைச் சொல்லுங்கள்."

"என்னை அடிமையாகவும் சேவகியாகவும் நடத்தினார். அதன் தாக்கம் ஆடவர்களுக்கான உங்களுக்குப் புரியாது. எனக்குத் தான் புரியும். ஆகவே தான் கொன்றேன்."

"உங்களிடம் உண்டான வேதனையை பங்களரிடம் என்றாவது கூறியதுண்டா?"

"என்னிடம் அவர் கேள்விகளை எதிர் பார்த்து வருவதில்லை."

"அது அவருக்குத் தேவையில்லாமல் இருக்கலாம். காயம் பட்ட நீங்கள் தான் மருந்தைக் கேட்க வேண்டும். ஏன் கேட்கவில்லை? இத்தனைக்கும் உங்கள் உயிரைக் காப்பாற்றியவர் அவர். உங்கள் நிலை எது என்பதை அப்போதே அவரிடம் கூறியிருக்க வேண்டியது உங்கள் கடமை. ஏன் கூறவில்லை?"

"நானிருந்த நிலையில் அப்படி என்னால் பேச முடியவில்லை. அவரது விருப்பமும் என்னை அடிமையாக வைத்திருப்பதில் தான் இருந்தது. நான் கட்டாயப் படுத்தப் பட்டேன். அதற்காக காலம் காலமாக நான் அவரது அடிமையாகவும் சுகமளிக்கும் போகப்பொருளாகவும் தான் இருக்க வேண்டுமா? சுதந்திரமாகி விட விரும்பக் கூடாதா?"

"தலைவரே, இவள் தான் உங்கள் அருமை பவானியா. விஷம் வைத்துக் கொன்று விட்டதாகச் சொல்லும் இவர் வெள்ளைத்தீவின் ராணியாகப் போகிறாராம். எங்களையெல்லாம் இந்த நடு இரவில் வரவழைத்ததும் இதைச் சொல்லத் தானா." என்றான் அமீர் பங்களனை உசுப்பி விடும் விதத்தில்.

பவானியை ஏற இறங்கப் பார்த்தான் பங்களன். "இது உண்மையா?" - என்று கேட்டான்.

அவள் உண்மை என்று எப்படிக் கூறுவாள். அவளுக்கு உடலெல்லாம் வியர்த்தது. நடுக்கத்தை மறைத்துக் கொண்டு நின்றாள் எதுவும் பேசாமல்.

"இவளது பணிப்பெண்ணைக் கூப்பிடுங்கள்." என்றான் பங்களன்.

பவானி குறுக்கிட்டு "வேண்டியதில்லை. உங்களுக்கு நான் விஷம் கொடுத்தது உண்மை." என்றாள் சற்றே துணிச்சலை வரவழைத்துக் கொண்டு.

"என்னைக் கொலை செய்வதற்கான காரணமும் இவர்கள் கூறியது தானா?" கேட்டான் பங்களன்.

'ஆமாம்' என்றாள் பவானி பயத்தை விட்டு.

"இங்கே சக கொள்ளைக்காரர்களுக்கே உரிமை கிடையாது. இந்த லட்சணத்தில் என்னிடம் சிக்கி காப்பாற்றப் பட்ட நீ அடிமையாக வாழாமல் ராணியாக வாழ வேண்டும் என்று எப்படி ஆசைப் பட்டாய்? உன்னைப் பார்த்த அன்றே உன்னை அனுபவித்து விட்டு முதலைகளுக்குத் தீனியாகப் போட்டிருக்க வேண்டும். அது என் தவறு தான். அதேசமாக



ரனைத்திலும் விஷயத்திலும் நீ பெரிய செல்வி தப்பித்திருக்கிறாய் என்று தான் நான் நினைக்கிறேன். என் அடிமை தவறு செய்தால் மன்னிக்க மாட்டேன் நான். நீயோ துரோகியாகி கொலையும் செய்ய முயற்சித்து விட்டாய். கோரமான முடிவை தேடிக் கொண்டாய் பெண்ணே" என்று பேசிய பங்களன் "இந்த துரோகியை மீன் தீவுக்குக் கொண்டு சென்று நிர்வாணப் படுத்துங்கள். கிட்டிப் பலகையில் குப்புறப் படுக்க வைத்து கைகளிலும் கால்களிலும் கிட்டி கட்டுங்கள்." என்று சொன்னவன் தனது தலை வசிட்டில் பொறுத்தப் பட்டிருந்த உலோகத் தட்டை கழற்றி எடுத்து அதை உற்று நோக்கினான். தலை விரித்தாடும் பேய் முகமும், விசித்திர கோலைப்பாடுகளையும் கொண்ட அந்த வெள்ளி உலோகத்தை நீட்டி, "இதோ நமது மரபின் சின்னம். இதற்கு துரோகமிழைத்த இவளது முதுகின் நடுவில் இச்சின்னத்தை ஆணி வைத்து அடித்து விடுங்கள். வேறெதுவும் செய்ய வேண்டாம். இவள் எத்தனை நாள் உயிரோடு இருக்கிறாள் என்று பார்ப்போம்." என்று கூறிவிட்டு பிறகு "இவளை இப்போது இந்த அறையில் அடையுங்கள். தண்டனையை நாளை நிறைவேற்றலாம்." என்றதும் "நான் நான்" என்று பலர் அத்தண்டனையை நிறைவேற்ற வந்தார்கள். பங்களன் சற்று யோசித்து விட்டு "இந்த தண்டனையை நிறைவேற்றத் தகுந்தவன் அமீர் தான். இந்தா அமீர். இந்தச் சின்னத்தையும் அந்தச் சதைப் பிண்டத்தையும் பெறுக் கொள். நாளை தண்டனையை நிறைவேற்று." என்றான்.

மறுநாள் காலை உபதலைவர்களை வரவழைத்தான் பங்களன்.

"செங்குட்டுவனையும் ஆபுத்திரனையும் தப்பிக்க விட்ட செயல் என்னை ரொம்பவும் காயப் படுத்தியிருக்கிறது. நாம்

## உலோகச்சின்னம்





அறிவில்லை. அதற்கு ஏதாவது செய்ய வேண்டும். வழி தெரிந்தால் சொல்லலாம்." என்றதும் பலரும் பலவிதமாகச் சொன்னார்கள். அவையெதுவும் பங்களனின் மனதைத் தொடவில்லை.

அப்போது அமீர் பேசமுற்பட்டு "தலைவரே, சேரமன்னரை இப்போது நாம் எதுவும் செய்யமுடியாது. ஆனால் நம்மைப் பல்வேறு குழப்பங்களுக்கு ஆளாக்கின ஆபுத்திரனை அழிக்க முடியும்." என்றான். தன்னால் சிறைப்பட்டு கடத்தி வரப்பட்ட ஆபுத்திரன் தப்பி விட்டது அவனுக்குப் பெரும் அவமானமாக இருந்தது.

"அவனை எப்படி அழிக்க முடியும்?" என்று பங்களன் வினவியபோது ஆபுத்திரனை அழிக்க எண்ணியவனாய் "தலைவரே, நீங்கள் ஒரு கடிதம் எழுத வேண்டும். அதில் ஆபுத்திரன் இங்கு வந்ததிலிருந்து திரும்பியது வரை எழுத வேண்டும். அதில் தாவூத்திடமிருந்து அவன் நம்மைக் காப்பாற்றிய விஷயத்தை விளக்கமாக எழுதி அவனுக்கு நன்றி தெரிவிப்பதாக குறிப்பிட்டு அக்கடிதத்தை சேர நாட்டின் ஐம்பெருங்குழுவிடம் சேர்த்து விட்டால் ஆபுத்திரன் அழிவது நிச்சயம்." என்றான்.

"எப்படி?"

"நீங்கள் எழுதுவது மேலுக்கு நன்றிக் கடிதமாக இருந்தாலும் உண்மையில் தாவூத்திற்காக அவன் நம்மைக் காப்பாற்றிய விஷயம் விசாரணைக்குரியதாக அமைந்து விடும். சேரரது பகைவரான நம்மைக் கடல் கொள்ளைக் காரன் தாவூத்திடமிருந்து ஆபுத்திரன் காப்பாற்றியது சேரநாட்டைப் பொறுத்தவரை ராஜத் துரோகச் செயல்.

இருக்குமானால் அவன் மீது ஐம்பெருங்குழு சுமத்தும் [illegible] துரோகக் குற்றத்திற்கு சிரச்சேதம் தான் தண்டனை. அப்படி யாராவது இதை வேடிக்கை காட்ட முற்பட்டால் ஆயுட்காலம் வரை பாதாளச் சிறையில் தான் அவன் காலம் கழிப்பான்."

"ஆபுத்திரனுக்கு இப்படிப்பட்ட தண்டனையைத் தான ஐம்பெருங்குழு வழங்கும் என்று எப்படி நம்புவது."

"ஐயா, சேர நாட்டில் சேரமன்னனை விட பெரிய அமைப்பு அது. மன்னனைக் கூட விசாரிக்கும் உரிமை அதற்குண்டு. பாரபட்சமற்ற அதன் போக்கு சேர நாட்டில் பிரசித்தம். எனவே ஆபுத்திரனுக்கு பாரபட்சம் காட்டாது. தண்டனையை நிச்சயமாக வழங்கும்."

"சேர மன்னன் இதை அனுமதிப்பானா?"

"ஐம்பெருங்குழுவின் நடவடிக்கைகளில் சேர மன்னனுக்கு குறுக்கிடும் அதிகாரமோ தண்டனைகளை மாற்றும் அதிகாரமோ கிடையாது. அதே போல் சேர மன்னனுக்கு வேண்டியவன் என்பதால் பயப்படக் கூடிய தன்மை ஐம்பெருங்குழுவிற்குக் கிடையாது"

அமீரின் விவரணத்தைக் கேட்டுச் சிலாகித்தான் பங்கனன். பிறகு "என் கடிதத்தைக் குழுவிடம் எப்படிச் சேர்ப்பது." என்று கேட்டான்.

"ஐம்பெருங்குழுவிற்கு எடுத்துச செல்லும் கடிதத்தை தடுக்கும் உரிமை யாருக்கும் கிடையாது. சேரநாட்டிற்குச் செல்லும் வணிகர்கள் மூலம் கூட கடிதத்தைச் சேர்த்து விடலாம்".

பங்கனனுக்கு இதைக் கேட்டதும் பெரும் திருப்தியாக இருந்தது. கடிதத்தை உடனடியாகத் தயாரிக்கும் படி ஆணையிட்டான்.



இவ்வாறு நடைபெறும் செய்திகள் அனைத்தையும் அவ்வப்போது [illegible] வந்து அந்தப்புரப் பணிப் பெண்கள் இந்த விஷயங்களையும் சௌமியகுமாரிக்குச் சொல்வார்கள்.

இதைக் கேட்டு மிகவும் மனம் நொந்து போன சௌமிய குமாரி, செங்குட்டுவனிடம் ஆபுத்திரன் போனதுமே தானும் சேரநாட்டிற்குப் போகாமல் தாமதம் செய்து விட்டதை எண்ணி வருந்தினாள்.

தனது மாளிகையின் உப்பரிகையில் அமர்ந்து கொண்டு அஸ்தமனம் ஆகிக் கொண்டிருந்த சூரியனைப் பார்த்துக் கொண்டிருந்த அவளுக்கு தனது வாழ்வும் ஆபுத்திரனின் வாழ்வும் அஸ்தமிக்கப் போவதாகத் தோன்றியது. தன் வாழ்வு எப்படிப் போனாலும் தனது நிலைக் காதல் ஆபுத்திரனுக்கு ஆபத்து நேராமல் இருக்க வேண்டும் என்று எண்ணிய அவளுக்கு என்ன செய்வது என்று தோன்றாததால் கண்ணீர் விட்டாள்.

அச்சமயத்தில் அங்கு வந்த பங்கனன் "மகளே" என்று அழைத்தான். அவள் அழுது கொண்டிருந்ததைக் கண்டதும் "எதற்காக அழுகிறாய் மகளே! நானிருக்கும் போது நீ அழக் கூடாது." என்றான்.

"நீங்கள் இருப்பதால் தான் நான் அழுகிறேன்." என்றாள் சௌமியகுமாரி.

"உன் தந்தையிடமா இப்படிப் பேசுகிறாய். இப்படிச் சொல்ல உனக்கு எப்படி மனம் வந்தது மகளே."

"என்னை மகள் என்று அழைக்காதீர்கள்."

"நான் பெற்ற என் குலக் கொழுந்தை வேறு எப்படி அழைப்பது சௌமியகுமாரி?"

"இந்தப் பணியை நீங்களே செய்யலாமே."

"முடியாது மகளே. முடியாது. என்னால் முடியாது. நேரில் வந்து அவன் நின்ற போதே கொல்ல இயலாமல் போனவன் நான். அதோடு செங்குட்டுவனை மார்பில் குத்துவது கஷ்டம். முதுகில் குத்துவது சுலபம்."

"இந்த ஈனமான காரியத்தை நான் செய்ய முடியாது." என்றாள் சௌமியகுமாரி.

"உனக்கு மனநிலை சரியில்லை மகளே. நாளை வருகிறேன்." என்று கூறிவிட்டு அகன்றான் பங்களான்.

இதே நேரத்தில் பவானிக்குத் தண்டனை விதிக்க அவளை அழைத்துக் கொண்டு மீன் தீவுக்குப் புறப்பட்டான் அமீர்.







# அத்தியாயம் இருபத்து மூன்று



## பவானி, சௌமியகுமாரி, பூங்கொடி

மீன் தீவு என்பது அத்தீவு மீன் வடிவில அமைந்திருந்தது மட்டுமின்றி அத்தீவைச் சுற்றிய கடல் பகுதியில் மீன்கள் அதிகமாக இருந்தபடியால் அப்பெயரைப் பெற்றிருந்தது. மேற்கு கடற்கரையிலிருந்து சில காத தூரத்திலேயே அது அமைந்திருந்தது. மிகவும் சிறியதாக இருந்த அந்தத் தீவில் பங்களனின் தண்டனைக்கு இலக்கானவர்கள் கொண்டவரப் பட்டு சித்திரவதைக்கு ஆளாகி மாண்டு போயிருந்த காரணத்தாலும் இறந்து போனவர்கள் பேய் வடிவில் அத்தீவில் உலவுவதாக பேச்சு நிலவியதாலும், வெள்ளைத் தீவு மக்கள் அத்தீவில் வசிக்க பயந்து ஒதுக்கி விட்டிருந்ததால் அத்தீவுக்கு பேய்த்தீவு என்றும் ஒரு பெயர்

இருந்து வந்தது. தண்டனையை பெற்ற பவானியுடன் படகில் வந்து சேர்ந்த அமீர் தனக்கு முன்னால் பந்தங்களை ஏந்திச் செல்லும் படி இரு காவலாளிகளுக்கு கட்டளையிட்டு விட்டு படகோட்டியையும் திருப்பியனுப்பினான். பவானியை கிட்டியின் கட்டும் மரப்பலகையானது தீவின் கிழக்குப் பகுதியில் இருந்த காட்டுப் பகுதியில் இருந்தது. அந்த இடத்தை நோக்கிச் சென்ற அவர்களது கால்களில் ஆங்காங்கே மண்டை ஓடுகளும் எலும்புக் கூடுகளும் தட்டுப் பட்டு அத்தீவில் இறந்தவர்களின் எண்ணிக்கையைப் பறைச் சாற்றின. மக்கள் யாரும் இல்லாததால் மயான அமைதி நிலவிய அத்தீவில் நரிகளின் ஊளை சத்தம் திடீரென எழுந்து பேய்த்தீவின் பயங்கரத்தை அதிகரித்தது. அது போதாதென்று இன்னதென சொல்லமுடியாத அமானுஷ்ய குரல்கள் காற்றில் ஊடுருவி அத்தீவில் பேய்கள் இருப்பதை நிரூபிக்க கூடியதாய் அமைந்தன. அமீருக்கும் காவல வீரர்களுக்கும் இவை புதியவை அல்ல என்பதால் அவர்கள் நிர்பயத்துடன் நடந்தார்கள்.

ஆனால் பவானியின் நிலை மிகவும் மோசமானதாக இருந்தது. இப்படியொரு இடத்தையும் பயங்கரப் பின்னணியையும் அவள் வாழ்நாளில் சந்தித்ததே இல்லையாதலால் பெரிதும் நடுங்கியவாறு நடந்தாள். பல இடங்களில் அவளது காலில் பட்ட மண்டை ஓடுகள் அவளை குலை நடுங்கச் செய்தது. அவளுக்கு அளிக்கப் பட்ட தண்டனை குரூரமானது என்றாலும் அதை அடைவதற்கான இடமும் சூழலும் அதை விடக் குரூரமாக இருந்தது. 'எதற்காக அடிமை - விடுதலை என்றெல்லாம் தேவையில்லாமல் பேசினோம். பேசாமல் இருந்திருந்தால் இந்நேரம் சுகவனத்தில் சொர்க்க போகத்தில் கிடந்திருக்கலாமே. இதை



உணர்ந்து தான் அந்தப் புரப்பெண்கள் விடுதலையை விரும்பவில்லையா? நான் மட்டும் முட்டாள் தனமாகப் பேசி விட்டேனே! ஆசை பார்த்து பார்த்து வளர்த்து மெருகேற்றப் பட்ட என் உடல் இப்படி அனாதையாய் கிடக்கும் பயங்கரத் தீவில் நரிகளுக்கும் ஓநாய்களுக்கும் இரையாகப் போகிறதா? எப்பேர் பட்ட சித்திரவதை இது! இது தானா என் முடிவு? இலங்கையின் ராஜகுமாரி காட்டுவிலங்குகளுக்கு இரையாகி அடையாளமின்றிப் போகத் தான் பிறந்தாளா? என்னை இங்கே யார் காப்பாற்றுவார்கள்? நான் மட்டும் காப்பாற்றப் பட்டு விட்டால் இலங்கைக்கே ஓடிவிடுவேனே! பிச்சைக் காரியாக வாழ முடிந்தால் கூடப் போதுமே" என்றெல்லாம் கலக்கத்துடன் நினைத்தபடி நடந்தாள் அவள்.

விரைவிலேயே கிட்டி கட்டும் பலகையை அவர்கள் அடைந்தார்கள். அப்பலகையின் மீது தனியாக அமர்ந்திருந்த காட்டுநரியொன்று அவர்களைப் பார்த்தும் வானத்தைப் பார்த்து ஊளையிட்டு விட்டு ஒரே பாய்ச்சலாக பலகையை விட்டு காட்டிற்குள் ஓடி மறைந்தது.

பந்தமேந்திய காவலர்களிடம் பந்தங்களை பலகையின் இருபுறங்களிலும் இருந்த இரும்பு வளையங்களுக்குள் செருகி விடச் சொன்னான். அவர்கள் அவ்வாறு செய்ததும் இருவரையும் தீவை விட்டுப் போகும் படி சொன்னான் அமீர். அவனும் பவானியும் மட்டுமே எஞ்சி நின்றார்கள். கலக்கமான முகத்துடன் நின்றிருந்த பவானியைப் பார்த்த அமீர் "உன் தண்டனையை நிறைவேற்ற பலர் விரும்பிய போதும் தலைவர் என்னை ஏன் தேர்ந்தெடுத்தார் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியாது" - என்றாள் பவானி கலவரமான குரலில்.

அமீர்





"தலைவரின் கட்டளை எதுவானாலும் நான் தட்டாமல் நிறைவேற்றுவேன். அராபிய கொள்ளையர் தலைவனை நாலுமுறை முதுகுப் பக்கம் சாட்டையை எறிந்து கொலைச் சொல்லாய் செய்தேன். இத்தனை பெரும்பாலானவர்களின் தண்டனையை நான் தான் நிறைவேற்றியிருக்கிறேன். என்னிடம் பாரபட்சமோ பச்சாதாபமோ கிடையாது. பெண் என்று தயக்கப் படும் குணமும் எனக்கில்லை." என்றான் அமீர்.

அவனது வார்த்தைகள் அவளது அச்சத்தை அதிகரித்தன.

அமீர் தொடர்ந்து பேசமுற்பட்டு "உனக்கு வழங்கப் பட்ட தண்டனையை நினைவூட்டுகிறேன். இதோ இந்தப் பலகையில் நீ குப்புறப் படுக்க வேண்டும். இரு கைகளும் கால்களும் நீட்டப் பட்டு கிட்டி கட்டப் படும். உன்னால் அசையவே முடியாது. இந்த நிலையில் தலைவரின் இந்த உலோக முத்திரை உனது உனது முதுகின் நடுவில் வைத்து ஆணி அடிக்கப் படும். உன் பிராணன் போகாது. ஆனால் பிராணன் போகும் அவஸ்தை ஏற்படும். ரத்தப் பெருக்கு ஏற்படும். நான் போய் விடுவேன். ரத்தத்தை மோப்பம் பிடித்துக் கொண்டு நரிகள் ஓடி வரும். ஏற்கனவே நாம் வந்ததை காட்டு நரி ஒன்று பார்த்து விட்டதால் விரைவிலேயே அது தன் சகாக்களுடன் வந்து சேரும். நீ அவற்றின் விருந்து. நரிகள் மட்டுமின்றி ஓநாய்களும் வந்து விட்டால் நிலைமை மோசமாகி விடும். போட்டி போட்டுக் கொண்டு உன் உடலை ஆங்காங்கே பிடுங்கி உண்ணத் துவங்கும். ரத்தத்தைக் குடிக்கும். அநேகமாக விடியும் வேளையில் உன் எலும்புக் கூடு மட்டும் மிஞ்சும். சில நேரங்களில் சில நரிகள் எலும்புகளைக் கூட கடித்துக் கவ்விச் செல்வதுண்டு." என்று சொன்னதும் பலானி அலறினாள். அமீரின் காலில் விழுந்து கதறினாள்.

"பெண்ணே, உன் அழகினால் ஒரு பயனுமில்லை. நீ சதி செய்து காட்டிக் கொடுத்த ரணதீரனை கீழே போட்டு கொள்ளையர்கள் மிதித்த போது அவன் அலறினானே. நீ அதைப் பார்த்துக் கொண்டு தானே இருந்தாய்? ஆனந்தப் பட்டாய் அல்லவா?" - என்றான் அமீர்.

"ஐயா, தலைவரிடம் சொல்லுங்கள். நான் செய்தது பெரிய தவறு தான். இனி ஏழு ஜென்மங்களிலும் நான் அவருக்கு அடிமையாக இருப்பேன். என்னை மன்னிக்கச் சொல்லுங்கள்." என்று கதறினாள் அவள்.

"விஷம் வைத்தவளை யாரும் மன்னிக்க மாட்டார்கள் பவானி!" என்றான் அமீர்.

"தாங்களாவது கருணை காட்டுங்கள்." என்று கெஞ்சினாள்.

"நீ மட்டுமின்றி எங்களையும் துரோகிகளாக்கும் பழக்கம் உன்னை விட்டுப் போகவில்லை. என்னைப் பற்றி ஏற்கனவே கூறி விட்டேன். உன் மீது கருணை காட்ட முடியாது. ஆடைகளை நீக்கு. போய் அந்தப் பலகையில் படு." என்று துரிதப்படுத்தினான் அமீர்.

தன் நிர்கதியான நிலையை எண்ணி திகைத்தாள் கொடூரமான மரணத்தை எதிர்கொள்ள அவளது மனமும் உடலும் பதைபதைத்தன. "ஐயா, அடிமைத்தனத்தை பெண்களிடமிருந்து அகற்றத் தான் நான் முயன்றேன். அது இப்படியாகும் என்று நான் எதிர் பார்க்கவில்லை." என்று உண்மையைச் சொல்லிப் பார்த்தாள் பவானி.

"உன் எண்ணத்தை நீ இலங்கையில் சொல்லியிருந்தாலோ சேரநாட்டில் சொல்லியிருந்தாலோ



ஆதரவு கிடைத்து. உனக்கும் ஆயுதமும் கிடைத்திருக்கும் கொள்ளைக்காரர்களுக்கிடையில். நீ இதைப் பேசலாமா? எங்களுக்கு நிலம் நிரந்தரமல்ல. நீர் தான் நிரந்தரம். நீர் என்றால் சாதாரண நீரல்ல. பெருங்கடல். சுழல்களும் சூறாவளிகளும் நிறைந்த கடல்கள் தான் எங்கள் வாழ்விடம் அந்த வாழ்வு நிலையற்றது. செய்யும் தொழிலான கொள்ளையும் அப்படித்தான். இதில் எங்கள் வசம் சிக்கும் பெண்களை ராணிகளாகவா அமர்த்த முடியும்? அடிமைகளாகத் தான் நடத்த முடியும். வீணாகப் பேசி நேரத்தைக் கடத்தாதே. ம் சீக்கிரம்" -

இதற்கு பின் எதுவும் பேசமுடியாதவளாய் தன் உடைகளை களைந்தெறிந்து விட்டு மரப்பலகையில் குப்புற படுத்தாள். அதுவரை உதாசீனமாகவும் கடுமையாகவும் பேசி நிர்தாட்சண்யமாக இருந்த அமீர் பந்த வெளிச்சத்தில் மரப்பலகையின் மீது கிடந்த பவானியின் உடலைப் பார்த்ததும் கண்கள் விரிந்தன. விரிந்த கண்கள் அவளது உடலெங்கும் பரவி உன்மத்தம் கொள்ள வைத்தன. 'ஆகா! எத்தனை செழிப்பான உடல்? வாழ்நாளிலேயே இப்படிப் பட்ட அழகை நான் பார்த்ததில்லையே! இந்தத் தங்க உடலை நரிகளும் நாய்களுமா சுவைக்க வேண்டும்? நரிகளை விடவா மோசம் நான்? இல்லை, இல்லவே இல்லை. நான் உயர்வான மனிதன் இவளை சுவைக்க வேண்டியது மனிதன் தானேயன்றி மிருகங்கள் அல்ல. இந்த உடல் சித்திரவதை படுவதற்காக தோன்றவில்லை. சுகமளிக்கத் தான் உலகிற்கு வந்திருக்கிறது. இனி இவள் என் வசம். என் இஷ்டப்படி இவளைப் பயன் படுத்திக் கொள்ளலாம். யாருக்குத் தெரியப் போகிறது? ஒரு வேளை நரிகளுக்கும் நாய்களுக்கும் தெரியலாம். அவை

என்பதை உணர்ந்ததும் ராவணனை விட்டு விலகினான். இது உங்களுக்குத் தெரியாதா தந்தையே?"

"அதே ராவணனின் மற்றொரு தம்பி விபீஷணனைப் போல் விலகி விடாமல் அவனோடு இருந்து போரிட்டானே அதை மறந்து விட்டாயா மகளே? பீஷ்மர், துரோணர் போன்ற மாவீரர்கள் துரியோதனின் அதர்மத்திற்குத் தானே உதவி செய்தார்கள்? இதிகாசங்களைப் பற்றிப் பேசும் தகுதி நமக்கில்லை. ஆகவே அவற்றைப் பற்றிப் பேச வேண்டாம். நாம் கொள்ளைக் காரர்கள். கொள்ளையடிப்பதும் சூறையாடுவதும் நமது தர்மம். இந்த வெள்ளைத் தீவு என்னும் தேரை இரண்டு புரவிகள் இழுக்கின்றன. நீ ஒன்று, நானொன்று. இரண்டு புரவிகளும் ஒரே திசையில் ஓட வேண்டுமே தவிர வேறு வேறு திசையில் ஓடினால் தேர் என்னாகும். சேர மன்னனின் பலம் மிகப் பெரிது. அந்த பலம் நமது எதிர்காலத்திற்கு ஆபத்தானது. நாம் என்றால் நாமிருவர் மட்டுமல்ல. நமது தீவு வாசிகள் எல்லோரையும் சேர்த்து தான் சொல்கிறேன். அவர்கள் வாழ வேண்டாமா? அவர்கள் வாழ்வின் மீது நமக்கு அக்கறை வேண்டாமா? அப்படியொரு அக்கறையும் அன்பும் அவர்கள் மீது உனக்கிருந்ததால் தானே என்னைக் கூடப் பொருட்படுத்தாமல் தாவூத்தை முறியடிக்க ஆபுத்திரனை அனுப்பினாய்? அப்படித்தான் உன்னை நான் வஞ்சிக்கு அனுப்புகிறேன். இரண்டும் ஒன்று தானே? இத்தீவு மக்களுக்காக நமது எதிரியிடம் நீ அடைக்கலம் அடைந்தது சரியென்றால் அதே மக்களுக்காக நமது எதிரியை அழிக்க உன்னை அனுப்புவது தவறாகி விடுமா?"

"தந்தையே, தாவூத்தின் மரக்கலங்களைக் கண்டவுடன் அவற்றை முறியடிக்க நீங்கள் முயலவில்லை. தீவு மக்களை அவனுக்கு காவு கொடுத்து விட்டு தப்பியோட நினைத்தீர்கள். இது தான் மக்கள் மீதான உங்கள் விசுவாசமா?"

"அதெல்லாம் பழைய கதை மகளே. அதை விடு. குழப்பமான காலகட்டம் அவை. தவறான அணுகுமுறை தான் அது. தவறுகள் திருத்தப்படக்கூடாதா? புதுக்கதை பிறக்கவே கூடாதா? நானிப்போது குழப்பமில்லாமல் தெளிவோடு பேசுகிறேன். நீயும் இப்போதைய நிலையில் பேசு."

"இப்போதும் நீங்கள் பொய் தான் சொல்கிறீர்கள் தந்தையே."

"பொய்யா?"

"சேரநாடு சென்று ஆபுத்திரரை மணந்து கொண்டு வாழும் படி சொன்னீர்கள் அல்லவா?"

"அது பொய்யல்ல மகளே. உண்மை."

"உண்மையென்றால் ஆபுத்திரரை அழிக்க ஐம்பெருங்குழுவிற்கு ஏன் கடிதம் அனுப்புகிறீர்கள்?"

"குமாரி, அமீர் ஒரு முட்டாள். ஐம்பெருங்குழு என்ன அந்த ஐராவதத்தில் ஏறி இந்திரனே வந்தால் கூட ஆபுத்திரனை அழிக்க முடியாது. இது எனக்கு நிச்சயம் தெரியும். வெள்ளைத் தீவுக்கே வந்து அவனை மீட்டுச் சென்ற செங்குட்டுவன் ஐம்பெருங்குழுவிடம் ஆபுத்திரனை காவு கொடுத்து விட்டு நிற்பான் என்று அமீரைப் போன்ற முட்டாள்கள் நம்பலாம். நான் நம்ப மாட்டேன்."

பங்களனின் இந்தப் பேச்சு உண்மை என்றே தோன்றியது சௌமியகுமாரிக்கு. "செங்குட்டுவனை அழித்து விட்டால் போதுமா? நீங்கள் தப்பி விட முடியுமா? ஆபுத்திரர் வாளாயிருப்பாரா?" என்று கேட்டாள்.

"ஆபுத்திரனின் பிறப்பு குறித்து பெரியதோர் மர்மம் இருக்கிறது. எனக்கு அரைகுறையாகத் தான் தெரியும். அது பற்றி முழுமையும் அறிந்தவன் கழுகு மூக்கன். வஞ்சிக்குப் போன பின் நீயே இதைப் பொறுமையாய்ப் புரிந்து கொள்வாய். உன் கேள்விக்கான பதிலும் கிடைக்கும். ஆகவே என் வேண்டுகோளை நிறைவேற்று. இக்காரியம் மிகவும் ரகசியமானதனால் யாரையும் நம்பாமல் சொந்த மகளான உன்னிடமே கேட்கிறேன். நீ மறுத்து விட்டால் உன் தந்தையை நீ உயிரோடு பார்க்க முடியாது."

"அப்பா, இதென்ன பேச்சு?"

"உண்மையைத் தான் சொல்கிறேன் மகளே. இது சத்தியம்."

"கவலை வேண்டாம் தந்தையே. எனக்கு ஆபுத்திரர் தான் முக்கியமே தவிர செங்குட்டுவர் அல்ல. அவரை மணக்க முடியுமென்றால் உங்கள் ஆசையை நான் நிறைவேற்றுகிறேன்."

"நல்லது மகளே. மிக்க மகிழ்ச்சி"



ஆபுத்திரனின் இல்லத்திற்கு வந்த பங்களனின் மகள் சௌமியகுமாரி தான் சேர நாட்டிற்கு வந்ததற்கான காரணம் என்ன தெரியுமா என்று கேட்டு விட்டு வெள்ளைத் தீவில் நடந்த சம்பவங்களையெல்லாம் விவரித்து "என்ன சொல்கிறீர்கள் இப்போது?" என்று கேட்டாள்.

ஆபுத்திரன் உடனடியாக எதுவும் சொல்லவில்லை. பங்களனின் மகள் மீண்டும் அவனை வினவிய போது



"அவரவர் பணி அவரவர்களுக்கு. சேர மன்னரைக் கொல்வது உன் பணி. எப்படி அதைச் செய்ய உத்தேசித்திருக்கிறாயோ அப்படியே செய்." என்று ஆபுத்திரன் கூறிய போது வியப்படைந்தாள் அவள்.

"இதென்ன இப்படிக் கூறுகிறீர்கள்? பிடிப்பில்லாமல் பேசுகிறீர்களே?" என்று கேட்டாள்.

"என்னிடம் வெள்ளைத் தீவில் இருக்கும் போது தர்ம அதர்மங்களைப் பற்றி பிடிப்போடு பேசிய நீ கூட இப்போது அந்தப் பிடிப்பை விட்டுவிட்டு நிற்கிறாய். இதோ பார் சௌமியகுமாரி, சேர மன்னருக்கு ஆபத்து ஏதோ உன் வடிவில் தான் வந்திருப்பதாக நினைத்துக் கொள்ளாதே. அவரைச் சுற்றியிருக்கும் அபாயங்கள் ஏராளம். என்னைப் போல ஏராளமானவர்கள் தங்களால் முடிந்த வரை காத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே நீ புதியதோர் ஆபத்தாக வந்து சேர்ந்திருப்பது வியப்பிற்குரிய விஷயமல்ல" என்றான் ஆபுத்திரன்.

"ஆபுத்திரரே, உங்கள் இதயம் ஏன் இப்படி கல்லாகி இருக்கிறது? வார்த்தைகளில் கூட வினயம் இல்லாமல் போகும் அளவிற்கு எப்படி உங்களால் இருக்க முடிகிறது. சேர மன்னரைக் கொல்வதென்பது எனக்கு இரண்டாம் பட்சம். எனது தலையான குறிக்கோள் உங்கள் அன்பிற்குப் பாத்திரமாகி உங்களை மணப்பது. அதற்கான முயற்சியில் தான் இப்போது என் முழு கவனமும் இருக்கும்" என்றாள் சௌமியகுமாரி.

"முயற்சியில் இறங்கு குமாரி. அதை நான் ஏன் தடுக்க வேண்டும்? என் நிலையை உனக்குச் சொல்லிய பிறகு விலக வேண்டிய நீ அதற்கு மாறாகத் தீவிரம் காட்டுகிறாய். அதை நான் தடை போட்டு என்ன ஆகப் போகிறது?" என்று

சொன்ன ஆபுத்திரன் "நீ எங்கே தங்கியிருக்கிறாய்." என்று கேட்டான்.

"உங்கள் கண் இதயத்தில்!" என்று கூறி விட்டு விருட்டென சென்றாள் சௌமியகுமாரி.

ஆனால் அதிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒருதடவையாவது அவன் இருப்பிடத்தைக் கண்டு பிடித்து காதல் வார்த்தைகளைப் பேச அவள் தவறுவதில்லை. ஆபுத்திரனும் முடிந்த வரை அவளது மனதை நோகடிக்காமல் வினயமான வார்த்தைகளையே பேசி வந்தான்.

இவளது அன்பைப் பற்றி பூங்கொடியிடம் சொல்லாமல் இருப்பது நல்லதல்ல என்று கருதி ஒருமுறை விவரமாகச் சொல்லி அவளது பிடிவாதத்தை எடுத்துரைத்தான் ஆபுத்திரன்.

பூங்கொடி இதை கேட்டு மெல்ல நகைத்தாள். "உங்களைப் புரிந்து கொண்ட பெண்களுக்குக் காதல் வந்து விடுகிறது. பாவம். சௌமியகுமாரியின் மனது நோகும் படி பேசி விடாதீர்கள். ஏமாற்றங்களை பெண்களால் எளிதாக ஏற்றுக் கொள்ள முடியாது. அவளது அன்பு ஒருவேளை வெற்றி பெற வேண்டும் என்று விதியிருந்தால் அதை யாரால் மாற்ற முடியும்?" என்றாள் பூங்கொடி.

"உனது இந்தப் பேச்சிற்காக உனக்கு ஒரு கோயிலே கட்டலாம் என்று தோன்றுகிறது பூங்கொடி. லட்சத்தில் ஒரு பெண் கூட உன்னைப் போல பேசமுடியுமா என்பது சந்தேகம் தான். எங்கே நீ கோபப் படுவாயோ என்று நான் கூட சற்று அஞ்சினேன். அதற்காக இப்போது வெட்கப் படுகிறேன்." என்றான் ஆபுத்திரன் நெகிழ்ந்து போய்.



"நீங்கள் ஏன் வெட்கப்பட வேண்டும்? சொல்லப் போனால் என்னை விட உங்களுக்குத் தான் நான் கோயில் கட்ட வேண்டும். தன்னை இன்னொருத்தியும் காதலிக்கிறாள் என்ற உண்மையை எத்தனை ஆடவர்கள் தங்கள் காதலியிடம் வெளிப்படுத்துகிறார்கள்? கோடியில ஒருவர் இருக்க முடியுமா? தானாகத் தெரியும் போது தெரியட்டும் என்று அவரவர்களும் பலரையும் நேசிப்பது தான் பெரும்பாலான இடங்களில் நடக்கிறது. அந்த விதமாக இல்லாமல் என்னிடம் வெளிப்படையாகப் பேசியதற்கு நீங்கள் பெருமைப்பட வேண்டும். எனக்காக அஞ்சியது கூட என் மீதுள்ள அன்பினாலும் என் மனம் புண்படக் கூடாது என்று தாங்கள் எண்ணியதும் தான் காரணம்."

இதைக் கேட்டு மீண்டும் நெகிழ்ந்து போன ஆபுத்திரன் "நம்மால் எப்படி இவ்வாறு இருக்க முடிகிறது?" என்று கேட்டான்.

"நம் காதலில் சுயநலம் இல்லாதது தான் காரணம்." என்றாள் பூங்கொடி.

இவ்விருவரைப் பொறுத்தவரை பிரச்சனையின்றித் தான் இருந்தார்கள்.

ஆனால் புதியதோர் பிரச்சனையை உருவாக்க வந்தது போல ஒருநாள் மாலை பூங்கொடியின் இல்லம் நோக்கி புரவியில் வந்து கொண்டிருந்தான் ஓர் இளைஞன்.

# அத்தியாயம் இருபத்து நான்கு



## இளவரசன்

வஞ்சிக் கோட்டையில் மாலை நேரமானது ரம்மியமாய் இருந்தது. மேலைக் கடலில் நீராட விரும்பியது போல் கதிரவன் கடலில் மூழ்கத் தொடங்கி விட்டதால் வானத்தில் விசித்திரமான கோலங்களை அக்கதிரவன் வரைந்து விட்டுப் போயிருந்ததால் அக்கோலங்கள் வீசிய பொன்னிறக் கிரணங்கள் புரவியில் வந்து கொண்டிருந்த வாலிபனின் கிரீடத்தில் பட்டு அதை மின்னும் தங்கமாய் மாற்றியிருந்தது. பகட்டான ஆடைகளைத் தேர்ந்தெடுத்து அதை மிகவும் நேர்த்தியாக அணிந்து கொண்டு பிரகாசிக்கும் கிரீடத்துடன் அவன் வந்த விதமானது தேவலோகத்திலிருந்து ராஜகுமாரனொருவன் வஞ்சிக் கோட்டையைக் காண வாஞ்சையுடன் வந்திருப்பது போல் எண்ண வைத்தது.





இளவரசன்

அவன் எதுவும் சொல்லவில்லை. ஊஞ்சலை விட்டு எழுந்து கொண்ட அவன் "நீ ஏன் சிறிது காலமாக பாடம் படிக்க பாடசாலைக்கு வரவில்லை?" என்று கேட்டான்.

"இசையைக் கற்றேன். ஆடலையும் கற்றேன். சிறிது இலக்கியம் பயின்றேன். போதும் என்று நிறுத்தி விட்டார் தந்தை." என்றாள் பூங்கொடி.

"கல்விக்கு அளவுண்டா பூங்கொடி? கலைமகளே கற்பதற்கு இன்னும் நிறைய இருப்பதாகச் சொல்கிறார்களே!"

"இருக்கலாம். ஆனால் எனக்குத் தந்தை சொல்மிக்க மந்திரமில்லை."

"என் தந்தை படித்தது போதும் என்று சொல்லவில்லை. ஏன் என்று தான் தெரியவில்லை?"

"நீங்கள் நிரம்ப கற்க வேண்டும். ஆயகலைகள் அறுபத்து நான்கையும் பயில வேண்டும். தந்தையை விட தனயன் பெரிய அறிவுச் சுடர் என்று நாடு பாராட்ட வேண்டும்!"

"என் விருப்பம் அதுவல்ல பூங்கொடி. அதிகம் படித்தால் இளங்கோ அடிகளைப் போலத் தான் ஆக முடியும். கொஞ்சகாலமாவது படிக்கலாம் என்று பார்த்தால் அதுவும் இயலவில்லை."

"ஏன்?"

"நீ இல்லாத பாடசாலை எனக்கு வெறும் சூன்யப் பிரதேசமாக இருக்கிறது."

"சிறந்த மாணவனுக்கு பாடம் தான் முக்கியமாக இருக்க



வேண்டும். நானோ என்னைப் போன்ற சக மாணவர்களோ ஒரு பொருட்டாக இருக்கக் கூடாது."

"உண்மை தான் பூங்கொடி. சில கட்டுப் பாடுகள் சொற்களில் அழகாக இருக்கும். அனுபவத்தில் கடைப் பிடிக்க முடியாததாக இருக்கும்."

"மனதை அறிவால் தான் அடக்க வேண்டும்."

"அறிவு மங்கிக் கொண்டிருக்கும் போது மனதை அடக்கும் ஆற்றல் அதற்கு எங்கிருந்து வரும்? பூங்கொடி, நானிங்கு வேதாந்தம் பேச வரவில்லை. நீ பாடசாலைக்கு வந்து கொண்டிருந்த வரை ஒரு பிரச்சனையும் வரவில்லை. நீ அருகில் இருக்கிறாய் என்ற நினைவு ஒன்றே எனக்குப் போதுமானதாக இருந்தது. நானிருக்கும் இடத்தில் நீ இருக்கிறாய் என்ற நினைவு இதயத்தில் மணம் வீசச் செய்தது. எப்போதாவது நமது கண்கள் சந்தித்தால் அதுவே எனக்கு அலாதி திருப்தியாக இருக்கும். நினைவுகள் வார்த்தைகளை எடுத்துக் கொடுக்க அவற்றை நான் என் கண்களால் உன் கண்களோடு பேசிக் கொண்டிருந்தேன். நீ பதில் பேசவில்லை என்றாலும் என் எண்ணங்கள் உன் இதயத்தில் பதிவு செய்வதாக எண்ணி ஆனந்த மடைவேன். ஆனால் நீ பாடசாலைக்கு வருவதை நிறுத்தியவுடன் எனக்கு எல்லாமே போய் விட்டது. நினைவு என்ற ஒன்றே என்னை விட்டு நீங்கியது போலவும் கண்கள் பேச உன் கண்கள் இல்லாததால் பாடசாலையே சூன்யமாகி விட்டது போலவும் ஆகிவிட்டது. வருவாய் வருவாய் என்று காத்திருந்தேன். இலவு காத்த கிளி போல ஆகிவிட்டது என் நிலை. மாதங்கள் பலவாகியும் நீ வராததால் உன்னைப் பற்றி உன் தந்தையிடமே கேட்டேன்.

அவர், உன்னைப் பற்றிச் சொல்ல நாவெழவில்லை. அது என் பணியுமல்ல என்று கடுமையாகக் கூறிவிட்டார். இன்பமயமாக இருந்த உலகம் இருண்டு போன மாதிரி ஆகிவிட்டது எனக்கு. பாடசாலையில் நானொரு சிலையாக அமர்ந்து வந்தேனே தவிர எதையும் கற்கவில்லை. என் நினைவுகளை பலவந்தமாக உன்னை நோக்கித் திருப்பினேன். உன்னையே சதா காலமும் நினைத்தேன். நினைவு என்ற ஒன்று இருப்பதே உன்னை நினைக்கத் தான் என்று கருதினேன். பிறகு நினைவே நீதான் என்று முடிவிற்கு வந்தேன். உன்னைப் பார்க்காமல் இருக்க என்னால் முடியவில்லை. மறைந்திருந்து பல இடங்களில் உன்னைப் பார்த்ததுண்டு. பிறகு வெறும் பார்வையால் பயனில்லை என்று தீர்மானித்து உன்னிடம் நேரில் பேசி விட இன்று வந்தேன். பூங்கொடி, நீ தான் என் வாழ்க்கை. நீயில்லாமல் நானில்லை. என்னை நிராகரித்து விடாதே. அப்படிச் செய்து என்னைச் சடமாக்கி விடாதே''-

பூங்கொடிக்கு அந்த வாலிபன் என்ன பேசுகிறான் என்பதும் என்ன விரும்புகிறான் என்பதும் புரிந்தது. இப்படியொரு திருப்பம் வரும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. ஏற்கனவே தான் காதலிக்கும் ஆபுத்திரனை சௌமியகுமாரி விரும்பும் நிலையில் ஆபுத்திரன் விரும்பும் தன்னை இந்த வாலிபன் விரும்புவதாக அறிந்த போது இதென்ன புதிய சிக்கல் என்று கவலைப் பட்டாள் அவள். இருப்பினும் தனது முடிவை தேங்காய் உடைத்த மாதிரி கூறிவிட விரும்பாமல்,

"இளவரசே, பரணரிடம் தொல்காப்பியம் பயின்ற தங்களுக்கு சகோதரனும் சகோதரியும் மணம் செய்து கொள்ளக் கூடாது என்பது தெரிய வில்லையா?'' என்று கேட்டாள்.

செங்குட்டுவனின் புதல்வனான குட்டுவன் சேரல், பூங்கொடி கூறுவதைக் கேட்டு மருண்டு போய் "என்ன சொல்கிறாய் பூங்கொடி? உன்னால் கூட அர்த்தமில்லாமல் பேச முடியுமா என்ன?'' என்று கேட்டான்.

"இளவரசே, நாமிருவரும் சகோதர-சகோதரிகள் அல்லவா?'' என்று கேட்டாள் பூங்கொடி.

"நான் எப்போது உனக்குச் சகோதரன் ஆனேன்?'' விபரீத தொனியில் கேட்டான் இளவரசன் குட்டுவன். அவனது அழகிய முகம் சற்றே இருண்டது.

"நான் பரணரின் புதல்வி. தாங்கள் மாமன்னரின் புதல்வர் —''

"பிறகெப்படி நாம் சகோதர சகோதரியாக முடியும்''

"அவசரப் படாதீர்கள் இளவரசே. புதல்வரான தங்களை மாமன்னர் என் தந்தைக்குப் பரிசாகத் தந்து விட்டார். என் தந்தை தங்களை ஏற்று தன் புதல்வராகவும் ஆக்கிக் கொண்டு விட்டார்'' *

"உலக வரலாற்றில் எந்த மன்னரும் அளிக்காத பரிசு. எந்தப் புலவரும் பெறாத பரிசு'' என்று கூறி கேலியாகத்

* பக் 181 பதிற்றுப் பத்து மூலமும் உரையும் by ஔவை துரைசாமிப் பிள்ளை.

பக் 98 சேரன் செங்குட்டுவன் by சூரபத்மன்

தனக்குத் தானே பேசிக் கொண்ட குட்டுவன் "உலகம் தான் அப்படி முட்டாள் தனமாக நம்புகிறது என்றால் அறிவாளியான நீயும் நம்புகிறாயே பூங்கொடி, இதென்ன கொடுமை? உன் தந்தையிடம் மாணாக்கனாகச் சேர்ந்து நல்லவிதமாக கல்வியினைப் பயின்று தேர்ச்சி பெற, குருகுல வாசமாகத் தான் செங்குட்டுவர் அனுப்பினாரே தவிர, என்னையே பரணருக்குத் தாரை வார்த்துத் தந்துவிடவில்லை. அப்படித் தரவும் அவருக்கு உரிமையில்லை. அவருக்குப் பிறகு சேர நாட்டை ஆள வேண்டியவன் நான். இளங்கோவடிகளைப் போல எனக்கு அரசுரிமை வேண்டாம் என்று மன்னருக்கு நான் பட்டயம் எழுதித் தந்து விடவில்லை. இளவரசு பட்டம் எனக்கு இன்னும் கட்டப் படவில்லை என்றாலும் நான் சேர இளவரசன் தான். பரணருக்கு நான் மகனுமில்லை. உனக்கு நான் சகோதரனுமில்லை." என்றான்.

"பரணர் தான், இளவரசே, இது பற்றி தெளிவைத் தரவேண்டும்." என்றாள் பூங்கொடி.

"பரணரைப் பற்றி எனக்குக் கவலையில்லை. உனக்கு வேண்டிய தெளிவை நான் என் தந்தையும் சேரமன்னருமான செங்குட்டுவரிடமே பெற்று வந்து உனக்குத் தெரிவிக்கிறேன் பூங்கொடி. போதுமா?" என்று சொன்ன குட்டுவன், "நான் பரணருக்கு மகனாக இல்லை. சேரமன்னருக்கு மகனானத் தான் இருக்கிறேன் என்ற நிலையை உணர்த்தி விட்டால் நீ மறுக்க மாட்டாய் இல்லையா பூங்கொடி?" என்று வினவினான்.

"மொட்டானது இயற்கையாக மலர்வதைப் போன்றது தான் காதல் இளவரசே. மொட்டைக் கட்டாயப் படுத்தி மலரச் செய்யும் செயல் காதலல்ல. அச்செயலால் மொட்டும் அழியும் மலர்ச்சியும் வராது." என்றாள் பூங்கொடி.



"என்னோடு சேர்ந்து இலக்கியம் படித்த நீ இவ்வாறு பேசுவது அழகாகத் தான் இருக்கிறது. ஆனால் அரசியல் குறுக்கிடும் போது இயற்கையான மலர்ச்சிக்கு இடமில்லாமல் போகலாம். நாட்டு நன்மைக்காக காதல்கள் பலியிடப்படுவதுண்டு. கட்டாயத் திருமணங்கள் நடைபெறுவதுண்டு. சில நேரங்களில் மன்னர்கள் காந்தர்வ மணங்களைக் கூடப் புரிந்திருக்கிறார்கள். அதை உலகம் ஒப்புக் கொண்டு தான் வருகிறது. ஆனால் அந்த நிலையை விரும்பவில்லை பூங்கொடி. நீயும் அதற்கு இடம் தந்து விடாதே. மீண்டும் சந்திப்போம்" என்று கூறி விட்டு புறப்பட்டான் குட்டுவன்.

அவன் சென்று நீண்ட நேரம் வரை அவனது பேச்சுக்களையே எண்ணிப் பார்த்தபடி இருந்தாள் பூங்கொடி. ஆரம்பத்தில் தனக்காக ஏங்கித் தவிப்பதாகப் பேசிய அவன் முடிவில் இளவரசன் என்ற அந்தஸ்தை வெளிப்படுத்தி அரசியல் காரணங்களுக்காக கட்டாயத் திருமணத்திற்குக் கூட முயற்சி செய்ய தயங்க மாட்டேன் என்று பொருள் படப் பேசியதை எண்ணி சற்றே கலங்கவும் செய்தாள். அப்படியொரு சந்தர்ப்பம் வருமானால் அதை தன்னால் தவிர்க்க முடியாது என்பதையும் உணர்ந்தாள். சேர மன்னர் இளவரசனை பரணருக்குப் பரிசாகக் கொடுத்து இளவரசன் கூறியது போலவே மாணாக்கனாக இருக்கத் தான் என்பது அவளுக்கும் புரிந்து தான் இருந்தது. எதற்கும் தந்தை பரணரிடம் கேட்டுப் பார்க்கலாம் என்ற நினைப்புடன் அவரிடம் கேட்கவும் செய்தாள்.

"என்னிடம் பயிலும் மாணாக்கர்கள் அனைவருமே என் குழந்தைகள் தான் மகளே. அவர்களுக்குள் எந்த வித்தியாசமும்

கிடையாது. எல்லோருமே எனக்கு உன்னை மாதிரி தான்" என்றார் பரணர்.

"அது தெரியும் அப்பா. இளவரசரை மன்னர் தங்களுக்குப் பரிசாகக் கொடுத்திருக்கிறார் அல்லவா? அவரும் உங்கள் புதல்வர் தானா" என்று கேட்டாள் பூங்கொடி.

"இளவரசரும் என் மாணாக்கன் தானே?" என்றார் பரணர்.

தந்தை வேண்டுமென்றே சுற்றிவளைத்து பேசுவது போலவே தோன்றியது பூங்கொடிக்கு.

"அப்பா, எல்லோரும் உங்கள் குழந்தைகள் தான். ஆனால் எதுவரை? பாடசாலையில் இருக்கும் வரை தானே? கல்வி முடியும் வரை தானே? அது முடிந்த பின் அவர்கள் தத்தம் பெற்றோர்களிடம் செல்ல வேண்டியது தானே?" என்று கேட்டாள் பூங்கொடி.

பரணர் தன் மகளை உற்றுப் பார்த்தார். "என்னம்மா உன் பிரச்சனை?" என்று அவளது சிரத்தை தடவியபடி கேட்டார்.

"பிரச்சனை இது தான். மன்னர் இளவரசரை உங்களுக்குப் பரிசாக அளித்து விட்டதால் இளவரசர் உங்கள் மகனாகி விட்டார் என்றும் நான் அவர் சகோதரியாகி விட்டேன் என்பதும் என் வாதம்."

"சரி."

"இளவரசர் அதை ஒப்புக் கொள்ளவில்லை. உங்களுக்குப் பரிசாக அளிக்கப்பட்டது மாணக்கராக பயில



மட்டும் தானாம். கல்வி முடிந்ததும் அவர் மன்னனிடமே போய் விடுவாராம்."

"மகளே, சேர மன்னனைப் போன்ற அறிவாளிகளும் நீதிமான்களும் எப்போதாவது தான தோன்றுகிறார்கள். அவர்களது மனதைப் புரிந்து கொள்வது என போன்றவர்களுக்கே மிகவும் சிரமமானது அம்மா. நானோ யாரிடமும் பரிசைக் கேட்டுப் போவதுமில்லை. பாடிப் பாராட்டுவதுமில்லை. அதே போல் செங்குட்டுவன் பரிசுகளை வழங்கும் போது யாருடைய பாட்டையும் பாராட்டையும் எதிர் பார்ப்பதில்லை. அதோடு பிறருக்கு வழங்கிய பரிசுகளை அவன் திரும்பப் பெற்றதாக சரித்திரமில்லை"

"அப்படியானால் நான் சொன்னது சரிதானே அப்பா" ஆவலுடன் கேட்டாள் பூங்கொடி.

"அரசியலும் ஆட்சிபீடமும் இருக்கின்றன மகளே. இவை குறுக்கிடும் போது நியதிகள் மாறக் கூடும். அந்த விஷயத்தில் மன்னருக்குத் தான் எல்லா அதிகாரமும்"



பூங்கொடியைப் போலவே தனது நிலையைப் பற்றி சேரமன்னரிடம் அறிந்து கொள்ளும் ஆவலில் அரண்மனைக்குச் சென்றான் இளவரசன்.

சேரமன்னர் அமைச்சர் முதலானவர்களுடன் முக்கிய ஆலோசனையில் இருப்பதாக அவனுக்கு செய்தி கூறப்பட்டது.

"இளவரசன் வந்திருப்பதாகத் தெரிவி. முக்கிய விஷயமாகப் பேச வேண்டும் என்று சொல்." என்றான் இளவரசன்.

காவலாளி உள்ளே சென்று மீண்டு வந்தான்.

"மன்னரிடம் தெரிவித்தேன். இளவரசர் என்று இங்கே யாருமில்லை. வந்திருப்பவரைப் போகச் சொல். என்று கூறிவிட்டார் பிரபு." என்றான்.

காவலாளியிடம் ரசாபாசம் செய்ய விரும்பாத குட்டுவன் ஆலோசனை முடியும் வரை காத்திருந்தான்.

ஆலோசனை முடிந்து மற்றவர்கள் வெளியேறியதும் உள்ளே சென்ற குட்டுவன் மன்னனைப் பார்த்து "தந்தையே, சேரநாட்டில இளவரசர் என்று யாரும் இல்லை" என்று கூறி விட்டீர்களாமே?" என்று கேட்டான் ஆவேசக் குரலில்.

சேர மன்னன் நிதானம் தவறவில்லை.

"அதற்கென்ன இப்போது?" - என்று கேட்டான்.

"அப்படியானால் நான் யார்?" என்று கேட்டான் குட்டுவன்.

"பரணரின் சொத்து" - என்றான் மன்னன்

"சொத்து என்றால்?"

"மகன் என்றும் வைத்துக் கொள்ளலாம்."

"நான் தங்களுக்குத் தானே மகனாகப் பிறந்தேன்?"

"புலவருக்கு உன்னைப் பரிசாக அளித்து விட்டேன்."

"அப்படியானால் நான் அரசுரிமை பெறக் கூடாதா? இளவரசனாக முடியாதா? நாளை சேர நாட்டை யார் ஆள்வது?"



"ஆள்வதற்கு நிறைய பேர் இருக்கிறார்கள்."

"நானிருக்கும் போது வேறு யார் உரிமை கொண்டாட முடியும்?"

"என் சகோதரர் இளங்கோ அரசுரிமை இருந்தும் அதை வேண்டாம் என்று துறந்தார்."

"அவரைப் போல நானும் மொட்டையடித்துக் கொண்டு துறவியாகி விட வேண்டியது தானா?"

"அது உன் விருப்பம்."

"தந்தையே இது அநீதி."

"எது அநீதி?"

"எனக்கு அரசுரிமையை மறுப்பது."

"பரிசுப் பொருட்களைத் திரும்பப் பெறுவது என் வழக்கமில்லை."

"நானென்ன யானையா? புரவியா? பொன்னா? மணியா? வெறும் ஜடமா பரிசாக அளிப்பதற்கு?"

"யானை - புரவி - பொன் - மணி இவைகளையெல்லாம் விட உயர்ந்தவன் நீ. மனிதன்."

"வெறும் மனிதனல்ல. அரசகுமாரன். என்னைக் கேட்காமல் என்னைப் பரிசாகத் தந்ததும் அரசுரிமையை மறுப்பதும் அநியாயம். தந்தையே நான் தங்களுக்கு என்ன

துரோகம் செய்தேன்? எனக்கேன் இந்த தண்டனை? நான் இளவரசனாக முடியாதா? இந்த நாட்டை ஆளும் தகுதி எனக்குக் கிடையாதா?"

"தகுதியைப் பற்றிப் பேசியதற்காக மகிழ்ச்சியடைகிறேன் குட்டுவா. நாளைக்கு வா. உன்னிடம் ஒரு காரியத்தை ஒப்படைக்கிறேன். அதை மட்டும் வெற்றிகரமாக நீ செய்து முடி. உன் தகுதியை ஏற்றுக் கொண்டு உனக்கு இளவரசனாக முடி சூட்டுகிறேன்"

அரை மனதோடு வெளியே சென்ற குட்டுவன் மறுநாள் வந்தபோது மன்னன் கூறிய காரியத்தைக் கேட்ட போது மிகவும் வெறுப்படைந்தான்.

மன்னன் கொடுத்த ஓலைகளை வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.







# அத்தியாயம் இருபத்து ஐந்து



## பதவி படுத்தும் பாடு

**வே**த்தியல் மண்டபம் என்று வழங்கப் பட்ட அரசியல் நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும் மாளிகையில் தன் மகன் குட்டுவனிடம் இரண்டு ஓலைச் சுருள்களைக் கொடுத்து "இதில் ஒன்று உறையூர் சோழ மன்னனுக்கு. மற்றொன்று இலங்கை மன்னன் கயவாகுவிற்கு. மிகவும் முக்கியமான செய்திகள் இவற்றில் உள்ளன. உரியவர்களிடம் பத்திரமாக ஒப்படைத்து விட்டு நீ வஞ்சி மாநகரத்திற்குத் திரும்புவதற்கும் பூம்புகாரிலிருந்து இலங்கைக்கு மரக்கலம் புறப்படுவதற்கும் சரியாக இருக்க வேண்டும்." என்றான் செங்குட்டுவன்.

ஏதோ முக்கியமான காரியமாக இருக்கும் என்று எதிர்பார்த்த குட்டுவனுக்கு இப்பணி மிகவும் ஏமாற்றமாக

இருந்தது. அரைகுறை மனத்தோடு அவற்றை வாங்கிக் கொண்டு "இப்பணியை வெற்றிகரமாக முடித்து வருகிறேன். அதற்குப் பிறகு எனக்கு இளவரசுப் பட்டம் கட்ட மறுக்க மாட்டீர்களே?" என்று கேட்டான்.

"வாக்கு தவறும் பழக்கம் எனக்கில்லை. இன்றே புறப்படு. பரணரிடம் நான் சொல்லிக் கொள்கிறேன்." என்றான் செங்குட்டுவன்.

நேராக பரணரின் பாடசாலைக்கருகே இருந்த தனது குடிலுக்கு வந்த குட்டுவன் "என் தந்தை என்னை என்ன தான் நினைத்துக் கொண்டிருக்கிறார்? ஓலைகளைச் சுமந்து கொண்டு போய் பலருக்கும் சேர்ப்பது தான் இளவரசனின் வேலையா? இப்பணியைச் செய்ய ஆட்களா இல்லாமல் போய் விட்டார்கள்? ஒற்றர்கள் இல்லையா? என் பிரதான தூதுவர் சஞ்சயன் இல்லையா? அவர்களிடம் அனுப்புவதை விட்டு என்னிடம் எதற்காக அனுப்ப வேண்டும்! என்னை இந்த வஞ்சிக் கோட்டையிலிருந்து துரத்தி விடுவதற்காகத் தான் இப்பணி என்னிடம் ஒப்படைக்கப் பட்டதா? இவ்வோலைகளில் அப்படியென்ன முக்கியச் செய்தி இருக்கும் அதுவும் சோழனுக்கும் இலங்கை மன்னனுக்கும்? ஒருவேளை இலங்கைக்கு அனுப்பி விட சதி ஏதாவது நடக்கிறதா! ஓலைகளைப் பிரித்துப் பார்த்து விட்டால் என்ன? பிரிக்க வேண்டுமானால் முத்திரையை உடைக்க வேண்டும். உடைத்து விட்டால் திரும்ப எப்படி பொறிப்பது? அதெல்லாம் சரிபட்டு வராது." என்று பலவாறு குழப்பத்தோடு யோசித்த அவன் "பேசாமல் இந்த ஓலைகளையெல்லாம் கொளுத்திப் போட்டு விட்டு பூங்கொடியைத் தூக்கிக் கொண்டு எங்காவது போய் விட்டால் என்ன? கண் காணாத பிரதேசத்திற்குப்



போய் எனக்கென்று ஒரு ராஜ்யத்தை அமைத்துக் கொண்டு வாழ்ந்தால் என்ன?" என்று நினைத்தான்.

நினைவுகளால் குழப்பங்கள் தான் நீடித்ததே தவிர தெளிவு பிறக்கவில்லை.

இதறகிடையில் தான் பரிசுப் பொருளாக்கப் பட்ட விஷயம் அவனுக்குள் தீயாக எரிந்து கொண்டிருந்ததால் பரணரைச் சந்தித்து "குருநாதரே. தாங்கள் மெத்தப் படித்த பெரும் புலவர். அறநெறிகளையும் நியாய தர்மங்களையும் நன்குணர்ந்த அறிவாளி. நீங்கள் போய் அநீதிக்குத் துணைபோகலாமா?" - என்றான்.

திடீரென்று கேட்கப் பட்ட இக்கேள்வியால் திகைத்துப போன புலவர் "என்ன சொல்கிறாய மகனே! அநீதிக்கு நான துணை போனேனா? என்ன அநீதி! யாருக்கு அநீதி! என வாழ்க்கையில் அதை எந்த காலகட்டத்திலும் செயததிலலை விஷயமென்ன வென்று சொல்." என்றார்.

"பெரியவர்களுக்கு அநீதி என்பது எளிதாக மறக்க முடியும் போலிருக்கிறது. சேரநாட்டு நிலைமை இப்படி இருப்பது கவலையளிக்கிறது." என்றான் குட்டுவன்.

இதைக் கேட்டு சினமடைந்த பரணர். "குட்டுவா நீ உன் ஆசிரியரிடம் பேசும் முறை இதுவல்ல." என்றார்.

"மன்னர் என்னை தங்களுக்குப் பரிசாக அளிப்பதும் தாங்களும் அதை ஏற்று தன் மகனாக மாற்றுவதும முறையான காரியங்களா?"

பரணர் இதைக் கேட்டுச் சற்று திகைத்தார்.

"குட்டுவா, இந்தப் பரிசு வேண்டும் என்று யாரிடமும் நான் கேட்டதில்லை. இது செய்தால் தான் பரிசு என்று செங்குட்டுவனும் தகுதி நிர்ணயம் செய்து வைத்திருக்க வில்லை." என்றார் நிதானமாக.

"நான் கேட்பது வேறு. குருநாதர் சொல்வது வேறு. என்னை உங்களுக்கு மன்னர் பரிசளிப்பது சரியா? நான் என்ன ஜடப்பொருளா? என்னைப் பரிசாக அளிப்பதென்றால் அதற்கு என் சம்மதம் வேண்டாமா? அப்படி எதையும் பெறாமல் உங்கள் மகனாக்கி எனக்கு அரசுரிமை இல்லை என்று கூறுவது நியாயமா? அநீதி இல்லையா? அவர் தான் அப்படிச் செய்தார் என்றால் அறிவில் சிறந்த தாங்கள் எப்படி எதையும் யோசிக்காமல் பெற்றுக் கொண்டீர்கள். அரச வம்சத்தில் பிறந்த நான் காரணமின்றி அரசுரிமையை இழப்பது எனக்கு இழைக்கப்படும் அநீதி இல்லையா? உங்கள் இருவருக்கும் நான் செய்த துரோகம் தான் என்ன?"

"குட்டுவா, என்னை நம்புகிறாயா?"

"அசந்தர்ப்பமான கேள்வி குருநாதரே."

"எப்படி?"

"வாயில் விழுங்கி விட்ட முதலை உள்ளே இருப்பவனைப் பார்த்து கேட்பது போல் இருக்கிறது உங்கள் கேள்வி."

"தவறான எண்ணம். அப்படியெல்லாம் இல்லை. உன் தந்தை உன்னை என்னிடம் பாடம் கற்பிக்கவும் உயர் நிலைக்குக் கொண்டு வரவுமே என்னிடம் ஒப்படைத்திருக்கிறார். இச்செயலை பரிசு என்ற பெயரில் பலர் சொல்லலாம். நானப்படி கருதவில்லை. கல்வி முடிந்தபின் நான் உன்னை மன்னரிடம் அனுப்பி விடுவேன். கவலைப் படாதே"





மாளிகை

"மன்னர் உங்களைப் போல பேச்சில் கூட ஆறுதல் கூறவில்லை."

"அதைவிடு. உனக்குரிய அரசுரிமையை வாங்கித் தரவேண்டியது என்பொறுப்பு. போதுமா?"

"இன்னொரு சந்தேகம். அதையும் குருநாதர் தான் தீர்க்க வேண்டும்."

"சொல்"

"அரசரின் புதல்வனாகிய நான் இளவரசனாக முடிசூட புதிய தகுதிகளைப் பெற வேண்டுமா?"

"வாரிசு அரசியலில் அது தேவையில்லை."

"மகிழ்ச்சி குருநாதரே. நான் தங்களுடன் பேசியவற்றை மன்னரிடம் கூறமாட்டீர்கள் என்று நினைக்கிறேன்."

"உன் நம்பிக்கைக்கு நன்றி."

இவ்வாறு பரணரிடம் பேச்சு வார்த்தை நடத்தி விட்டு ஒரு தீர்மானத்திற்கு வந்த குட்டுவன் பணியாள் ஒருவனை அனுப்பி தூதுவன் சஞ்சயனை உடனடியாக தன்னை வந்து சந்திக்கும் படியும் சந்திக்க வேண்டிய இடம் பற்றியும் சொல்லியனுப்பினான்

குட்டுவன் சொல்லியனுப்பிய இடம் வஞ்சி நகரையொட்டி ஓடிய பேரியாற்றங்கரையில் இருந்த காஞ்சியம் பெருந்துறைக்கு அருகே இருந்தது. காஞ்சி மரங்களால் சூழப்பட்ட அப்படித்துறைக்கு அருகில் சற்றே இடிந்த நிலையில் பெரியதோர் மாளிகை இருந்தது. பண்டைய சேரமன்னர்களின் இலவந்திகைப் பள்ளியாய் இலங்கிய அது



ஒரு சமயம் சேதமடைய நேர்ந்ததால் அரச குலத்தவர் அதை புறக்கணித்து விட்டார்கள். பிறகு நெடுங்காலத்திற்குப் பிறகு செங்குட்டுவன் ஆட்சிக்கு வந்தபின் அவனது அவைக்கள புலவராய் இருந்த சீத்தலை சாத்தனார் வேண்டிக் கொண்டதின் பேரில் அந்தப் பெருமாளிகை சீரமைக்கப் பட்டு பௌத்தத் துறவிகள் தங்கி வசிக்கும் இடமாயிற்று. சீத்தலை சாத்தனாரும் அங்கேயே வசித்து வந்தார்.

அந்த மாளிகைக்கு குட்டுவன் சென்ற போது அவனது வரவைப் பற்றித் துறவிகள் சாத்தனாரிடம் தெரிவித்த போது அவரே நேரில் வந்து அவனை வரவேற்றார். அவரது தலையில் பெரிதாக கட்டு ஒன்று போடப் பட்டிருந்தது அவரை அவன் பலமுறை கண்டிருந்தாலும் தலைக்கட்டை கண்டதில்லையாதலால் அது பற்றி வினவிய போது "மண்டையில ஒரு முறை காயம் ஏற்பட்டு கவனிக்காமல் விட்டு விட்டேன். அது முற்றிப் போய் சீழ்கட்டி விட்டது வைத்தியர்கள் சிகிச்சை செய்து கட்டை போட்டு விட்டு இக்கட்டு எப்போதும் தலையில் இருக்க வேண்டும் என்று கூறி விட்டார்கள். அதனால் எல்லோரும் என்னை சீத்தலை சாத்தனார் என்று அழைக்கத் தொடங்கி விட்டார்கள்" என்றார்.

சீத்தலை சாத்தனார் என்று அப்புலவருக்குப் பெயர் வந்ததற்கு வேறொரு காரணம் கூறப்படுகிறது. தனக்கு முன்னால் புலவர்கள் தவறுதலாக பாடல்களைப் பாடும் போது அதைக் கண்டு சகியாமல் தலையில் குத்திக் கொள்வார் என்றும் அதனாலேயே அவரது தலை சீழ் பிடித்த தலையாக இருந்தது என்றும் பிற்காலத்தில் திருவள்ளுவரின் நூலை பாக்களைக் கேட்ட பின்பே சீத்தலை குணமாகியது என்றும் கூறுவர். அதற்கு ஆதாரமாக திருவள்ளுவமாலை என்ற

நூலிலும் ஒரு பாடலைச் சுட்டிக் காட்டுகிறார்கள். * ஆனால் இக்கதை நம்பக் கூடியதாக இல்லை. மணிமேகலை என்னும் காப்பியத்தைப் பின்னாளில் இயற்றிய வரும் இளங்கோவடிகளின் நண்பருமான இப்பெரும் புலவர் புலவர்களின் பாட்டில் பிழையிருந்தால் சுட்டிக்காட்டித் திருத்துவரே யன்றி விதியை நொந்து கொண்டு சீழ்பிடிக்கும் அளவிற்குத் தலையைக் குத்திக் கொள்ள மாட்டார். அப்படிப் பட்ட செய்கை கற்றறிந்த புலவரின் நடவடிக்கையாக இருக்க முடியாது.

"புலவர் பெருமானே, இங்கே எனக்கு ஒரு தனி அறை வேண்டும். ஒதுக்கித் தர முடியுமா?" என்று கேட்டான் குட்டுவன்.

"இதென்ன பேச்சு! இந்த மாளிகையே தங்கள் தந்தையார் சேரமாமன்னர் அளித்தது தான். வேண்டுமானால் இந்த மாளிகை முழுவதையும் காலி செய்து கொடுக்கவும் நாங்கள் தயாராக இருக்கிறோம்" - என்றார் புலவர்.

"அதெல்லாம் வேண்டாம். ஒரே அறை. அது போதும். அங்கே எனக்கு எந்தத் தொந்திரவும் வரக் கூடாது. அது தான் முக்கியம்."

---

* சீந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில் - காந்தும
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

திருவள்ளுவமாலை



"சற்று அமருங்கள். மேல் மாடியில் உயர்ந்த இடத்தில் உங்களுக்கு ஏற்பாடு செய்கிறேன்." என்று கூறிவிட்டு துறவிகள் சிலரை அழைத்துக் கொண்டு போன புலவர் "துறவிகளே, அறையில் தங்கப் போவது துறவி அல்ல. அரசகுமாரன். அதற்கு ஏற்ற மாதிரி அறை தயார் செய்யப்பட வேண்டும். எச்சரிக்கை." என்றார்.

விரைவில் விசாலமான அறையொன்று மேல் மாடியில் தயார் செய்யப்பட்டது. வெற்று அறையானது சகல வசதிகளுடன் மாற்றப் பட்டதைக் கண்டு வியந்து போன குட்டுவன் சாத்தனாருக்கு நன்றி தெரிவித்த போது "இதெல்லாம் என் கடமை. தங்களுக்குக் கூப்பிட்ட குரலுக்கு சேவை புரிய பணியாட்கள் இருக்கிறார்கள். நாங்கள் நிம்மதியாக இருக்கலாம்." என்றார் அவர்.

சஞ்சயன் அன்றிரவு தான் வந்து சேர்ந்தான்.

அவன் வந்து சேரும் வரை ஏதேதோ எண்ணி அவஸ்தைப் பட்டான் குட்டுவன். சில நேரங்களில் புத்த பிட்சுக்களை அழைத்து அவர்களிடம் செங்குட்டுவனைப் பற்றி அவன் மீதான அவர்களது அபிப்ராயங்களைக் கேட்டான். ஏறக்குறைய எல்லோருமே செங்குட்டுவனைப் பற்றி உயர்வாகவே சொன்னார்கள். முக்கியமாக சமண மதமும் புத்த மதமும் பிணக்கின்றி தழைப்பதற்கு அவன் மூல காரணம் என்றும் அவன் மத மாச்சர்யங்களைக் கடந்தவன் என்றும் கூறிய போது லேசாகச் சிரித்துக் கொண்ட குட்டுவன்

"துறவிகளான நீங்கள் பற்றுகளை விட்டு விட்டது போல், சுற்றி நடப்பது பற்றியும் அறிவதை விட்டு விட்டீர்கள் போல் இருக்கிறது." என்றான்.

துறவிகளுக்கு அவனது பேச்சு புரியவில்லை.

"தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?" - என்றார்கள்.

"இப்போது சொன்னால் நம்பமாட்டீர்கள். போகப் போக உங்களுக்கே புரியும்." என்று ஒரு சந்தேக வித்தை விதித்து விட்டு அவர்களை அனுப்பினான்.

"பின்னால் சஞ்சயன் வந்த போது "என்ன தூதரே, என்னை யாரென்று தெரிகிறதா?" என்று கேட்டான்.

"தங்களைத் தெரியாமல் இருக்க முடியுமா இளவரசே?" என்றான் சஞ்சயன்.

"நான் ஏன் அப்படிக் கேட்டேன் தெரியுமா?"

"தெரியவில்லையே!"

"அரசர் தான் என்னை பரணருக்குப் பரிசாக அளித்து விட்டாரே. அதனால் என்னை பரணர் மகன் என்று சொல்லி விடுவீர்களோ என்று நினைத்தேன்."

"மாமன்னரின் புதல்வரான தாங்கள் எப்படி பரணரின் புதல்வராக முடியும்?"

"பின் ஏன் எனக்கு இளவரசன் பட்டம் கட்டவில்லை?"

"பட்டம் எங்கே போய்விடப் போகிறது இளவரசே? மன்னர் நினைத்தால் அமர்த்தி விடப்போகிறார்?"

"மன்னர் எப்போது நினைப்பார்?"



சஞ்சயனுக்கு அப்போது தான் புரிந்தது குட்டுவன் தன்னை எதற்காகவோ ஆழம் பார்க்கிறான் என்பது. எனவே "அது மன்னருக்குத் தான் தெரியும்" என்றான்.

"இந்த பதிலைச் சொல்ல நீ எதற்கு சஞ்சயா. இதை எல்லோருமே சொல்ல முடியும்."

"உண்மை அது தான்."

"அது போகட்டும். சேரநாட்டின் பிரதான தூதரான தங்கள் பணி என்ன?"

"தூது செல்வது தான்."

"தூதுவர் என்ற சொல்லின் பொருளை நான் கேட்கவில்லை. அது அந்த வார்த்தையிலேயே இருக்கிறது. நான் கேட்டது உமது பணிகளைப் பற்றி."

"எனக்கும் அதே பணி தான்."

"முக்கியமானவர்களுக்கு அந்தரங்க ஓலையை நீங்கள் எடுத்துச் செல்வீரா?"

"மன்னர் பணித்தால் செய்வேன்."

"நான் பணித்தால் செய்ய மாட்டீரா?"

"ஏதாவது பணி ..." என்று சஞ்சயன் இழுத்ததும் அவனிடம் இரு ஓலைச் சுருளையும் கொடுத்த குட்டுவன் "ஒன்று உறையூர் சோழமன்னருக்கு. மற்றொன்று இலங்கை மன்னர் கயவாகுவிற்கு. போய் கொடுத்து விட்டு வாருங்கள்." என்றான்.

சஞ்சயன் சற்றே குழம்பிப் போய் 'இது யார் அனுப்பும் ஓலை?' என்று கேட்டான் சந்தேகத்துடன்.

"பிற நாட்டு மன்னர்களுக்கு ஓலையை யார் அனுப்புவதும்?"

"மன்னர். இது மன்னரின் ஓலைகளா?"

"ஆம் என்னைக் கொண்டு போகச் சொன்னார். நான் உம்மை அனுப்புகிறேன்."

"இது தெரிந்தால் மன்னர் என் தோலை உரித்து விடுவார்"

"தோலை உரிக்க எனக்கும் தெரியும்."

"நாங்கள் சொல்வது?"

"இப்பணியைச் செய்ய மறுத்தால் உமது தோலை நானே உரிப்பேன்."

"நான் இங்கில்லையென்றால சந்தேகம் வரும்"

"உமது அக்காள் மகன் மதுரையில நோய் வாய் பட்டிருக்கிறான். அவனைப் பார்க்க அவசரமாகச் செல்கிறீர்கள்."

"எனக்கு அப்படி யாரும் இல்லை."

"கற்பனை செய்து கொண்டு அமைச்சரிடம் தெரிவித்து விட்டு அனுமதியோடு புறப்படுங்கள்."

"சரி."

"இந்த ஓலை விஷயம் யாருக்கும் தெரிய வேண்டாம்."

"சரி."

"தெரிந்தால் உமது உயிர் போய் விடும்."



"சரி."

"புறப்படலாம்."

"சரி."

ஒருவழியாக சஞ்சயன் கையில் ஓலையைக் கொடுத்து விட்ட குட்டுவன் அவன் இலங்கை சென்று திரும்பும் வரை தான் மாறு வேடத்தில் இருப்பதே சரி என்று கருதினான். முடிவில் முனிவர் வேடமே ஏற்றது என்று தேவையான பொருட்களை வாங்கி முனிவராக மாறினான். பிறகு சில இடங்களுக்குச் சென்று சிலரைச் சந்தித்து விட்டு சில விஷயங்களைப் பேசினான். பௌர்ணமியன்று அனைவரும் சந்திக்க வேண்டும் என்று கூறி அதற்கான இடத்தையும் கூறினான்.



முசிறிக்கு தெற்கே நெல்சிந்தா என்ற துறைமுகம் இருந்தது. தற்போது கோட்டையம் என்று அழைக்கப்படும் இத்துறைமுகத்திலிருந்து 150 ஸ்டேடியா தொலைவில் (54 கி. மீ) பொரக்காடு என்ற காட்டுப் பகுதி இருந்தது. அந்நிலம் பெரும் பாலும் காட்டு வாசிகள் மட்டுமே உறைவதாக சொல்லப்பட்டு வந்தது. அயல்நாட்டு வரலாறு ஆசிரியர்களான தாலமி என்பவரால் பராகே என்றும் பிளினி என்பவரால் பகாரே என்றும் அழைக்கப்பட்ட இப்பொரைக்காடு மணிமாலா நதி, பம்பா நதி மற்றும் அச்சன் கோயில் நதி ஆகியவை சங்கமித்து ஒரு ஆறாக ஓடிய நதியின் கரையில் இருந்தது. நெல்சிந்தாவிலிருந்து வெளிச் [illegible]

கப்பல்கள் இளைப்பாறி அங்கே தங்கி வைக்கப்பட்டிருக்கும் வாசனைப் பொருட்களை ஏற்றிக் கொண்டு செல்லும். வழி நெடுக கடற்கழிகளும் ஆழமில்லாத திட்டுக்களும் இருந்த காரணத்தினால் இந்த ஆற்றின் நிலை சீரான வேகத்தில் இருப்பதில்லை. ஆற்று நீரும் தெளிவாக இருக்காது. இப்படிப்பட்ட சீந்துவாரற்ற காட்டுப் பகுதிக்கு வந்து சேர்ந்த குட்டுவனையும் அவனோடு வந்த மற்றொருவனையும் காட்டுப் பகுதியிலிருந்து நூற்றுக்கணக்கான பாம்புகள் வரவேற்பது போல் திரண்டு வந்தன. குறுகிய தலையும் குறைந்த நீளமும் கொண்ட அந்த பாம்புகளின் கண்கள் ரத்தச் சிவப்பாக இருந்தன. குட்டுவனைப் பார்த்து ஏதோ ஒலியினை எழுப்பின. * அதையடுத்து உட்பகுதியிலிருந்து காட்டு வாசிகள் கூட்டமொன்று வில் அம்புகளுடன் ஓடி வந்தார்கள். அவர்களில் பெரும்பாலோர் அம்மணமாகவும் உடலில் பலவித வண்ணங்களைத் தீட்டியும் பார்ப்பதற்கு அச்சம் தரக்கூடிய வகையில் இருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் பறையொலியை எழுப்பிக் கொண்டு பலர் வந்தார்கள். எல்லோரும் கும்பலாக வந்து நின்ற விதம் குட்டுவனையும் அவனுடன் வந்தவனையும் தீர்த்துக் கட்ட விரும்புவது போல் இருந்தது. அவர்களில் ஒருசிலர் பந்தங்களைக் கொளுத்தலானார்கள். அக்கூட்டத்தில் நடுநாயகமாக

* மேற்கண்ட விவரங்களைப் பற்றி அறிய கீழ்கண்ட நூல்களை பார்க்கலாம்.

P 55 Foreign Notices in South India by K. A. Neelakanta Sastri

P 230-231 பெரிப்ளுஸ் by வி. எஸ். வி. ராகவன்.



பிரம்மாண்டமான பூதம் போல் இருந்தவனை அழைத்த குட்டுவன், அவன் அருகில் வந்ததும் தனது சடைகளையும் தாடியையும் நீக்கி "நான் தான்" என்றதும் அந்த மனிதனின் கண்கள் விரிந்தன. அதுவரை குட்டுவனை அக்காட்டுப் பகுதியில் அவனைப் பார்க்காததால் "என்ன இவ்வளவு தூரம்?" என்று கேட்டான் தனக்குப் பின்னால் இருந்தவர்களைப் போகச் சொல்லியபடி.

"இன்னும் எத்தனை காலத்திற்கு இந்தப் பாம்புகளை வைத்துக் கொண்டு மிரட்டுவதாக உத்தேசம்?" என்று கேட்டான் குட்டுவன்.

இதைக் கேட்டுச் சங்கடத்தோடு நெளிந்த அந்த மனிதன் "எங்களுக்கு வேறு போக்கிடம் இல்லை. மகாபாரதத்தில் அர்ஜுனனும் கிருஷ்ணனும் காண்டவ வனத்திலிருந்து (பஞ்சாப்) விரட்டிய நாகர்கள் மேற்கு கரையோர நாடுகளில் அதுவும் சேரநாட்டில் தான் குடியேறினார்கள். * எங்களை மிகவும் மதித்த இந்நாட்டு மக்கள் சர்ப்பக் காவு என்று பாம்புக்காடுகளை அமைத்துக் கொடுத்தார்கள். நாகங்கள் தான் மனித இனத்தின் முதல் எதிரி ** என்பதை உணர்ந்து அவர்கள் நாகங்களை தங்களுக்கு

* Page 41 மக்கள் வரலாறு by க. ப அறவாணன் நாகர் என்ற சொல் நாயர் என்று பிற்காலத்தில் திரிந்ததாகவும் தங்கள் பூர்வீகத்தை உணர்த்தும் பொருட்டே நாயர்கள் படமெடுத்தாடும் பாம்பை நினைவுறுத்துவது போல் தலைமுடியை நெற்றிக்கு மேலாக முடிச்சிட்டுக் கொண்டார்கள்.

** Page 81 தமிழ் மக்கள் வரலாறு by க. ப. அறவாணன்.

இடையூறு செய்யக் கூடாது என்று வேண்டிக் கொண்டு எங்களுக்குக் கோயில்களைக் கட்டினார்கள். அந்தக் கோயிலும் சர்ப்ப காவுகள் அமைக்கப்பட்டன. ஆனால் படிப்படியாக அந்த மரியாதை குறைந்தது. நாகர்கள் அழியலானார்கள். எஞ்சிய நாகர்கள் பொறைக் காட்டில் ஏதோ சில பாம்புகளை பாதுகாப்பிற்காக வளர்த்து விடுகிறோம்" என்று கூறி விட்டு "மனித பலி கொடுத்து நீண்ட நாட்கள் ஆகிவிட்டது" என்றான்.

"கவலைப்படாதே. விரைவிலேயே உனக்கு அந்த பாக்கியம் கிடைக்கும். அதுவும் அரசர் குல ரத்தமே கிடைத்தாலும் கிடைக்கலாம். யார் கண்டார்கள்?" என்று எந்த அர்த்தத்திலோ சொன்னான் குட்டுவன். பிறகு "பேய் மகன் இடுகாட்டிற்குப் போக வேண்டும்" என்றான்.

பூதமனிதன் சுளுந்தைக் கொளுத்தி முன்னே செல்ல குட்டுவனும் அவனுடன் வந்த மனிதனும் பின்னால் சென்றார்கள். காட்டின் உட்புறம் போகப் போக வனவிலங்குகளின் உறுமல்கள் அதிகம் கேட்டன. அதே சமயம் பூதமனிதன் தனது வாயைக் குவித்து ஏதோ சத்தம் எழுப்பி வந்ததால் விலங்குகளின் சத்தங்கள் அறவே நீங்கி பெரும் நிசப்தம் நிலவியது. சத்தத்தை விட நிசப்தம் பயங்கரமாகத் தெரிந்தது அவ்விருவருக்கும். அவ்வப்போது ஏதோ ஒரு பட்சியின் சத்தம் மட்டும் அபஸ்வரமாகக் கேட்டது.

"இது சிவந்த காதுகளைக் கொண்ட காட்டுச் சேவல்களின் குரல்கள். இடுகாட்டில் புதைக்கப்பட்ட தாழிகளின் மேட்டுப் பகுதிகள் இருந்து கொண்டு இரவு



நேரங்களில் இவை விபரீதக் குரல்களை எழுப்பும். இவைகளுக்குத் துணையாகக் கழுகுகளும் பெருவல் பறவைகளும், காக்கையும் கோட்டான்களும் பேய்களோடு சேர்ந்து இரைந்து திரியும். * நாம் போகப் போகிற இடம் அந்தச் சுடுகாடு தான்" என்றான் அந்த பூத மனிதன்.

குட்டுவனோ அந்தப் பயங்கரமான ஆளைக் கண்டு அஞ்சவில்லை. எதுவும் பேசாமல் தொடர்ந்து நடந்தான். மேலும் ஒருகாத தூரம் நடந்ததும் அவன் குறிப்பிட்ட இடுகாடு வந்தது. அங்கே பூதமனிதன் கூறியபடி வெறிது என்னும் கோரப் பறவைகளும் ஆங்காங்கே அமர்ந்து கிடந்தன. திடீரென ஒரு காட்டுச் சேவல் அவர்கள் மீது பாயவே குட்டுவன் தன் வாளை எடுத்து வீசினானதலால் அந்த பட்சி வெட்டுண்டு விழுந்தது. அதையடுத்து பிற பறவைகள் இறந்து போன அந்த சேவலை பட்சிக்க விரைந்தன. இடுகாட்டின் மேற்குப் புறத்தில் இருந்த ஆலமரம் ஒன்றின் கீழ் தீயை மூட்டி விட்டு அதைச் சுற்றி பிசாசுகளைப் போல மூன்று மனிதர்கள் அமர்ந்திருந்தார். ஒருவர் புலவர் பாகுகண்ணனார். மற்றொருவர் துளுநாட்டின் சேனாதிபதி இளமவேள். இன்னொருவன் நிமத்திகன். குட்டுவனைப் பார்த்ததும் "நேரமாகி விட்டது. ஒரு வேளை வராமல் போய் விடுவீர்களோ என்று எண்ணி விட்டோம்." என்றான் இளமவேள்.

"என் காரியத்திற்கு நான் வராமல் போவேனா?" என்றான் குட்டுவன்.

---

* புறநானூறு பாடல் 238 வரி 1-5

"காத்திருப்பதில் கஷ்டமில்லை. இந்த இடம் தான் சிரமமாக இருக்கிறது. தீயை வளர்த்துக் கொண்டு அமர்ந்திருந்தாலும் இந்தச் சுடுகாட்டுப் பறவைகள் அஞ்சுவதில்லை. எங்களை கொத்த வந்து துன்புறுத்துகின்றன" என்றார் புலவர்.

"என்ன செய்வது புலவரே? நாம் செய்யும் காரியங்களை நீங்கள் கவிபாடும் தமிழ்சபையிலா செய்யமுடியும்? யாரும் நினைத்துப் பார்க்க முடியாத இந்த இடத்தில் தான் சந்தித்துப் பேச இயலும். இனி உங்களுக்குத் தொந்தரவு வராது. என்னோடு வந்தவன் அப்பறவைகளைப் பார்த்துக் கொள்வான். பேய்கள் வந்தால் தான் கஷ்டம்" என்று சொன்ன குட்டுவன் "ஆகாரம் தயாராக இருக்கிறதா?" என்று கேட்டதும் "ஆஹா, நாங்கள் உண்ணும் நல்ல ஆகாரங்களையே உங்களுக்குக் கொண்டு வந்திருக்கிறோம்." என்று கூறிய புலவர் பசுங் கண்ணனார் தேன், மது, முயல்கறி ஆகியவற்றைக் கொண்டு வந்து வைத்து "புலவர் விருந்து" * என்றார்.

குட்டுவன் அமர்ந்து புலவரின் விருந்தை ஒரு வெட்டு வெட்டியதும் நிமித்தகனைப் பார்த்து "நேரம் சரியாக இருக்கிறதா?" என்று கேட்டான்.

"நேரம் நல்ல நேரம் தான். சற்று பொறுத்தால் அவரும் வந்து விடுவார்." என்றார் புலவர்.

---

* அக்காலத்தில் இம்மூன்றையும் புலவர்கள் விரும்பு உண்டனர்.

"குறுமுயல் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு"

புறநானூறு பாடல் 34



"யாரவர்?"

"நமது தலைவர். மற்றும் ஆலோசகர்."

"எப்போது வருவார்?"

"வருகிற நேரம் தான்"

இப்படி புலவர் சொல்வதற்கும் அவர் கூறிய தலைவர் வருவதற்கும் சரியாக இருந்தது.

அந்த மனிதனைக் கண்டதும் குட்டுவனின் முகம் பேயறைந்த மாதிரி ஆயிற்று.

"இவனா?" என்று கேட்டுக் கொண்டு ஸ்தம்பித்துப் போனான்.





# அத்தியாயம் இருபத்து ஆறு



## *சதியாலோசனை*

புலவரின் விருந்தை உண்டு ஏப்பம் விட்ட குட்டுவன் விருந்தைச் சிலாகித்து பேசிவிட்டு, "தமிழகத்தின் மதுவிற்கு இணையான ஒன்று வேறு எந்த நாட்டிலும் கிடையாது. நமது பக்குவம் யாருக்கும் வராது!" என்று கூறித் தன்னோடு வந்தவனைத் தன் பணியாள் என்று அறிமுகப் படுத்திக் கொண்டு, நிமித்தகனிடம் நல்ல நேரம் பற்றிப் பேசிய போது தலைவர் வரும் வரை காத்திருக்கலாம் என்று புலவர் கூறியதும், "தலைவரா! அது யார்? இக்கூட்டத்திற்கே நான் தானே தலைவன்? என்னை மீறிய தலைவன் யார்?" என்று பலவாறு குழம்பிப் புலவரிடமே கேட்கவும் செய்தான்.

"புலவரே, இக்கூட்டம் என் சம்மந்தப்பட்டது. இதைக் கூட்டியவன் நான். இதில் கலந்து கொள்ள வேண்டியவர்களை



அழைத்ததும் நான். அப்படியிருக்கும் போது புதியதாக ஒரு தலைவர் எப்போது முளைத்தார்?"

"இளவரசே, நாமியவே கூட வேண்டும் என்று பத்து நாட்களுக்கு முன்பாக முடிவெடுத்தோம். ஆனால் அதற்கும் இரண்டு நாட்களுக்கு முன்பாக அவர் எங்கள் தலைவரானார். அவரை நேரில் பார்த்தால நீங்களே ஆச்சரியப் பட்டுப் போவீர்கள். அவரைத் தலைவராக நாங்கள் ஏற்றுக் கொண்டது போல் நீங்களும் நிச்சயம் ஏற்றுக் கொள்வீர்கள்." என்றார் புலவர்.

"யார் அப்படிப்பட்ட மாபெரும் தலைவர்?" என்று அவநம்பிக்கையுடன் கேட்டான் குட்டுவன்.

"இதோ அவரே வந்து விட்டார்!" என்று புலவர் சொல்ல, அனைவரும் எழுந்து நிற்க, அங்கு வந்து சேர்ந்த ஆபுத்திரன் எல்லோரையும் உட்காரும் படி கேட்டுக் கொண்டான்.

அவனைப் பார்த்ததும் தூக்கி வாரிப் போட்டது குட்டுவனுக்கு. சேரமன்னனுக்கு எதிராக பெரும் சதியில் ஈடுபடும் தன் கூட்டத்தில் சேரமன்னனின் செல்லப் பிள்ளையான ஆபுத்திரன் இடம் பெற்றது நம்ப முடியாதது மட்டுமின்றி விபரீதமாகவும் பட்டது. இனி தன் கதி அதோ கதி தான் என்ற முடிவிற்கு வந்த அவனை "இளவரசருக்கு என் வணக்கங்கள்." என்ற ஆபுத்திரனின் வார்த்தைகளே தெளிவடைய வைத்தன.

"ஆம். வணக்கம். வணக்கம்" என்றான் குட்டுவன் தடுமாறும் குரலில்.

இதைக் கண்ட ஆபுத்திரன் புலவரை நோக்கி "புலவரே, இளவரசருக்கு என்னைப் பற்றி எதையும் சொல்ல வில்லையா? என்னைப் பார்த்ததும் கடுக்காயைத் தின்ற மாதிரி ஆகி விட்டாரே. இதோ பாரும் புலவரே நான் சேரமன்னனின் விரோதியாகி விட்டது உண்மை. அதற்காக இளவரசரின் அடிமையாகி விட்டதாக எண்ணி விட வேண்டாம். நான் நினைத்தால் உங்கள் அனைவரையும் இப்போதே கைது செய்து கண்காணாத இடத்தில் வைத்துச் சித்ரவதை செய்ய முடியும்." என்றான் கோபத்துடன்.

"கோபம் வேண்டாம் ஐயா. இளவரசர் அப்படியெல்லாம் எண்ணவில்லை. அவருக்கு உங்களைப் பற்றி சொல்வதற்கு வாய்ப்பு கிடைக்காததால், தங்களைப் பார்த்ததும் திகைத்துப் போய் விட்டார்." என்றார் புலவர்.

"ஆபுத்திரரே, நீங்கள் சேரமன்னரின் விரோதியா? நல்ல கதை. சூரியன் மேற்கில் உதிப்பதாகச் சொல்லுங்கள். நம்புகிறேன்." என்றான் குட்டுவன்.

"குட்டுவரே, நீங்கள் நல்ல மாணவர். ஆனால் கிணற்றுத் தவளை."

"கிணற்றுத் தவளையா?"

"ஆம். உங்களுக்கு பரணரையும் அவரது பாடசாலையையும் தவிர, வேறு எதுவுமே தெரிந்திருக்க வில்லை."

இதைக் கேட்டு உள்ளூர அவமானப் பட்டாலும் குட்டுவன் அதைக் காட்டிக் கொள்ளவில்லை.



"நீங்கள் சொல்வது தவறு. கிணற்றுக்கு வெளியே நடப்பது என்னவென்று எனக்குத் தெரியும்."

"உங்களுக்குத் தெரிந்தது என்ன?"

"சேரமன்னரின் வலது கரம் நீங்கள். மன்னருக்கு அடுத்த அந்தஸ்தில் இருப்பவர் நீங்கள். உங்கள் பேச்சை அவர் தட்ட மாட்டார்." அது மட்டுமல்ல. மக்களால் பெரிதும் கவரப்பட்டு மக்கள் திலகம் என்று பெயர் பெற்றவர்.

"இந்த விஷயங்கள் ஊருக்கே தெரியும். ஆனால் உங்களுக்குத் தெரியாத சம்பவம் ஒன்றிருக்கிறது. அது தான் என்னை அடியோடு மாற்றி, மன்னரின் விரோதியுமாக்கி, இன்றைக்கு உங்களைப் போலவே சதிகாரனாகவும் ஆக்கியிருக்கிறது."

"இதென்ன பேச்சு ஆபுத்திரரே. நான் சதிகாரனாக மாறிவிட்டதாக யார் சொன்னது?"

"மனிதர் வர அஞ்சும் பொறைக் காட்டு இடுகாட்டிற்கு வருபவனுக்கு என்ன பெயர்? முட்டாள் கூட வரவிரும்பாத இடத்திற்கு இளவரசர் வந்தது எதற்கு? வசதியான இருக்கையில் அமர்ந்து கொண்டு நான்கு வரிகள் புகழ்ந்து பாடிவிட்டு நானூறு பொன் நாணயங்களைப் பரிசாகப் பெறும் புலவருக்கு, பைத்தியமா பிடித்திருக்கிறது இங்கு வர? நிம்மதியாக இருக்கும் துளு நாட்டை விட்டு, அதன் எழிலார்ந்த சோலைகளை விட்டு அங்கே விருந்தளிக்கக் காத்திருக்கும் விளங்கிழைகளை ஒதுக்கி விட்டு, பேய்கள் கூத்தாடும் இந்த கொடிய இடுகாட்டிற்கு துளு நாட்டுச் சேனாதிபதி வந்திருப்பது எதற்கு? விருந்துண்டு உறங்கவா? குட்டுவரே, நாமிருவருமே அநீதியை எதிர்த்துப் போராட வந்திருக்கிறோம்

என்பதை மறக்கவும் வேண்டாம். மறைக்கவும் வேண்டாம். உங்களுக்கு அரசுரிமை மறுக்கப் படுகிறது. அதற்காக நீங்கள் போராடுகிறீர்கள். எனக்கு என்ன நடந்தது தெரியுமா?"

"உங்களுக்கு அநீதி இழைப்பவர்கள் சேர நாட்டில் இருக்கிறார்களா? யார் அது?"

"குட்டுவரே, செங்குட்டுவர் உங்களுக்கு அநீதி இழைக்கிறார் என்பதை நீங்கள் நம்புகிறீர்களா?"

"நம்புவதென்ன! தீர விசாரித்து விட்டேனே!"

"பெற்ற தந்தை தன் மகனுக்கு அநீதி இழைப்பதை விட சம்மந்தமில்லாத எனக்கு இழைப்பது முடியாத காரியமா?"

"செங்குட்டுவரா உங்களுக்கு அநீதியை இழைத்தார்? நம்பமுடியவில்லையே!" என்று உண்மையாகவே நம்ப முடியாமல் கேட்டான் குட்டுவன்.

"உங்களுக்கு அரசுரிமை இல்லை என்ற அவரது நோக்கம் மட்டும் உங்களால் நம்பமுடிந்ததா? குட்டுவரே, வெள்ளைத் தீவுக்கு நான் போய் வந்த விஷயம் உங்களுக்குத் தெரியுமோ என்னவோ! அந்த வெள்ளைத் தீவு விவரத்தைக் குழப்பி ஐம்பெருங்குழு என்னை விசாரித்தது. குற்றவாளி என்று கூறி என் மீது குற்றத்தைச் சுமத்தி எனக்கு மூன்று ஆண்டுகள் சிறை விதித்து விட்டது. இத்தனை நாட்களாக நான் இந்த நாட்டிற்குச் செய்திருக்கும் சேவையை யாரும் நினைத்துப் பார்க்கவில்லை. மன்னராவது குறுக்கிட்டு என் தண்டனையை போக்கியிருக்கலாம். அவர் தலையிடவே இல்லை."

"ஆபுத்திரரே, ஐம்பெருங்குழுவின் செயல்பாடுகளில் குறுக்கிடும் அதிகாரம் மன்னருக்குக் கிடையாது என்பது உங்களுக்குத் தெரியாதா?"



"தெரியும். ஆனாலும் இந்த விதிகளை மன்னர் தானே உண்டாக்கினார்? என் ஒருவனுக்காக அதைத் தளர்த்தக் கூடாதா? நான் என்ன கொலைக் குற்றம் செய்தேனா? ராஜதுரோகமிழைத்தேனா? குட்டுவரே, மன்னருக்கு அடங்காத அமைப்பு எந்த நாட்டிலும் இருக்கக் கூடாது. அப்படியிருந்தால் அந்த மன்னன் வெறும் பொம்மையாகத் தான் இருப்பான்."

"ஆபுத்திரரே, தங்களுக்காக மன்னர் விதியை தளர்த்தினால் பிறகு பலரும் அவ்வாறு கோரிக் கொண்டு நிற்பார்கள் அல்லவா?"

"நீங்கள் சுயநினைவோடு தான் பேசுகிறீர்களா என்று எனக்குத் தெரியவில்லை. நாளைக்கு இதே ஐம்பெருங்குழு கூடி நீங்கள் பரிசாக அளிக்கப் பட்ட பொருள். உங்களுக்கு அரசுரிமை கிடையாது என்றால் பேசாமல் போய் விடுவீர்களா? மன்னர் இது விஷயமாகத் தலையிட முடியாது என்றால் ஒப்புக் கொள்வீர்களா? நான் கூறுவது, மிக முக்கியமான விஷயத்திலாவது மன்னரின் மேலாண்மை தேவை. இது எனக்கில்லை என்றாலும் உங்களுக்காவது உதவும்"

ஆபுத்திரன் கூறியதில் உண்மையிருப்பதை உணர்ந்த குட்டுவன், தக்க சமயத்தில் இதைச் சுட்டிக் காட்டியதற்காக மகிழ்ச்சியும் அடைந்தான். தந்திரமும், திறமையும், வீரமும், செல்வாக்கும் பெற்ற ஆபுத்திரன் தனது செயலுக்கு ஆதரவாக வந்தது தனது பாக்கியம் தான் என்று கருதிய அவன் "நீங்கள் இது பற்றி மன்னரிடம் கேட்டீர்களா?" என்று கேட்டான்.

"கேட்டேன். குற்றவாளிகளை மன்னிப்பதை விட குற்றவாளிகளைப் பிடிக்காமல் விட்டு விடலாம் என்றார்.

"மன்னனின் பேச்சாக இல்லை"

"குட்டுவரே. நான் நாட்டிற்கு நிறைய சேவைகளை செய்திருக்கிறேன் என்பதைச் சுட்டிக் காட்டினேன். நாட்டிற்கான சேவை என்பது கைம்மாறு கருதாத விஷயம் என்றார் மன்னர். ஐம்பெருங்குழு விஷயத்தில் குறுக்கிடவும் மறுத்து விட்டார்."

"பிறகு?"

"எனக்கு வழங்கப் பட்ட தண்டனையைப் பற்றி மக்களிடம் சொன்னால் புரட்சி வெடிக்கும் என்று சொன்னேன். மக்களின் சக்தியை உணர்ந்த மன்னர் ஐம்பெருங்குழுவிடம் பேசினார். என் மீதான தண்டனையை ஆறுமாதங்களுக்குத் தள்ளி வைப்பதாகத் தெரிவித்தார்கள். இந்த ஆறுமாதங்களில் மக்களை எனக்கெதிராகத் திருப்புவார்களோ - அல்லது என்னையே கொன்று விட்டு விபத்து என்று கூறிவிடுவார்களோ - எது வேண்டுமானாலும் நடக்கும். ஆகவே ஆறுமாதத்திற்குள் நமது காரியங்கள் நிறைவேற வேண்டும்."

ஆபுத்திரன் கூறிய விஷயங்களை குட்டுவனால் நம்பாமல் இருக்க முடியவில்லை.

"இப்புலவர் கூட்டு உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?"

"தற்செயலாகத் தான். புலவரிடம் என் மனக்குமுறலைக் கூறினேன். அதைக் கேட்ட அவர் எனக்கு ஆறுதல் கூறி வஞ்சிக் கோட்டையில் மிளகுச் சந்தையில் வணிகரைப் போல உலவி ஒற்றறியும் துளுநாட்டுச் சேனாதிபதியிடம் அழைத்துப் போனார். உங்களது நிலைமை பற்றியும் முயற்சிகளைப்



பற்றியும் சொன்னார். இருவரும் ஒரே திசையில் தான் பயணம் செய்கிறோம் என்பது புரிந்தது. என்னை இக்கூட்டத்திற்குத் தலைவனாக இருக்கும் படி கேட்டுக் கொண்டார்கள். இங்கே பதவியை விட காரியமே முக்கியம் என்பதால பதவியை ஏற்றுக் கொண்டேன். இப்பதவியை நான் ஏற்பது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் நீங்கள் ஏற்றுக் கொள்ளலாம்" என்றான் ஆபுத்திரன்.

குட்டுவனுக்கு இருந்த சந்தேகங்கள் அனைத்தும மறைந்து போய் ஆபுத்திரனின் மீது அபார நம்பிக்கை பிறந்தது.

"தங்கள் திட்டம் என்ன?" - என்று கேட்டான்

"மன்னனைக் கொல்வது." என்றான் ஆபுத்திரன்.

"தன் தந்தையைக் கொல்லப் போவதாக ஆபுத்திரன் கூறியது குட்டுவனுக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது. தந்தையை எதிர்த்து சதியில் ஈடுபட்டிருந்த அவனுக்குக் கூட அரச பீடம் ஏறவேண்டும் என்பது தான் எண்ணமாக இருந்ததே தவிர தந்தையைக் கொலை செய்ய வேண்டும் என்ற எண்ணம் சிறிதுமில்லை. அச்செயல் பெரும் விளைவுகளை உண்டாக்கித் தன் எதிர் காலத்தையே இருண்டு விடச் செய்து விடும் என்று கருதிய அவன் ஆபுத்திரனைத் தயக்கத்துடன் பார்த்து "கொலை அவசியமா?" என்று கேட்டான். ஆபுத்திரனின் திறமையைப் பற்றி அவன் நன்கறிந்ததால் கொலை செய்வது என்று முடிவு செய்து விட்டால் நிச்சயம் நிறைவேற்றி விடுவான் என்று நம்பினான்.

"சதிகாரர்கள் பேச்சு வார்த்தையா நடத்த முடியும்" கேட்டான் ஆபுத்திரன்.

"அப்படி நான் சொல்லவில்லை நமது தரப்பில் படையைக் கூட்டி அரசுரிமைக்காக மன்னனை நிர்பந்திப்பது - மிரட்டுவது என்று ஏதாவது செய்யலாம்"

"உங்கள் நினைப்பு குழந்தைத் தனமாக இருக்கிறது. உங்கள் மிரட்டல்களுக்கு மன்னன் அஞ்ச மாட்டான். உங்கள் சதியை அம்பலப் படுத்திச் சிறை செய்து விடுவான். அதோடு உங்களை ஆதரிக்க அரண்மனையில் யார் இருக்கிறார்கள். கேவலம் அந்தத் தூதுவன் சஞ்சயன். அவனே உங்களையும் உங்கள் மிரட்டல்களையும் கண்டு அஞ்சவில்லை. நீங்கள் கொடுத்த ஓலைகளை மன்னரிடமே கொடுத்து உங்களைப் பற்றிய எல்லா விவரங்களையும் சொல்லிவிட்டான். மன்னனும் உங்களைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபடத் தொடங்கி விட்டான். நீங்கள் மாறுவேடம் போட்டுக்கொண்ட காரணத்தால் யாராலும் உங்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை. இந்த நிலையில் நீங்கள் வெளிப்படையாக வந்து யாரோடும் பேச்சு வார்த்தை நடத்த முடியாது. மன்னன் அதற்கு அனுமதிக்கவும் மாட்டான். பேசாமல் நீங்கள் மன்னன் அளித்த ஓலைகளை எடுத்துக் கொண்டு உறையூருக்குப் போயிருந்தால் மன்னனுக்கு உங்கள் மீது நம்பிக்கையாவது வந்திருக்குமல்லவா?"

குட்டுவனின் முகம் பேயறைந்த மாதிரி ஆகிவிட்டது. தன் சுயரூபம் மன்னனுக்குத் தெரிந்து விட்டதால் தனக்கு ஒருபோதும் அரசுரிமையைத்தரமாட்டான் என்பது தெளிவாகப் புரிந்து விட்டது அவனுக்கு. எனவே ஆபுத்திரனிடம் பேச முற்பட்டு "இப்போது புரிகிறது ஆபுத்திரரே. என் தந்தை உயிரோடு இருக்கும் வரை என் ஆசை நிறைவேறாது. உங்கள் திட்டம் தான் சரி" - என்றான்.



"இப்போது தான் தெளிவாகப் பேசுகிறீர்கள்." என்று குட்டுவனைப் பாராட்டிய ஆபுத்திரன் "நமது துளுநாட்டு சேனாதிபதி தனது படைகளை, வணிகர்களாக கொஞ்சம் கொஞ்சமாக வஞ்சிக் கோட்டையில் சேர்ப்பார். புலவர், சமணர்களை மன்னனுக்கு எதிராகத் திருப்பும் வேலையைச் செய்வார். திடீரென ஒருநாள் வஞ்சியில் குழப்பம் உண்டாகும். அதைப் பயன்படுத்தி மன்னனை நான் கொல்வேன். நீங்கள் முனிவராகவே அரண்மனைப் பகுதியில் இருந்து கொண்டு, நான் கொலை செய்து முடித்ததும் வெளிப்படுங்கள். அப்போது அரசுரிமையை உங்களுக்கு மறுக்க யாராலும் முடியாது. என்ன சம்மதமா?" என்று கேட்டதும் எல்லோரும் தலையை ஆட்டினார்கள்.

"நான் இவரிடம் தனிமையில் சில விஷயங்களைப் பேச வேண்டும். நீங்களெல்லாம் புறப்படுங்கள். எச்சரிக்கை." என்றான் குட்டுவன்.

அதையடுத்து புலவர், துளுநாட்டுச் சேனாதிபதி, நிமித்திகன் மற்றும் பணியாள் ஆகியோர் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றார்கள்.

"நாம் இனிப் பேசப் போகும் விஷயம் என் தனிப்பட்ட விஷயம். அதை இந்தச் சுடுகாட்டில் பேசவேண்டாம். இக்காட்டிற்கு அப்பால் பழங்கால கோயிலொன்று இருக்கிறது. அங்கே போய்விடலாம்." என்று கூறி எழுந்து கொண்ட குட்டுவன், பூதமணிதனை வழிகாட்டும் படிச் சொல்லி விட்டு அவன் பின்னே நடந்தான். ஏறக்குறைய நள்ளிரவு நேரம் தாண்டி விட்ட படியால் அடர்ந்த அக்காட்டில் அமானுஷ்ய சப்தங்கள் பல கேட்டபடியே இருந்தன. "இங்கே எந்த விலங்கையும் சமாளித்து விடலாம். அடக்கி ஒடுக்க செய்து

விடலாம். ஆனால் இந்தப் பேய்களை மட்டும் ஒன்றும் செய்ய முடியவில்லை. பயந்தவர்களும் பலவீனமானவர்களும் வந்து சிக்கிக் கொண்டால் அவர்கள் உடல்களில் பிரவேசித்து ரத்தம் கக்க வைத்து சாகடித்து விடுகின்றன. அவற்றின் அவல ஓலங்களும் ஆவேச ஓலங்களும் தான் இக்காட்டின் நிரந்தர சொத்து. இங்கே இந்த பூத மனிதனைப் போன்ற நாகர் வம்சத்து காட்டுவாசிகள் மட்டுமே வாழமுடியும்.'' என்றான் குட்டுவன்.

விரைவிலேயே காட்டைத் தாண்டி ஓடிய ஆற்றங்கரையில் இருந்த பழங்காலத்து கோயிலொன்றை அவர்கள் அடைந்தார்கள். பௌர்ணமி நிலவொளியில் அந்த ஆலயம் தேவலோகத்தைப் போல் காட்சியளித்தது. சிற்சில இடங்களில் இடிந்து போயிருந்தாலும் அது கூட காண்பதற்கு அழகாகவே இருந்தது. கண்களுக்கு விருந்தளித்த அந்த கோயிலில் சிலை ஏதும் இல்லாததால் எப்போதுமே அமைதியில் மூழ்கியிருந்தது. அங்கிருந்த மண்டபம் ஒன்றில் போய் இருவரும் அமர்ந்து கொண்டார்கள்.

குட்டுவன் பேசமுற்பட்டு "ஆபுத்திரரே, மன்னர் எனக்கு அரசுரிமை கிடையாது என்பதைத் தன்வாயால் சொல்லாமல் போனாலும் உணர்த்திவிட்டார். நான் என் நியாயத்தைப் பற்றி பேசிய போது அவர் என் தகுதியைப் பற்றிப் பேசினார். இரண்டு ஓலைகளை என்னிடம் கொடுத்து உறையூருக்கும் இலங்கைக்கும் போகும் படிச் சொன்னார். இப்பணியைச் சரிவர முடித்தால் எனக்குத் தகுதியிருப்பதாகக் கருதி இளவரசு பட்டம் கட்டுவதாகச் சொன்னார். அவரது பேச்சும் செயலும் எனக்கு ஏற்புடையதாக இல்லை. வாரிசு அரசியலில் தகுதி எங்கிருந்து வருகிறது? இலங்கைக்கு அனுப்பி, மன்னர் இங்கே ஏதோ சூழ்ச்சி செய்யப் போகிறார் என்று கருதிய நான் ஓலை





ஆற்றங்கரைக் கோயிலில்

சுமக்கும் பணியை சஞ்சயனுக்கு மாற்றி விட்டு, என் அரசுரிமைக்கான வேலையில் ஈடுபட தீர்மானித்தேன். ஏற்கனவே அரசவையில் புலவராக இருந்து கொண்டு என் ஒற்றராகச் செயல் படும் பரணனாரிடம் தொடர்பு கொண்டேன். அவர் தூது நாட்டு சேனாதிபதியை அறிமுகப் படுத்தினார். இவ்விருவர் மூலம் மன்னனுக்கு எதிரியாகத் திரும்பக் கூடிய பலரை ஒருங்கிணைத்து மன்னனை இக்கட்டில் ஆழ்த்தி அரசுரிமையைப் பெறவிருந்தேன். இந்த நிலையில் தான் நீங்கள் வந்து சேர்ந்து எனக்குப் பால் வார்த்தீர்கள். என் கண்களைத் திறந்தீர்கள். இனி அரசுரிமை பற்றி எனக்குக் கவலையில்லை. அது எனக்குக் கிடைத்து விடும். ஆனால் இன்னொரு விஷயம் தான் பெரும் பிரச்சனையாக இருக்கிறது. அதை சதியாலோசனைகள் மூலம் அடைய முடியாது. ஆகவே தான் உங்கள் உதவியை அந்தரங்கமாகக் கோருகிறேன். நீங்கள் தான் இதை வெற்றிகரமாக முடித்துத் தரவேண்டும்" என்றான்.

"சொல்லுங்கள்."

சொன்னான் குட்டுவன்.

ஆபுத்திரனுக்குத் தன் தலையில் இடி விழுந்த மாதிரி இருந்தது.



குட்டுவன் ஏதோ பீடிகை போடுகிறான் என்று தெரிந்ததுமே விரும்பத் தகாத விஷயம் அவன் வாயிலிருந்து வந்து விழக் கூடும் என்று எதிர் பார்த்தான் ஆபுத்திரன். ஆனால்



குட்டுவன் கூறிய விஷயமோ எதிர் பாராததாக அவனது தலையில் இடியென இறங்கியது.

"சொல்லுங்கள்." என்று ஆபுத்திரன் கூறியதும் "நீங்கள் நான் கேட்கும் உதவியைத் தவறாக எண்ணி விடக் கூடாது." என்றான் குட்டுவன்.

"வீண் பீடிகைகள் வேண்டாம். விஷயத்திற்கு வரலாம்." என்றான் ஆபுத்திரன்.

"புலவர் பரணரின் மகள் பூங்கொடியை நான் உயிரினும் மேலாக விரும்புகிறேன். எனக்கு வாழ்க்கை என்று ஒன்றிருந்தால் அது அவளோடு தான். அவளைப் பார்க்கும் போதெல்லாம் அவள் எனக்காகவே பிறந்தவள் என்று தோன்றுகிறது. நானும் அவளுக்காகத் தான் பிறந்திருக்க வேண்டும்." என்றான் குட்டுவன்.

இதைக் கேட்டு ஆபுத்திரனுக்கு அழுவதா சிரிப்பதா என்றே தெரியவில்லை.

தானும் பூங்கொடியும் காதலர்களாக இருக்க, தன்னை சௌமிய குமாரி விரும்புவதும் பூங்கொடியை குட்டுவன் விரும்புவதும் விசித்திரங்களாகத் தோன்றியது ஆபுத்திரனுக்கு. தானும் பூங்கொடியும் கண்ணியமானவர்களாக நடந்து கொண்டு பிறர் மனதை நோகடிக்காமல் பேசவேண்டும் என்று வினயமான பேச்சை கடைப் பிடித்துக் கொண்டு வாழும் போது, ஏன் இப்படி தேவையில்லாத சிக்கல்கள் வருகின்றன என்று தனக்கும் தானே கேட்டுக் கொண்ட அவன் குட்டுவனைப் பார்த்து 'இந்த விஷயத்தில் நான் என்ன செய்ய முடியும்?" என்று வினவினான்.

"உங்களால் ஆகாதது உண்டா? உங்கள் சொற்களுக்குக் கட்டுப் படாதவர்கள் உண்டா?"

"குட்டுவரே இது உங்கள் தவிப் பட்ட காதல் விஷயம். உங்களைக் காதலிக்கும் படி எந்த பெண்ணையும் நான் கட்டாயப் படுத்தக் கூடாது."

"இதில் கட்டாயம் எங்கே வருகிறது? நீங்கள் ஒருவார்த்தை சொன்னால் அவள் கட்டுப் படுவாள்."

குட்டுவனுக்கு எப்படி விளங்கவைப்பது என்று ஆபுத்திரனுக்கு விளங்கவில்லை.

"குட்டுவரே, உங்கள் அன்பை பூங்கொடியிடம் சொன்னீர்களா?"

"விளக்கமாகவே சொல்லிவிட்டேன். அவளோ முட்டாளாகப் பேசுகிறாள்."

"முட்டாளாகவா?"

ஆம். என் தந்தை என்னை அவளது தந்தை பரணருக்குப் பரிசாக அளித்து விட்டதால் நான் அவளது சகோதரனாம்!"

"வாதம் சரியாகத் தானே இருக்கிறது?"

"இது வாதமல்ல, அபவாதம். எந்த மன்னனாவது தன் மகனைப் போய் பரிசளிக்க முடியுமா? பொன்னையும் மணியையும் போலவும் யானையும் பூனையும் போலவும் நான் வாயில்லா பூச்சியா? எனக்கு உணர்ச்சிகள் கிடையாதா! அதோடு அடுத்த பட்டமேற வேண்டிய என்னை ஒருவருக்குப் பரிசளிப்பதாக இருந்தால் என்னைக் கேட்க வேண்டாமா? பரிசாக அளிப்பதால் உண்டாகக் கூடிய விளைவுகளைப் பற்றி



சிந்திக்க வேண்டாமா? எதையும் செய்யாமல் அவர் என்னைத் தானம் செய்தாராம். புலவரும் ஏற்று தன் மைந்தனாக்கிக் கொண்டாராம். ஆகவே பூங்கொடிக்கு நான் சகோதரனாம். இதெல்லாம் பைத்தியக் காரத்தனங்கள் இல்லையா?" மட மட வென வார்த்தைகளைக் கொட்டினான் குட்டுவன்.

"இப்போது தான் நிலைமை மாறப் போகிறதே குட்டுவரே. நாம் செய்யப் போகும் காரியங்களில் மன்னன் இறக்கப் போகிறார். நீங்கள் இளவரசர் ஆகப் போகிறீர்கள். பரணரையும் சிறையில் வைத்து விடலாம். அதற்குப் பிறகு இந்தச் சகோதர-சகோதரி உறவு எங்கே வரப் போகிறது? எல்லாம் உங்கள் இஷ்டம் தானே?"

"சரியாகச் சொன்னீர்கள் ஆபுத்திரரே. நமது முயற்சியில் எங்காவது தவறு நடக்குமானால் நான் பூங்கொடியைத் தூக்கிச் சென்று கந்தர்வ விவாகம் செய்து கொள்ளவும் தயாராக இருக்கிறேன்."

"அந்த நிலை வரப் போவதில்லை. அவசரப்பட்டு காரியங்களைச் செய்ய வேண்டாம். விவேகத்துடன் செய்ய வேண்டிய நேரம் இது. நான் சொன்னபடி நடந்து கொள்ளுங்கள். அடுத்த பௌர்ணமிக்கோ - தேவைப் பட்டால் அதற்கு முன்பாகவோ நாம் மீண்டும் சந்திக்கலாம்." என்று சொன்ன ஆபுத்திரன் தான் சிறிது ஓய்வெடுத்து விட்டு வருவதாகக் கூறி குட்டுவனை அனுப்பி வைத்தான். பூதமணிதன் விட்டு வைத்த பந்தம் மட்டும அங்கேயே எரிந்து கொண்டிருந்தது.

பலத்த சிந்தனையுடன் அமர்ந்திருந்த ஆபுத்திரன் சிறிது நேரத்திற்குப் பின் நிலவொளியில் தெரிந்த அந்த அழகான ஆலயத்தை ஒருமுறைச் சுற்றி வந்தான். அக்காலத்தில் கோபுரங்களுடன் கூடிய ஆலயங்களை தமிழக மன்னர்கள் அமைப்பதில்லை. அதுவும் கருங்கற்களைக் கொண்டு அமைப்பதில்லை. எனவே, ஏதோ ஒரு தனி நபர் தன்னிடம் இருந்த பெரும் பொருளைக் கொண்டு கைதேர்ந்த சிற்பிகளின் உதவியோடு இந்த ஆலயத்தை எழுப்பியிருக்க வேண்டும் என்றும், என்ன காரணத்தாலோ அதில் உருவச் சிலை எதையும் நிறுவப்படாமல் போயிருக்க வேண்டும் என்றும் கருதினான் ஆபுத்திரன். அதோடு இந்த ஆலயத்திற்கு வரவேண்டுமானால் பொரைக்காடு வழியாகத் தான் வரவேண்டும் அல்லது நதியின் வழியாக வரவேண்டும். இந்த இரண்டுமே அபாயகரமானதாக இருந்து பொதுமக்கள் யாரும் வரமுடியாமல் ஒதுக்கி விட்ட காரணத்தால், பராமரிப்பும் கவனமுமின்றி இவ்வாலயம் ஆங்காங்கே சிதைந்திருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்ட ஆபுத்திரன் கருவறைக்குச் சென்று காலியாய் இருந்த பீடத்தைக் கண்டான். அவனது உள்ளுணர்வு ஏதோ கூறவே, காலியாக இருந்த பீடத்தைத் தொட்டு அழுத்திப் பார்த்தான். அப்போது அவனது பின் மண்டையில் பலமான அடி விழுந்தது.

மயங்கி விழுந்தான் ஆபுத்திரன்.





## அத்தியாயம் இருபத்தேழு



## சேரன் போற்றிய சோழன்

"போதும். எத்தனை முறை தான் இப்படியே செய்வீர்கள்? விடுங்கள்." என்று சிணுங்கினாள் அந்தப் பெண்.

"இதில் கணக்கென்ன இருக்கிறது? எனக்குத் தேவையான வரை கொடுக்க வேண்டியது உன் கடமை" என்றான் ஆடவன்.

"இப்படியே போய்க் கொண்டிருந்தால் உதடுகள் கிழிந்து விடும்." என்றாள் அவள்.

"உன்னிடம் சுவைப்பதற்கு உதடுகள் மட்டும் தானா இருக்கின்றன?" கேட்டான் ஆடவன்.

'நல்லதுதான்' என்று சொல்லி அவள் சிரித்த போது மேலுமொரு முத்தத்தை அழுத்தம் கொடுத்த அந்த வாலிபன் உதடுகளைக் கடிக்கவும் முற்பட்டபோது 'ஊ' என்றாள் அவள்.

"வலிக்கிறதா? வேதனைப்படு. உன் வேதனையில் தான் என் சுகம் இருக்கிறது. எனக்கென்ன எல்லா ஆடவர்களின் சுகமும் அப்படிப் பட்டது தான். இதற்குக் காரணம் நீ தான்."

"நானா?"

"நீ அழகாக இருப்பதால் தானே எங்களுக்கெல்லாம் ஆசை வருகிறது?"

"உங்களிடம் இம்சைப் படத்தான் நாங்கள் அழகாகப் பிறக்கிறோமா என்ன?"

"ஆமாம். நாங்கள் மட்டும் இல்லையென்றால் அழகை மட்டும் வைத்துக்கொண்டு என்ன செய்ய முடியும் உங்களால்? அழகோடு ஆடவனின் அனுபவம் சேரும் போது தான் அழகானது தன் பிறவிப் பயனை அடைகிறது!"

"நீங்கள் கூட வேதாந்தம் பேசுகிறீர்களே!"

"நான் மட்டுமல்ல. எல்லோருமே பேசுவார்கள். தத்துவங்கள் பிறப்பதற்குக் காமம் ஒரு கருவியாக இருக்கிறது. காமக்களிப்பு உடலுக்கும் மனத்திற்கும் பூரண சுகத்தைத் தருகிறது. அச்சுகம் தான் தத்துவங்களையும் வேதாந்தங்களையும் பேசவைக்கிறது."

"காமம் தான் அறிவைக் கெடுக்கிறது என்று தானே எல்லோரும் சொல்வார்கள்?"

"காமத்தை அரைகுறையாக அனுபவித்து விட்டு



ஏக்கத்தில் இருப்பவர்களுக்குத் தான் அந்த நிலை. காமத்தில் கரை கண்டவர்களுக்கு அந்த நிலை இல்லை."

"அப்படியானால் நீங்கள் கரை கண்டுவிட்டீர்களா?"

"காமத்திற்கு ஆற்றுக்கு இருப்பது போல் கரை இருக்கும் என்று நினைத்தேன். இறங்கிய பின் தான் கரையே இல்லை என்று புரிகிறது." என்று கூறிய படி தன் உதடுகளை அவளது உதடுகளிலிருந்து கழுத்தில் புதைத்தான்.

"உங்கள் குறுந்தாடி குத்துகிறது. இம்சை. இம்சை" என்றாள் அவள் புரண்டபடி.

"தாடி தான் எங்களுக்கு உயிர்தாடி. அதை விடமுடியுமா?" என்று கேட்டான் வாலிபன்.

"நீங்கள் இப்போதைக்குப் பேச்சை விட்டால் போதும்"

"ஏன் பேச்சு தடையாக இருக்கிறதா?"

"பின்னென்ன? இந்த நேரத்தில் பேசென்ன வேண்டிக் கிடக்கிறது? அதுவும் பிதற்றல் பேச்சு."

"ஒப்புக் கொள்ள வேண்டிய விஷயம தான். யாருக்கு வேண்டும் பேச்சும் பிதற்றலும்" என்று சொன்ன அவன் சேஷ்டைகளை அதிகப் படுத்தினான். ஏற்கனவே காம உணர்வுகளால் கிளர்ச்சியுற்றிருந்த அவள் அவனது சேஷ்டைகளை அனுமதித்தாள். அவளப்படி அனுமதிக்கும் நிலையில் அவளது உடல் புரண்ட விதம் அவனை வெறி கொள்ள வைத்தது. "உனக்கு அத்தனை தேவையாக இருக்கிறதா? இதோ பார்" என்று சொல்லிக்கொண்ட அவன் அவளை எலும்புகள் நொறுங்கும் படி இறுக்கினான். அந்த இம்சையை ஆனந்தித்தபடி பெருமூச்செறிந்தாள் அவள்.

அவனது பெருமூச்சின் உஷ்ணம் அவனது உடலில் ரூடாகப் பரவியதை உணர்ந்த அவன் இனி மனிதனாக இருப்பது சரியில்லை என்று மிருகமானான். அதை உடனடியாகவே உணர்ந்து கொண்ட அவள் தானும் மிருகமானாள். மனிதராகப் பிறந்த இருவர் காமத்தை அபரிதமாக வெளிப்படுத்த விரும்பும் போது மிருகங்களாகத் தான் மாறி விடுகிறார்கள். அந்த நேரத்தில் அவர்களுக்கு என்ன செய்கிறோம் என்பதும் விளங்குவதில்லை. இப்படிச் செய்யலாமா என்பதும் இப்படியெல்லாம் செய்யலாமா என்பதும் விளங்குவதில்லை. உணர்வதெல்லாம் இன்பம், இன்பம். அது ஒன்று தான். ஆன்றோர்கள் ஆயிரம் பேர் கண்டித்தாலும் அதையெல்லாம் அசட்டை செய்து அனுபவப்படத் தூண்டும் விஷயம் காமம் ஒன்று தான்.

காலம் நேரம் உணராத ஞானியைப் போல் நெடுநேரம் வரை காமத்தில் சொக்கி அதில் சிக்கி பின் மூழ்கி அதன் ஆழம் வரை விஸ்தாரமாகச் சென்று மீண்ட அவர்கள், குளித்து விட்டு பலகார வகைகளை அருந்திய பின் "போய் நம் விருந்தினரைப் பார்க்கலாம்" என்று புறப்பட்டார்கள்.

சுற்றிலும் ஒருபுறம் நோட்டம் விட்ட அந்த வாலிபன் "ரம்மியமான இந்த இடத்திற்கு எப்போது வந்தாய்? சுரங்கம் இங்கிருப்பதை எப்படிக் கண்டு பிடித்தாய்?" என்று கேட்டான்.

"இலங்கையிலிருந்து சேரநாட்டிற்கு வந்த பிறகு எனது திட்டங்களும் ஆசைகளும் நிறைவேறாத போது, நானும் என் தோழிகளும் வஞ்சி நகரை விட்டு விலகி ஒதுங்கியிருந்த இப்பகுதிக்கு வந்தோம். இங்குள்ள அழகு எங்களை மயக்கி விட்டதால் இங்கேயே மயில் போல் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தோம். ஒரு நாள் தோழியொருத்தி கீழே விழுந்து



அவளது கால்களில் கொடிகள் சிக்கிக் கொண்டன. அவற்றை நீக்க முற்பட்ட போது பூமியின் மீது கல்லொன்று நகர்ந்து சுரங்கமிருப்பதைப் புலப்படுத்தியது. நாங்கள் ஒன்றுக்குப் பத்து பேராய் இருந்ததால் தைரியமாகச் சுரங்கத்திற்குள் பிரவேசித்தோம். அது ஆலயம் ஒன்றின் கருவறையில் போய் முடிந்தது. கருவறைப் பாதையைத் தாக்கி விட்டு மேலே வந்தால் எத்தனை அழகான ஆலயம்! இந்த நாட்டு மட்டுமே சுட்டப்படக் கூடிய அழகின் சிகரமான ஆலயம் அது. நானும் என் தோழிகளும் ஆலயத்தையே தேவலோகமாக நினைத்து ஆடினோம். ஆலயத்திற்கு வேறு புறமாக வர வேண்டுமானால் ஆற்றைக் கடந்து காட்டைக் கடந்து போக வேண்டியிருந்தது. ஆற்றிலே தண்ணீரை விட முதலைகளே அதிகமாக இருந்ததால் அந்த வழியைப் புறக்கணித்து விட்டு ஆலயக் கருவறை மூலமாகவே நுழைந்து இங்கு வந்து சேர்ந்தோம். இந்த இடம் வஞ்சிமாநகருக்கு நேராகப் பல காததூரம் தள்ளி மேற்கு தொடர்ச்சி மலையின் அடிவாரத்தில் இருக்கிறது. நானும் என் தோழிகளும் அடிக்கடி இங்கு வந்து சுரங்கப் பாதை மூலமாக ஆலயத்திற்குச் சென்று பொழுது போக்கிக் கொண்டு வந்தோம். கொஞ்சம் கொஞ்சமாக தோழிகளின் எண்ணிக்கை குறைந்து விடவே நானும் வருவதை நிறுத்திவிட்டேன். உங்களோடு மீண்டும் வஞ்சி மாநகருக்கு வந்த நான் இந்த அழகான இடத்தை உங்களுக்குக் காட்டுவதற்காக அழைத்து வந்தேன். நாமும் நம் வீரர்களும் சுரங்கப் பாதையில் சென்றோம். ஆலயக்கருவறையில் நுழைந்த போது அங்கே அடிபட்டு வீழ்ந்து கிடந்தான் ஆபுத்திரன். வீரர்களைக் கொண்டு அவனைத் தூக்கி வந்து அந்த மலைக்குகையில் போட்டு கொல்லும் படி சொல்லி விட்டு வந்தோம்." என்று சொன்ன அந்தப் பெண் "பின்னர்

"இதற்கு பதில் சொல்லவேண்டும் என்று நினைக்கிறாயா?" என்றான் அமீர் அந்த நிலையிலும்.

அதையடுத்து வாயிலிருந்து ஒரு சத்தத்தை எழுப்பினான் ஆபுத்திரன்.

அதையடுத்து பசுக்களும் பசுக்களுக்கு உரியவருமாய் பலர் அங்கு சேர்ந்தார்கள்.

"அமீர், இது நான் பிறந்த இடம். இந்தப் பசுக்களும் இடையர்களுமே என் பெற்றோர். இந்த இடத்தில் நீ வந்து சேர்ந்தது உன் புண்ணியம். நீ பிழைத்தாய்" என்று சொன்ன ஆபுத்திரன் இடையர்களைப் பார்த்து "இவனுக்கு வைத்தியம் செய்து ஏதாவது ஒரு கப்பலில் ஏற்றி வெள்ளைத் தீவுக்கு அனுப்பி விடுங்கள்." என்றான்.

'மகனே, உன் தலையில் என்ன காயம்? உனக்குக் காயத்தை ஏற்படுத்திய இவனை ஏன் நாங்கள் காப்பாற்ற வேண்டும்?" என்று கேட்டார் ஒரு முதியவர்.

"காயத்திற்கும் இவனுக்கும் சம்மந்தமில்லை."

"உங்கள் காயத்தைப் பார்க்க வேண்டாமா?"

"பயப்பட எதுவும் இல்லை. நான் பார்த்துக் கொள்கிறேன். ஒரு புரவியை மட்டும் ஏற்பாடு செய்யுங்கள்."

அனைத்தும் உடனடியாக நடந்தன.

இந்தக் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தப்பியிருந்தாள் பவானி.





அவனைப் பற்றிக் கவலைப்படாமல் இடையர் குல பெருமக்கள் தந்த புரவியில் ஏறி வஞ்சியை அடைந்தான். அப்போதே பொழுது புலர்ந்து விட்டிருந்த படியால் குளித்து விட்டு நேராக மன்னரது மாளிகைக்குச் சென்றான். மாளிகைக்குப் பின்னாலிருந்த பளிங்கு நீரோடையின் கரையில் கதிரவன் வழிபாடு செய்து கொண்டிருந்த மன்னனைக் கண்டதும் தானும் அவ்வாறே மண்டியிட்டு கதிரவன் வணக்கத்தை செய்தான். அக்காலத்தில் இயற்கை வழிபாடே முதன்மையான வழிபாடாக இருந்தது. சூரியன், சந்திரன், காற்று, தீ ஆகியவற்றைப் புனிதமானவைகளாகக் கருதி அவற்றையே மக்கள் முதல் மன்னர் வரை வணங்கி வந்தார்கள். அதையொட்டியே இளங்கோவடிகளும் சிலப்பதிகாரத்தை ஆரம்பிக்கும் போதும் 'திங்களைப் போற்றுதும ஞாயிறைப போற்றுதும் என்று சந்திர சூரியர்களுக்கு வணக்கம் செலுத்துகிறார். செங்குட்டுவன் இத்தனைக்கும் செஞ்சடைக் கடவுளான சிவபெருமானின் வரத்தால வரப்பெற்றவன் என்று அதே சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பட்டாலும் செங்குட்டுவன் இயற்கை வணக்கத்திற்குப் பின்பே சிவ வழிபாட்டை மேற்கொண்டான்.

வழிபாட்டை முடித்துக் கொண்டு எழுந்த செங்குட்டுவன் ஆபுத்திரனைப் பார்த்து உவகை கொண்டான்.

"கதிரவனை வணங்கி விட்டுத் திரும்பினேன். சந்திரனைப் போல் பின்னால் நீ நிற்கிறாய்!" என்று கூறிய மன்னன் "ரொம்ப கஷ்டப் பட்டு விட்டாயோ?" என்று கேட்டான்.

"அப்படியெல்லாம் எதுமில்லை மன்னவா. கடமைக்கு காரியம் செய்யும் போது கஷ்டமும் நஷ்டமும்

சாதாரணமானவை தான்" என்று சொன்ன ஆபுத்திரன் பொறைக்காட்டு சம்பவத்திலிருந்து அமீரைச் சந்தித்தது வரை அனைத்தையும் சொன்னான்.

சேர மன்னன் உடனடியாக எதுவும் பேசவில்லை. இப்படியும் அப்படியுமாக சற்று நேரம் உலவிய பின் "குட்டுவனின் பதவி ஆசை என்னைக் கொல்லவும் தூண்டும் என்பது நான் சற்று எதிர் பாராதது தான்." என்றான்.

"அவரை நீங்கள் பரணரிடம் அனுப்பியதற்குப் பதில் இளங்கோவடிகளிடம் அனுப்பியிருந்தால் பற்றாவது குறைந்திருக்கும்." என்றான் ஆபுத்திரன்.

"இல்லை ஆபுத்திரா. சகோதரன் துறவு மேற்கொண்ட நிலையில் மகனையும் அவரிடம் அனுப்பி வைத்தால் உலகம் என்னைப் பேராசைக்காரனென்றும் பதவி வெறியன் என்றும் தூற்றும். அப்படியொரு எண்ணமே எனக்கு வரவில்லை. சொல்லப் போனால் என் மூத்த சகோதரர் பதவியை வேண்டாமென்று துறவறம் பூண்டது என் மனதை அழுத்திக் கொண்டே இருக்கிறது. நான் மலர்க் கிரீடம் சூடியிருக்கவில்லை ஆபுத்திரா. முள் கிரீடத்தைத் தான் சூடியிருக்கிறேன்."

"பிரபு. குட்டுவருக்கு இளவரசர் பட்டம் கட்டி விடுங்களேன். ஏன் தாமதப் படுத்துகிறீர்கள்?"

"ஆபுத்திரா. அவனிடம் இரண்டு ஓலைகளைக் கொடுத்து உறையூர் சோழனிடமும் இலங்கை மன்னனிடம் கொடுத்து விட்டு வரச் சொன்னேன். இந்தப் பொறுப்பை அவன் செய்து முடிக்கவில்லை. சஞ்சயன் மீது தட்டிக் கழித்து விட்டான். இக்காரியம் அவனது திறமையைக் காட்டுகிறதா?



விசுவாசத்தைக் காட்டுகிறதா? கண்ணியத்தைக் காட்டுகிறதா? சொல். சூழ்ச்சியையும் பொறுப்பின்மையையும் தவறான சாமர்த்தியத்தையும் தானே காட்டுகிறது? இவனுக்குப் பட்டம் கட்ட இதுவா சமயம்?"

"நீங்கள் தாமதம் செய்வது அவரை மேன் மேலும் பாழுபடுத்துக் கொண்டு போகிறதே?"

"போகட்டும் ஆபுத்திரா. காலம் வரும் வரை எதையும் நான் செய்ய மாட்டேன். சில விஷயங்களுக்காக அவனது அரசுரிமை தள்ளிக் கொண்டு போகிறது. அவனும் அதுவரை காத்திருக்கத் தான் வேண்டும்."

"காரணத்தை அவரிடம் சொல்லக் கூடாதா?"

"ரகசியத்தைக் காக்கும் பொறுமையும் விவேகமும் அவனிடம் இல்லை. ஆபுத்திரா. குட்டுவனைப் பற்றி பேசி நாம நேரத்தை வீணடிக்க வேண்டியதில்லை. நீ கொண்டு போகப் போகும் ஓலைகளைப் பற்றிப் பார்ப்போம்." என்றான் மன்னன்.

இருவரும் நீரோடை மண்டபத்தில் போய் அமர்ந்தார்கள்.

"ஆபுத்திரா. என்னை மாவீரனென்றும் மாமன்னன் என்றும் மக்கள் புகழ்கிறார்களே அது தவறு. அச்சொற்களுக்கு உரியவனைச் சொல்ல வேண்டுமென்றால் சோழ மன்னன் கரிகாலனைத் தான் சொல்ல வேண்டும். நான் சிறுவனாக இருந்த போது அந்தப் பெருவீரனைப் பற்றிக் கேள்விப்பட்டு உண்டான ஆர்வத்தால் தான் சேரநாட்டை ஆண்டு நானும் மாவீரனாகத் திகழ வேண்டும் என்று எண்ணிக் கொண்டேன். திருமாவளவன் என்ற வீரனை தாயாதிகள் கொன்று விட

தீர்மானித்து அவ்விருந்து மாளிகைக்குத் தீ வைத்தனர். அத் தீ அவனது கால்களை மட்டும் தீய்த்து கரிகாலனை ஆக்கியது. கால் தீய்ந்து விட்டதால் அந்த வீரன் ஓய்ந்து விடாமல், ஓங்கி நின்றான். தாயாதிகளை மட்டுமின்றி அவர்களுக்குத் துணையாய் வந்த சேரனையும் பாண்டியனையும் தோற்கடித்து சோழ அரியணையில் ஏறினான். அரியணை ஏறியதும் அனைத்தும் முடிந்து விட்டதாக அவன் எண்ணவில்லை. சோழ நாட்டின் பெருமையை உயர்த்திச் செய்யத் தலைப்பட்டான். அதுவரை யாரும் துணியாத வடநாட்டு படையெடுப்பை மேற் கொண்டான். இடைப்பட்ட அனைத்து மன்னர்களையும் வென்று இமயமலையில் புலிக்கொடியை நாட்டினான். அங்கிருந்து சீன நாட்டிற்குப் படையெடுக்க விரும்பினான். ஆனால் படைவீரர்கள் தடுத்து விட்டனர். சோழ நாட்டிற்குத் திரும்பினான் அந்த மாவீரன். அவனது போர்த் தினவு அடங்கவில்லை. இலங்கை மீது படையெடுத்தான். இலங்கையை வென்றவன் என்ன காரணத்தாலோ பன்னீராயிரம் வீரர்களை இலங்கையிலிருந்து சிறைப் பிடித்து வந்தான். * அதற்கான காரணம் யாருக்கும் தெரியவில்லை. உனக்கேதாவது தோன்றுகிறதா ஆபுத்திரா?"

சேரமன்னன் இவ்வாறு கேட்ட போது "இமயம் வென்ற மாமன்னன் இலங்கை வீரர்களை வெறும் அடிமைகளாகக் கொண்டு வந்திருக்க முடியாது." என்றான் ஆபுத்திரன்.

* page 98 சிலம்பின் காலக்கணிப்பு by முனைவர் இரா. மதிவாணன்

page 354 அபிதான சிந்தாமணி by ஆ. சிங்காரவேலு முதலியார்



"சரியாகச் சொன்னாய் ஆபுத்திரா. நானிருந்த காலத்தில் வீரச் செயல்களைப் புரிந்து சரித்திரத்தில் இடம் பெறக் கூடிய அரசர்கள் தான் அதிகம் பேர் இருப்பார்கள். ஆனால் வீரத்திற்கு அப்பாற்பட்ட தொலை நோக்குப் பார்வையுடன் நாட்டின் எதிர் கால செழிப்பிற்காகவும் உயர்விற்காகவும் செயலாற்றிய மன்னர்கள் சிலர் தான். தான் போராடி வென்ற மண்ணை மிகவும் நேசித்த கரிகாலன், அந்த மண்ணில் தென்னாட்டு கங்கையாக ஓடிய காவிரியையும் நேசித்தான். ஆனால் காவிரி நங்கை கட்டுப் பாடின்றி ஓடிய விதம் அவனுக்குப் பிடிக்கவில்லை. நதியை கட்டுக்குக் கொண்டு வர அதற்கு கரைகளை அமைத்தான். ஆனாலும் நதியில் ஓடிய நீர் வீணாகக் கடலில் போய் விழுந்தது. தூய அந்நீர் சோழ வளநாட்டிற்குப் பயன் படாமல் கடலில் போய் சேர்வதைக் கண்டு மனம் பொறுக்காது அவன் யோசித்தான். அவனது யோசனையில் உதித்தது தான் கல்லணை. திருவரங்கத்திற்கு கிழக்கே காவிரி ஆற்றின் குறுக்கே கல்லணையைக் கட்டி நதிநீரை பலகால்வாய்களின் மூலம் திருப்பிக் காவிரியை சோழநாட்டிற்குள்ளேயே கட்டுப்பாடுடன் அலைய விட்டார். சதுப்பு நிலமாகவிருந்த சோழநாட்டைக் காத்து பயிர் விளையும் பொன் பூமியாக மாற்றினான். அக்கல்லணையை கட்டும் எண்ணம் அவனுக்கு உதித்த போது தான் அவனது இலங்கைப் படையெடுப்பு நடந்தது. கல்லணையைக் கட்டவே இலங்கைப் போரில் தோற்ற வீரர்களைச் சோழ நாட்டிற்குக் கொண்டு வந்தான்"

"அந்த வீரர்கள் திரும்ப இலங்கைக்கு அனுப்பப் பட்டு விட்டார்களா?"

"இல்லை ஆபுத்திரா. கல்லணையைக் கட்டிய கொஞ்ச காலத்திலேயே கரிகாலன் மாண்டான். அதே சமயம் நானும் சேர நாட்டு மன்னனானேன். கரிகாலனுக்குப் பிறகு சோழ நாட்டில் மீண்டும் கலவரம் வெடித்தது. அவனது மகன் கிள்ளிவளவனும் அவனது தம்பி நெடுங்கிள்ளியும் அரியணையேற முடியவில்லை. அப்போது சோழநாடு இரண்டாக இருந்தது. பூம்புகாரைத் தலைநகராகக் கொண்ட கடற்பகுதி ஒன்றும் உறையூரைத் தலைநகராகக் கொண்ட உள்நாட்டுப் பகுதியொன்றும் இருந்தன. * அரியணைக்கு உரிமை கொண்டாடி ஒன்பது சோழர்கள் சண்டை போட்டுக் கொண்டனர். அச்சண்டையில் தலையிட்டு சமரசம் செய்ய பாண்டியரால் முடியாமல் போனதால் நான் சோழர் அரங்கில் பிரவேசித்து உறையூரின் நேரி வாயிலில் ஒன்பது சோழர்களையும் முறியடித்து உறையூரிலும் புகாரிலும் இருமன்னர்களை அமர்த்தி விட்டு மீண்டேன் **. தற்போது சோழ நாட்டில் அமைதி நிலவுகிறது. கரிகாலன் மரணமடைந்ததிலிருந்தே இலங்கை மன்னன் கயவாகு. சிறைபிடித்த பன்னீராயிரம் வீரர்களை திருப்பி அனுப்பும் படி வேண்டுகோள் பல விடுத்து விட்டார். சோழர் தரப்பில்

* 'மாட மதுரையும் பீடா ருறந்தையும் ஒலிபுனற் புகாரும் கலிகெழு வஞ்சியும்'

சிலப்பதிகாரம் அதிகாரம் 8 வரி 3-4

** 'ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை நேரி வாயில் நிலைச்செரு வென்று'

சிலப்பதிகாரம் அதிகாரம் 28 வரி 16-17



எதிரொலி இல்லை. இந்நிலை நீடித்தால் இலங்கை மன்னன் சோழநாட்டின் மீது படையெடுப்பான். நான் மீண்டும் தலையிட வேண்டி வரும். இத்தலையீடு நாகரீகமானதாய் இருக்காது. சோழமன்னன் என் மைத்துனன். இலங்கை மன்னன் என் நண்பன். எனவே இவ்விருவர் மோதக் கூடாது. எனவே நான் உன் மூலம் இருவருக்கும் ஓலைகளை அனுப்புகிறேன். உறையூர் சோழனின் ஓலையில் இலங்கை வீரர்களைத் திருப்பி அனுப்பும் படி கோரியிருக்கிறேன். இலங்கை மன்னன் ஓலையில் அவர்களது நாட்டு வீரர்கள் திரும்புகிறார்கள். எனவே போர் நோக்கம் வேண்டாம் என்று சொல்லியிருக்கிறேன். இருவரிடம் என் சார்பில் நீ பேசலாம். அது பற்றி ஓலையில் குறிப்பிட்டிருக்கிறேன். நீ வஞ்சி மாநகர் திரும்பும் போது பன்னீராயிரம் இலங்கை வீரர்கள் இலங்கைப் பயணத்தில் இருக்க வேண்டும்."

"நல்லது மன்னவா. தங்கள் குறிக்கோளை நிச்சயம் நிறைவேற்றுவேன்." என்றான் ஆபுத்திரன்

"உனக்கும் குட்டுவனுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பார்த்தாயா?" என்று கேட்டான் மன்னன்.

"மன்னவா, தங்களிடம் இரண்டு வரங்களை வேண்டுகிறேன். தயவு காட்டுங்கள்."

"இதென்ன புதுமாதிரியான வேண்டுகோள்?"

"தங்களுக்கெதிராகச் செயல்படும் அனைவரையும் கைது செய்து விடலாம். ஆனால் குட்டுவனை கைது செய்ய வேண்டாம். அவனைக் கண்காணித்துக் கொண்டிருந்தால் போதும்."

"அவன் மீது உனக்கு ரொம்பக் கரிசனம். சரி, ஒப்புக் கொண்டேன். அடுத்தது?"

ஆபுத்திரன் கண்கள் கலங்கின. நா தழுதழுத்தது.

"சொல் ஆபுத்திரா. ஏன் கலங்குகிறாய்? நீ கலங்கக் கூடிய விஷயம் இருக்கிறதா?"

"மன்னவா, ஒரு மகனைப் போல தங்களிடம் கேட்கிறேன். பூங்கொடி - தமது புலவரின் மகள் என்னை மிகவும் நேசிக்கிறாள். களங்கமில்லாத அன்பை என்னிடம் வளர்த்து விட்டாள். அவளைத் தங்கள் புதல்வர் குட்டுவர் விரும்புவதாகத் தெரிகிறது. பூங்கொடியைச் சந்தித்து பேசியும் இருக்கிறார். எதுவும் ஒத்து வரவில்லையென்றால் காந்தர்வ மணம் புரியவும் தயாராக இருப்பதாகவும் மிரட்டியிருக்கிறார். எனக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. பிரபு, நான் இலங்கைக்குச் செல்லும் காலத்தில இளவரசரால் அவளுக்கு ஆபத்து வரலாம் என்று அஞ்சுகிறேன். எந்த வேதனையையும் என்னால் சுமக்க முடியும். பூங்கொடியால் இயலாது." என்றான் ஆபுத்திரன் கலங்கியபடி.

"அவனைத் தட்டிக் கொடுத்த மன்னன் "இதற்காகவா கலங்குகிறாய்! மாவீரனே, நீ கலங்கலாமா? இதோ பார், பூங்கொடி உனக்குத் தான். இதை அவரது தந்தை பரணர் தடுத்தாலும சரி என் மகன் குட்டுவன் குறுக்கிட்டாலும் சரி அவர்களை வெட்டி விட்டு உங்களை ஒன்று சேர்த்து வைப்பேன். இந்த நாடே எதிர்த்தாலும் உங்கள் இருவருக்காக நானிருப்பேன். கலங்காமல் போய் வா" என்றான்.

மன்னனின் கைகளைத் தொட்டு வணங்கி விட்டுப் புறப்பட்டான் ஆபுத்திரன்.



உறையூர் சென்று காரியத்தை முடித்து கொண்ட அவனுக்கும் பூம்புகாரில் எதிர்பாராத பிரச்சனை எழுந்தது.

சேரமன்னனின் குறிக்கோள் நிறைவேறுமா என்ற சந்தேகம் தோன்றியது அவனுக்கு.



# அத்தியாயம் இருபத்தெட்டு



## புகாரின் நிலை

**ம**ன்னரை வணங்கிவிட்டுத் தன் இல்லத்திற்கு வந்தபோது அங்கே உயிரோவியமாய் நின்றிருந்தாள் சௌமியகுமாரி. ஆபுத்திரனை இன்முகத்தோடு வரவேற்ற அவள் "நீங்கள் என்னை மணந்தால் தினமும் இப்படித் தான் வரவேற்பேன்." என்றாள் இயல்பான குரலில்.

"நல்லது." என்றான் ஆபுத்திரன்.

"இதென்ன ஏதோ கற்சிலையிடம் பேசுவது போல் பேசுகிறீர்களே?" என்று கேட்டாள் சௌமியகுமாரி.

"கற்சிலைகள் பேசும் போது அவற்றோடு பேசமுடியாதா?"



"இது. இதைத் தான் எதிர் பார்த்தேன் - எவை அழகாகப் பேசுகிறீர்கள்?"

"நீதானே சௌமியகுமாரி என்னைப் பேச வைக்கிறாய்?"

"அது உண்மையென்றால் எனக்குக் கொண்டாட்டம் தான். உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? பூங்கொடி ரொம்ப நல்லவள். நான் இது வரை நான்கு முறை அவளைச் சந்தித்துப் பேசி விட்டேன். உங்களை நேசிப்பது பற்றியும சொன்னேன். அவள் கோபப் படவே இல்லை. குழந்தையொன்றின் மழலையை ரசிப்பது போல கேட்டுக் கொண்டாள். இப்படிப் பட்ட பெண்ணை நான் பாத்ததே இல்லை. பூங்கொடி ஓர் அபூர்வ பிறப்பு."

"நீங்கள் இருவருமே ஒருவிதத்தில் குழந்தைகள் தான். நீ அடம் பிடிக்கும் குழந்தை. அவள் அமைதியான குழந்தை. அது இருக்கட்டும். மன்னரைச் சொல்லும் விஷயம் என்னாயிற்று?"

"அது பரம ரகசியம் அல்லவா? உங்களிடம் எப்படிச் சொல்ல முடியும்? நீங்கள் இலங்கைக்கு போகப் போவதாகக் கேள்விப்பட்டேன். திரும்பி வரும் போத பூங்கொடி விடம் நல்ல மாறுதலை நீங்கள் பார்க்கப் போகிறீர்கள். அவளே உங்கள் கைகளைப் பிடித்து என் கைகளோடு சேர்க்கப் போகிறாள். அந்த வகையில் அவளை நான் மாற்றுவேன்"

"சேர நாட்டைக் கலக்க நீ வந்திருப்பது போதாதென்று பவானி வேறு வந்திருக்கிறாள்" -

"அவளா?" - என்று வியப்புடன் கேட்டபடி அகன்றாள் சௌமியகுமாரி.

**பி**றகு பூங்கொடியிடமும் சென்றான் ஆபுத்திரன்.

"நீங்கள் ஏதோ அரச காரியமாக பல இடங்களுக்குச் செல்லப் போவதாக தந்தை சொன்னார். திரும்புவதற்கு ஒரு மாத காலம் ஆகும் என்றும் சொன்னார்." என்று மிரண்டுபோன மானைப் போல ஒருவிதத் தவிப்புடன் கேட்டாள் பூங்கொடி.

அவளது தோளைப் பிடித்து அமரவைத்து பக்கத்திலேயே அமர்ந்து கொண்ட ஆபுத்திரன் "கவலைப் படுகிறாயா பூங்கொடி?" என்று கேட்டான் அவளது கைகளை அழுத்தியபடி.

அவனுக்கு அவளது கண்ணீர் பதில் சொல்வது போல் இருந்தது. வெண்ணைத் தீவில் சிக்கிக் கொண்டு பலநாட்கள் பிரிந்திருந்து வந்த போது கூட கலங்காத பூங்கொடி தற்போது கலங்கியதின் காரணம் ஆபுத்திரனுக்குப் புரியவே செய்தது.

"பூங்கொடி. உன்னிடமிருந்து கண்ணீர் வருகிறதென்றால் நான் பாவம் செய்தவனாகத் தான் இருக்க வேண்டும்" என்றான்.

"அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். தெய்வம் எப்படி பாவியாக முடியும்? நான் கலங்குவது நீங்கள் என்னைப் பிரிந்து செல்கிறீர்களே, அதற்காக அல்ல. மீண்டும் நாம் சந்திக்கும் போது இதே போல் சந்திக்க முடியுமா என்ற சந்தேகத்தால் தான்." என்றாள் பூங்கொடி அவனது தோளில் சாய்ந்தபடி.

"எதனால் உனக்குச் சந்தேகம்?" என்று அவளது தலையை கைகளால் உயர்த்திய படி கேட்டான் அவன்.



மாசுமறுவற்ற அவனது முகம் மிரட்சியோடு பார்த்தது.

"இளவரசர் வந்து மிரட்டி விட்டுப் போயிருக்கிறார். அவர் என்னை விரும்புகிறாராம். நான் அதற்கு இணங்காது போனால் காந்தர்வ மணம் புரியவும் முயல்வாராம்."

"தெரியும் பூங்கொடி. இளவரசரைத் தவிர வேறு யாராவது இப்படிப் பேசியிருந்தால் அவனை ஒரே வெட்டில் சாய்த்திருப்பேன். ஆகவே தான் இது விஷயமாக மன்னரிடமே கூறிவிட்டேன். நீ அஞ்சுவது போல் எதுவும் நடக்காது. தைரியமாக இரு"

"சௌமிய குமாரி வேறு விதமாக மிரட்டுகிறாள்"

"மிரட்டுகிறாளா? அவளா?"

"ஆம் பிரபு. உங்களை அவள் மணக்க நான் தியாகம் செய்ய வேண்டுமாம். இல்லையென்றால் மன்னரை அவள் கொன்று விடுவாளாம்."

"சௌமிய குமாரி ஒரு முரட்டுக் குழந்தை. பயமுறுத்தும் விதத்தில் பேசுவாளே தவிர செயலில் செய்ய மாட்டாள்."

"இப்படி இருபக்கமும் ஆபத்துகள் நெருங்கும் போது என்ன ஆகுமோ என்ற கலக்கம் என்னை வாட்டுகிறது"

அவளது கண்ணீரைத் துடைத்து விட்டு அவளது எழிலார்ந்த உதடுகளில் லேசான முத்தமிட்டான் ஆபுத்திரன்.

அந்தச் சிறிய செயல் அவளைத் தலைகீழாக மாற்றியது. கண்ணீர் விட்ட அவள் கலகலவெனச் சிரித்தாள். வார்த்தைகளால் தர முடியாத ஆறுதலை எதிர்பாராத அந்த முத்தம் அவளுக்குத் தந்தது. முத்தம் தந்த நம்பிக்கையால்

களிப்புற்று அவள் "இது போதும் எனக்கு. இந்த ஜன்மம் முடியும் வரை இதுவே அமுதமாய் இருக்கும்" என்றாள் அவள் மலர்ந்த முகத்தோடு.

"ஆகா, நீ சிரிப்பதற்கு இப்படி ஒரு வழி இருக்கிறதா? சொல்லவில்லையே நீ" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"ஏன் அப்படியெல்லாம் சொல்கிறீர்கள்? உங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? பல நாட்கள் பழகியும் இதழால் இதழைத் தொடும் உரிமையை எடுத்துக் கொள்ளாமல் இக்கட்டான இந்த நேரத்தில் துணிந்து எடுத்துக் கொண்டீர்களே, இதற்கு ஈடிணை ஏது?" என்று அன்பு பொங்கக் கூறினாள் பூங்கொடி.

"உண்மைதான் பூங்கொடி. ஸ்பரிசங்களால் வளரும் காதல்களில் எனக்கு நம்பிக்கையில்லை. அதில் ஸ்பரிசம் தான் முதன்மை பெறுகிறதே தவிர காதலல்ல. ஆகவே தான் அதை நான் தவிர்த்து வந்தேன். ஆனால் உனது இன்றையத் தவிப்பு என்னை மாற்றி விட்டது. அதற்காக நீ என்னை மன்னிக்க வேண்டும்"

"தெய்வமே! தெய்வமே! அமுதம் தந்து உயிர்ப்பித்தத் தங்களை மன்னிப்பதா? இப்படி நீங்கள் பேசவே கூடாது"

"மிகவும் மகிழ்ச்சி பூங்கொடி. உனது இந்த மகிழ்ச்சியான நினைவுகளை சுமந்து கொண்டு நான் போகிறேன். நீயும் மகிழ்ச்சியாக இரு. பயணத்திலிருந்து வந்தவுடன் நாம் சந்திப்பது மணமேடையாக இருக்கும். மன்னர் இனி வாளாயிருக்கமாட்டார்." என்று கூறி விட்டு விடை பெற்றுக் கொண்டான் ஆபுத்திரன்.





பூங்கொடி

மறுநாள் பயணப்பட்ட அவன் மன்னர் கேட்டுக் கொண்டதற்கேற்ப உதவிக்கு ஒருவரைத் தேர்ந்த வீரனை சேர்த்துக் கொண்டு தனது பூர்ணாதத்தப் புரவியிலேயே புறப்பட்டான். வழியெல்லாம் காடுகளும் மலைகளும் நதிகளுமாய் இருந்தபடியாலும் புரவிகளுக்குப் போதுமான ஓய்வு கொடுத்து அவற்றை நலமுறையில் பராமரிக்க வேண்டியிருந்தாலும் வஞ்சியிலிருந்து கருவூருக்குச் சென்று அங்கிருந்து உறையூருக்குச் செல்ல பத்து நாட்களாகி விட்டன. உறையூர் சோழன் ஆபுத்திரனிடம் நலமுறையில் நடந்து கொண்டான். ஆபுத்திரனைப் பற்றி கேள்விப் பட்டிருப்பதாகக் கூறிய அவன் சேரமன்னரின் விருப்பம் சரியானது என்று ஒப்புக் கொண்டான். அதே சமயம் இலங்கையிலிருந்து கரிகாலர் அழைத்து வந்த பன்னீராயிரம் வீரர்கள் தற்போது பூம்புகாரில் இருப்பதாகவும், பூம்புகார் சோழனுக்குத் தான் ஓலை தருவதாகவும் கூறிய கிள்ளிவளவன் அவ்வாறே ஓலை தயாரித்துக் கொடுத்து ஆபுத்திரனுக்கு வாழ்த்துச் சொல்லி அனுப்பினான்.



உறையூர் சோழன் கொடுத்த அறிமுக ஓலையால் பூம்புகார் சோழன் எளிதாகச் சந்தித்தான் ஆபுத்திரன். சேர மன்னன் இலங்கையைச் சேர்ந்த வீரர்களை இலங்கைக்குத் திருப்பி அனுப்புவதில் தனக்கும் உடன்பாடு தான் என்று கூறிய புகார் மன்னன், தன்னால் அது விஷயமாக எதுவும் செய்ய இயலாது என்று தெரிவித்த போது வியப்படைந்தான் சேரநாட்டு வாலிபன்.



"பூம்புகாரின் மன்னர் தாங்கள் தானே?" - என்று கேட்டான் ஆபுத்திரன்.

"ஆம்" - என்று எந்த உணர்ச்சியுமில்லாமல் சொன்னான் சோழ மன்னன்.

"இலங்கை வீரர்கள் பூம்புகாரில் தானே இருக்கிறார்கள்?" தொடர்ந்தான் ஆபுத்திரன்.

"ஆமாம். ஆனால் அவர்கள் என் கட்டுப் பாட்டில் இல்லை."

"உங்கள் பதில் வியப்பாக இருக்கிறது."

"எனக்கும் தான் ஆபுத்திரா. நடந்தவையெல்லாம் கனவு போல இருக்கிறது." என்று சொல்லிக் கொண்ட மன்னன் "ஆபுத்திரா, பூம்புகாருக்கு நான் தான் மன்னன். ஆனால் இந்த மருவூர் பாக்கம் என் கட்டுப் பாட்டில் இல்லை" என்று இடியை வீசினான் வரண்ட சிரிப்புடன்.

"கடற்கரைப் பகுதி தான் மருவூர் பாக்கம். புகாரின் தலைவாசல் அது. அது உங்கள் கட்டுப்பாட்டில் இல்லை என்றால் அதிசயமாக இருக்கிறது. என்ன ஆயிற்று மன்னவா புகாரின் கடற்கரைக்கு?"

"மருவூர் பாக்கம் யவனர் வசமிருக்கிறது ஆபுத்திரா. இலங்கையைச் சேர்ந்த பன்னீராயிரம் வீரர்களும் மருவூர் பாக்கத்தில் யவனரது கட்டுப் பாட்டில் தான் இருக்கிறார்கள். என்னால் எதுவும் செய்ய இயலாது என்று சொன்னது இதனால் தான்."

சோழ மன்னனின் பேச்சு மேன்மேலும் வியப்பையே தந்தது ஆபுத்திரனுக்கு. எனவே மன்னனிடம் பேச முற்பட்டு

"பகைவர்கள் யாரும் புக முடியாது என்ற காரணத்தால் தான் காவிரிப்பூம்பட்டினம் என்ற இந்த இந்நகருக்குப் புகார் என்ற சிறப்பு பெயர் வந்தது என்று சொல்லுவார்கள். அப்படிப் பட்ட புகாரில் யவனர்கள் எப்படி நுழைந்தார்கள்? சோழரது கடற்படை என்ன வாயிற்று?" என்று கேட்டான்.

ஆபுத்திரனின் கேள்விக்குப் புகார் மன்னன் உடனடியாகப் பதிலேதும் சொல்லவில்லை. சிறிது நேரம் யோசித்து விட்டு, "ஆபுத்திரா, இந்நகருக்குப் புகார் என்ற சிறப்புப் பெயர் வைக்கப் பட்டதற்கான காரணத்தைச் சொன்னாய். ஆனால் இந்நகருக்குத் தீம்பு வந்து சேர்ந்ததும் அதனால் தான். எப்படி என்று கேட்கிறாயா? பகைவர் எவரும் இங்கே கடல் வழியாகப் புகமாட்டார்கள் என்ற அதீத நம்பிக்கையை வைத்து விட்டதால் இந்நகரின் துறைமுகத்தை நாங்கள் சரியாகப் பயன்படுத்தாமல் விட்டு விட்டோம். கீழை நாட்டு கடல் வாணிபத்திற்கு இப்புகார் கடற்கரை கீழ்வாயிலாகப் பயன்பட்டு வந்ததால் வாணிபத்திற்குரிய சிறப்புகளையும் தேவைகளையும் தான் நாங்கள் அதிகப்படுத்தினோம். அவற்றிலேயே கவனம் செலுத்தினோம். கடற்கரையை - குறிப்பாகத் துறைமுகத்தை காவல் காக்க நடவடிக்கை எடுக்காமல் அசிரத்தையாக இருந்தோம். அதன் பலன் தான் இன்று மருவூர் பாக்கம் யவனர் பக்கம் போயிருக்கிறது." என்றான்.

"இதே புகாரிலிருந்து தானே கடல்மூலம் இலங்கை மீது படையெடுத்தார் கரிகாலர்? அவரது படையெடுப்பு நடந்து ரொம்ப காலம் ஆகிவிடவில்லையே! அவரது கடற்படை எங்கே போயிற்று?"



"ஆபுத்திரா, நம்மை கரிகாலரோடு ஒப்பிட்டுப் பார்ப்பதே தவறு. அவரது காலத்தில், அயல் நாட்டவர் அவரது பெயரைக் கேட்டாலே நடுங்கினார்கள். அதுவும் அவரது இமயப் படையெடுப்பின் வெற்றிக்குப் பிறகு அவரைப் பகைத்துக் கொள்ள யாரும் முன் வரவில்லை. இலங்கை மட்டுமே பணிய மறுத்தது. அதற்காகவே அதன் மீது படையெடுத்தார் கரிகாலர். அவரிடமிருந்த கடற்படையும் சொற்பமானது தான். ஆறேழு மரக்கலங்கள் தான் அப்போது அவரிடம் இருந்தன. சொல்லப் போனால் மரக்கலங்களே அவர் காலத்தில் தான் கட்டப் பட்டு போருக்காகப் பயன்படுத்தப் பட்டன. அவருக்கு முன்னால் சோழர் பேரரசும் இல்லை. சோழருக்கான கடற்படையும் இல்லை. பல விஷயங்களுக்கு அவர் முன்னோடியாக இருந்திருக்கிறார் ஆபுத்திரா. பிரிந்து கிடந்த சோழ வாரிசுகளுக்குள் நிகழ்ந்த சண்டையை முறியடித்து சோழ அரசை முதன் முதலாக ஸ்தாபித்தவர் அவர். அணுக முடியாதிருந்த இமயமலை வரை படையெடுத்து வெற்றி கண்டவர் அவர். *பெருநதி காவிரிக்கு கரையெடுத்தவர் அவர். கடல் நீர் வீணாவதைத் தடுக்க கல்லணை கட்டியவர் அவர். கடல் கடந்தும் வெற்றி பெறவேண்டுமென்று கடற்படையை முதன் முதலாக உருவாக்கித் தமிழகத்திற்கு அப்பாலிருந்த இலங்கையை வென்றவர் அவர். ஆபுத்திரா, கரிகாலருக்குப் பின்னால் பல மன்னர்கள் தோன்றலாம். பேரரசுகள் உருவாகலாம். பெரியபெரிய சாதனைகளைச் செய்யலாம். ஆனால் அவைகளுக்கெல்லாம் முன்னோடியாக அமைந்தவர்

* பக்கம் 58 சோழர் வரலாறு by டாக்டர். மா. ராசமாணிக்கனார்.

கரிகாலர், இலங்கைக்குப் படையெடுத்த போது கூட அவர் கடற்போரில் ஈடுபடவில்லை. மரக்கலங்களில் ஏராளமான வீரர்களை ஏற்றிக் கொண்டு திடீரென படையெடுத்தார் இலங்கை மன்னன் எதிர் பாராத இடத்தில் - அதாவது திரிகோணமலையில் மரக்கலங்களை நங்கூரமிடச் செய்து வீரர்களை இறக்கினார். மரக்கலங்களைக் கடலோடச் செய்து விட்டு படைவீரர்களை மலைக்காடுகளில் பயணிக்கச் செய்து இலங்கையில் தலைநகரான அனுராதபுரத்தை திடீரெனத் தாக்கினார். தாக்குதலை முற்றிலும் எதிர் பாராத நிலையிலும் தக்க ஏற்பாடுகளை செய்யாத நிலையிலும் தடுமாறிப் போன இலங்கை மன்னன், கரிகாலரின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் தோற்றுப் போனான். அவனது ஆணையின் பேரில் இலங்கைத் துறைமுகமும் அங்கிருந்த பத்து போர்க் கலங்களும் கரிகாலருக்குச் சரணடைந்தன. கடலோடிய தன் மரக்கலங்களை வரவழைத்த மன்னர் இலங்கை மரக் கலங்களையும் சேர்த்துக் கொண்டார். கணிசமான கடற்படை உருவானது. அச்சமயத்தில் தான் கல்லணை கட்டும் திட்டம் அவரிடம் உருவாகியிருந்ததால், அப்பணியில் ஈடுபடுத்த பன்னீராயிரம் சிங்கள வீரர்களையும் ஏற்றிக் கொண்டு புகாருக்குத் திரும்பினார். பிறகு எல்லாமே தலைகீழாகி விட்டன. இங்கே கரிகாலர் மாண்டதும், தாயாதிச் சண்டை மீண்டும் தலை தூக்கியது. சோழநாட்டை ஆளப் போவது யார் என்ற பிரச்சனை இங்கே கலக்கிக் கொண்டிருந்த நிலையில் சிங்கள மன்னன் தந்திரமாக தனது மரக்கலங்களை இலங்கைக்குக் கொண்டு சென்று விட்டான். எங்கள் சண்டையில் சேரமாமன்னர் செங்குட்டுவன் தலையிட்டுப் போர் செய்து, ஒன்பது சோழ மன்னர்களை முறியடித்து, கிள்ளிவளவரை உறையூரிலும் என்னைப் பூம்புகாரிலும்



அரியணையில் ஏற்றினார். அதற்குப் பின் எல்லாமே அமைதியாக இருந்தன, நடந்தன. பிறகு தான் இந்தத் திடீர் சோதனை பூம்புகாரைப் பிடித்தது"-

சோழமன்னன் இவ்வாறு விளக்கமாகச் சொல்லி பெருமூச்செறிந்ததும், "எல்லாமே நல்லபடியாக நடந்திருக்கும் போது யவனர் தாக்குதல் எப்படி நடந்தது? அதை உங்களால் முறியடிக்க முடியாமல் போனது ஏன்?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"ஆபுத்திரா, யவனர் தாக்குதல் நடந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. நான் அரியணையில் அமர்ந்து ஆட்சியை சரி செய்து கொண்டிருந்த நிலையில் யவனர்கள் இருபது போர்க்கலங்களோடு வந்து புகாரைத் தாக்கினார்கள் எங்களிடமிருந்த ஏழு மரக்கலங்கள் அவர்களோடு மோதிய போது மூன்று மரக்கலங்கள் அவர்களால் எரிக்கப்பட்டன துறைமுகம் அவர்கள் வசப்பட்டது. யவன வீரர்கள் மருவூர் பாக்கத்தையும் கைப்பற்றினார்கள். மேலும் அவர்கள் முன்னேற முயன்ற போது தான், அவர்களிடம் நான் உடன்படிக்கை செய்து கொண்டேன்."

"உடன் படிக்கையா?"

"ஆம். மருவூர் பாக்கத்தையும், துறைமுகத்தையும் யவனர்களே ஆள்வதற்கு உரிமையைக் கொடுத்த நான் அவர்கள் மேற்கொண்டு முன்னேறி தாக்கக் கூடாது என்ற சம்மதத்தை வாங்கிக் கொண்டேன். இது தான் நிலை"

"இந்த உடன் படிக்கை சோழரது வீரத்திற்கு பங்கம் விளைவிப்பதாகத் தாங்கள் கருதவில்லையா?"

"வறட்டுக் கௌரவங்கள் விட்டு விலகாமலேயே தரும் ஆபுத்திரா. வேங்கையின் குணம் உனக்குத் தெரியாதா? வேங்கை கண்மூடித் தனமாகப் பாயாது. பதுங்கியிருந்து சரியான நேரத்தில் பாயும்."

"தாங்கள் தற்போது வேங்கையைப் போலத் தான் பதுங்கியிருக்கிறீர்களா?"

"வேறு வழியில்லை. சோழர்கள் சண்டையின் போது எங்கள் படைத்தலைவன் வீரமரணம் எய்தி விட்டான். படைகளில் பாதி அழிந்தன. மீதி கலைந்தன. எனவே மீண்டும் படை திரட்டும் பணி நடக்கிறது. படை திரட்டப் பணம் தேவை. அந்தப் பணம் புகாரின் சுங்கவரி மூலம் போதுமானதாக இருந்தது. ஓரளவிற்கு படை திரட்டி பயிற்சியளிக்கப் பட்ட நிலையில் தான் யவனரது தாக்குதல் நடந்தது. இதனால் துறைமுகம் மூலம் கிடைத்து வந்த சுங்கவரி வருமானம் முழுவதும் நின்று விட்டது. அனைத்து வருமானமும் யவனர்களுக்குப் போய் விட்டது. அதோடு மருவூர் பாக்கத்தில் நடைபெறும் வியாபாரத்தையும் யவனர்களே நேரடியாகச் செய்த படியால் அவர்களுக்கு வருமானம் அதிகரித்து கொழுத்துக் கிடக்கிறார்கள். நாங்கள் நலிந்து கிடக்கிறோம்"

"இந்த நிலை உறையூர் சோழருக்குத் தெரியுமா?"

"தெரிந்திருக்கலாம். நானாக எந்தச் செய்தியும் அனுப்பவில்லை."

"ஏன் மன்னவா?"

"கிட்டத்தட்ட அவரது நிலையும் என்னுடைய நிலையும் ஒன்று தான். மருவூர் பாக்கம் யவனர் வசமாகி விட்டதால் உள்நாட்டு வணிகம் நடக்கும் உறையூரும் இப்போது வெட்ட



வெளியாகி விட்டது. அவரிடமிருந்து எந்த உதவியும் எதிர் பார்க்க முடியாது."

"சேர மன்னனிடம் உதவி கோரலாம் அல்லவா?"

"சிக்கல்கள் வரும் போதெல்லாம் சேரரையும் பாண்டியரையும் உதவிக்கு அழைப்பது சரியல்ல ஆபுத்திரா. அரியணையில் எங்களை அமர்த்த அவர் செய்தது பேருதவி. அரியணையில் அமர்ந்த பிறகு எழும் பிரச்சனைகளை நாங்கள் எதிர் கொள்வதே சரி."

"இலங்கையிலிருந்து கொண்டு வந்த பன்னீராயிரம் பேர் எப்படி யவனரிடம் சிக்கினார்கள்?"

கல்லணை கட்டி முடிக்கப் பட்ட பின் சிங்கள வீரர்களை மருவூர் பாக்கத்தில் குடியமர்த்திய கரிகாலர் அவர்கள் வாழ்வதற்கு வாணிப வசதிகளையும் செய்து தந்தார். அவர்கள் அங்கே மகிழ்ச்சியாக இருந்தார்கள். மருவூர் பாக்கத்தைக் கைப்பற்றிய டெமிகோஸ் அவர்களது கடைகளைக் கைப்பற்றிக் கொண்டு அவர்களைத் தன் அடிமைகளாகப் பணியமர்த்திக் கொண்டான்"

"அவர்கள் சிங்களவர்கள் என்பது டெமிகோஸுக்குத் தெரியுமா?"

"பேசும் மொழியை வைத்து அவன் தெரிந்து கொண்டிருக்கலாம். ஆனால் சிங்களத்திலிருந்து அவர்கள் கரிகாலரால் கொண்டு வரப்பட்டவர்கள் என்பது தெரிந்திருக்காது."

"மன்னவா, நான் பேசுவதை தாங்கள் தவறாக எண்ணிக் கொள்ளக் கூடாது. வேங்கையான நீங்கள் பதுங்கியிருப்பது

வேண்டுமானால் உண்மையாக இருக்கலாம். ஆனால் நீங்கள் உடன்படிக்கை செய்து கொண்டிருப்பது தன்னோடு என்பதை மறந்து விடாதீர்கள். அவன் துறைமுகத்தைப் பிடித்துக் கொண்டு அதன் வருவாயையும் எடுத்துக் கொண்டு இந்த மூன்று மாதங்களில் செல்வம் கொழித்த நிலையில் தனது நிலையைத் திடப்படுத்திக் கொண்டிருப்பான். கிரேக்க நாட்டிலிருந்து மேலும் சில மரக்கலங்களையும் வீரர்களையும் வரவழைத்துக் கொண்டால் உங்களது உடன்படிக்கையை உதாசீனப் படுத்துவான். உங்களை அழிக்கவும் முயலுவான். அது நடைபெறக் கூடாது. அதற்கு அவனோடு போர் செய்வது இயலாது. தந்திரத்தை தான் கையாள வேண்டும்."

"என்ன தந்திரம்"

"எனக்கு ஒரு நாள் அவகாசம் கொடுங்கள் மன்னவா"

"சரி."



பூம்புகாரின் விருந்தினர் மாளிகையின் உயரமான விதானத்திலிருந்தபடி அந்நகரின் கடற்கரை பட்டினமான மருவூர் பாக்கத்தையும், துறைமுகத்தையும் நன்றாகப் பார்க்க முடிந்தது. கலகலப்பும், ஆரவாரமும், எழுச்சியும் எப்போதுமிருக்கும் அக்கடற்கரை பகுதியில் அவற்றுக்கெல்லாம் சம்மந்தமில்லாத வகையில் மந்தமாகக் காணப்பட்டது. பரதவர்களின் சொர்க்கமாகக் கருதப் பட்ட அப்பகுதி, பரதவர்கள் இல்லாமல் யவன வீரர்களாலும் வணிகர்களாலும் நிரம்பிக் களையிழந்து காணப்பட்டது. எங்கு



பார்த்தாலும் பறந்து கொண்டிருக்கும் சோழரது கொடிகள் எங்கேயும் காணப்படாத வகையில யவனர்களால் அகற்றப் பட்டு விட்டதாய் எங்கேயும் கிரேக்க கொடிகளே பறந்து கொண்டிருந்தன. கலங்கரை விளக்கத் தூணில் தனியாக உட்கார்ந்து ஆந்தையொன்று சபையமான குரலில் எழுப்பிய ஒலியானது பூம்புகாரின் நிலையை எண்ணிப் பரிதாபப்படுவது போல் இருந்தது.

இதையெல்லாம் நீண்ட நேரமாகப் பார்த்துக் கொண்டிருந்த ஆபுத்திரனை நோக்கி வந்த அவனது சேரநாட்டு வீரனான வில்லவன் "என்ன யோசனை ஆபுத்திரரே" என்று வினவினான்.

அதற்கு பதில் சொல்லாத ஆபுத்திரன் "பூம்புகாரின் நிலையைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்" என்று கேட்டான்.

"பரிதாபகரமானது தான்." - என்றான் வில்லவன்.

"இல்லை வில்லவா. அபாயகரமானது. சோழ மன்னர் நடவடிக்கை எடுப்பதில் காட்டும் தாமதம் யவன டெமிகோஸுக்கு மிகவும் சாதகமானது. ஒட்டகத்திற்கு இடம் கொடுத்த கதை பற்றி தமிழ் நாட்டில் பேசுவார்கள். அந்த நிலைமையைத் தான் உருவாக்கியிருக்கிறார் சோழமன்னர். சேர நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் உள்ள வித்தியாசத்தைப் பார். அங்கேயும் நாட்டைப் பிடிக்கத் தான் வந்தார்கள் யவனர்கள். வணிகர்களாக வந்து படைகளாக மாறவிருந்த அவர்களை நமது மன்னர் முறியடித்து சேர நாட்டு காவலர்களாக மாற்றினார். இங்கோ நிலைமை தலைகீழாக உள்ளது. யவனர்கள் மருவூர் பாக்கத்தைப் பிடித்துக் கொண்டு தமிழர்களையும், சிங்களவர்களையும் அடிமைகளாக்கி

வைத்திருக்கிறார்கள். சோழ மன்னரோ அவர்களை எதிர்ப்பதை விட்டு விட்டு, உடன்படிக்கை செய்து கொண்டிருக்கிறார். பேசாமல் நமது மன்னருக்கு செய்தி அனுப்பியிருந்தால் கூட போதும். இன்று தமிழகத்தில் சேரரிடம் தான் மகத்தான கடற்படை இருக்கிறது. அது இங்கு வந்தால் இந்த மலை நரிகளை கண் இமைக்கும் நேரத்தில் அழித்து விடும். சோழமன்னரோ கௌரவம் பார்த்துக் கொண்டிருக்கிறார்."

"இதில் நாம் என்ன செய்ய வேண்டும்? செய்ய முடியும்?"

"இங்கிருக்கும் பன்னீராயிரம் சிங்கள வீரர்களை சிங்களத்திற்கு அனுப்பும் பணியை எனக்குத் தந்திருக்கிறார் சேர மன்னர். இதற்கு உதவும் நிலையில் சோழ மன்னர் இல்லை. நாம் தான் உதவவேண்டும்."

"எப்படி?"

திட்டத்தைச் சொன்னான் ஆபுத்திரன்.

"வேண்டாம் ஆபுத்திரரே. வேண்டாம். இது மிகவும் ஆபத்தான திட்டம். நாம் நிச்சயமாக அழிந்து போவோம்." என்று பதறினான் வில்லவன்.



# அத்தியாயம் இருபத்தொன்பது



## வஞ்சியர் மூவர்

வில்லவனின் பதற்றத்தைக் கண்ட ஆபுத்திரன் "ஆபத்தில்லாத காரியம் எங்கிருக்கிறது? அதோடு வீரர்கள் ஆபத்தைக் கண்டு அஞ்சக் கூடாது." என்றான்.

"தங்கள் வீரம் எப்படிப் பட்டது என்பதை நான் அறிவேன். சேர நாடு அறியும். அத்தகைய வீரம் சோழ நாட்டிற்காக விரயமாக வேண்டுமா?" என்று கேட்டான் வில்லவன்.

"வீரர்கள் செயல்படும் போது ஆபத்தைத் தான் பார்ப்பார்களே தவிர நாடு எது? நகரம் எது? நேரம் எது? நபர்கள் யார் என்று பார்க்க மாட்டார்கள் வில்லவா. அதோடு நமது காரியம் சேர நாட்டிற்காகத் தான். இலங்கையைச்

சேர்ந்தவர்களை இலங்கைக்கு அனுப்ப வேண்டும். அவர்களோ யவனர்களின் பிடியில் அடிமைகளாய் இருக்கிறார்கள். அவர்களை விடுவிக்கும் நிலையில் சோழமன்னர் இல்லை. நாம் தான் செய்ய வேண்டும். எதற்காகவும் கவலைப் படாதே. நாளை சோழமன்னரிடம் என் திட்டத்தைச் சொல்கிறேன்." என்றான் ஆபுத்திரன்.

"சோழமன்னர் உங்கள் திட்டத்தை ஏற்பாரா?"

"ஏற்பதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லை."

"ஒரு வேளை மறுத்தால்?"

"பிறகு பார்க்கலாம்."



சோழமன்னன் நல்ல வேளையாக ஆபுத்திரனின் திட்டத்திற்கு ஒப்புதல் கொடுத்தான். அதோடு "கிணறு வெட்டப் போய் பூதம் கிளம்பிய கதையாக ஆகி விடக் கூடாது" என்று தன் அச்சத்தையும் தெரிவித்தான்.

"பூதம் கிளம்பினால் அதை அழிக்காமல் விட மாட்டேன். மன்னர் கவலைப் படாமல் தன் நிலை மாறாமல் நடந்து கொண்டால் போதும்." என்று கூறிய ஆபுத்திரன் இலங்கை மன்னர் கயவாகுவிற்கு ஓலையைத் தயாரிக்கச் சொல்லி அதில் சோழமன்னரை கையெழுத்திட வைத்தான்.

ஓலை தயாரானதும் "ஓலையை எப்படி அனுப்பி வைப்பீர்கள்?" என்று ஆபுத்திரன் வினவியதும் "சிக்கல் எதுவும் இல்லை. தூதுவனை கோடியக் கரை வழியாக இலங்கைக்கு அனுப்பலாம்" என்றான் சோழ மன்னன்.



ஓலையை அனுப்பி வைத்தபிறகு வில்லவனை அழைத்துக் கொண்டு மருவூர் பாக்கத்திற்குச் சென்று கடற்கரையை நோக்கிய ஆபுத்திரன் அங்கே இருந்த இரு பொருட்களைச் சுட்டிக் காட்டி "இது என்ன தெரிகிறதா" என்று கேட்டதும் அதுவரை அதைக் கவனிக்காதிருந்த வில்லவன் அதைப் பார்த்து விட்டு "உயரமான செங்கல் தூண்கள் கடற்கரையின் இருபுறங்களிலும் கட்டப் பட்டிருக்கின்றன. அவற்றின் மீது ஏதோ உலோக அமைப்பு காணப் படுகிறது." என்றான்.

"அது உலோகத்தால் உருவாக்கப்படும் சுழல் தூண்கள். செங்கல் தூண்களின் மீது எழுப்பப்படும் இந்த இரும்புத் தூண்களில் அம்புகள் அடுக்கப்பட்டு அவற்றை இயக்கும் இயந்திரங்களும் உள்ளே அமைக்கப்படும். யவனர்கள் இயந்திரக் கலையில் வல்லவர்கள். இப்படி அமைக்கும் தூண்களால் அவர்களுக்கு இரண்டு நன்மைகள். மிகவும் உயரமான நிலையில் இந்த இரும்புத் தூண்கள் இருப்பதால் துறைமுகத்தைத் தாக்க மரக்கலங்கள் வரும் போது அந்த திசையில் இவை திருப்பப் பட்டு எரியம்புகளை வீசினால் மரக்கலங்கள் தாக்கப்படும். இரண்டாவது நன்மை - இத்தூண்களை கரையின் பக்கம் திருப்பினால் அதிலிருந்து புறப்படும் அம்புகள் மருவூர் பாக்கத்தை அடுத்த பட்டினப் பாக்கத்தையும் நகரத்தையும் தாக்கும். டெமிகோஸ் நினைத்தால் எந்தப் பக்கம் வேண்டுமானாலும் தாக்கலாம். அப்போது சோழ மன்னனால் கூட எதுவும் செய்ய முடியாது. ஆகவே வில்லவா, இந்த தூண்கள் முழுவதுமாக கட்டி முடிக்கப் படுவதற்குள் நாம் அந்த யவனர்களை முறியடிக்க வேண்டும்." என்று கூறிய ஆபுத்திரன் "நீ மருவூர் பாக்கத்தில் மறைந்து

திரிய வேண்டும். அடிமைகளாக இருக்கும் இலங்கை வீரர்களைச் சந்திக்க வேண்டும். இலங்கைக்குத் திரும்ப அவர்கள் விரும்புகிறார்களா என்று அறிய வேண்டும். அடிமைகளாக இருப்பதால் நிச்சயம் விரும்புவார்கள். விரும்பும் பட்சத்தில் அவர்களை இலங்கைக்குக் கொண்டு போய்ச் சேர்க்க சேரமன்னர் சார்பில் நான் வந்திருப்பதையும், அதற்கான ஏற்பாடுகளில் இறங்கியிருப்பதாகவும் சொல்ல வேண்டும். இச்செய்தி இலங்கை வீரர்களுக்குப் பரவலாக அதே சமயம் ரகசியமாகப் பரவ வேண்டும். அவர்கள் சார்பில் யாராவது நம்மோடு பேச விரும்பினால் அதோ பார் அங்கிருக்கும் கள்ளுக்கடைக்கருகே இருக்கும் மணல் பரப்பிற்கு அழைத்து வா. அதுவும் இரவு நேரத்தில் அழைத்து வா. தினமும் நான் உன்னை அந்த இடத்தில் சந்தித்து செய்தியை அறிந்து கொள்கிறேன். பகல் நேரத்தில் நானும் சில வேலைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது." என்று கூறி அவனை அனுப்பி வைத்தான்.



**வ**ஞ்சி நகரை விட்டு ஆபுத்திரன் வெளியேறி பதினைந்து நாட்கள் கடந்து விட்ட நிலையில் வஞ்சியில் மூன்று வஞ்சியர்கள் தவிப்பில் இருந்தார்கள். பூங்கொடி ஒருத்தி சௌமியகுமாரி மற்றொருத்தி, பவானி இன்னொருத்தி.

பூங்கொடியிடம், சேர இளவரசனால் எந்த வித ஆபத்தும் நேராது என்றும், சேரமன்னர் தகுந்த பாதுகாப்பை அளிப்பார் என்றும், ஆபுத்திரன் ஆறுதல் கூறிவிட்டுப் போயிருந்தாலும் அவளால் அமைதியாக இருக்க முடியவில்லை. அதற்கு ஏற்றாற்



போல இளவரசனும் இரண்டு முறை மாறுவேடத்தில் அவளது இல்லத்திற்கு வந்து அவளது கருத்தைக் கேட்க வந்தது போல் சொல்லிக் கொண்டு அவளை மிரட்டி விட்டுப் போயிருந்தான். மெல்லவும் முடியாமல் துப்பவும் முடியாமல் ஏதோ பதில் சொல்லி அனுப்பி வைத்தாளே தவிர அந்த விஷயத்தில் தீர்வு எப்படி கிடைக்கப் போகிறதென்று தெரியாததால் குழப்பமும் கவலையும் அடைந்தாள் பூங்கொடி. இந்நிலையில் மூன்றாவது முறையாக அவளைச் சந்திக்க வந்தான் இளவரசன் குட்டுவன். இல்லத்தில் அவள் சிலைபோல் அமர்ந்திருக்க அவளைச் சுற்றி நாகணவாய் புட்கள் * தத்தித் திரிந்து கொண்டிருக்க, ஒன்றிரண்டு பறவைகள் அவள் மடி மீது அமர்ந்திருந்தன. அளப்பரிய அக்காட்சியைக் கண்டு மெய்சிலிர்த்துப் போன குட்டுவன் அவளது கவனத்தை ஈர்க்க, கனைத்தான். நினைவுகள் அறுபட்ட நிலையில் திரும்பி அவனைப் பார்த்த அவள் 'வாருங்கள்' என்றாள் பணிவுடன்.

"பூங்கொடி, இப்பறவைகளுக்கிருக்கும் அதிர்ஷ்டம் கூட எனக்கில்லையே என்று நினைக்கும் போது எவ்வளவு ஏக்கமாக இருக்கிறது தெரியுமா?" என்று கேட்ட குட்டுவன் "பெரியவர்கள் பார்த்து எது செய்தாலும் சரி என்று எளிதாக நீ சொல்லி விட்டாய். பெரியவர்களோ எதுவும் செய்வதாகத் தெரியவில்லை. நீ ஒருபுறம், நீ சொல்லும் பெரியவர்கள் மறுபுறமுமாய், இருந்து கொண்டு என்னை எதற்காக மிருகமாக்கிக் கொண்டிருக்கிறீர்கள்? நான் செய்த பாவம் தான் என்ன? பதவியைத் தர தந்தை மறுக்கிறார். காதலைத் தர நீ

* தற்கால மைனாக்கள்

மறுக்கிறாய். இதெல்லாம் ஏன்?" என்று கேட்டான்.

"இளவரசே, பதவியைப் பற்றிய விஷயம் எனக்குச் சம்மந்தமில்லாதது. அதுபற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆனால் காதல் விஷயத்தில் மட்டும் நான் ஒன்றைச் சொல்லிக் கொள்கிறேன். அதை யாரும் யாரிடமும் கேட்டு வாங்க முடியாது. செடியில் பூக்கும் பூக்களைப் போல் அது தானாக வரவேண்டும். கட்டாயத்திலோ பயமுறுத்துவதிலோ அது வராது." என்றாள் பூங்கொடி.

"நான் உன்னைத் தேடி வந்தது என்னைக் காதலிக்கும் படி கேட்டுக் கொள்வதற்காக அல்ல. அதையும் தாண்டித் திருமணம் செய்து கொள்வதற்காகத் தான் வந்து கொண்டிருக்கிறேன். காதல் செய்து நாட்களை வீணடிக்க நான் தயாராக இல்லை."

"திருமணம் என்றால் கூட விருப்பம் என்பது முக்கியம். நான் இதில் கூட என் விருப்பத்தைப் பற்றி எதுவும் கூறவில்லை. என் தந்தையும் தங்கள் தந்தையும் முடிவெடுத்தால் கழுத்தை நீட்டத் தயார் என்று சொல்லி விட்டேன். இதற்குப் பிறகும் நான் என்ன செய்ய முடியும்?"-

"ஆகா! மேலும் மேலும் என் ரணத்தைத் தான் எல்லோரும் பெரிதாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அதன் விளைவுகளைப் பற்றிச் சிந்திக்காமல் இருக்கிறீர்கள். உங்களது விளையாட்டு விபரீதத்தில் முடியப் போகிறது."

"கோபப் படாதீர்கள் இளவரசே. மன்னரிடமோ என் தந்தையிடமோ பேசவில்லையா?"

"எங்கே பேசுவது? நான் தான் மாறுவேடம் போட்டுக் கொண்டு தலைமறைவாகத் திரிகிறேனே?" என்று சொல்ல



முடியாமல் "பேசாமலா இருப்பேன்? பலமுறை பேசியாகி விட்டது. பொறுத்திருக்கும் படி கூறுகிறார்கள். அவர்கள் முடிவெடுப்பதற்குள் என் ஆயுள் முடிந்து விடும் போலிருக்கிறது." என்றானே.

"நீங்கள் எதற்காக முனிவர் வேடம் போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?"

இதற்கும் குட்டுவனால் உண்மையைச் சொல்ல முடியவில்லை.

"வேடம் தானே போட்டிருக்கிறேன் பூங்கொடி. முனிவனாகி துறவறம் பூண்டு விடவில்லையே? ஒரு வேளை அதைத் தான் நீ விரும்புகிறாயோ?"

"நான் ஏன் அப்படி விரும்பப் போகிறேன்? முனிவராக நீங்கள் வேடம் கூட போட வேண்டியதில்லை."-

"இதோ பார் பூங்கொடி. நாட்கள் தான் வீண்பேச்சுக்களால் கழிந்து கொண்டிருக்கின்றன. அந்தப் பௌர்ணமி வரை காத்திருக்கப் போகிறேன். அதற்குள் எனது விருப்பங்கள் நிறைவேறாமல் போனால் நானே எனது விருப்பங்களை என் வழியில் நிறைவேற்றிக் கொள்வேன். பதவியில் அமர்ந்து உன்னைக் காந்தர்வ முறைப்படி மணப்பேன்."

அச்சமயத்தில் "முனிவரா? யார் இந்த முனிவர் பூங்கொடி? காந்தர்வ மணம் பற்றிப் பேசுகிறாரே- யாரிந்த" என்ற கேட்டபடி சேரமன்னன் செங்குட்டுவனும் புலவர் பரணரும் உள்ளே நுழைந்தார்கள்.

அவர்களைக் கண்டதும் வியர்த்தது குட்டுவனுக்கு

அதைக் கவனித்த சேர மன்னன், "பூங்கொடி முனிவருக்கு ஏன் இப்படி வியர்த்துக் கொட்டுகிறது? எதையாவது பார்த்து பயந்து விட்டாரா? முனிவர்களுக்கு ஏது பயம்?" என்று கேட்டான்.

"பிரபு, தங்களுக்குக் கூடவா இவரை அடையாளம் தெரியவில்லை?"

"என்னம்மா சொல்கிறாய்?"

"இவர் முனிவரல்ல. முனிவர் வேடத்தைப் பூண்டிருக்கிறார். ஏனென்று கேட்டால் பதில் சொல்லவில்லை".

"அப்படியா? யார் இந்த வேடதாரி?"

இந்நிலையில் தன் குட்டு வெளிப்பட்டு விட்டதை உணர்ந்த குட்டுவன் அசதியும் வெறுப்பும் அடைந்தவனாய் தாடி முதலிய ஒப்பனைகளைக் களைந்து விட்டு "நான் தான் தந்தையே, தங்கள் மகன் குட்டுவன்." என்றான்.

மன்னன் அசரவில்லை. புலவரைப் பார்த்து "புலவர் பெருமானே. தங்கள் மாணாக்கருக்கு என்ன ஆயிற்று? எதற்காக வேடதாரி ஆனார்?" என்று வினவினான்.

"அவரைத் தான் கேட்க வேண்டும் மன்னா." என்று சொன்னார் புலவர்.

"மாணாக்கரைக் கேட்டுத் தான் சொல்லுங்களேன்." என்றான் மன்னன்.

குட்டுவனுக்கு அவர்களது பேச்சு எரிச்சலை மூட்டியதால் "தந்தையே, என்ன இது? ஒரு பெண்ணின் முன்னால் பெரியவர்கள் இருவரும் என்னை அவமானப்



படுத்துகிறீர்கள். இது நியாயமல்ல." என்றான்.

செங்குட்டுவனும் அவனோடு விளையாட முற்படாமல் "குட்டுவா, நீ எந்த வேடத்தை வேண்டுமானாலும் போட்டுக் கொள். அதைப் பற்றிய கவலை எனக்கில்லை. உனக்கு நானொரு பணியை இட்டேனே, நினைவிருக்கிறதா? அப்பணியை எதற்காக இட்டேன் என்பது ஞாபகத்தில் இருக்கிறதா? அதைச் செய்து முடித்து விட்டாயா?" என்று கரகரத்த குரலில் கேட்டான்.

"சாதாரணத் தூதுவன் செய்யக் கூடிய வேலையை எனக்கு இட்டு என்னை அவமானப் படுத்தினீர்கள். ஆகவே அதை நான் செய்யவில்லை."

"இந்த விஷயத்தை அன்றே கூறியிருக்கலாமே? ஏன் கூற வில்லை"

"அது நடந்து முடிந்த கதை. அதைப் பற்றிப் பேச நான் விரும்பவில்லை."

"நீ, விரும்பாமல் இருக்கலாம். ஆனால் நான் அப்படி இருக்க முடியாது. ஏனென்றால் நீ கேட்ட இளவரசன் பதவிக்குத் தகுதி உனக்கிருக்கிறதா என்று பார்க்கத் தான் அந்தப் பணியை உனக்குக் கொடுத்தேன்."

"அது அநீதி. தங்கள் மகன் நான். அந்த உறவு ஒன்றே போதும் நான் இளவரசனாக. வேறு தகுதி எதுவும் தேவையில்லை."

"தேவை என்று நான் கருதுவதை யாரும் தடுக்க முடியாது குட்டுவா."

"அப்படியானால் எனது வழியில் என் பதவியை நான் பிடிப்பேன்."

"எது உனது வழி? புலவரோடும் துளு நாட்டுச் சேனாதிபதியோடும் சேர்ந்து கொண்டு சதி செய்வதா?"

இதைக் கேட்டு வாயடைத்துப் போனான் குட்டுவன். பதில் சொல்லத் தெரியாமல் திணறினான். செங்குட்டுவனே தொடர்ந்து "உன்னோடு இருந்த சதிகாரர்களைக் கைது செய்து சாட்சிகளாக்கி உன் சதியைப் பற்றி ஐம்பெரும் குழுவிடம் வழக்குரைத்தால் உன் கதி என்னாகும் தெரியுமா? இளவரசு பதவி உன்னை விட்டு நிரந்தரமாகப் பறிபோவதுடன் வாழ்நாள் முழுவதும் நீ சிறையில் தான் கழிக்க வேண்டியிருக்கும். அப்படிச் செய்து சேர நாட்டிற்கு அவப்பெயரை உண்டாக்க நான் தயாராக இல்லை. உனக்கு மேலும் சந்தர்ப்பம் தருகிறேன். திருந்தி விடு. குறுக்கு வழிகளைக் கைவிடு. பொறுமையைக் கடைபிடி. அதுதான் உனக்கு நல்லது." என்று இடித்துரைத்து விட்டு "இங்கு என்ன காரியமாக வந்தாய்? பூங்கொடியிடம் உனக்கென்ன பேச்சு?" என்று கேட்டான்.

"சக மாணவி. அவளிடம் பேசுவது தவறா?" கேட்டான் குட்டுவன்.

"சக மாணவியிடம் பேசும் இடம் பாடசாலை. அவளது இல்லமல்ல. அதோடு அவள் படிப்பைக் கைவிட்டு நீண்ட நாட்கள் ஆகின்றன." என்று சொன்ன செங்குட்டுவன் புலவரைப் பார்த்து "புலவர் பெருமானே, இவ்விருவருக்கும் தாங்கள் தான் ஆசிரியர். நான் கூறியது சரி தானே?" என்று



கேட்டான்.

"மிகவும் சரி" - என்றார் புலவர்.

"பிறகு எப்படி உங்கள் மாணாக்கர் பூங்கொடியின் இல்லத்திற்கு வந்தார்?" என்ற மன்னன் பூங்கொடியைப் பார்த்து "நீ சொல் அம்மா, எதற்காக இவன் இங்கே வந்தான்" என்று கேட்டதும் பூங்கொடியின் கண்கள் பெரிதாகக் கலங்கி அழுகையை வெளிப் படுத்தியது. மன்னனின் கால்களில் விழுந்து வணங்கி எழுந்து அழுதபடியே இளவரசன் தன் இல்லத்திற்கு வந்த அனைத்து விவரங்களையும் சொன்னாள்

எல்லா விவரங்களையும் கேட்ட சேர மன்னன் புலவரைப் பார்த்தான்.

"புலவர் பெருமானே, பூங்கொடியின் தந்தை தாங்கள். அவள் உண்மையைச் சொல்லி விட்டாள். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

புலவர் சங்கடத்துடன் அசைந்தார். சாவகாசமாக எந்த கேள்விக்கும் பதில் கூறிவிடும் அவரால் தற்போது பேசமுடியவில்லை.

அதைச் செங்குட்டுவன் கவனித்தான். குட்டுவனைப் பார்த்தான். அவனது நிலையோ சொல்லும் தரத்தில் இல்லை. பூங்கொடி மட்டும் பாரத்தை இறக்கி விட்ட நிலையில் கூப்பிய கரங்களுடன் நிர்மலமாய் நின்றாள்.

இந்நிலையில் புலவரிடம் "புலவர் பெருமானே, இன்று முதல் உங்களது ஐம்பெருங்குழுவின் தலைவர் என்ற பொறுப்பை நான் விடுவித்து விடுகிறேன். உங்களைச் சுதந்திரமாக விட்டிருக்க வேண்டும் தவறு செய்து விட்டேன்

நான். தாயற்ற இப்பேதைப் பெண்ணைக் கவனித்துக் கொள்ள முடியாத வகையில் உங்களுக்குப் பொறுப்புகளை அளித்து இவளது இந்த அனாதரவான நிலைக்குக் காரணமாகி விட்டேன். இப்பெண்ணின் கண்களில் கண்ணீரை உண்டாக்கி விட்டதற்காக நான் வெட்கப் படுகிறேன். ஒரு வகையில் அதற்கு என் மகனும் காரணமாகி விட்டதற்கு தங்களிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். இவளைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு என்னுடையது. இனி இவளது வாழ்விடம் இதுவல்ல. என் அரண்மனைக்கு அழைத்துச் செல்கிறேன். என் மகளைப் போல வளர்க்கிறேன். நீங்கள் ஓய்வெடுங்கள்." என்று கூறிய சேரமன்னன் குட்டுவனை நோக்கி "குட்டுவா உன் குற்றங்கள் அதிகமாகிக் கொண்டே போகின்றன. எனது நாட்டில ஒரு பெண்ணைக் கவர்ந்து போய் காந்தர்வ மணம் புரிந்து கொள்ள உன்னால் முடியுமென்றால் என்னால் என்னென்னவெல்லாம் முடியும் என்று யோசித்துப் பார். மீண்டும் மீண்டும் சொல்கிறேன். திருந்தி விடு. கொள்ளைக் காரனான பங்களனுக்கே திருந்த சந்தர்ப்பம் கொடுத்தவன் நான். சேர நாட்டு அரச குமாரனான உனக்குத் திருந்த அவகாசம் கொடுப்பது தவறல்ல. இதைச் சரியாகப் புரிந்து கொள். இல்லையென்றால் சேரமான் உறவுகளைப் பார்க்க மாட்டான். தர்மத்தை மட்டுமே பார்ப்பான்." என்று சொல்லி விட்டு "பூங்கொடி, வா. தேரில் ஏறிக்கொள்." என்று பூங்கொடியிடம் கூறினான். நல்ல காலம் பிறந்து விட்டதாக மெய்மறந்த அவள் தேரில் ஏறினாள். தேர் பறந்தது.



பூங்கொடியின் நிலை இது. இனி சேனாபதி குமாரனின் நிலையைப் பார்ப்போம். வெண்ணைத் தீவிலிருந்து புறப்பட்ட போது சேர மன்னனைக் கொல்வது என்ற காரணத்தை அவன் சுமந்திருந்தாலும் அவனது குறிக்கோள் என்னவோ ஆபுத்திரனை மணப்பதாகவே இருந்தது. ஆபுத்திரனை கவர்வதற்கும் அவனை வெல்வதற்கும் முயற்சி செய்த அவனுக்கு ஒன்று மட்டும் உறுதியாகப் புரிந்தது. ஆபுத்திரனை வெற்றி கொள்ள வேண்டுமானால் அதற்கு சேர மன்னனைக் கொல்லும் முயற்சி முற்றிலும் பயனளிக்காது என்பதைப் புரிந்து கொண்ட அவன், அதற்கு மாறாகச் சேர மன்னனைக் காப்பாற்றும் முயற்சியில் இறங்குவது நல்லது என்று தீர்மானித்திருந்தான்.

வஞ்சிக்கு வந்ததும் தன பேச்சுத் திறமையாலும் பழகும் இனிமையாலும் பல பெண்களைத் தோழிகளாகப் பெற்ற அவன் அவர்களோடு சேர்ந்து கொண்டு பல விருந்துகளில் அரட்டையடித்து பொழுதைப் போக்கி வந்தான். அவர்கள் மூலமாகவே ஆபுத்திரன் பூங்கொடி மேல் வைத்திருந்த காதலைப் பற்றி அறிந்தான். அவன் இங்கேயும் அவனது சுபாவத்தை வெளிப்படுத்தி பூங்கொடியிடமே பழகி அவளைக் காதல் பாதையிலிருந்து விலகச் செய்ய முயன்றான். அதற்காகச் சில சமயங்களில அவளை பயமுறுத்தவும் செய்தான். ஆபுத்திரனிடமும் தனது செயல்பாடுகளைப் பற்றி வெளிப்படையாகவே பேசினான். தினமும் அவனைச் சந்தித்து அவனுடனான பழக்கத்தை அதிகரித்தான். ஆபுத்திரன்

நேர்மையானவனாதலால் அவனை மறுக்காமல் அதே சமயம் மனதை நோக விடாமல தனது இயலாமையை வெளிப்படுத்தி வந்தான்.

இந்த நிலையில் அவன் இலங்கை மற்றும் சோழ நாட்டிற்குப் பயணப்பட வேண்டிய சந்தர்ப்பம் வந்தது. அப்போது அவனிடம் பேசிய ஆபுத்திரன் சேரமன்னனைக் கொல்வது பற்றி அவனைச் சீண்டிப் பார்த்து விட்டு, பவானி சேர நாட்டிற்கு வந்திருப்பதை தெரிவித்திருந்தான். அந்தச் செய்தி அவளது நிம்மதியை குலைத்தது. பவானி தனது தந்தையின் ஆசைநாயகி என்பது மட்டுமின்றி சுயநலத்திற்காக எதையும் செய்யக் கூடியவள் என்பது சௌமியகுமாரிக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. வெள்ளைத் தீவிலேயே பலநிகழ்ச்சிகளை அவள் பார்த்திருந்தாள். எனவே சுயநலமும் காம வேட்கையும் நிறைந்த அப்பாதகி திடீரென சேரநாட்டிற்கு வந்திருப்பது நிச்சயமாக நல்லதிற்காக இருக்காது என்று நம்பினாள். அதனால் அவளுக்குச் சற்று அச்சமும் உண்டாயிற்று. அதிக பட்சமாக அவள் செய்யக் கூடியது கொலையாகத் தான் இருக்க வேண்டும் என்றும் அப்படி இருந்தால் ஆபுத்திரனை விட சேரமன்னனைக் கொல்வதே அரசியல் ரீதியாக லாபகரமானது என்றும் நினைத்தாள் அவள். தன் தந்தையே கூட இக்காரியத்தில் தன்னை நம்பாமல் பவானியை அனுப்பியிருக்கலாம் என்று தோன்றியது சௌமியகுமாரிக்கு.

தனது தோழிகளிடமும் இதைப் பற்றிக் கூறி விவாதித்தாள். ஆனால் பவானியைக் கண்டு பிடிப்பது அத்தனைச் சுலபமல்ல என்பது அவளுக்குத் தெரிந்தது.



எதற்கும் முன்னெச்சரிக்கையாக, அவள் தீயநோக்கத்தோடு வஞ்சிக்கு வந்துள்ளது பற்றி சேனாதிபதி வில்லவன் கோதைக்கு எப்படியாவது தெரிவித்து விட வேண்டும் என்று முடிவு செய்தாள்.

இதே சமயத்தில் பௌத்தத் துறவியும் புலவருமான சீத்தலை சாத்தனாரும் பௌத்த பிட்சுக்களும் வசித்து வந்த அரண்மனைப் பகுதியின் மேல் விதானத்தில் இருந்த குட்டுவனின் தனியறையை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள் பவானி.





# அத்தியாயம் முப்பது



## அருணன் கோயில்

**ப**வானி வெள்ளைத் தீவிற்கு வருவதற்கு முன்னால் சேர நாட்டில் அதுவும் குறிப்பாக வஞ்சி மாநகரில் நீண்ட நாட்கள் இருந்தவள். எனவே வஞ்சி நகரின் எல்லா பகுதிகளையும் நன்கறிந்திருந்த அவள் சேரமன்னன் முதல் பல்வேறு பிரமுகர்களைப் பற்றியும் அவர்களது வாழ்விடங்களைப் பற்றியும் தெரிந்து வைத்திருந்தாள். வெள்ளைத் தீவில் தனது சாயம் வெளுத்து விட்ட நிலையில் தண்டனைக்கு ஆளாகி மீன் தீவுக்கு உபதலைவன் அமீருடன் வந்து கிட்டி கட்டும் பலகையில் ஆடைகளை நீக்கி விட்டு குப்புறப்படுத்த அவள் அச்சத்தால் அந்த நிமிடத்திலேயே மயக்க மடைந்தாள். செத்து விடுவோம் என்ற பயத்தில்



மூர்ச்சையான அவள் மயக்கம் தெளிந்த போது சாகவில்லை என்பதை உணர்ந்தாலும், அமீரினால் தான் கண்டபடி இச்சிக்கப் பட்டதையும் அதன் காரணமாக உடலெங்கும் காயங்கள் உண்டாகியிருந்ததைக் கண்ட போது கவலையே உண்டாயிற்று அவளுக்கு. நான்கைந்து மிருகங்கள் சேர்ந்து தன்னை இம்சை படுத்தியது போல் அங்கமெல்லாம் நொந்து கொண்டிருந்தது. மெதுவாக எழுந்து நின்று சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்த அவள் தனக்கு முன்னால் அமீர் நின்றிருப்பதைக் கண்டாள். தான் ஆடையின்றி நிற்பதை உணர்ந்த அவள் வெட்கப் பட்டு மண்டபத்தின் உட்புறமாக ஓடினாள். அமீர் அவளது ஆடைகளைக் கொண்டு வந்து வீசினான். அவற்றை அணிந்து கொண்டு அவள் மண்டபத்திற்கு வெளியே வந்த போது விடியும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

அவளைப் பார்த்த அமீர், "என்ன பெண்ணே, என்ன பார்க்கிறாய்? தண்டனையை ஏன் நிறைவேற்றவில்லை என்று பார்க்கிறாயா? என்று கேட்டான்

அவளால் பேசக் கூட முடியவில்லை

"இப்போது கூட தண்டனையை நிறைவேற்ற என்னால் முடியும். போய் கிட்டிப் பலகையில் போய் படுக்கிறாயா?" என்று கேட்டான் அமீர்.

அவள் மௌனமாய் நின்றாள்.

"இதோ பார், அனுதாபத்தின் காரணமாக உன்னை நான் விட்டு விட்டதாக எண்ணி விடாதே. அதற்கு எனக்கு வெகுதூரம். இரவெல்லாம் உன் உடலை எதிர் பார்த்து ஓடி வந்த நரிகள் நீ இறக்காததால் உண்டான ஏமாற்றத்துடன் என் மீது பாய்ந்தன. அவற்றோடு ஒரு போராட்டமே நிகழ்த்தினேன்

நான். என் மீது பாய்ந்த ரத்த வெறி பிடித்த நரிகளையும் ஓநாய்களையும் கண்டபடி வெட்டினேன். அடிபட்ட விலங்குகள் ஓலமிட்டபடி ஓடிவிட்டன. அவற்றில் எத்தனை செத்ததோ தெரியாது. இங்கேயே பார். ஏழெட்டு நரிகளின் சடலங்கள் இருக்கின்றன. இதிலிருந்து என்ன புரிந்து கொண்டாய்?" என்று கேட்டான் அமீர்.

இதற்கு மேலும் பேசாதிருப்பது ஆபத்து என்பதை உணர்ந்த அவள், "எனக்காக மிகவும் சிரமப் பட்டிருக்கிறீர்கள். பெரிய ஆபத்தை விலைக்கு வாங்கியிருக்கிறீர்கள். நான் உயிரோடு இருப்பது தெரிந்தால் பங்கனர் தங்களை எது வேண்டுமானாலும் செய்வார்" - என்றாள்.

"அப்படியானால் என்ன செய்வதாக உத்தேசம்? பங்கனின் தண்டனையை ஏற்றுச் சாகிறாயா?"

"வேண்டாம்."

"பிறகு?"

"நீங்கள் சொல்வது போல் நடந்து கொள்கிறேன்."

"நல்லது. வா. என்னுடன்." என்று கூறிய அமீர் அவளை அழைத்துக் கொண்டு கடற்கரையில் கட்டிப் போட்டிருந்த படகை அவிழ்த்து அதில் ஏற்றிக் கொண்டு படகை செலுத்தினான். வெள்ளைத் தீவுக் கூட்டத்தில் பேய்த் தீவுக்கு அடுத்திருந்த தீவுக்குச் சென்றான். அங்கே இறங்கி அவளை ஓரிடத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கே இருந்தவர்கள் "வாருங்கள் எசமான்." என்று வரவேற்றார்கள்.

அவர்களைப் பார்த்த அமீர் "இவளை நரிகள் கடித்து விட்டன. இவளுக்கு உரிய சிகிச்சைகள் செய்து உணவளித்து



பாதுகாப்பாக வைத்திருங்கள். பங்கனுக்கு வேண்டிய பெண் இவளுக்கு ஏதாவது நேர்ந்தாலோ இவள் தப்பி விட்டாலோ பங்கனரால் நீங்கள் அனைவரும் உயிரோடு எரிக்கப் படுவீர்கள். நான் பிறகு வந்து பார்க்கிறேன்." என்று கூறிவிட்டு அகன்றான்.

நான்கு நாட்களுக்கு அந்த பக்கமே அமீர் தலை காட்டவில்லை. ஐந்தாவது நாள் அங்கே வந்த போது பவானி நன்றாகத் தேறி மெருகோடு காட்சியளித்தாள். அங்கே இருந்தவர்களிடம் சிறிது நேரம் பேசி விட்டு குடிசைக்குள் அவளை அழைத்துச் சென்றான் அமீர். உள்ளே சிறிய விளக்கொன்று எரிந்து கொண்டிருந்தது. மற்றபடி வேறெதுவும் உள்ளே இல்லை.

அதையெல்லாம் பார்த்து விட்டு பவானியையும் ஏற இறங்கப் பார்த்த அமீர் "பங்கனைப் போன்ற மூடனை நான் பார்த்ததில்லை." என்றான்.

"ஏன்?" என்று கேட்டாள் பவானி.

"உன்னைப் போய் கொல்லச் சொன்னானே அவன் எப்படி அறிவாளியாக இருக்க முடியும்?"

"அவரைக் கொல்ல நான் காரணமாகி விட்ட பின் என்னைக் கொல்லாமல் விடுவாரா?"

"அவனை நீ கொல்ல முயன்றதற்கு எது காரணம்?"

விழித்தாள் பவானி.

"நீ சொன்னது உனக்கே மறந்து விட்டதா? உன்னை வெறும் போகப் பொருளாக அவன் கையாண்டதால் தானே நீ அவனைக் கொல்லத் துணிந்தாய்?"

"ஆமாம்."

"இத்தனைக்கும் நீ போர்ப் பயிற்சி பெற்றவன். உன்னைக் கொன்று இங்கிருப்பவர்களுக்கெல்லாம் போர் பயிற்சியை அளித்தவன் அவன். உன்னால் சுகத்தை அனுபவித்த அந்த முட்டாள் உன்னை வெள்ளைத் தீவுக்குச் சேனாதிபதியாக ஆக்கியிருக்கலாம் இல்லையா? அது உனக்கு கௌரவமாக இருந்திருக்கும் அல்லவா? அப்படிச் செய்திருந்தால் நீ அவனைக் கொலை முயற்சித்திருப்பாயா?"

அமீரின் பேச்சைக் கேட்டுப் பெரிதும் வியப்படைந்தான் பவானி.

அதைக் கவனித்த அமீர் "என்ன அப்படிப் பார்க்கிறாய்? எனக்கெப்படி ஞானோதயம் வந்தது என்று நினைக்கிறாயா? ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு விதமாய் ஞானம் பிறக்கிறது. அது எனக்குப் பிறந்த விதம் விநோதம். பேய்த்தீவில் கிட்டி கட்டும் பலகையில் நீ ஆடையின்றி குப்புறப் படுத்துக் கிடந்ததை பந்த ஒளியில் நான் பார்த்த போது தான் எனக்கு ஞானோதயம் வந்தது. உன் அழகு மனிதரால் ரசிக்கவும் அனுபவிக்கவும் உண்டானதேயன்றி நாய் நரிகளால் கடித்துக் குதற அல்ல. அதே போல் உன் அறிவு பெரும் நிகழ்வுகளை உண்டாக்கப் பயன்பட வேண்டிய ஒன்றே தவிர பங்களனின் நிழலில் அழிந்து விடுவதற்காக உண்டாகவில்லை. இதை உணர்ந்த நான் உன் அழகை ருசித்தேன். உன் அறிவைப் பயன்படுத்தத் தீர்மானித்தேன். நீயும் நானும் இங்கே இருந்து கொண்டு எதையும் சாதிக்க முடியாது. இருவரும் சேரநாட்டிற்குப் போய் விடுவோம். திறமையான உளவாளிகளாகச் செயல்படுவோம். நமது திறமைக்கேற்ற லாபம் கிடைக்கும். இன்னும் சிறிது நேரத்தில் படகு தயாராகி



விடும்' என்று சொல்லி விட்டு "படகு தயாராகும் வரை நான் கம்பமாகவே இருக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

"இங்கே மஞ்சமில்லை. தரைவிரிப்பு கூட இல்லை" என்றான் பவானி.

"உன் போன்ற அழகிகளுக்கு மணல் விரிப்பை விடச் சிறந்த மஞ்சம் கிடையாது. கவலைப் படாதே. மணல் உன்னைக் குத்தாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றான் அமீர்.

அதற்குப் பிறகு அவர்கள் கையாண்ட சாமர்த்தியத்தைக் கண்டு அருகிய விளக்கு வெட்கப் பட்டு அணைந்து போயிற்று.



இத்திர்யானத்துடன் அமீரும் பவானியும் வஞ்சிக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே எதிர் பாராத விதமாக ஆபுத்திரனால் வெட்டுப் பட்ட அமீர் அகற்றப் பட்டு விட்டதால் தனியாக்கப் பட்ட பவானி பலவாறு யோசித்தான். மிளகுச் சந்தையில் இடம் பிடித்து வசிக்கத் தொடங்கிய அவன் அமீர் கூறியபடி உளவாளியாகச் செயல் படத் தொடங்கினான். பல விஷயங்கள் அவனுக்குத் தெரிய வந்தன. பல ஆடவர்களால் ஏமாற்றப் பட்ட அவன் மிகவும் வெந்து போயிருந்தான். வெள்ளைத் தீவில் தான் விஷம் வைத்த சம்பவத்தில் பங்களன் இறந்து போயிருந்தால் அவனுக்குச் சற்று ஆறுதல் கிடைத்திருக்கும். வெள்ளைத் தீவையும் பிடித்திருப்பான். அவை அனைத்தும் இனி இல்லை என்றாகி விட்ட நிலையில் அவனது சொல்லை வெறியும் கொள்கை வெறியும் தலை தூக்கின. ஆடவர்களை அடியோடு வெறுக்க

தொடங்கினாள். பின்பு சந்தையிலேயே ஒருவரை விஷம் வைத்துக் கொன்றாள். பிறகு தனது அன்பை நிராகரித்தவர்கள் மீது அவளது கவனம் திரும்பியது. சேர மன்னனை எண்ணிப் பார்த்தாள். அந்த எண்ணம் கொலை எண்ணமாக மாறியது. அவனது தினசரி அலுவல்கள் அவன் தனியாக இருக்கும் இடம், நேரம் ஆகியவற்றை அறிந்து கொண்டாள் அவள். இதற்கிடையில் சேர மன்னனுக்கும் அவன் மகன் குட்டுவனுக்கும் அரியணை விஷயத்தில் தீவிர கருத்து வேறுபாடு இருப்பதை நுகர்ந்தாள். அது அவளுக்குப் பெரும் மகிழ்ச்சியை அளித்தது. சேர மன்னனை அழிக்க இது நல்ல வாய்ப்பு என்றும் அதற்கு மன்னனின் மகன் குட்டுவனே கருவி என்றும் தீர்மானித்த அவள் அவனது நடவடிக்கைகளையும் கண்காணித்து முடிவில அவனைச் சந்திப்பதற்குச் சென்றாள்.



சீத்தலை சாத்தனாரும் புத்த பிட்சுக்களும் தங்கியிருந்த மாளிகைக்கு வந்து இளவரசனை சந்திக்க வேண்டும் என்று பவானி அனுமதி கேட்ட போது "பெண்கள் உள்ளே செல்ல அனுமதி கிடையாது." பிட்சுக்கள் மறுத்து விட்டார்கள்.

"பிறகு அவரை நான் சந்திப்பது எப்படி? அவரைக் கீழே வரும் படிச் சொல்வது மரியாதையாகுமா?" - என்று கேட்டாள் பவானி.

"அம்மணி, நீங்கள் யார்?"

"அதை இளவரசரிடம் தான் கூற வேண்டும்."

அதையடுத்த அவளிடம் பேச்சு வைத்துக் கொள்ளச் சங்கடப் பட்ட பிட்சுக்கள் காவலாளி ஒருவனை மேலே அனுப்பி செய்தியைச் சொன்னார்கள்.

"வந்திருப்பது யார்?" கேட்டான் குட்டுவன்.



"தெரியவில்லை. பெண்ணாக இருப்பதால் பிட்சுக்கள் உள்ளே விட மறுக்கிறார்கள்."

"அப்படியென்ன அவசரம் அவளுக்கு என்னைச் சந்திக்க?"

"எதுவாக இருந்தாலும் உங்களிடம் தான் சொல்வேன் என்கிறாள்."

"சரி நீ அவளை அருணன் கோயிலுக்கு அழைத்து வா நானும் வருகிறேன்."



சங்க காலத்தில் மக்கள் இயற்கை சக்திகளை தெய்வமாக வழிபட்டார்கள். அந்த வகையில் கடலையும் தெய்வமாக எண்ணி வழிபடும் வழக்கம் அவர்களுக்கு இருந்தது. அதையொட்டியே கடல் தெய்வத்திற்கு மணிமேகலா தெய்வம் என்று பெயரிடப் பட்டது. அக்கடல் தெய்வம மணிமேகலையை ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்திற்கு முக்கியமாக கடல் குறுக்கிடும் பகுதிகளுக்கு தூக்கிச் சென்று இறக்கியதாக மணிமேகலை காப்பியம் கூறுகிறது. ஏனென்றால் அக்காலத்தில் பெண்கள் கடலில் பயணம் செய்யக் கூடாது என்று விதி இருந்தது. * அது போலவே மழையைக் கூட தெய்வமாக மதித்து அதற்கு மாரி என்று பெயரிட்டார்கள். பிற்காலத்தில் இப்பெயர் அம்மன்

* முந்நீர் வழக்கம் மகடூஉ வோ இல்லை' - தொல் காப்பியம்

"தமிழருக்கு வழங்கிய கொடை" by மயிலை சீனிவேங்கடசாமி பக்கம் 44



அருணன் கோயில்



தெய்வத்திற்கு மாற்றப் பட்டு மாரியம்மன் கோயில்களாக மாறின. மனுவின் தேவனான அருணனுக்கும் கோயில் அமைத்த மக்கள் அங்கே சிலை ஏதும் வைக்காமல் சுறாமீனின் கொம்பை அடையாளமாக வைத்து வழிபட்டார்கள். * அப்படி வழிபாடு செய்வதற்காக வஞ்சி நகருக்குள் பிரம்மாண்டமான கோயிலொன்று இருந்தது. பரதவர்களும் இதர பொது மக்களும் அதிக அளவில் அங்கே கூடுவதை வழக்கமாகக் கொண்டிருந்ததால் அக்கோயிலில் எப்போதும் ஜனத்திரள் மிகுந்திருக்கும். அத்துடன் அக்கோயிலின் பிரம்மாண்டத்தையும் அழகையும் காண வெளி நாட்டவரும் அங்கே வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

குட்டுவன் கூறியபடி அக்கோயிலின் பின்னாலிருந்த பாழடைந்த குகையொன்றுக்கு பவானியை அழைத்து வந்தான் காவலாளி. சிறிது நேரத்திலேயே புரவியில் வந்து இறங்கினான் குட்டுவன். காவலாளியை தூர இருக்கும் படியும் யாரையும் குகைக்குள் அனுப்ப வேண்டாம் என்றும் ஆணையிட்டான் இளவரசன்.

பிறகு பவானியைப் பார்த்து "யார் நீ" என்று கேட்டான்.

"உங்களுக்கு உதவி செய்ய வந்தவள்"- என்றாள் பவானி ஒரு வெட்டுப் பார்வையை வீசி விட்டு.

"நான் யாரிடமும் உதவி கேட்கவில்லை"- என்றான் குட்டுவன்.

---

* பக்கம் 159 'தமிழருக்கு வழங்கிய கொடை' by மயிலை சீனி வேங்கடசாமி.

"நீங்கள் கேட்காமலேயே உங்களுக்கு உதவுவது சிலாக்கியம் அல்லவா?"

"பீடிகைகள் வேண்டியதில்லை. சுற்றி வளைக்காமல் விஷயத்தைச் சொல்"-

"ஆர்வத்துடன் உதவ வருபவர்களிடம் அதுவும் பெண்ணிடம் நீங்கள் கோபத்தைக் காட்டுவது நியாயமானதில்லை." என்றாள் பவானி மயக்கும் குரலில்.

குட்டுவன் சற்று நிதானப்பட்டான்.

பிறகு "இதோ பார் பெண்ணே. என்னைப் பற்றி உனக்குத் தெரியாது. நான் தேவையில்லாமல் யாரிடமும் பேசுவதில்லை. அதோடு எனக்கு அறிமுகமாகாதவர்களிடம் நான் அதிகம் பேசுவதில்லை. ஆகவே ஆழம் தெரியாமல் காலை விட நீ விரும்பினால் நீ சேதாரப் பட்டுப் போவாய்." என்றான்.

அவளோ தனது ஏமாற்றத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் "ஆடவர்கள் மிகவும் அவசரக் காரர்கள்' என்றாள் அவனை வலையில் வீழ்த்தும் நோக்கில்.

அவனோ "அதைப் பற்றி நீ கவலைப் பட வேண்டியதில்லை." என்றான்.

"உங்கள் அவசரமும் முரட்டுத் தனமும் தான் உங்களுக்கு அரியணையையும் பூங்கொடியையும் கிடைக்காமல் செய்து விட்டன." என்றாள் பவானி.

அவளது பேச்சு அவனை ஒரு கணம் ஸ்தம்பித்து விடச் செய்தது. தனது அந்தரங்கம் எப்படி இவளுக்குத் தெரிந்தது



என்று நினைத்த அவன் சற்றே திகைத்தாலும் சுதாரித்துக் கொண்டு "என்ன உளறுகிறாய்?"- என்று கேட்டான்.

"இளவரசே, எதற்காக உங்களையே நீங்கள் ஏமாற்றிக் கொள்கிறீர்கள்? பதவிக்காகச் செய்யப்படும் சதிகளும் காதலுக்காக ஈடுபடும் திருட்டுத் தனங்களும் என்னதான் ரகசியமாக வைக்கப்பட்டாலும் கசியவே செய்யும் என்பதை மறந்து விடாதீர்கள். உங்கள் ரகசியங்களெல்லாம் எனக்குத் தெரிந்து விட்டதைக் கண்டு ஆச்சரியப் பட வேண்டாம். அச்சமும் அடைய வேண்டாம். தயக்கத்தை விட்டு வெளியே வாருங்கள்."

பவானி மிகவும் தெளிவாகப் பேசியதால் இனியும் அவளிடம் ஒன்றும் தெரியாத மாதிரி நடிக்க விரும்பாத அவன் வெளிப்படையாகவே பேசமுற்பட்டு "பெண்ணே, என் ரகசியங்கள் உனக்குத் தெரிந்து விட்டன. ஆனால் எப்படி என்று தெரியவில்லை" எனறதும் "நான் ஓர் உளவாளி. அரசியல் விஷயத்தில் உளவு பார்ப்பது என் தொழில். நீங்கள் உங்கள் முயற்சியில் தோற்று விட்டதும் எனக்குத் தெரியும். ஆகவே தான் உங்களுக்கு உதவ நான் முன் வந்திருக்கிறேன்." என்றாள் பவானி குறுக்கிட்டு.

அவள் எதிர்பார்த்த மாதிரியே குட்டுவன் குழம்பிப் போயிருந்தான். அதையெண்ணி மகிழ்ச்சியடைந்த அவள் அவனை யோசிக்க விட்டு அமைதியாக இருந்தாள்.

அவன் குழப்பநிலை மாறாமல் "எல்லாம் சரி, எனக்கு நீ ஏன் உதவ வேண்டும்? அதில் உனக்கென்ன லாபம்?" என்று கேட்டான்.

"உளவாளிகளுக்கு ஊதியம் கிடைக்குமல்லவா?

பிரச்சனை இருக்கும் இடங்களில் நுழைவிட்டு உதவுவதால் ஏதாவது ஆதாயம் கிடைக்கும் என்று தான் பெரும்பாலானோர் உளவாளிகள் காரியமாற்றுகிறார்கள். எனக்கு ஊதியம் கூட பெரிய விஷயமல்ல. அதைவிட பெரிய லட்சியம் இருக்கிறது. அதனால் தான் உதவுகிறேன். என் பெயர் பவானி. நான் சிங்கள இளவரசி. உங்களைப் போல் எனக்கும் இளவரசி பதவி தராமல் அநீதி இழைக்கப்பட்டது. அதற்குக் காரணமானவரை பழிவாங்குவது தான் என் லட்சியம்".

"என் விஷயத்திற்கும் உன் விஷயத்திற்கும் என்ன சம்மந்தம்?"

"உங்களுக்கு அநீதி இழைத்த சேர மன்னர் செங்குட்டுவர் தான் என் அநீதிக்கும் காரணம்."

"இது உண்மையா? எப்படி?"

"இளவரசே. அந்த விவரங்களைப் பிறகு சொல்கிறேன். நாம் இனி செயல்பட வேண்டிய விஷயங்களைப் பற்றிப் பார்ப்போம். நீங்கள் இளவரசுப் பட்டத்திற்கு உரியவர் என்று ஐம்பெருங்குழுவில் மன்னருக்கு எதிராக வழக்கு தொடுத்தால் நிச்சயம் உங்கள் பக்கம் வெற்றி கிடைக்கும். அதைத் தடுக்கத் தான் புலவர் பரணரை ஐம்பெருங்குழுவிலிருந்து தந்திரமாக விலக்கியிருக்கிறார் சேரமன்னர். எனவே நீங்கள் இனிபதவியை அடைய வேண்டுமானால் அதற்கு இரண்டு பேர் தான் முடிவு செய்ய வேண்டும். ஒன்று சேர மன்னர். அடுத்தது ஆபுத்திரன். இவ்விருவரையும் நாம் கொல்ல வேண்டும்"

"ஆபுத்திரனை நான் ஏற்கனவே கொன்று விட்டேன்."



"உண்மையாகவா? கொன்று விட்டீர்களா? எப்போது"

"என் சதியில் அவன் தலையிட்டு உதவுவதாக வந்தான். அவன் மீது எனக்கு நம்பிக்கை இல்லை. பொறைக்காடில் எங்களோடு பேசிவிட்டு ஆற்றங்கரைக் கோயிலில் அவன் தனித்திருந்த போது அவன் அறியா வண்ணம் அவன் தலையில் இரண்டு போடு போட்டு விட்டேன். ஆள் சவமாகியிருப்பான்."

பவானிக்கு தானும் அமீரும் சுரங்கப் பாதை வழியாக கோயிலின் கருவறைக்கு வந்தது - அங்கே ஆபுத்திரன் மயங்கிக் கிடந்தது - அவனை ஆட்களை வைத்து கொல்வதற்காகத் தூக்கிச் சென்றது - ஆனால் அவனோ கொல்லப்படாமல் அமீரைத் தாக்கி அப்புறப் படுத்தியது - அக்குழப்பத்தில் தான் தப்பியோடியது ஆகியவை நினைவுக்கு வந்தன.

உயிரோடு இருக்கும் ஆபுத்திரனை இறந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருந்தான் குட்டுவன். ஆகவே அவனிடம் போய் அவன் உயிரோடு இருப்பதாகச் சொன்னால் காரியம் கெட்டு விடும் என்று நினைத்த பவானி அதைக் கூறாமல் "அப்படியா! மிக்க மகிழ்ச்சி. ஒருவன் தொலைந்தான். இனி நம் எதிரி செங்குட்டுவன் தான். அவனை ஒழிக்க நான் திட்டத்தை வைத்திருக்கிறேன். சொல்லட்டுமா?" என்று கூறி அவனது கரங்களைப் பற்றி அவனது மார்பில் சாய்ந்தான்.

அப்போது எங்கிருந்தோ வந்து விழுந்தது ஓர் ஓலை.

தன் மீது வந்து விழுந்த ஓலையை எடுத்துப் படித்தான் குட்டுவன்.

'குட்டுவருக்கு வில்லவன் கோதை விடுக்கும் செய்தி. பவானியை நம்ப வேண்டாம். கொன்று விடவும்.' என்றிருந்தது.

குட்டுவன் செயல் படு முன் பவானி தனது மேகலையில் இருந்த குறுவாளையெடுத்து அவனது இடையில் பாய்ச்சி விட்டு தப்பி ஓடினாள்.

குட்டுவன் நினைவு தவறிக் கொண்டே கீழே விழுந்தான்.

அவனது செவிகளில் புரவிகள் பலவரும் காலடி ஓசை மங்கலாகக் கேட்டது.

அவன் பூரணமாக மயக்கமடைந்தான்.







## அத்தியாயம் முப்பத்தொன்று



# குணவாயில் கோட்டம்

சேரநாட்டு சேனாதிபதி வில்லவன் கோதை தனது இல்லத்தின் முன்னால் வைத்திருந்த புகார் பெட்டியில் இருந்த ஓலைகளையெல்லாம் கொண்டு வரச் செய்து படித்த போது ஓர் ஓலைமட்டும் அவனது கவனத்தைக் கவர்ந்தது.

"சேர நாட்டு சிம்ம சொப்பனம், சீறிய சிங்கம் வில்லவன் கோதையார் அவர்களுக்கு வணக்கம். சேரநாட்டிலிருந்து விலக்கப் பட்ட பாதாகி பவானி மீண்டும் சேர நாட்டிற்கு வந்துள்ளாள். சேர மாமன்னரைக் கொல்வது தான் அவளது லட்சியமாம். எச்சரிக்கை!"

அடிக்குறிப்பு: இதை எழுதியது யார் என்று குழம்ப வேண்டாம். மன்னரைக் காப்பாற்றுங்கள்.

-என்றிருந்தது ஓலையில். ஓலை எழுதியது யார் பற்றி வில்லவன் கோதை கவலைப் படவில்லை. செய்தியைப் பற்றியே ஆராய்ந்தான். அதில் பவானி என்ற பெயரையும் அப்பெயருக்கு உரியவளையும் நினைவு படுத்திக் கொள்ள சற்று நேரம் பிடித்தது சேனாதிபதிக்கு. ஆகா! காதல் வலை வீச வந்தக் காதகி அவளல்லவா அவள்! கடலில் அல்லவா அவளைத் தூக்கி எறியச் சொன்னேன்! இத்தனை நாட்கள் எங்கே இருந்திருப்பாள்? ஒருவேளை வென்னாத் தீவுக்குப் போயிருப்பாளோ? காதகக்காரி அவள் போனாலும் போயிருக்கலாம். பங்களனை வளைத்திருக்கலாம். தற்போது பங்களனால் அனுப்பப்பட்டு சேரமன்னரைக் கொல்லும் நோக்கத்துடன் வந்திருப்பாளோ! இவளை உடனடியாகக் கண்டு பிடிக்க வேண்டுமே! என்றெல்லாம் நினைத்த வில்லவன் கோதை ஒற்றர் படைத் தலைவன் நீலனை அழைத்து அவனிடம் அந்த ஓலையைக் காட்டினான்.

ஓலையைப் படித்த நீலன் "ஓலையில் எழுதியவன் யார் என்பது குறிப்பிடவில்லை." என்றான்.

'அடிக்குறிப்பில் எழுதியவனைப் பற்றி குழம்பிக் கொள்ள வேண்டாம் என்று குறிப்பிடப் பட்டுள்ளது." என்றான் சேனாதிபதி இகழ்ச்சியுடன்.

"அடிக்குறிப்பை எழுவதற்கு பதில் எழுதியவன் தன் பெயரைக் குறிப்பிட்டிருக்கலாம்." என்றான் நீலன்.

"பெயரைக் குறிப்பிட்டிருந்தால் என்ன செய்து விடுவாய்? பிடித்து விடுவாயா பவானியை? நீலா, உன்னை இங்கே அழைத்தது ஓலையை எழுதியவன் யார் என்பதை ஆராய்வதற்காக அல்ல. அது வீண் வேலை என்பது



அடிக்குறிப்பில் மறைமுகமாகச் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது. ஆகவே அதை விடு. பவானியைக் கண்டு பிடிக்க வேண்டும். அதற்கு என்ன செய்வதாக உத்தேசம்?"

"பவானி எப்படி இருப்பாள் என்று தெரியாது." என்றான் நீலன்.

"சதிகாரர்கள் தங்கள் உருவங்களை ஓவியங்களாக ஆங்காங்கே வரைந்து விட்டு போவார்கள் என்று எதிர் பார்க்கிறாயா? நீலா, ஒற்றர்களை திரட்டு. நகரின் அனைத்துப் பகுதிகளிலும் அனுப்பு. சந்தேகப் படக் கூடிய பெண்களை சிறைசெய். அதுவும் சிங்களத்துச் சாயல் உள்ள பெண்ணாக இருந்தால் கைகால்களைக் கட்டி என்னிடம் அழைத்து வா" என்று அறிவுறுத்திய சேனாதிபதி, "நீலா, நமது ஒற்றர் படையின் பணி திருப்திகரமாக இல்லை. வஞ்சி நகரில் வேற்று நாட்டு ஒற்றர்கள் நிரம்ப இருப்பதாக அமைச்சர் அடிக்கடி கூறி வருகிறார். ஆனால் நீங்கள் யாரையும் பிடித்ததாகத் தெரியவில்லை. மன்னர் காணமல் போனபோது கூட அவரை ஆபுத்திரன் தான் கண்டு பிடித்து வந்தானே தவிர ஒற்றர் படையால் எதுவும் இயலவில்லை. எனவே பவானியையாவது பிடியுங்கள். இல்லை என்றால் ஒற்றர் படையே தேவையில்லை என்று மன்னரிடம் சொல்லி கலைத்து விடுவேன்" என்றான்.

நீலன் சிறிது நேரம் யோசித்து விட்டு "ஒற்றறியும் வேலை தங்களைப் போல வில்லையும் வேலையும் கொண்டு நேருக்கு நேர் போரிடுவது போன்றதல்ல. முகம் தெரியாத உளவாளிகளைக் கண்டுபிடிப்பதென்பது கடினமானது. அது ஒரு தனிக்கலை. அது விஷயமாக உங்களிடம் விவாதிக்க நான் விரும்பவில்லை. ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் பேச

இந்த நிலையில் வில்லவை கோதையும் அவனது வீரர்களும் வந்த போது குட்டுவன் ரத்த காயத்துடன் மயங்கிக் கிடந்ததைக் கண்டு திகைத்தார்கள். "ம் இளவரசரை மருத்துவ சாலைக்கு அழைத்துச் செல்லுங்கள். பகைவன் தப்பி ஓடுவதற்குள் பிடிபட வேண்டும். கோட்டையை விட்டு வெளியேறு முன் அவன் வளைக்கப் பட வேண்டும். கோட்டை கதவுகளைச் சாத்தச் சொல்லுங்கள். யாரையும் சோதனையின்றி வெளியே விட வேண்டாம் என்று நான் கூறியதாகச் சொல்லுங்கள்" என்று கட்டளையிட்டான் சேனாதிபதி. அதையடுத்து காரியங்கள் விரைவாக நடைபெற்றன.



இளங்கோவடிகள் இருந்த குணவாயில் கோட்டம் அமளிதுமளி பட்டுக் கொண்டிருந்தது. சமண மதத்தின் ஒப்பற்ற தலைவர் மகாவீரரின் பிறந்த நாளையொட்டி குணவாயில் கோட்டம் விழாக் கோலம் பூண்டிருந்தது. சேரநாட்டிலிருந்து மட்டுமின்றி இதர நாடுகளிலிருந்தும் சமணத் துறவிகள் ஏராளமாக வந்திருந்த காரணத்தால் குணவாயில் கோட்டப் பகுதியில் எங்கு பார்த்தாலும் சமணரது மொட்டைத் தலைகளே காணப்பட்டன. அந்த விழாவிற்கு சிறப்பு விருந்தாளியாக சேர மன்னன் செங்குட்டுவனும் ராணி வேண்மாளும் வந்திருந்த காரணத்தால் எங்கும் மகிழ்ச்சி வெள்ளம் பெருகி ஆறாக ஓடியது. மன்னனின் வரவால் காவல் ஏற்பாடுகளும் கனிசமாகச் செய்யப்பட்டிருந்தன.



விழா மேடையில் தங்கச் சிலைபோல வந்து நின்ற இளங்கோவடிகள் மன்னனையும் ராணியையும் வாழ்த்தி விட்டு எதிரே கூடியிருந்த ஆயிரக்கணக்கான துறவிகளையும் வணங்கினார். அதுவரை நிலவிக் கொண்டிருந்த இரைச்சல் அடங்கி பெரும் மௌனம் நிலவியது.

"சமணத்தின் வேர்களாக விளங்கும் அன்புத் துறவிகளே! நமது சமண மதம் மிகப்பழமையானது என்பதை நாம் அறிவோம். ஆதிபகவனான விருஷப தேவர் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் இந்த பூமியில் அவதரித்து சமண மதத்தை ஸ்தாபித்தார். அவர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார். அவரது திருமேனி நம்மைப போன்றில்லாமல் பிரம்மாண்டமான திருமேனியாக இருந்தது. அவருக்குப் பிறகு வந்த பல தீர்த்தங்கரர்களும் அவரைப் போலவே பிரம்மாண்ட திருமேனி தாங்கி ஆயிரம் வருடங்கள் ஜீவித்தார்கள். இவர்களுக்கெல்லாம் இப்படிப் பட்ட பிரம்மாண்ட திருமேனி இருந்தது உண்மையா என்று கேட்கலாம். உண்மைதான். நெடுங்காலத்திலேயே உயிரின் அளவைப் பொறுத்து உடலின் அளவு உண்டாயிற்று. சிறிய உயிரைக் கொண்ட எறும்பின் உடலளவு சிறியதாய் இருப்பது போலவே பெரிய உயிரைப் பெற்ற ஆதிபகவன் போன்ற திருவே உருவானவர்கள். பெரிய திருமேனியைப் பெற்றிருந்தார்கள். * இப்படியாகத் தோன்றிய 24 தீர்த்தங்கரர்களில் கடைசியாகத் தோன்றிய மகாவீரர் சமணகுருமார்களிலேயே துருவநட்சத்திரமாகத் தோன்றினார். அவர் அவதாரம் எடுக்கும் வரை குடத்துக்குள்ளிருக்கும் அகல்

* பக்கம் 9 to 14 நம் தமிழும் by மயிலை சீனி வேங்கடசாமி

விளக்காய் இருந்த சமணம் அவர் அவதரித்த பிறகுதான் குன்றின் மேலிட்ட தீபமாய்ப் பரவியது; ஒளிர்ந்தது. சமண மதத்திற்கான திட்டமான கொள்கைகளை உருவாக்கிய அவர் பரத கண்டம் முழுதும் அயராது அவற்றைப் பரப்பியதின் காரணமாகத்தான் இன்றைக்கு இத்தனை துறவிகள் அவரது அவதார நாளில் கூடியிருக்கிறீர்கள். மகத நாட்டைக் கைப்பற்றி பாரதத்தின் பெருமன்னனாக விளங்கியவனும் விஷ்ணுகுப்த சாணக்கியரின் சீடனுமான சந்திரகுப்தனே ஆட்சியை விட்டு சமண மதத்தைத் தழுவி தென்னாடு வந்து சல்லேகனையில் * ஈடுபட்டு உயிர்துறந்தான் என்றால் எப்படிப்பட்ட சமணக் கொள்கையை மஹாவீரர் உருவாக்கியிருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பாருங்கள். மதங்கள் ஏகாந்தவாதம், அநேகாந்த வாதம் என இருவகைப் பட்டதாக இருந்தன. சமணத்தைத் தவிர இதர மதங்கள் எல்லாம் ஏகாந்த வாத மதங்களாக இருந்தன. அப்படியொரு நிலையைக் கொண்டு வந்தவர்தான் மகாவீரர் என்னும் சமண மகா தெய்வம்" என்று கூறி சமணத்தின் பல்வேறு சிறப்புகளை எடுத்துரைத்த இளங்கோவடிகள் "மதங்கள் எத்தனைச் சிறப்பானவைகளாக இருந்தாலும் அவற்றின் உயர்வும் தாழ்வும் நாடாளும் மன்னரையொட்டியே அமைகின்றன. நமது சேரமா மன்னர் எம்மதமும் சம்மதம் என்ற கொள்கையை உடையவராக இருப்பதால்தான் எல்லா மதங்களும் செழிக்கின்றன. பூசல்கள் இல்லாமல் வளர்கின்றன. இப்பெருந்தன்மையை அனைத்து மன்னர்களும் கடைப்பிடித்தால் நாட்டில் என்றும் அமைதி

* வடக்கிருத்தல். (வடக்கு நோக்கி அமர்ந்து பட்டினியாக இருந்து உயிரை விடுதல்)



நிலவும்" என்று கூறி பேச்சை நிறுத்திக் கொண்டு மன்னரிடம் சில வார்த்தைகளைப் பேசும்படிச் சொன்னார்.

செங்குட்டுவன் எழுந்து "இங்கே உடைநடையாலும் தோற்றத்தாலும் மாறுபடாமல் காட்சியளிக்கும் மதிப்பிற்குரிய துறவியர்களே. நான் எம்மதமும் சம்மதம் என்று வாழ்வதாக இளங்கோ அடிகள் கூறினார். உண்மையில் மதம் என்பது என்ன? அது ஒரு கொள்கை. மக்களின் நல்வாழ்விற்காகவும் உயர்விற்காகவும் அவ்வப்போது அவதரிக்கும் மகான்கள் ஒரு கொள்கையைச் சொல்கிறார்கள். மகான்களுக்கு ஏற்பவும் காலமாற்றத்திற்கேற்பவும் மக்களின் பக்குவத்திற்கு ஏற்பவும் அக்கொள்கைகள் மாறுபடலாம். எதை ஏற்பது எதை விடுவது என்பது மக்களின் சுதந்திரம். கொள்கைவாதிகள் வேண்டுமானால் தன் கொள்கையே சிறந்தது என்று கூறலாம். அதனைப் பரப்பவும் கடைப்பிடிக்கவும் முயலலாம். இதில் அரசனாக இருப்பவன் எல்லாவற்றுக்கும் பொதுவானதாக இருக்கவேண்டும். அவன் உயர்வு தாழ்வு காண்பிக்க முற்பட்டால் மன்னன் எவ்வழியோ மக்களும் அவ்வழி என்று அவர்களும் உயர்வு தாழ்வுகளைப் பேசுவார்கள். பூசல்கள் பெருகும். அந்த நிலை வாராமல் காக்கத்தான் நான் எம்மதமும் சம்மதம் என்று ஏற்றுக் கொள்கிறேன்" என்று கூறி அமர்ந்தான்.

எல்லோரும் மகிழ்ச்சியடையும் விதத்தில் விழா முடிவடைந்தது. வந்திருந்த துறவிகள் தத்தம் வாழ்விடங்களுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். இளங்கோவடிகளின் மாளிகையில் உணவருந்திய சேரமன்னனும் ராணியும் அவரோடு உரையாடிக் கொண்டிருந்த போது "அடிகளே, இளவரசர் குட்டுவஞ்சேரல் தங்களைக் காணக் காத்திருக்கிறார்" என்றார் ஒரு துறவி.

"வரம் சொல்லுங்கள்" என்று இளங்கோவடிகள் மல்லனையும் ராணியையும் தூணிற்குப் பின்னால் அமரச் சொல்லி சீலையொன்றைத் திரையாக விரித்தார்.

"வந்தனம் அடிகளே." என்று கூறியபடி சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான் குட்டுவன்.

"திவ்யமான நாளில் தான் வந்திருக்கிறாய் மகனே. ஒரு குறையும் இல்லாமல் வாழ்வாயாக." என்று வாழ்த்தினார் அடிகள்.

"அடிகளே, உங்கள் வாழ்த்துக்கள் பலிப்பதுண்டா?" என்று கேட்டான் குட்டுவன்.

அடிகள் மெல்ல சிரித்தார். "ஏன் அப்படி கேட்கிறாய்?" என்று கேட்டார்.

"விதி என்று ஒன்று இருக்கும் போது தங்களைப் போன்ற பெரியோர்களின் வாழ்த்து விதியை மாற்றி விடுமா?" என்று கேட்டான் குட்டுவன்.

"ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்" என்று பின்னாளில் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கூறினார் என்றாலும் தற்போது விதியைப் பற்றி விவாதிக்காமல் "குட்டுவா, உன்னை வருத்தும் பிரச்சனை என்ன? கொஞ்ச நாட்களாக ஏதோ அரியணை விஷயமாக மன்னருடன் கோபித்துக் கொண்டதாகப் பேச்சு வந்ததே. அதைப் பற்றித் தான் கவலையா?" என்று கேட்டார்.

"இல்லை. அடிகளே. நிச்சயமாக இல்லை. எனக்கு அரியணையே வேண்டாம்." என்றான் குட்டுவன்.

"ஏன் இந்த திடீர் மாற்றம்?"-



"அடிகளே, எனக்குரிய அரியணையைப் பெற நான் சதியில் இறங்கினேன். என் தந்தையான சேர மன்னரைக் கொன்று விடவும் நினைத்தேன். ஆனால் சதிகள் முறியடிக்கப் பட்டு நான் நாதியற்றுப் போனேன். அப்போது எங்கிருந்தோ பவானி என்ற ஒரு பெண் வந்தாள். என் சதிக்கு உதவுவதாகவும் அதற்கு மன்னனைக் கொல்வதே வழி என்றும் கூறினாள். அந்த முயற்சியும் கெட்டு விட்டது. ஆனால் அதனால் எனக்கு ஞானம் பிறந்தது அடிகளே. இளவரசனான நான் எப்படி இருந்திருக்க வேண்டும்? மன்னரின் வலதுகரமாக இருந்து அவருக்கு உதவி செய்திருக்க வேண்டாமா? ஒரு வேளை நான் அவரது மகனல்ல. பரணருக்கு பரிசாக அளிக்கப்பட்டவன் - அரச உரிமை இல்லாதவன் என்று இருந்தால் கூட நான் குலப்பெருமையைக் காப்பாற்றும் விதத்தில் நற்காரியங்களையாவது செய்திருக்க வேண்டாமா? எந்த அளவிற்கு நான் சிறுமைப் பட்டுப் போயிருந்தால் பவானியைப் போன்ற அறிமுகமில்லாத அயோக்கியர்கள் என்னிடம் சதி செய்ய வருவார்கள்? எத்தனை அவமானம் இது? பவானியோடு சேர்ந்து மன்னரைத் தீர்த்துக் கட்டியிருந்தால் நான் மன்னனாகி விட முடியுமா? சான்றோர்களும் சேர மக்களும் அதற்கு சம்மதம் தருவார்களா? தந்தாலும் அது எத்தனை நாள் நீடிக்கும்? இந்த ஞானோதயம் பவானியின் மூலம் எனக்குக் கிடைத்தது அடிகளே. அதன் அடையாளமாக என் இடுப்பில் ஒரு வடுவை அவள் உண்டாக்கி விட்டுப் போயிருக்கிறாள். இந்த ஞானோதயத்தில் நான் எடுத்த முடிவு தான் இது. எனக்குப் பதவியும் வேண்டாம் அதிகாரமும் வேண்டாம். நான் துறவியாக விரும்புகிறேன். மன்னருக்கு நிகரான தாங்களே எனக்கு இந்நன்னாளில் தீட்சை செய்து வையுங்கள்"-

குட்டுவனின் பேச்சு அடிகளை பரவசப் படுத்தியது. "செங்குட்டுவனின் மகனாக இப்போது தான் நீ தகுதியைப் பெற்றிருக்கிறாய் மகனே. உன் பேச்சும் முடிவும் மிகவும் சரி. அரசனாவதை விட துறவியாவது தான் நீ செய்து வைத்திருக்க வேண்டும். ஆனால் அதற்கு அவசியமில்லை" என்றார்.

"ஏன்?"

"சன்னியாசம் பெற நீ பிறக்கவில்லை மகனே. நீ நிச்சயம் நாடாள்வாய். துறவறம் மேற்கொள்வது உணர்ச்சிப் பூர்வமான விஷயமல்ல. உதாசீனமான காரியம். பற்றுகளை உதாசீனப் படுத்தும் போது துறவறத்தின் வாயில் தானாகவே திறக்கும். அவசரப் பட்டுத் துறவியானால் போலித் துறவியாக மாறி திரும்பட வேண்டியிருக்கும். வைத்திய மருத்துவர் இறைவனை ஆராயாதே. நம்பு என்பார்கள். அதே போல் நீ உன் தந்தையைப் பற்றி ஆராயாதே. நம்பு. நல்ல திடமான நம்பிக்கைகள் தோற்பதில்லை"

"அப்படியானால் இன்று முதல் சேரமன்னரின் உயிர் காக்கும் பணியை மேற் கொள்கிறேன். பவானியைப் போல் எத்தனை பேர் அவரைக் கொல்வதற்காகக் கூடியிருக்கிறார்களோ? அவர்களை களையெடுப்பேன் நான். மன்னரைக் கொல்ல எண்ணிய நான் மன்னரைக் காக்கச் சபதமேற்கிறேன். இது சரிதானா அடிகளே?"

"மிகவும் சரி. மிக்க மகிழ்ச்சி. நீடூழி வாழி"

"அடிகளே, என் தந்தையாரை தாங்கள் சந்திக்க நேர்ந்தால் நான் மனம் திருந்தி விட்டேன் என்பதை அவசியம் சொல்லுங்கள். இல்லையென்றால் என்னைப் பற்றிய கவலை அவருக்கு இருந்து கொண்டே இருக்கும்."



"அவசியம் சொல்கிறேன் குழந்தாய். போய் வா."

குட்டுவன் அகன்றபின் செங்குட்டுவனும் ராணியும் மறைவிலிருந்து வெளிப்பட்டு "நம்பவே முடியவில்லை அடிகளே. குட்டுவனா பேசியது?" என்று கேட்டார்கள்.

"யார் யாருக்கு எப்போது எப்படி ஞானோதயம் பிறக்கும் என்று யார் கூறமுடியும்?" என்றார் அடிகள்.

இப்படி குட்டுவனே நல்லவனாக மாறி மன்னனின் நெஞ்சில் இடம் பிடித்த நிலையில் மன்னனின் கண்போன்றவனான ஆபுத்திரனோ பூம்புகாரின் கடற்கரையில் மயங்கிக் கிடந்தான்.

அவனை நோக்கி வந்தது ஓர் ஆஜானுபாகுவான உருவம்.



## அத்தியாம் முப்பத்திரண்டு



# ஆபுத்திரனின் திட்டம்

ஆபுத்திரன் வில்லவனிடம் கூறிய விஷயங்களை பலகோணங்களில் நேரில் கண்டு அறிந்து கொண்டு ஒருவாரம் கழித்து ஆபுத்திரனை சந்தித்தான் வில்லவன். இலங்கையிலிருந்து கொண்டு வரப் பட்ட வீரர்கள், யவனர்களால் அடிமைகளாக்கப் பட்டதை இம்மியளவும் விரும்பவில்லை என்றும், அந்த விஷயத்தில் புகாரின் சோழமன்னர் எந்த விதமான நடவடிக்கைகளையும் எடுக்காதது குறித்து அவர்கள் அதிருப்தியாக இருக்கிறார்கள் என்றும், யவனர்களை எதிர்த்துப் புரட்சி செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறினான் வில்லவன். அவனிடம் மேலும் பல விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்ட ஆபுத்திரன் இலங்கை வீரர்கள் சிலரைச் சந்திக்க வேண்டும் என்றான்.



"ஐயா, இலங்கை வீரர்கள் அடிமைகளாக இருந்தாலும் அவர்கள் தங்களுக்குள் ஒரு நிர்வாகக் குழுவை அமைத்துக் கொண்டு தங்கள் நிலைகுறித்து அடிக்கடி பேசி வருகிறார்கள் அக்குழுவின் தலைவன் ஏலேல சிங்கன். ஏறக்குறைய 60 வயதிற்கு மேற்பட்டவன். ஆனாலும் தெளிவாகப் பேசக் கூடியவன். இதெல்லாம் நான் அறிந்து கொண்ட விஷயங்கள். நான் இன்னான் என்று சொல்லிக் கொண்டு யாரையும் சந்தித்துப் பேசவில்லை." என்றான் வில்லவன்.

"பாதகமில்லை வில்லவா. நீ அந்த ஏலேல சிங்கனைப் பார். என்னைப் பற்றிய உண்மையைச் சொல். நான் அவனைச் சந்திப்பதாக இருந்தால் அல்லங் காடியில் இருக்கும் கூடாரத்தில் இரவு சந்திக்க ஏற்பாடு செய். மற்றதைப் பிறகு பார்க்கலாம்." என்றான் ஆபுத்திரன்.

வில்லவனுக்கு ஏலேலசிங்கனின் இருப்பிடத்தை அறிந்து அவனை அணுக இரண்டு நாட்கள் ஆயிற்று. ஏலேல சிங்கன் ஆபுத்திரனை சந்திக்க அவ்வளவாக விரும்பவில்லை. தனியொரு மனிதனால் யவனர் படைகளை எதுவும் செய்ய முடியாது என்ற நினைப்பில் ஆபுத்திரனால் எதுவும் சாதிக்க முடியாது என்றான் ஏலேல சிங்கன். ஆபுத்திரன் என்ன காரணமாக சோழநாட்டிற்கு வந்திருக்கிறான் என்பதைக் கூறிய வில்லவன் "அவருக்கு உங்களைச் சந்திக்க வேண்டிய அவசியம் இல்லை. அந்த பொறுப்பு கூட அவருக்கு இல்லை. இங்கிருக்கும் நிலைமையை சிங்கள மன்னருக்குச் சொல்லிவிட்டு சேரநாட்டிற்குத் திரும்பினால் அவரது பணி முடிந்து விடுகிறது. ஆனால் உங்களை யவனர்களிடமிருந்து விடுவிக்க முயல்கிறார். அது சாதாரணமான எளிய வேலையல்ல. மிகவும் ஆபத்தான பணி. அதை அவர் ஏன்

அறைக்குள் நுழைந்தார்கள். அனைவரும் தரையிலேயே அமர்ந்து கொண்டார்கள்.

சிறிது நேரம் வரை பேசாமலிருந்த ஆபுத்திரன் பேசமுற்பட்டு "சிங்கள வீரர்களுக்கெல்லாம் ஏலேலசிங்கன் தான் தலைவனா?" என்று கேட்டான்.

"ஆமாம்." என்றார்கள் சிங்கள வீரர்கள்.

"சிங்கன் சொல்கிறபடி எல்லோரும் கேட்பீர்களா?"

"கேட்போம்." என்றார்கள் சிங்கள வீரர்கள்.

பிறகு ஏலேலசிங்கனை பார்த்த ஆபுத்திரன் "நீங்களெல்லாம் ஏதோ யவனர்களுக்கு எதிராகப் புரட்சி செய்யப் போவதாகக் கேள்விப் பட்டேன். எப்படி செய்யப் போகிறீர்கள்?" என்று கேட்டான்.

இதற்கு பதில் சொல்ல யாருமே முற்படவில்லை.

"அரசனாக இருக்கும் சோழனே எதுவும் செய்யமுடியாமல் இருக்கும் போது அடிமைகளாக இருக்கும் உங்களால் என்ன செய்ய முடியும்? யவனர்களை அத்தனை எளிதாக எடை போட்டு விட்டீர்களா? நீங்கள் புரட்சி செய்தால் அவன் உங்களை அடக்க மாட்டான். அழித்தே விடுவான். உங்களையெல்லாம் உயிரோடு வைத்திருப்பதால் அவனுக்கு எந்த விதமான லாபமும் இல்லை. ஆகவே உணர்ச்சி வசப்படாமல் இருந்தால் தான் உங்களுக்கு நல்லது. வந்திருப்பவன் சாதாரணமானவனல்ல. கிரேக்க நாட்டில் படைத் தலைவன் அந்தஸ்தில் இருந்தவன் இந்த டெமிகோஸ். கிரேக்க நாட்டிலேயே பல்வேறு தந்திரங்களைக் காட்டி படைநடத்தி வெற்றி பெற்றவன். அவன் கிரேக்க



நாட்டிலிருந்து மரக்கலப் படையோடு புகாருக்கு வருகிறான் என்றால் இந்த நகரைச் சுற்றிப் பார்க்கவா இருக்கும். ஏதோ முன் யோசனையோடும் நடந்த திட்டத்தோடும் தான் வந்திருக்க வேண்டும். புகார் கோட்டையைத் தாக்கி அதைப் பிடிப்பது கூட அவனது திட்டமாக இருக்கலாம். ஆனால் புகார் மன்னன் வகுத்த உடன்படிக்கையை வேறொரு யவனனாக இருந்தால் நிராகரித்திருப்பான். ஆனால் டெமிகோஸ் அறிவாளியாக இருந்ததால அதை ஏற்றான். அதனால் அவனுக்கு இரண்டு லாபங்கள். ஒன்று பூம்புகாரின் கடல் வாயில் அவன் கட்டுப்பாட்டிற்கு வருகிறது. அவனது அனுமதியில்லாமல் துறைமுகத்தில் யாரும் நுழையவோ வெளியேறவோ முடியாது. மருவூர் பாக்கத்திற்கு வந்து சேரும் பொருட்களுக்குச் சுங்கம் விதிக்கும் அதிகாரமும் அவனுக்கு வருகிறது. அதனால நல்ல வருவாய் கிடைக்கும். இரண்டாவது லாபம் - உடன்படிக்கையின் படி மருவூர் பாக்கத்தை ஏற்றுக் கொண்டு தனது படைகளை நிலை படுத்திக் கொண்டால் பூம்புகார் கோட்டையை நன்றாக வளைத்துக் கொண்டு தாக்கலாம. அதற்கு முன்னேற்பாடுகளை செய்யவும் ஆரம்பித்து விட்டான. மருவூர் பாக்கத்தின் இரண்டு பக்கத்திலும் உயர்ந்த தூண்களை அமைத்து அதன் மீது உலோகத் தூண்களை நிறுவத் தொடங்கியிருக்கிறான். அது முற்றுப் பெற்றால அவன் பலம் திடப்பட்டு விடும். கோட்டை மீதான தாக்குதலும துவங்கும்" என்று சொல்லி நிறுத்தினான் ஆபுத்திரன்.

"அப்படிச் செய்வது உடன்படிக்கையை மீறுவதாகும்" என்றான் ஒரு சிங்கள வீரன்.

"உடன்படிக்கையை டெமிகோஸ ஏற்றது சோழனைக் கண்டு பயந்து அல்ல. தனது திட்டத்திற்கு ஏற்ற சாதகம்

இதற்கு உங்கள் முழு ஒத்துழைப்பும் தேவை." என்று சொல்லி திட்டத்தைச் சொன்னான் ஆபுத்திரன்.

அதைக் கேட்டதும் சில்வான் உட்பட அனைவரும் திகைத்துப் போய் பேச்சு மூச்சற்றவர்களாய் ஆனார்கள்.

"இத்திட்டம் நடக்குமா?" என்று வெலவெலத்த குரலில் கேட்டான் ஏலேலசிங்கன்.

"ஏன் நடக்காது?" கேட்டான் ஆபுத்திரன்.

"திட்டமானது கரணம் தப்பினால் மரணம் என்ற நிலையாக இருக்கிறது." என்றான் ஏலேலசிங்கன்.

"ஆபத்துகள் இல்லாத திட்டம் இல்லை. இத்திட்டத்தில் நீங்கள் யாரும் டெமிகோஸை சந்திக்கப் போவதில்லை. உங்களுக்கு ஆபத்து குறைவு."

"டெமிகோஸ் பயங்கரமானவன். நமது திட்டம் அவனுக்குத் தெரிந்து விட்டால் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு முறையில் சித்திரவதை செய்து கொல்வான்."

"சிங்கா. நீங்கள் எல்லோரும் அடிமைகளாக இருக்கிறீர்களே தவிர உண்மையில் வீரர்கள். அதை மறந்து விட வேண்டாம். இதற்கு மேலும் உங்களுக்கு நம்பிக்கையோ தைரியமோ வரவில்லை என்றால் நீங்கள் விலகிக் கொள்ளலாம்."

இச்சந்தர்ப்பத்தை விட்டால் வேறு வழி இல்லை என்பது நிதர்சனமாகத் தெரிந்ததால் சிங்கன் வீரர்கள் யாரும் விலகத் தயாராக இல்லை. அவனது திட்டத்திற்கு ஒப்புக் கொண்டு அனைவரும் கலைந்தார்கள்.





மருவூர் பாக்கத்தின் தெற்குப் புறத்தில் நீண்ட காலமாக ஒற்றைப் பாறையாக இருந்து வந்த பகுதியில் சுற்றிலும் மண்மேடிட்டு அப்பகுதியை உயரமான தளத்தைப் போல் ஆக்கியிருந்ததால் அப்பகுதியில் தனது இருப்பிடத்தை அமைக்கும்படி யவன டெமிகோஸ் கூறியிருந்தபடியால் கட்டிடக் கலையிலும் பொறியியல் துறையிலும் வல்லவர்களான யவனர்கள் மரப்பலகைகளையும் உலோகத் தூண்டுகளையும் கொண்டு எடுப்பான சிறியதோர் கட்டிடத்தை எழுப்பி அதில் சகல வசதிகளையும் செய்தார்கள். அந்த ஏற்பாட்டினால் மிகவும் மகிழ்ச்சியடைந்து யவன நண்பர்களைத் தட்டிக் கொடுத்தான் டெமிகோஸ். தினமும் மருவூர் பாக்கத்திலும் அதையடுத்த தோட்டப் பகுதியிலும் கடற்கரையிலும், கடல்புறத்தில் நங்கூரமிட்டு நிற்கும் மரக்கலங்களிலும் சென்று தனது கண்காணிப்பை செய்து விட்டு தன் இருப்பிடத்திற்குச் சென்று உணவருந்துவான். நேரம் கிடைக்கும் போதெல்லாம் அந்தப் பாறையில் நின்று கொண்டு கரையையும் கோட்டையையும் பார்ப்பான். சோழநாட்டுக் கடற்கரை முழுதுமே காடுகளாலும் சதுப்பு நிலங்களாகவுமே இருக்க, புகாரில் மட்டும் இப்படி தனியானதொரு பாறை உண்டாகியிருந்த விந்தையைக் கண்டு வியந்த அவன் தனக்காகவே அந்தப் பாறை உண்டாகியிருக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்ளவும் செய்தான். பொன்மயமான மாலை நேரத்தில் அப்பாறையின் மீது நின்று கொண்டு பார்வையைச் செலுத்திய போது அவன் கண்களுக்கு விரிந்த காட்சி அபாரமாக இருந்தது. ஒருபுறம் புகாரின் கோட்டை பிரம்மாண்டமாக நின்றிருக்க அதற்கு நேர் எதிர் புறத்திலோ அலைபுரளும் கடலில் மரக்கலங்கள் பல்வேறு

அலைகளில் அசைந்து விதானது டெமிகோஸை ரசிக்கவைத்தது. கடலில் நங்கூரமிட்டு நின்ற மரக்கலங்களுக்கு முன்பாக துறைமுகத்தின் முகத்துவாரத்தின் இருபக்கங்களிலும் நான்கு நான்கு போர்க்கலங்கள் வரிசையாக அணிவகுத்திருந்தன. அவைகளுக்கிடையே சாவகத்திலிருந்தும் படுவிஜயத்திலிருந்தும், வங்க தேசத்திலிருந்தும், சீனநாட்டிலிருந்தும் வந்து கொண்டிருந்த வணிகக் கப்பல்கள் சிரமமின்றி கரைகளில் ஒதுங்கி நங்கூரமிடவும், அவைகள் யவனர்களின் தீவிர கண்காணிப்பிற்குப் பிறகு சரக்குகள் இறக்கப் படவும், சரக்குகள் தரம் பிரிக்கப் பட்டுச் சுங்கச் சாவடிகளுக்கு அனுப்பப்படும். அங்கே கட்டணம் வசூலிக்கப் பட்டு முத்திரையிடப்பட்டும், அதன் பின் சரக்குகளை ஏற்றி புகார் நகருக்குச் செல்ல பாரவண்டிகள் வரிசையாக நின்றதும் அவனுக்குப் பரம திருப்தியை அளித்தன. ஏறக்குறைய கடற்பகுதி தனது கட்டுப் பாட்டில் முழுவதுமாய் வந்து விட்டதை எண்ணி பெருமூச்சு விட்ட அவன் மருவூர் பாக்கத்தை நோக்கினான். இரவு நேரக் கடைகளான அல்லங்காடிகள் சிறிது சிறிதாகத் தோன்றுவதையும் அதற்கு அடையாளமாக காடா விளக்குகள் பல இடங்களில் பளிச்சிடுவதையும், ஒரு சில இடங்களில் பலவிதமான வாத்தியக் கருவிகள் ஒலிக்கத் தொடங்கியதையும் கண்ட அவன் "இன்னும் அரை நாழிகைப் பொழுதிற்குள் கடற்கரை ஆரவாரப் பட்டுப் போகும். பல்வேறு நாட்டு வணிகர்கள், பல்வேறு பட்ட பண்டங்கள், அவற்றை வாங்கக் குவியும் சோழ நாட்டு மக்கள் கூட்டம், ஆட்டம் பாட்டம் என்று குதுகலம் நிறைந்த காட்சிகள் என அந்த இடமே சொர்க்க புரியாகி விடும். ஆகா! எத்தனை அழகான நாடு இது? எத்தனைச் சிறப்பான கடற்கரை இது? இங்கே உண்டாகும் குதூகலங்களை ரசிப்பதே தனி குதூகலம்



அல்லவா?" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் டெமிகோஸ்.

அப்போது ஒரு குரல் குறுக்கிட்டது.

"தலைவர் அப்படி எதை இத்தனை மகிழ்ச்சியோடு பார்க்கிறார்?" என்று கேட்டபடி வந்தான் ஒரு யவனன்.

"சொர்க்கத்தைப் பார்க்கிறேன் டாரியஸ். சொர்க்கத்தைப் பார்க்கிறேன்! தமிழகத்தின் சிறப்பான சொர்க்கத்தைப் பார்க்கிறேன்!" என்று சொன்ன டெமிகோஸ் "டாரியஸ், ஏறக்குறைய ஒரு வருடத்திற்கு முன்னால் கிரேக்க நாட்டு கடற்கரையிலே நாம் இருவரும் நின்று பேசிக் கொண்டிருந்தோம். அப்போது நான் உன்னை ஒரு கேள்வி கேட்டேன். அது உனக்கு நினைவிருக்கிறதா?" என்றான்.

"அதை எப்படி மறக்க முடியும்? தமிழகத்தின் சிறந்த கடற்கரை பட்டினம் எது என்று கேட்டீர்கள். அதற்கு கமரா என்று சொன்னேன் நான். அதைத் தான் காவிரி பூம்பட்டினம் என்றும் பூம்புகார் என்றும் தமிழர்கள் அழைக்கிறார்கள்." என்றான் டாரியஸ்.

"அந்தக் கமரா என் வசமாகும் என்று நாம் அப்போது நினைத்தோமா?"

"நான் நினைக்க வில்லை. ஒரு வேளை நீங்கள் நினைத்திருக்கலாம்."

"ஆம். நான் நினைத்தேன். இல்லை, ஆசைப்பட்டேன். இக்கடற்கரையை வெற்றி கொள்ள ஆசைப்பட்டேன். இன்று வசப்படுத்தி விட்டேன் - அதுவும் ஒரு துளி ரத்தமும் சிந்தாமல்."

"நீங்கள் அதிர்ஷ்டக்காரர் என்று நாங்களெல்லாம் நினைப்பதுண்டு."

"எனக்கு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை இல்லை. ஆனால் இந்த நாட்டுக்குச் சொந்தக்காரனானதும் அதிர்ஷ்டத்தை நம்பத் தொடங்கினேன்."

இப்படியே அன்று நெடுநேரம் வரை பேசிக் கொண்டிருந்தான் டெமிதோஸ்.

"தலைவரே, உங்களை ஒரு விஷயம் கேட்க வேண்டும் என்றிருந்தேன்." என்றான் டாரியஸ்.

"கேள்."

"நீங்கள் இங்கு வந்து ஏறக்குறைய மூன்று மாதங்களாகி விட்டன. பட்டினப்பாக்கம் பக்கம் ஒருமுறை கூட விஜயம் செய்யவில்லையே?"

"என்ன இருக்கிறது அங்கு?"

"தெரியாதா தங்களுக்கு? தங்களைப் போன்ற பிரமுகர்களை மகிழ்விக்கும் பெருந்தனக் கணிகையர் இல்லங்கள் இருக்கின்றன. இந்த மருவூர் பாக்கத்திலோ உங்களைப் போன்றவர்களுக்கு ஒவ்வாத சிறுதனக் கணிகையர் இல்லங்கள் தானே இருக்கின்றன. * பெண்ணின்றி கண்ணில்லை என்று பெண் வாடையை தினமும் விரும்பும் நீங்களா மூன்று மாதங்களாக பெண்களை ஏறெடுத்தும் பார்க்காமல் இருக்கிறீர்கள்?"

* பக்கம் 164 சங்க கால வரலாற்று ஆய்வுகள் by மயிலை. சீனி. வேங்கடசாமி.



இந்நிலையில் நான்கைந்து யவன வீரர்கள் ஒருசேர அங்கு வந்து "தளபதி. பெண்ணொருத்தி இங்கே வந்து உங்களைச் சந்திக்க வேண்டும் என்று அடம் பிடிக்கிறாள். எங்களால் தாக்குப் பிடிக்க முடியவில்லை" என்றார்கள்.

"பெண் எப்படி இருக்கிறாள்?" - என்று கேட்டான் டாரியஸ்.

"கிரேக்க நாட்டு வீனஸ் போல இருக்கிறாள்"

"வரச் சொல்லுங்கள்." என்றான் டெமிதோஸ்.

"அதிர்ஷ்டமே உங்களைத் தேடி வருகிறது தலைவரே." என்றான் டாரியஸ்.

சிரித்தான் யவனத் தளபதி டெமிதோஸ்.





## அத்தியாயம் முப்பத்து மூன்று



# *டெமிகோஸின் காமம்*

அனுமதி பெற்று பாறைப் பகுதிக்கு வந்த பெண் டெமிகோஸின் தோற்றத்தைக் கண்டு அசந்து போனாள். ஏதோ ஒரு நோஞ்சான் உடம்பு கொண்ட தளபதியை எதிர்பார்த்து வந்த அவளுக்கு அவனது ஆஜானுபாகுவான தோற்றமும் செக்கச் செவேலென்றிருந்த தேகமும், பொன்னிற மயிர்கள் காகத்தின் இறக்கை போல் தொங்க அதன் மீது யவன நாட்டு தளபதிக்குரிய தலைக்கவசத்தை அணிந்திருந்த விதமும் கூரிய விழிகளும், எடுப்பான நாசியும், ராணுவ உடையும் அவன் நின்றிருந்த தோற்றமும் அவனது கம்பீரத்தை புலப்படுத்தின. அதையெல்லாம் கண்ட போது உள்ளுக்குள் ஒருவித அச்சம் எழுந்து மறைந்தது அவளுக்கு.

அதேசமயம் அந்தப் பெண்ணை டெமிகோஸும் ஆராயவே செய்தான். தனது வீரர்கள் கூறியது போல் தீரக்



தெய்வமான வீனஸைப் போல் அவள் இல்லையென்றாலும் அவளது அழகு உதாசீனப் படுத்தக் கூடியதாக இல்லை. சுருக்கமாகச் சொல்வதென்றால் பளிச்சென்றிருந்தாள் அவள். குறைவான ஆடைகள் குறைவான அணிகலன்கள் என்று குறைவான ஒப்பனையிலேயே அவள் இணையற்ற அழகை வெளிப்படுத்தினாள். அழகிற்கு அப்பாற்பட்டு பிரத்தியேகமான தொரு கவர்ச்சி பார்ப்போரை கிறங்க வைக்கக் கூடியதாக இருந்தது. பெண்களிடம் எளிதில் தன்னை இழக்கக் கூடியவனும் பெரும் ரசிகனுமான டெமிகோஸ அவளைப் பார்த்து அசந்து போனான்.

இருவருமே ஒருவரைப் பார்த்து ஒருவர் அசந்து போனதால் மௌனமே சில நிமிடங்களை விழுங்கின.

தனது உணர்ச்சிகளை தற்காலிகமாக கட்டுப் படுத்திக் கொண்ட டெமிகோஸ் அப்பெண்ணைப் பார்த்து "வா உள்ளே." என்று கூறிவிட்டு பாறையை விட்டு இருப்பிடத்திற்குச் சென்றான். உள்ளே போனதும் தலைக்கவசத்தையும் உடல் கவசங்களையும் கழற்றி வைத்து விட்டு தலைக்குழலை கோதி விட்ட படி அங்கிருந்த மஞ்சத்தில் அமர்ந்தான். அவனப்படி அமர்ந்த கோலம் புதிய கிரேக்க மனிதனொருவன் ஓய்வெடுக்க வந்து உட்கார்ந்தது போல இருந்தது அப்பெண்ணுக்கு.

"என்ன பெண்ணே, என்னைப் பார்க்க வேண்டும் என்று அடம் பிடித்தாயாமே எதற்கு?" என்று கேட்டான்.

அவனது திறந்து கிடந்த பொன்னிற மார்பையும் கடைந்தெடுத்த மாதிரி திடமாய் புலப்பட்ட நீண்ட கைகளையும் கால்களையும் கண்டு இன்ப மிரட்சியடைந்திருந்த அப்பெண்

# டெமிகோஸ்





அவனது கேள்வியை சரியாக காதில் வாங்காமல் "ஆமாம்... இல்லை... மறந்தேன்" என்று ஏதோ உளறவே "என்ன உளறுகிறாய்" என்று கரகரத்த குரலில் கேட்டான் டெமிகோஸ்.

இன்ப உணர்வுகளைத் தற்காலிகமாக அடக்கிக் கொண்ட அவள் "நான் பட்டினப் பாக்கத்தில் இருக்கிறேன்" என்றாள்

"அதற்கென்ன?" இயல்பாகவே கேட்டான் டெமிகோஸ்.

"நான் நன்றாக ஆடுவேன். பலரும் வந்து என் நடனத்தைக் கண்டு களிப்பார்கள். சோழ மன்னர் கூட வந்து பாராட்டியிருக்கிறார்" -

"அதற்கும் நீ இங்கு வந்ததற்கும் என்ன சம்பந்தம்"

"யவனர் தளபதியான நீங்கள் மருவூர் பாக்கத்தை கைப்பற்றி விட்டதாகக் கேள்விப் பட்டேன்."

"அதனால்?"

"கைப்பற்றி மூன்று மாதங்களாகியும் நீங்கள் என் இல்லத்திற்கு வரவில்லை. நடனத்தை ரசிக்க வில்லை"

"உன் நடனத்தைக் கண்டு ரசிப்பதற்காக நான் கிரேக்க நாட்டிலிருந்து வரவில்லை."

"வேறு எதை ரசிப்பீர்கள்?"

இதற்கு உடனடியாக பதில் கூற சற்று தடுமாறிய டெமிகோஸ் "எதை ரசித்தால் உனக்கென்ன?" என்றான் முரட்டுத் தனமாக.

"எதை ரசிப்பீர்கள் என்று சொன்னால் அதை நான் நிறைவேற்றுவேன்"

"நான் எதையும் ரசிக்கும் நிலையில் இல்லை. நீ போகலாம்"

"எங்கே போகச் சொல்கிறீர்கள்?"

"வந்த இடத்திற்குப் போ. இல்லையென்றால் உன்னை ரசிப்பவர்களிடம் போ"

"தளபதி, என் ஆசை என்ன தெரியுமா?"

"என்ன?"

"உங்களையும் உங்கள் கம்பீரத்தையும் பார்த்த பின் நான் மெய்மறந்து விட்டேன். இனி நீங்கள் மட்டுமே என்னை ரசிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்."

"எனக்கு நாட்டியமெல்லாம் பிடிக்காது."

"உங்களுக்குப் பிடிக்காதது பற்றி ஏன் கவலைப் படவேண்டும்? உங்களுக்குப் பிடித்ததைச் சொல்லுங்களேன். பெண்களிடம் நடிப்பதற்கு நடனம் மட்டும் தானா இருக்கிறது?"

"பெண்ணே, நீ என்னிடம் விளையாடுவது ஆபத்து."

"ஏன் அப்படி பயமுறுத்துகிறீர்கள்?"

"உண்மையைத் தான் சொல்கிறேன். கிரேக்க நாட்டில் எனக்கு என்ன பெயர் தெரியுமா? பெண் அரக்கன்."

"பெண் அரக்கனா? பார்த்தால் தெரியவில்லையே"

"பார்த்துத் தெரிந்து கொள்ளக் கூடிய விஷயமல்ல பெண்ணே இது. கிரேக்க நாட்டில் என் கண்ணில் படும்



அழகிய பெண்களைத் தொடாமல் விட்டதில்லை. நான் தொட்டதில் பெண்கள் பலர் உயிரை விட்டிருக்கிறார்கள். எனது வீரியம் ஆபத்தானது. மூன்று மாதங்களாக மறந்து விட்டிருந்த அந்த அரக்கனை நினைவூட்டாதே. என்னைச் சீண்டுவது உன் உயிரை விடுவதற்குச் சமம்."

"இது போல் பயமுறுத்திய ஆண்களில் பலர் பெண்களின் காலடியே கதி என்று உருண்டு கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன்."

"உனக்கு நேரம் சரியில்லை என்று நினைக்கிறேன் போய்விடு." என்று கூறி விட்டு வெளியே சென்றான் டெமிகோஸ்.

சிறிது நேரம் கழித்து டெமிகோஸ் திரும்பிய போது அப்பெண் அவனது மஞ்சத்திலேயே படுத்திருந்தாள்.

அவளது அதிகப் பிரசங்கித் தனத்தைக் கண்டு டெமிகோஸ் வெகுண்டாலும் அவளது கவர்ச்சி பிரதேசங்கள் ஆங்காங்கே தெரிந்து அவனது கண்களைக் கூச வைத்ததால் சிறிது சிறிதாக அவனது பிடிவாதங்கள் தளரத் தொடங்கின. மூன்று மாதங்களுக்கு மேலாக விடுபட்டிருந்த ஸ்பரிசங்களும் இன்ப ஊற்றுக்களும் அவனது உடலில் உண்டாகத் தொடங்கின. அவளோ அவனைப் பதம் பார்ப்பதையே குறியாகக் கொண்டிருந்ததால் மஞ்சத்தில் வேண்டுமென்றே புரண்டு உடலில் இருந்த குறைவான ஆடைகளை விலகச் செய்தாள். எதையோ கண்டு விட்ட டெமிகோஸின் கண்கள் வெறி கொண்டன. இவளுக்குப் பாடம் கற்பிக்காமல் விடக் கூடாது என்று கருதியவனாய் அவளை நோக்கிக் குனிந்தான். அந்தச் சந்தர்ப்பத்திற்காகவே காத்திருந்த அப்பெண்

மாங்காய்போலிருந்த தனது கரங்களால் அவளது கழுத்தை வளைத்துத் தனக்காக இழுத்தான். அவளது மென்மையான ஸ்பரிசம் பட்டவுடன் டெமிஸ்கோசின் உடல் கெட்டிப் பட்டது தூங்கிக் கிடந்த காம இந்திரியங்கள் துடிப்புற்று எழுந்தன அன்று கள்ளிரவு நேரம் நாலைந்தாயும் கூட அப்பெண்ணை அவன் விடவில்லை. வயிற்றுக்கு வேண்டிய தீனி சிற்றின்ப கலப்பிலேயே கிடைத்து விட்டதால் உணவுத் தட்டுகளை உதாசீனப் படுத்தி விட்டு உடல் கட்டுக்களை ஒடித்துக் கொள்ளக் கூடிய அளவு வரை மிருக இச்சைகளை அனுபவித்து ஒருவாறு ஓய்ந்தும் மஞ்சத்தை விட்டு எழுந்ததும்; மஞ்சத்தில் கிடந்த மங்கையைப் பார்த்தான். அலங்கோலமாயும் கசக்கி பிழியப்பட்ட சக்கையாகவும் இருந்த அம் மங்கையும் ஒடிந்து போன சிலை போல நின்றிருந்த டெமிஸ்கோஸைக் கண்டாள். இருவருமே தங்கள் உடல்களில் உண்டாகியிருந்த காயக் காயங்களைக் கண்டு சிரித்துக் கொண்டார்கள். இருவருமே வேறு ஆடைகளை அணிந்து கொண்ட பின் அவளிடம் ஒரு கோப்பை மதுவைக் கொடுத்து விழுங்கச் சொன்ன டெமிஸ்கோஸ், அவள் அதை அருந்தி மஞ்சத்தில் சாய்ந்ததும் நான்கைந்து கோப்பை மதுவைக் குடித்து விட்டுப் பாறையில் போய் படுத்தான். இருவருமே உறங்கிப் போனார்கள்.

அப்பெண்ணிடம அவன் துவங்கிய காமம் அன்றோடு முடிந்து விடவில்லை. தினமும் வளர்ந்தது. மற்ற விஷயங்களை விட அந்த விஷயம் அவர்களுக்கு அதிக மகிழ்ச்சியை அளித்தது அக்காலம் முதல் இக்காலம் வரை இருந்து வரும் விஷயம் காமம தான். எல்லா இடங்களிலும், எல்லாவகை மக்களிடமும் ஒன்றிப் போன விஷயம் இது. அக்காலத்தில், தவம் செய்து மகா சக்திகளைப் படைத்த முனிவர்களைக் கூட காமம் அசைத்திருக்கிறது. முனிவர் மனைவியின் அழகில் மயங்கி



இந்திரன் முனிவரின் வடிவம் கொண்டு அவளோடு இன்பம் துய்த்ததாக புராணங்கள் கூறுகின்றன. நமது இதிகாசங்களில் கூட பிறன்மனை விழையும் காமம் சொல்லப் பட்டிருக்கிறது. பிறர் மனைவியை பலர் முன்னிலையில் ஆடையை அவிழ்க்கும் வக்கிரமும் சொல்லப் பட்டுள்ளது. இப்படி காமம் என்னும் சிற்றின்பமானது நஞ்சுக்கு இணையானது என்று காலம் காலமாகக் கூறப்பட்டாலும் மேலே குறிப்பிட்ட புராண கால காம வக்கிரங்களைச் சுட்டிக் காட்டி காமாந்தர்கள் தங்கள் சிற்றின்ப லீலைகளுக்கு நியாயம் கற்பித்துக் கொண்டு மகிழ்ச்சியடைகிறார்கள். விஞ்ஞான முன்னேற்றம் சிற்றின்பத்தின் ஆபத்துகளைப் புள்ளி விவரங்களோடு சொன்னாலும் கூட சொல்பவர்கள் உட்பட கேட்பவர்கள் பலரும் அதைப் பேரின்பமாகக் கருதி மகிழ்ந்து பிற்காலத்தில் பல்வேறு அவஸ்தைகளுக்கு ஆளாகிறார்கள். அதுவும டெமிஸ்கோஸ் போன்றவர்களும் அவனை வளைத்த பெண்களைப் போன்றவர்களும் கணிசமாக இருந்த நிலையிலும் அவர்கள் சரசமாடுவதில் எந்தத் தடையும் இல்லாத நிலையிலும் காலநேர வித்தியாசமின்றி இக்காமக் கடலில் நீந்தித் திளைத்தார்கள்.

டெமிஸ்கோஸ் அவளைப் பட்டினப் பாக்கத்திற்கு அனுப்பவில்லை. தன்னுடனேயே வைத்துக் கொண்டு நினைத்த போதெல்லாம அவளைச் சுவைத்து வந்தான். அவனது நண்பனான டாரியஸை அழைத்துக் கொண்டு ஓரிருமுறை பட்டினப் பாக்கத்திற்கும் சென்று அங்கிருந்த பெருந்தன கணிகையரையும் ஒரு கை பார்த்தான். பொற்காசுகளை அள்ளி வீசினான். மருவூர் பாக்கத்திலும் சென்று அங்கிருந்த சிறுந்தன கணிகையர் குலப் பெண்களைப்

பார்த்து "ஆஹா, பட்டினப் பாக்கத்து அழகிகளை விட நீங்கள் பேரழகிகளாக இருக்கிறீர்கள். உங்களைப் போய் யாரிங்கே வைத்தது?" என்று கேட்டான் டெமிகோஸ்.

"நாங்கள் கிராமத்தவர்கள். அவர்கள் நகரத்தவர்கள். அதனால் தான் இந்த வித்தியாசம்"-

"அப்படியா விஷயம். கொஞ்ச காலம் பொருங்கள். நகரப் பெண்களை இங்கேயும் உங்களையெல்லாம் அங்கேயும் மாற்றுகிறேன்." என்று சொல்லி விட்டு அங்கே. சில இல்லங்களில் களியாட்டம் நடத்தி விட்டுத் தன் இருப்பிடத்திற்குத் திரும்பினான்.

அவன் அவ்வாறு கண்ட இடங்களுக்குச் சென்று களியாட்டம் நடத்துவது பாறை வீட்டி லிருந்த பெண்ணிற்குப் பிடிக்க வில்லை. எனவே அவனை வெளியிலேயே போகாத அளவிற்கு விதவிதமான போகன வலைவிரித்து காமகருபனைகளில் புரள விட்டாள். அவனோ இந்த விஷயத்தில் அதிகமாக அலட்டிக் கொள்ளவில்லை. தன் பசிக்குத் தீனி கிடைத்தால போதும் என்றிருந்தான்.

இதறகிடையில் அவனது வீரர்கள் சிலர் கொஞ்சநாட்களாக கடற்கரையிலும் மருவூர் பாக்கத்திலும் பூரண கவசம் அணிந்த ஒரு மனிதன் உலவுவதாகவும் அவனை யார் என்று கண்டு பிடிக்க முடிய வில்லை என்றும் கூறினார்கள்.

"பிடித்து விசாரிப்பது தானே?"- கேட்டான் டெமிகோஸ்.

"அவன் சரியான மாயக்காரனாக இருக்கிறான் பிடிப்பதற்குள் எங்கோ ஓடி மறைந்து விடுகிறான்"



"அவன் எங்கிருந்து வருகிறான் எங்கே செல்கிறான் என்பதையாவது கண்டு பிடித்தீர்களா?"

"எங்கிருந்து வருகிறான் என்று தெரியவில்லை. யாரையும் சந்திப்பதாகவும் தெரியவில்லை. யாரிடமும் பேசுவதும் கிடையாது."

"யாரையும் சந்திக்காமல் யாரோடும் பேசாமல் ஒருவன் உலவுகிறான் என்றால் அவன் முட்டாளாகத் தான் இருக்க வேண்டும். கண்டு பிடியுங்கள்."

இதற்கிடையில் ஒரு நாள் டெமிகோஸிடம் வந்த வீரர்கள் "தளபதி, அந்தக் கவச மனிதன் கடற்கரையில் கிடக்கிறான்" என்றார்கள்.

"உடனே இங்கே கொண்டு வர வேண்டியது தானே? போய்த் தூக்கி வாருங்கள்" என்றான் கிரேக்கத் தளபதி.

ஆனால் வீரர்கள் போன போது அங்கே யாரையும் காணவில்லை.

ஏமாற்றத்துடன் வந்த வீரர்களைக் கண்டபடி திட்டிய டெமிகோஸ் "அவனைத் தேடுங்கள். எங்கிருந்தாலும் பிடித்து வாருங்கள்." என்றான்.

இரண்டு நாட்கள் கழித்து சோமகுண்டம் என்னும் சூரியக் குளத்திற்கு அருகே கிடந்த கவச மனிதனைக் கண்ட யவன வீரர்கள், பத்து பேராகப் பிடித்து பாறைக்குக் கொண்டு வந்தார்கள்.

அந்த கவசமனிதனைக் கண்ணுற்ற டெமிகோஸ் "ஏன் ஒரே சேறாக இருக்கிறது? சேறில் விழுந்து விட்டானா?" என்று கேட்டான்.

"அப்படித் தான் இருக்க வேண்டும் சோம குண்டத்தில் குளிக்க வரும் பெண்கள் இவன் ஒரு நாளாக சேற்றில் கிடப்பதாகச் சொன்னார்கள். ஆகவே இவன் செத்திருக்க வேண்டும்."

"அதைப் பற்றிக் கவலையில்லை. முகக்கவசத்தை கழற்றுங்கள்."

"நன்றாக நசுங்கிக் கிடந்த முகக் கவசத்தை சிரமப் பட்டு கழற்றிய போது அங்கிருந்தவர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சியது. கசவத்திற்குள் மனிதத்தலை காணப்படவில்லை. இதர கவசத்தையும் அகற்றினார்கள் வீரர்கள். உள்ளே சடலம் எதுவும் காணப படவில்லை. வெறும் கல்லும் மண்ணுமே இருந்தன.

இதைக் கண்டு கோபமடைந்த டெமிகோஸ் "இதற்கென்ன அர்த்தம்?" என்று கேட்டான்.

யாரும் எதுவும் சொல்லாதிருக்கவே "இத்தனை நாட்களாக கவசமனிதன் கல்லும் மண்ணும் ஆகத் தான் உலவி வந்தானா?" என்று கேட்டான் டெமிகோஸ்.

"அதெப்படி முடியும் தளபதி? கவசமனிதன் உலவியதை நாங்கள் கண்டது உண்மை. அவனுக்கும் இதற்கும் சம்மந்தமில்லாமல் இருக்கலாம்." என்றான் ஒரு வீரன்.

"அப்படியானால் கவசத்திற்குள் கல்லையும் மண்ணையும் திணித்து சேற்றில் போட்டது யார்?"

"கவசமனிதனே கூட இப்படிச் செய்திருக்கலாம்."

"எதற்கு அப்படிச் செய்ய வேண்டும்?"



"தெரியவில்லை."

கவச மனிதன் விஷயமாகப் பெரிதும் குழம்பிப் போயிருந்தான் யவனத் தளபதி. கவச மனிதன் முட்டாளாக இருக்க முடியாது என்றும் பெரும் ஒற்றனாக இருக்க வேண்டும் என்றும் கருதினான். அவன் ஏன் தன்னைச் சந்திக்கவில்லை என்பது மட்டும் புதிராகவே இருந்தது அவனுக்கு. அந்த மர்ம மனிதனை எப்படியாவது பிடித்து வரவேண்டும் என்று வீரர்களுக்கு சட்டளையிட்ட டெமிகோஸ் தானும் ஆங்காங்கே அந்த கவசமனிதனை தேட முற்பட்டான். ஆனால் அந்தத் தேடுதல் வேட்டை ஆரம்பித்ததற்குப் பிறகு கவசமனிதனின் நடமாட்டமே இல்லை. இதனால் மேலும் குழம்பினான் டெமிகோஸ்.

இதற்கிடையில் குடிகாரன் ஒருவன் கடற்கரை பகுதியில் தள்ளாடியபடி இரவு நேரங்களில் திரிகிறான் என்றும் அவனும் கவசவீரனைப் போல் யாரிடமும் பேசுவதில்லை என்றும் ஒரு சில சமயங்களில் அவனுடன் ஒரு வீரன் வருவதாகவும் டெமிகோஸிடம் கூறினார்கள் வீரர்கள்.

"நான் பார்த்துக் கொள்கிறேன்"- என்று சொன்ன டெமிகோஸ் கடற்கரையில் திரியலானான்

ஒருநாள் நள்ளிரவு கழிந்த நிலையில் குடிகாரனொருவன் மணலில் தள்ளாடி விழுந்தான். அவனது நினைவு தப்பிக கொண்டிருந்த நிலையில் அவனைச் சேர்ந்த வீரனும் அங்கே வந்து சேர்ந்து "ஐயா, ஐயா" என்று குரலிட்டான். அப்போது அங்கே வந்து நின்ற டெமிகோஸ் கைகளைத் தட்டி தன் வீரர்களை அழைத்து "இவர்களைப் பாறைக்குச் கொண்டு வாருங்கள்." என்று கட்டடைளயிட்டான்.

விரைவிலேயே குடிகாரன் பாறைக்குக் கொண்டு வரப்பட்டு அங்கே கிடத்தப் பட்டான். அவனது உடலைச் சுற்றிப் பந்தங்கள் நடப்பட்டன. அப்பந்த ஒளியில் அந்த மனிதனை ஆராய்ந்தான் டெமிகோஸ். அவனது உடலெங்கும் சித்திரங்கள் வரையப் பட்டிருந்தன. முகத்திலும் அவ்வாறே வண்ணப் பூச்சும் சித்திரமும் இருந்ததால் அடையாளம் காண முடியவில்லை.

எனவே குடிகாரனோடு இருந்தவனைப் பார்த்து "டேய், இவன் யார்?" - என்று கேட்டான்.

"இவர் இவர் ... சிங்களக் கடற்படைத் தளபதி." என்றான்.

"பெயர்?"

"தாதுசேனன்."

"தளபதி ஏன் உடம்பெல்லாம் வண்ணம் பூசிக் கொள்ள வேண்டும்?"

"அது பற்றி அவரைத் தான் கேட்க வேண்டும்."

"அப்படியா? பார்ப்போம்." என்று கூறிய டெமிகோஸ் தன் வீரர்களை அழைத்து "இக்குடிகாரனின் வண்ணங்களை அழித்து மயக்கம் தெளிவித்து நாளை காலை என்முன் நிறுத்துங்கள்." என்றான்.

இவற்றையெல்லாம் மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த அக்கணிகைப் பெண், இல்லத்திற்குள் ஓடினாள்.





## அத்தியாயம் முப்பத்து நான்கு



## நண்பர்கள்

வீரர்களுக்கு கட்டளையிட்டு விட்டு அங்கேயே சிறிது நேரம் யோசித்தான் டெமிகோஸ். "சிங்கள நாட்டின் கடற்படைத் தளபதி என்று கூறப்பட்டது உண்மையாக இருக்குமா? அப்படி இருக்குமானால் அவனுக்கு இங்கே என்ன வேலை? ஒருவேளை சோழ மன்னனோடு உறவு வைத்துக் கொள்கிறானா இலங்கை மன்னன்? அப்படி இருந்தால் கடற்படைத் தளபதி இப்படியா குடித்து விட்டு ஆடிக் கொண்டிருப்பான்? உடம்பெல்லாம் எதற்கு வண்ணத்தைப் பூசிக் கொண்டிருக்க வேண்டும்? இங்கே யாரையும் சந்திக்காமல் திரியும் இவனது நோக்கமென்ன? இருக்கட்டும். காலையில் இவன் தோலை உரித்து

"விடுகிறேன்." என்று தனக்குள் சொல்லிக் கொண்டு மிகுந்த சோர்வுடன் இல்லத்திற்குச் சென்றான். அங்கே மஞ்சத்தில் தூங்குவது போல் நடித்துக் கொண்டிருந்தாள் அவனைக் கவர்ந்த பட்டினப் பாக்கத்துப் பெண். பெயர் தெரியாததால் "பெண்ணே, பெண்ணே!" என்று கூப்பிட்டுப் பார்த்தான் டெமிகோஸ். அவள் அசைய வில்லை. அதோடு அவளிடம் மதுவின் வாசனை வேறு வந்து கொண்டிருந்ததால் 'இவள் இப்போதைக்கு எழுந்து கொள்ள மாட்டாள்' என்று கூறிக் கொண்ட அவன் அரபு நாட்டு மது வகைகள் சிலவற்றையும் மான் கறி உணவையும் உண்டு விட்டுத் தெம்போடு மஞ்சத்தருகே வந்தான். அவளை ஒருமுறை பார்த்த அவனுக்கு வக்கிரமான உணர்வு ஏற்பட்டது. இவளை அப்படியே முழுதுமாக ஆடைகளற்ற நிலையில் பார்த்தால் எப்படி இருக்கும்? என்று நினைத்த அவன் மறுகணமே தனது ஆசையை நிறைவேற்றிக் கொண்டான். தூங்குவது போல் நடிப்பிலிருந்த அவளோ "இந்த ஆண்களுக்கே வேறு வேலை கிடையாது. மிகவும் கீழ்த்தரமானவர்கள்." என்று கூறிக் கொண்டு அவன் புரட்டியவாறெல்லாம் புரண்டாள். பிறகு டெமிகோஸ் அவளை ரசிப்பதையும் புரட்டுவதையும் விட்டு விட்டு அனுபவத்தில் இறங்கினான். "மயக்கமடைந்தவளிடம் பெறும் இன்பமே தனி ரகம். இஷ்டம் போல சுவைக்கலாம்." என்று சொல்லிக் கொண்டு தன் பல்வேறு காமவிகாரங்களை நிறைவேற்றிக் கொண்டு மஞ்சத்தில் அவள் மீதே சாய்ந்தான்.





மறுநாள் காலை எல்லாம் தயாராக இருந்தன.

சிவசாக கடற்படை தளபதி தாது சேனரின் உடலில் பூசப் பட்டிருந்த வண்ணங்கள் முழுதுமாகக் கலைய வில்லை. முகத்தில் மட்டும் வண்ணங்களும் சித்திரங்களும் யவன வீரர்களால் சிரமப் பட்டு நீக்கப் பட்டிருந்தன.

அவனை ஏற இறங்கப் பார்த்த டெமிகோஸ் "ரொம்பவும் குடிப்பீர்களோ?" என்று வினவினான்.

டெமிகோஸீக்கு முன்னால் அமர்ந்திருந்த ஆபுத்திரன், "தொட்டில பழக்கம். விட முடியவில்லை." என்று கூறி அருகிலிருந்த வில்லவனைப் பார்த்தான். அவனது முகம் அச்சத்தில் உறைந்து போயிருந்தது.

"உங்கள் ஊர்?" என்று அடுத்ததாகக் கேட்டான் டெமிகோஸ்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்!"

"அப்படியென்றால்?"

"எல்லாம் எங்களது ஊர். எல்லோரும் எங்கள் சுற்றத்தினர்."

"அதனால் தான் கடற்கரையில் குடித்து விட்டு கும்மாளம் அடித்தீர்களோ?"

"குடித்தது உண்மை. கும்மாளமும் அடிக்க வில்லை. கலவரமும் செய்யவில்லை."

"உடம்பில் வர்ணங்களை எதற்காகத் தீட்டிக் கொண்டீர்கள்?"

"எனக்குப் பிடித்திருந்தது. அவ்வளவு தான் பிரமாத காரணம் வேறெதுவும் இல்லை"

"முகத்திலிருந்து கால்வரை அடையாளம் தெரியாத அளவிற்கு கவசமணிந்து கொண்டு கடற்கரை பகுதியில் திரிந்ததற்கும் பிரமாதமான காரணம் எதுவும் இல்லை. அப்படித் தானே?"

"தவறு. கவசமணிந்தவனை அடையாளம் தெரியவில்லை என்று கூறும் நீங்கள் அந்த கவச மனிதன் நான் தான் என்று எப்படி முடிவு கட்டினீர்கள்?"

"அப்படியென்றால் கவசமணிந்த மனிதன் யார்?"

"அவனைத் தான் கேட்க வேண்டும்."

"இலங்கையின் கடற்படைத் தளபதி தன் இஷ்டப்படி பொய் சொல்ல விரும்பலாம். அதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்ற கட்டாயம் எனக்கில்லை"

"இதைப் பற்றி நான் சொல்வதற்கு எதுவும் இல்லை."

"என்னிடம் விளையாடாதே தாதுசேனா. டெமிகோஸிடம் விளையாடியவர்கள் உயிரோடு இருந்ததில்லை"

"இதை என்னிடம் ஏன் சொல்கிறீர்கள்?"

இச்சமயத்தில் டாரியஸ் டெமிகோஸின் காதில் ஏதோ சொல்லவே அவன் தன் இல்லத்திற்கு வந்து உள்ளே ஏதோ பேசியபின் திரும்பி பாறைக்கு வந்து ஆபுத்திரனை எதற்காகவோ ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தான். ஆபுத்திரனும் எல்லா அசைவுகளையும் பார்த்துக் கொண்டிருந்தானே தவிர அசரவில்லை.



டெமிகோஸ் மேலே பேச முற்பட்டு "தாதுசேனா, உண்மையைச் சொல். இங்கு எதற்காக வந்தாய்?" என்று கேட்டான்.

"பூம்புகாரைப் பார்த்து நீண்ட காலமாகி விட்டது. சுற்றிப் பார்க்கலாம் என்று வந்தேன்."

"தொடர்ந்து பொய்களைச் சொல்வதால் உன்னை ஆபத்துக்கள் சூழுகின்றன. மறந்து விடாதே."

"உண்மையைச் சொன்னால் நீ ஆடிப் போய் விடுவாய்."

"அப்படிப் பட்ட உண்மை எது?"

"உண்மையைச் சொல்வதற்கு முன் சம்பிரதாயத்திற்காக ஒரு வேண்டுகோளை விட்டு விடுகிறேன்."

"என்ன வேண்டுகோள்?"

"இந்த மருவூர் பாக்கத்தையும் துறைமுகத்தையும் விட்டு ஓடி விடு. அது தான் உனக்கு நல்லது."

"இது தான் வேண்டுகோளா?"

"ஆம். உன்னையும் உன்னைச் சேர்ந்தவர்களையும் விரட்டவும் அழிக்கவும் தான் நான் வந்திருக்கிறேன்."

இதைக் கேட்டு கடகடவெனச் சிரித்த டெமிகோஸ் "அடேய் அற்பப் பதரே, நீ ஏதோ விளையாடுகிறாய் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் நீ அப்படியல்ல ஆழம் தெரியாமல் காலை விடும் முட்டாள் உன் வேஷம் கலைந்து விட்டது. உனக்கும் இலங்கைக்கும் சம்மந்தம் இல்லை. நீ இலங்கையின் கடற்படைத் தளபதியும் இல்லை. ஆதாரத்தைக்

"காட்டவா!" என்று கொக்கரித்து விட்டு "நீ சேர நாட்டவன். சேர மன்னனுக்கு வேவுபார்ப்பவன் உன் பெயர் ஆபுத்திரன். என்ன ஒப்புக் கொள்கிறாயா அல்லது உன்னைப் பற்றி நன்கறிந்த நபரை அழைக்கட்டுமா?" என்றான்.

அதையடுத்து டாரியஸ் இல்லத்திலிருந்து பட்டினப் பாக்கத்துப் பெண்ணை அழைத்து வந்து நிறுத்தினான். அவளைக் கண்டதும் ஆபுத்திரனுக்கு மட்டுமல்ல வில்லவனுக்கும் அதிர்ச்சியாகத் தான் இருந்தது.

அதிர்ச்சியை அடக்கிக் கொண்ட ஆபுத்திரன் மெல்லச் சிரித்து "டெமிகோஸ், எதற்காக நீ இவ்வளவு சிரமப் படுகிறாய்? நான் சிங்களக் கடற்படைத் தளபதி என்றும் என் பெயர் தாது சேனன் என்றும் எப்போது நான் உன்னிடம் சொன்னேன்?" என்று வினவினான்.

"உனது ஆள் அதோ நிற்கிறானே அவன் தான் சொன்னான்."

"அவன் எனது ஆளே அல்ல. மருவூர் பாக்கத்தைச் சேர்ந்தவன். அவன் உளறியதை நம்பியது உன் முட்டாள் தனம். அது போகட்டும். என்னை சிங்களக் கடற்படைத் தளபதி அல்ல என்று சொன்னது இப்பெண் தானா?"

"ஆம். அதற்கென்ன?"

"அவள் யார் தெரியுமா?"

"பட்டினபாக்கத்துக் கணிகை."

"அது வடிகட்டிய பொய். அவள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவளே அல்ல. சிங்களத்தைச் சேர்ந்தவள். சிங்கள அரசகுமாரி. அங்கிருந்து சேர நாட்டிற்கு வந்து கலகம்



செய்தவள் அவளை சேரர் சேனாதிபதி கடலில் தூக்கியெறிந்தார். அவளைக் காப்பாற்றினான் வெண்ணைத் தீவின் கொள்ளையர் தலைவன் பங்களன். அவனுக்கே விஷம் வைத்துக் கொன்று தீவைக் கைப்பற்ற முயன்றவள் இவள். பெயர் பவானி. சுயநலத்திற்காக எதுவும் செய்யக் கூடியவள். இங்கே அவள் வந்தது கூட உன்னுடன் பழகி உனக்கு விஷம் வைப்பதற்காகவும் இருக்கலாம்."

"பொய். பொய். ஆபுத்திரனை நம்பாதீர்கள். சற்று அசந்தால் எமனையும் ஏமாற்றக் கூடியவன் இவன்." என்று அலறினாள் பவானி.

இதைக் கேட்டுக் கொதித்த வில்லவன் "அட மாயப் பிசாசே, என் தலைவரையா இழித்து பேசுகிறாய்! ஜாக்கிரதை" என்றான்.

ஆபுத்திரன் குறுக்கிட்டு "வீண் குழப்பம் எதற்கு? வெண்ணையைக் கையில் வைத்துக் கொண்டு நெய்யுக்கு ஏன் சிரமப் பட வேண்டும்? இங்கு தான் ஏராளமான சிங்களர்கள் இருக்கிறார்களே! வயதான சிங்களவர்களுக்குப் பவானியைத் தெரியாமல் இருக்க முடியாது. கூப்பிட்டுக் கேளுங்களேன்" என்றதும் தன் வீரர்கள் சிலரை அனுப்பினான் டெமிகாஸ்.

சிறிது நேரத்தில் ஏலேல சிங்கனையும் மற்றொரு வயதானவனையும் அழைத்து வந்தார்கள். அவர்களிடம் "இப்பெண்ணை உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"எங்கள் நாட்டு அரசகுமாரி பவானியை எங்களுக்குத் தெரியாதா? சிங்களத்தில் ஏதோ தகராறு. அங்கிருந்து மறைந்து விட்டார்." என்றான் ஏலேலசிங்கன்.

"சிங்கள சிம்மாசனத்திற்கு போட்டி போட்டவர் என்று கேள்விப் பட்டிருக்கிறோம். பிறகு நடந்தது எங்களுக்குத் தெரியாது." என்றார் மற்றொரு முதியவர்.

"சரி. நீங்கள் போகலாம்." என்று அவர்களை அனுப்பி வைத்த டெமிகோஸ் பவானியைப் பார்த்து "இப்போது என்ன சொல்கிறாய்? நீ சிங்கள ராஜகுமாரி என்பது உண்மையா?". என்று கேட்டான்.

"ஆமாம். ஆனால் ஆபுத்திரன் கூறுவது போல தங்களைக் கொல்ல வரவில்லை. இது உண்மை." என்றாள் பவானி.

"வெள்ளைத் தீவின் தலைவன் பங்களனைக் கொல்ல முயற்சித்தது உண்மையா?"

"விஷம் கொடுத்தது உண்மை. ஆனால் அவர் பிழைத்து விட்டார்."

"உன்னைக் காப்பாற்றிய மனிதனையே கொல்ல முயன்ற நீ என்னை ஏன் கொல்ல மாட்டாய்? மரியாதையாகச் சொல். வலிய நீ இங்கு வந்ததின் நோக்கமென்ன! உண்மையைச் சொல்லவில்லை என்றால் இந்தப் பாறையில் வைத்து உன்னைச் சித்திரவதை செய்வேன்."

"உங்களைக் காப்பாற்றத் தான் வந்தேன்."

"என்னைக் காப்பாற்றவா?"

"ஆம். உங்களை அழிக்க ஆபுத்திரர் வருகிறார் என்பதைத் தெரிந்து தான் முன் கூட்டியே இங்கு நான் வந்தேன்."



"வந்த போதே எனக்கேன் இதைச் சொல்லவில்லை. உன்னைப் பற்றிய உண்மைகளை மறைத்து பட்டினப் பாக்கத்து கணிகை என்று சொன்னது ஏன்?"

"உண்மையைச் சொன்னால் என்னை அனுமதிக்க மாட்டீர்கள் என்று தான் பொய்யைச் சொன்னேன்."

"ஆபுத்திரன் என்னை அழிக்க நினைப்பது உனக்கெப்படித் தெரியும்?"

"அவரே தன் வாய்ப்படச் சொன்னாரே?"

"இப்போது அவர் சொன்னது இருக்கட்டும். முன் கூட்டியே இது பற்றி உனக்கெப்படித் தெரியும்?"

"அவரை நான் பின் தொடர்ந்து தானே வருகிறேன்!"

"ஆபுத்திரனை நீ எதற்காகப் பின் தொடர வேண்டும்?"

"உங்களைக் காப்பாற்றத் தான்."

"என்னை எப்படி உனக்குத் தெரியும்? என்னைக் காப்பாற்ற நீ யார்? இதோ பார் பெண்ணே - வாய்க்கு வந்தபடி பேசிக் கொண்டிருக்கிறாய். நீ பேசுவது முட்டாளிடமல்ல டெமிகோஸிடம்."

இச்சமயத்தில் ஆபுத்திரன் குறுக்கிட்டு "பொய்யைச் சொல்லி நாடகமாடும் இப்பெண்ணோடு பேசுவதால் குழப்பம் தான் மிஞ்சும். அதை விடு. உண்மையைப் பேசிய என்னிடம் பேசு. நாம் பேச வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன." என்றான்.

வீரர்களை அழைத்த டெமிகோஸ் "இவனது உடலை வெட்டி சுறாப் பண்ணையில் சுறாக்களுக்கு இரையாகப் போட்டு விடுங்கள்." என்றான்.

"அவசரம் வேண்டாம். இவனை உயிரோடு வைத்திருப்பதில் ஆதாயம இருக்கிறது. அதைப் பிறகு சொல்கிறேன். இவனைப் பாதுகாப்பாக வைத்து தப்பி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்." என்றான ஆபுத்திரன்.

பவானி அப்புறப் படுத்தப் பட்டபின் எஞ்சி நின்ற யவன வீரர்களையும் வில்லவனையும் பார்த்த ஆபுத்திரன் "இவர்களையெல்லாம் அனுப்பி விடலாமே! அப்போது தான் நாம் பேசுவதற்கு தோதாக இருக்கும்" என்றான்.

டெமிசோஸ் அதற்குத் தயங்கினான்.

"உனக்கு என் மீது அச்சமாக இருக்கிறதா?" கேட்டான ஆபுத்திரன்.

"பயமா? அது எப்படி இருக்கும்?" கேட்டான் டெமிசோஸ்.

"பின் ஏன் இந்த வீரர்களை அகற்ற மறுக்கிறாய்?"

"நீங்கள் இன்னும் எனக்கு அறிமுகமாக வில்லை."

"மருவூர் பாக்கத்தைப் பிடிக்க வந்தாயே இங்கிருக்கும் யாரைத் தெரியும் உனக்கு? புதுப்புது இடங்களில் போருக்குப் போகும் போது தைரியமும் திறமையும் தான் நமக்கு உதவுமே தவிர புது இடங்களில் உள்ள நமக்குத் தெரிந்த நபர்கள் அல்ல"

டெமிசோஸ் இதற்கு மேல் பேச முற்படாமல் அங்கிருந்த அனைவரையும் அனுப்பி வைத்தான்.

"நல்லது டெமிசோஸ். நமது வேலையை பார்ப்போம நான் முதலில் சொன்னது உனக்கு நினைவில் இருக்கிறதா" என்று கேட்டான் ஆபுத்திரன்.



"நினைவிருக்கிறது. மருவூர் பாக்கத்தை விட்டு ஓடி விடும் படிக் கூறினாய். இங்கிருந்து நீ கூறியதும் ஓடிவிடுவதற்காகவா கிரேக்க நாட்டிலிருந்து வந்தேன் நான்? அதோடு நீ சேரநாட்டுக் காரன். உனக்கும் பூம்புகாருக்கும் என்ன சம்மந்தம்?"- கேட்டான்.

"சேரநாட்டின் சம்மந்தத்தால தான் இன்று சோழ நாடே இருக்கிறது. அது தெரியுமா உனக்கு?"

"எப்படி?"

"இங்கேயுள்ள உறையூர் அரியணைக்கும் பூம்புகார் அரியணைக்கும் உரிமையுள்ள இரண்டு வாரிசுகளுக்கு மேல் ஒன்பது பேர் போட்டி போட்ட போது அந்தத் தாயாதிப் போரில் சேரமன்னர் கலந்து கொண்டு சம்மந்தமில்லாதவர்களை அகற்றி உரியவர்களை அரியணையில் அமர்த்தினார்."

"அதற்கும் நீங்கள் என்னை மிரட்டுவதற்கும் என்ன சம்மந்தம்?"

"அன்று அரியணையில் அமர சேரமன்னரை அழைத்தார் இன்றையப் புகாரின் சோழ மன்னர் நெடுங்கிள்ளி. இன்று நீங்கள் துறைமுகத்தைக் கைப்பற்றியுள்ளதால் அவர் என் உதவியை நாடியுள்ளார்."

"சோழ மன்னர் முட்டாளாகத் தான் இருக்க வேண்டும்."

"ஏன்?"

"என்னை விரட்ட நீ ஒருவன் போதும் என்று நினைக்கிறாரே அதனால் தான். உன்னால் என்னை அழித்து விட முடியுமா?"

"நான் தனியே இருப்பதால் எனக்குப் பின்னால் யாரும் இல்லை என்பது உன் நினைப்பா?"

"உனக்குப் பின்னால் பெரிய படை இருக்கிறதாக்கும். எங்கே இருக்கிறது வானத்திலா?"

"டெமிகோஸ், அறிவாளியான நீ அவசரப் பட்டு வீணாகிப் போகிறாய். உன்னைக் கொல்ல வந்தவனின் பொய்களை ஆராயமலேயே ஏற்றுக் கொண்டாய். நான் உண்மையைப் பேசும் போது ஆராய்ந்து அலசி விட்டது போல அறிவை இழக்கிறாய்."

இப்பேச்சைக் கேட்டதும் டெமிகோஸிற்கு ஒரு மாதிரியாக இருந்தது.

"சேவை சேவை என்று உயிரையும் பொருட் படுத்தாமல் காரியங்களைச் செய்பவன் எதையும் எதிர் பார்ப்பதில்லை. ஆனால் எதையாவது எதிர் பார்த்து காரியங்களைச் செய்ய விரும்பினால் வாய்ப்புகள் வருவதில்லை. மனித வாழ்வானது பெரும்பாலானவர்களுக்கு இப்படித் தான் அமைந்து விடுகிறது"

ஆபுத்திரன் இப்படித் திடீரென தத்துவம் பேசியதைக் கண்டு வியந்து போன டெமிகோஸ் "ஆபுத்திரரே. இதென்ன திடீரென்று தத்துவம்?" என்று கேட்டான்.





"தத்துவங்கள் திடீரென்று பேசப்பட்டாலும் அவை வாழ்க்கையில் நிரம்பி வழிகின்றன." என்றான் ஆபுத்திரன்.

தத்துவங்களையடுத்து அவன் சொன்ன ஒரு திட்டத்தைக் கேட்டு பெருமகிழ்ச்சியடைந்த டெமிகோஸ ஆபுத்திரனைக் கட்டிக் கொண்டதோடு "இனி நாம் நண்பர்கள்." என்று சொல்லவும் செய்தான்.



# அத்தியாயம் முப்பத்தைந்து



## ஆபுத்திரன் திட்டம்

தத்துவங்களாக ஆபுத்திரன் பேசியதைக் கேட்ட டெமிகோஸ் சற்றே குழம்பினான்.

இந்நிலையில் ஆபுத்திரன் "நான் நினைத்தால் உன் மரக்கலங்களையெல்லாம் கொளுத்தி விட்டு இந்தப் பாறையிலேயே, உன்னை அழிக்க முடியும். ஆனால் ஏதோ ஒன்று என்னை வேண்டாம் என்கிறது." என்றான்.

ஆபுத்திரனின் பேச்சு டெமிகோஸை மேலும் குழப்பியது. "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"- என்று கேட்டான்.

"தெளிவற்ற பேச்சுக்கள் புரிந்து விடுவதும் தெளிவான பேச்சுக்கள் புரியாமல் போவதும் மனிதனின் துரதிஷ்டங்கள்.



யவனத் தளபதியாரே, இந்தச் சோழ மன்னனுக்காக களத்தில் இறங்கி உம்மை அழித்து விட்டால் எனக்கென்ன மன்னர் பதவியா கிடைக்கப் போகிறது? இல்லை. கொஞ்சம் பொன் கிடைக்கலாம். அவ்வளவு தான்." என்றான் ஆபுத்திரன்.

"நீங்கள் என்ன எதிர் பார்க்கிறீர்கள் சோழ மன்னரிடம்?"

"சோழ மன்னர் எனக்கு ஒப்படைத்திருக்கும் விஷயம் வெறும் தூசு தான். இதில் நான் எதிர் பார்க்க என்ன இருக்கிறது? ஆனால் சேர நாட்டில் நான் ஆற்றிய சேவைகள் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பதிக்கப் படக் கூடியவை. அதற்கெல்லாம் நான் எதிர்பார்த்தது ஒரு பதவியை மட்டும் தான். சேரமன்னர் எனக்கதை அளிக்கவில்லை."

"ஏன்?"

"எனக்கெப்படித் தெரியும்? அதை என் துரதிஷ்டம் என்று சொல்வதா அல்லது மன்னரின் சிறுமைத் தனம் என்று சொல்வதா? சேரநாட்டில் பதவியில் இருக்கும் பலபேர் எதையும் செய்ததில்லை. துரும்பைக் கூட அசைக்காத பலருக்கு பதவிகள் தரப்பட்டுள்ளன. பதவிகளின் இயல்பே அதுதானோ என்னவோ! தகுதி படைத்தவர்களுக்கு அது கானல் நீர். தகுதியற்றவர்களுக்கோ அது சொர்க்கம்."

"நீங்கள் மிகவும் வேதனைப் படுகிறீர்கள் ஆபுத்திரரே. அது நியாயமும் கூட."

"நியாயங்கள் தொடர்ந்து உதாசீனப் படுத்தப் பட்டால் அநியாயங்கள் அரியணையில் ஏறுமா, ஏறாதா? சொல்லுங்கள் தளபதி."

"நிச்சயமாக ஏறும்."

"அதன் விளைவு எப்படி இருக்கும்?"

"பயங்கரமானதாக இருக்கும்."

ஆபுத்திரன் இருக்கையை விட்டு எழுந்து சிறிது நடமாடி விட்டு "டெமிகோஸ், நான் உன்னை அழிப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். நீ இங்கே என்ன சாதித்து விட முடியும் என்று நினைக்கிறாய்? அதோ நீ கட்டி வரும் எந்திரத் தூண்களின் பணி முடிவடைந்து விட்டால் அதை வைத்துக் கொண்டு புகார் கோட்டையைத் தாக்கலாம். அதைக் கைப்பற்றலாம். அதற்கு மேல் உன்னால் என்ன செய்ய முடியும்? அதோடு உன் வெற்றியை எத்தனை காலத்திற்கு உன்னால் தக்க வைத்துக் கொள்ள முடியும்? நீ புகாரில் அமர்ந்திருப்பதைப் பார்த்துக் கொண்டு உறையூர் சோழர் வாளாயிருப்பாரா? அல்லது அரியணையை இழந்த தனது உறவினரான நெடுங்கிள்ளியின் நிலையைக் கண்டு சேரமன்னர் தான் பேசாமல் இருப்பாரா? இருவரும் எதிர்த்தால் நீ உயிரோடு கிரேக்க நாட்டிற்குத் திரும்புவதே இயலாமல் போய் விடும். ஒப்புக் கொள்கிறாயா?"

டெமிகோஸ் தற்போது பூராவாகக் குழம்பி விட்டதால் என்ன பதில் சொல்வதென்று விளங்கவில்லை. அதை எதிர்பார்த்து அதற்காகவே மாறி மாறிப் பேசியிருந்த ஆபுத்திரனுக்கு திருப்தியாக இருந்தது. எனவே அவனே பேச முற்பட்டு "தளபதிக்கு இன்னும் கனவு கலையவில்லை போலிருக்கிறது!" என்றான்.

அதுவும் அவனுக்குப் புரியவில்லையாதலால் "கனவா?" என்று கேட்டான்.

"நான் விவரமாகச் சொல்லியபிறகும் நீங்கள் பூம்புகார் கோட்டையைக் கைப்பற்றும் கனவிலிருந்து விடுபட வில்லை



போலிருக்கிறது. என் தளபதி, நாம் எதிரிகளாக ஏன் செயல்பட வேண்டும்? நாமிருவரும் ஒன்றுபட்டால் என்ன?"

"ஒன்றுபட்டு என்ன செய்வது?"

"இந்தப் புகார் கிடக்கட்டும். இங்கே வெற்றி பெற்றாலும் அந்த வெற்றியை நிலைநிறுத்த முடியாது என்று ஏற்கனவே சொன்னேன். எனவே நாமிருவரும் இணைந்து இக்கடற்படையைக் கொண்டு இலங்கையைத் தாக்கி வெற்றி கொண்டால் என்ன?"

"இது பகற்கனவு ஆபுத்திரா."

"டெமிகோஸ் நான் கனவு காண்பதில்லை. சாதிப்பதே என் வேலை. சாதித்து விட்டு அவற்றை வேண்டுமானால் கனவைப் போல எண்ணிப் பார்ப்பேன். இலங்கை தனி நாடு. அதை ஆள்பவன் ஒரே மன்னன். நீ சிறந்த கடலோடி. நானும் பல தந்திரங்களை அறிந்தவன். நாமிருவரும் இணைந்தால் இலங்கையை வெற்றி கொள்ள முடியும்."

"இலங்கையின் மரக்கலங்கள் சும்மாயிருக்குமா?"

"நாம் செய்யப் போவது கடற்போரல்ல."

"பிறகு?"

"டெமிகோஸ், முன்னாளில் தமிழ் மன்னர் ஒருவர் மரக்கலங்களில் தரைப் படை வீரர்களை ஏற்றிக் கொண்டு இலங்கைக்குப் படையெடுத்தார். இலங்கை எதிர்பாராத இடத்தில் மரக்கலங்களைச் செலுத்தி வீரர்களை இறக்கினார். அந்த வீரர்கள் தலைநகருக்குச் சென்று திடீர் தாக்குதலை நடத்தி வெற்றி பெற்றார்கள். அதையே நாமும் செய்யலாம்."

"இலங்கை அப்போதிருந்த நிலையில் தான் இருக்கிறதா?"

"அப்படித் தான் கேள்விப் பட்டேன். ஒரு வேளை அங்கே நிலைமை மாறியிருந்தாலும் அதற்கேற்ப மாற்று இடங்களில் மரக்கலங்களை நாம் இயக்கலாம்."

"உன்னிடம் தரைப் படை இல்லையே?"

"அதனாலென்ன? கடற்படை வீரர்கள் இருக்கிறார்கள் அல்லவா? அவர்களை படையாக மாற்றி விட்டால் போகிறது? கூடுதலான ஆயுதங்கள் தான் வேண்டும். அவற்றைச் சோழமன்னனிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்."

"அவர் கொடுப்பாரா?"

"அவருக்காக உன்னோடு போரிடப் போவதாகத் தானே பேச்சு! ஆகவே நான் கேட்டால் கொடுப்பார். அது ஒன்றும் பெரிய விஷயமில்லை."

"இலங்கைக்குப் படையெடுப்பது அவருக்குத் தெரிந்து விட்டால்?"

"அதற்கெல்லாம் என்னிடம் ஏற்பாடுகள் இருக்கின்றன. அது என் பொறுப்பு. ஆனால் ஒன்று."

"என்ன?"

"இந்த முறை எனக்கு முறையான பரிசு வேண்டும்."

"என்ன வேண்டும்?"

"இலங்கையை வென்றால் வட இலங்கை உங்களுக்கு. தென்னிலங்கை எனக்கு. அநுராதபுரத்தில் இருந்து கொண்டு வடக்கே வரும் எதிரிகளை நீங்கள் கவனித்துக் கொள்ளலாம்



இலங்கையின் தென்கோடியில் காலே துறைமுகத்தில் நான் இருந்து கொண்டு தெற்கே வரும் எதிரிகளை கவனித்துக் கொள்வேன். நம் இருவரை மீறி இலங்கையை எந்த எதிரியும் பிடிக்க முடியாது. என்ன சொல்கிறாய்?"

"திட்டம் இனிப்பாக இருக்கிறது."

"ஆபத்தான திட்டமும் கூட."

"ஆகவே தான் யோசிக்கிறேன்."

"அளவுக்கு மீறிய யோசனை செயலிழக்கச் செய்து விடும். ஆகவே நம்பிக்கையோடும் துணிச்சலோடும் இறங்கினால் தித்திக்கும் இத்திட்டம் நிச்சயம் நிறைவேறும்."

இதைக் கேட்டதும் மகிழ்ச்சியோடு ஆபுத்திரனைக் கட்டிக் கொண்ட டெமிகோஸ் "இனி நாம் நண்பர்கள்." என்று திருப்தியோடு சொல்லிக் கொள்ளவும் செய்தான்.

"நீ ஒப்புக் கொண்டதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி டெமிகோஸ். உன் அடுத்த கட்ட தலைவர்களைக் கூப்பிடு."

"எதற்கு?"

"நமது முடிவு குறித்து ஆலோசிக்க வேண்டாமா?"

"ஆலோசனை என்பது நேரத்தை வீணடிக்கும் செயல். குழப்பத்தை உண்டாக்கும் காரியம். எனவே அந்த முட்டாள் தனத்தை நான் என்றும் செய்ததில்லை. யவனர் படைக்கு நான் தலைவன். என் ஆணை மற்றவர்களுக்கு கட்டளை. இதில் யாருடைய கருத்திற்கும் நான் இடமளிப்பதில்லை."

அதுவும் ஒருவகையில் நல்லது தான். எங்கள் நாட்டில எதற்கெடுத்தாலும் ஆலோசனை செய்யப் படுகிறது.

இருவராக இருந்தால் இரு ஆலோசனைகள். மூவராக இருந்தால் மூன்று ஆலோசனைகள். முப்பது பேராக இருந்தால் முப்பது ஆலோசனைகள். இப்படி கலந்து பேசுகிறவர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப ஆலோசனைகள் தான் அதிகமாகின்றனவே தவிர ஒருமித்த கருத்து ஒரு போதும் நிலவுவதில்லை. அந்த வகையில் உங்கள் முடிவு சரி."

சிறிது நேரம் கழித்து ஆபுத்திரனே பேசத் தொடங்கி "உனது மரக்கலங்கள் மொத்தம் எத்தனை?" என்று கேட்டான்.

"பதினைந்து."

"சோழரது மரக்கலங்கள்."

"நான்கு."

"எவை எவை எங்கே இருக்கின்றன?"

"சோழரது நான்கு மரக்கலங்களும் துறைமுக வாயிலில் பக்கத்திற்கு இரண்டாய் நின்று காவல் காக்கின்றன. துறைமுக வாயிலை எனது இரண்டு மரக்கலங்கள் அடைத்தபடி நங்கூரமிட்டுள்ளன. பத்து மரக்கலங்கள் துறைமுகத்திற்கு ஒரு காத தூரத்தில் சந்திர வட்டமாக நங்கூர மிட்டுள்ளன. மீதி மூன்று மரக்கலங்கள் நடுக்கடலில் கண்காணிப்பு வேலையில் ஈடுபட்டுள்ளன."

"டெமிகோஸ், நாம் இலங்கையை நோக்கி போகும் நிலையில் புகார் துறைமுகம் சிறப்பாக காவல் செய்யப் பட்டிருக்க வேண்டும். நான் இங்கே வந்து பலஇடங்களுக்கும் சென்று பார்வையிட்டதில் சோழர்களது மரக்கலங்கள் நான்குமே பலவீனமான நிலையில் உள்ளன. நீயும் கவனித்திருக்கலாம். அவை நன்றாகப் பழுது பார்க்கப் பட்டால்



தான் அவை துறைமுகப் பாதுகாப்பைச் சிறப்பாகச் செய்ய முடியும். நாம் இல்லாத போது துறைமுகம் தாக்கப் பட்டால் அந்த மரக்கலங்களால் தாக்கு பிடிக்க முடியாது. எனவே அவற்றை விலக்கி விட்டு அவற்றுக்குப் பதிலாக உனது மரக்கலங்களில் ஆறு கலங்களை பக்கத்திற்கு மூன்றாய் நிறுத்தி விடு. உனது மரக்கலங்கள் கனமும் உயரமும் கொண்டதாக இருப்பதால் எந்தத் தாக்குதலையும் சமாளிக்கும். துறைமுக வாயிலை அடைத்திருக்கும் இரண்டு மரக்கலங்கள் அப்படியே இருக்கட்டும். எந்த மாற்றமும் வேண்டாம். அதே போல் கண்காணிப்பில் ஈடுபட்டுள்ள மூன்று மரக்கலங்களும் அப்படியே இருக்கட்டும். அதிலும் மாற்றம் வேண்டாம். மீதியிருக்கும் பத்து மரக்கலங்களில் நான்கையும் சோழ மரக்கலங்கள் நான்கையும் சேர்ப்போம். ஆக மொத்தம் எட்டு மரக்கலங்களுடன் இலங்கையை நோக்கிச் செல்லலாம். அந்த எட்டு மரக்கலங்களில் யவன வீரர்களை எந்த அளவிற்கு அதிகமாக நிரப்பமுடியுமோ அந்த அளவிற்கு நிரப்பு. அப்படி நிரப்பினால் எத்தனை வீரர்கள் சேருவார்கள்?"

டெமிகோஸ் ஏதோ கணக்குப் போட்டு விட்டு "நாலாயிரம் வீரர்களை அழைத்துச் செல்லலாம்" என்றான்.

"இங்கே பாதுகாப்பிற்கு?"

"ஆயிரம் வீரர்கள் இருப்பார்கள்."

"எதிர் பாராத தாக்குதல் நடைபெற்றால் அதை முறியடிக்க ஆயிரம் வீரர்கள் போதாது. அதோடு சுங்கச் சாவடியை கவனிக்க வேண்டும். மருவூர் பாக்கத்தை பாதுகாக்க வேண்டும். இதற்கு சில வீரர்கள் தேவை. எனவே மொத்தமுள்ள ஐயாயிரம் யவன வீரர்களில் இரண்டாயிரம்

பேரை துறைமுகத்தில் பல்வேறு அலுவல்களில் பயன்படுத்திக் கொண்டு மூவாயிரம் வீரர்களை நம்மோடு அழைத்துச் செல்வோம்."

"அது போதுமா?"

"இருக்கும் வீரர்களைத் தானே பயன்படுத்த முடியும்?"

"இங்கே சிங்கள அடிமைகள் நிறைய பேர் இருக்கிறார்கள். அவர்களை துறைமுக வேலைகளுக்குப் பயன்படுத்தலாம்."

"வேண்டாம். நாம போவது சிங்களத்தைப் பிடிக்க. இந்த விஷயம் அவர்களுக்குத் தெரிந்தால் நமக்காக வேலைபார்க்க மாட்டார்கள். நமக்கு எதிராகத் திரும்பி விடுவார்கள். அவர்கள் அப்படியே இருக்கட்டும்." என்று சொன்ன ஆபுத்திரன் "வா டெமிகோஸ். சோழமன்னரைப் போய் பார்த்து விட்டு அவருக்கு தைரிய மூட்டுவது மாதிரி ஏதாவது பேசுவோம். நான் உன்னை அடக்கி விட்ட மாதிரி நாடகமாடுவோம். அந்த நம்பிக்கையில் மன்னன் அமைதியாக இருப்பான்." என்றான்.

"வேண்டாம் ஆபுத்திரரே. சோழ மன்னரை நம்ப முடியாது. நான் அங்கு வரும் பட்சத்தில் என்னைக் கைது செய்தாலும் செய்வான். காரியங்கள் கெட்டுவிடும்."

"ஏன் இப்படி பயப்படுகிறாய் டெமிகோஸ்? நானும் கூட இருக்கிறேன் அல்லவா! என்னை மீறி அவன் உன்னை கைது செய்து விட முடியுமா?"

"இல்லை. உங்களை நான் நம்புகிறேன். சோழனை நம்பத் தயாராக இல்லை. நீங்கள் மட்டும் சென்று என்ன பேச வேண்டுமோ அதைப் பேசி விட்டு நமது வீரர்களுக்கான



ஆயுதங்களைக் கொண்டு வர ஏற்பாடு செய்யுங்கள். நான் மரக்கலங்களை மாற்றியமைக்கும் நடவடிக்கை எடுக்கிறேன்."

இதற்கு மேல் பிறகு டெமிகோஸை வற்புறுத்த ஆபுத்திரன் விரும்பவில்லை.

டெமிகோஸை அனுப்பி விட்டு அன்றிரவே சோழமன்னனைச் சந்தித்தான் ஆபுத்திரன்.

"மன்னவா, தங்களிடம் கூறியது போலவே திட்டங்களை வகுத்து விட்டேன். டெமிகோஸும் ஒப்புக் கொண்டு ஏற்பாடுகளைச் செய்யத் தயாராகி விட்டான். நான் ஏற்கனவே கூறியது போல் நாங்கள் இலங்கையை நோக்கி புறப்பட்ட ஐந்தாவது நாள் உங்கள் நடவடிக்கைகளைத் தொடங்கி விடுங்கள். இடையில் ஏதாவது நடந்தால் அதற்கேற்றாற் போல நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ளலாம். இப்போதைக்கு மரக்கலத்தில் செல்லும் யவன வீரர்களுக்கு வேண்டிய போர் ஆயுதங்களை அனுப்பி வையுங்கள்." என்று கூறிவிட்டு ஏலேலசிங்கனையும் சந்தித்தான்.

"எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டேன்." என்று சொன்ன ஏலேலசிங்கன் தனது சந்தேகம் ஒன்றை வெளியிட்ட போது "அப்படி எதுவும் நடைபெற வாய்ப்பில்லை சிங்கா அப்படியே நடந்தாலும் அதற்கான ஏற்பாடுகளையும் செய்திருக்கிறோமே அதைக் கையாண்டால் போகிறது." என்றான் ஆபுத்திரன்.

அன்றிரவு ஆபுத்திரனும் வில்லவனும் வழக்கமாகத் தங்கும் இடத்தில் தங்காமல் புகார் நகரில் சதுக்க பூதம் நிர்மாணிக்கப் பட்டிருந்த வளாகத்துச் சத்திரத்தில் தங்கினார்கள்.

அப்போது பேசப்பட்ட வில்லவன் "எனக்குப் பல விஷயங்கள் புரியவில்லை" என்றான்

"எதைச் சொல்கிறாய்?"

"நீங்கள் கவச மனிதராகச் சில நாட்கள் திரிந்தது. பிறகு அக்கவசத்தில் மண்ணையும் கல்லையும் வைத்து சேற்றில் போட்டது. பிறகு உடம்பெல்லாம் மதுவை ஊற்றிக் கொண்டு குடித்தவனைப் போல் சில நாட்கள் கடற்கரையில் தள்ளாடியபடி சென்றது. உடம்பெல்லாம் வண்ணம் பூசிக் கொண்டது - இதெல்லாம் எதற்காக?"

"இத்தனைக்கும் ஒரே பதில் டெமிகோஸைக் குழப்புவதற்காகத் தான்."

"அவன் உங்களைப் பிடித்து விசாரித்த போது கவசமனிதனாகத் திரிந்தது நீ தானே என்று கேட்ட போது இல்லை என்று சொன்னீர்களே, அது ஏன்?"

"கவசமனிதன் என்று தனியாக வேறொருவன் இருப்பதாக டெமிகோஸ் எண்ணிக் கொண்டு குழம்பட்டுமே"

"தலைவரே, அந்த பவானி திடீரென்று தோன்றி உங்களைக் காட்டிக் கொடுத்த போது நமது கதி அதோ கதி தான் என்று நினைத்து விட்டேன்."

"நான் அப்படி நினைக்கவில்லை வில்லவா. பவானி தன்னைப் பற்றிப் பொய்யாகச் சொல்லிக் கொண்டு தான் சேர்ந்திருப்பான் என்று நினைத்து அவனைப் பற்றிய உண்மையைச் சொன்னேன். உண்மை கைகொடுத்தது."

"டெமிகோஸ் உங்களை உண்மையிலேயே நம்பி விட்டதாக நினைக்கிறீர்களா?"



"நம்பாமல் இருக்க இதில் ஏதுமில்லை வில்லவா. நானே பவானியைப் பற்றிய உண்மையைச் சொல்லி அவனது நம்பிக்கைக்குப் பாத்திரமானேன். டெமிகோஸை போன்ற பதவி பிடிக்கும் ஆசை உள்ளவர்களிடம் பேராசையை வளர்த்தால் நம் பக்கம் நிச்சயம் சாய்வார்கள் என்று நினைத்தேன். அதுதான் நடந்திருக்கிறது. அதோடு அவன் புகார் கோட்டையை பிடித்தாலும் ரொம்ப நாட்கள் காக்க தன்னால் முடியாது என்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறேன். அதை அவனால் மறுக்க முடியாது."

"எனக்கென்னவோ உள்ளூர அச்சமாகத் தான் இருக்கிறது தலைவரே."

"அச்சத்துடன் வாழ்ந்து வீணாவதை விட துணிந்து நின்று மரணமடைவது தான் வீரர்க்கு அழகு. வீணாகக் கவலைப் படாதே."

கவலைப் பட வேண்டாம் என்று ஆபுத்திரன் உறுதியாகக் கூறியிருந்தாலும் கவலைப் பட வேண்டிய சூழ்நிலை மறுநாளே உண்டாயிற்று.

"ஆபுத்திரரே, நமது திட்டத்தைப் பத்து நாட்களுக்குத் தள்ளிப் போடலாம். அது தான் நல்லது." என்றான் டெமிகோஸ்.

ஆபுத்திரன் தீவிர சிந்தனையில் ஆழ்ந்தான்.

# அத்தியாயம் முப்பத்து ஆறு



## பவானி வைத்த தீ

**ப**வானி கெட்ட எண்ணமே வடிவெடுத்த பிறவியாக இருந்தாலும் பேராசையின் அடையாளமாகி அதற்காக எதை வேண்டுமானாலும் தயக்கமின்றி செய்யக் கூடியவளாக இருந்தாலும் அவளது அழகும் அதிஷ்டமும் தான் அவளை ஒவ்வொரு சமயமும் மரணத்திலிருந்து காப்பாற்றிக் கொண்டு வந்தன என்று சொல்ல வேண்டும். வஞ்சி நகரில் இளவரசன் குட்டுவனைத் தன்வலையில் வீழ்த்தும் கட்டத்தில் அவளது உயிருக்கு ஆபத்து வந்தது. கொஞ்சம் அசந்திருந்தாலும் குட்டுவன் அவளை வெட்டியிருப்பான். ஆனால் நொடிப் பொழுதில் விழித்துக் கொண்ட அவள் அவனது இடையில் குறுவாளைப் பாய்ச்சி விட்டுத் தப்பினாள். வில்லவன் கோதை அவளைப் பிடிக்க வீரர்களை ஏவினார். கோட்டைக்



கதவுகளை மூடும் படி செய்தார். ஆனால் அவரது முயற்சிகள் நடைபெறுவதற்குள் வஞ்சியை விட்டு வெளியேறிய அவள் திருக்கு வாசலையடுத்த புறஞ்சேரிக்கு வந்தாள். அங்கே தனக்கு மிகவும் பழக்கமான நளவேந்தர் ஒருவரிடம் தஞ்சம் புகுந்தாள். தனது உடமை அவருக்குக் கொடுத்து அங்கேயே தங்கிய படி வஞ்சிநகர் விவகாரங்களைக் கவனித்தாள்.

ஆபுத்திரன் உறையூருக்கும் பூம்புகாருக்கும் பின் இலங்கைக்கும் சென்று செய்தி கிடைத்தது. தனது முயற்சிகள் எல்லாமும் தோற்று விடவே என்ன செய்வது என்றே அவளுக்குப் புரியவில்லை. ஆடவன் ஒருவனை மணந்து எங்காவது ஒதுங்கியிருந்து குடும்பம் நடத்த முடியும் என்று அவளுக்குத் தோன்றவில்லை. அப்படி வாழவும் அவளுக்குப் பிடிக்க வில்லை. மிகவும் பரபரப்பாக வாழ்ந்து பழகி விட்ட அவளுக்கு அமைதியாக ஒதுங்கி வாழ பிடிக்காது போகவே மீண்டும் தன் தீய எண்ணங்களை மனதில் சுமந்து கொண்டாள். தனது ஆசைகளையும் திட்டங்களையும் ஒவ்வொன்றாக யோசித்துப் பார்த்த அவளுக்கு, இனி சேரமன்னனையோ, சேனாதிபதியையோ, இளங்கோவடிகளையோ, இளவரசன் குட்டுவனையோ அல்லது கொன்னையர் தலைவன் பங்களனையோ கொல்வதென்பது இயலாத காரியம் என்று கருதினாள். எனவே அவளது கவனம் வஞ்சிக் கோட்டை வாலிபனான ஆபுத்திரனின் பேரில் திரும்பியது. அவனையாவது கொன்றால் தான் தனக்கு ஆறுதல் கிடைக்கும் என்று நினைத்தாள். இத்தனைக்கும் அவனால் அவளுக்கு எந்த விதமான துன்பமும் நேர்ந்ததில்லை. அப்படியிருந்தும் அவன் மீது காரணமற்ற துவேஷம் அவளிடம பிறந்தது. தன்னையும் அவனையும் ஒப்பிட்டுப் பார்த்தாள் அவள். இருவருக்குமே

பல பல சோதனைகள் உண்டாயின. உயிர் போகும் அபாய சந்தர்ப்பங்களும் வந்தன. ஆனால் தான் மட்டும் வெற்றி பெற்றுக் கொண்டே போவதாகவும் தோன்றியது அவனுக்கு. அது மட்டுமின்றி ஒவ்வொரு கட்டத்திலும் தனக்கு அவப்பெயரும் ஆபுத்திரனுக்கோ பாராட்டும் கிடைத்து வந்ததை உணர்ந்த போது பொறாமையாக இருந்தது அவனுக்கு. அது அர்த்தமற்ற பொறாமை என்பது அவனுக்குப் புரியவில்லை. இருவரது செயல்பாட்டிலும் இருந்த அடிப்படை வித்தியாசத்தைப் புரிந்து கொண்டிருந்தால், அவனுக்கு இந்தப் பொறாமை உண்டாகியிருக்காது. ஆனால் அவனது சிந்தனைகள் எதுவும் நல்லதிற்காக உண்டாகவில்லை. தனது அழகால் யாரையெல்லாம் ஏமாற்றலாம் என்ற சிந்தனையே அவனிடம் எப்போதுமிருந்தது. வெள்ளைத் தீவில் இருந்த போது, ஒரே ஒரு முறை மட்டும் பெண்ணடிமைத்தனத்தைப் பற்றி நல்லவிதமான சிந்தனை எழுந்தது. ஆனால் அதை வெல்ல அவன் கையாண்ட முறையும் இடமும் அவனை மரண வாயிலுக்குத் தான் கொண்டு சென்றது. அங்கேயும் அவனது உடலை போகப்பொருளாக நினைத்துத் தான் அமீர் அவனைக் காப்பாற்றினான்.

எப்படியோ..

ஆபுத்திரனைக் கொல்வது என்ற எண்ணம் தலைதூக்கியதும், அவனது துர்புத்தி கீழ்த்தரமாகவே வேலை செய்தது.

எந்த தனவந்தரின் அடைக்கலத்தில் இருந்தானோ அவரது மகனை தன் அழகு வலையில் வீழ்த்தி அவனுடன் வெளிப்போந்தான். அழகு தேவதை கிடைத்து விட்ட



ஆனந்தத்தில் அந்த இளைஞனும் அவன் கூறியபடியெல்லாம் செய்தான். உறையூருக்குப் போகலாம் என்றான். தனது புரவிகள் கொண்ட தேரில் அவனை அழைத்துச் சென்றான் அவன். அங்கே ஆபுத்திரன் இல்லை என்றதும் புகாருக்குப் போகலாம் என்றான் பவானி. சொர்க்கத்திற்கு அழைத்ததாக எண்ணி புகாருக்கு அழைத்துச் சென்றான் அந்த பெருந்தன வீட்டு வாலிபன். புகாரில் ஆபுத்திரன் இருப்பதை அறிந்ததும் வாலிபனை எப்படி ஒதுக்குவது என்று யோசித்தான். மனச்சாட்சி என்பதும் இல்லாத அவன் தூங்கும் போது அவனைக் குத்திக் கொன்று விட்டுப் பட்டினப் பாக்கத்திற்குப் போனான். அங்கே இருந்தபடி புகாரின் நிலைமைகளை அறிந்தான். புகாரின் துறைமுகம் சோழர் பிடியிலிருந்து விலகி கிரேக்கர் வசம் போய் விட்டது என்பதையும் அதற்குக் காரணமான கிரேக்க நாட்டுத் தளபதி டெமிசோஸ் பிரபலமான வீரன் என்பதையும் அறிந்ததும் அவனது பேராசை மனத்தில் சூறாவளியாக வீசியது. ஆபுத்திரனைக் கொல்லும் திட்டத்தை ஒதுக்கி விட்டு டெமிசோஸை தன் வலையில் வீழ்த்தினால் பெரும் அந்தஸ்தைப் பெற்று கிரேக்க நாட்டிற்கும் செல்லலாம் என்று கனவு கண்டான். எனவே வலுவில் அவனைத் தேடிப் போய் வலையில் வீழ்த்தினான். அங்கே அவனே எதிர்பாராத விதத்தில் ஆபுத்திரன் வரவே அவனைக் கொல்ல அதுவே சந்தர்ப்பம் என்று காட்டிக் கொடுத்தான். முடிவோ வேறு மாதிரி அமைந்தது. வழக்கம் போல் தனக்கு அவப்பெயரும் அவனுக்கு நற்பெயரும் கிடைத்தது.

மருவூர் பாக்கத்தின் சந்தடியற்ற பகுதியில் தனியறையில் அடைக்கப் பட்டிருந்த பவானி, வேதனையில் வெந்து கொண்டிருந்தான். தேவையான சௌகரியங்களை

பணிப்பெண்கள் செய்து தந்தாலும் வேலைக்கு எப்படி கூண்டில் அடைப்பட்டிருப்பது பிடிக்காதோ அப்படித் தான் அவளுக்கு சிறையும் தனிமையும் பிடிக்க வில்லை. தன்னைக் கண்டபடி அனுபவித்து சுகம் கண்ட டெமிகோஸ் ஆபுத்திரனின் பேச்சைக் கேட்டு சுவிரக்கமின்றி தன்னைச் சிறையில் அடைத்ததை எண்ணி அவனைச் சபித்தாள் அவள். மரணத்தில் முடியவிருந்த தன்னைக் காப்பாற்றியிருந்தாலும், ஆபுத்திரனின் மீது அவளுக்கு நன்றியுணர்வு உண்டாகவில்லை. கோபமும் ஆத்திரமுமே உண்டாயின. ஏறக்குறைய கொல்லப்படும் கட்டத்திற்கு ஆபுத்திரனை கொண்டு வந்து விட்ட நிலையில் அவன் தப்பி விட்டதை அவளால் தாங்கமுடியவில்லை. தன் உயிர் மீண்டதை விட அவன் உயிர் போகாதது தான் அவளுக்கு கசப்பாக இருந்தது. எந்த வழியிலாவது அவனைத் தீர்த்துக் கட்ட எண்ணிய அவள், தன்னிடம் ஏவல் புரிந்த பணிப்பெண்களிடம் டெமிகோஸின் வீரனான டாரியஸை தான் உடனடியாகச் சந்திக்க விரும்புவதாகவும், மிகவும் முக்கியமான விஷயம் என்றும் சொல்லி அவனை வரும்படி கேட்டுக் கொண்டாள்.

பணிப்பெண்கள் இவ்விஷயத்தை டாரியஸிடம் கூறிய போது அவன் காதில் வாங்கிக் கொள்ள வில்லை. இரண்டாவது முறையாக பணிப்பெண்கள் கேட்டுக்கொண்ட போது "இவளை ஏன் நான் சந்திக்க வேண்டும்?" என்று விறைப்பாகக் கூறிக் கொண்டே அவளிடம் சென்றான். அவள் ஏதோ சொல்ல முற்பட்டதும் "இதோ பார் பெண்ணே, தலைவர் டெமிகோஸைப் போல் நான் பெண் பித்தனல்ல. ஆகவே என்னிடம் உன் நாடகத்தை நடத்த முயன்றால் தளபதியின் உத்திரவின்றியே உன்னை வெட்டிக் கொல்வேன்." என்று இரைந்தான்.



"ஐயா, ஏன் வீணாகக் கோபப்படுகிறீர்கள்? நான் சொல்லப் போகும் விஷயத்தைக் கேட்டுக் கொள்ளுங்கள்." என்றாள் பவானி.

"எந்த விஷயமாக இருந்தால் என்ன? தளபதியிடமே சொல்ல வேண்டியது தானே?"

"ஐயா, அவரை இங்கு நான் அழைக்க முடியுமா?"

"நான் மட்டுமென்ன? நானும் இங்கே வரத் தயாராக இல்லை. எதற்கும் என்ன விஷயம் என்று தெரிந்து கொள்ள வந்தேன்."

"மிகவும் நன்றி."

"விஷயத்தைச் சொல்."

"ஆபுத்திரனை நம்பி காரியத்தில் இறங்க வேண்டாம் என்று சொல்லுங்கள். அவன் சூழ்ச்சிக்காரன். உங்களையெல்லாம் அடியோடு அழிக்கத் தான் அவன் திட்டமிடுகிறான். தளபதியிடம் இதைச் சொல்லுங்கள். ஆபுத்திரனை வெட்டிக் கொல்லுங்கள்."

"இதைச் சொல்லத்தான் என்னை அழைத்தாயா?"

"ஐயா, நான் சொல்லுவதை உதாசீனப் படுத்தாதீர்கள் அழிவை விலை கொடுத்து வாங்காதீர்கள்."

"பைத்தியக்காரி. போய் தூங்கு." என்று கூறி விட்டு சென்றான் டாரியஸ்.

அதே நேரத்தில் புகாரின் விருந்தினர் மாளிகையின் உப்பரிகையில் நின்று கொண்டிருந்த ஆபுத்திரனும் வில்லவனும் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

வேண்டாம் என்று உங்களிடம் சொல்லச் சொன்னான்." என்றான் டாரியஸ்.

"அந்த நாய் கூறியதையெல்லாம் ஒரு பொருட்டாக சொல்லவந்து விட்டாயா நீ? முட்டாள்!" சீறினான் டெமிகோஸ்.

டாரியஸ் ஏதோ பேசமுற்பட்ட போது குறுக்கிட்ட டெமிகோஸ் "அந்த நச்சுப் பாம்பைப் பற்றி ஆபுத்திரன் கூறியது எல்லாம் உண்மை. தன் தலைவனுக்கே விஷம் வைத்த அக்காதகி நமக்கு எச்சரிக்கை விடுவது பைத்தியக்காரத் தனமாக இல்லையா? நம் மீது இவளுக்கு என்ன அக்கறை? ஆபுத்திரன் மட்டும் வராதிருந்தால் அவள் என்னை விஷம் வைத்துக் கொன்றிருக்கலாம். அவளை நம்புவது நாம் மோசம் போவதற்குச் சமம்" என்றான்.

"தலைவரே, அவள் கூற்றை விடுங்கள். எனக்கே அப்படியொரு சந்தேகம் வருகிறது."

"ஆபுத்திரனை நம்ப வேண்டாம் என்றா?"

"ஆமாம்."

"உன்னைப் போல பத்து பேரைக் கேட்டால் அவர்களும் உன்னைப் போலவே சொன்னால் நான் எப்படி காரியமாற்றுவது? ஆலோசனைகளை விரும்பாதவன் நான் என்பது உனக்குத் தெரியாதா?"

"நான் இதை ஆலோசனையாகக் கூறவில்லை. என் சந்தேகத்தைச் சொல்கிறேன். அவ்வளவு தான். நமக்குச் சிறிதும் அறிமுகமில்லாத சேரநாட்டு வாலிபன் நம்மோடு சேருவதும், நமது முயற்சிகளை தடுத்து விட்டு அபாயகரமான



திட்டங்களைப் போடுவதும், உங்களுக்குக் கொஞ்சம் கூட சந்தேகத்தைத் தரவில்லையா?"

"டாரியஸ், எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டாகி விட்டது. இனி மேல் என்ன செய்ய முடியும்?"

"நீங்கள் தான் யோசிக்க வேண்டும்."

"இதென்ன புதுக்குழப்பம்?" என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு சிந்தனையில் இறங்கினான் டெமிகோஸ்.

அந்த நிலையில் ஆபுத்திரன் வில்லவனோடும் பத்து வீரர்களோடும் அங்கு வந்து சேர்ந்தான். அங்கிருந்து சுடற்புரத்தைப் பார்த்து விட்டு "ஏற்பாடுகள் பிரமாதம் டெமிகோஸ். இவ்வளவு சீக்கிரத்தில் அனைத்து ஏற்பாடுகளையும் செய்திருக்கும் உன்னைப் பாராட்டுகிறேன். எப்போது நாம் புறப்படலாம்?" என்று கேட்டான்.

"மன்னரைப் போய் பார்த்தாகி விட்டதா? என்ன சொன்னார்?" என்று கேட்டான் டெமிகோஸ்.

"அவர் சொல்ல என்ன இருக்கிறது? பேசும் விதத்தில் தான் பேசிவிட்டேனே?"

"பவானியை என்ன செய்யலாம்?"

"அவள் பிறந்த இலங்கையிலேயே கொண்டு போய் விட்டு விடலாம்."

"அவளுக்கும் உங்களுக்கும் எவ்வளவு காலமாகப் பழக்கம்?"

ஆபுத்திரனுக்கு டெமிகோஸின் பேச்சும் போக்கும் பிடிபடவில்லை. "டெமிகோஸ், எதற்கு இந்த தேவையில்லாத கேள்விகளையெல்லாம் கேட்கிறாய்?" என்று கேட்டான்.

எண்ணாவிக் கொண்டும் தனக்கு முடிவு நெருங்குவதைக் கண்டும் பெரிதும் கலங்கிய அவன், கதறினான் "என்னை மன்னித்து விடுங்கள் ஆபுத்திரரே. உங்களை முழுமையாக நம்புகிறேன். இப்போதே படையெடுப்பைத் துவங்கலாம். இது சத்தியம்." என்று அவன் கூக்குரலிட்டதும், ஆபுத்திரன் சங்கை எடுத்து இருமுறை விட்டு விட்டு ஒலித்ததும் துறைமுகப் பகுதி கொஞ்சம் கொஞ்சமாக அமைதிக்குத் திரும்பியது. ஒரு மரக்கலம் முழுவதுமாக எரிந்து மூழ்கி விட்டதால் மற்ற மரக்கலங்களில் உண்டாகியிருந்த தீ உடனடியாக அணைக்கப்பட்டது.

டெமிகோஸையும் டாரியஸையும் கட்டுக்களிலிருந்து விடுவித்தான் ஆபுத்திரன். விடுபட்டு எழுந்ததுமே டெமிகோஸ் வெகு வேகமாகத் தன் உடைவாளை உருவி டாரியஸின் தலையை வெட்டி வீழ்த்தினான். "முட்டாளே, உன்னால் எவ்வளவு நஷ்டம் பார்!" என்று சொல்லிக் கொண்டே ஆபுத்திரனிடம் "கடைசி நேரத்தில் நான் முட்டாளாகிவிட்டேன் ஆபுத்திரரே. இனி அப்படி நடக்காது." என்றான்.

"டெமிகோஸ், இப்போதும் சொல்கிறேன். இலங்கை படையெடுப்பில் உனக்கு விருப்பமில்லை என்றால் இப்போதாவது சொல்லிவிடு. என் பழையத் திட்டப்படி புகார் சோழரின் உதவிக் கரமாகவும் உன் எதிரியாகவும் மாறி, உங்களை அழிக்கும் கடமையில் இறங்குகிறேன். மீண்டும் மீண்டும் யாருடைய பேச்சையாவது கேட்டு என்னைச் சீண்டிப் பார்க்கும் வேலையை மட்டும் செய்யாதே. அவ்வாறு செய்தால் நான் எத்தனை அபாயகரமானவன் என்பதை உணர்ந்து கொண்டிருப்பாய்."



"அப்படியெல்லாம் இல்லை ஆபுத்திரரே. நீங்கள் கூறியபடி துறைமுகத்திலிருந்த சோழர் மரக்கலங்களை அகற்றி எனது மரக்கலங்களை வரவழிக்கவில்லையா? நான் திடமாகத் தான் இருந்தேன். திடீரென இந்த முட்டாள்..."

"அது போகட்டும் டெமிகோஸ். உன்னுடைய ஒரு மரக்கலத்தை எரித்து விட்டதற்காக வருந்துகிறேன். மூழ்கிவிட்ட அக்கப்பலை அகற்றி விட்டு மற்றொரு கப்பலை அங்கே நிறுத்துவோம். வா. இன்றிரவு மரக்கலத்திலேயே நாம் விருந்துண்டு விட்டு இன்றிரவே புறப்படுவோம்."

அதற்குப் பிறகு ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்றன. இரவில் மரக்கலத்தில் விருந்தும் நடந்து முடிந்து அனைவரும் சுமுகமான நிலையில், எட்டு மரக்கலங்கள் இலங்கையை நோக்கிப் புறப்பட்டன.

ஏறக்குறைய பொழுது விடியும் நேரத்தில் இலங்கையின் சமீபத்தை அவர்கள் அடைந்த போது "டெமிகோஸ், தமிழகத்திலிருந்து வரும் மரக்கலங்கள் பெரும்பாலும் இலங்கையின் வடக்குப் பகுதியிலேயே சென்று நங்கூரமிடுவது வழக்கம். இலங்கையினரும் அதைத் தான் எதிர் பார்ப்பார்கள். நாம் அப்படிச் செய்ய வேண்டாம். இலங்கையின் வடபகுதியை விட்டு விலகி கிழக்கில் சென்று திரிகோணமலைப் பகுதியை அடைவோம். அங்கே போர்க்கலங்கள் இருக்காது. அங்கே நமது கப்பல்களை நிறுத்தி வீரர்களை ஆயுதங்களுடன் இறங்கச் செய்து மலைப்பகுதி வழியாக முன்னேறினால் ஒரே நாளில் தலைநகர் அனுராத புரத்தை அடையலாம். அங்கே திடீர் தாக்குதல் செய்வது பற்றி நான் பிறகு சொல்கிறேன். அதுவரை தொலைநோக்கு

கலங்களாடி ஏதும் ஏதாவது மரக்கலம் தென்படுகிறதா என்று பார்ப்போம்." என்றான் ஆபுத்திரன்.

மரக்கலம் எதுவும் தென்படாததால் டெமிதோஸின் எட்டு கப்பல்களும் திரிகோணமலைப் பகுதியை அடைந்தன. துறைமுகப் பகுதி ஆளரவமற்றுக் கிடந்தது. உயர்ந்த மலைத்தொடர்களுக்கிடையே குகையைப் போல் அமைந்திருந்த துறைமுகப் பகுதியில் எட்டு கப்பல்களும் நான்கு நான்காக இருபக்கங்களிலும் சென்று நங்கூரமிட்டன.

அடுத்த நிமிடம் உண்டாயிற்று பிரளயம்.

டெமிதோஸ் தான் ஏமாற்றப்பட்டு விட்டதை உணர்ந்தான்.







# அத்தியாயம் முப்பத்தேழு



## அனுராதபுரம்

கிரேக்கத் தளபதி டெமிதோஸின் தலைமையில் வந்த எட்டு மரக்கலங்கள் தாங்கள் எதிர்பார்த்தபடி திரிகோணமலைத் துறைமுகம் காலியாகவும் ஆள்அரவமில்லாமலும் அமைதியாக இருந்ததால், சந்துஷ்டியுடன் உள்ளே நுழைந்து இரண்டு பக்கங்களிலும் நான்கு நான்கு கப்பல்களாக நங்கூரமிட்டதும் பெரிதாகப் பேரிகையொலி ஒன்று மலைப் பக்கத்திலிருந்து எழுந்தது. அதையடுத்து கணக்கற்ற எரியம்புகள் மலைக்காடுகளிலிருந்து மரக்கலங்களில் வந்து விழுந்தன. அது மட்டுமின்றி பெருங் கூச்சலை எழுப்பியபடி ஏராளமான வீரர்கள் மலைகளிலிருந்து இறங்கி மரக்கலங்களை நோக்கிப் பாய்ந்தார்கள். மரக்கலங்கள் ஆங்காங்கே பற்றி எரியத் தொடங்கின.

எதிர்பாராத சூழ்ச்சி ஏதோ நடைபெறுகிறது என்பதை உணர்ந்து கொண்ட டெமிகோஸ் அது பற்றிப் பேசத் திரும்பிய போது அங்கே ஆபுத்திரனைக் காணவில்லை. உடனே கொம்பொன்றை எடுத்து பெரிதாக ஊதிய டெமிகோஸ், "ஏமாந்து விட்டோம். நங்கூரத்தை எடுத்து விட்டு வெளியேறுங்கள் சீக்கிரம்" என்று இரைந்து கூறினான். மரக்கலங்கள் நங்கூரத்தைத் தூக்கி விட்டு துறைமுகத்தை விட்டு வெளியேற முற்பட்ட போது துறைமுகத்திற்கு வெளியே கடலில் ஆறு சிங்கள மரக்கலங்கள் வந்து கொண்டிருந்தன. அவற்றிலிருந்து தீயம்புகளும் வாணங்களும் பாய்ந்து வந்தன. இப்படி துறைமுகத்திற்குள் இருக்கவும் முடியாமல் வெளியேறவும் முடியாமல் டெமிகோஸின் மரக்கலங்கள் தவித்தன. அவற்றின் தவிப்பைப் பற்றி கவலைப் படாமல் இருபுறங்களிலிருந்தும் தீயம்பு தாக்குதல்கள் தீவிரமாயின. அப்போது ஆபுத்திரனின் குரல் எங்கிருந்தோ ஒலித்தது.

"டெமிகோஸ் சரணடைந்து விடு. இல்லையென்றால் நீயும் உன் வீரர்களும் மரக்கலங்களும் அழிக்கப்படுவீர்கள்"

ஆபுத்திரனின் குரலைக் கேட்டு ஆத்திரமடைந்த டெமிகோஸ், "ஆபுத்திரா, இது தான் தர்மமா? நண்பனைப் போல நடித்து துரோகம் செய்கிறாயே இது முறையானது தானா?" என்று இரைந்தான்.

அப்போது பத்து வீரர்களுடன் மரக்கலத்தில் தோன்றிய ஆபுத்திரன் "டெமிகோஸ், புகாரின் மருவூர் பாக்கத்தைப் பிடித்துக் கொண்டு புகாரின் வருமானத்தையெல்லாம் அபகரித்து வந்தாயே அது தர்மமா? புகார் கோட்டையையும் பிடிக்க இயந்திரத் தூண்களைக் கட்டி வருகிறாயே அது முறையா? அநீதியான உடன்படிக்கையைப் போட்டுச்



கொண்டு சோழமன்னனை ஏமாற்றியவன் நீ. உன்னை ஏமாற்றுவது தவறல்ல. என்னைப் பற்றி உனக்கு நன்றாகத் தெரியும். உன்னை அழிப்பது இப்போதைய நிலையில் பெரிய வேலையல்ல. பேசாமல் சரணடைந்து விடு. கொஞ்சகாலம் நீயும் உன் வீரர்களும் இலங்கையில் அடிமைகளாக இருங்கள். மருவூர் பாக்கத்தில் நீ அடிமைகளாக வைத்திருக்கும் சிங்கள வீரர்கள் இங்கு வந்து சேரட்டும். சமாதானத் தூதரை அனுப்பு. சீக்கிரம்" என்றான்.

டெமிகோஸ் பெரும் வீரனானாலும் போர் என்றும் பூசல் என்றும் வரும் போது எந்த விதமான தந்திரமாக இருந்தாலும் கடைபிடிக்கக் கூடியவனாகவே இருந்தான். லாபம் கிடைக்கும் பட்சத்தில் குறுக்கு வழிகளைக் கையாளவும் அவன் பின் வாங்குவதில்லை. எனவே தற்போது வீரம் என்ற பெயரில் உயிரை விடுவதைவிட சரணடைந்து பிறகு வாய்ப்பு வரும் போது இந்த இழப்பிற்குப் பழிவாங்கிக் கொள்ளலாம் என்று முடிவு செய்து சமாதானதூதரை அனுப்பினான். அதையடுத்து மலைக்காடுகளிலிருந்து வந்த சிங்கள வீரர்கள் மரக்கலங்களில் காணப் பட்ட தீயை அணைக்கவும் யவன வீரர்களை சிறைபிடிக்கவும் தொடங்கினார்கள். சிறைப் பட்ட யவன வீரர்களின் கைகள் கட்டப் பட்டு மலைப் பாதை வழியாக தலைநகருக்குக் கொண்டு போகப் பட்டார்கள். மரக்கலத்தில் கொண்டு வந்திருந்த தனது புரவிகளில் ஏறி அனுராதபுரத்திற்குச் சென்றார்கள் ஆபுத்திரனும் விலைமதியும்.



ஆபுத்திரனை மிகவும் நல்லமுறையில் வரவேற்று உபசரித்த இலங்கை மன்னனான கயவாகு, அவனுக்கு நன்றி

தெரிவித்தபோது, "மன்னவா, இது தவறு. நான் செய்தது என் கடமையை. அதுவும் தங்கள் நண்பரும் என் தெய்வமுமான சேரமாமன்னர் நிறைவேற்றச் சொன்ன ஆணையை நிறைவேற்றினேன். புகாரின் நிலைமை எதிர் பாராதது. எனவே தான் நானாக ஒரு திட்டமிட்டேன், யவனர்களை துரத்தவும் உங்கள் நாட்டு வீரர்களை மீட்கவும். அதற்காக சோழமன்னர் மூலம் தங்களுக்கு ஓலையனுப்பச் சொன்னேன். அந்த ஓலையில் கண்டுள்ள படி தாங்கள் எல்லா ஏற்பாடுகளையும் செய்தீர்கள். திட்டம் வெற்றிகரமாக முடிந்தது. அதற்கு நான் தான் நன்றி சொல்ல வேண்டும். இந்த வெற்றிச் செய்தி சோழ மன்னருக்குச் சென்றால் அங்குள்ள மரக்கலங்களில் சிங்கள வீரர்களை அனுப்பி வைப்பார்," என்றான் ஆபுத்திரன்.

அன்றிரவு கலைநிகழ்ச்சிக்கும் விருந்திற்கும் ஏற்பாடு செய்து அதில் கலந்து கொள்ள கௌரவ விருந்தினராக அழைக்கப் பட்ட காரணத்தால், அதில் கலந்து கொண்டான் ஆபுத்திரன். நிகழ்ச்சியில் மன்னர் தன் குடும்பத்துடன் கலந்து கொண்டார். ராஜாங்கப் பிரதானிகளும் அநுராத புரத்து பிரமுகர்களும் கணிசமான மக்களும் கூட கலந்து கொண்டார்கள். அதில் ஆரம்பகட்டமாக, மன்னர் எழுந்து ஆபுத்திரன் பூம்புகாரில் இருந்த இலங்கை வீரர்களை மீட்க பயன்படுத்திய ஆபத்தான சாமர்த்தியம் பற்றியும் அதில் வெற்றி கண்டது பற்றியும் பாராட்டிப் பேசி நன்றி தெரிவித்து, அவனது கடமையுணர்ச்சியையும் மனஉறுதியையும் அங்கிருந்த அனைவரும் உணரும் படிச் செய்தார்.

"சேரமன்னர்- என் ஆருயிர் நண்பர் செங்குட்டுவரால் சோழ நாட்டில் இருக்கும் நமது பன்னிராயிரம் வீரர்களை



அனுப்பி வைக்கும் படி சோழ மன்னரிடம் வலியுறுத்திச் சொல்வதற்கு மட்டுமே அனுப்பப் பட்டவர் தான், ஆபுத்திரர். ஆனால் அவர் பூம்புகாரை அடைந்தபோது விபரீதமான நிலை உண்டாகியிருந்தது. புகார் துறைமுகத்தை கைப்பற்றியிருந்த யவனர்கள், நமது நாட்டு வீரர்களை அடிமைகளாகப் பயன்படுத்தி வந்தார்கள். இது சோழருக்கும் யவனருக்கும் உள்ள பிரச்சனை. நாமாக இருந்தால் அப்படித் தான் எண்ணியிருப்போம். அப்படி எண்ணி திரும்பியும் இருப்போம். ஆபுத்திரர் அந்த விபரீதத்தைக் கண்ட பிறகு வாளாயிருக்க விரும்பவில்லை. அப்பிரச்சனையை எந்த வகையிலாவது தீர்த்து நமது வீரர்களை மீட்பது என்று உறுதிபூண்டார். தான் மேற்கொள்ளவிருந்த நடவடிக்கைக்குச் சேரமன்னரின் ஆணையை எதிர் பார்க்கவில்லை. சேரமன்னரின் அனுமதி அவசியம் என்றாலும், அவசரம் கருதியும் சேரமன்னரின் உள்ளத்தை நன்றாக அறிந்திருந்ததாலும் தனது முயற்சியைத் துணிச்சலோடு மேற்கொண்டு அதில் வெற்றியும் கொண்டார். உண்மையான சீடன், குருவின் ஆணையில்லாமலேயே அவரது உள்ளத்தை உணர்ந்து செயலாற்றுவான். அத்தகைய உத்தம சீடனே இச்சேர நாட்டு ஆபுத்திரன். இன்னும் சில தினங்களில் இலங்கை வீரர்கள் நம் நாட்டிற்குத் திரும்பி விடுவார்கள். அந்த மகிழ்ச்சியை நமக்கெல்லாம் அளித்த அந்த வீரனுக்கு அனைவரும் தங்கள் கைகளைத் தட்டி என் பாராட்டை அங்கீகரிக்கும் படிக் கேட்டுக் கொள்கிறேன்" என்று இலங்கை மன்னர் பேசியபோது கைதட்டல்கள் வானத்தை தொட்டன.

"நான் செய்தது என் கடமையை மட்டுமே தான். அதற்கு இலங்கை மன்னர் காட்டும் நன்றி மிகவும் அதிகம். அந்த அளவிற்கு நான் அருகதையற்றவன். இருப்பினும் உங்கள்

நடனம்



அனைவருக்கும் சேரமன்னர் சார்பில என் பணிவான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றான் ஆபுத்திரன்.

அதையடுத்து இலங்கையின் பாரம்பரிய நடன நிகழ்ச்சி நடைபெற்றது. இணையற்ற அந்த அரிய நடனத்தை ஆபுத்திரன் மிகவும் ரசித்து மகிழ்ந்தான். நடனம் முடிந்த பின் அறுசுவை உணவு அனைவருக்கும் படைக்கப்பட்டது. ஆபுத்திரனுக்கு அழகான வெள்ளை மயிலொன்றும் பரிசுக்குத் தரப்பட்டது.



இரவு நன்றாக முற்றி விட்ட நேரம். இலங்கை மன்னரும் ஆபுத்திரனும் அரண்மனையின் மேல் விதானத்தில் உலவிக் கொண்டே பேசினார்கள். அவர்களைத் தாலாட்டுவது போல் வீசிய காற்றில் மணமும் கலந்து வீசவே "அது என்ன?" என்பது போல் கேட்டான் ஆபுத்திரன்.

"அனுராதபுரம் முழுவதும் அகில் மரங்கள் நிறைந்து வளர்ந்திருக்கின்றன ஆபுத்திரா. இம்மரங்களின் கிளைகளை வெட்டி, உலர்த்திப் பொடி செய்து, தூபம் போடும் தொழிலாளர்கள் நாள் முழுதும் தொழில் செய்வதால் இங்கே அகில் மணம் எப்போதும் வீசும்." என்றார் மன்னர்.

"தங்கள் இருப்பிடமும் தங்களைப் போலவே இனிமையாக இருக்கிறது மன்னவா" - ஆபுத்திரன் கூறிய போது "என் நண்பன் செங்குட்டுவனுக்கு உன் போன்ற ஒரு ரசிகன் கிடைத்தது அவனுக்கு மட்டுமின்றி எனக்கும் மகிழ்ச்சி" என்று சொன்ன மன்னர் சிறிது நேரம் வரை மௌனமாய் இருந்து விட்டு "தமிழ் மன்னர்களைப் பற்றி நான் தவறாகப் பேசுவதாக

எனவெனில் விடாதே ஆபுத்திரா. இதை எதுவாக சொல்கிறேன் என்றால் இங்கே படையெடுத்த சோழ மன்னர் பன்னீராயிரம் வீரர்களை சிறை செய்து கொண்டு போனது நாகரீகமான செயலா? கைது செய்து சோழ நாட்டிற்குக் கொண்டு போகப் பட்ட அந்த வீரர்கள் என்ன பாடுபட்டிருப்பார்கள்? அவர்களது குடும்பம் எப்படி வாடிப் போயிருக்கும்? இமயம் வரை சென்று வெற்றி வாகை சூடிய பெருவேந்தருக்கு இந்தச் சிறுமை ஏன்?" என்று கேட்டார்.

"மன்னவா, போர் என்று வந்து விட்டாலே வீரர்கள் மரணமடைவதும் அவர்களைச் சேர்ந்தவர்கள் துக்கப் படுவதும் இயற்கை தானே?"

"போர் என்பது அரசர் செயல். கொல்லப் போனால் அது இயற்கை நீதி. அச்செயலின் விளைவு மரணமென்றாலும் அது ஏற்கக் கூடியது தான். ஆனால் நான் சொல்வது அதல்ல."

"மன்னவா, தாங்கள் சொல்வதும் போர் விளைவுகளில் ஒன்று தானே! இன்னொரு நாட்டை வெற்றி கொள்ளும் அரசன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை யார் நிர்ணயிப்பது? வெற்றி பெற்ற அரசர் தானே? தமிழகப் போர்கள் சிலவற்றின் முடிவில் வெற்றி பெற்ற மன்னர் ஊர்களை கொளுத்தி, நீர்நிலைகளைத் தூர்த்து, பயிர் பச்சைகளை அழித்து மீண்டும் அங்கே பயிர் முளைக்காத படி செய்து விட்டு வந்திருக்கிறார்கள். இச்செயல்கள் எல்லாமே வெற்றி வேந்தரது வீரச் செயல்களாகத் தானே இலக்கியங்கள் புகழ்கின்றன? மன்னவா, வட பாரதத்தை ஆண்ட மௌரியப் பேரரசர் அசோகர் கலிங்கப் போரில் லட்சக் கணக்கில் வீரர்களைக் கொன்றார். லட்சக் கணக்கில் வீரர்களை அடிமையாகக் கொண்டார். இச்செயல்களைப் பின்னால்



அவரே பாறைகளில் கல்வெட்டுகளாகப் பதிவு செய்து இன்றைக்கும் நாம் காணக் கூடிய காட்சிகளாக அமைத்திருக்கிறார். தனது செயல்கள் அநாகரீகமானவை என்று அவர் கருதியிருந்தால் அவற்றை காலப்பெட்டகமாகப் பதிவு செய்திருப்பாரா பாறைத் தூண்களில்? தங்கள் இலங்கையையே எடுத்துக் கொள்ளுங்கள். மகா வம்சம் என்று சிறப்பாகக் கூறப்படும் இலங்கை ராஜவம்சத்தைப் பற்றித் தங்களுக்குத் தெரியாதது அல்ல. எத்தனை பேர் அரச மரபுப் படி அரியணை ஏறியிருக்கிறார்கள்? தந்தைக் கொன்ற மகன், சகோதரனைக் கொலை செய்த சகோதரன், அரசனை வீழ்த்திய நண்பன் என்று சதிய வழியை விட்டு விட்டு கொலை வெறியோடும் ரத்தக் கறையோடும் அரியணை ஏறிய இலங்கை மன்னர்களின் செயல் நாகரீகமானதா? இத்தனைக்கும் இமயத்தை வென்ற சோழ மாமன்னர் கரிகாலர் போரில் உங்கள் நாட்டைத் தோற்கடித்த கையோடு உங்கள் வீரர்களையெல்லாம் வெட்டிப் போட்டிருக்கலாம். அல்லது சோழ நாட்டிற்குக் கொண்டு சென்று சிறைகளில் அடைத்துச் சித்ரவதை செய்திருக்கலாம். ஆனால் அவர் செய்தது என்ன? இங்கிருந்து கொண்டு போன பன்னீராயிரம் வீரர்களைச் சோழநாட்டிற்குக் காலம் காலமாகப் பயன் தரக் கூடிய கல்லணையைக் கட்டுவதற்குப் பயன் படுத்தினார். அக்கல்லணையையும் அதன் சிறப்பையும் நீங்கள் பார்க்கலாம். பல நூற்றாண்டுகள் வரை எதிர்கால மக்களும் அதைப் பார்க்கலாம். அப்படி பல காலம் பேர் சொல்லும் பேரணையைக் கட்டவே உங்கள் நாட்டு வீரர்கள் பயன்படுத்தப் பட்டிருக்கலாம். கல்லணையில் இலங்கை வீரர்களின் வியர்வை கலந்திருப்பதை நீங்கள் உணரவில்லையா? அவ்வாறு உணர்வது உங்களுக்குப்

பெருமையாய இலங்கையர்! மன்னவா, கரிகாலர் வமிசத்தில் தோன்றிய இணையற்ற மன்னர்களில் ஒருவர். அவர் இலங்கை வீரர்களுக்குப் பெருமையைத் தேடித் தந்திருக்கிறாரே தவிர சிறுமையை அல்ல. சிறுமையைச் செய்தது அந்தப் பாதகனான யவன நாட்டுத் தளபதி டெமிதோஸ். உங்கள் வீரர்களை அடிமைகளாக சிறுமை படுத்தியதற்கான தண்டனையை இனி அவன் இங்கே அனுபவிப்பான். உங்கள் வீரர்களை இலங்கைக்குத் திருப்பியனுப்பி விடுவது தான் கரிகாலரின் நோக்கம். ஆனால் கல்லணை கட்டி முடிக்கப் பட்டதும் அவர் மரணமடைந்தார். அதற்குப் பின் சோழநாட்டில் ஏற்பட்ட பலவிதமான சிக்கல்களால் வீரர்களைத் திருப்பியனுப்பும் முயற்சி தாமதமாகி விட்டது."

"அருமையாகப் பேசி என் வாயை அடைத்து விட்டாய் ஆபுத்திரா. பேச்சிலும் நீ வீரன் தான். சேர மன்னர் மட்டும் உன் மூலம் இந்த முயற்சியை எடுக்காமல் விட்டிருந்தால் நான் சோழநாட்டின் மீது நிச்சயமாகப் படையெடுத்திருப்பேன். சோழநாட்டை அழிவிலிருந்து காப்பாற்றிய பெருமை உன்னையே சேரும். உனக்குத் தெரியுமா ஆபுத்திரா, எனது தந்தையான திஸ்ஸர் பதினான்கு வயதில் அரியணையேறினார். அவர் மிகவும் அழகு வாய்த்தவர். வெறும் அழகு அல்ல. பேரழகு என்று பெண்களே சொல்வார்கள். அவரைச் சுற்றிப் பேரழகிகள் பலர் வந்து கொண்டிருப்பார்கள். அவரோ யாரையும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அழகை ஒரு பொருட்டாக நினைக்காத ஒரு பெண்ணையே அவர் மணந்து கொள்ள விரும்பினார். ரோகண நாட்டில் ஒருமுறை தன் பெற்றோருடன் சுற்றுலா சென்றாராம். ரோகண நாடு என்பது இலங்கையின் தெற்குப் பகுதி. வனவளமும் நீர்வளமும் மிகுந்த



இயற்கை கொஞ்சும் பகுதி அது. அந்த இயற்கை எழிலில் தன்னை மறந்து அங்கேயே பலகாலம் தங்கி விட்டார் அவர். ராஜ்ஜியத்தைப் பற்றிய எண்ணமே அவருக்கு இல்லை. அந்த சமயத்தில் தான் கரிகாலரின் படையெடுப்பு நடந்தது. மன்னர் இல்லாத சமயம். அவர் ரோகண நாட்டில் எந்த மூலையில் இருக்கிறார் என்பது கூட தெரியாத நிலை. சேனாதிபதிகள் வேறு வழியின்றி சோழர் தாக்குதலை எதிர் கொண்டு தாக்கு பிடிக்க முடியாமல் தோற்றார்கள். இது நடந்து ஆறு மாதங்கள் கழித்துத் தான் அனுராதபுரத்திற்குத் திரும்பினார் திஸ்ஸர். சோழர் படை வந்தது முதல் வென்று மீண்டது வரை அனைத்து விவரங்களும் அவருக்கு எடுத்துரைக்கப் பட்டன. அவரோ அதில் ஈடுபாட்டைக் காட்டவில்லை. எதையோ பறிகொடுத்தவர் போல் காணப்பட்டார். சரியாக ஊண் உண்பதில்லை. யாரிடமும் அதிகமாகப் பேசுவதுமில்லை. இந்நிலையில் ஒரு நாள் அவரிடம் தந்தையைப் போல் பழகி வந்த அமைச்சர் வீரசேனர், அவரிடம் பேச்சு கொடுத்தார். அப்போது தான் உண்மை தெரிந்தது. ரோகண நாட்டில் உழவர் குலப் பெண்மணி ஒருத்தி தனது அழகை உதாசீனப் படுத்திப் பேசியதாகவும், தான் விரும்பிய இலட்சியப் பெண் அவள் தான் என்றும் கருதிய திஸ்ஸர் அவளை மணம் செய்து கொள்ள விரும்பிய போது அவரது விருப்பத்தை ஏற்க அவள் மறுத்து விட்டாளாம். பலநாட்கள் அங்கேயே தங்கி மீண்டும் மீண்டும் அவளை வற்புறுத்தியும் அவள் இணங்காததால் மனமுடைந்து விட்டாராம்.

"மன்னா, உன் கவலையை விடு. அப்பெண்ணைத் தேடி, உன்னை மணக்கச் செய்வது என் பொறுப்பு" என்றார் அமைச்சர்.

ரோகண நாட்டில் பல நாட்கள் தங்கி அப்பெண்ணைத் தேடிப் பிடித்து அனுராதபுரத்திற்குக் கொண்டு வந்தார் அமைச்சர். அவளோ பழைய பல்லவியையே பாடினாள்.

"பெண்ணே, உன்னை மணக்க விரும்புபவர் உன்னைப் போன்ற விலாசமில் அல்ல. இலங்கையின் மன்னர். இதை நினைவில் வைத்துக் கொண்டு பேசு."

"இலங்கை நாடு மிகவும் சிறியது. இச்சிறிய நாட்டு மன்னன் எனக்கு வேண்டாம்."

"ஆனாலும் உனக்கு இத்தனை ஆணவம் இருக்கக் கூடாது பெண்ணே. வயல்களில் நாற்று நட்டு கஞ்சி பருகும் உனக்கு இலங்கை வேந்தன் போதாதா? இந்த உலகையே ஆளும் மன்னன் தான் வேண்டுமா?"

"ஐயா, இப்படியெல்லாம் பேச்சு வரும் என்று தான் முதலிலேயே நான் வேண்டாம் என்றேன். நீங்கள் என் வாயைக் கிளறுகிறீர்கள்."

"முட்டாள் பெண்ணே. இந்த அனுராதபுரத்தில் எத்தனைப் பேரழகிகள் இருக்கிறார்கள் தெரியுமா?"

"அதைப் பற்றி எனக்கென்ன?"

"கணக்கில்லாமல் இருக்கிறார்கள். மன்னனின் அழகில் மயங்கி அவரைச் சுற்றி வருகிறார்கள். மணந்து கொள்ளும் படி அரிக்கிறார்கள்."

"அவர்களில் ஒருத்தியை மன்னர் மணக்கலாமே"

"ஒருத்தியை என்ன அத்தனை பேரையுமே அவர் மணக்கலாம். இப்படி அழகிகளே பொறாமைப் படும் பேரழகு கொண்ட மன்னரை மணக்க உனக்கு ஏன் கசக்கிறது?"



"ஐயா, அழகியோ அழகானவரோ யாராக இருந்தாலும் மாண்டு போனால் மீண்டு நிற்பது சாம்பல் தான். சாம்பலை வைத்து அழகியா இல்லையா என்று கண்டு பிடிக்க முடியுமா?"

"நல்ல தத்துவம். இது மன்னருக்கும் தெரிந்திருக்கும் போலிருக்கிறது. ஆகவே தான் தன் அழகைப் பொருட்படுத்தாதவளே தனக்கு மனைவியாக வேண்டும் என்று விரும்புகிறார். நீ அவரது அழகை உதாசீனப் படுத்தி விட்டாய். உன்னை மணக்க அவர் விரும்புகிறார். இப்போது சொல். அவரை மணக்க சம்மதிக்கிறாயா?"

"ஐயா, அழகானவர் தன் அழகை உதாசீனப் படுத்தவளை விரும்புவதில் பெருமை என்ன இருக்கிறது? என்னை மணக்க விரும்பும் உங்கள் மன்னர் தன் அழகை இழக்க விரும்புவாரா?"

"பெண்ணே, உனக்குப் பாதாளச் சிறை நிச்சயம்" என்று வெறுப்போடு கூறிய அமைச்சர் திஸ்ஸனிடம் போய் பெண்ணின் திமிர்த்தனத்தை எடுத்துச் சொன்னார்.

திஸ்ஸன் ஆடிப் போய்விட்டான்.

"ஆஹா! இவள் பெண்ணல்ல அமைச்சரே. பெண் தெய்வம். அவள் கேட்ட கேள்வி ரொம்பவும் சரி. என் அழகு மீது எனக்கிருக்கும் ஆணவத்தை அவள் அழகாகச் சுட்டிக் காட்டி விட்டாள். அவள் விருப்பத்தை நான் நிறைவேற்றுகிறேன்." என்றான் திஸ்ஸன்.

ஆபுத்திரனிடம் தன் தந்தையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த இலங்கை மன்னன் சுயவாகு, "ஆபுத்திரா, அப்பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றுவதாகச் சொன்ன

அழகு சிதைந்து போனதும கழுகு மூக்கன் * என்று பெயர் வைத்து நகைத்தார்கள்."

ஆபுத்திரனின் நினைவு சேரநாட்டிற்கும் வெள்ளைத் தீவிற்கும் சென்றது. வெள்ளைத் தீவில், தனது பிறப்பு குறித்து ஒரு ரகசியம் உண்டென்றும், அதைச் சொல்வதாகவும் ஆசைகாட்டினான் பங்களன். பின்பு சேரநாட்டிற்கு வந்து விட்ட அவனது மகள் செண்பக குமாரியிடம் இது பற்றி பேசிய போது "தந்தை இது பற்றி தனக்கு முழுமையாகத் தெரியாது என்றும் கழுகு மூக்கனுக்குத் தான் தெரியும்." என்று கூறியதை நினைவு கூர்ந்த அவன் அப்படியானால் அந்தக் கழுகு மூக்கன் இவர் தானா? இறந்து விட்ட இவரிடம் என் பிறப்பு பற்றிய ரகசியம் என்ன இருக்க முடியும்? ஒருவேளை நான் அவரது மகனா! ஆகா! அப்படியிருந்தால் சிங்கள அரியணை மீது எனக்கு உரிமை உண்டா? ரகசியத்தை எப்படி அறிவது? ஒரு வேளை இது பற்றி கயவாகுவிற்கு ஏதாவது தெரியுமா? அவரது பேச்சைத் தொடர்ந்து கேட்போம். ஏதாவது சொல்கிறாரா என்று பார்ப்போம்." என்று எண்ணியவனாய் "மன்னவா, இதற்குப் பிறகும் அந்தப் பெண் மனம் மாற வில்லையா?" என்று கேட்டான்.

"மனம் மாறாமல் இருக்க முடியுமா? விஷயத்தை அறிந்ததும் பதறிக் கொண்டு வந்தாள். என் தந்தையின் முகத்தையும் பார்த்து கண்ணீர் விட்டாள். 'நான் ஆணவத்தில் பேசிவிட்டேனே தவிர இப்படியெல்லாம் நடக்கும் என்று

* கயவாகுவின் தந்தையான திஸ்ஸனுக்கு கழுகு மூக்கன் என்ற ஒரு பெயர் இருந்தது. - பக்கம் 141 பாண்டியர் வரலாறு (முதல் பாகம்) by ம. ராஜசேகர தங்கமணி



நினைக்கவில்லை. பெரும் குற்றம் செய்து விட்டேன். என்னைத் தண்டியுங்கள்.' என்று அவரது கால்களில் விழுந்து அரற்றினாள். அவளைத் தூக்கி நிறுத்திய என் தந்தை கண்களைத் துடைத்து விட்டு 'அழாதே பெண்ணே' நடந்தெல்லாம் நல்லதிற்குத் தான். இருவரது ஆணவமும் அழிந்தது. அது நல்லதிற்குத் தான். 'இப்போதாவது என்னை மணந்து கொள்ள முடியுமா?' என்று கேட்டார். 'அது என் பாக்கியம்' என்று கூறி அந்தப் பெண் என் தந்தையை மணந்து கொண்டாள். தந்தையின் உடல் தேற நான்கு ஆண்டுகள் பிடித்தன. அவர் நலமடைய அப்பெண் பல்வேறு தெய்வங்களை வேண்டினாள். பலவிதமான விரதங்களை மேற்கொண்டாள். ஐந்தாவது வருடம் அவர்களுக்கு நான் மகனாகப் பிறந்தேன். ஆபுத்திரா, இப்படிப் பட்ட இருவரைப் போல் யாராவது எங்காவது இருந்திருக்கிறார்களா? கேள்விப பட்டிருக்கிறாயா? மகா வம்சத்தில் நடந்த பல்வேறு ரத்த வெறி பிடித்த கொலைகளைப் பற்றிக் குறிப்பிட்டாயே அதே வம்சத்தில் இடம் பெற்ற இந்த உத்தமர்களைப் பற்றி என்ன சொல்கிறாய்?"

"மகாவம்சத்தில் தோன்றிய மகோன்னதமான பிறவிகள் இவர்கள் மன்னவா. அன்பு உடலைப் பற்றியதல்ல என்பதை உறுதியாக உணர்த்த இதைவிடச் சிறந்த உதாரணம் வேறு இருக்க முடியாது. இவர்களது சிறப்பை மகாவம்சம் சொல்கிறதோ இல்லையோ உயிருள்ள வரை நான் சொல்லிக் கொண்டே இருப்பேன்!"

இதைக் கேட்டதும் இலங்கை மன்னரின் முகம் பெருமிதப்பட்டது. பிறகு அவரே பேசமுற்பட்டு "நான் பிறந்த பின் அவர் தான் பிறந்ததற்கான காரணம் முடிந்து விட்டதாக

நினைத்தாரோ என்னவோ. நான் பிறந்த மறு ஆண்டே தன் உடலை விட்டார். என் தாய் மனமுடைந்து விடாமல் என் பிறப்பை அவரது வரமாக எண்ணித் தாயாகவும் தந்தையாகவும் இருந்து கண்ணும் கருத்துமாய் வளர்த்து உரிய பிராயம் வந்தவுடன் இலங்கையின் சிங்காசனத்தில் அமர்த்தினாள். எனக்குத் திருமணத்தையும் நடத்தி வைத்தாள். தந்தை செய்யக் கூடிய கடமைகளை தாயாக இருந்து நிறைவேற்றி விட்ட நிம்மதியில் அவளும் கண்களை மூடினாள். இவ்விரு தெய்வங்களையும் பற்றி நான் நினைக்காத நாள் இல்லை." என்றார்.

"இனி என்னாலும் மறக்க முடியாது மன்னவா." என்று சொன்ன ஆபுத்திரன் "கழுகு மூக்கன் என்று வேறு யாராவது இருக்கிறார்களோ?" என்று கேட்டான்.

"இருக்கிறார். அவர் தான் எனக்கு இரண்டாவது தந்தை"

"இரண்டாவது தந்தையா?"

"அது ஒரு கூத்து ஆபுத்திரா. என் தந்தைக்கு கழுகு மூக்கன் என்பது காரணப் பெயராக வந்தது. ஆனால் உண்மையிலேயே கழுகு மூக்கன் என்ற பெயரைக் கொண்ட ஒருவர்" எனக்கு அவர் தான் தந்தை என்று கூறி பிரச்சனைகளை உண்டாக்கி வருகிறார்?"

"பைத்தியக் காரத்தனமாக அல்லவா இருக்கிறது! அவரெப்படி உங்கள் தந்தையாக இருக்க முடியும்?"

"பதவி தான் அவரை அப்படி ஆக்கியிருக்கிறது."

"மன்னவா, அவர் இப்போது இருக்கிறாரா? அவரை நான் சந்திக்க முடியுமா?"



"விபரமாகத் தான் சொல்ல முடியும். நாளைக்கு வா. விபரமாக நாளை சொல்கிறேன்."



தனது இருப்பிடத்திற்கு கனத்த இதயத்தோடு திரும்பினான் ஆபுத்திரன். தனது பிறப்பு ரகசியம் - கழுகு மூக்கன் இருப்பிடம் இவை இரண்டும் அவனது சிந்தனையை ஆக்கிரமிப்பு செய்து கொண்டு பாரமாக்கியது. அதோடு கயவாகுவின் பெற்றோரது அன்பைப் பற்றிய நினைவும் அவனைப் பரவசப்படுத்தியது. இதனாலெல்லாம் சோர்வடைந்த அவன் உறங்கிப் போனான். உறக்கத்தில் அவன் ஒரு கனவு கண்டான். பூங்கொடி தனது இல்லத்தில் அமர்ந்து கொண்டு தன்னை மறந்து யாழை மீட்டிக் கொண்டிருக்கிறாள். அமிழ்தினும் இனிய யாழிசையைக் கேட்டு அங்கிருந்த மயில்கள் ஆனந்தமாக ஆடுகின்றன. திடீரென்று மயிலின் கிறீச் சென்ற சப்தம். யாழ் மீட்டுவதை நிறுத்தி விட்டு கண்களைத் திறந்து பார்க்கிறாள். ஆடிக் கொண்டிருந்த மயில்கள் பல தாவி ஓடிக்கொண்டிருந்தன. ஒரு மயில் மட்டும் ரத்தக் காயத்துடன் இறந்து கிடக்கிறது. 'ஆ' என்று அலறுகிறாள் அவள். அப்போது நான்கைந்து அரக்கர்கள் தோன்றுகிறார்கள். அவளது வாயைப் பொத்தி தாம் வந்த புஷ்பக விமானத்தில் ஏற்றி ஆகாய மார்க்கமாகச் செய்கிறார்கள். சேர நாட்டின் மேலே பறக்கும் விமானத்தில் தானிருப்பதை உணர்ந்த அவள் பதறுகிறாள். 'சேர நாடே என்னைக் காப்பாற்ற மாட்டாயா? சேர மன்னவா, என்னைக் காப்பாற்ற மாட்டீர்களா? என் அன்பரே, என்னை மீட்க மாட்டீர்களா?' என்று கதறியபடி மயக்க மடைகிறாள். கண்

விழிக்கும் போது தானோர் பாலைவனத்தில் இருப்பதை உணர்கிறான். தொண்டை வற்றிக் கிடக்கிறது. 'தண்ணீர் தண்ணீர்' என்று கத்தியபடி ஓடுகிறான். பெரும் பள்ளம் ஒன்றில் கால் தடுமாறி விழுகிறான். அவன் மீது பாலைவனத்து மணல் விழுந்து மூடி விடுகிறது.

இந்த நிலையில் கனவு கலைந்து எழுந்தான் ஆபுத்திரன். பொழுது விடிந்திருந்தது. கனவு கெட்டதாக இருந்தாலும் அது பூங்கொடியை நினைவூட்டிய காரணத்தால் அவளது நிலை என்னவாக இருக்கும் என்று எண்ணிப் பார்த்தான். குட்டுவனின் தொல்லைகளிலிருந்து மன்னர் அவளை மீட்டிருப்பார் என்று அவன் நம்பினாலும் ஏதோ ஓர் இனம் புரியாத உணர்ச்சி அவனை அச்சப்பட வைத்தது. ஒருவேளை அரச காரியங்கள் காரணமாக மன்னர் மறந்து விட்டிருந்தால் அவளது கதி என்னவாகும்? அதை எண்ணிய போதே அம்மாவீரனின் கண்கள் கலங்கின. சுயநலமில்லாத அன்பைத் தவிர ஏதுமறியாத அப்பேதைப் பெண்ணிற்கு நிம்மதி இல்லாமல் போனால் அதைவிடக் கொடிய நிலைமை வேறு இருக்க முடியாது என்று கருதிய அவன் அவளைத் தனிமையில் விட்டு விட்டு வந்ததற்காகத் தன்னை நொந்து கொள்ளவும் செய்தான். சேர நாடு சென்றதும் முதல் வேலையாக அவளை மணந்து கொண்டு அவளுக்கு மகிழ்ச்சியும் நிம்மதியும் அளிக்க வேண்டும் என்று அவனது மனம் தீர்மானித்தது.

சேரநாட்டிற்குத் திரும்புவதில் சற்று காலதாமதம் ஆகும் என்று தோன்றியதால் அதற்கிடையில் அவளுக்கு ஓர் ஓலை எழுதினால் என்ன என்று நினைத்தான். இலங்கையிலிருந்து சேரநாட்டிற்குச் செல்லும் அவசரத் தூதுவர் மூலம் ஓலையை



அனுப்பினால் விரைவில் போய்ச் சேர்ந்து விடும் என்பதையும் அது பூங்கொடிக்குப் பெரும் ஆறுதலாக அமையும் என்றும் கருதி உடனடியாக எழுதவும் முற்பட்டான்.

"அமிழ்தினும் இனிய என் பூங்கொடி -

நான் கவித்திறத்தோடு கூடிய எழுத்தாளன் உன் தந்தையைப் போல, புலவனில்லை.

எழுதுகோலுக்கும் எழுத்துக்கும் சம்மந்தமற்ற என்னை உனக்கு எழுதத் தூண்டுகிறது என்றால், அதற்குக் காரணம் உன் நிர்மலமான முகமும் நிறைவான அன்பும் தான்.

இத்தனை நாட்களாக உன்னை மறந்திருந்தேன் என்ற உண்மையைச் சொல்வதற்காக நீ என்னை மன்னிக்க வேண்டும்.

இன்று அதிகாலையில் உன்னைப் பற்றிக் கண்ட கனவு தான் உன் நினைவை என்னிடம் இழுத்து வந்தது.

அக்கனவு கெட்டதானாலும் அதற்குத் தான் நீ நன்றி சொல்ல வேண்டும்.

உன்னைப் பற்றிய நினைவு வந்து விட்டால், உன் நிலையைப் பற்றிய கவலை இயற்கையாகவே வந்து விடுகிறது.

மாமன்னர் உன்னைக் குட்டுவனிடமிருந்து காப்பாற்றியிருப்பார் என்ற நம்பிக்கை எனக்கிருந்தாலும், அந்த நம்பிக்கையின் நிழலிலேயே ஓர் அச்சம் உண்டாகியிருப்பதை என்னால் மறுக்க முடியவில்லை.

காதலைப் பற்றிய கவலையை விட காதலியைப் பற்றிய கவலை கனமானது. இதயத்தை அதிகமாக நோகடிக்கக் கூடியது.

சதுரியச் செடியில் மலர்ந்த வாடாத மலர் நீ.

சுயநலச் சூழலைச் சுட்டெரிக்கும் நெருப்பு நீ.

அன்பினால் மட்டுமே அடையாளத்தைச் சொல்லும் அணையாத தீபம் நீ.

பூங்கொடி -

நான் சேரநாடு திரும்பியதும் -

உன்னைக் [illegible] சேர்வேன்.

இக்கடிதம் உனக்குப் பெரிய அளவில் ஆனந்தத்தைத் தராது போனாலும் சிறியளவிலாவது ஆறுதலைத் தரும்.

வசந்தத்திற்காகக் காத்திரு.

வந்து விடுகிறேன்."

- ஆபுத்திரன்.

பூங்கொடிக்கு எழுதியது போலவே பரணருக்கும் ஓர் ஓலை எழுதி பூங்கொடியிடம் ஓலை நறுக்குகளைச் சேர்ப்பித்து விடும்படி வேண்டிக் கொண்டான். இரண்டு ஓலைகளையும் குழல்களில் தனித்தனியாக இட்டு அரக்கினால் மூடி தயார் செய்து கொண்டு மன்னரைச் சந்திக்கச் சென்று தனது கோரிக்கையைத் தெரிவித்த போது-

"உனக்காகவே சிறப்புத் தூதரை வஞ்சிக்கு அனுப்புகிறேன் ஆபுத்திரா. கவலை வேண்டாம்." என்றார்.

"மன்னவா. இந்த ஓலையோடு தாங்கள் பரிசளித்த வெண்மயிலையும் சேர்த்து அனுப்பினால் நலம்."

"அப்படியே ஆகட்டும்."



"மன்னவா. மயிலின் இறகுகளில் பூங்கொடி என்று வரைய முடியுமா?"

"எது வேண்டுமானாலும் செய்யலாம் வீரனே. உன் போன்ற வீரர்களுக்கு வீரத்தாய் இருக்க வேண்டும். இல்லையென்றால் அன்புக் காதலி இருக்க வேண்டும். உனக்கு காதலி இருக்கிறாள். அவள் என்னை விட பாக்கியசாலி. சேரநாடு சென்றதும் உன் மண நாளை எனக்கு தெரிவி. நானும் வருகிறேன் வஞ்சிக்கு."

"தங்கள் கருணைக்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன் மன்னவா!"

"ஆபுத்திரா. நீ கேட்ட மனிதரின் இருப்பிடம் தெரிந்து விட்டது."

"கழுகு மூக்கனின் இருப்பிடமா?"

ஆம். அவன் இந்த இலங்கைத் தீவின் உயரமான இடத்தில் இருக்கிறான் கடந்த ஒரு மாத காலமாக."

"அந்த இடம் எது?"

"சமந்த கூடம்."

"சமந்த கூடமா?"

"ஆம். ஆபுத்திரா. மிகவும் உயரமான மலைப் பிரதேசம் அது. அடர்ந்த காடுகளால் சூழப்பட்டது. மேலே செல்வதற்கு முறையான பாதைகள் கிடையாது. நடந்து தான் செல்ல வேண்டும். ஆபத்துகளுக்குப் பஞ்சமிருக்காது. அங்கே இப்போதெல்லாம் மனிதர்கள் செல்வதில்லை."

"ஏன்?"

சற்று ஓய்வெடுத்து அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். சமந்த கூட உச்சியை அடைய இரவு நேரமாகி விட்டது. அதே சமயம் ஆபுத்திரனின் கண்களில் மலைஉச்சியில் பயங்கரமான ஓர் உருவம் தென்பட்டது. அவனை நோக்கி எய்யப் பட்டது அம்பினை அவனும் கவனிக்கவில்லை. வனக்காவலர்களும் கவனிக்கவில்லை.





# அத்தியாயம் முப்பத்தொன்பது



## சமந்த கூடம்

சமந்த கூட மலையின் அடிவாரத்தில் புரவிகளைப் பத்திரப் படுத்தி விட்டு விடியற்காலை வேளையில ஆபுத்திரனும் மற்றவர்களும் தெம்போடு மலைமீது ஏறத்துவங்கினார்கள். மக்கள் நடமாட்டம் அதிகமாக இருந்த போது மலையின் உச்சிக்குச் செல்ல மண்பாதை அமைக்கப் பட்டிருந்தது. பிறகு மலை ஏறும் போது இடர்பட்ட இன்னல்களும் மலைஉச்சியில் பேய்கள் நடமாடுவதாக உண்டான வதந்திகளும், மக்களின் போக்குவரத்தைக் கணிசமாகக் குறைந்து விட்டதால், மண் பாதைகள் தூர்ந்து போயின. அதற்குப் பிறகு மலையின் மீதிருந்த புத்தர் கோயிலுக்கு ஒருசிலர் வழக்கமாகச் சென்று வந்தார்

அவர்கள் மேலே செல்லச் செல்ல பல இடங்களில் யானைக் கூட்டங்களைக் கண்டார்கள். ஓரிடத்தில் யானைக் கூட்டமொன்று மலைவாசிகள் வைத்து விட்டுப் போன உணவுப் பண்டங்களைச் சுவைத்துக் கொண்டிருந்தன. வேறோர் இடத்தில் பெரிய காட்டு யானை ஒன்றும் அதன் குட்டியும் நீரோடை ஒன்றில் நீரைப் பருகிக் கொண்டிருந்தன. இது போல் பல இடங்களில் யானைகளைக் கண்ட ஆபுத்திரன் "பார்க்குமிடமெல்லாம் யானைகளாகவே இருக்கின்றன. இதுவரை நானே 100 யானைகளைப் பார்த்திருப்பேன்." என்றான்.

அதைக் கேட்ட வனக் காவலன் "ஐயா, சேர நாட்டில் தான் யானைகள் அதிகமாக இருப்பதாகச் சொல்லப் படுகின்றன. ஆனால் அது உண்மையில்லை. இலங்கையில் தான் அவற்றின் எண்ணிக்கை அதிகம். இலங்கைத் தீவு முழுவதுமே காடுகளும் மலைகளுமாய் இருப்பதால் யானைகள் இயற்கையாகவே அதிகமாக இருக்கின்றன. இலங்கை மன்னர்கள் காட்டு யானைகளைப் பிடித்து அடக்கி பயிற்சி அளித்து யானைப் படையை அமைக்க அதிகம் ஆர்வம் காட்டாததால், காட்டு யானைகள் அச்சமின்றியும் சுதந்திரமாகவும் திரிந்து இனப்பெருக்கம் செய்ய, அவற்றின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது." என்றான்.

மேலும் அரை நாழிகை பயணத்திற்குப் பின் மலைக்குகை ஒன்று கண்ணில் பட்டது. பெரியதோர் மலையை ஆழமாகக் குடைந்திருந்த விதத்தைக் கண்டு வியந்த ஆபுத்திரன் "எதற்காக இங்கே இத்தனைப் பெரிய குகை?" என்று கேட்டான்.



"பார்க்கலாம் வாருங்கள்" என்று சொல்லி விட்டு வனக்காவலர்கள் ஏழுவர் சுளுந்துகளைக் கொளுத்திக் கொண்டு குகைக்குள் செல்ல மற்றவர்கள் பின்னே சென்றார்கள். சுளுந்து மட்டும் இல்லையென்றால் குகைக்குள் ஒரு அடி கூட முன்னேற முடியாது என்பது நிதர்சனமாக இருந்தது. சுமார் இருநூறு அடி தூரத்திற்குச் சென்ற அந்த குகை வெட்ட வெளி ஒன்றில் முடிந்தது. அங்கே பள்ளங்கள் நீளநீளமாகத் தோண்டப் பட்டு அவற்றில் மனித உருவங்கள் சிலைகளாக நிறுத்தி வைக்கப் பட்டிருந்ததைக் கண்ட ஆபுத்திரன் ஏதோ புதியதோர் உலகத்திற்கு வந்து விட்டதைப் போல் உணர்ந்தான். இப்படி நூற்றுக் கணக்கில் மனிதச் சிலைகள் கண்காணாததோர் இடத்தில் நிறுவப் பட்டிருந்ததைக் கண்டு அவன் பெரும் ஆச்சரியம் அடைந்து வனக் காவலரை வினவினான்.

"ஆதிகாலத்தில் இயக்கர் என்னும் பழங்குடி மக்கள் இலங்கையின் தெற்குப் பகுதியில் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் நாகரீகமற்றவர்களாகவும் கொடுமையான பழக்க வழக்கங்களைக் கொண்டவர்களாகவும் இருந்தார்கள். நரபலியிடும் வழக்கமும் அவர்களிடம் இருந்து வந்தது. அப்போதிருந்த இலங்கை மன்னர்கள் இயக்கர்களின் கோரங்களை தடுக்க முடியாமல் தவித்துப் பின் ஒடுக்க முற்பட்டார்கள். முறையான பயிற்சி பெற்ற வீரர்கள் இயக்கர்களை பல இடங்களில் எதிர்பாராத நேரங்களில் தாக்கி அழிக்கலானார்கள். அதில் பல்லாயிரம் இயக்கர்கள் அழியவே மீதியிருந்த பழங்குடிகள் ஓடி ஒளிந்தார்கள். படைவீரர்களின் வேட்டை முற்றிலுமாக நின்றபின் அவர்களது தாக்குதலுக்குப் பலியான பழங்குடிகளின் நினைவாக அவர்களது உருவங்களை மண்ணால் செய்து வைத்து, வாரந்தோறும் இங்கு






வந்து வழிபாடுகளை நடத்தினர். இச்சிலைகளில் மிகவும் பெரிதாக இருக்கும் சிலை, பழங்குடியினரின் மூதாதையரது உருவமாகும். சில ஆண்டுகள் வரை தலைமுறையாக வாழ்க்கை நடத்திய அவர்கள் இலங்கைக்கு புத்தர் வந்தபோது அவரிடம் தங்களை காக்கும் படி வேண்டினர். பழங்குடியினரின் கொடிய பழக்கவழக்கங்களையும் நரபலியையும் கைவிட்டால் அவர்களைக் காப்பாற்றுவதாக புத்தர் கூறியதும் பழங்குடிகள் அவ்வாறே சத்தியப் பிரமாணம் செய்தார்கள். அதையடுத்து புத்தர் இலங்கைக்கு அப்பாலிருந்த கிரித்தீவை இலங்கைக்கு அருகே தனது சித்தியினால் வரவழைத்து அதில் இயக்கர்களை குடியமர்த்தி அத்தீவை பழைய படியே உரிய இடத்திற்கு நகர்த்தினார்' * என்று வணக்காவலர்கள் கூறியதும் அந்த இடத்தையே சிறிது நேரம் பார்வையிட்டான் ஆபுத்திரன். உணவு நேரம் நெருங்கி விட்டதால் தங்களுடன் கொண்டு வந்திருந்த உணவை உண்டு சிறிது நேரம் ஓய்வெடுத்த பின் மலையேற்றத்தைத் தொடர்ந்தார்கள்.

அங்கிருந்து மேலும் அரை நாழிகை பயணிக்க நிலையில் எதிரே இருந்த ஒரு மலையில் பல்வேறு கட்டடங்களும் ஸ்தூபிகளும் இருப்பதைப் பார்த்ததும் "இது தான் சமந்த கூடமா" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"இல்லை ஐயா. இது புத்தரின் விஹாரம் கட்டப்பட்ட புனிதமான இடம். புத்தர் வான் வழியாக வந்து உபதேசம் செய்த இடங்களில் இதுவும் ஒன்று. அந்த விசேஷத்தைக் குறிக்கும் வகையில் அதற்கு ஒரு விஹாரம் கட்டப்பட்டு

* பக்கம் 283 தமிழ் நாட்டு வரலாறு தொகுப்பு நூல்கள் தொகுதி I by மயிலை. சீனி. வேங்கடசாமி.

அவரது உருவம் முதன் முதலாக பிரதிஷ்டை செய்யப் பட்டது அதையொட்டி வழிபாடுகளும் பிரச்சாரங்களும் தோன்றின ஏராளமான புத்த பிட்சுக்கள் அங்கே குடியேறி மடாலயங்களையும் குடியிருப்புகளையும் கட்டி வாழ்ந்தார்கள். என்ன காரணத்தாலோ புத்த பிட்சுக்களுக்குள் கருத்து வேறுபாடு ஏற்பட்டு அங்கிருந்த புத்தர் சிலை அகற்றப் பட்டது இப்போது வெறும் கட்டடங்கள் மட்டுமே உள்ளன. குடியிருப்பதற்கு யாருமில்லை." என்று சொன்ன வனக்காவலர்கள் "ஐயா, மாலைமயங்கும் நேரமாகி விட்டது. இங்கிருந்து இரண்டு நாழிகை பயணத்தில் சமந்த கூடம் இருக்கிறது. மலைய நாட்டின் உயர்ந்த சிகரம் தான் சமந்த கூடம். இது சமனொளி மலை என்றும் அழைக்கப்படுகிறது.* இந்த மலையின் உச்சியில் புத்தருடைய பாத அடி உள்ளதாகக் கூறப்படுகிறது. இனி மேல் நாம் பயணம் செய்ய வேண்டிய பகுதி மிகவும் ஆபத்து நிறைந்தது. வனவிலங்குகள் இப்பகுதியில் தான் அதிகம் வசிக்கின்றன. வழிகண்டு பிடித்து மேலே செல்வது மிகவும் கடினம். சுளுந்தைக் கொளுத்திக் கொண்டு அந்த வெளிச்சத்தில் தான் ஜாக்கிரதையாக முன்னேற வேண்டும்" என்று கூறி சுளுந்தைக் கொளுத்தி விட்டு சிறிது நேரம் நின்று பிரார்த்தனை செய்துக் கொண்டார்கள்.

---

* இரத்தின தீவத்து ஓங்குயிர் சமந்தத்து உச்சி மீமிசை' மணிமேகலை. அதிகாரம் 28 வரி 107-108

இலங்கா தீவத்துச் சமனொளி'

சிலப்பதிகாரம் (அதிகாரம் 11 வரி 21-22)





புத்தர் கோயில்

"ஐயா, கண்டு பிடிப்பவர்கள் முன்னே ஒருவரும் பின்னே ஒருவருமாக வரட்டும். அவர்களுக்கிடையில் மற்றவர்கள் வரலாம். மேலே செல்லச் செல்ல அதிகக் குளிராக இருக்கும். குளிர் காற்றும் வீசும் எச்சரிக்கையாக இருங்கள். எந்த நேரத்திலும் எது வேண்டுமானாலும் நடக்கலாம்." என்று வனக் காவலன் கூறிய பின் பயணம் தொடர்ந்தது.

அடர்ந்த காட்டின் ஊடே கசிந்த வெளிச்சத்தில் நேர்க்குத்தாக இருந்த மலையில் ஏறுவது ஆபுத்திரனுக்கும் வில்வனுக்கும் பெரும் பிரயத்தனமாக இருந்தது. பொழுது இருண்டு விட்டதால் காட்டு விலங்குகளின் உறுமல் சத்தங்களும் இரைச்சல்களும் அதிகமாக இருந்தன. இருட்டு வந்து விட்டாலே குதூகலப் படும் காட்டு ஆந்தைகளும் தேனதாரிப் பறவைகளும் மிரட்டுவது போல விட்டு விட்டு எழுப்பிய சத்தம் இரவின் பயங்கரத்தை அதிகரித்தன. இரை கிடைக்காத புலிகள் இரண்டு மாறி மாறி உறுமிய விதம் கேட்பதற்கே அச்சத்தை தரக் கூடியதாக இருந்தது. எப்பொழுதானாலும் ஊளையிடுவதை வழக்கமாகக் கொண்டிருந்த காட்டு நரிகள் மலையின் பல இடங்களிலிருந்து ஊளையிட்டு பயணிகளின் நாடித் துடிப்பை அதிகரிக்க வைத்தது. சமந்த மலை உச்சியில் பேய் நடமாட்டமிருப்பதாகக் கேள்விப் பட்டிருந்ததால் பேய்கள் கத்துவது போன்ற பிரமை உண்டாகி அச்சத்தை அதிகரித்தது. ஓரிடத்தில் பின்புறம் வந்து கொண்டிருந்த வனக்காவலர் ஒருவர் மீது மலைப் பாம்பு விழுந்து விடவே அவர் கால் இடறி கீழே உருண்டார். அதைக் கண்டு அதிர்ந்து போன ஆபுத்திரன் ஏதோ பேசமுற்பட்ட போது "கவலை வேண்டாம். உருண்டு போன காவலருக்கு எதுவும் நேராது உரிய நேரத்தில் மேலே வந்து விடுவார்."



என்று முன்னே இருந்த ஒரு வனக் காவலர் கூறிய போது செய்வதறியாமல் நின்ற ஆபுத்திரன் உருண்டு விட்ட வனக்காவலருக்காக பிரார்த்தனை செய்து கொண்டு மேலே ஏறினான்.

மேலே போகப் போகக் குளிர்க் காற்றின் வீச்சு அதிகரித்தது. மேலிருந்து பறையொலி ஒன்று காற்றில் கலந்து வந்து அவர்களைக் கலக்கின. அதையடுத்து 'பூம் பூம்' என்று சங்கொலியும் எழவே பயணிகளின் ரத்தம் உறைந்து விடும் நிலைக்கு வந்தது. பிற்காலத்தில் கிறுஸ்துவர்களாலும் முகமதியர்களாலும் 'ஆதம் மலை' என்று அழைக்கப்பட்ட புராதனமாக சமந்த கூடத்தின் உச்சியை அவர்கள் நெருங்கிய போது மேலே பந்தம் ஒன்று பிரகாசமாக எரிந்தது. அந்த வெளிச்சத்தில் பூதத்தைப் போன்ற கோரமான உருவம் ஒன்றைக் கண்டான் ஆபுத்திரன். அதே சமயம் அவனை நோக்கி வந்தது ஓர் அம்பு. அதை அவனும் கவனிக்க வில்லை. வனக் காவலர்களும் கவனிக்க வில்லை. அதே சமயம் காட்டு நரியொன்று ஆபுத்திரனின் மீது பாயவும் அம்பு அதன் உடலில் தைக்கவும் சரியாக இருந்தது. அடிபட்ட வேதனையில் ஈன சுரத்தில் கத்தியபடியே சரிவில் போய் விழுந்தது அந்நரி.

கண நேரத்தில் ஏதேதோ நடந்து விட்ட அதிர்ச்சியிலிருந்து மீண்ட ஆபுத்திரன் மேலே தெரிந்த கோர உருவத்தை நோக்கினான். உலகத்தில் எங்குமே காண முடியாத பயங்கரத் தோற்றமாய் இருந்தது அது. மிகப்பெரிய உருண்டைக் கண்களும், வாயை விட்டுப் பிதுங்கிக் கிடந்த பல்வரிசைகளும், தொங்கிய நாக்கும் அகோரமாயக் காட்சியளிக்க அதன் தலையில் ஐந்தாறு நாகங்கள் படமெடுத்தபடி இருந்தன.






"என்ன இது?" என்று குழப்பத்துடன் கேட்டான் ஆபுத்திரன்.

"அது பூதமோ பிசாசோ அல்ல. கழுகு மூக்கனின் சகோதரன் தான்!" என்று கூறிய வணக்காவலர் இடையில இருந்த குப்பி ஒன்றை எடுத்து ஊதிவிட்டுச் சொன்னார்.

"கழுகு மூக்கனின் சகோதரன் ஒரு அசாதாரணமான மனிதன். விசித்திரமான மனிதன் தனிமையிலேயே இருந்து பழக்கப் பட்டு விட்டதால் அவனது மனமும் உடலும் அசாதாரண இயக்கத்துக்கு வந்து விட்டன. இப்படியெல்லாம் கோரமான வேடங்களைப் போட்டுக் கொண்டு பயமுறுத்துவது வழக்கம். இனி அச்சமில்லை."

இப்படிப் பேசிக் கொண்டே அந்த உருவம் இருந்த இடத்தை அவர்கள் அடைவதற்கும் அந்த உருவம் தனது வேடங்களைக் களைவதற்கும் சரியாக இருந்தது. அவன் நடுத்தர வயதினனாக இருந்தான் நடுத்தரமான உடற்கட்டும கறுத்த முகமும் அவனை ஒரு சாதாரணமான மனிதனாகக் காட்டின. வணக்காவலர்கள் அவனுக்கு அறிமுகமானவர்களாக இருந்ததாலோ என்னவோ அவன பரபரப்படையாமல் "எல்லோரும் அடுத்த அறைக்குச் செல்லுங்கள். அங்கே உணவிருக்கிறது வேண்டிய மட்டும் சாப்பிடுங்கள். மற்றதை பிறகு பார்க்கலாம்." என்றான்.

அவனுக்கு மறுமொழி பேசாமல் எல்லோரும் அடுத்த அறைக்குச் சென்ற போது அனைவருமே வியந்து போனார்கள். அங்கே பலவிதமான உணவு வகைகள், பழ வகைகள், பழவகைகள் மற்றும் பலகாரங்கள் அடங்கிய மேசை மீது இருந்தன. சந்தடி யற்ற ஆள் அரவமற்ற இந்த இடத்தில

நகரத்தில் கூட காணமுடியாத உணவு வகைகள் இருந்ததைக் கண்டு வியந்த ஆபுத்திரன் "இவைகளை யார் தயாரித்திருப்பார்கள்? யாருக்காகத் தயாரித்திருப்பார்கள்? நாம் வருவது இவனுக்குத் தெரியுமா? தெரிந்தாலும் சமைக்க வேண்டிய அவசியமென்ன?" என்றெல்லாம் கேட்டுக் கொண்டு விழித்தான். இதற்குள் வனக்காவலர்கள் "ஐயா, உங்களுக்குத் தேவையான உணவைத் தேர்ந்தெடுத்து தைரியமாகச் சாப்பிடுங்கள்." என்றார்கள்.

"தைரியமாகச் சாப்பிடுவதென்றால் என்ன அர்த்தம்?" கேட்டான் ஆபுத்திரன்.

"ஒருவேளை இவற்றில் விஷம் கலந்திருக்குமோ என்ற அச்சமிருக்கலாம். அப்படி எந்த அச்சமும் இல்லாமல் தைரியமாகச் சாப்பிடலாம்." என்றார்கள் வனக்காவலர்கள்.

ஆபுத்திரன் எதுவும் பேசவில்லை. பழங்கள் சிலவற்றை மட்டும் சாப்பிட்டான். மற்றவர்கள் அங்கிருந்த மாமிச உணவுகளை ஒருபிடி பிடித்தார்கள். யாரும் மதுவைத் தொடவில்லை.

உணவை உண்ட பின் அந்த மனிதன் இருந்த இடத்திற்கு வந்த போது அவன் பாறை ஒன்றின் மீது அமர்ந்து கொண்டு எதையோ உற்று நோக்கிக் கொண்டிருந்தான். அவர்களும் வானத்தை நோக்கிய போது தான் அவர்களுக்கு அங்கே இருந்த வால் நட்சத்திரம் நன்றாகப் புலப்பட்டது.

ஆபுத்திரன் அந்த மனிதனைப் பார்த்து "உங்கள் உணவிற்கும் உபசாரத்திற்கும் நன்றி" என்றான்.

அந்த மனிதன் அதைப் பொருட் படுத்தவில்லை.



வனக்காவலர்களைப் பார்த்து "வந்து கொண்டிருந்தவர்கள் இத்தனை நாட்களாக ஏன் வரவில்லை? வராதவர்கள் இங்கே ஏன் வந்தார்கள்?" என்று கேட்டான்.

"அவசியமில்லாததால் நாங்கள் வரவில்லை. அவசியமிருப்பதால் இவர்கள் வந்திருக்கிறார்கள்." என்றார் ஒரு வனக்காவலர்.

"இங்கு வரும் அளவிற்கு அவசியம் இருக்கிறதா?" என்று கேட்டான் அவன்.

"ஐயா, யாருமற்ற இந்த தனியிடத்தில் இத்தனை வகையான உணவை யார் தயாரித்தார்கள்? யாருக்காகத் தயாரித்தார்கள்?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"இதைக் கேட்கத் தான் வந்தீர்களா? இதெல்லாம் உங்களுக்குச் சம்மந்தமில்லாத விஷயங்கள்." என்றான் அவன்.

"வியப்பாக இருக்கவே கேட்டேன்."

"இங்கு வியக்கும் படியான விஷயங்கள் எவ்வளவோ உண்டு. அதற்கெல்லாம் விளக்கம் சொல்லிக் கொண்டிருப்பது என் வேலையல்ல."

"நாகரீகமாக உபசரிக்கத் தெரிந்த நீங்கள் அநாகரீகமாகக் கோபப் படுவது பொருத்தமாக இல்லை."

ஆபுத்திரன் இப்படிப் பேசியதும் எல்லோருமே ஒரு கணம் அதிர்ந்தார்கள் என்னாகுமோ என்று. ஆனால் அவர்களது அச்சத்திற்கு மாறாக கடகடவெனச் சிரித்தான் அந்த மனிதன். ஆபுத்திரனைப் பார்த்து "நீ சேர நாட்டவனா?" என்றான்.

"ஆமாம். அதற்கென்ன?"

"இது போன்ற இடத்தில் கூட அசட்டையான தைரியத்துடன் பேசுபவன் இந்நாட்டுக்காரனாக இருக்க முடியாது. சேர நாட்டுக்காரனுக்குத் தான் இதுபோன்ற உதாசீனமான தைரியம் வரும். வீரனே! அற்ப விஷயங்களுக்காக ஆச்சரியப் பட்டு கேள்வி கேட்கிறாயே- அதை விடு. அதையெல்லாம விட பெரிய விஷயம். மேலே பார். எத்தனை பளபளப்புடன் இருக்கிறது அந்த வால் நட்சத்திரம்! அதைப் பற்றிக் கேட்டிருக்கலாம நீ!"

"வால் நட்சத்திரம் தோன்றினால் நாட்டிற்கு கெடுதல் வரும் என்று சொல்வார்கள்."

"அது சரி. எந்த நாட்டிற்கென்று சொல்ல முடியுமா உன்னால்?"

"இலங்கைக்குத் தான் என்று நினைக்கிறேன்."

"அதெப்படி? இந்த வால் நட்சத்திரம் இலங்கையின் மேலா தோன்றியிருக்கிறது? இல்லை. வானத்தில் தோன்றியிருக்கிறது. இதை பல நாட்டவர்கள் பார்க்கலாம். உங்கள் சேர நாட்டிலும் இதைப் பார்க்க முடியும். ஆகவே ஆபத்து யாருக்கு என்று சொல்ல முடியும்?"

"தெரியவில்லை. சேரநாட்டிற்கு ஆபத்துண்டா?"

"உறுதியாகச் சொல்லமுடியாது. வால் நட்சத்திர மீது நம்பிக்கை கொண்ட நாடுகளில் - குறிப்பாக பாரத தேசத்தில் ஆபத்து ஏற்படும். என் கணக்குகள் சரியானால் தென்னாட்டில் முப்பது நாட்களுக்குள் பெருந் தீங்கு



விளையப் போகிறது. ஊர் பற்றி எரிந்து மக்கள் அழிவார்கள். மன்னனும் அரசியும் கூட மாண்டு போவார்கள்!"

"இதென்ன பயங்கரம்? உங்களுக்கு எப்படி இது தெரியும்?"

"அது ரகசியம். சொல்ல முடியாது. அதைவிடு. நீ இங்கு வந்த காரணமென்ன?"

"கழுகு மூக்கனைச் சந்திக்க வந்தேன்."

"அவனைச் சந்திக்க வேண்டிய காரணம்?"

"அதை அவரிடம் தான் கூற முடியும்."

"அவன் இங்கிருப்பதாக யார் சொன்னது?"

"இலங்கை மன்னர்."

இதையடுத்து அந்த மனிதன் சொன்ன பதில் ஆபுத்திரன் எதிர் பாராததாக இருந்தது.

நாட்டிலேயே அவன் இருப்பதாக உளவாளிகள் தெரிவித்தார்களே" என்றார்.

"கழுகு மூக்கனை எனக்கு அடையாளம் தெரியாது மன்னவா" என்றான் ஆபுத்திரன்.

இலங்கை மன்னர் அமைச்சரை அழைத்து ஏதோ கூறியதும் சிறிது நேரத்தில் அமைச்சர் அரண்மனைக்குச் சென்று விட்டுத் திரும்பினார். அவரது கையில் ஓவியச் சீலைகள் சில இருந்தன. அவற்றை எடுத்துப் பார்த்து விட்டு அவற்றிலிருந்து ஒன்றைக் காட்டி 'இது தான் கழுகு மூக்கன் இது பழைய படத்தைப் பார்த்து சமீபத்தில் வரையப்பட்டது இவ்வோவியத்தில் இருக்கும் கழுகு மூக்கனின் வயது 60 இருக்கலாம். தற்போது அவன் 70 வயதைத் தாண்டி விட்டான் இருந்தாலும் இந்த ஓவியத்தைக் கொண்டு அவனைக் கண்டு பிடிக்கலாம். இந்த ஓவியங்களையெல்லாம் வைத்துக் கொள்" என்று கூறி ஓவியச் சீலைகள் அடங்கிய பேழையை அவனிடம் கொடுத்த மன்னர், "புகார்ச் சோழரிடமிருந்து இரண்டு நாட்களுக்கு முன் ஓலை வந்தது ஆபுத்திரா. புகாரில் இருந்து சிங்கள வீரர்கள் கப்பலேறிப் புறப்பட்டு விட்டார்களாம இலங்கைக்கு" என்றார்.

"நல்லது மன்னவா. தங்களுக்காகப் புறப்பட்ட காரியம் நல்லபடியாக முடிந்து விட்டது. நாங்கள் புறப்படுகிறோம்"

"எப்படிச் செல்லப் போகிறாய்?"

"இங்கிருந்து மாதிட்டைக்குப் போய் அங்கிருந்து ராமேஸ்வரத்தை அடைந்து, பாண்டிய நாடு வழியாக வஞ்சிக்குப் போய் விடலாம் என்று எண்ணுகிறேன்."



"ஆம். அதுதான் எளிய மற்றும் குறுகிய வழி ராமேஸ்வரம் வரை நமது வீரர்கள் வருவார்கள். நல்லபடியாகச் சென்று வா. என் வாழ்த்துக்கள்."



"**வா** ஆபுத்திரா, வா. நீ வருவதற்கு முன்பாகவே உன்னைப் பற்றிய செய்திகள் வந்து விட்டன. புகார்ச் சோழனிடமிருந்து ஓலை வந்து விட்டது. தூதுவனாய் உன்னை அனுப்பினேன். நீயோ பலசாகசங்களைச் செய்து என் விருப்பத்தை நிறைவேற்றி விட்டாய். நாளுக்கு நாள் உனது பரிமாணங்கள் வளர்ந்து கொண்டே வருகின்றன. வாழ்ந்தால் உன்னைப் போல வாழ வேண்டும்." என்று மனம் திறந்து பாராட்டினான் சேரமன்னன்.

"மன்னவா, தங்கள் ஆணையின்றி நான் சில காரியங்களைச் செய்து விட்டேன். அதற்காகத் தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்." என்றான் ஆபுத்திரன்.

"ஆபுத்திரா, நீ வேறு நான் வேறு அல்ல. நான் நினைப்பேன். நீ செய்து முடித்து விடுவாய். அது போலத் தான் இது. நீ செய்த காரியம் சோழர்களுக்கு விடிவைத் தந்திருக்கிறது. ஆகவே பாராட்டுக்குரியவன் நீ. சங்கடப் பட ஒன்றுமில்லை." என்றான் சேர மன்னன்.

வந்ததுமே சேரமன்னன் தன்னை ஈர்த்து விட்டதால் அங்கிருந்தவர்களைச் சரியாகப் பார்க்காதிருந்த ஆபுத்திரன் தற்போது பார்த்தான். அவையில் முக்கியமானவர்களே இருந்தார்கள். புலவர் பரணர், அமைச்சர் அழும்பில் வேள்,

சேனாதிபதி வில்லவன் கோதை, தூதுவர் சஞ்சயன், மற்றப் பிரிவுத் தலைவர் நீலன் ஆகிய அனைவரையும் வணங்கினான் ஆபுத்திரன்.

அப்போது சேர மன்னன் பேசத் தொடங்கி "இதுவரையில் எந்தப் புலவருமே துணியாத காரியத்தை நம் தலைமைப் புலவர் பரணர் செய்திருக்கிறார். புலவர் பெருமக்கள் என்றுமே புரவலர்களைப் பாடிப் பெருமை சேர்ப்பவர்கள் மன்னர்களின் செயற்கரிய செயல்களை பார்த்தும், கேள்விப் பட்டும், ஆராய்ந்தும் பாடல்களை இயற்றும் பேரறிவாளர்கள் அவர்கள். இதுவரைத் தமிழுலகம் கேள்விப் பட்டது இதுதான். ஆனால் கேள்விப் படாத ஒன்றை இப்போது பரணரின் இந்த அரிய பாடல் வழியாகக் காண்கிறோம். இதோ அவரது இணையற்ற செய்யுள். படிக்கிறேன். கேளுங்கள்," * என்று சொல்லி செய்யுளை படித்து விட்டு, அவையோரிடம் "நான் கூறிய புதுமையை இச்செய்யுளில் கண்டீர்களா?" என்று வினவினான்.

எல்லோரும் தலையை ஆட்ட "புலவர் வாக்கு தெய்வ வாக்கு" பலிக்காமல் போகாது." என்றான் ஆபுத்திரன்.

"அது உண்மை தான்." என்று ஒப்புக் கொண்ட செங்குட்டுவன், "புலவர் பெருமானே, என் மீது நீங்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கும் பாசத்திற்கும் நாங்கள் எல்லோருமே தலைவணங்குகிறோம். உங்களது தொலை நோக்குப் பார்வையைக் கண்டு பெருமைப்படுகிறோம். இந்தச்

* செங்குட்டுவன் படித்தது புலவர் பரணர் பாடிய பதிற்றுப்பத்தின் ஐந்தாவது பத்தாக வரும் பாடல் தொகுப்பு. இதனை இந்நூலின் பிற சேர்க்கையில் காணலாம்.



செய்யுளில் நான் பங்கு கொண்ட மற்றும் வெற்றி பெற்ற போர்களைப் பற்றி அழகாகச் சொல்லியிருக்கிறீர்கள் நடந்தவைகளை நீங்கள் அழகுறப் பாடியிருப்பது இயற்கையான ஒன்று. ஆனால் -

'பல்செருக் கடந்தகொல் களிற்று யானைக்
கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு
உடை திரைப் பரப்பில் படுகடல் ஓட்டிய
வெல் புகழ்க் குட்டுவன்' *

என்று நான் கடலில் வெற்றி பெறாத விஷயத்தை வெற்றி பெற்றதாகப் பாடி விட்டீர்களே, அது எப்படி?" என்று கேட்டான்.

"மன்னர் மன்னா, இந்தச் செய்யுளை நான் எழுதி பல திங்கள்கள் ஆகி விட்டன. பல போர்களை நடத்தி முடித்த நீ இந்த வெள்ளைத் தீவின் மீதான படையெடுப்பை மட்டும் என்ன காரணமாகவோ தள்ளிப் போட்டுக் கொண்டே போனாய். இந்த வெள்ளைத் தீவுக் கடம்பர்கள் மீது தங்கள் அன்புத் தந்தையார் படையெடுத்துப் பெரும் வெற்றியைப் பெற்றார். அந்த வெற்றிக்குப் பின்னால் கடம்பர்கள் தலை தூக்க மாட்டார்கள் என்று நினைத்தோம். ஆனால் அவர்கள் தலைதூக்கியது மட்டுமின்றிச் சேரர்களுக்குச் சவாலாக வரவும் தொடங்கி விட்டார்கள். இதைப் பார்த்துக்கொண்டு நீ சும்மாயிருக்க மாட்டாய் என்று எங்களுக்குத் தெரியும். இருந்தாலும் அந்த வெற்றி தாமதமாகிக் கொண்டு வந்தது. எனக்கோ வயதாகி விட்டது. இன்றிருக்கும் உடல் நிலை

* பதிற்று பத்து - 5ம் பத்து - பாடல் எண் 6 - வரி 10 முதல் 13 வரை

மறுதான் இல்லை. நிச்சயமாக வெற்றி பெறப் போகும் இச்சம்பவத்தை எழுதாமல் போய் விடுவேனோ என்ற ஏக்கம் எனக்குள் என் இதயத்தை வருத்திய படியே இருந்தது. முடிவில் உன் மீதான நம்பிக்கையில் இச்செய்யுளை எழுதி சரி செய்து உன்னிடம் கொடுத்தேன்." என்றார் பரணர்.

"புலவர் பெருமானே, என் மீதான தங்களது நம்பிக்கைக்கு மிக்க நன்றி. இருப்பினும் தங்கள் வைர வரிகளை, போரில் வெற்றி பெறாமல் ஏற்க என் மனம் இடம் தரவில்லை. வெற்றியடைந்து, இதே அவையில் தங்களுக்கு முன்னால் புலவர் சீத்தலை சாத்தனார் தலைமையில் இச்செய்யுள் அரங்கேற்றப்படும். அதற்கு ஏற்ப வாய்ப்பை உண்டாக்கி விட்டான் வெள்ளைத் தீவு பங்களன். நேற்றைய தினம் கொடி போட்டு விட்டான் * அக்கொள்ளையர் தலைவன்."

"பங்களனுக்கு அத்தனை துணிவு எப்படி வந்தது மன்னவா?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"அவனுக்கு எப்போது துணிவு வந்தது? புதிய துணை அவனுக்குக் கிட்டியிருக்கிறது. அந்தத் துணிச்சலில் தான் அவனே நம்மைப் போருக்கு அழைக்கிறான்."

"யார் அந்தத் துணைவன்?"

"ஒற்றர் படைத் தலைவர் அங்கே நேரில் இருந்து கண்டவற்றை சொல்கிறார். கேள்" - என்றார் சேரமன்னன்.

நீலனும் சொல்லலானான்.



* போருக்கு அழைக்க கொடி நாட்டுவதை கொடி போடுதல் என்று அழைப்பர். Page 115 'தமிழர் கொடிகள்' by அன்னிதாமச.



பவானிக்கு தண்டனையை வழங்கி அதை நிறைவேற்ற அமீரை அனுப்பிய பங்களன் அந்த அமீரும் பவானியும் சேரநாட்டிற்கு ஓடி விட்டார்கள் என்பதை அறிந்து பெரும ஏமாற்றமும் கோபமும் அடைந்தான். இருந்த உபதலைவர்களில் விசுவாசமான அமீர் இப்படிச் செய்ததை அவனால் ஜீரணிக்க முடியவில்லை. அதோடு கொலை வெறி பிடித்த துரோகியான பவானியைச் சாகடிக்காமல் அமீர் அவளோடு ஓடி விட்டது அவமானகரமாக இருந்தது. எனவே தன்னிடம் பேசவந்தவர்களை எல்லாம் விரட்டியடித்தான். கண்டபடி திட்டினான். ஒரிருவரை செமையாக அடித்தும் துரத்தினான். ஏறக்குறைய வெறி பிடித்த பைத்தியக் காரனைப் போலிருந்தது அவனது நிலை.

அவனது இந்த நிலை அவனது உபதளபதிகளுக்கு வினோதமாக இருந்தது. தற்போதைய சூழ்நிலையை விட ஆபத்தான சூழ்நிலைகளெல்லாம் வந்து அவற்றைச் சமாளித்திருக்கும் போது ஒன்றுமில்லாத விஷயத்திற்கு நிதானமிழந்து கோபப்படுவது சிறுபிள்ளைத் தனமாகத் தோன்றியது உபதலைவர்களுக்கு. இந்த [illegible] போரில் ரணதீரன் மாண்டு விட்டதாலும் அமீர் ஓடி விட்டதாலும் எஞ்சியிருந்த ராவணன், மிருதாபுத்திரன் மற்றும் சிபி சோரன் ஆகிய மூன்று உபதலைவர்களும் ஒன்று கூடி என்ன செய்வது என்று யோசிக்கலானார்கள்.

"ஓடிவிட்ட துரோகிகளைப் பற்றி நினைவில் வைத்துக் கொண்டு சமயம் வரும் போது அழிக்க வேண்டும். அதை விட்டு விட்டு ஒரேடியாக எல்லாவற்றையும் துறந்து போல இப்படியா படுத்துக் கிடக்க வேண்டும்? அதோடு அவர்கள் எங்கே ஓடிப் போயிருப்பார்கள். சேரநாட்டிற்குத் தான் போயிருக்க வேண்டும். ஒருவேளை சேர மன்னனை ஒழிக்கும் திட்டத்தோடு போயிருக்கலாம் அல்லவா? தாங்கள் இப்படி ஏன் சிந்திக்காமல் இருக்கிறீர்கள்?"

"இன்னும் எப்படியெல்லாமோ கூடச் சிந்திக்கலாம். சிந்தனைக்கா பஞ்சம்? எனக்கு நல்லது செய்வதாக இருந்தால் அந்த அமீர் என்னிடம் ஒரு வார்த்தை கூறியிருக்கலாம் அல்லவா? திருடனைப் போல ஏன் ஓட வேண்டும்?"

"பவானியைக் கொல்லாமல் போனதால் சங்கடம் ஏற்பட்டிருக்கும். அதனால் உங்களிடம் சொல்லாமல் போயிருக்கலாம்."

"ஆமாம். இந்த விஷயங்களெல்லாம் உனக்கெப்படி தெரியும்? நீ அந்தப்புரத்தைத் தாண்டிப் போக மாட்டாயே?"

"உங்களால் தான் தாண்டி விட்டேன். உங்கள் அரசியல் விஷயங்கள் எனக்கெப்படித் தெரியும்? ராவணன் தான் சொன்னார். உங்களை ஆறுதல் படுத்தி நாளை ஆலோசனைக்கு வரும்படி செய்யச் சொன்னார். பேசுவதற்கு நிறைய விஷயங்கள் இருக்கிறதாம்."



"அவனது விஷயங்கள் இருக்கட்டும். உன்னுடைய விஷயங்கள் என்னாயிற்று?"

"என்னுடைய விஷயங்களா?"

"ஆம். முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயங்கள்."

"முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயங்களா?"

"உன் ஆடையைக் கேள். அது சொல்லும்"

"ஓ அந்த விஷயமா? நான் தயார்."

"நானும் தயார் தான். அதற்கு இப்புல்வெளி சரியல்ல. நாமிருப்பது என்ன தீவு?"

"முகப்பு தீவு"

"அப்படியானால் குடிசைக்குள் போவோம்"

"குடிசைகளில் ஆள்கள் இருக்க மாட்டார்களா?"

"நம் குடிசை ஒன்றிருக்கிறது."

"நம் குடிசையா?"

நம்மைப் போன்றவர்களுக்கென்று வைத்துக் கொள். அங்கே வந்தால் நீ மிகவும் ஆச்சரியப் பட்டுப் போவாய்!"

"அப்படியா? வாருங்கள். உடனே போவோம்."

குறிப்பிட்ட குடிசையை அடைந்து பகவதியுடன் உள்ளே நுழைந்தான் பங்களன்.

"இங்கே ஆச்சரியப்பட ஒன்றுமில்லையே?" என்று கேட்டாள் பகவதி.

அவளைத் திடீரென முரட்டுத் தனமாகக் கட்டிப் பிடித்து முத்த மழைகளைப் பொழிந்தான் பங்களன்.

அதே சமயம் அக்குடிசையையும் அதில் அவர்கள் நுழைந்ததையும் கண்ட உருவமொன்று, பதுங்கிப் பதுங்கி, குடிசையை நெருங்கியது. கையில் இருந்த பந்தத்தை எடுத்து குடிசையைக் கொளுத்தியது. கொளுத்தி விட்ட பின் ஓட்டமெடுத்தது.

தூரத்தில் போய் திரும்பிப் பார்த்த போது குடிசை நன்றாகக் கொழுந்து விட்டு எரிந்தது.

"ஒழிந்தான் பங்களன்" என்று கூறியபடி, அந்த உருவம் இருளில் மறைந்தது.







# அத்தியாயம் நாற்பத்தொன்று



## பகவதியும் பங்களனும்

முகப்புத் தீவின் குடிசைக்குள் பகவதியை முரட்டுத் தனமாகக் கட்டி அணைத்த பங்களன் முத்தமழை பொழிந்த சிறிது நேரத்தில் பகவதி ஆச்சரியப் பட்டுப் போனாள். அவளுக்குப் பேச்சு வரவில்லை. அவள் பேச முடியாதவாறு அவளது உதடுகளோடு தன் உதடுகளை ஒட்ட வைத்து பங்களன் சீக்கிரத்தில் எடுக்கவும் இல்லை. அவன் உதடுகளோடு சேர்த்து தைத்து விட்ட மாதிரி அவளை உறைவைத்த அவன் அவளது உதடுகளுக்குள் தெரிந்த ஒரு சில பற்களைக் கடிக்கவும் செய்தான். உதடுகள் எப்படியெல்லாம் ஒரு பெண்ணின் அங்கங்களில் மாயாஜாலங்களைப் புரிய முடியும் என்பதை அன்றைக்குப் பூரணமாய் உணர்ந்தான்

பகவதி. அந்தப் புரத்துக்கு வந்து தன்னை மட்டும் அழைத்துக் கொண்டு போய் காமக் கலைகளை நடத்திய போதெல்லாம் காட்டாத புதுமைகளைத் தன் உதடுகளால் அவன் நடத்திக் காட்டிய விதத்தைக் கண்டு அசந்து போனாள் அவள். தனது நிறம் சற்று கறுப்பு என்பதை உணர்ந்த அவள் தயங்கிய போதெல்லாம், "கறுப்பே ஒரு அழகு தான். நீயோ கறுப்பிலும் சிறந்த அழகியாக இருக்கிறாய். இது என்னை சொக்க வைக்கிறது." என்று சொல்லி தகாத விளையாட்டுகளை அவன் ஆடியதுண்டு. "இனி ராக்கலைகளைக் கொள்ளையடித்தால் கறுப்பு அழகிகளைத் தான் நான் தேர்ந்தெடுப்பேன். கறுப்பு என்பது இயற்கை. இயற்கையான அழகு இயல்பானது. அந்த அழகு சிறப்பாக இருக்கும் போது அதுவே எனக்குப் பரிசு" என்றெல்லாம் வசனம் பேசி வக்கிரமாக நடந்து கொள்ளும் பங்கனை தற்போது என்றுமில்லா விருந்தாக புதுமை விருந்தைப் படைத்த போது, "மற்ற விஷயங்களில் இவன் எப்படியானாலும் காம விஷயங்களில் கரை கண்டவன். காம அரக்கன் என்று சொல்லிக் கொண்டு அவனிடமிருந்து மேன்மேலும் புதுமைகளை எதிர்பார்த்து அவனிடம் கரைந்து கொண்டிருந்தாள். அவனோ நீண்ட நேரம் வரை தன் உதடுகளாலேயே விளையாடிக் கொண்டிருந்தான்.

"இன்றிரவு முழுவதும் உதடுகளுக்கு மட்டும் தான் வேலையா?" என்று முனகினாள் பகவதி காம அவஸ்தையில்.

"ஏன் பிடிக்கவில்லையா?" என்று கேட்டான் பங்கன்.

"அதற்கில்லை..." என்று ஏதோ உளறினாள் அவள்.

அவள் தன் நிலையில் இல்லை என்பதை உணர்ந்த அவன் அவளை வேறு வழிகளில் திருப்தி செய்ய முயன்றான்



மயான வைராக்கியம் என்று ஒன்றுண்டு. தனக்கு வேண்டியவர்களின் பிணங்கள் மயானத்தில் எரியும் போதோ, புதைக்கும் போதோ வைராக்கியம் எழும். இவ்வளவு தானா வாழ்க்கை! இதற்குத் தானா இத்தனை பாடுகள்? என்று மனம் வாழ்க்கையை வெறுத்துத் தூசாகத் தள்ளும். இனி நமது வாழ்வை தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணும். எல்லாமே மயானத்தில் இருக்கும் வரை தான். அதை விட்டு வெளியே வந்தபின் வைராக்கியமெல்லாம் இருக்குமிடம் தெரியாமல் போய்விடும். அதுவரை வாழ்ந்த வாழ்க்கையைத் தான் அவன் தொடருவான்.

இதே போல பிரசவ வைராக்கியம் என்றும் ஒன்றுண்டு. பிரசவ காலத்தில் படும் அவஸ்தைகளை நினைக்கும் போது கணவன் மனைவி இருவருமே 'குழந்தையாவது குட்டியாவது! எதுவும் இனி வேண்டாமடா சாமி' என்று வைராக்கியத்திற்கு ஆளாவார்கள். அதிக பட்சம் ஐந்தாறு மாதங்களுக்கு இந்த வைராக்கியம் இருக்கும். பிறகு அது சுவடில்லாமல் மறைந்து விட இருவருமே காமத்திற்குத் தயாராகி விடுவார்கள்.

இப்படி வைராக்கியங்கள் உண்டாகும் விஷயங்களே உடனுக்குடன் மாறிவிடும் போது, வைராக்கியம் ஏதுமில்லாதவர்கள் காமத்தில் மூழ்கி விட்டால் யார் அவர்களை கரை சேர்க்க முடியும்? அவர்களால் கரை யேறும் முயற்சியும் செய்ய முடியாது. நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று செயல்களைத் தள்ளிப் போடுவார்களே தவிர காமக் கடலை விட்டு வெளியே வரமாட்டார்கள். முனிவர்களே தம்மை இழந்து காம விகாரமடையும் போது சர்வ சாதாரணமான பங்கனும் பகவதியும் எந்த மூலைக்கு?

மறுநாள் ஆலோசனைக்காக பங்களன் அரண்மனைக்கு வந்திருக்கிறான் என்ற செய்தி குடிசையை கொளுத்திய உருவத்திற்கு பேராச்சரியமாக இருந்தது அதிர்ச்சியாகவும் இருந்தது. குடிசை கொழுந்து விட்டு எழுந்ததை கண்கூடாகப் பார்த்திருக்கும் போது பங்களனும் பகவதியும் எப்படித் தப்பியிருக்க முடியும் என்று தனக்கு தானே கேட்டு கொண்ட அந்த உருவம் மூகப்புத் தீவிற்குப் போய்ப் பார்த்த போது எரிந்து போன குடிசைக்குப் பதிலாக புதியதாக குடிசையொன்று வேயப்பட்டிருந்தது பழையகுடிசை எரிந்து போனதற்கான ஆதாரங்கள் அப்படியே இருந்தது. இதையெல்லாம் பார்த்துவிட்டு அவ்வுருவம் குழப்பத்துடன் அகன்றது.

இதே சமயம் அரண்மனைக் கூடத்தில் நுழைந்த பங்களனைக் கண்ட உபதலைவர்கள் எழுந்து மரியாதை காட்டினார்கள். "பகவதி கெட்டிக்காரி. அவன் தோற்றதாக சரித்திரமில்லை. அவளைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்." என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டான் ராவணன்.

பங்களன் தனது ஆசனத்தில் அமர்ந்து கொண்டு ராவணனைப் பார்த்துக் கேட்டான்.

"என்ன ஆலோசனை சொல்லப் போகிறாய் ராவணா"

"தலைவரே, பழுது பார்க்க அனுப்பப் பட்ட நமது மரக்கலங்கள் ஏகடித் தீவிலிருந்து இரண்டு நாட்களில் இங்கே வந்து விடும் என்று தெரிகிறது. அவை வந்து விட்டால் அந்த செய்தி சேர நாட்டிற்கும் தெரிந்து விடும். சேரமன்னர் போருக்கு ஆயத்தமாகி விடுவார். நாமும் ஆயத்தமாக வேண்டும்." என்றான் ராவணன்.



"இது இயல்பான விஷயம் தானே! சேரர்கள் நம்மீது படையெடுப்பார்கள் என்பது எதிர் பார்க்கப் பட்ட விஷயம தானே?" என்றான் பங்களன்.

"நம்மிடம் இப்போது போர் செய்யக் கூடிய கப்பல்கள் எட்டு இருக்கின்றன. பழுது பார்க்கப் பட்டு வரும் கப்பல்கள் இருபது. ஆகமொத்தம் இருபத்தெட்டு மரக்கலங்கள் தான் நம்மிடம் இருக்கின்றன. சேரர் தரப்பில் இந்த எண்ணிக்கையை விட இரண்டு மடங்கு மரக்கலங்கள் இருக்கும்."

"அவை அனைத்தும் நம்மைத் தாக்க வருமா?"

"வரும் என்று தான் நாம் திட்ட மிட வேண்டும்."

"திட்டமிட வேண்டியது தானே?"

"திட்டம் என்ன என்பதைத் தலைவர் சொன்னால் நிறைவேற்றத் தயாராக இருக்கிறோம்."

இதைக் கேட்டதும் ராவணன் உண்மையாகச் சொல்கிறானா இல்லை கேலி செய்கிறானா என்று புரியவில்லை பங்களனுக்கு. அதே சமயம் அவனுக்குள் ஓர் இனம் புரியாத அச்சம் உண்டாவதையும் அவன் உணர்ந்தான். இருப்பினும் போலி கௌரவம் பாராட்டிய அவன் "நான் திட்டம் தீட்டினால் நீங்கள் நிறைவேற்றி விடுவீர்கள் என்பது உண்மை தான். எதற்கும் இந்த முறை நீங்கள் தான் திட்டம் தீட்டுங்களேன். ஒத்து வருமா என்று நான் பார்க்கிறேன்." என்றான்.

எனவே "நீ சொன்னதை வாதத்திற்காக ஒப்புக் கொள்வதாகவே இருக்கட்டும். அபுத்திரனுக்கு இணையானவன் இருக்கிறானா?" என்று கேட்டான் பங்கனன்.

பங்கனனின் பேச்சைக் கேட்க வெறுப்பாக இருந்தது ராவணனுக்கு. ஏதோ தன்னை ஒரு பொருட்டாகவே மதிக்காமல் திட்டத்தை மட்டும் அறிந்து கொள்ள பங்கனன் விரும்புவதை உணர்ந்த இராவணன் "வாதத்திற்காகப் பேச நான் இங்கு வரவில்லை. நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசத் தான் நானும் உபதளபதிகளும் வந்திருக்கிறோம். எனக்கும் இவர்களுக்கும் வெள்ளைத் தீவைச் சூழ்ந்திருக்கும் அபாயம் புரிந்திருக்கிறது. உங்களுக்கும் புரியாமலில்லை. ஆனால் புரியாதது போல பேசி என்னிடமிருந்து விஷயத்தை மட்டும் அறியப் பார்க்கிறீர்கள். இதற்குப் பெயர் ஆலோசனையல்ல. இதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்" என்றான் கோபமாக.

ராவணனின் பேச்சு பங்கனின் வறட்டு கௌரவத்தை விரட்டியடித்தது

"சரி, உண்மையாகவே பிரச்சனையைத் தீர்க்கும் எண்ணத்துடன் தான் கேட்கிறேன் ராவணா. நீ சொல்லும் அந்தளவு திறன் படைத்த மனிதன் யார்?" என்று கேட்டான் பங்கனன்.

ராவணன் அந்த மனிதனின் பெயரைக் கூறியதுமே அதிர்ந்து போய் ஆசனத்தை விட்டு எழுந்த பங்கனன், "ராவணா, என்ன சொல்கிறாய் நீ? உனக்கென்ன புத்தி மழுங்கி விட்டதா?" என்று நிதானமிழந்தவனாய் கேட்டான்.

"முதலில் நீங்கள் ஆசனத்தில் அமருங்கள். நாம் எதிர் கொள்ளப் போவது சேரரது கடற்படையை மட்டுமல்ல. நம்மை இங்கிருந்து காத்த சாதுரியமும் திறமையும் கொண்ட



அபுத்திரனையும் கூடத்தான். அவன் நம்மைப் பற்றி, குறிப்பாக உங்களைப் பற்றியும் இத்தீவைப் பற்றியும் நன்றாகத் தெரிந்தவன். கோட்டையின் ரகசியங்களை நானே நேரில் அழைத்துப் போய் காட்டியிருக்கிறேன். எனவே அவனை எதிர் கொள்ளக் கூடியவன் சந்தேகம் இல்லாமல் உதயணன் தான்."-

"அந்த யாதவர் குலத்து அரக்கனைத் தானே சொல்கிறாய்? நன்றாக யோசித்துப் பார். உதயணனை உதவிக்கு அழைப்பதும் பாம்பை எடுத்து காலில் சுற்றிக் கொள்வதும் ஒன்று. தலையில் இருக்கும் பேனை ஒழிக்க கொள்ளிக் கட்டையா பயன்படுத்தச் சொல்கிறாய்?"

"வீணாகப் பதட்டப் படாதீர்கள் தலைவரே. அவனால் தான் நிலைமையைத் திறம்படச் சமாளிக்க முடியும்."

"வேறு யாரும் இல்லையா?"

"தலைவரே ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும் நீங்கள். உதயணனின் பெயரைத் தான் நான் உங்களுக்குச் சொன்னேன் உதவிக்கு அழைத்தால் உடனடியாக வந்து விடுவான் என்று சொல்லி விட முடியாது. அவனாக விரும்பினால் தான் உதவுவான்."

"இப்போது அவன் எங்கிருக்கிறான்?"

"உதயணன் வேளிர் குலத்தவன். இவனது வம்சம் விஷ்ணுவிடமிருந்து தொடங்கினாலும் பாண்டவரது மரபாகக் கூறப்படுவதால், முற்காலத்திலேயே இவர்களது அதி வரலாறு மறுக்கப் பட்டு மாறுபாடு அடைந்துள்ளது. * இவர்கள்

* பக்கம் 35 'வேளிர் வரலாறு by மு. ராகவையங்கார்

"என்ன அப்படிப்பட்ட விஷயம்?" கேட்டாள் பகவதி.

"கறுப்பழகி, நீ என்ன செய்வாய் பாவம்! சேர நாட்டு படைகள் நம்மைத் தாக்கப் போகின்றன. தெரியுமா உனக்கு?"

"தெரியாது."

"அவை தாக்கும் போது அத்தாக்குதலை முறியடிக்கவும் அதற்கான திட்டம் தீட்டவும் ஒரு திறமைசாலி தேவை."

"இங்கே யாரும் இல்லையா?"

"ராவணன் அப்படித்தான் சொல்கிறான்."

"அதனால்?"

"உதயணனை உதவிக்கு அழைக்கும்படி கூறுகிறான்."

"அவன் யார்?"

"மனித உருவில் நடமாடும் அரக்கன்."

"அப்படிப்பட்டவன் தான் தேவையென்றால் எதற்குத் தயக்கம்?"

"விளக்கமாகச் சொல்லமுடியவில்லை பகவதி. ஆனால் தயக்கமாகவும் இருக்கிறது."

"எல்லா தயக்கமும் போய்விடும். நேற்றைய புதுமைகளை இன்றைக்கும் காட்டுங்கள். தெளிவு பிறக்கும்" என்று சொன்ன பகவதி தான் போர்த்தியிருந்த போர்வையை விலக்கினாள். அவள் அறையின் தீபங்கள் அணிந்திருந்த ஆலி போன்ற ஆடையில் அவளை முழுதுமாய் பளிச் சென்று காட்டவே, மஞ்சத்தை விட்டு வெறியோடு எழுந்த பங்களன் "அடியே கறுப்பழகி, நேற்று என் உதடுகள் காட்டிய



விந்தைகளை இன்று உன் உதடுகள் காட்டட்டும். இது இன்னும் அற்புதமாய் இருக்கும்!" என்றான். அவனுக்கு அதைக் கற்பனையாக எண்ணும் போதே தித்தித்தது. அனுபவப் பட்ட போது அவளை விட்டுப் பிரியவே அவனுக்கு மனமில்லை. ஆடகனிடமும் இத்தனைச் சொர்க்கங்களா என்று மலைத்துப் போனான் அவன்.



மறுநாள் உதயணனின் உதவியை நாடுவது என்று தீர்மானித்த பங்களன், உபதளபதிகளோடும் இதர பொருட்களோடும் படகில் ஏறி கடற்கரையைக் கடந்து தேர்களில் ஏறி எழில் மலையை அடைந்தார்கள். தேர்கள் மேலே செல்வதற்கான பாதை எழில் மலையில் இருந்ததால் அப்பாதையில் தேர்களைச் செலுத்தி இரண்டு காதங்கள் முன்னேறியதும் மலையின் கிழக்கே காடுகளுக்கிடையில் தெரிந்த உதயணனின் கோட்டையைக் கண்டதும் பெருமூச்செறிந்தான். கோட்டையை நோக்கிச் சென்ற பாதையைக் கண்டதும் அப்பாதையில் தேர்களை செலுத்தி கோட்டை வாயிலை அடைந்தான்.

"உதயணனைப் பார்க்க வேண்டும் கதவைத் திறவுங்கள்." என்றான் பங்களன் வாயில் காவலர்களிடம்.

"முடியாது." என்றான் வாயிற்காவலன்.

"சற்று வந்து பாரவண்டியைப் பார்" என்றான் ராவணன்.

"அவர் தலைமையில் நாம் எல்லோரும் பயந்து நடுங்கினோம். அவன் மட்டும் தனியே வந்து யானையை அடித்து வீழ்த்தி விட்டான். அவனது வீரியத்திற்கு நிகராக்கும் வேறு ஆண்மகனிருக்க?"

"அது சரி ராவணா. அத்தனை பெரிய யானை அந்த சாதாரண கதாயுதத்தால் அடிபட்டு கீழே வீழ்ந்து விட்டது"

"அதைப் பற்றி அவனிடம் நான் கேட்க வேண்டும். யாதவன் அரண்மனைக்குச் செல்வோம்"

மக்கள் கூட்டத்தை விலக்கியபடி அனைவரும் அரண்மனைக்குச் சென்றார்கள். அரண்மனையின் விஸ்தாரத்தைப் பார்த்து மலைத்துப் போனான் பங்களன். 'ஆகா எத்தனை பிரம்மாண்டம்! எதுகளை அழுந்த வாழ்ந்தால் இது போன்ற அரண்மனையில் அல்லவா வாழ வேண்டும்!' என்று ஆசைப் பட்டான் பங்களன்.

அரண்மனைக்குள் உடனடியாக அனுமதி கிடைத்து விடவில்லை. சிறிது நேரம் வரை காத்திருக்க வேண்டியதாக இருந்தது. அதைச் சகிக்க முடியாத பங்களன் 'எத்தனை ஆணவம் இந்த யாதவனுக்கு? அவனைச் சந்திக்க மாற்று நாட்டு மன்னர்களா வரப்போகிறார்கள்? கண்ணுக்கெட்டாத ஓர் வனாந்திரத்தில் அனாதையாக ஆட்சி நடத்தும் இவனுக்கு நம்மைச் சந்திக்க என்ன தடை?' என்று உள்ளுக்குள் கறுவிக் கொண்ட அவன் காவலாளிகளிடம் வினவிய போது "ஒன்றுமில்லை. அவரது இணைபிரியாத நான்கு நண்பர்கள் உணவருந்தும் நேரம் இது. அதை அவர் நேரில் இருந்து பார்த்து விட்டுத் தான் வருவார். அதனால் தான் தாமதம். வந்து விடுவார். சற்று பொறுங்கள்" என்றார்கள் காவலர்கள்.



"அதென்ன அப்படிப் பட்ட உலகத்தில் இல்லாத நண்பர்கள்?" என்று பங்களன் முனகினான். அதே சமயம் அவர்களை உதயணன் அழைப்பதாக ஆணை வரவே அனைவரும் உள்ளே சென்றார்கள். பின்னால் பாரவண்டியிலிருந்து எடுத்த நான்கு பெரிய தங்கத் தாம்பாளங்கள் நிறைய பொன் ஆபரணங்களையும் காசுகளையும் வீரர்கள் கொண்டு வந்து உதயணனுக்கு முன்னால் வைத்தார்கள்.

ராஜதோரணையில் அமர்ந்திருந்த உதயணன் நல்ல உடல் கட்டுடன் இருந்தான். ராஜரீக உடைகளையும் கவசங்களையும் அணிந்திருந்தது அவனது கம்பீரத்தைக் காட்டின. தாம்பாளங்களின் மீது ஒரு பார்வையை வீசிய அவன் பங்களனைப் பார்த்து "இதென்ன நான்கு தாம்பாளங்கள் கணக்கு? இன்னும் இரண்டு சேர்த்து எடுத்து வந்திருக்கலாமே?" என்று கேட்டான்.

"யாதவ அரசருக்குத் தெரியாததல்ல. இந்தப் பொன்னை வைத்தே ஒரு நகரத்தை வாங்கலாம்." என்றான் பங்களன்.

"இருக்கலாம். ஆனால் இது போதும் என்று எப்படி முடிவு செய்தீர்? அதோடு உங்களிடம் இருக்கும் பொன்னும மணியும் கொள்ளையடிக்கப் பட்ட பொருட்கள் தானே! உழைத்துச் சம்பாதிக்கப் பட்டதில்லையே! சரி. அது போகட்டும். கொள்ளையர் தலைவர் இவ்வளவு தூரம் என்னைத் தேடி வந்த காரணம் என்ன?" என்று கேட்டான் உதயணன் மீசையை லேசாக முறுக்கியபடி.

"தங்கள் உதவியை நாடி வந்திருக்கிறோம்." என்றான் ராவணன்.

"கொள்ளைக் கூட்டத்திற்கு என்ன உதவியா? இதென்ன வேடிக்கை!" கேட்டான் உதயணன்.

"சேர நாடு எங்கள் மீது படையெடுக்கப் போகிறது."

"சேர நாடு படையெடுக்கப் போகிறதா? உங்கள் கதி அதோ கதி தான். வெள்ளைத் தீவு அழிந்தது!"

பேச்சின் ஆரம்பமே அபசகுனமாய் இருந்ததால் இவனிடம் இனியும் பேசத் தான் வேண்டுமா என்று வெறுத்துப் போன பங்களன் ராவணனைப் பார்த்தான். அவனுக்கும் சங்கடமாக இருந்தாலும் "பொறுமையாக இருங்கள். பார்ப்போம்." என்பது போல கண்களால் பேசிவிட்டு உதயணனிடம் பேசினான்.

"நீங்கள் சொல்வது உண்மைதான். அந்த அழிவிலிருந்து காப்பாற்றத் தான் உங்களிடம் உதவி கோரி வந்திருக்கிறோம்."

"இது என்ன கூத்து? கொள்ளைக்காரர்களுக்கு நான் உதவுவதா? கனவிலும் நடக்காது."

பங்களன் பொறுமையை இழந்தான். "உதயணா, நாவடக்கத்துடன் பேசு. எதற்கெடுத்தாலும் கொள்ளைக்காரன் என்ற சொல்லையே பயன்படுத்தி எங்களைக் கொச்சைப் படுத்துவதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. நாங்கள் அரச குலம், கடம்பர் வம்சம். கொள்ளையர் வம்சம் அல்ல. உன்னைப் போல் அரசாள தகுதியற்ற குலமும் அல்ல." என்று சீறினான்.

உதயணன் நிதானத்தை இழக்கவில்லை. "பங்களா, உன் பொய்க் கதைகளை உன் தீவு வாசிகளே நம்ப மாட்டார்கள். அப்படியிருக்க என்னிடம் அவ்வாறு சொல்வதற்கு உனக்கு தைரியம் வேண்டும். நீ கடம்பர் குலம் என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது? அரச குலமாக இருந்தால் கொள்ளையடிப்பது ஏன்? ஒருவேளை உன் தீவில் கடம்ப மரங்கள் இருப்பதால் கடம்பர் குலம் என்று கற்பனை செய்து கொண்டு சொல்கிறாயா? அதற்குக் கூட வழியில்லையே. சேரன் செங்குட்டுவனின் தந்தை உங்கள் தீவுகள் மீது படையெடுத்து ஒன்று விடாமல் எல்லா கடம்ப மரங்களையும் அழித்து முரசுகளை செய்து கொண்டதாக அல்லவா கேள்விப் பட்டேன்! அப்பாவிகளை அழித்து செல்வத்தைச் சேர்த்திருக்கும் கடல் கொள்ளைக் காரனான உனக்கு என் வம்சத்தைப் பற்றிப் பேச என்ன தகுதியிருக்கிறது? உண்மையிலேயே இந்த பாரத தேசத்தில் புகழ் பெற்ற அரச வம்சமே யாதவர் வம்சம் தான். மகாபாரத காவியத்தின் காரண கர்த்தாவான கிருஷ்ணன் துவாரகையை ஆண்ட மன்னன் என்பதை மறந்து விடாதே. இடையில் வந்த பொறாமை பிடித்த அரசர்கள் உண்டாக்கிய சதிகளுக்கு இலக்காகிய எங்கள் குலம் அரச உரிமையற்றுக் கிடக்கிறது. அதை உடைக்கத் தான் நானே எனக்கென ஒரு ராஜ்யத்தை சிருஷ்டித்துக் கொண்டு அரசனாக ஆண்டு வருகிறேன். நினைவிருக்கட்டும்."

பங்களனும் உதயணனும் மோதிக் கொண்ட விதம் நல்லதிற்கல்ல என்பதை உணர்ந்த ராவணன் குறுக்கிட்டு "யாதவர் குல அரசர் மன்னிக்க வேண்டும். பங்களரது வம்சத்தைப் பற்றி ஆராய நாங்கள் வரவில்லை. அவர் அரச குலம் என்பதை நீங்கள் நம்ப வேண்டியதில்லை. ஆனால் ஒரு விஷயத்தை நீங்கள் ஒப்புக் கொண்டு தான் ஆக வேண்டும். பங்களர் தனது கொள்ளைத் தொழிலை நீண்ட நாட்களாகவே விட்டு விட்டு நாகரீகமான ஆட்சியை நடத்த முயன்று

வருகிறார். வெள்ளைத் தீவுக்கு நீங்கள் வந்து அங்கிருக்கும் கோட்டை கொத்தளங்களைப் பார்த்தால் புரிந்து கொள்வீர்கள். கடலில் திரிந்து கொள்ளையடிப்பவர்கள் கோட்டை கொத்தளங்களை எதற்காகக் கட்டிக் கொள்ள வேண்டும்? வெள்ளைத் தீவு கூட்டங்களை ஒரு சிறிய அரசாக மாற்றி அதை நல்ல முறையில் ஆள வேண்டும் என்ற லட்சியத்தில் பங்களர் இருக்கிறார். அதன் காரணமாகவே உங்கள் உதவியை நாங்கள் நாடியிருக்கிறோம்" என்று சமாதான போக்குடன் கூறினான்.

உதயணனும் சற்றே அடங்கி "என்னிடம் நீங்கள் எதிர்பார்க்கும் உதவி என்ன?" என்று கேட்டான்.

"சேரர் படையை முறியடிக்கும் திட்டத்தை வகுத்து அவர்களை வெல்ல வேண்டும்" - என்றான் ராவணன்.

"இன்றைக்கு எகித்திரிய கடல்பகுதியில் அதிக பலம் வாய்ந்தவர்கள் சேரர்கள் தான் அவர்களது கடற்படையும் மகத்தானது. அதை வெல்ல திட்டம் தீட்டினால் மட்டும் போதாது. அதை நிறைவேற்றுவதற்கான சாத்தியக் கூறுகள் வெள்ளைத் தீவில இருக்க வேண்டும். வெறும் கோட்டையை வைத்துக் கொண்டு அவர்களை எதிர்க்க முடியாது."

"நீங்கள் நேரில் வந்து அதற்கான ஆயத்தங்களைச் சொன்னால் செய்யத் தயாராக இருக்கிறோம்."

"என் முடிவை நாளைக்குச் சொல்கிறேன்."

"நல்ல முடிவாகச் சொல்ல வேண்டும்." என்று சொன்ன ராவணன், "நாங்கள் இக்கோட்டைக்குள் நுழைந்த போது ஓர் அற்புதத்தைப் பார்த்தோம்." என்றான்.

"அற்புதமா? என்ன அது?"



"மதங்கொண்ட யானையை நீங்கள் வெறும் கதாயுதத்தால் வீழ்த்தி விட்டீர்கள். எங்களால் நம்ப முடியவில்லை"

"அப்படியா? அந்த கதாயுதம் இங்கே இருக்கிறது. அதைக் கொண்டு வா."

உதயணன் இப்படிக் கூறியதும் ராவணன் கதாயுதத்தைத் தூக்க முயன்றான். அவனால் முடியவில்லை. பித்ராபத்திரனும் சிபி சோரனும் வந்து தூக்க முயன்று முடியாமல் நின்றார்கள். பங்களனும் தன் பங்கிற்கு வந்து முயன்றான். முடியவில்லை.

"நீங்கள் நால்வரும் சேர்ந்து தூக்குங்கள்!" என்றான் உதயணன்.

நான்கு கொள்ளையர்களும் சேர்ந்து கதாயுதத்தைத் தூக்க முற்பட்ட போதும் அவர்களால அதை அசைக்க மட்டுமே முடிந்தது.

அதைக் கண்ட உதயணன் "உங்கள் நான்கு பேர்களால் தூக்க முடியாத கதாயுதத்தை நான் தூக்கியிருக்கிறேன் என்றால் அதன் எடை எவ்வளவு இருக்கும்? அத்தனை எடையுள்ள ஆயுதத்தால் யானையைத் தாக்கும்போது அது விழாமல் என்ன செய்யும்?" என்று கேட்டான்.

"அந்த யானை இறந்து போயிருக்குமா?"

"அதற்கும் வாய்ப்பிருக்கிறது. சரி நீங்கள் சென்று விருந்தினர் மாளிகையில் தங்கியிருங்கள். நாளை காலையில் பார்ப்போம்." என்று சொன்ன உதயணன் "வெளியே மட்டும் வந்து விடாதீர்கள். எனது நான்கு உயிர் நண்பர்கள் கண்ணில்

பட்டால் உன்னை உயிர் போக விடேன்" என்று ஒரு புதிரையும் போட்டு விட்டுச் சென்றான்.



விருந்தினர் மாளிகை கொலுசபையாகும் விதத்தில் இருந்தாலும் அதை ரசிக்கும் நிலையில் பங்கன் இல்லை.

"ராவணா, எனக்கென்னவோ இந்த மண்டைக் கனம் பிடித்த உதயணன் பேச்சும் போக்கும் பிடிக்கவே இல்லை. இப்படிப் பட்டவன் நமக்கு எப்படி உதவுவான் என்று தெரியவில்லை!" என்று அலுத்துக் கொண்டான்.

"எனக்கு மட்டும் அவன் போக்கு பிடிக்கிறது என்றா நினைக்கிறீர்கள்? பெரிய காரியங்களை முன்னால் வைத்துக் கொண்டிருப்பதால் இவனது ஆணவங்களையெல்லாம் சிறிய விஷயங்களாக எண்ணி சகித்துக் கொண்டிருக்கிறேன். போர் முடியட்டும். இவனைத் தூங்கச் செய்து நாம் நான்கு பேரும் துண்டு துண்டாக வெட்டிச் சாகடிப்போம்" என்றான் ராவணன்.

"தலைவரே, கொள்ளையர் தொழிலைச் செய்து கொண்டு சுதந்திரமாக இருந்த போது இருந்த ஆனந்தமும் அமைதியும் இப்போது நமக்கில்லை. இந்த வெள்ளைத் தீவைக் கட்டிக் கொண்டு அழுவதால் தான் நமக்கு இந்த நிலை. இத்தீவை விட்டு விட்டு தாவூத்தைப் போல் புதியதாக கடற்பகுதி ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு பழையபடி இஷ்டப்படி கொள்ளையடித்து வாழுவோம். சேரர் பயமும் இல்லை. இந்த உதயணனின் உதவியும் வேண்டாம்" என்றான் சிபி சோரன்.



"எனக்குக் கூட அப்படியொரு எண்ணம் இருப்பது உண்மை தான் சிபிசோரா. போரின் முடிவைப் பார்த்துக் கொண்டு இதைச் செய்யலாம் என்று நினைக்கிறேன்." என்றான் பங்கன்.

"அதற்கு வாய்ப்பிருக்குமா? இந்த உதயணன் உதவுவது மாதிரி வந்து நமக்குத் துரோகம் செய்து விட்டால் நமக்கு உயிரும் மிஞ்சாது." என்றான் பிருதாபத்திரன்.

"அப்படி நடக்காது. உதயணனைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அவன் திமிர் பிடித்தவனே தவிர துரோகியாக மாட்டான். இதை நம்பலாம்." என்றான் ராவணன்.

"அதென்னவோ நான்கு நண்பர்களைப் பற்றி புதிர் போடுகிறானே உதயணன்? நம்மைக் கண்டால் சாகடித்து விடுவார்களாமே அந்த நண்பர்கள்? யாரது அப்பேர்ப்பட்ட நண்பர்கள்? போய்ப் பார்த்து விடுவோமா?" என்று கேட்டான் பங்கன்.

"அந்த அநாவசியமான வேலைகளில் இறங்கத் தேவையில்லாத அபாயங்களைத் தேடிக்கொள்ள வேண்டாம். போய் ஓய்வெடுப்போம். காலையில் போய் அவனைச் சந்திப்போம். தலைவரே, நீங்கள் அந்தத் தனி அறையில் ஓய்வெடுங்கள்." என்று சொன்ன ராவணன் பங்கனின் காதில் ரகசியமாக ஏதோ ஓதினான்.



நள்ளிரவு நேரம் இருக்கலாம்.

பங்களனின் அறைக் கதவு வேகமாகத் தட்டப்பட்டது.

பங்களன் வந்து கதவைத் திறந்தான். வெளியே நின்றிருந்த மனிதனைக் கண்டதும் சிரிப்பு வந்து விட்டது பங்களனுக்கு. விதூஷகனைப் போலிருந்த அவனிடம் "என்ன?" என்று கேட்டான் பங்களன்.

"நான் உதயண மகாராஜாவின் உதவியாள். என் பெயர் நளுசுமாலிகு" என்றான்

"இதென்ன பெயர்? எப்படி அழைப்பது இப்பெயரை?"

"இயற்பெயரில் யாரும் அழைப்பதில்லை. உதயண மகாராஜா உட்பட குண்டோதரன் என்று அழைப்பார்கள்."

"இதுவே உன் இயற்பெயராக இருந்தால் பொருத்தமாகவே இருக்கும்."

"ஐயா, என் தாறுமாறான உடலமைப்பை வைத்து எடை போடாதீர்கள். நான் கைகளாலேயே யானைகளை அடித்து வீழ்த்துவேன். புலிகளை வாலைப் பிடித்து சுழற்றி வீசுவேன்!"

"உதயணனை விட நீ பெரிய ஆளாக இருப்பாய் போலிருக்கிறது. உன் பிரதாபங்கள் இருக்கட்டும். எதற்காக வந்தாய்?"

"காதைக் காட்டுங்கள்." என்று சொல்லி பங்களனைக் குனியச் சொல்லி ஏதோ சொன்னான்.

"அனுப்பு." என்றான் பங்களன்.

சிறிது நேரத்தில் அறைக்குள் வந்தாள் ஒரு பெண். உடலெல்லாம் தங்க நகைகள் ஜொலிக்க, நாசியைத் துளைக்கும் வாசனை திரவியங்கள் மணக்க, தங்கச் சிலை போல் நின்ற



அப்பெண்ணைக் கண்ட போது பெரிதும் மதிமயங்கினான் பங்களன்.

பங்களனை வணங்கிய அவள் "நான் யார் என்பதைத் தெரிவித்தால் நீங்கள் மயக்கம் போட்டு விழுந்து விடுவீர்கள்" என்றாள் மோகன சிரிப்புடன்.

"உன் தோற்றமே மயக்கும் படி தான் இருக்கிறது. யார் நீ?"

"பெண்ணை அனுப்புவதாகத் தான் சொல்லியிருப்பான் குண்டோதரன். வரப்போவது நான் என்பது அவனுக்கே தெரியாது.

"புதிர் போடத் தான் வந்தாயா?"

"இல்லை பங்களரே. விடிவைத் தேடி வந்திருக்கிறேன். விடுதலையைத் தேடி வந்திருக்கிறேன். எதைப் பற்றியும் கவலைப் படாமல் வந்திருக்கிறேன். எனக்கு விடுதலை தரவும் மறுவாழ்வு தரவும் உங்களால் முடியும். அதற்கான வாய்ப்பும் உங்களுக்கு வரப் போகிறது."

"சொல்வதை நேரடியாகச் சொல். சுற்றி வளைக்க வேண்டிய அவசியம் இல்லை."

"என் கணவரின் கொடுமையும் இம்சையும் என்னால் தாங்க முடியவில்லை. தங்காசனத்தில் அமர வைத்து விட்டு முள்ளால் குத்திக் கொண்டே இருக்கிறார்."

"உதறி விட்டுப் போவது தானே?"

"உதறினால் மட்டும் போதாது. அவரது உயிரை வாங்கினால் தான் நான் திருப்தி அடைவேன்"

"இதில் என் பங்கு என்ன?"

"அவரது உயிரை வாங்குவது."

"அவர் எங்கிருக்கிறார்?"

"இங்கு தான்."

"நான் எப்படி வெளியே வர முடியும் இப்போது?"

"இப்போது வேண்டாம். அவர் வெள்ளைத் தீவுக்கு வரும் போது செய்தால் போதும்."

"யார் அவர்?"

"உதயணன்."

"நீ?"

"அவரது மனைவி"

சிறிது நேரம் யோசித்த அவன் "இது பெரிய விஷயம்" என்றான்.

"தெரியும். அதனால் தான் உங்களிடம் வந்தேன்."

"இதைச் செய்தால் பரிசு?"

"இந்தக் கோட்டையின் அதிபதியாகலாம்!"

"அவனைக் கொன்றாலே கோட்டை என்வசம் தான். இதெப்படி பரிசாக முடியும்?"

"நீங்கள் கனவிலும் காணாத பொன்னும் மணியும் கிடைக்கும்."

"வேறு?"



"நானிருக்கிறேன்!"

"எதற்கு?"

"உங்களுக்குத் தான்!"

"உன்னைத் தருவாய் என்றால் இன்றே இப்போதே தரவேண்டும். அப்போது தான் உன்னை நம்ப முடியும்."

"நான் தயாராகத் தான் வந்திருக்கிறேன்."

"மிக்க சந்தோஷம்." என்று சொன்ன பங்கனன் அவள் அணிந்திருந்த நகைகளை எல்லாம் கழற்றும் படி சொன்னான். அவன் சொன்னதையெல்லாம் அவள் செய்தாள்.

இரவு உணவாக மீனும் மானுமாக உண்டிருந்த அவனது உடல் தெம்பேறித் திமிராக இருந்தது. அதைப் பூராவாக அவளிடம் காட்டி விடியும் வரை அதை நீடித்தான். வெறும் சக்கையாக எழுந்த அவளைப் பார்த்து "பெண்ணே, போய்ச் சொல் உன் உதயணனிடம். காமம் வேண்டுமானால் எனக்கு கைக்கெட்டிய தாரமாய் இருக்கலாம். ஆனால் துரோகம் கண்ணுக்கெட்டாத தூரம்." என்று கூறி அவளது கன்னத்தில் பளாரென்று அறைந்து அனுப்பி வைத்தான்.

விஷயத்தை ராவணனிடம் கூறிய போது, "உதயணனிடம் நீங்களாக இது பற்றி பேச வேண்டாம். வந்தவள் உதயணனின் மனைவியாக இருக்க முடியாது. உங்களைச் சோதித்துப் பார்க்க அனுப்பப்பட்டவளாக இருக்கலாம்" என்றான்.

காலையில் அவர்களைச் சந்தித்த உதயணை அவர்களுக்கு உதவத் தயார் என்று கூறி மூன்று நிபந்தனைகளைக் கூறினான்.

முதல் நிபந்தனை தேனாக இனித்தது பங்களனுக்கு.

மற்ற இரண்டு நிபந்தனைகளோ கடுக்காயை விட அதிகமாகக் கசந்தன.





# அத்தியாயம் நாற்பத்து மூன்று



## நிபந்தனையும் எதிரொலியும்

பங்களனுக்கு உதவுவதாக ஒப்புக் கொண்ட உதயனை "எனக்குச் சம்பளம் எவ்வளவு?" என்று கேட்டான்.

"நீங்கள் செய்யப் போகும் உதவிக்கு எவ்வளவு கொடுத்தாலும் தரும். நீங்களே போதும் போதும் என்று சொல்கிற அளவிற்குக் கொட்டிக் கொடுப்போம்" என்றான பங்களன்.

உறுதியற்ற இச்சொற்கள் உதயணனுக்குத் திருப்தியாக இல்லை. சிறிது நேரம் சிந்தித்து விட்டு "பங்களா, மூன்று நிபந்தனைகளைச் சொல்கிறேன். அதற்கு நீ சம்மதித்தால் என் உதவி உனக்குக் கிடைக்கும்." என்றான்.

"நிபந்தனைகள் எதுவும்? நான் தான் உங்களுக்கு போதுமான சம்பளம் தருவதாக ஒப்புக் கொண்டேனே" என்று கேட்டான் பங்களன்.

"பங்களா, உன் உதவிக்கு நான் வருகிறேன் என்பது சேரர்களுக்குத் தெரியும் போது நானும் அவர்களுக்கு விரோதியாகிறேன். அதனால் போரின் முடிவு என்னையும் பாதிக்கும். அதற்காக சில நிபந்தனைகளைப் போட வேண்டியது அவசியமாகிறது. அதோடு உனக்கு நான் மட்டும் உதவப் போவதில்லை. என் வீரர்கள், ஆயுதங்கள், உடைமைகள் மற்றும் என் நம்பிக்கை நண்பர்கள் உதவப் போகிறார்கள். அவர்களது சேதாரத்திற்கு யார் ஈடு செய்வது? ஆகவே தான் நிபந்தனைகள்"

"சரி, சொல்லுங்கள்."

"முதல் நிபந்தனை. தீவுக்கு நான் வந்ததும் போருக்கு தேவையான மாற்றங்கள் இருந்தால் அவைகளைச் செய்வேன். போர் என் இஷ்டப்படி தான் நடக்கும். அதில் தர்மமா அதர்மமா என்றெல்லாம் யாரும் கேள்வி கேட்கக் கூடாது. எது ஆதாயமோ அதற்காக எப்படி வேண்டுமானாலும் போர் தொடுப்பேன். இதில் எனக்கு முழுச் சுதந்திரம் வேண்டும்."

"ஆகா! இதுவா நிபந்தனை? தேனாமிர்தம். இப்படிப் பட்ட ஆள் தானே தேவை எங்களுக்கு?" என்று உள்ளூர கூறிக் கொண்ட பங்களன் "மிகவும் சம்மதம். போர் முடியும் வரை நீங்கள் தான் வெள்ளைத் தீவின் ராஜா. போதுமா" என்றான் பங்களன்.

"இரண்டாவது நிபந்தனை. நான் உனக்கு உதவி விட்டு கடைசியில் ஏமாற முடியாது. அதோடு நான்



பயன்படுத்தியுள்ள பொருட்களுக்கான மதிப்பு மிகவும் அதிகம். இவையெல்லாம் போர் முடிந்தபின் என்னால் பெற முடியாது. ஆகவே உன் பொக்கிஷத்தைப் பார்வையிட்டு அதில் எனக்குச் சேர வேண்டிய அளவைக் குறிப்பிடுவேன். போருக்கு முன்பாகவே அந்தப் பகுதி என் பொக்கிஷத்திற்கு வந்து சேர்ந்து விட வேண்டும்."

இது பேரிடியாக இருந்த பங்களனுக்கு அவனைப் பொறுத்த வரை உதயணனின் உதவியைப் பெற்றுக் கொண்டு போர் முடிந்த பின் கொடூரமாகக் கொலை செய்து விட வேண்டும் என்பது தான் நோக்கமாக இருந்ததே தவிர அவனுக்கு ஒரு பொற்காசு கூடத் தரத் தயாராக இல்லை. எனவே இந்த நிபந்தனை மிகவும் கசந்தது. "சரி ஒப்புக் கொள்வோம். இவன் அங்கு வந்து சேருவதற்குள் செல்வங்களில் பெரும் பகுதியை வேறெங்காவது மறைத்து விடுவோம்." என்று எண்ணிக் கொண்ட அவன் "ஒப்புக் கொள்கிறேன்." என்றான்.

"பொக்கிஷத்தின் சாவி இருக்கிறதல்லவா?" கேட்டான் உதயணன்.

"இருக்கிறது. ஆனால் என்னிடம் இல்லை. வெள்ளைத் தீவில் பொக்கிஷ காப்பாளனிடம் இருக்கிறது." என்று அவசரம் அவசரமாகச் சொன்னான் பங்களன்.

"அதனால் என்ன? உங்களோடு குண்டோதரனை அனுப்புகிறேன். அவனிடம் கொடுத்தால் அவன் பத்திரமாகக் கொண்டு வந்து விடுவான்." என்று சொன்ன உதயணன் "குண்டோதரனை யாரும் அற்பமாக எடை போட்டு விட வேண்டாம்." என்றான்.

மூன்றாவது நிபந்தனை என்ன?"

"போர் முடிந்ததும் வெள்ளைத் தீவு என் கட்டுப்பாட்டின் கீழ் வந்து விடவேண்டும்." என்று உதயணன் கூறியதும் "இது அநியாயம். அக்கிரமம். உங்களிடம் உதவியைக் கோரியதற்காக எங்கள் தீவையே அபகரிக்கப் பார்ப்பது அதர்மம். நான் ஒப்புக் கொள்ள முடியாது." என்று உடனடியாகச் சொன்னான் பங்களன்.

"அப்படியானால் வெள்ளைத் தீவு உங்கள் கட்டுப்பாட்டிலேயே இருக்கட்டும். மாதாமாதம் எனக்குக் கப்பம் கட்டி வந்தால் போதும்."

"கப்பமா எதற்கு? ஏற்கனவே நான்கு தாம்பாளம் பொன் கொடுத்திருக்கிறோம். பொக்கிஷத்திலிருந்து வேறு பங்கு கேட்டாய். சம்மதித்து விட்டோம். வேலைக்கு ஏற்ற ஊதியம் கொடுக்கப் படும் போது கப்பம் எதற்கு? போருக்குப் பிறகு நமக்குள் எந்த சம்மந்தமும் கிடையாது." என்றான் பங்களன்.

"அப்படியென்றால நான் உதவ முடியாது. நீங்கள் போகலாம்."

"அப்போது குறுக்கிட்ட ராவணன், "யாதவர் குலத்து அரசரே, உங்கள் நிபந்தனைகளையெல்லாம் ஒப்புக் கொண்டோம். நீங்கள் திருப்தியோடு வந்து உதவ வேண்டும்." என்று கேட்டுக் கொண்டான்.

ராவணனை எரித்து விடுவது போல் பார்த்த பங்களன், "ராவணா, நீ யார் நிபந்தனைகளை ஒப்புக் கொள்ள. வெள்ளைத் தீவின் தலைவன் நீயா, நானா?" என்று சீறினான்.

"கோபப்படுவதில் அர்த்தமில்லை. நிலைமையின் கடுமையை நீங்கள் இன்னமும் உணரவில்லை. ஆனால் அவர்



உணர்ந்திருக்கிறார். ஆகவே அவரது நிபந்தனைகள் நியாயமானவை. இப்போதைக்கு அவர் உதவாது போனால் நம் அழிவு நிச்சயம். அதற்குப் பிறகு கொடுக்கவோ வாங்கவோ ஏதும் இருக்காது." என்று சொன்ன ராவணன் மேற்கொண்டு பேச்சை விரும்பாமல் "நாங்கள் புறப்படுகிறோம் ஐயா. உடனடியாக வந்து விடுங்கள்." என்றான் உதயணனிடம்.

உதயணனும் "நல்லது. புறப்படுங்கள். உங்கள் பின்னாலேயே குண்டோதரன் வருவான். நான் இரண்டு நாட்களில் வருகிறேன்." என்றான்.

வெள்ளைத் தீவுக்குப் போய்ச் சேரும் வரை புலம்பிக் கொண்டே வந்தான் பங்களன்.

"தலைவரே, ஏன் இப்படி ஓயவில்லாமல் புலம்பிக் கொண்டிருக்கிறீர்கள்? என்னை நீங்கள் புரிந்து கொண்டது இவ்வளவு தானா? உதயணனிடம் பேச்சை வளர்த்துக் கொண்டே போனால் ஒரு பயனும் இருக்காது என்பதால் தான் அவனது நிபந்தனைகளை ஒப்புக் கொள்வதாகக் கூறி பேச்சை நிறுத்திக் கொண்டேன். உதயணனின் கடைசி நிபந்தனை மிகவும் அடாவடியானது தான். அதில் உங்களுக்கு எந்தவிதமான சந்தேகமும் வேண்டாம். பேராசை அவனை அப்படிப் பேச வைக்கிறது. அவனது அந்த அயோக்கியத்தனமான ஆசையை ஒப்புக் கொண்டதற்குக் காரணம், அவனது நிபந்தனையானது போருக்குப் பிறகு நிறைவேற்றப்பட வேண்டிய விஷயம் என்பதால் தான். நாம் ஏற்கனவே பேசிக் கொண்டபடி போர் முடிந்த பின் இவனை நாம் உயிரோடு விட்டு வைக்கப் போவதில்லை. நமக்குத் தெரிந்த சித்திரவதைகளையெல்லாம் செய்து அவனைக்

சொல்லத் தான் போகிறோம். அவனுக்கு அடிமையாகிற சூழ்நிலையோ கப்பம் கட்ட வேண்டிய சூழ்நிலையோ வரப்போவதில்லை. ஏன் வீணாகக் கவலைப் படுகிறீர்கள்" என்றான் ராவணன்.

அவனது பேச்சில் ஓரளவு சமாதானம் அடைந்த பங்களன் "பொக்கிஷ விஷயம் எப்படியாகி விட்டது பார்த்தாயா? அவன் இங்கே வருவதற்குள் பொக்கிஷத்திலிருந்து கணிசமான பகுதியை மறைத்து விடலாம் என்று எண்ணியிருந்தேன். அவன் பொக்கிஷசாலியைப் பற்றிக் கேட்ட போது கூட என்னிடம் இல்லை என்று சொல்லிப் பார்த்தேன். அவனோ இந்த குண்டோதரனை கூடவே அனுப்பி விட்டான். இனி நாம் ஒன்றும் செய்ய முடியாதே" என்று கேட்டான்.

"தலைவரே, உதயணனுக்கு உங்கள் மீது ஒரு துளி கூட நம்பிக்கை இல்லை. அதுவும் நேற்றிரவு உங்களைத் தேடி வந்த பெண்ணை நீங்கள் கசக்கிப் பிழிந்து விட்ட விதம் அவனை முற்றிலுமாக மாற்றி விட்டது."

"நானொன்றும் அவனது மனைவியைக் கெடுக்கவில்லையே? ஒரு சாதாரண பரத்தை தானே நேற்று வந்தாள்! அவளை இச்சிப்பதற்கு எனக்கு உரிமை இல்லையா?"

"தலைவரே, இது போல சோதனை ஏதாவது நடக்கும் என்று எதிர்பார்த்துத் தான் நேற்றிரவு நீங்கள் படுக்கை அறைக்குச் சென்ற போது உங்களை எச்சரித்தேன். உங்களிடம் வந்த பெண் கூறிய சதித் திட்டத்தை நீங்கள் ஏற்கவில்லை என்றாலும் அவளை நீங்கள் அனுபவித்து விட்டுத் தானே அனுப்பினீர்கள்? ஆகவே நீங்கள் இதே சந்திப்பு வெள்ளைத்



தீவில் நடந்திருந்தால் சதி திட்டத்திற்கு ஒப்புக் கொண்டு நடப்பீர்கள் என்பது தான் உதயணனின் கணக்கு. நீங்கள் அந்தப் பெண்ணைத் தொடாமலேயே அனுப்பியிருந்தால் உங்களை மதித்து ஓரளவிற்காவது உங்களை நம்பியிருப்பான். இப்போதோ உங்களைச் சிறிதும் அவன் நம்பவில்லை. அதன் காரணமாகத் தான் கடுமையான நிபந்தனைகள்."

இப்படிப் பேசிய படியே சென்ற அவர்கள் அன்று மாலையிலேயே வெள்ளைத் தீவை அடைந்தார்கள்.

பின்னால் புரவியொன்றுடன் வந்து கொண்டிருந்த குண்டோதரனை அழைத்த பங்களன் "நீ போய் ஓய்வெடு குண்டோதரா. நாளைக்குப் பொக்கிஷத்திற்குப் போகலாம்" என்றான்.

"முதலில் பொக்கிஷம். பிறகு தான் மற்றது." என்று உறுதியாகச் சொன்னான் குண்டோதரன்.

பங்களனுக்கு ஆத்திரமாக இருந்தது. அவனது புரவியைப் பார்த்து விட்டு "குண்டா, உன்னுடன் வருகிறதே, அது என்ன மிருகம்?" என்று சீண்டினான் வேண்டுமென்றே.

"பங்களரே, என்னை குண்டா என்று அழைப்பதை நான் ஆட்சேபிக்கிறேன். குண்டோதரா என்றே அழைப்பது நல்லது. அதோடு என்னுடன் வருவது புரவி தான்." என்றான் குண்டோதரன்.

"புரவியா? இதுவா? கழுதை போலிருக்கிறதே"

"அப்படிச் சொல்லாதீர்கள் ஐயா. இப்புரவியின் பெயர் விழுழுப்புலம். தேவேந்திரனுக்குச் சொந்தமான புரவி. மிகவும் ராசியானது. பொல்லாதது!"





முழுகமுனிஞ



"உளறாதே குண்டோதரா. கழுதை போலிருக்கும் இந்த விலங்கு தேவேந்திரனுக்குச் சொந்தமானது என்கிறாயே. இதை வைத்தியக்காரன் கூட நம்ப மாட்டான்."

"வைத்தியக்காரனுக்கு என்ன தெரியும் பங்களரே! அவனுக்குத் தான் புத்தி கெட்டுப் போயிருக்குமோ என்னை நம்புங்கள். இந்த அதிசயப் புரவி தேவேந்திரனுடையது தான். நானே நேரில் போய் கேட்டு வாங்கி வந்தேன்"

"இதன் பெயர் என்ன சொன்னாய்?"

"விழுமுழுமுழுவ!"

"உன் பெயர்?"

"முழுகமுனிஞ!"

"அருமையான பெயர்கள். இங்கே உன்னவர்களுக்கும் கூட்டமா!" என்று கிண்டலடித்த பங்களன் அவனது ஆகாசப் புளுகை நம்ப முடியாமல் "குண்டோதரா, பொக்கிஷச் செல்வங்களை எப்படி எடுத்துச் செல்வாய்" என்று கேட்டான்.

"கவலையே வேண்டாம். இரண்டு மூட்டைகளாக் கட்டி இப்புரவியின் முதுகில் இருபுறமும் தொங்க விட்டால் இது கழுதையைப் போல பொதியைத் தாங்கும்." என்றான் குண்டோதரன்.

அவனிடம் மேற்கொண்டு எதையும் பேச விரும்பாத பங்களன் அவனையும் தன் சகாக்களையும் அழைத்துக் கொண்டு ரகசியமான பொக்கிஷ இருப்பிடத்திற்குச் சென்றான். கோட்டைக்குள்ளே இருந்த மாளிகையொன்றின் பின்புறத்திலிருந்த தோட்டத்தில் அமைக்கப் பட்டிருந்த

அரங்கத்திற்குள் கட்டப் பட்ட பாதாள அறையில் பல இடங்களில் குவிக்கப் பட்டிருந்த பொன் மற்றும் முத்துக் குவியல்களையும், ஆபரணங்களையும், பொற்காசுகளையும், கழல்கள், வளையல்கள், சிலம்புகள், குண்டலங்கள், கிரீடங்கள் என்று அனைத்துச் செல்வங்களையும் காட்டினான். எல்லாவற்றையுமே பங்களனைத் தவிர மற்ற எல்லோருமே முதல் தடவையாக பார்க்கும் வாய்ப்பை பெற்றிருந்தார்களாதலால் குண்டோதரனைத் தவிர மற்ற அனைவருமே வாயைப் பிளந்தார்கள். அவர்களில் யாரையும் இருப்பிடத்தை விட்டு நகர வேண்டாம் என்று கட்டளையிட்டான் பங்களன்.

குண்டோதரன் அவர்களைப் போல அசரவில்லை. நிதானமாக அச்செல்வக் குவியல்களை ஒரு சுற்று சுற்றி வந்தான். ஓரிடத்தில் மாணிக்கப் பதக்கம் ஒன்றின் மேல படுத்துக்கொண்டு சீறிய கருநாகத்தை கண்ட குண்டோதரன், அலட்சியமாகவும் லாவகமாகவும் அதக் கழுத்தைப் பிடித்து தூக்கித் தனது பிடியை அழுத்தி விட்டு பாம்பை தூர எறிந்தான். அது செத்து விழுந்தது. சிறிது நேரம் வரைக் குவியல்களைக் கண்களால் கணக்கிட்ட குண்டோதரன் திடீரென்று தலைகீழாக நிற்கவே அதிர்ந்து போன பங்களன், "அடேய், என்ன செய்கிறாய் நீ?" என்று கேட்டான்.

"தலைகீழாக நின்று கணக்குப் போடுகிறேன். அப்படிப் போட்டால் தான் கணக்கு சரியாக வரும்." என்றான் குண்டோதரன்.

பயங்கரமான கருநாகத்தை தைரியமாகப் பிடித்துக் கொன்ற போது பெரிய திறமைசாலியைப் போல் தோன்றிய



குண்டோதரன் தற்போது கணக்கு பார்ப்பதற்கு தலைகீழாக நின்ற போது 'இவன் என்ன முட்டாளா அல்லது கிறுக்கனா?' என்று நினைத்தான் பங்களன்.

கணிசமான நேரத்திற்குப் பிறகு இயல்பு நிலைக்குத் திரும்பிய குண்டோதரன் "கணக்கு போட்டு விட்டேன். என் எஜமானரது கணக்கையும் பார்த்து விட்டேன். இங்கிருக்கும் செல்வங்களை சரிபாதியாகப் பிரியுங்கள். அதில் ஒரு பங்கு எங்கள் எஜமானருக்குப் போக வேண்டும்" என்றான்.

"டேய், முட்டாள்த் தனமான பெயரைக் கொண்ட குண்டா! என்னடா கணக்கு உன் கணக்கு! நாங்கள் காலம் காலமாக கஷ்டப் பட்டு சேர்த்த செல்வங்களில் பாதியை உங்களுக்குத் தரவேண்டுமா? பேராசை பிடித்த முண்டமே இப்போதே நீ அழிந்தாய்" என்று சீற்றமுடன் கூறி வாளை உருவினான் பங்களன்.

அடுத்த நிமிடமே குண்டோதரன் செயல்பட்டான் தரையில நிற்காமல், பறப்பது போல் தாவித் தாவி அங்கிருந்த அனைவரையும் புயல் போல் தாக்கினான். சில நிமிடங்களிலேயே எல்லோரும் அடி பட்டு விழுந்தார்கள். அவர்களையெல்லாம் தண்ணீர் அடித்து தெளிய வைத்த குண்டோதரன், "ஏற்கனவே நானும் என் எஜமானரும் சொல்லி விட்டோம். என்னை அற்பமாக எண்ண வேண்டாம் என்றால் நீங்கள் அலட்சியமாகவே நினைக்கிறீர்கள். போனது போகட்டும் செல்வங்களைப் பிரியுங்கள் சீக்கிரம்." என்றான்.

அடுத்த ஒரு நாழிகையில் செல்வங்கள் பிரிக்கப் பட்டு மூட்டைகளாக் கட்டப் பட்டு குண்டோதரனின் புரவியின்

முதுகில் தொங்கவிடப் பட்டன. குண்டோதரனும் அதன் மீது ஏறி அமர்ந்தான். புரவி பறந்தது.

மறுநாள் உதயணனின் படை வீரர்கள் இருபது பேர் வந்து சேர்ந்தார்கள். அவர்களோடு சில யானைகளும் புரவிகளும் கூட வந்தன.

அடுத்த நாள் உதயணன் வந்து சேர்ந்தான். அவனுடன் நான்கு கூண்டுகளும் இழுத்து வரப்பட்டன.

"கூண்டுகளில் இருப்பது என்ன?" என்று கேட்டான் பங்களன்.

"எனது நண்பர்கள் நால்வர்!" என்றான் உதயணன்.

"நண்பர்களா? கூண்டிற்குள்ளா?"

"பார்க்கிறீர்களா? கூண்டைத் திறக்கட்டுமா?" என்று கூறிய கூண்டைத் திறந்தான் உதயணன்.

கூண்டை விட்டு வெளியே வந்த நண்பர்களைக் கண்டதும் அரண்டு போனான் பங்களன்.





# அத்தியாயம் நாற்பத்து நான்கு



## நண்பர்கள்

உதயணன் கூண்டுகளைத் திறந்து விட்டதும் அவற்றிலிருந்து வெளிப்பட்ட நான்கில் ஒன்று, விர்ரெனப் பறந்து போய் கோட்டைக்குள்ளிருந்த ஒரு மொட்டைத் தூணின் மேல் அமர்ந்த விதம் மிகவும் பயங்கரமாக இருக்கவே, அரண்டு போனான் பங்களன். இப்படியொரு விசித்திரமான விலங்கை அவன் தன் வாழ்நாளில் கண்டதே இல்லை. கேள்விப் பட்டதுமில்லை. வான்கோழி அளவிற்கு பெரிதான உடலையும் பாம்புத் தலையையும் பெற்றிருந்த அந்த விலங்கு. கோழி உடலோடு பாம்புத் தலையைக் கொண்டு தூணின் மீது படமெடுத்துக் காட்டிய போது அசந்து போன பங்களன் "இது என்ன?" - என்று கேட்டான்.

"இது என்ன செய்யும் என்று கேட்டாயே, இது செய்ததைப் பார்த்தாயா. ஒரே நிமிடம் தான். ஆறு பேரின் உயிரை வாங்கி விட்டது. இது உன்னால் முடியுமா. உன் உபதலைவர்களால் முடியுமா? ஏன் என்னால் கூட முடியாது" என்றான் உதயணன்.

பங்கனும், உபதலைவர்களும், திடு வாரிகளும் பேச்சற்றுப் போனார்கள். ஏதோ புராண காலத்திற்கு வந்து விட்ட மாதிரி இருந்தது அவர்களுக்கு. அதே சமயம் எங்கிருந்தோ பறந்து வந்த மூன்று காக்கைகள் உதயணனின் தோளிலும் முதுகிலுமாக அமர்ந்தன. பிறகு கட்டிடப் பகுதியொன்றில் போய் உட்கார்ந்தன.

"இந்தக் காக்கைகளும் உங்கள் நண்பர்களா?" என்று கேட்டான் பங்கன்.

"இருக்கக் கூடாதா?" கேட்டான் உதயணன்.

"இவைகள் என்ன செய்யும்"

"யாரிடம் ஏவி விடுகிறோமோ அவர்களின் கண்ணைக் கொத்தி விட்டுப் போய் விடும். உன்னை நோக்கி அனுப்புகிறேன். பார்க்கிறாயா?"

"ஐயோ வேண்டாம். கோழிப் பாம்பு செய்த கோரத்தைத் தான் பார்த்தோமே" என்ற பங்கன் "உங்கள் நண்பர்களில் மனிதர்கள் யாரும் இல்லையா?" என்று கேட்டான்.

"என்னைச் சந்தித்ததிலிருந்து நீ கேட்ட உருப்படியான கேள்வி இது தான் பங்கனா. மனிதர்களில் பெரும்பாலானவர்கள் கெட்டவர்கள். சுயநலவாதிகள்



## கோழிப்பாம்பு



துரோகிகள். நன்றியில்லாதவர்கள். அவர்களிடம் நன்றாகப் பழகாவிட்டாலும் சரி பழகினாலும் சரி தங்களுக்கு லாபம் வரும் போது எந்த அயோக்கியத் தனத்தையும் செய்யத் தயங்க மாட்டார்கள். அப்படிப் பட்ட நண்பர்கள் எதற்கு? ஐந்தறிவு கொண்டவை என்று ஏகடியம் செய்யப் படும் விலங்குகளும் பறவைகளும் அப்படி அல்ல. அவற்றை நேசித்து பழக்கி வைத்தால் சொன்ன படியே செயல்படுபவை அவை. அவற்றுக்குத் துரோகம் செய்யவோ சமயம் பார்த்து காலை வாரவோ தெரியாது. இக்காக்கைகளை நான் வளர்த்து பழக்குகிறேனே தவிர உணவைத் தருவது கிடையாது. அவைகளே சென்று இரைதேடி உண்கின்றன. ஆனால் எனக்குக் கட்டுப் படுகின்றன. அவற்றுக்கும் எனக்கும் என்ன சம்மந்தம்? எனக்கு ஏன் கட்டுப்பட வேண்டும்? அன்பு' பங்களா அன்பு! அதை இதயப் பூர்வமாகக் காட்டி விட்டால் அவை நம்மை விட்டுப் போவதில்லை."

இதைக் கேட்டுப் பெரிதும் வியந்த பங்களன் "இது போன்ற வேறு உருப்படிகளை உங்கள் ஊரில் வைத்திருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"இருக்கலாம். அதைப் பற்றி நான் ஏன் சொல்ல வேண்டும்?" என்று பதிலளித்த உதயணன் "இனி நாம் தீவையும் கோட்டையையும் பார்க்க வேண்டும். பங்களனும் மூன்று உபதலைவர்களும் என்னுடன் வந்தால் போதும். தீவு வாசிகள் யாரும் வேண்டாம். எல்லோரையும் அனுப்பி விடுங்கள்" என்றான்.

"ஏதாவது உணவு அருந்தலாமே?" கேட்டான் ராவணன்.

"உணவு பற்றிய கவலை வேண்டாம். உணவில்லாம





காக்கைகள்

இருபது நாட்கள் வரை என்னால் திடகாத்திரமாக இருக்க முடியும்" என்று சொன்ன உதயணன் "யாராவது ஆசைப் பட்டு கோழிப் பாம்பைப் பிடித்து சமையல் செய்து சாப்பிட்டு விடப் போகிறீர்கள்! அவற்றுக்கு உடல் முழுதும் விஷம் சாப்பிட்டால் உடனே செத்துப் போவீர்கள்" என்றான்.

"சாப்பிடுவதா? இவற்றைப் பார்த்த பிறகு உணவே எங்களுக்குப் பிடிக்கவில்லை. உங்கள் கோழிப் பாம்புகளை எங்கள் கண்ணில் படாமலிருந்தாலே போதும்" என்றான பங்களன்.



வெள்ளைத் தீவுகளையும் கோட்டை, அகழிகளையும் சுற்றிப் பார்த்து முடிக்க இரவாகி விட்டது.

"நான் தங்க தனியாக ஒரு இடம் கிடைக்குமா என்று பார்த்துக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாக ஆளரவமற்ற மீன் தீவு கிடைத்து விட்டது. அங்கே தங்குகிறேன் நான்" என்றான் உதயணன்.

"மீன் தீவிலா? வேண்டாம்" என்றான் பங்களன்

"ஏன்?"

"மீன் தீவு என்று அத்தீவிற்குப் பெயர் இருந்தாலும் எல்லோரும் அதைப் பேய்த் தீவு என்று அழைக்கிறார்கள்."

"அதனாலென்ன?"

"அதற்குக் காரணம் அங்கே பேய் வசிப்பதால் தான்"

"சுமாராக எத்தனைப் பேய்கள் இருக்கும்?"



"நாங்கள் மரண தண்டனை விதிக்கும் நபர்கள் அத்தீவில் தான் பலவழிகளில் உயிர் நீக்கப்படுவார்கள்."

"எத்தனை பேர்களுக்கு நீ தண்டனை வழங்கியிருப்பாய்?"

"அது ஆயிரக் கணக்கில் இருக்கும்" என்று சொல்லவந்த பங்களன் "பத்துப் பன்னிரண்டு பேர் இருக்கும்" என்றான.

"பொய். நீ நூற்றுக் கணக்கான பேர்களைக் கொன்றிருப்பாய். அதைப் பற்றிய கவலை எனக்கில்லை. எனது நண்பர்களில் பேய்களும் பிணங்களும் உண்டு. நான் பேய்த் தீவிலேயே தங்கிக் கொள்கிறேன்" என்ற உதயணன் "பங்களா, என்னுடன் வந்த போர் வீரர்களையும், யானைகளையும், புரவிகளையும் நன்றாகக் கவனித்துக் கொள். என்னைப் போல அவர்களால் பட்டினியாக இருக்க முடியாது" என்று கூறிவிட்டு பேய்த் தீவிற்குத் தனது மிருக நண்பர்களுடன் புறப்பட்டான்.

அத்தீவிற்குப் போனதும் காட்டுப் புறத்திலிருந்து விலங்குகளின் சப்தங்களும் அமானுஷ்ய குரல்களும் கேட்டபடியே இருந்தன. "பேய்களாம் பேய்கள். பேய்களை விடக் கொடிய இக் கொள்ளைக்காரர்களுக்குப் பேயைக் கண்டால் பயமாம். பேய் இல்லாத இடம் எது? இக்கடலில் எத்தனை பேர் சாகிறார்கள்? அவர்கள் பேயாக அலைய மாட்டார்களா? இவர்கள் கடலில் போகும் போது பேய்கள் அச்சுறுத்தாதா? இவர்களுக்கேது பேய் பயம்? வேறேதோ இத்தீவில் இருக்க வேண்டும். அதை நான் பார்த்து விடக் கூடாது என்று நினைக்கிறான் பங்களன். அதற்காகப் பேய பயம் காட்டுகிறான். பேய்கள் என் நண்பர்கள் என்பது

அவனுக்குத் தெரியாது. தேவைப் பட்டால் இத்தீவில் என்ன மர்மம் இருக்கிறது என்பதையும் பார்த்து விடலாம்" என்று சொல்லிக் கொண்ட உதயணன், "என்ன நண்பர்களே, காட்டிற்குள் ஒரு சுற்று போய் விட்டு வாருங்களேன். நான் சற்று ஓய்வெடுக்கிறேன்" என்றதும் கோழிப் பாம்புகள் காட்டை நோக்கி நகர்ந்தன. காக்கைகள் மரக்கிளைகளில் படுத்தன.

தரையில் படுத்து உதயணன் தலைக்கு வைத்துக் கொள்ள கல்லைத் தேடி கிடைக்காததால், அருகிலிருந்து மண்ணை மேட்டையே தலையணையாக வைத்துக் கொண்டு, தான் பார்த்த வெள்ளைத் தீவு கூட்டங்களையும் கோட்டையும் பற்றி ஆராய்ந்து பார்த்தான். அப்போது காட்டிற்குள்ளிருந்து ஒரு நரி பாய்ந்து வந்தது. அவனிடம் வந்ததும் அவனது உடலை மோப்பம் பிடித்தது. பிறகு அவனது பக்கத்தில் அமர்ந்து கொண்டது.

விடியற்காலையில் உதயணன் கண்விழித்த போது அற்புதமானதொரு காட்சியைக் கண்டான். அவனைச் சுற்றி நூற்றுக்கும் மேற்பட்ட நரிகளும் ஓநாய்களும் அமர்ந்திருந்தன. கோழிப் பாம்புகள் மரக்கிளைகளில் இருந்தன. சற்று தூரத்தில் இரண்டு சிறுத்தைப் புலிகள் சாதுவாக அமர்ந்திருந்தன. "இத்தனை விலங்குகளும நினைத்திருந்தால் ஒரு சில நிமிடங்களில் அவனைக் கடித்துக் குதறியிருக்கும் உருத்தெரியாமல் செய்திருக்கும். ஆனால் மாமிசப் பட்சிணிகளான அனைத்தும் நாய்களைப் போல் அடக்கமாக எப்படி அமர்ந்திருக்கின்றன. மனிதனை விட விலங்குகள் புத்திசாலிகள். மனிதன் விலங்கைக் கண்டால் உடனே கொல்கிறான். விலங்குகளோ மனிதனைக் கண்டாலே



கொல்ல முற்படுவதில்லை. அவைகள் தனக்கு ஆபத்து வரும் என்று அறிந்தால் மட்டுமே தாக்க முற்படுகின்றன. அந்த அடிப்படையிலேயே இந்த நரிகளும பிறவும் கொலை வெறியின்றி அமர்ந்திருக்கின்றன. "பேசாமல் இந்த மனிதர்களை யெல்லாம் கொன்று விட்டு உலகம் முழுவதும் விலங்குகளை மட்டுமே வளர்த்து அவைகளைப் பழக்கினால் எவ்வளவு நன்றாக இருக்கும்?" என்றெல்லாம் நினைத்த உதயணன் "நண்பர்களே, விரைவில் போர் மூளப் போகிறது. எதிரிகள் இத்தீவில் உள்ள காட்டை எரிப்பார்கள். நீங்களெல்லாம் தப்ப முடியாமல் கருகிச் சாவீர்கள். அதை எப்படி நான் அனுமதிப்பது? நீங்களெல்லாம் என்ன நினைக்கிறீர்கள்?" என்று அவற்றைப் பார்த்துக் கேட்டான்

நரிகள் சில ஊளையிட்டு அழுதன.

"அழாதீர்கள். உங்களை நிச்சயமாகக் காப்பாற்றுகிறேன்" என்று கூறிவிட்டு படகில் ஏறி கோட்டைக்குச் சென்ற உதயணன் பலகனையும் இதர முக்கியஸ்தர்களையும் ஆலோசனைக்கு அழைத்தான் அனைவரும் உடனடியாக வந்துக் கூடினார்கள்.

"இக்கோட்டையை வடிவமைத்தது யார்?" என்று கேட்டான் உதயணன்.

"நான் தான்" என்றான் ராவணன்.

"நீ ஏன் முட்டாளானாய்?"

"தாங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை"

"உனக்கெப்படி உன் முட்டாள்தனம் புரியும் ராவணா, இங்கே இந்தக் கோட்டையே அவசியமில்லாத ஒன்று. இதையும

உதயணன் அதைப் பொருட்படுத்தவில்லை. "அடுத்ததாக இந்த வெள்ளைத் தீவுகளில் வசிக்கும் அனைத்து மக்களையும் வெளியேற்றுங்கள். இங்கிருந்து மேல் வடக்கில் இருக்கும் தீவில் போர் முடியும் வரை வசிக்கட்டும்" என்றான்.

பங்களன் உடனடியாக அவனது கட்டளையை நிறைவேற்றினான்.

"பங்களா, இங்குள்ளத் தீவுகள் மொத்தம் 11. கிழக்கில் முதலாவதாக உள்ள தீவை முகப்புத் தீவு என்று அழைக்கிறீர்கள். இங்கிருந்து கப்பல்கள் செல்கின்றன வருகின்றன. இதே போல் மேற்கில் இருக்கும் தீவு பேய்த்தீவு அல்லது மீன் தீவு. நீ வசிக்கும் தீவு கோட்டைத் தீவு. இந்தப் பெயர்கள் இவற்றுக்கு அப்படியே இருக்கட்டும். மீதியுள்ள 8 தீவுகளுக்கும் அட்டதிக்கு பாலகர்களின் பெயர்களை * வைக்கிறேன். அவை முறையே இந்திரன் தீவு, அக்னித் தீவு, யமன் தீவு, நிருதித் தீவு, வருணன் தீவு, வாயுத்தீவு, குபேரத் தீவு, ஈசானன் தீவு, என்று சொல்லித் தீவுகளைச் சுட்டிக் காட்டினான் உதயணன்.

"வெள்ளைத் தீவுகளுக்கே புதிய அந்தஸ்து வந்து விட்ட மாதிரி இருக்கிறது" என்றான் பங்களன்.

"இந்த தீவுகளில் மக்கள் வசித்த காரணத்தால் காடு எதுவுமில்லை. மரங்கள் நிறைய இருக்கின்றன.

சில இடங்களில் சிறிய கட்டிடங்கள் இருக்கின்றன. மரங்களிலும் இந்தக் கட்டிடங்களிலும் அம்புகளை எய்யும்

* பக்கம் 33 அபிதான சிந்தாமணி by ஏ. சிங்காரவேலு முதலியார்.



பொறிகளை அமையுங்கள். எதிரிக்கப்பல்களை நம்மை நெருங்கும் போது தீயம்புகளை வீசி அழிக்கவேண்டும்" என்றான் உதயணன்.

பங்களன் ஏற்றுக் கொண்டான்.

"பழுது பார்க்க அனுப்பப்பட்டு திரும்பி வந்துள்ளதாகச் சொன்னாயே அந்த மரக்கலங்கள் எவ்வளவு?"

"இருபத்து ஆறு."

"ஏற்கனவே இங்கு இருப்பவை?"

"எரிந்தது போக மீதி எட்டு."

"அவை முகப்புத் தீவுக்கு முன்னால் அணிவகுத்து நிற்கின்றன அல்லவா?"

"ஆமாம்"

"அந்த ஏற்பாடு வேண்டாம். நம்மிடம் மொத்தம் 34 கப்பல்கள் உள்ளன. இவற்றில் கோட்டைத் தீவைத் தவிர இதர 10 தீவுகளுக்கு முன்னால் இரண்டிரண்டு மரக்கலங்களாக நிற்கட்டும் மீதியுள்ள பதினான்கு கலங்கள் கடலில சஞ்சரிக்கட்டும்"

"அப்படியே ஆகட்டும்"

"அந்தப் 14 கப்பல்களில் ஒன்றை மட்டும் தற்காலிகமாக எனக்குத் தா. போருக்கு முன்னால் மீன் தீவில் இருக்கும் விலங்குகளை எல்லாம் கப்பலில் ஏற்றி மலைக் காடுகளில் விட்டு விடுகிறேன்."

"எதற்கு?"

"போரின் போது அந்த அப்பாவி விலங்குகள் - என் நண்பர்கள் அழிந்து விடக் கூடாது"

"ஆனாலும் உங்கள் மனது நிரம்பவும் இளகியது. இப்போதே ஏற்பாடுகிறேன். இப்படி இடம்பெயர விலங்குகள் சம்மதிக்குமா?"

"அதெல்லாம் குண்டோதரன் பார்த்துக் கொள்வான்."

இதையடுத்து ஐந்து நாட்களில் அனைத்து ஏற்பாடுகளும் முடிந்து வெள்ளைத் தீவு போருக்கு ஆயத்தமாயிற்று.

"நாம் தயார் என்று கொடி போடுங்கள்" என்று உத்திரவிட்டான் உதயணன்.

அதையடுத்து வெள்ளைத் தீவின் மூலை முடுக்குள் உட்பட அனைத்து இடங்களிலும் கடம்ப மர ஓவியம் தீட்டப்பட்ட கொடிகள் பறக்க விடப் பட்டன.

வெள்ளைத் தீவு பெரும் கம்பீரத்தைப் பெற்று விட்டதைக் கண்டு பூரித்துப் போன பங்களன் உதயணனைக் கட்டிக் கொண்டு "வாழ்நாள் முழுதும் நான் உங்களுக்கு அடிமை" என்றான் பரவசத்துடன்.

அடுத்த நாள் வெள்ளைத் தீவின் வடக்கேயிருந்து ஒரு பூதம் கடலில் வெளிப்பட்டது.

"ஐயோ, இதோ பாருங்கள். கடலில் பூதம்" என்றான் பங்களன்.

"ஒரு வகையில் அது பூதம் தான். மரக்கல பூதம். நடமாடும் எரிமலை" என்று கூறி அதைப் பற்றி விவரித்தான் உதயணன்.

மலைப்பு மிகுதியால் மயங்கிப் போய் விழுந்தான் பங்களன்.



# அத்தியாயம் நாற்பத்து ஐந்து



## ஆபுத்திரனின் உணர்ச்சி அலைகள்

சேர மன்னன் அவையில் ஒற்றர் தலைவன் நீலன் வெள்ளைத் தீவில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும் போருக்குத் தயார் என்று கொடி நாட்டுதல் செய்து விட்டதையும் விவரமாக எடுத்துக் கூறினான். அதே சமயம் அவன் காணாமலும் கேள்விப் படாமலும் விட்ட கோழிப் பாம்புகளின் வரவு, தீவுகளில் அம்பெறியும் பொறிகளை அமைத்தது, புது மரக்கலத்தின் வரவு ஆகியவற்றைப் பற்றி எதையும் சொல்லவில்லை.

"பங்களனுக்குப் போர்த் துணைவனாக உதயணன் கிடைத்திருக்கிறான். அது பங்களனுக்குப் புதுத் தெம்பைக் கொடுத்திருக்கிறது. போருக்கு அறை கூவல் விடுத்திருக்கிறான்

"என்ன சொல்கிறாய்" என்று ஆபுத்திரனைக் கேட்டான் செங்குட்டுவன்.

"புலவர் பெருமான் இயற்றிய செய்யுள் அவனை இந்த அவலிற்கு முடுக்கி விட்டிருக்கிறது போலும். அதுவும் சேர நாட்டிடம் தைரியம் கொள்ளக் காரணமாக வந்திருக்கிறதென்றால் அதுவும் புலவர் பெருமான் வரிகள் மூலம் தான் சாத்தியமாகியிருக்க வேண்டும். அவனுக்குத் துணையாக உதயபானன் என்ன இந்திரனே வந்தாலும் வரட்டும். சந்திக்க நாம் தயார். நாளைக் குறித்துக் கொடுங்கள் மன்னவா" என்றான் ஆபுத்திரன்.

"இத்துடன் இந்த அவை கலையட்டும். நாளை சந்திப்போம். இடையில் நிமித்தகனிடமும் நாளும் எப்படி இருக்கிறதென்று பார்ப்போம். நீ மட்டும் இரு ஆபுத்திரா பலவா விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும்" என்றான் சேரமன்னன்.

எல்லோரும் போனபின் சேரமன்னனிடம் கழுகுமலை விஷயத்தைத் தவிர அனைத்து விவரங்களையும் கூறிய ஆபுத்திரன் "மன்னவா, கொஞ்ச நாட்களாக வால் நட்சத்திரம் தெரிவதை தாங்கள் கவனித்தீர்களா? இலங்கையில் உள்ள நிமித்தகர்கள் பெரும் தீங்கு ஒன்று நடைபெற விருப்பதாகவும் நாடு பற்றி எரியப் போவதாகவும் கூறுகிறார்கள். எந்த நாடு என்று சொல்லவில்லை. எனக்குக் கலக்கமாக இருக்கிறது" என்றான்.

"வால் நட்சத்திர விஷயம் சேர நாட்டிலும் பீதியைக் கிளப்பி விட்டிருக்கிறது. சகோதரர் இளங்கோவடிகள் கூட அடிக்கடி ஒற்றைச் சிலம்புடன் ஒரு உருவம் சதா எனக்



வருவதாகவும் கனவில் அவள் வந்து அரற்றுவதாகவும் எங்கு பார்த்தாலும் புகை மண்டலமாக இருப்பதாகவும் சொல்லி விட்டு மதுரைக்குப் புறப்பட்டுப் போயிருக்கிறார். அரசவைக்கு நாசம் ஏற்படப் போவது நிச்சயம் தான் ஆபுத்திரா. அதைப் பற்றிக் கவலைப்பட்டு நாம் செய்யக் கூடியது எதுவுமில்லை. சமணத் துறவிகளும் பௌத்த பிட்சுக்களும் தங்கள் விஹாரங்களில் சேர நாட்டிற்கு வால் நட்சத்திரத்தால் தீங்கு வரக் கூடாது என்று விரதமிருக்கிறார்கள். நான் வேண்டாம் என்று சொல்லியும் அவர்கள் கேட்க வில்லை. நடப்பது நடக்கட்டும் என்று இருக்கிறேன் நான்" என்று கூறிய செங்குட்டுவன் "ஆபுத்திரா, வெள்ளைத் தீவின் மீதான படையெடுப்பு ஒரு வாரத்திற்குள் துவங்க வேண்டும். இல்லையென்றால் நம்மீது இழிவான அவதூறுகளைப் பரப்புவான் பகைவன். அதேசமயம் நாளை அவை கூடும் போது சேரர் கடற்படையை யார் நடத்துவது என்பது முடிவாகலாம். அந்த முடிவிற்கு உன் ஒத்துழைப்பு அவசியம்" என்றான்.

"ஒத்துழைப்பா? மன்னவா, உங்கள் ஆணைக்குக் கட்டுப்பட்டவன் நான். எந்தக் கட்டளையாக இருந்தாலும் ஏற்பவன் நான். தங்களுக்குப் புறம்பாக ஒரு போதும் நினைக்கவும் மாட்டேன். செய்யவும் மாட்டேன்."

"அது தெரியும் ஆபுத்திரா. நீ இன்று போய் நாளை வா."

மன்னனிடமிருந்து விடைபெற்றுக் கொண்ட ஆபுத்திரன் நேரே பரணரின் இல்லத்திற்குச் சென்றான். அவனை வரவேற்று உபசரித்த அவர், "உன் ஓலையும் மயிலும் கிடைத்தன. அனுப்ப வேண்டியவர்களுக்கு அனுப்பி விட்டேன்" என்றார்.

தான் எதைப் பற்றிக் கேட்க வேண்டும் என்று நினைத்திருந்தானோ அதற்கான பதிலை அவராகவே கூறிவிட்டதால் திருப்தியடைந்தான் ஆபுத்திரன்.

பரணர் மேலும் பேசமுற்பட்டு "நீ பயணம் போன பிறகு இங்கு வந்த சேர இளவரசர் பூங்கொடியை மிரட்டிய சமயத்தில் நானும் மன்னரும் வந்து விட்டோம். இளவரசர் பாடு திண்டாட்டமாகி விட்டது. பூங்கொடியும் தன் மனம் திறந்து பேசினாள். எல்லாவற்றையும் கேட்ட பின் குட்டுவனை கடுமையாக எச்சரித்து மன்னர் பூங்கொடியை தன் அந்தப்புரத்திற்கே அழைத்துச் சென்று விட்டார். ஆனால் அதற்குப் பிறகு தான் அதிசயம் நடந்தது. குட்டுவனைப் பற்றி நான் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். என் மாணவன் இப்படி நடந்து கொள்கிறானே என்று வேதனைப் பட்டேன். அந்த வேதனைகளையெல்லாம் குட்டுவன் போக்கடித்து விட்டான். அவன் உண்மையாகவே மாறிவிட்டான் ஆபுத்திரா. தன் செயல்களுக்காக வெட்கப்பட்டு மன்னரிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டான். மன்னரின் மெய்காக்கும் பணியை ஏற்றுக் கொண்டான். முன் போல் பதுங்கியும் ஒதுங்கியும் வாழ்வதில்லை. வெளிப்படையாக நகரில் புரவியில் பவனி வருகிறான். பல இடங்களில் விசாரணை நடத்துகிறான். சந்தேகத்திற்கு ஆளானவர்களைக் கைது செய்து விசாரிக்க உத்தர விடுகிறான். அரசு பொக்கிஷ சாலைக்கு தினமும் வருகிற வருவாயை நேரில் சென்று கணக்கிடுகிறான். தினசரி செலவுகளைக் கணக்கிடுகிறான். சேரரது படைகளைப் பற்றிய விவரங்களையெல்லாம் சேகரித்து விட்டு சேர நாட்டின் தரைப் படை எண்ணிக்கையும் புரவிப்படை எண்ணிக்கையும் குறைவாக இருப்பதாக மன்னரிடம் எடுத்துச் சொல்லி



அவற்றைப் பெருக்குவதற்கான ஆணையைப் பெற்று சேனாதிபதி வில்லவன் கோதையிடம் கூறி நடவடிக்கை எடுக்க சொல்லியிருக்கிறான். இம்பெருவழுதியின் நடவடிக்கைகளை நேரில் பார்வையிட்டு ஆலோசனை சொல்கிறான். அமைச்சரிடம் சதா சர்வகாலமும் நிர்வாக விஷயங்களைப் பற்றிப் பேசுகிறான். புத்த சமண மதத்துறவிகளையும் சந்தித்து குறை நிறைகளைக் கேட்கிறான். மக்களின் குறை கேட்கும் நாள் என்று வாரந்தோறும் ஒரு நாளில் ஒவ்வொரு பகுதியிலும் குறைகளைக் கேட்டு நேரடியாக மன்னரிடம் சொல்லி நிவர்த்தி செய்கிறான். மன்னருக்கு வேலையே இல்லாமல் செய்து விடுவான் போலிருக்கிறது. இடையே ஒரே ஒருமுறை மன்னரின் அனுமதியோடு பூங்கொடியைச் சந்தித்தான். தன் செயல்களுக்காக மன்னிப்பு கேட்டு விட்டு பதிலையும் எதிர் பாராமல் திரும்பி விட்டான்" என்றான்.

"இதைவிட எனக்கு மகிழ்ச்சி தரக்கூடிய விஷயம் வேறு இருக்க முடியாது புலவர் பெருமானே. தங்கள் மாணாக்கரும் மாமன்னரின் புதல்வரும் இப்படித் தான் இருக்க வேண்டும் என்பதை நிரூபித்து விட்டார். அவர் நீடூழி வாழ வேண்டும்" என்று சொன்ன ஆபுத்திரன், "தங்கள் மகளை நான் பார்க்கலாமா புலவர் பெருமானே?" என்று கேட்டான்.

"ஆபுத்திரா, இளவரசர் மனம் மாறி விட்ட பின் பூங்கொடிக்கு எந்த ஆபத்துமில்லை என்பதால் அவளை அரண்மனையிலிருந்து சென்ற வாரமே இங்கு அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். தற்போது அவள் இங்கில்லை. யாரோ ஒரு தோழியுடன் வெளியே சென்றிருக்கிறாள். நாளை வாருங்கள். பார்க்கலாம். இப்போது பார்க்க

வேண்டுமென்றால் நீங்கள் அளித்த வெள்ளைமயில் உள்ளே துள்ளியாடிக் கொண்டிருக்கிறது."

"அது ஆனந்தமாக ஆடட்டும் ஐயா. நாளைக்கே நான் வருகிறேன்" என்று கூறிவிட்டு தன் இல்லத்திற்கு புறப்பட்டான் ஆபுத்திரன்.

தனது இல்லத்தில் காத்திருந்த வில்லவனை உபசரித்து விட்டு "வில்லவா, பல்வேறு விஷயங்கள் என்னை அழுத்திப் பிடிக்கின்றன. அவற்றையெல்லாம் நானே கவனித்துக் கொள்ள முடியும். ஒரு விஷயத்தைத் தவிர. அது கழுகு மூக்கனின் விஷயம். அந்த மனிதன் சேர நாட்டிற்கு புறப்பட்டு விட்டதாக இலங்கை சமந்த கூடத்தில் நமக்குச் செய்தி கிடைத்ததே தவிர சேர நாட்டில் எங்கே என்று விவரம் தெரியவில்லை. எனக்கென்னமோ அந்த மனிதன் சேரர் தலைநகரான இந்த வஞ்சியில் தான் இருப்பான் என்று தோன்றுகிறது. என் கணக்கு சரியாக இருந்தால் அவன் சேரமன்னரைச் சந்திக்கவே இங்கே வந்திருக்க வேண்டும். இதுவரையில் அந்த சந்திப்பு நடைபெறவில்லை என்பது என் ஊகம். ஆகவே அவனைக் கண்டு பிடித்து எனக்குத் தெரிவிக்க வேண்டிய முக்கியப் பொறுப்பை உன்னிடம் ஒப்படைக்கிறேன். வெள்ளைத் தீவு போர் தொடங்குவதற்குள் கழுகு மூக்கனை நான் சந்தித்தால் தான் எனக்கு நிம்மதி உண்டாகும். எனவே என் நிலையில் இருந்து இப்பணியை நீ செய்ய வேண்டும். யாரையும் துணைக்கு வைத்துக் கொள்ளாதே. நீயாகவே துப்பறிவது தான் நல்லது" என்றான்.

வில்லவன் அவனது கோரிக்கைக்கு மறுப்பேதும் சொல்லாமல் புறப்பட்டான்.



அன்றிரவெல்லாம் ஆபுத்திரனுக்கு உறக்கம் வரவில்லை. மற்ற விஷயங்கள் அவனுக்கு ஓரளவிற்கு நிம்மதியை அளித்திருந்ததால் கழுகு மூக்கனைப் பற்றியே அசை போட்டுக் கொண்டிருந்தான். அந்த மனிதனுக்கு கடைசி காலம் நெருங்கிக் கொண்டிருப்பதாக அவனது சகோதரன் சமந்த கூடத்தில் கூறியிருந்தது அவனது நினைவிற்கு வந்தது. கடைசி காலம் நெருங்கி விட்டதால் தான் தனக்குள் புதைந்து கிடக்கும் மர்மத்திற்கு தீர்வு காண சேரநாட்டிற்கு அவன் வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது அவனுக்கு. இலங்கையின் ராஜவம்சத்துடன் எந்தத் தொடர்பும் இல்லாத கழுகுமூக்கனுக்கு சேரநாட்டுடன் என்ன தொடர்பு இருக்க முடியும் என்று அவனுக்குப் புரியவில்லை.

மறுநாள் அவை கூடிய போது சேரமன்னன் எதையும் சுற்றி வளைக்காமல் "வெள்ளைத் தீவுகளின் மீது படையெடுக்கவிருக்கும் கடற்படைக்குத் தளபதியாக யாரை நியமிக்கலாம் என்பதைப் பற்றி ஆலோசிக்கவே இந்த அவை கூடியிருக்கிறது. உங்கள் கருத்துக்களைச் சொல்லலாம்" என்று நேரடியாகவே விஷயத்திற்கு வந்தான்.

சேனாதிபதி வில்லவன் கோதை எழுந்து "இதற்கு ஆலோசனை தேவையில்லை. யாரை வேண்டுமானாலும் நியமிக்க மன்னருக்குப் பூரண அதிகாரம் உண்டு" என்றான்.

"இருந்தாலும் கருத்துகள் கேட்பதில் பயன் இருக்கலாம். ஆகவே தான் கேட்கிறேன்" என்றான் சேரமன்னன்.

அமைச்சர் அழும்பில் வேள் எழுந்து "வெள்ளைத் தீவு விவகாரங்களை நேரில் இருந்து பார்த்த அனுபவம்

ஆபுத்திரனுக்கு இருக்கிறது. ஆகவே அவனையே கடற்படைத் தளபதியாக நியமிக்கலாம்" என்றார்.

"அப்படிப் பார்த்தால் ஆபுத்திரனை விட ஒற்றர் படைத் தலைவர் நீலன் தான் சமீபகாலமாக வெள்ளைத் தீவில் இருந்து அங்கு நடந்த ஏற்பாடுகளை கண்டு வந்திருக்கிறார். அதனால் அவரைத் தளபதியாக நியமித்து விட முடியுமா? தளபதி பதவிக்கு இதுவல்ல தகுதி" என்றான் கடற்படை உபதளபதி ஒருவன்.

மற்றொரு உபதளபதி எழுந்து "தற்போது செய்ய உத்தேசித்திருக்கும் கடற்படைத் தளபதி நியமனம் வெள்ளைத் தீவு போருக்கு மட்டுமா அல்லது அதற்குப் பிறகுமா என்பது உறுதி செய்யப்பட வேண்டும்" என்றான்.

மற்றொரு உபதளபதி எழுந்து "தளபதி நியமனத்தில் ஆழ்ந்த அறிவும் நீண்ட அனுபவமும் உள்ள நபரை தேர்ந்தெடுப்பதே நல்லது" என்றான்.

"உமது பெயரென்ன?" கேட்டான் செங்குட்டுவன்.

"கடல் வேந்தன்" என்றான் அவன்.

"இது இயற்பெயரா? சிறப்புப் பெயரா?"

"சிறப்புப் பெயர். தங்கள் தந்தையார் அளித்தது."

"உமது இயற்பெயர்?"

"கரிகாலன்."

"நம்மிடையே எத்தனை கடற்படை உபதளபதிகள் இருக்கிறார்கள்?

"ஐந்து பேர்."



"யார் யார்?"

"கரிகாலன் என்கிற நான். இங்கே முதலில் பேசிய நாகசுந்தரன். இரண்டாவதாகப் பேசிய நலங்கிள்ளி. இம்மூவர் போக சங்கமன், சாத்துவன் என்று இருவர்"

"இவரில் மூத்த உபதளபதி யார்?"

"நான் தான்."

"உமது கடல் அனுபவங்கள் என்ன?"

"தங்கள் தந்தையார் வெள்ளைத் தீவைத் தாக்கிய போரில் கலந்து கொண்டு நான் தான் கடம்ப மரங்களை வெட்டி வீழ்த்தினேன்."

"வேறு?"

"வேறு என்றால்?"

"வேறு கடல் அனுபவங்கள் உண்டா? கடற்போர்களைச் செய்திருக்கிறீர்களா? கடல் கொள்ளைக் காரர்களை மடக்கிப் பிடித்திருக்கிறீர்களா?"

"இல்லை"

"வெறும் கடம்ப மரங்களை வெட்டி வீழ்த்தியதற்கு என் தந்தையார் உங்களுக்குக் கடல்வேந்தன் என்றச் சிறப்புப் பட்டத்தை அளித்தாரா? அது போகட்டும். நீங்கள் பெற்றிருப்பது நீண்ட கடல் அனுபவமா?"

"இல்லை."

"இருக்கும் உபதளபதிகளில் முதன்மையானவரான உமக்கே கடற்போரில் நீண்ட அனுபவம் இல்லை. அப்படி

இருக்கும் போது ஆழ்ந்த அறிவும் நீண்ட அனுபவமும் உள்ளவனைக் கடற்படைத் தளபதியாக நியமிப்பது சிறந்தது என்று எப்படிச் சொன்னீர்?"

இதற்கு பதில் கூறமுடியாமல் திண்டாடினான் கடல் வேந்தன்.

"ஒரு கருத்தைச் சொல்வதற்கு முன் பலமுறை யோசிக்க வேண்டும் என்று பெரியோர்கள் சொல்வார்கள். நீங்கள் மன்னனின் அவையில் யோசிக்காமலேயே பேசுகிறீர்கள். நம்மிடம் இருக்கும் பானை காலியானது என்பதைத் தெரிந்திருந்தும் அதிலிருந்து தான் பரிமாற வேண்டும் என்று அறிவுரை கூறுகிறீர்கள். ஆழ்ந்த அறிவுக்கு இது தான் அத்தாட்சியா? நமது கடற்படைத் தளபதி நோய் வாய் பட்டு இறந்து விட்ட காரணத்தாலும் அதற்குப் பிறகு கடல்போர் எதிலும் ஈடுபடாத காரணத்தாலும் அந்த பதவி நிரப்பப் படாமலேயே இருந்தது. தற்போது போர் அவசியமானதாகி விட்டதால் அப்பதவியை நிரப்புவதற்கு கருத்துக்களைக் கேட்டேன். உமக்கு அப்பதவியின் மீது ஆசை இருந்தால் நேரடியாகவே தெரிவித்திருக்கலாம். பொருந்தாத ஆலோசனைகளைக் கூறக் கூடாது."

நிதானம் தவறாதவன் என்று பேரெடுத்த செங்குட்டுவன் இப்படி உணர்ச்சி வசப்பட்டவனாய கனைப்புடன் பேசியதைக் கேட்ட அவையோர் எல்லோருமே சங்கடத்துடன் அசைந்தார்கள். கடல்வேந்தனின் உடம்பெல்லாம் வியர்த்தது.

"தளபதி பதவி இருக்கட்டும். ஆபுத்திரனை கடற்படையின் உபதளபதியாக நியமிப்பதில் உங்கள் யாருக்கும் மறுப்பில்லையே?" என்று கேட்டான் சேர மன்னன்.



"இல்லை, இல்லை" என்று எல்லா உபதளபதிகளும் ஒரு சேரக் கூறினார்கள்.

"நல்லது. நீங்கள் ஐவரும் சேர்ந்து வெள்ளைத் தீவின் மீது படையெடுப்பது குறித்து ஒரு வரைவு திட்டத்தைக் கொண்டு வாருங்கள். அதை ஆராய்ந்து விட்டு தளபதியை நியமிப்பது பற்றிப் பார்ப்போம்" - என்று கூறி அவையை விட்டுச் சென்றான் செங்குட்டுவன்.

ஆபுத்திரனுக்கு மன்னரின் போக்கு பிடிபடவில்லை. இந்த அளவிற்கு அவர் கடிந்து கொண்டு யாருமே பார்த்ததில்லையாதலால் அவரது போக்கு செயற்கையாக இருந்தது. அதோடு கடற்படை தளபதியாக யாரை வேண்டுமானாலும் அதிகாரம் அவருக்கு இருக்கும் போது - அதைச் சேனாதிபதி ஆரம்பத்திலேயே சுட்டிக் காட்டி விட்ட பிறகும் கூட, கருத்து கேட்பதாகச் சொல்லி உபதளபதிகளின் வாயைக் கிளறிய விதம் ஆபுத்திரனுக்கு விந்தையாய் இருந்தது. மன்னர் எதற்காகவோ நாடகமாடுகிறார் என்று எண்ணிக் கொண்டு யாரிடமும் எதுவும் பேசாமல் அரண்மனையை விட்டுப் புறப்பட்டான்.

அவனது அப்போதைய மனநிலைக்குப் பூங்கொடியைச் சந்திப்பது தான் மருந்தாக இருக்கும் என்று நினைத்த அவன் நேராக அவளது இல்லத்திற்குச் சென்றான். ஆனால் அவள் அங்கே இல்லை. ஏமாற்றத்துடன் தன் இல்லத்திற்குத் திரும்பிய அவன் சோர்வுடன் படுத்தான். முன்னாள் இரவு சரியாகத் தூங்காததால் தற்போது உடனே தூக்கம் வந்து விட்டது அவனுக்கு.

தூக்கம் விழித்த போது நள்ளிரவு நேரமாகி விட்டதை

உணர்ந்தான். வீட்டு வேலையாள் கொண்டு வந்த உணவை உண்டு விட்டு வெளியில் புறப்பட எத்தணித்த போது அவன் அதுவரை பார்த்திராத துறவி ஒருவர் வந்து "ஐயா, உங்களை இல்லத்திலேயே இருக்கும் படி கேட்டுக் கொண்டிருக்கிறார் எங்கள் தலைவர். ஆகவே தயவு செய்து வெளியில் எங்கும் போக வேண்டாம்" என்றார்.

"யார் உங்கள் தலைவர்?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"அதைச் சொல்ல எனக்கு உரிமையில்லை" என்றார் துறவி.

"நீங்கள் துறவி தானே?"

"ஆமாம்."

"உங்கள் தலைவர் யார் என்பது உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியும்."

"கேட்டேனே யாரென்று? சொல்வதற்கென்ன?"

"சொல்லக் கூடாது என்பது அவரது கட்டளை."

"அப்படி பட்டவரை மதித்து அவருக்காகக் காத்திருக்க வேண்டிய அவசியம் எனக்கில்லை."

"இதோ அவரே வந்து விட்டார். நல்லதாகி விட்டது" என்றார் துறவி.

அதே சமயத்தில தேரொன்று வந்து நிற்க அதிலிருந்து இறங்கினான் ஒரு மனிதன். அவனது ஒட்டிப் போன கன்னங்களும் வெளுத்துப் போன கண்களும் வெண்மையும்





**கழுகுமூக்கன்**

செம்மையும் கலந்த தாடியும் தொங்கிய மீசையும் அவன் வயதானவன் என்பதைக் காட்டின. தலையில் ஒரு கிரீடமும் அணிந்திருந்த அவன் தங்க ஆபரணங்களைக் கழுத்தில் அணிந்து கொண்டு மேலே பெரியதொரு நீண்ட சட்டையை அணிந்திருந்தான். கையிலே இருந்த கோலின் உதவியுடன் தாங்கித் தாங்கி நடந்த அவன் துறவியைப் பார்த்து, "துறவி, நீ இங்கேயே இரு. வீட்டிற்குள் யாரையும் அனுப்பாதே. யாராவது அத்து மீறி நுழைந்தால் வாளால் வெட்டி விடு. இந்தா வாள்" என்று தன் வாளை நீட்டினான். வாளைப் பெற்றுக் கொண்ட துறவி "ஐயா, நான் துறவி. அஹிம்சா வாதி. வாளைத் தொடக்கூட எனக்கு அனுமதி இல்லை. நான் எப்படி வெட்ட முடியும்?" என்று கேட்டார் துறவி.

"பாம்பு உன்னைக் கடிக்க வந்தால் வேடிக்கை பார்ப்பாயா?"

"இது வரை பாம்பு என்னைக் கடிக்க வந்ததில்லை."

"துறவி, உன்னோடு பேசுவதற்காக நானிங்கு வரவில்லை. சொன்னதைச் செய். இல்லையென்றால் உன் துறவு போய் விடும்."

"எப்படி..?"

"உயிர் போய் விடும். தெரிந்து கொண்டாயா?"

இதற்கு மேல் துறவி வாயைத் திறக்கவில்லை.

ஆபுத்திரனை அழைத்துக் கொண்டு உள்ளே போய அமர்ந்த அவன் "குடிப்பதற்கு கொஞ்சம் நீர் கொண்டு வா" என்றான்.



ஆபுத்திரனும் தண்ணீரைக் கொண்டு வந்து கொடுத்த பின் அதை ஒரே மூச்சில் குடித்த அந்த மனிதன் "ஆபுத்திரா, உனக்குச் சேர மன்னனுடன் மிகுந்த செல்வாக்கு இருப்பதாகக் கேள்விப் பட்டேன். உண்மையா?" என்று கேட்டான்.

"செல்வாக்கு என்று சொல்வதை விட அன்பு என்று சொல்லலாம்" என்றான் ஆபுத்திரன் தன் வியப்பை அடக்கிக் கொண்டு.

"இரண்டிற்கும் அதிக வித்தியாசமில்லை. அபரிமிதமான அன்பு, செல்வாக்கைத் தானாகவே வரச் செய்து விடுகிறது. அப்படிப்பட்ட அபரிமிதமான அன்பை உன்னிடம் காட்டும் அளவிற்கு சேர மன்னனுக்கும் உனக்கும் என்ன சம்மந்தம்?"

"பெரியவரே, என்னைத் தேடி வந்து இப்படி விசாரிக்கிறீர்களே, நீங்கள் யார்?"

"ஆபுத்திரா, நான் கேட்ட கேள்விக்கு பதில் சொல். சேர மன்னனுக்கும் உனக்கும் என்ன சம்மந்தம்?"

"எந்தச் சம்மந்தமும் இல்லை. அன்பைக் காட்டுவதற்கு உறவுகள் வேண்டியதில்லை. உள்ளங்களே போதும்!"

"உள்ளம் என்பது உனக்கு மட்டும் தான் இருக்கிறதா? இந்நாட்டு மக்களுக்கெல்லாம் இல்லையா? அவர்களிடம் ஏன் இந்த அன்பு இல்லை? அவர்களுக்கு உனக்கிருப்பது போல் செல்வாக்கு இருக்கிறதா?"

"பெரியவரே, எங்கள் சேரமன்னரின் மீது அவதூறு கற்பிக்கும் உள் நோக்கம் உங்களிடம் இருக்கிறது. இது நல்லதல்ல."

"உன் நோக்கமல்ல. வெளிப்படையான நோக்கமே இருக்கிறது. நீங்களெல்லாம் நீதிமான் என்று கொண்டாடும் சேரமன்னன் நீதிமானே அல்ல. துரோகி."

"பெரியவரே, உங்கள் நாக்கை அறுக்கத் துடிக்கிறது என் கைகள். வயதானவராக இருக்கிறீர்களே என்று பார்க்கிறேன். எங்கள் மாமன்னரை, சேர நாடு தெய்வமாய் போற்றும் செங்குட்டுவனை துரோகி என்று சொல்லும் நீங்கள் யார்?"

"கழுகுமூக்கன்!" என்றான் அந்த மனிதன்.

ஆபுத்திரனின் கண்கள் விரிந்தன வியப்பால்.







# அத்தியாயம் நாற்பத்து ஆறு



## கழுகுமூக்கனின் பாசம்

கழுகு மூக்கனைக் கண்டதே, பிரச்சனையெல்லாம் தீர்ந்த மாதிரி இருந்தது ஆபுத்திரனுக்கு. இருந்தாலும் "நீங்கள் தான் கழுகு மூக்கன் என்பதை எப்படி நான் நம்ப முடியும்?" என்று கேட்டான்.

"நல்ல கேள்வி தான் குழந்தாய். அதே சமயம் நீ தான் ஆபுத்திரன் என்று தெரிந்து உன்னைத் தேடி வந்தேனே- அது எப்படி என்று ஏன் நீ கேட்கவில்லை?" என்று கேட்டான் கழுகுமூக்கன்.

"சேரநாட்டில் என்னை அறியாதவர்கள் இருக்கமாட்டார்கள். என்னை அடையாளம் கண்டு பிடிப்பது சுலபம்."

"அப்படியானால் சேரமான் உனக்கு இழைத்து வந்த அநீதியை விளக்கிச் சொல்கிறேன். அப்போது என்னை நம்புவாய்" என்று கூறி, அது வரையில் ஆபுத்திரன் கேட்டறியாத பிறவி ரகசியம் அடங்கிய கதையை விலாவாரியாக எடுத்துக் கூறிய கழுகுமூக்கன் "குடிப்பதற்கு கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா" என்றான் பெருமூச்செறிய.

ஆபுத்திரன் கொண்டு வந்த நீரைப் பருகி விட்டு "இப்போதாவது என்னை நம்புகிறாயா?" என்று கேட்டான்.

அவனது கதையினால் பெரிதும் ஸ்தம்பித்துப் போயிருந்த ஆபுத்திரன் "நம்புகிறேன்" என்றான். வாய் வார்த்தைகளைச் சொல்லியதே தவிர நினைவு எங்கேயோ பறந்தது.

அதை கவனித்த கழுகுமூக்கன் அவனுக்காகப் பெரிதும் வருந்தியவனாய், "குழந்தாய், பல ஆண்டுகளாக அறியாதிருந்த உன் பிறவி ரகசியத்தை வெளியிட்டு உன் வேதனையைக் கிளறி விட்டேன். உன் மனம் இப்போது என்ன பாடுபடும் என்பது எனக்குத் தெரியும். அதற்காக என்னை மன்னித்து விடு. இந்த விஷயத்தை வேறு யாரிடம் கூறினாலும் நம்ப மாட்டார்கள். அதனால் ஒரு பயனுமிருக்காது. ரகசியத்திற்குச் சம்மந்தமான சேரமன்னன் நடவடிக்கை எதிலும் ஈடுபடவில்லை. நான் என்ன செய்யமுடியும்? ஒரு கட்டத்தில் சேர நாட்டிற்கு வந்து கலவரம் செய்து ரகசியத்தை பகிரங்கப் படுத்தலாமா என்று கூட யோசித்தேன். ஆனால் அப்படிச் செய்தால் என்னைக் கொன்று போட்டு ரகசியத்தை அழித்து விடுவார்கள். பிறகு உனக்கு சிக்கலாகிப் போய் விடும். ஆகவே தான் உன்னைத் தேடி அலைந்தேன்.



இலங்கையிலேயே இருப்பாய் என்று நான் பல ஆண்டுகள் பைத்தியமாக அலைந்து திரிந்தேன். வயதாகி விட்டதால் சோர்வு என்னை அலைக் கழித்தது. இந்த விஷயத்தை வேறு யாரிடமும் சொல்லி உதவி கேட்க எனக்கு உடன்பாடில்லை. நீ சேரநாட்டிற்கு உன் தாயின் வயிற்றில் இருக்கும் போதே வந்து விட்டாய் என்பதும் நீ மாட்டுத் தொழுவத்தில் யாதவ பெருமக்களால் வளர்க்கப் பட்டாய் என்பதும், உனக்கு ஆபுத்திரன் என்ற பெயர் வைக்கப் பட்டது என்பதும், நாளடைவில் சேரமன்னனின் அன்புக்குப் பாத்திரமாகி விட்டாய் என்பதும் எனக்குத் தெரியும். நான் விதித்த நிபந்தனையை சேரமன்னன் நிறைவேற்றுவதாக இல்லை. அவனை நேரில் சந்தித்து வற்புறுத்த நான் முயன்றேன். முடியவில்லை. ஏனென்றால் இங்கே வரமுடியாமல் முடக்கு வாதத்தால் அவதிப் பட்டு இலங்கையிலேயே இருந்து வைத்தியம் பார்த்துக் கொண்டு, உன்னைப் பற்றிய செய்திகளை அறிந்து கொண்டு இருக்க வேண்டியதாயிற்று. ஆனால் நான் எதிர்பார்த்த செய்தி மட்டும் எனக்கு வரவில்லை" என்று சொல்லி சற்று நிறுத்தினான்.

ஆபுத்திரன் உள்ளே சென்று காவலாளியிடம் காய்ச்சிய பாலை கொண்டு வரச் செய்து "இந்தப் பாலை அருந்துங்கள். உங்களுக்குச் சோர்வு அதிகமாக இருக்கிறது" என்றதும் பாலை வாங்கி அருந்திய கழுகுமூக்கன், "விஜயவல்லிக்குப் பிறகு உன் கையால் தான் நான் அமுதம் போன்ற பாலை அருந்துகிறேன். இது என் பெரும் பாக்கியம்" என்றான்.

சிறிது நேரத்திற்குப் பின் "உனக்கு நடக்க வேண்டிய எதுவும் நடக்கவில்லை. நடக்கும் என்ற செய்தியும் இல்லை. நடக்காமலே போய் விட்டால் அநீதியென்று நீதி

தோற்றுவிடுமே என்று அஞ்சினேன். எனது முடக்கு வாதம் பெரிதாகக் குறைந்து ஏராளவிற்கு கோலூன்றி நடக்கும் படி இருந்தது. வாதம் முறிந்து விட்டாலும், என் உடலுக்குள் புதியதோர் வியாதி உண்டாகி முற்றி விட்டதாகச் சொல்லி வைத்தியர்கள், நான் அதிக பட்சமாக ஒரு மாதம் தான் உயிரோடு இருப்பேன் என்று சொன்னார்கள். இனியும் இலங்கையில் இருக்கக் கூடாது என்றும் உன்னைச் சந்தித்து விவரங்களைச் சொல்லி நீதியை நிலை நாட்ட வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டு சேரநாட்டிற்குப் புறப்பட்டேன். அதே நேரத்தில் தான் என்னைத் தேடிக் கொண்டு இலங்கைக்கு வந்திருக்கிறாய். நீ சமந்த கூடத்திற்கு வந்த விஷயங்களை அங்கே இருக்கும் என் சகோதரன் உடனடியாக இங்கே எனக்குச் செய்தியனுப்பி விட்டான். உன் வரவுக்காக நான் காத்திருந்தேன். நீ வந்தது தெரிந்ததும் நேர காலம் பார்த்து உன்னைச் சந்தித்து விட்டேன். இப்போது சொல். சேரமன்னன் உனக்கு அநீதி இழைத்திருப்பதை ஒப்புக் கொள்கிறாயா?" என்று கேட்டான்.

"ஐயா. ஆயிரம் தடவை கேட்டாலும் சரி ஆயிரம் பேர் கேட்டாலும் சரி சேரமாமன்னர் அநீதி இழைப்பவர் என்பதை ஒப்புக் கொள்ள மாட்டேன். என் விஷயத்தில் கூட இதுதான் முடிவு என்று அவர் அறிவித்து விடவில்லை. எனவே அவர் மீது அவதூறாகப் பேச வேண்டாம்" என்றான் ஆபுத்திரன்.

"குழந்தாய்! அதீத நம்பிக்கையில் ஏமாளியாக இருந்து விடாதே. ராஜாங்க விஷயத்தில் சற்று அசந்தால் போதும் சமாதி கட்டி விடுவார்கள். உனக்குத் தயக்கமாக இருந்தால் சொல். நானே செங்குட்டுவனைச் சந்தித்துக் கேட்கிறேன்."



"ஐயா, தாங்கள் என் மீது அளவு கடந்த பாசத்தை வைத்திருக்கிறீர்கள். சொல்லப் போனால் எனக்காகத் தான் இன்னமும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வாழுகிறீர்கள்."

"அப்படித்தான். மிகவும் சரியாகச் சொன்னாய் குழந்தாய். பெரும் வியாதிகளை இந்த வயோதிகத்தில் சுமக்கிறேன் என்றால் அது மனோ பலத்தால் மட்டுமல்ல உன் மீதுள்ள அளவிடமுடியாத பாசத்தினால் தான்."

"அது உண்மையென்றால், என் விஷயமாகச் சேரமன்னரை நீங்கள் சந்திப்பதில்லை என்று எனக்குச் சத்தியம் செய்யுங்கள்."

"இது என்ன விபரீதம்? இதற்காகவா நான் இங்கு வந்தேன்? இல்லை குழந்தாய். நீதியை நிலை நாட்ட வேண்டியது என் கடமை. அதற்குச் செங்குட்டுவனைச் சந்திப்பது மிகவும் அவசியம். இதைச் செய்யாமல் போனால் விஜயவல்லியின் ஆவி என்னை மன்னிக்காது."

"தாங்கள் பிடிவாதம் பிடித்து மன்னரைச் சந்தித்து நீதியை நிலை நாட்டிக் கொள்ளுங்கள். நான் இப்போதே கண்காணாத இடத்திற்குப் போய் விடுகிறேன். நீதியை வைத்துக் கொண்டு நீங்கள் ஆனந்தம் கூத்தாடுங்கள்."

"என்னை நோகடிக்கிறாயே ஆபுத்திரா. என் மரணத்திற்கான நாட்கள் எண்ணப் பட்டு வருகின்றன. இப்போதும் நான் நடவடிக்கை எடுக்காமல் போனால் மரணம் முந்திக் கொள்ளும்."

"அப்படியெல்லாம் ஆகாது. மாமன்னருக்கு முன்னே பெரும்போர் காத்திருக்கிறது. இந்த நிலையில் நீங்கள் அவரைச்

சந்தித்தால் பெரும் குழப்பமும் கலவரமும் நடக்கும். அச் சேரநாட்டிற்கு புது அபாயங்களை உருவாக்கும். போர் முடியட்டும். நானே மாமன்னரைச் சந்தித்து எல்லாவற்றையும் பேசுகிறேன். அப்போது நீங்களும் கூட தேவைப்பட்டால் பேசலாம்."

"ஆகா! விதி வலியது. அதை மாற்ற யாரால் முடியும். உன் நல்வாழ்வை எண்ணி உன் வார்த்தைகளை மீறி யாதும் செய்ய மாட்டேன். போதுமா? நான் புறப்படட்டுமா?"

"இனித் தாங்கள் அனாதையைப் போல தனியாகப் போக வேண்டியதில்லை. உங்களுக்கு நானிருக்கிறேன். வாருங்கள் போவோம்" என்றான் ஆபுத்திரன்.

பரவசப் பட்டுப் போன அவர் எதுவும் பேசவில்லை. தேரில் அவருடன் சென்ற ஆபுத்திரன் வஞ்சி மாநகரின் மேற்குக் கோடியில் தனி மாளிகை ஒன்றில் அவரைத் தங்க வைத்தான். அவருக்குப் பணிவிடைகளைச் செய்ய தேவையானவர்களை நியமித்தான். வைத்திய சிகாமணிகள் சிலரை வரவழைத்து அவருக்கு சிகிச்சையளிக்கவும் ஏற்பாடு செய்தான். வில்லவனிடம் அனைத்து விவரங்களையும் கூறி, எல்லாம் ரகசியமாக இருக்கட்டும் என்றும், கழுகு மூக்கன் வெளியே எங்கும் செல்லாமல் பார்த்துக் கொள்ளும் படியும் சொல்லி விட்டுப் புறப்பட்டான்.



மறுநாள் அவை கூடியது.

இந்த முறையும் சேரமன்னன் நேரத்தை வீணடிக்காமல் கடற்படை உபதளபதிகளைப் பார்த்து "என்ன, வெள்ளைத் தீவு



படையெடுப்பு குறித்த வரைவு திட்டத்தைத் தயாரித்து விட்டீர்களா?" என்று கேட்டான்.

அவைக்கு வந்ததிலிருந்து ஆபுத்திரன் என்ன காரணத்தாலோ தன்னை மறந்தவனாய் மன்னனின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அதைக் கவனித்த சேரமன்னன் "ஆபுத்திரா, எதற்காக என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறாய்? முகத்தில் ஏதாவது கண்டு பிடித்திருக்கிறாயா?" என்று கேட்டதும் விழித்துக் கொண்ட அவன் "ஆம் மன்னவா. தங்கள் முகத்தில் புதிய வெற்றிக் களையைப் பார்க்கிறேன்" என்று கூறி சமாளித்தான்.

"அது உண்மைதானா என்பதை இந்தத் திட்டத்தில் தான் பார்க்க வேண்டும். நீயும் பார். நான்கு சிறந்த கடற்படை உபதளபதிகள் யோசித்து தீட்டியிருக்கும் திட்டம். நிச்சயமாக இது வெற்றிக்கு வழி வகுக்கும்" என்றான் மன்னன்.

அவன் உண்மையைச் சொல்கிறானா அல்லது கேலி செய்கிறானா என்று யாராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

இதற்கிடையில் உபதளபதி கடல் வேந்தன் எழுந்து தான் வரைந்த வரைபடம் ஒன்றைச் சுவற்றில் எல்லோருக்கும் தெரியும் படி மாட்டி, "மன்னவா, இது தான் வெள்ளைத் தீவுகளின் வரைபடம். இங்கே மொத்தம் 11 தீவுகள் இருக்கின்றன. நடுவில் பெரியதாக இருப்பது கோட்டைத் தீவு. மேற்கு புறத்தில் முகப்புத் தீவும் கிழக்கு புறத்தில் மீன் தீவும் இருக்கின்றன. இவற்றுக் கிடையில் கோட்டைத் தீவைப் பாதுகாப்பது போல் வட்டமாக எட்டுத் தீவுகள் இருக்கின்றன. யாதவனான உதயணன் இந்த எட்டு தீவுகளுக்கும்

# வெள்ளைத் தீவு






அட்டதிக்பாலர்களான இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன் மற்றும் ஈசானன் என்ற பெயர்களை வைத்திருக்கிறான். இவற்றில் கோட்டைத் தீவைத் தவிர இதர 10 தீவுகளுக்கு முன்பாக அவற்றைக் காப்பது போல் இரண்டிரண்டு மரக்கலங்களை நிறுத்தியிருக்கிறான். மொத்தத்தில் தீவுக் கூட்டத்தை 20 மரக்கலங்கள் பாதுகாக்கின்றன. நமது மரக்கலங்களைச் செலுத்தி அந்த இருபது மரக்கலங்களையும் வளைத்துக் கொண்டு தாக்குதல் நடத்தினால் அவற்றுக்குத் தப்புவதற்குக் கூட இடமோ அவகாசமோ இருக்காது. அவற்றை அழித்தோ அல்லது கைப்பற்றியோ தீவில் நுழைந்து நாம் அங்கே உள்ள பொறிகளையும் கொள்ளையர்களையும் அழித்து விட்டு கோட்டைக்குள் நுழைந்து கொள்ளையர்களை அழித்து கோட்டையைக் கைப்பற்றுவோம். தீவு நம் வசமாகி விட்டால் பிறகு எந்தத் தாக்குதலையும் முறியடிக்கலாம்" என்று விவரித்து விட்டு லேசாகத் தன் மீசையைத் தடவிய படி தன் ஆசனத்தில் போய் அமர்ந்தான்.

வில்லவன் கோதையைப் பார்த்த செங்குட்டுவன் "என்ன சொல்கிறாய் கோதை?" என்று கேட்டான்

"சிறப்பான திட்டம் தான். ஆனால் இது நிறைவேறும் வரை எதிரிகள் தூங்கிக் கொண்டிருக்க வேண்டும்" என்றான் வில்லவன் கோதை.

தன்னையும் தன் திட்டத்தையும் வில்லவன் கோதை இகழ்வதைக் கண்டு சீற்றமடைந்த கடல் வேந்தன், 'சேனாதிபதி, நீங்கள் தரைப் படை நடத்துவதில் நிபுணராக இருக்கலாம். ஆனால் இது கடல். கடலின் சங்கதிகளே வேறு" என்றான் உரத்த குரலில்.

"நீங்கள் கூறிய திட்டத்தில் கடல் என்று ஒன்று இருப்பதை கவனித்ததாகவே தெரியவில்லையே! தரைப்போரைப் போலல்லவா பேசியிருக்கிறீர்கள்?" என்றான் வில்லவன் கோதை.

"அது கூடத் தெரியாமலா திட்டம் தீட்டியிருக்கிறோம்"

சேரமன்னன் இந்தச் சச்சரவுக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டு ஆபுத்திரனைப் பார்த்து "உன் அபிப்ராயத்தைச் சொல் ஆபுத்திரா" என்றான்.

ஆபுத்திரன் எழுந்து "கடல்வேந்தர் தீட்டிய திட்டத்தை தான் எதிரிகள் எதிர்பார்க்கிறார்கள். அவர் கூறுவது போல் வெள்ளைத் தீவை நாம் சூழ்ந்து கொள்ளலாம். ஆனால் அவர்கள் சும்மாவா இருப்பார்கள்? நங்கூரத்தை எடுத்து விட்டு நம்மைத் தாக்க வருவார்கள். மோத முற்படுவார்கள். தீவுகளில் உள்ள பொறிகளிலிருந்து கணக்கற்ற அம்புகள் வரும் கோட்டையின் உயரமான சுவற்றிலிருந்து தீவாளிகள் நமது மரக்கலங்களின் மீது விழும். அதே சமயம் நடுக்கடலில் சஞ்சரிக்கும் அவர்களது 14 மரக்கலங்கள் நமக்குப் பின்னால் சூழ்ந்து கொண்டு தாக்கவும் தீ வைக்கவும் முயன்றால் நாம் முன்னேறவும் முடியாது. பின்வாங்கவும் முடியாது. நடுவில் சிக்கி அழிய வேண்டியது தான்" என்றான்.

"இதற்கு என்ன சொல்கிறாய் கடல் வேந்தா?" என்று கேட்டான் சேரமன்னன்.

"போரின் போது திருப்பங்கள் நடைபெறுவது சகஜம் நிலைமைக்குத் தக்கவாறு போர்முறைகளை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்றான் கடல்வேந்தன்.



"உத்தேசமான நிலைமையைத் தான் ஆபுத்திரன் கூறிவிட்டானே! இந்த நிலையில் என்ன செய்வாய்?" கேட்டான் மன்னன்.

"நாளைக்கு வேறு திட்டம் தீட்டி வருகிறேன் மன்னவா"

"நாளைக்கு இதைவிட நல்லதிட்டம் தீட்டி வருவாய். அந்தத் திட்டமும் இது போல அடி வாங்கி விட்டால் வேறு திட்டத்தைத் தீட்டுவீர்களா? இப்படியே போனால் ஒவ்வொரு நாளும் திட்டத்தைத் தான் தீட்டிக் கொண்டிருக்க வேண்டும் போருக்குப் போக முடியாது. நான் நேற்றே சொன்னேன். இங்கே பேச வருவதற்கு முன் பலமுறை யோசித்து விட்டு வரவேண்டும் என்று. நேற்று செய்த அதே தவறை இன்றும் செய்திருக்கிறாய். அதுவும் போர்த் திட்டத்தைச் சொல்வதற்கு முன் பலவாறு பல கோணங்களில் யோசித்திருக்க வேண்டும். எப்படிப்பட்ட சிக்கல் வரலாம் அப்படி வந்தால் அதை எப்படி முறியடிக்கலாம் என்றெல்லாம் யோசித்திருக்க வேண்டும். தரையில் நடக்கும் போராக இருந்தால் பின் வாங்கியும் பதுங்கியும் தாக்கலாம். வியூகங்களை மாற்றலாம். அதற்கெல்லாம் வாய்ப்பும் நேரமும் உண்டு. கடல் போரில் அதற்கெல்லாம் சாத்தியமில்லை. வில்லவன் கோதை கூறியது போல் தரைப் போருக்குத் திட்டம் தீட்டுவது போல் தான் திட்டத்தை தீட்டியிருக்கிறாய். கடல் போர் என்பதே உன் நினைவில் இல்லை" -

இவ்வாறு சேரமன்னன் கூறியதும் கடல்வேந்தனுக்கு சப்த நாடிகளும் ஒடுங்கி விட்டன. எதையும் பேச முடியவில்லை.

அனைவரையும் பார்த்து "இது வரையில் நான் கோபமாகப் பேசியிருந்தால் அனைவரும் பொறுத்துக் கொள்ள வேண்டும். கோபப் பட்டு யாருடைய மனத்தையும் புண்படுத்த வேண்டும் என்பது என் நோக்கமல்ல. பண்படுத்த வேண்டும் என்பது தான். கடற்படைத் தளபதியாக நியமிக்கும் அதிகாரம் எனக்கிருந்தாலும் அந்த நியமனத்திற்கு உபயோகமான ஆலோசனைகள் கூறுவீர்கள் என்று தான் உபதளபதிகளின் கருத்துகளைக் கேட்டேன். ஆனால் அவர்களது பேச்சு எனக்கு ஏமாற்றத்தையே அளித்தது. இங்கிருக்கும் ஐவருக்கும் பட்டங்கள் இருக்கின்றனவே தவிர ஆழ்ந்த அநுபவமோ கூரிய அறிவோ இல்லை என்பதை அவர்களது பேச்சும் திட்டங்களும் நிரூபித்தன. அவர்களிடம் இருந்த தவறான அநுமானங்களை வெளிப்படுத்தி திருத்துவதற்காகவே சற்று கடுமையாக நடந்து கொண்டேன். எது எப்படி இருந்தாலும் உங்கள் எல்லோருக்கும இருக்கும் நாட்டுப் பற்று இமயத்தை விடச் சிறந்தது. அப்பற்று ஒன்றே போதும். நமக்குத் தேவையான பலத்தையும் திறமையையும் அளிக்கும். எனவே உபதளபதிகளே சோர்வடைந்து விடாமல் போருக்குத் தயாராகுங்கள். ஆபுத்திரனைப் பற்றிய தவறான எண்ணங்களை அகற்றுங்கள். அவன் என் மகன். அபூர்வப் பிறவி. அவனிடம் பணிபுரிய நீங்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவனைக் கடற்படையின் பிரதான உபதளபதியாக நியமிக்கிறேன். நிமித்தகனைக் கேட்டு விட்டேன். நாளை மறுநாள் படைபுறப்படலாம் என்று கூறிவிட்டான். மரக்கலங்களைத் தயார் படுத்துங்கள். சேனாதிபதி வில்லவன் கோதை உங்களுக்கு உதவுவார்" என்றார்.



அவனது பேச்சில் அவை சூடு தணிந்து, மழையில் நனைந்து குளிர்ந்தது போல் ஆயிற்று. அனைவருமே மகிழ்ச்சியடைந்தார்கள்.

கடல்வேந்தன் எழுந்து "மன்னவா, கடற்படைக்குத் தளபதி இல்லையா?" என்று கேட்டான்.

"ஏன், போட்டி போடலாம் என்று நினைக்கிறீர்களா? கவலைப் படாதீர்கள் கடற்படைக்கு நானே தளபதி!" என்றதும் எல்லோரும் எழுந்து "சேர மாமன்னர் வாழ்க வாழ்க!" என்று குரலெழுப்பினார்கள்.



# அத்தியாயம் நாற்பத்து ஏழு



## வெள்ளைத் தீவில் .....

சேரமன்னன் அவையை விட்டுப் போனதுமே ஆபுத்திரனுக்காக வெளியே காத்திருந்த வில்லவன் "ஐயா, முதியவரின் உடல் நிலை மிகவும் மோசமாகி விட்டது சிகிச்சையளித்த மருத்துவர் நாளை இரவுக்குள் உயிர் பிரிந்து விடும் என்று சொல்லி விட்டார். முதியவரின் நினைவும் தப்பி விட்டது. கண்கள் மூடிய நிலையில் இருக்கின்றன. என்ன செய்வது?" என்று கேட்டான்.

சற்று யோசித்த ஆபுத்திரன் "இனி நான் வந்த செய்வதற்கு ஒன்றுமில்லை வில்லவா. நாளை அவர் மரணமடைந்து விட்டால் மன்னரிடம் தெரிவித்து விடு அது மட்டுமல்ல. இலங்கைக்குச் சென்ற போது இந்த



முதியவரைத் தேடி நாம சமந்த கூடத்திற்குச் சென்ற விவரத்தையும் சொல். இலங்கையில் அவர் இல்லாமல் போனதையும் சேர நாட்டிற்கு வந்து விட்டதையும் சொல். நான் அவரை இங்கே கொண்டு விட்டதையும் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்ததையும் சொல். நானும் அவரும் ஏதாவது பேசினோமா என்று அவர் கேட்டால் தெரியாது என்று சொல். உண்மையில் உனக்கு எதுவும் தெரியாது இல்லையா? ஆகவே இந்த விவரங்களை அவருக்குத் தெரிவித்து விடு. பிறகு நடப்பது நடக்கட்டும்" என்று கூறிவிட்டு நேரே துறைமுகத்திற்குச் சென்றான்.

இதற்கிடையில் சேரமன்னரை அரண்மனையில் சந்தித்தார் புலவர் பரணர். அவரது கண்கள் கலங்கியிருந்தன.

"மன்னவா, நான் பெரும் தவறு செய்து விட்டேன்" என்றார் நா தழுதழுக்க.

"என்னாயிற்று புலவர் பெருமானே! கண்கள் ஏன் கலங்கியிருக்கின்றன? என்ன தவறு செய்து விட்டீர்கள்?" என்று உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு கேட்டான் சேரமன்னன்.

"மன்னவா, தங்கள் பாதுகாப்பிலிருந்து என் மகள் பூங்கொடியை அகற்றி என் இல்லத்திற்கு கொண்டு போனது தவறாகி விட்டது" என்றார் புலவர்.

"அதற்கென்ன? குட்டுவன் ஏதாவது அடாத செயலில் ஈடுபட்டானா?"

"இல்லை மன்னவா இல்லை. குட்டுவர் அந்தப் பக்கமே வருவதில்லை. நான்கு நாட்களுக்கு முன்னால் தோழி

ஒருத்தியோடு வெளியில் சென்றாள். இன்று வரை வீட்டிற்குத் திரும்ப வில்லை. எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது."

"இதை முதலிலேயே என்னிடம் சொல்லியிருக்கலாமே புலவரே?"

"ஏதோ வேண்டிய வள் வீட்டிற்குப் போயிருப்பாள். அங்கே தங்கியிருப்பாள் என்று அலட்சியமாக இருந்து விட்டேன். நாட்கள் நான்கு ஆகி விடவே பயம் வந்து விட்டது."

"இதற்கு முன் உங்கள் மகள் இது போல வெளியே சென்று தங்கியிருக்கிறாளா?"

"இல்லை."

"தற்போது செல்லும் போது ஏதாவது சொல்லிவிட்டுப் போனாளா?"

"இல்லை."

"அவளை அழைத்துச் சென்ற தோழியை உங்களுக்குத் தெரியுமா? அடிக்கடி இல்லத்திற்கு வருபவளா?"

"எதுவும் எனக்குத் தெரியாது மன்னவா. அதையெல்லாம் கவனிக்கும் அவசியம் எனக்கு வந்ததில்லை."

"சரி. நீங்கள் இல்லத்திற்குச் செல்லுங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன்."

பரணர் அங்கிருந்து சென்றதும் அமைச்சரையும் வில்லவன் கோதையையும், ஒற்றர் தலைவன் நீலனையும் அழைத்த சேரமன்னன் விவரத்தைக் கூறி "புலவர் மகளை கண்டு பிடிக்க எல்லாவிதமான முயற்சிகளையும் மேற்



கொள்ளுங்கள். அதே சமயம் பதட்டம் காட்ட வேண்டாம். மற்றுமொரு விஷயம். இது பற்றி ஆபுத்திரனிடம் யாரும் எதுவும் பேச வேண்டாம்" என்று கட்டளையிட்டான்.



இதே காலகட்டத்தில் மீன் தீவில் தன்னந்தனியே அமர்ந்து கொண்டிருந்த உதயணன் தான் மேற்கொள்ளவிருந்த படையெடுப்பைப் பற்றி தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தான். இப்போரைப் பொறுத்தவரை பங்களனும் அவனது சகாக்களும் வெறும் பூஜ்யம் தான் என்பதும் தானும், தன் படைகளும், விலங்குகளும் மற்றும் பூதமரக்கலமுமே பிரதான சக்தியாக இயங்கப் போகிறன்றன என்பது அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தன. இப்போரை பங்களனுக்காக நடத்துவது போல் தான் நடத்துவதும் உண்மையிலேயே தன் பிற்கால ஆதாயத்திற்காகவே "உதவிக்கு வருவது போல் வந்து தனக்காகவே போர் செய்யப் போவதை உணர்ந்த அவன் தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டான். போரில் சேரர்களைத் தன்னால் முறியடிக்க முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு அளவுக்கு அதிகமாகவே இருந்தது. அப்படிச் சேரர்கள் முறியடிக்கப் பட்டால், பங்களனையும் அவனது சகாக்களையும் வெட்டி கடலில் எறிந்து விட்டு, வெள்ளைத் தீவை ஒரு கடல் கோட்டையாக மாற்றி அதை ஆள வேண்டும் என்ற கனவு அவனுக்குள் விரிந்தது. எங்கோ மலைக்கு அப்பால் காட்டுப் பிரதேசத்தில் கோட்டைகட்டி வாழ்ந்து பிரசித்த மடையாமல் இருந்த காரணத்தால், அந்த நிலையை அவன் அறவே வெறுத்தான். கேவலம் கொள்ளைக் காரர்களுக்கு இருக்கும் பிராபல்யம் கூடத் தனக்கு இல்லையே

என்று ஏக்கம் அவனை வாட்டியது. அந்த நேரத்தில் தான் பங்களன் உதவிக்கு வந்தான். தனது ஏக்கம் தீர இது நல்ல வாய்ப்பு என்று கருதியே உதவிக்கு ஒப்புக் கொண்டு போர் ஏற்பாடுகளை முழுவீச்சில் செய்யலானான். வெள்ளைத் தீவுக்கு தானே சொந்தக்காரன் என்பது போன்ற நினைப்பில் அத்தனை கவனம் செலுத்தினான் ஏற்பாடுகளில்.

மீன் தீவில் அமர்ந்து கனவுகளோடும் தனது நண்பர்களான கோழிப் பார்ப்புகளுடனும் காக்கைகளுடனும் கொஞ்சிக் கொண்டிருந்த உதயணனிடம் வந்த குண்டோதரன் "ஐயா, தங்களைப் பார்க்க வேண்டுமாம். இரண்டு பெண்கள் வந்திருக்கிறார்கள்" என்றான்.

"என்னைத் தேடிப் பெண்கள் ஏன் வருகிறார்கள்? பங்களனைத் தேடி வந்திருப்பார்கள். அந்தப் பெண் பித்தனிடம் அழைத்துச் செல்" என்றான் உதயணன்.

"இல்லை ஐயா, நானும் அப்படித் தான் நினைத்து அவர்களிடம் சொன்னேன். உங்களைத் தான் சந்திக்க வேண்டும் என்கிறாள் அந்தப் பெண்" என்றான் குண்டோதரன்.

"பெண் வாடை பீடை என்று நினைக்கும் எனக்கு ஏன் இந்தத் தேவையில்லாத தொந்தரவு? சரி வரச் சொல்" என்று சொன்ன உதயணன் தனது நண்பர்களைக் காட்டுப் பக்கம் அனுப்பினான்.

சிறிது நேரத்தில் அங்கு வந்து நின்ற இரண்டு பெண்களையும் வேண்டா வெறுப்பாகப் பார்த்த உதயணன் "யார் நீ? என்னிடம் எதற்காக வந்தாய்? யாரும் வரத் தயங்கும்



இடத்திற்கு எப்படி வந்தீர்கள்?" என்று கேள்விக் கணைகளைத் தொடுத்தான்.

"ஐயா, நான் இங்கே ஒரு முறை வந்திருக்கிறேன். முறைப்படி எல்லாம் நடந்திருந்தால் இன்று என் மண்டை ஓடுதான் கிடைத்திருக்கும். புண்ணியமா, பாவமா என்று தெரியவில்லை. இன்று உயிரோடு இருக்கிறேன். போரில் தாங்கள் வெற்றி பெறுவதற்குப் பெரிதும் பயன்படக் கூடிய பொருளோடு வந்திருக்கிறேன். என் பெயர் பவானி" என்றாள்.

"என்ன உளறுகிறாய்? கண்டதைச் சொல்லி பெண்ணைக் கொன்ற பாவத்திற்கு இலக்காக்கி விடாதே" என்று எச்சரித்தான் உதயணன்.

அவள் தன் கதையை ஆதி முதல் தற்போதைய நிலை வரை சொன்னாள்.

"உருப்படியான காரியத்தைச் செய்திருக்கிறாய். வா போகலாம் பங்களனிடம்" என்றான் உதயணன்.

"ஐயோ, அவரிடமா? இவ்வளவையும் கேட்ட பின்பு அவரிடமா அழைத்துச் செல்கிறீர்கள்? வேண்டாம்" என்று பதறினாள் பவானி.

"பதறாதே. நானிருக்கும் வரை பங்களன் உனக்குத் தீங்கிழைக்க முடியாது. போகலாம் வா. குண்டோதரா, படைத் தயார் செய்"

வெள்ளைத் தீவின் சுகவனத்துச் சொர்க்க மாளிகையில் பவானியை எலும்புகள் நொறுங்கும் படி இறுக அணைத்த பங்கனன் "அமீர் வாழ்க" என்றான்.

நீண்ட நாட்களாக கேட்பாரற்றுக் கிடந்த சுகவனத்து மாளிகை அவசரம் அவசரமாக சுத்தம் செய்யப் பட்டு மணக்கும் பூக்கள் ஏராளமாகக் கொட்டப் பட்டிருந்ததால் அந்த சுகந்தமே தனி சொர்க்கமாக இருந்தது. அத்துடன் பவானி என்ற சொர்க்கமும் சேர்ந்து கொண்டதால் இரட்டைச் சொர்க்கத்தில் சிக்கிக் கொண்ட பங்கனன் பரமானந்தத்துடன் அவளை அணைத்து அமீரை வாழ்த்திய போது "இதென்ன இந்நேரத்தில் போய் அவனை வாழ்த்துகிறீர்கள்?" என்று கேட்டாள் பவானி.

"அந்த முட்டாள் உன்னை உயிரோடு விட்டதால் தானே இன்று அரிய பரிசோடு நீ வந்திருக்கிறாய்?" என்று கேட்டபடி அவளைத் தூக்கி மஞ்சத்தில் போட்டு விட்டு அவள் முகத்தை நோக்கி குனிந்தான்.

"என்னைக் கொன்று விட நீங்கள் உத்திரவிட்டாலும் நான் இன்னமும் உங்களிடம் விசுவாசத்துடன் தான் இருக்கிறேன்" என்றாள் பவானி.

"ஆமாம். உன் உதடுகளுக்கும் அதே விசுவாசம் தான்" என்று கூறி தன் பற்களால் லேசாகக் கடித்து விட்டு உதடுகளை அழுத்தி எடுத்தான்.

"பிறகு "மீன் தீவில் அமீர் உன்னை என்ன செய்தான்" என்று கேட்டான் பங்கனன்.



"தெரியாது. நான் மயக்கமடைந்து விட்டேன்" என்று சோகம் குரலில் சொன்னாள் பவானி.

"மயக்கம் நீங்கிய பிறகுமா தெரியவில்லை? அழகு கன்னி! உன்னைப் பார்க்கும் எவனுக்குத் தான் வெறி உண்டாகாது! இத்தனைக்கு பிறகும் உன்னிடம் எனக்கே வெறி ஏற்படும் போது அமீர் எந்த மூலைக்கு?" என்று கேட்டு விட்டு அவளை மஞ்சத்திலேயே புரட்டினான். மதுக் கலயத்தை எடுத்துக் கொஞ்சம் பருகிவிட்டு அவளது வழுவழுத்த உதடுகளைப் பிரித்து "நீயும் அருந்து" என்று சொல்லி மதுவை ஊற்றினான். அவள் படுத்துக் கிடந்ததால் மது முழுவதும் வாயில் போகவில்லை. உள்ளேயும் வெளியேயுமாய் சிதறியது. ஒரு கட்டத்தில் மதுவை அவள் உடல் மீதே கொட்டிய அவன் கடகடவெனச் சிரித்தான். அவளும் கலகலவெனச் சிரித்தாள். அவளது சிரிப்பு அவனைக் கிளர்ந்தெழ வைத்தது. இருவரும் மிருகமானார்கள். மிருகங்களின் காமக் கூத்தை விவரிக்க இயலாது.

விடியும் நேரத்தில் பங்கனன் வெளியேறியதும் பூனையைப் போல உள்ளே நுழைந்தாள் பணிப்பெண்.

தனது அலங்கோலத்தைப் பற்றிக் கவலைப் படாமல் பணிப்பெண்ணைப் பார்த்து தீ விழி விழித்த பவானி, "பங்கனன் இன்னமும் உயிரோடு இருக்கிறான். இதற்கென்ன அர்த்தம்?" என்று கேட்டாள்.

"மன்னித்து விடுங்கள் அம்மா. நீங்கள் கூறியது போல் அவரைக் கொல்ல முயன்றேன். வாய்ப்பு சரியாக அமையவில்லை. ஒரு முறை முகப்புத் தீவில் அவரும் பகவதியும் குடிசைக்குள் நுழைந்தார்கள். நான் குடிசைக்குத் தீ வைத்தேன்

குடிசையும் கொழுந்து விட்டு எரிந்தது. மறுநாள் பார்த்தால் இருவரும் உயிரோடு இருந்தார்கள்."

"முட்டாளே! அந்த குடிசைக்குள் சுரங்கம் இருக்கிறது. அதில் போயிருப்பார்கள்."

"இது எனக்குத் தெரியாதே அம்மா."

"போ. போ. நானே தான் காரியத்தை முடிக்க வேண்டும். யாரையும் நம்பிப் பயனில்லை" என்றாள் பவானி.

அவர்களது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த ஓர் உருவம் அங்கிருந்து மெல்ல நகர்ந்தது.



**வ**ஞ்சி மாநகரின் துறைமுகத்தில் போர் ஏற்பாடுகளை மிகவும் திறம்படச் செய்தான் ஆபுத்திரன். உபதளபதிகள் அனைவரும் முழு ஒத்துழைப்பு கொடுத்து ஏற்பாடுகளில் பங்கு கொண்டார்கள். உயரத்திலும் எடையிலும் அதிகமாக இருந்த கர்ப்பிணி மரக்கலங்களையே தேர்ந்தெடுத்தான் ஆபுத்திரன். ஐந்து மரக்கலங்களை வெள்ளைத் தீவு நோக்கி செலுத்துவது என்றும் இருபது மரக்கலங்களை நடுக்கடலில் செலுத்தி பங்களனது உதவி கப்பல்களை சந்திப்பது என்றும் ஆரம்பத்தில் திட்டமிட்டிருந்தான் அவன்.

அதன்படி 25 மரக்கலங்கள் தயாராகி வரிசையாக நங்கூரமிட்டு நின்றன.

கடல்வேந்தன் என்று சிறப்புப் பெயர் பெற்ற உபதளபதி காலனை அழைத்த ஆபுத்திரன், "உபதளபதி ஒவ்வொரு



மரக்கலத்திலும் துடுப்பு போடும் மாலுமிகள் எத்தனை பேர்?" என்று கேட்டான்.

"பக்கத்திற்கு 50 பேர் வீதம் 100 பேர் இருக்கிறார்கள்"

"100 பேர் அவசியமா?"

"ஆமாம். அதிக எடையும் உயரமும் கொண்ட மரக்கலங்களை வேகமாக இயக்க 100 பேர் அவசியம் தேவை. கர்ப்பிணி மரக்கலங்களிலெல்லாம் இதற்கேற்ப 100 துடுப்பு துவாரங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன."

"இவர்களைத் தவிர மரக்கலத்தில் இதர பணிகளைச் செய்பவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்!"

"100 பேர் இருக்கிறார்கள். ஒரு மரக்கலத்தில் உள்ள மொத்த நபர்கள் 200 பேர். அனைவரும் மாலுமிகள், போர் வீரர்கள். அவர்களுக்குள் முறை வைத்துக் கொண்டு தத்தம் பணிகளை மாற்றிக் கொள்வார்கள்."

"எதற்கும் தரைப் படை வீரர்கள் 50 பேர்களை உரிய போர் ஆயுதங்களுடன் ஒவ்வொரு மரக்கலத்திலும் சேர்த்து விடுங்கள்."

"சரி."

"மரக்கலங்களில் தீப்பந்தங்கள், வாணங்கள் வெடி பொருட்கள் ஆகியவை தேவையான அளவு சேமிக்கப் பட்டிருக்க வேண்டும்."

"தேவையைவிட அதிகமாகவே சேகரிக்கப் பட்டுள்ளன. உணவுப் பொருட்களும் குடிநீரும் ஒரு காலத்திற்குத் தேவையான அளவு சேமிக்கப் பட்டுள்ளன."

"கடல்வேந்தரே, நமது மரக்கலங்களின் அடிப்பாகத்தைப் பார்த்தேன். ஒவ்வொரு கப்பலின் முன்புற அடிப்பாகத்திலும் இரும்புச் சலாகை முன்னே நீட்டியபடி அமைக்கப்பட்டிருக்கின்றன. இது போன்ற அமைப்பை நான் பார்த்ததில்லை.

"ஆபுத்திரரே, நீங்கள் பார்த்த அனைத்து மரக்கலங்களும் கிரேக்க நாட்டில் நமது மன்னரின் ஆலோசனைப் படி வடிவமைக்கப்பட்டவை. இவை சண்டைக்கான கப்பல்களாதலால் எதிரிக் கப்பல்களை மிகவும் நெருங்கி மோதும் போது இச்சலாகைகள் எதிரிக் கப்பல்களை எளிதில் பிளக்கச் செய்யும். அதே சமயம் கப்பல்களின் பின்புறத்தில் அடிப்பாகத்தில் உள்ளடங்கிய இரும்புச் சலாகைகள் வெளிப்பட்டு எதிரியின் கப்பல்களைப் பிளக்கும். இப்படி பழமையும் புதுமையும் அடங்கிய மரக்கலங்கள் இவை."

"நல்லது உபதளபதி. நாம் கிளம்பிச் சென்று அரைநாள் கழித்து மன்னர் 5 மரக்கலங்களுடன் கிளம்புவார். அந்த 5 மரக்கலங்களை தயார் செய்தாயிற்று அல்லவா?"

"ஆம்."

ஆபுத்திரன் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போது வீரனொருவன் அவனை நெருங்கி "ஐயா, இந்த ஓலையை சௌமிய குமாரி என்பவர் தங்களிடம் கொடுத்து விடும்படிச் சொன்னாராம். துறைமுக அதிகாரி சொன்னார்" என்று கூறி ஓலையைக் கொடுத்தான்.

அதை வாங்கி இடுப்பில் செருகிக் கொண்ட ஆபுத்திரன் மிகவும் முக்கியமான விஷயம் ஒன்றை மறந்து விட்டேன் கடல் வேந்தரே. நமது மரக்கலங்களில் தரைப் படைவீரர்களை



அமர்த்தும் போது அவர்கள் ஒவ்வொருவரிடமும் ஓர் உலக்கையைக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்" என்றான்.

"உலக்கையா? எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"மிளகு இடிக்கும் உலக்கையைத் தான்."

"அது எதற்கு?"

அதற்கு ஒரு கட்டாயம் வந்திருக்கிறது. ஏற்பாடு செய்யுங்கள். காரணத்தைப் பிறகு சொல்கிறேன்."

அன்று முழுவதும் அவனது யோசனைப் படி ஏற்பாடுகளைச் செய்யவே ஆபுத்திரனுக்குச் சரியாக இருந்ததால் அவன் மரக்கலங்களை விட்டு அகலவே இல்லை. அன்று இரவு கூட துறைமுகத்திலேயே உணவை முடித்துக் கொண்டதனால் நகரத்திற்குள் அவன் செல்லவில்லை.

அதே சமயம் வில்லவன் கூறியிருந்தபடி அன்றிரவு கழுகுமூக்கன் இறந்த செய்தி ஏதாவது வருகிறதா என்று எதிர் பார்த்தான். எதுவும் வரவில்லை. மறுநாள் வில்லவனே நேரில் வந்து கழுகுமூக்கன் இறக்கவில்லை என்றும் இழுத்துக் கொண்டு தான் இருக்கிறது என்றும் சொன்னான். கடற்படை புறப்படுவதற்கு முன்பு மரணமடைந்தால் எப்படியாவது செய்தியை அவனுக்கு அனுப்புவதாகச் சொல்லி விட்டுச் சென்றான் வில்லவன். அன்றைய பொழுது உலக்கைகளை சேகரிக்கும் வேலை பெரும் வேலையாக இருந்தது. அது அரண்மனையில் கிடைக்காத காரணத்தால் வீடுகள் தோறும் பணியாட்கள் சென்று அவற்றைச் சேகரிக்க வேண்டியதாக இருந்தது.

ஒருவாறு அனைத்து ஏற்பாடுகளையும் முழுவதுமாகச் செய்து முடிக்க இரவாகி விட்டது. மறுநாள் காலை புறப்பட வேண்டிய நேரம் மரக்கலத்தில் இருந்த எல்லோருக்கும் தெரிவிக்கப்பட்டது. பூங்கொடியைப் பார்க்காமல் போகிறோமே என்ற வருத்தம் அவனுக்கு உண்டாயிற்று. இரவோடு இரவாக அவளது இல்லத்திற்குச் சென்று அவளைச் சந்தித்து விட்டு வர வாய்ப்பு இருந்தாலும் அதை அநாகரிகமாகக் கருதியதால் மரக்கலத்திலேயே இருந்து விடத் தீர்மானித்து மரக்கல அறைக்குச் சென்றான். அங்கே இருந்த ஓலையைக் கண்ட போது தான் அதைப் பற்றிய நினைவே வந்தது அவனுக்கு.

"சௌமிய குமாரி எழுதிய ஓலை. என்ன எழுதியிருப்பாள்? தன் காதலைப் பற்றி மீண்டும் மீண்டும் எழுதியிருப்பாள்? பிடிவாதக் காரி" என்று நினைத்த படியே ஓலையைப் படித்தான் ஆபுத்திரன்.

அதைப் படித்தவுடன் அவனுக்கு உலகமே இருண்டு மாதரி ஆயிற்று.

இடிந்து போய் அமர்ந்து விட்டான்.





# அத்தியாயம் நாற்பத்தெட்டு



## புறப்பாடு

"ஆபுத்திரரே, உங்கள் பூங்கொடியை பவானி வெள்ளைத் தீவுக்கு அழைத்துச் சென்று விட்டாள். நானும் அங்கே தான் போகிறேன். கவலைப் படாதீர்கள்" என்னும் கூற்றினும் கொடிய சொற்களைப் படித்த போது, உலகமே இருண்ட மாதிரி தோன்றியது ஆபுத்திரனுக்கு. தனது வாழ்வின் ஒரே வசந்தமான பூங்கொடி வெள்ளைத் தீவுக்குக் கடத்தப் பட்டாள் என்ற செய்தியே பூங்கொடிக்கு எந்த நேரத்திலும் எதுவும் நடக்கலாம் என்பதை உணர்த்தியது. அதுவும் ஈவும் இரக்கமும் அற்ற கொடிய சொன்னையர்களின் வாழ்விடத்தில் அவளுக்கு உதவவோ, பாதுகாக்கவோ அல்லது கருணை காட்டவோ யாரும் இருக்கப் போவதில்லை என்பது

நிதர்சனமாகத் தெரிந்ததால் அவனது நிலைமையைக் குறித்துப் பெரிதும் கவலை கொண்டான் ஆபுத்திரன். அதுவும் வெள்ளைத் தீவு தன்னால் தாக்கப்பட்ட விருக்கும் வேளையில் அவனங்கு இருப்பது எப்படிப் பார்த்தாலும் விபரீதமாகவே எண்ண வைத்தது.

"ஆகா! இந்த பவானி என்ன மாயாவியா? எங்கே வேண்டுமானாலும் வருகிறாள் என்ன வேண்டுமானாலும் செய்கிறாளே? இவள் மீது பூம்புகாரின் கருணை காட்டியது எத்தனைத் தவறாகப் போய் விட்டது? அதோடு பூங்கொடி கூடும் இவனுக்கும் என்ன சம்மந்தம்? பூங்கொடியை எதற்காக வெள்ளைத் தீவுக்கு அழைத்துச் செல்ல வேண்டும் எனக்கு வேண்டியவன் என்பதால் அவனைப் பிணைக் கைதியாக வைத்துக் கொண்டு என்னைப் பணிய வைக்க பங்களனிடம் ஆலோசனை சொல்வாளா? அந்தக் கொடியவனுக்கு இந்த ஆலோசனை இனிப்பாக அல்லவா இருக்கும்? பூங்கொடியை உண்மையிலேயே பிணைக் கைதியாக வைத்துக் கொண்டு என்னைச் சரணடையச் சொன்னால் என்ன செய்வது? என் ஒருவனுக்காகச் சேரப் படையை எப்படி காவு கொடுக்க முடியும்? இதென்ன புதிய சிக்கல்?" என்று பலவாறு சிந்தித்தான் ஆபுத்திரன்.

அதோடு கழுகுமூக்கன் சொன்ன செய்திகள் வேறு அவனை அமைதி இழக்கச் செய்திருந்தன. அதனால் ஏற்படக் கூடிய குழப்பங்கள் அவனைப் பெரிதும் அவதிப்பட வைத்தன. இரவு முழுதும் தூக்கமின்றி சிந்தனையில் ஆழ்ந்த அவன் விடியும் நேரத்தில் ஒரு தீர்மானத்திற்கு வந்தான். தனக்குத் தரப்பட்ட கடமையை கர்மவீரனாக இருந்து முடிப்பது தான் உகந்தது என்று கருதியவனாய் கடல்வேந்தனிடம் கூறிவிட்டு



துறைமுகத்தை விட்டு வெளியேறி அரண்மனைக்குச் சென்றான். சேரமன்னர் சூரிய நமஸ்காரம் செய்ய நீராடப் பக்கம் சென்றிருந்ததால் ராணியார் வேண்மாள் முன்பு சென்று அவரை வணங்கி எழுந்து "போருக்குப் புறப்படுகிறேன் தாயே. போர்த் தெய்வம் கொற்றவையை வணங்க நேரமில்லாததால் தங்களையே கொற்றவைத் தெய்வமாகக் கருதிப் போரின் வெற்றியை யாசிக்கிறேன். வாழ்த்தி அனுப்புங்கள்" என்று வேண்டிக் கொண்டான்.

"மகனே! உனக்கு ஒரு குறையும் இல்லை. பெரு வெற்றியுடன் திரும்புவாயாக!" என்று கூறி அவனுக்கு வீரத்திலகமிட்டான் ராணியார்.

அதே நேரத்தில் செங்குட்டுவனும் அங்கே வந்து விட அவனையும் வணங்கினான் ஆபுத்திரன்.

செங்குட்டுவனின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது. "வீரனே, உனக்குத் தோல்வியில்லை. புறப்படு. வெற்றி வீரனாய் வஞ்சிக் கோட்டைக்கு நீ திரும்பும் போது நீ எதிர்பாராத பரிசை நீ பெறுவாய்" என்று சொல்லிவிட்டு அவனும் வீரத்திலகமிட்டான்.

துறைமுகம் வரை அவனும் அமைச்சரும் சேனாதிபதியும் வந்து வழியனுப்பி வைத்தார்கள். போர்ப்பறைகள் முழங்க வாழ்த்தொலிகள் அதிர சேரத்து கடற்படை புறப்பட்டது.



கடல் வேந்தனையும் இதர உபதளபதிகளையும் அழைத்த ஆபுத்திரன், "நமது திட்டத்தில் ஒரு சிறு மாற்றம். நமது

25 மரக்கலங்களில் 5 மரக்கலங்கள் வெள்ளைத் தீவுப பக்கமாகச் சென்று தாக்குவது போல் போக்குக் காட்ட வேண்டும் என்று முடிவு செய்திருந்தோம அல்லவா? அது வேண்டாம். எல்லா மரக்கலங்களுமே நடுக்கடலுக்குச் செல்லட்டும்" என்றான்.

"தாங்கள் எப்படிக் கூறினாலும் சரி" என்றான் கடல்வேந்தன்.

ஒரு நாழிகைப் பயணத்திற்குப பின் பங்களனின் உதவிக் கப்பல்கள் கண்ணில் படுவதை தொலை நோக்கு கண்ணாடியின் மூலம் உறுதி செய்து கொண்ட ஆபுத்திரன் கொம்பொன்றை எடுத்து ஊதியதும் சேரர் மரக்கலங்கள் எல்லாவற்றிலிருந்தும் சரடிகை ஒலி எழுப்பப்பட்டு காதுகளைக் கிழிக்கும் அவ்வொலி இடைவிடாமல் ஒலிப்பதைக் கண்ட பங்களனின் மரக்கலங்கள் குழம்பின. அங்கிருந்த மரக்கலங்களுக்குத் தலைவனாக இருந்த பீமசேனன் "இதை நான் எதிர்பார்க்கவில்லை" - என்றான் அருகில் இருந்த ஒரு உபதலைவனிடம்.

"நீங்கள் எதை எதிர்பார்க்கவில்லை? இந்த ஒலியையா?" - என்று கேட்டான் உபதலைவன்.

"முட்டாளே. சப்தம் கிடக்கட்டும். சேரரது மரக்கலங்களை நான் எதிர் பார்க்கவில்லை என்றேன்" என்றான் பீமசேனன்.

"பிறகு யாருடைய மரக்கலங்களை எதிர்பார்த்தீர்கள்? நமக்கும் சேரருக்கும் தானே பகை? சேரர் கப்பல்கள் வராமல் பாண்டியர் கப்பல்களா வரும்?" என்றான் உபதலைவன்.



பீமசேனன் பற்களைக் கடித்தான்.

"பங்களன் இப்படியொரு தாக்குதல் நடக்கும் என்று சொல்லவில்லையே? வெள்ளைத் தீவுகளின் மீது சேரர் படை தாக்கும் போது நாம் பின்புறத்தில் தாக்க வேண்டும் என்று தானே சொன்னார்? உதவிப் படைகள் என்று தானே நமக்குப் பெயர்? இப்போது சேரர் படை நேராக நம்மை நோக்கி வருகிறதே?" என்று குழப்பமான குரலில் எரிச்சலோடு கேட்டான் பீமசேனன்.

"ஐயா பீமசேனரே, பங்களர் எதிர்பார்க்கிற மாதிரி நடந்து கொள்ள வேண்டிய கட்டாயம் சேரர்களுக்கு இல்லையே? அவர்கள் தங்கள் திட்டப்படிச் செயல்படுகிறார்கள்."

என்ன கேட்பதென்று குழம்பிய பீமசேனன் "எதற்காக இத்தனை மரக்கலங்களும் இப்படித் தொடர்ந்து ஊளையிடுகின்றன? இது என்ன புது ரகமான ஒலி?" என்று கேட்டான்.

"நான் வேண்டுமானால் போய் கேட்டுக் கொண்டு வருகிறேன்."

"என்ன?"

"பின் என்ன உபதலைவரே? உங்களை மாதிரி தானே நானும்? எனக்கு மட்டும் எப்படித் தெரியும்?"

"மரக்கலங்கள் எத்தனை என்று பார்."

"மரக்கலங்களை எண்ணுவது என் வேலையல்ல."

"அதற்கென்று ஒரு ஆளையா நியமிக்க முடியும?"

மாலுமி, உன் அடாவடிக்கு இது நேரமல்ல. சேரர் மரக்கலங்கள் நம்மை விட இரண்டு மடங்கு இருக்கும் போலிருக்கிறது" என்று கூறிக் கொம்பொன்றை எடுத்து ஊதினான்.

ஆனால் அவனது ஊதலுக்கேற்ப அவனது மரக்கலங்கள் நகராததால் "இதென்ன மாலுமி? கொம்பை ஊதியிருக்கிறேன். நமது மரக்கலங்கள் நகர வில்லையே" என்று கேட்டான் பீமசேனன்.

சேரர் மரக்கலங்கள் எழுப்பும் சத்தம் தான் கடலைக் கலக்குகிறதே! உங்கள் கொம்பொலி யாருக்குக் கேட்கும்? கொடியை எடுத்து ஆட்டி அடையாளத்தைக் காட்டுங்கள்."

மாலுமி சொன்ன நேரம் நல்ல நேரமாக இருக்க வேண்டும். சேரர் மரக்கலங்களிடமிருந்து எழுந்த கரடிகை ஒலி நின்றது. அதுவரை முட்டாள் தனமாகக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்த பீமசேனன் தன் கலத்திற்கு அருகே வந்து கொண்டிருந்த சேரர் மரக்கலத்தைக் கண்டதும் தன் கப்பலின் விசையொன்றை அழுத்தியதுமே தளத்திலிருந்து நீண்ட சங்கிலி ஒன்று எழுந்தது. அவனது துணிச்சலான செயலைக் கண்டு அசந்தான் ஆபுத்திரன்.

"கர்ப்பிணி கப்பலை இழுக்கும் அளவிற்கு சங்கிலியை வீசும் இந்த மனிதனின் துணிவு பாராட்டுதற்குரியது இல்லையா கடல்வேந்தரே!" - என்று பக்கத்தில் இருந்த கடல் வேந்தனிடம் கேட்டான் ஆபுத்திரன்.

"உண்மைதான். கொள்ளைக் காரர்களின் துணிச்சல் இது. இப்படிச் சங்கிலிகளை எதிர் பாராமல் வீசி வணிகக் கலங்களைக் கைப்பற்றுவது அவர்களுக்கு கை வந்த கலை





ஆனால் அந்த சாமார்த்தியத்தை நமது கனமும் உயரமும் கொண்ட போர்க்கப்பலின் மீது வீச முற்பட்டது அவனது துணிச்சலைக் காட்டுகிறது!" என்று ஒப்புக் கொண்டான கடல்வேந்தன்.

இவ்விருவரும் பேசிக்கொண்ட அதே நேரத்தில், சுக்கானைப் பிடித்திருந்த மாலுமியை நோக்கி சைகை காட்டவே, அந்த மாலுமியும் சைகைக்கு ஏற்றபடி சுக்கானை சுழற்றினானாதலால், அந்த மரக்கலம் திரும்பி தனது முகப்பை பீமசேனனின் கப்பலுக்கு காட்டியது. அவனது கப்பலிலிருந்து எழுந்த சங்கிலி ஆபுத்திரன் இருந்த கலத்தின் முன் புறத்தில் விழுந்து அம்மரக்கலம் வேகமாக இழுக்கப்பட்டு, அக்கலத்தின் அடிப்பாகத்தில் நீண்டிருந்த இரும்புச் சலாகை வேகத்துடன் பீமசேனனின் கப்பலின் அடிப்பாகத்தில் மோதியதால் பெரும் சத்தத்துடன் அடிப்பாகமானது பிளந்து, கப்பல் மூழ்கத் தொடங்கியது. கப்பல் மூழ்கத் தொடங்கியதுமே ஆபுத்திரன் கொம்பூதியதால், அவனது மரக்கல மாலுமிகள் திசைமாறி துடுப்புகளைப் போட மரக்கலம் பின்வாங்கிக் கொண்டது.

ஆபுத்திரனது மரக்கல அமைப்பு பற்றித் தெரியாமல் பீமசேனன் மேற்கொண்ட நடவடிக்கை அவனுக்கே கெடுதலாக அமைந்தது. அவன் வீசிய சங்கிலி பக்கவாட்டில் விழுந்திருந்தால் பயன் கிட்டியிருக்கும். அதற்கு வாய்ப்புத் தராமல் ஆபுத்திரன் மரக்கலத்தை சுழற்றி திருப்பியதால் மனம் தளர்ந்து விடாத பீமசேனன், மற்றொரு கப்பலுக்கு நீந்திச் சென்று அதில் ஏறி நின்றபடி, சேரர் மரக்கலங்களை கவனித்தான்.



சேரர் மரக்கலங்களில் 5 மரக்கலங்கள் மட்டும் என்ன காரணத்தாலோ போர் நடக்கும் பிராந்தியத்திற்குள் பிரவேசிக்காமல் நடுக்கடலுக்கு முன்னேறிக் கொண்டிருந்தன. அதைப் பற்றிய கவலையை விட்டொழித்த பீமசேனன் மீதியிருந்த 20 மரக்கலங்களை கவனித்தான். அவை அனைத்தும் அரை சந்திரவட்ட வளைவில் அணிவகுத்துக் கொண்டிருந்தன. தன்னிடம் மூழ்கிவிட்ட மரக்கலம் போக மீதியிருந்த பதிமூன்று மரக்கலங்கள் இருமங்குமாய் உவலிய நிலையில் இருக்க, எந்த விதமான போரை நடத்தினாலும் சரி, சாமர்த்தியத்தைக் காட்டினாலும் தன்னை விட இருமடங்கு எண்ணிக்கை பலம் கொண்ட சேரர் கடற்படையை வெல்வதென்பது இயலாது என்பது அவனுக்குத் திட்டவட்டமாகத் தெரிந்தது. பங்களன் தன்னைப் பதினான்கு மரக்கலங்களோடு நடுக்கடலில் சஞ்சரிக்கச் சொல்லிய போது தனது மரக்கலங்கள் இக்கெட்டான நேரத்தில் துணைப்படையாக மட்டுமே பயன்படும் என்று கூறியிருந்தான். ஆகவே எந்தப் போர்த் திட்டத்தையும் பீமசேனனுக்கு பங்களன் அறிவிக்கவில்லை. சேரரின் தாக்குதல் முதலில் வெள்ளைத் தீவில் தான் இருக்கும் என்று பங்களனும் பீமசேனனும் எதிர்பார்த்தார்கள். தற்போதைய தாக்குதலை எதிர் பார்க்கவில்லை. அது மட்டுமல்ல, தன்னை எதிர்க்கவரும் சேரர்படை எண்ணிக்கை தன்னைவிட இருமடங்கு இருக்கும் என்று அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. துணிச்சலுடன் போரைத் துவக்கியதும், தனது துவக்கம் அபசகுனமாக அமைந்து விட்டது போல் தன் தாக்குதல் தோற்று மரக்கலம் உடைபட்டு மூழ்கி விடவே, யோசிக்கலானான் பீமசேனன்.

முதல் மீனவையாக தன் மரக்கலங்களில் ஏற்றி விட்டு, பாய்மரங்களில் பறந்து கொண்டிருந்த பாய்களை இறக்க செய்தான். அவற்றிலும் 5 மரக்கலங்களிலிருந்து பாய்களை அவிழ்க்காமல் அவற்றை நடுக்கடலில் வேகமாகச் சென்று விடும்படி கட்டளையிட்டான். மீதியிருந்த ஏழு மரக்கலங்களை ஒரு முறை பார்வையிட்ட அவன் சேரர் மரக்கலங்களை நோக்கிச் சமாதானக் கொடியை ஆட்டிச் சங்கையும் ஊதினான். அவனைப் பொறுத்தவரை லாப நஷ்டக் கணக்கு தான் பெரிதாகத் தெரிந்ததே தவிர மான அவமானங்கள் பெரிதாகத் தெரியவில்லை. பயங்களைப் போலவே அவனும் கொள்ளைக்காரனாகவே காலம் தள்ளியவனாதலால், தற்போதைய நிலைமையின் அவலத்தை உணர்ந்து பயங்களை மறந்தான். பயங்களுக்காகச் சேரர்களுடன் மோதி உயிர் விடுவதால் ஒரு லாபமும் இல்லை என்பது சந்தேகமறத் தெரிந்தது அவனுக்கு. தானும் மடிந்து தன் மரக்கலங்களும் சேரர்களால் கைப்பற்றப் பட்டால் தனக்குப் பெரிய பெயர் ஒன்றும் சரித்திரத்தில் வந்து விடப் போவதில்லை என்பது வெளிப்படையாக இருந்ததால், தேவையற்ற போரைச் செய்து அழிந்து போவதை விட ஆபுத்திரனிடம் சரணடைந்து தன்னையும் தன் மரக்கலங்களையும் காப்பாற்றிக் கொள்வது தான் விவேகமானது என்றும் லாபகரமானது என்றும் அவனது சுயநலம் பிடித்த கொள்ளைக்கார மனம் முடிவு செய்தது. சேரரிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொண்டால் தன்னளவில் தனியாக ஒரு கொள்ளைக்கார கூட்டத்தை அமைத்துக் கொள்ளலாம் என்ற தீர்மானத்தில் சமாதானக் கொடியை ஆட்டி சங்கையும் ஊதினான். ஆனால் சேரர் தரப்பிலிருந்து எந்த விதமான பதில் அடையாளமும் வரவில்லை



இதற்கிடையில் பீமசேனனது திடீர் நடவடிக்கையால் இதர மரக்கலங்களில் இருந்த மாலுமிகள் குழம்பிப் போய் என்ன நடக்கப் போகிறது என்பதைக் கேட்கும் விதத்தில் தங்கள் மரக்கலங்களிலிருந்து பீமசேனனை நோக்கிக் கருப்புக் கொடிகளை ஆட்டினார்கள்.

"எதற்கு இவர்கள் கருப்பு கொடிகளை ஆட்டுகிறார்கள்?" என்று பக்கத்தில் இருந்த நக்கல் பிடித்த மாலுமியிடம் விசாரித்தான் பீமசேனன்.

"கொடி இருப்பதால் ஆட்டுகிறார்கள்" என்றான் மாலுமி.

பீமசேனன் சற்றே சிவந்தவனாய் "மாலுமி உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"ஏன், என் பெயரில் கவிதை பாடப் போகிறீர்களா?"

"மாலுமி, விளையாடும் நேரமல்ல இது. தலை போகும் நேரம். உன் கிறுக்குத் தனங்களை நிறுத்தி விட்டு கேட்டதற்கு பதில் சொல். இல்லையென்றால் உன் தலையை வெட்டிச் சாய்ப்பேன்!" என்று கண்கள் சிவக்க அனல் பறக்கக் கேட்டான் பீமசேனன்.

மாலுமி ஒரேயடியாக பயந்து விடவில்லை என்றாலும் சற்று அடங்கியவனாய் "அகமத்" என்றான்.

"அகமத். நமது மரக்கலங்களில் உள்ளவர்கள் ஏன் கொடியை ஆட்டுகிறார்கள் என்று கேட்டேன். கொடி இருப்பதால் ஆட்டுவதாகச் சொல்கிறாய். இதைச் சொல்ல நீ எதற்கு? அதோடு இதுவரையிலும் அவர்களிடம் கொடி இருந்தது உண்மை தானே! அப்போதெல்லாம்

ஆட்டவில்லையே? இப்போது என்ன வந்தது ஆட்டுவதற்கு" என்று கேட்டான் பீமசேனன் கோபக்குரலில்.

"உங்கள் நடவடிக்கைகள் அவர்களுக்குப் புரியவில்லை. ஆகவே கொடியை ஆட்டிக் கேட்கிறார்கள்" என்றான் அயுத்.

"சமாதானக் கொடியை ஆட்டினேன். சங்கையும் ஊதினேன். இது அந்த மாலுமிகளுக்குப் புரியவில்லையா?"

"அர்த்தம் புரிந்திருக்கும். காரணம் புரிந்திருக்காது."

"காரணமா?"

"ஆம். எதற்காக நீங்கள் சமாதானமாகப் போகிறீர்கள் என்பது அவர்களுக்குப் புரியவில்லை."

"நான் போய் ஒவ்வொருவனிடமும் போய் காரணத்தைக் கூறி ஒப்புதல் வாங்கி விட்டுத் தான் சங்கை ஊதவேண்டுமா?"

"அப்படியல்ல. போரை எதிர்பார்க்கிற நிலை தற்போதைய நிலை. நாம் போரைத் துவக்கி தாக்குதல்களை மேற்கொண்டு தோற்கும் நிலை வந்தால் சமாதான சங்குகளை ஊதுவது வழக்கம். தாங்களும் அப்படிச் செய்திருந்தால் அவர்களுக்கும் நிலைமை புரிந்திருக்கும். போரை கைவிடுவார்கள். ஆனால் போரே துவங்காத நிலையில் சமாதானச் சங்கை நீங்கள் ஊதினால் குழப்பமாக இருக்காதா அவர்களுக்கு?"

"குழப்பமடைய இவர்கள் யார்? இந்த மரக்கலங்களுக்கு நான் தலைவனா? அவர்கள் தலைவர்களா? என் சொல்லுக்கு கட்டுப்பட வேண்டியது அவர்கள் கடமை தானே? அதை விட்டு விட்டு கொடியாட்டுவது குற்றமில்லையா?"



"தங்களுக்கு கட்டுப்பட முடியாது என்று அவர்கள் கொடிகளை ஆட்டவில்லை. சந்தேகத்தை நிவர்த்தி செய்யவே அவ்வாறு செய்கிறார்கள்."

"அகமத். நான் சமாதானம் கோருவது உனக்குப் புரிகிறதா? நம்மை விட இரண்டு மடங்கு இருக்கும் சோழர் படைகளுடன் மோதினால் சர்வநாசம் தான் நமக்கு உண்டாகுமே தவிர வெற்றி கிடைக்குமா? நானும் அழிந்து நீயும் அழிந்து மாலுமிகள் அனைவரும் அழிந்து மரக்கலங்களும் அழிவதால் யாருக்கு லாபம்? தெரிந்தே அழிந்து போவது விவேகமாகுமா? போரைத் துவக்கி கணிசமான சேதம் உண்டான பிறகு சமாதானச் சங்கை ஊதுவது முட்டாள் தனமில்லையா? அதைவிட முதலிலேயே சங்கை ஊதி அழிவைத் தடுப்பது புத்திசாலித்தனமில்லையா? சொல் அகமத். இது உனக்குப் புரியவில்லையா?"

"புரிகிறது."

"அவர்களும் உன்னைப் போல மாலுமிகள் தானே? அவர்களுக்கு மட்டும் ஏன் புரியவில்லை."

"நேரிலேயே கேட்டு விடலாம். தலைமை மாலுமிகள் நம்மை நோக்கிப் படகுகளில் வந்து கொண்டிருக்கிறார்கள்."

"முட்டாள்கள்" என்றான் பீமசேனன்.

சிறிது நேரத்தில் இதர மரக்கலங்களின் தலைமை மாலுமிகள் ஆர்ப்பாட்டமாகப் பிரவேசித்து "இங்கே என்ன நடக்கிறது? எதற்காக சமாதானச் சங்கு ஊதப்பட்டது" என்று ஒரு சேரக் கேட்டார்கள்.

"அசுமத், நான் சொன்னதை இவர்களுக்குச் சொல்" என்றான் பீமசேனன்.

அசுமத்தும் நிலைமையை உண்மையிலேயே புரிந்து கொண்டவனாக, பீமசேனனின் தீர்மானத்தை விவரமாக எடுத்துரைத்தான்.

ஆனால் மாலுமிகள் அதை ஒப்புக் கொள்வதாக இல்லை.

"பங்களர் நம்மை அனுப்பியது போர் புரியத் தான், சரணடைவதற்காக அல்ல" என்றான் ஒரு மாலுமி.

"உண்மை தான். போர் புரியத் தான் பங்களர் நம்மை அனுப்பினார். ஆனால் நடுக்கடலில் அல்ல, வெள்ளைத் தீவிலேயே உதவிப் படைகளாகத் தான்" என்றான் பீமசேனன்.

"எங்கே நடந்தாலும் போர் போர் தான்" என்றான் அதே மாலுமி.

"இங்கே நடந்தாலும் போர் தான். ஆனால் இங்குள்ள நிலைமை பங்களருக்குத் தெரியுமா? போருக்கு அனுப்பும் உரிமை தான் பங்களருக்கு உண்டு. ஆனால் போர் சமயத்தில் எடுக்கப் படும் நடவடிக்கைகளுக்கு உபதளபதி என்ற முறையில் எனக்குத் தான் உரிமை உண்டு."

"உரிமை உங்களுக்கு இருக்கலாம். ஆனால் பெருமைக்காக அதை நீங்கள் பயன்படுத்தவில்லை."

"எது பெருமை? அழிவு நிச்சயம் என்று தெரிந்தே அழிந்து போவது தான் பெருமையா? அதைத் தான் நான் தலைமையேற்றுச் செய்ய வேண்டும் என்று நீங்களெல்லாம் விரும்புகிறீர்களா?"



வேறு ஒரு மாலுமி குறுக்கிட்டு "போரே வேண்டாம் என்று சேரர்களிடம் சரணடைவதால் என்ன லாபம்" என்று கேட்டான்.

"சேரர் சிறையில் வாழ்நாள் முழுதும் அடைபட்டுக் கிடக்க வேண்டியது தான்" என்றான் மற்றொரு மாலுமி.

"நன்றாக எல்லோரும் யோசியுங்கள். நமது கடந்த காலத்தைச் சற்று எண்ணிப் பாருங்கள். சேரர்களோடும் பாண்டியர்களோடும் போரிடவா நாம் பிறந்தோம்? ஒன்றாய் இணைந்தோமா? போரா நம் தொழில்? இல்லை. அதற்குக் காரணம் நமக்கென்று நாடு எதுவும் இல்லை. கடலே நம் வீடு. நம் நாடு. நம் தொழில் கொள்ளை. கடலில் இஷ்டப்படித் திரிந்து கொள்ளையடித்து ஆடிப் பாடிக் கொண்டிருந்த நம் வாழ்க்கையைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். பங்களனின் அர்த்தமற்ற கொள்கைகளுக்காக நாம் நம் கொள்கைகளை விட்டு விட்டு, சேரர்களோடு மோதிச் சாக வேண்டிய அவசியம் என்ன? இப்போது உண்டாகியிருக்கும் இக்கட்டில் பங்களனுக்குக் கட்டுப்பட வேண்டிய அவசியம் என்ன? அவனது உறவைத் துண்டித்து விட்டதாகச் சொல்லி நாம் சுதந்திர வாழ்வை விரும்புவதாகத் தெரிவித்து சேரர்களிடம் பணிந்தால் நம்மையும் நம் மரக்கலங்களையும் விடுவிக்க மாட்டார்களா? கடல் பிராந்தியம் மகா விஸ்தாரமானது. எங்கேயாவது போய் நாம் நம் தொழிலை மேற்கொள்ளலாம் அல்லவா? இத்திட்டம் உங்களுக்குப் பிடிக்கவில்லையா?" என்று பீமசேனன் ஆசை வலை விரித்ததும் இயற்கையிலேயே பணத்தாசை பிடித்த கொள்ளைக்கார மாலுமிகள் அவன் பக்கம் சாய ஆரம்பித்தார்கள்.

"எல்லாம் சரி. நமது சமாதானத்தை அவர்கள் ஏற்றுக் கொள்வார்களா! நீங்கள் கொடியை ஆட்டி எங்களை அழைத்தீர்கள். சேரர்கள் ஒரு அடையாளமும் காட்டவில்லையே!" என்றான் ஒரு மாலுமி.

"அதனால் என்ன? நானே நேரில் போகிறேன் சமாதானம் பேசுகிறேன்" என்ற பீமசேனன் "உங்களுக்குச் சம்மதம் தானே?" என்றான்.

பேராசை பிடித்த மாலுமிகளும் சம்மதித்தார்கள்.

"சரி. நீங்களெல்லாம் உங்கள் மரக்கலத்திற்குச் செல்லுங்கள். நான் போய் சமாதான ஏற்பாடுகளைச் செய்கிறேன்" என்றான் பீமசேனன்.

அதையடுத்து தலைமை மாலுமிகள் தத்தம் மரக்கலங்களுக்குப் புறப்பட்டுச் சென்றதும் படகொன்றை இறக்கி அதில் சமாதான கொடியை பிடிக்கச் சொல்லி ஆபுத்திரன் இருந்த மரக்கலத்தை நோக்கி அகமத்துடன் சென்றான் பீமசேனன்.



சமாதானக் கொடியுடன் பீமசேனன் வந்து கொண்டிருந்ததைக் கண்ட கடல் வேந்தன் "ஆபுத்திரரே, பழம் நழுவி பாலில் விழுகிறது. பங்களனின் உபதளபதி இங்கே வந்ததும் அவனைப் பாய் மரத்தில் கட்டிப் போட்டு மாலுமிகளை யெல்லாம் வெட்டி வீழ்த்தி விட்டு அவனது மரக்கலங்களையெல்லாம கைப் பற்றலாம்" என்றான்.



"உனக்கும் பங்களனுக்கும் வித்தியாசமே இல்லை கடல்வேந்தரே. நாம் சேரர்கள். கொள்ளைக்காரர்கள் அல்ல. அவனே சமாதானத்திற்கு வரும் போது எதற்காக பாய்மரத்தில் கட்டிப் போட வேண்டும்?" என்றான் ஆபுத்திரன்.

"அப்படியானால் அவனது சமாதானத்தை ஏற்கப் போகிறீர்களா? கொள்ளையர்களை அடியோடு அழிக்க வேண்டும் என்பது தான் மன்னரது தீர்மானம். அவர்களை எந்த வடிவத்திலும் விட்டு வைக்கக் கூடாது என்று நினைக்கிறார்!" என்று பரபரப்புடன் சொன்னான் கடல்வேந்தன்.

"பார்ப்போம். அவன் வரட்டும்"



பீமசேனன் தன் உள்ளக்கிடக்கையை விவேகத்துடன் விவரித்தான்.

அனைத்தையும் கவனமாகக் கேட்ட ஆபுத்திரன், "பீமசேனா, உயிர் என்பது சேரர்களுக்கும் ஒன்று தான். உன்னைப் போன்ற கொள்ளையர்களுக்கும் ஒன்று தான் எல்லோருக்குமே உயிர் அரிய தொரு பொருள். அதற்குக் காரணம் நம்மால் உயிரை எடுக்கத் தான் முடியுமே தவிர கொடுக்க முடியாது. அப்படிப்பட்ட அரிய உயிர்களை பலி கொடுக்க விரும்பாமல் காப்பாற்ற நினைத்த உன் நினைப்பை நான் மதிக்கிறேன். வறட்டு கௌரவம் பார்க்காமலும் அர்த்தமற்ற சண்டையில் இறங்காமலும் நேரத்தை வீணாக்காமல் சமாதானம் பேச வந்ததற்காக உன்னைப் பாராட்டுகிறேன். சேரமான சமாதானத்தை விரும்பும் மாவீரர்

ஆனால் உங்களைப் போன்ற கொள்ளைக் காரர்களிடம் சமாதானத்தை விரும்பவில்லை. அதற்குக் காரணம் உங்களது கவிரகமற்ற கொடுமைகளும் அயோக்கியத் தனங்களும் தான். இத்தனைக்கும், பங்களன் திருந்துவதற்கு சந்தர்ப்பம் அளித்தார் அவனோ அதற்குப் பதிலாக போருக்குத் தயார் என்று அறைகூவல் விடுத்திருக்கிறான். எனவே தான் இந்த எரித்திரிய கடல்பகுதியில் கடல் கொள்ளையர் என்ற பெயரே இனி நிலவக் கூடாது என்ற எண்ணத்துடன் அவர்களைப் பூண்டோடு அழித்து விடும் படிக் கட்டளையிட்டிருக்கிறார். அப்படியிருக்கும் போது சமாதானத்தை எப்படி ஏற்க முடியும்?" என்று கேட்டான்.

"அப்படியானால் எங்களையெல்லாம் வீணாகப் போரிட்டுச் சாகச் சொல்கிறீர்களா? இது சேரர்களுக்குப் பெருமை தரக் கூடியதா?" - துணிச்சலாகக் கேட்டான்.

"சேரரின் பெருமையைப் பற்றிப் பேச உன்னைப் போன்ற கொள்ளைக் காரர்களுக்கு அருகதை இல்லை பீமசேனா. இருப்பினும் உன் சமாதானத்தை நான் ஏற்கிறேன் பலநூறு பேர்களின் உயிரை நீ மதிப்பதால். ஆனால் உன்னையும் உன் மரக்கலங்களையும் சுதந்திரமாக விடுவிக்கும் படி கோரினாயே, அதை ஏற்க முடியாது. அதை ஏற்கும் அதிகாரம் சேர மன்னருக்கு மட்டுமே உண்டு. நீங்களும் உங்கள் மரக்கலங்களும் நிபந்தனையின்றி சரணடைந்தால் ஏற்கிறேன். இல்லையென்றால் உனக்கு அவகாசம் தருகிறேன். உன் மாலுமிகளோடு கலந்தாலோசித்த பின் உன் முடிவைச் சொல்."

"இல்லை ஆபுத்திரரே. சேர மன்னரை நான் நம்புகிறேன். அவர் மூலம் எங்களுக்கு நல்ல காலம் பிறக்கும். எனவே நாங்கள் நிபந்தனையின்றிச் சரணடைகிறோம்."



அதைக் கேட்டு மகிழ்ச்சியை தெரிவித்தான் ஆபுத்திரன்.

பிறகு காரியங்கள் துரிதமாக நடந்தன.

கொள்ளையர் மரக்கலங்களைத் தகுந்த பாதுகாப்புடன் வஞ்சிக் கோட்டைக்கு அனுப்பி வைத்த வஞ்சிக் கோட்டை வாலிபனான ஆபுத்திரன் தனது மரக்கலங்களோடு வெள்ளைத் தீவுகளை அடைந்தான்.

ஆனால்-

அங்கே தீவில் பெயருக்கு கூட ஒரு மரக்கலமும் இல்லை.



## அத்தியாயம் நாற்பத்தொன்பது



# வெள்ளைத் தீவில் ஒரு மாற்றம்

சேரர்களிடம் சரணடைய ஒப்புக் கொண்டதாக பீமசேனன் கூறியபோது அசுமத் பேசமுற்பட்டு "மற்ற மாலுமிகள் இதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள்" என்றான்.

"ஒப்புக் கொள்ளவில்லை என்றால் சாகட்டும். அப்படிச் செய்தால் அதற்கு நான் பொறுப்பல்ல. நானும் ஆபுத்திரரும் தற்போது உண்டாகியுள்ள நிலையை தீர்க்கமாக ஆலோசித்து எடுக்க வேண்டிய முடிவைத் தான் எடுத்திருக்கிறோம். என் நிலைமையில் எனக்குள்ள பொறுப்பில் இந்த முடிவு தான் விவேகமானது. உனக்கு இதில் விருப்பமில்லை என்றாலும் விலகிக் கொள்ளலாம்" என்றான் பீமசேனன்.



அசுமத் எதுவும் பேசவில்லை. பீமசேனன் வெள்ளைக் கொடியை எடுத்து தன் மரக்கலங்களை நோக்கி வீசி ஒவ்வொரு கலத்தையும் வரிசையாக நிற்கும் படி சமிக்ஞை செய்தான். மரக்கலங்களும் அவ்வாறே வரிசையாக நிற்க சேரர் கலங்கள் அவற்றின் இருபக்கங்களிலும் வந்தன. சேரமாலுமிகள் பீமசேனன் மரக்கலங்களில் இறங்கி அவற்றிலிருந்து உணவுப் பொருட்கள் மற்றும் குடிநீர் ஆகியவற்றைத் தவிர ஆயுதங்கள், வெடிப்பொருட்கள், பொறிகள் ஆகியவற்றைக் கைப்பற்றித் தங்கள் கப்பல்களுக்கு மாற்றினார்கள்.

நிபந்தனை எதுவும் இல்லாத சமாதானத்தைக் கோருவதாக பீமசேனனிடமிருந்து ஓலையெழுதி வாங்கப்பட்டது.

பீமசேனனின் சமாதானத்தை உயிர்ச் சேதத்தைத் தவிர்க்கும் நல்ல நோக்கத்தில் தான் ஒப்புக் கொண்டதாகவும் பீமசேனன் கோரிய சுதந்திரம் பற்றிய விவரங்களையும் தனி ஓலையில் எழுதினான் ஆபுத்திரன். பீமசேனனின் மரக்கலங்கள் வரிசையாகச் செல்ல அவற்றுக்கு முன்னும் பின்னுமாக சேரரது இரண்டு மரக்கலங்கள் சென்றன.

"எனது மரக்கலங்கள் ஐந்தை தப்பித்துக் கொள்ளும்படி போருக்கு முன்பாகவே நடுக்கடலில் அனுப்பி விட்டேன். அவற்றின் கதி?" - என்று கேட்டான் பீமசேனன்.

"அதையெல்லாம் எதிர்பார்த்துத் தான் எனது 5 மரக்கலங்களை நாகநாதனின் தலைமையில் ஏற்கனவே அனுப்பி விட்டேன். அவை உன் மரக்கலங்களைப் பிடிக்கும் அல்லது அழிக்கும். அது அந்த மரக்கலங்களில் உள்ள

மாலுமிகளைப் பொறுத்து" என்று கூறிய ஆபுத்திரன் தான் எழுதிய ஓலையை சேரர் தலைநகருக்குச் செல்லும் தனது மரக்கலமாலுமியிடம் கொடுத்தனுப்பினான். பீமசேனனை தன்னுடன் வைத்துக் கொண்டு தனது 18 மரக்கலங்களோடு வெள்ளைத் தீவு கூட்டத்தை நோக்கிப் புறப்பட்டான்.

ஆனால் ஒற்றர் படைத் தலைவன் நீலன் அறிவித்தபடி வெள்ளைத் தீவு ஒவ்வொன்றின் முன்பும் இருக்க வேண்டிய பங்களனின் மரக்கலம் ஒன்று கூட அங்கில்லை. அதோடு வெள்ளைத் தீவுகளிலிருந்து தீவு வாசிகள் வெளியேற்றப் பட்டு விட்டதாகவும் நீலன் கூறியிருந்தான். ஆனால் நிலை வேறாக இருந்தது. தீவு வாசிகள் எல்லா தீவுகளிலும் இருந்தார்கள். முன்பிருந்த எண்ணிக்கையை விட கூடுதலாக இருப்பது போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது ஆபுத்திரனுக்கு.



**ப**வானியுடன் சுகவனத்தில் சுகபோகத்தை அனுபவித்து விட்டு அரண்மனைக்கு வந்து பங்களன் நீராடினான். பொழுது ஏற்கனவே விடிந்து விட்டதால் உறங்கச் செல்லாமல் பானமட்டும் வரவழைத்து குடித்து விட்டு, பவானி அழைத்து வந்திருந்த பணயப் பொருளான பூங்கொடியைப் பார்க்கப் புறப்பட்டான். அப்போது அவனை எதிர் கொண்ட ஒற்றன் பவானியும் அவளது பணிப் பெண்ணும் பேசிய விஷயங்களைச் சொன்னான். அதைக் கேட்டதும் பங்களனின் இதயம் கொதித்தது. பற்களை நறநறவென்று கடித்தான். பவானியை அவனால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை போர் எப்போது



வேண்டுமானாலும் ஆரம்பிக்க இருந்த நிலையில் இக்கருநாகப் பாம்பான பவானியை விட்டு வைப்பது என்று கருதிய அவன் தன் சகாக்கள் சிலரை அழைத்து ரகசியமாக சிலவற்றைச் சொன்னான். கட்டிக் கரும்பை கண்டபடி தின்பதற்குப் புறப்பட்ட மாதிரி சுகவனத்தை நோக்கிப் புறப்பட்ட அவர்கள் அங்கே இருந்த பவானி மற்றும் அவளது பணிப்பெண் இருவரையும் சூழ்ந்து கொண்டனர். அப்போது தான் இருவருமே குளித்து விட்டு ஆடைகளைப் புனைந்து கொண்டிருந்தனர். அதைக் கண்ட பங்களனின் சகாக்கள் அவ்விருவரது ஆடைகளையும் பறித்து எறிந்து விட்டு அவர்களைப் பட்சிக்கவும் துவங்கினார்கள். குரங்குகளும் கரடிகளுமாகச் சேர்ந்து பூமாலையை துவம்சம் செய்தது போல் இரண்டு பெண்களையும் இஷ்டம் போல் வாட்டியெடுத்ததில் இருவருமே இறந்து போனார்கள். ஈவு இரக்கமற்ற அக்கொள்ளையர்கள் உயிரற்ற அவ்விருவரது சடலங்களையும் துண்டு துண்டாக வெட்டி கோட்டையை ஒட்டி ஓடிய அகழியில் முதலைகளுக்குத் தீனியாக தூக்கி எறிந்தார்கள். என்னென்னவோ கனவுகளையும் ஆசைகளையும் சுமந்து தீயவழிகளில் இறங்கி கண்மூடித் தனமாகச் செயல்பட்ட பவானியும் அவளுக்குத் துணை போன பணிப்பெண்ணும் கோரமரணத்தைச் சந்தித்து அடையாளம் தெரியாமல் போனார்கள்.

இதற்கிடையில் பூங்கொடி இருந்த இருப்பிடத்தை அடைந்தான் பங்களன்.

அங்கே ஓர் அறையில் தரையில் கிடந்தாள் பூங்கொடி. செழித்து வளர்ந்து மலர்களையும் கனிகளையும் கொடுக்க வேண்டிய கொடியொன்று. வேரறுத்து போடப் பட்ட மாதிரி

ஜீவனை இழந்தவளைப் போல சுவற்றில் சாய்ந்திருந்தாள் பூங்கொடி. கனவிலும் நினைக்காத நிலைமையைத் தான் அடைந்திருப்பதை எண்ணி மனமொடிந்து கிடந்தவள் அன்று திடீரென்று தன் வீட்டிற்கு வந்த பவானி, ஆபுத்திரன் அழைப்பதாகக் கூறியதும் புள்ளி மானைப் போல துள்ளி குதித்துச் சென்றதை அவளால் தற்போது நம்ப முடியவில்லை. என் புத்தியெல்லாம் எங்கே போயிற்று? முன்பின் தெரியாத பவானியை எப்படி நம்பினேன்? ஆபுத்திரர் எப்போதுமே தானிருக்கும் இடத்தைத் தானே தேடி வருவார்? தன்னை வரும் படிச் சொல்லியதே இல்லையே! பவானி சொன்னதும் இதை ஏன் நான் நினைத்துப் பார்க்கவில்லை? போயும் போயும் எதிரியின் நாட்டில் வந்து சிக்கிக் கொண்டேனே! அவரால் என்னை எப்படிக் காப்பாற்ற முடியும்? படைகளோடு வந்திருந்தால் அவர் போரை கவனிப்பாரா? என்னைக் கவனிப்பாரா? நான் இங்கிருந்து எப்படித் தப்ப முடியும்? என்னை ஏன் அடைத்து வைத்திருக்கிறார்கள்? ஒருவேளை என்னைக் காட்டி அவரைச் சரணடையச் சொல்வார்களோ? அதெப்படி முடியும் அவரால்? நாடு அல்லவா முக்கியம் அதற்கு முன் நான் வெறும் துரும்பு தானே! ஐயோ! அவருக்கு எப்படிப் பட்ட நெருக்கடியை உண்டாக்கி விட்டேன்! அவரது மனம் என்ன பாடுபடும்? இலங்கையிலிருந்து வந்ததும் மணந்து கொள்வதாக ஓலை எழுதியிருந்தாரே! எத்தனை அன்பும் ஆதங்கமும் இருந்தால் அப்படி எழுதியிருப்பார்! அது இனி நடக்குமா? தெய்வமே! பெரும் எதிர்பார்ப்புடன் வரும் அவரை முட்டாள் தனத்தால் ஏமாற்றி விட்டோமே! மனமுடையச் செய்து விட்டோமே! இதற்கு விடிவே இல்லையா?" என்றெல்லாம் எண்ணி இடிந்து போன சிலை போல் கிடந்த



அவளை நோக்கி "பூங்கொடி, உன்னை இங்கே அழைத்து வந்த பவானியைக் கொன்று விட்டேன்" என்றான் பங்களன்.

அவனை ஏறிட்டுப் பார்க்கவும் இயலாத நிலையில் "யார் நீங்கள்?" என்றாள் மெலிந்த குரலில்.

"வெள்ளைத் தீவின் மன்னன், பங்கள கட்டியன் என்னைக் கொல்ல முயன்றாள் பவானி. அவளை இன்று கொன்று துண்டு துண்டாக வெட்டி முதலைகளுக்கு இரையாக்கி விட்டேன்" என்றான் பங்களன்.

தன் வாழ்க்கையில் இப்படிப் பட்ட கொடிய சித்திரவதையை கேள்விப்பட்டிராத பூங்கொடி பங்களன் கூறியதைக் கேட்டதுமே "ஐயோ" என்றாள்.

அதைக் கேட்ட பங்களன் "உன்னை இங்கே அழைத்து வந்த அந்தப் பாதகிக்கு இந்தச் சித்திரவதை குறைவு தான். அவளுக்காக ஏன் அனுதாபப்படுகிறாய்?" என்று கேட்டு விட்டு "நீ இங்கே ஏன் அடைக்கப்பட்டிருக்கிறாய் தெரியுமா?" என்றான்.

அவள் எதுவும் பேசவில்லை.

"உன் காதலன் ஆபுத்திரனைப் பிடிப்பதற்காக உன்னைப் பணயப் பொருளாக்கி இங்கே அடைத்து வைத்திருக்கிறோம். அவன் என்னிடம் சரணடையவில்லை என்றால் உன் நிலைமை ஆபத்தாகி விடும்."

"போர் செய்யப் போவதில்லையா?"

"அதை விட முடியுமா? போர் நடக்கும் முடிவு என்னாகும் என்று தெரியாதல்லவா! நான் தோற்கும் நிலை வந்தால் உன்னை வைத்து வியாபாரம் பேசுவோம். ஆபுத்திரன் என்ன செய்கிறான் என்று பார்ப்போம்"

"அவரைப் பற்றி உங்களுக்குத் தெரியாதா?"

"என்ன தெரிய வேண்டும் என்று நினைக்கிறாய்?"

"என் மீதான அன்பை மிகப் பெரிய சக்தியாக நினைப்பவர் அவர்."

"சரி. அதுதான் எனக்கு வேண்டும்."

"ஆனால் அன்பின் ஜீவன் உடலில் இல்லை என்று எங்கள் இருவருக்கும் தெரியும்."

"என்ன சொல்கிறாய் நீ?"

"என் உயிர் போகலாம். ஆனால் காதல் போகாது."

"இதற்கென்ன அர்த்தம்?"

"என்னைப் பணயம் வைத்தால் நீங்கள் வெற்றி பெற முடியாது என்று அர்த்தம்."

"அப்படியானால் நீ ஏன் பணயப் பொருளாக இருக்க வேண்டும்? என் ஆசை நாயகியாக இருந்து விடு!"

"அறைக்குள் அடைத்து விட்ட ஒரு பேதைப் பெண்ணிடம் இப்படிப் பேசுவதற்காக நீ வெட்கப்பட வேண்டும். இந்தப் பேச்சே உன் அழிவின் ஆரம்பம்."

அந்த நேரத்தில் அங்கே வந்த உதயணன் "பங்களா, இங்கே என்ன செய்கிறாய்?" என்று கேட்டான்.

"பணயப் பொருளை விசாரிக்கிறேன்."

"அவளை ஏன் விசாரிக்க வேண்டும்?"

"அழிவென்ன ஆகி விடப் போகிறது?"



"பங்களா, நீ எப்படிப்பட்ட அயோக்கியன் என்பது எனக்குத் தெரியும். என் மனைவி என்று சொல்லிக் கொண்ட வந்த பெண்ணை மானவெட்கமின்றி இச்சித்த கயவன் நீ. இவளைப் பணயப் பொருளாகக் கொண்டு வந்த பெண்ணை கொலைசெய்து விட்ட கொடுமைக்காரன் நீ. இதோ பார் து வெற்றிக்கு இவள் மிகவும் முக்கியம். இவள் மீது உன் நிழல் படுவதைக் கூட நான் விரும்பவில்லை" என்று கூறிய உதயணன் பூங்கொடியைப் பார்த்துக் கேட்டான்.

"நீ ஆபுத்திரனை விரும்புவது உண்மையா?"

"ஆமாம்."

"அது உண்மையானால் வேளாவேளைக்கு வரும் உணவைச் சாப்பிடு. பட்டினி கிடக்காதே. அதனால் யாருக்கும் லாபமில்லை.

இப்படிச் சொல்லி விட்டு பங்களனிடம் "பங்களா, இந்த வு வாசிகளை இங்கிருந்து அகற்றி விட்டோம் இல்லையா? து சரியில்லை என்று தோன்றுகிறது. அவர்களை உடனடியாக இங்கேயே வரவழைத்து விடு" என்றான்.

பங்களனுக்கு எதுவும் புரியவில்லை. என்றாலும் சரி என்றான்.

மறுநாள் பங்களனை அழைத்த உதயணன் "நமது படகுகளின் முன்னால் ஒரு மரக்கலமும் இருக்க வேண்டாம். எல்லாவற்றையும் வடக்கில் ஒரு காத தூரத்திற்கு அப்பால் அனுப்பி விடு" என்றான்.

உதயணன் சொல்வதையெல்லாம் பங்களன் நிறைவேற்றி வந்தாலும் உள்ளூர பயமும் சந்தேகமும் இருந்து

வந்ததால் ராவணனைக் கூப்பிட்டு "இதெல்லாம் என்ன ராவணா! நினைத்து நினைத்து ஏதேதோ சொல்கிறானே உதயணன்? அவனது திட்டம் தான் என்ன என்று புரியவில்லையே! அவனென்னவோ பெரிதும் குழம்பி விட்டதாகத் தான் தெரிகிறது" என்றதும், ராவணன் பங்களனைத் துச்சமாக மதித்துப் பேசினான்.

"குழம்பியிருப்பது நீங்கள் தானே யன்றி அவனல்ல. ஒரு முறை போட்ட திட்டத்தை அடிக்கடி மாற்றுகிறான் என்றால் அவனுக்கு அதற்கேற்றாற் போல செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன என்று அர்த்தம். அல்லது தவறுகளைத் திருத்திக் கொள்கிறான் என்று அர்த்தம். உங்களைப் போல பொறுப்பை ஒப்படைத்து விட்டு பெண்களே கதி என்று கூத்தடிப்பவன் அவனல்ல. நம்மில் யாரையுமே அவன் நம்பவில்லை. கூத்தாடி போலத் தோன்றும் குண்டோதரனை வைத்துக் கொண்டே கண்காணித்துக் கொண்டும் சிந்தித்துக் கொண்டும் இருக்கிறான். அவன் கர்மவீரன். காமவீரனல்ல."

ராவணனின் வார்த்தைகள் தன் தலையில் ஆணியாக அடிப்பது போல் இருக்கவே மேற்கொண்டு எதுவும் பேசாமல் அந்தப் புரத்திற்குப் போன பங்களன் "பகவதி எங்கே?" என்று கேட்டான்.

"அவன் தான் வேண்டுமா? நாங்கள் இல்லையா" என்றார்கள் அழகிகள்.

"பிசாசுகளே, போய் பகவதியை என் அறைக்கு அனுப்புங்கள். நீங்களும் உங்கள் குரங்கு முகங்களும்" என்று எரிச்சலோடு பேசிவிட்டு தன் அறைக்குப் போனான் பங்களன்.



அழகிகள் அவனை ஏடாகோடமாகச் சபித்து விட்டு உள்ளே சென்று "அடியே பகவதி, போ. உன்னை அழைக்கிறார் பங்களர் உன் பூனை முகம் தான் அவருக்குப் பிடித்திருக்கிறதாம்" என்று தங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார்கள்.

பகவதி தன் அறைக்கு வந்ததுமே "இந்த ராவணன் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான்? அந்த காலத்தை வடுகேஸ்வரனாகவே தன்னை எண்ணிக் கொண்டிருக்கிறான். நானே குழம்பிக் கிடக்கிறேன். உதயணனோ மேலும் குழப்புகிறான். என்ன ஏது என்று இந்த ராவணனிடம் விசாரித்தால் என்னை எடுத்தெறிந்து பேசிவிட்டான். உதயணனைத் தலையில் வைத்துக் கொண்டாடுகிறான். இதெல்லாம் நல்லதிற்கில்லை என்று சொல்லிவை அவனிடம். வாலாட்டுவான் ரணதீரனுக்கு ஏற்பட்ட கதிதான் அவனுக்கும் கிடைக்கும்" என்று பொரிந்து தள்ளினான் பங்களன்.

பகவதி வழக்கமாக ஆவி ஆடையை அணியாமல் புது விதமான ஆடை அலங்காரங்களுடன் புதுமையானவளாய் வந்தாள். பங்களனின் கோபத்தைப் பற்றி பகவதிக்கு நன்றாகத் தெரியும். அதுவும் கோபப் பட்டவன் நேராக அந்தப் புரத்திற்கு வந்தான் என்பதும் அவளுக்குத் தெரியும். எனவே உள்ளுக்குள் சிரித்துக் கொண்ட அவள் மதுவை எடுத்து ஒரு குவளையில் ஊற்றி "முதலில் இதைக் குடியுங்கள்" என்றாள். அவன் எதுவும் பேசாமல் அதை வாங்கிக் குடித்தான். இன்னொரு குவளை மதுவையும் கொடுத்தாள். அதையும் குடித்தான். பகவதி மேலும் ஒரு குவளையில் மதுவை ஊற்றி அவனது வாயில் புகட்டினாள். ஆனந்தமாகப் பருகியதும் நினைவு தடுமாறியது. வாய்

பகவதி





உளறியது. "வா பகவதி. வா. ஏன் நிற்கிறாய்?" என்று கேட்டபடி எழுந்த அவன் அவளையும் இழுத்தபடி மஞ்சத்தில் விழுந்தான். அவனது கோபம் போன இடம் தெரியவில்லை. கோபமிருந்த இடத்தில தாபமும் தாகமும் குடியேறின. அவளுக்கு உண்டான அதே தாகம் அவனுக்கும் உண்டானதால் அவளும் மதுவைச் சற்று குடித்து மதி மயங்கினாள். மதியிழந்த இருவர் காமவயப்பட்டால் அது எத்தனைக் கேவலமாக இருக்கும் என்பதை நிரூபிக்கிற மாதிரி இருவரும் நடந்து கொண்டார்கள். முறை எது வழி எது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. காமம் தடம் புரண்டு கண்டபடி கரையைத் திறந்ததால் கடலில் உண்டான சுழல் போல் இருவரும் பின்னிப் பிணைந்து புரண்டு கருத்திழந்தார்கள். பகவதி குறைவாகக் குடித்ததால் நினைவு சற்று திரும்பியது. அப்படி நினைவு திரும்பியது விபரீதமாக மாறியது. புரிந்து கொள்ளாமல் காமத்தில் ஈடுபட்ட அவன், நிதானத்துடன் ஈடுபட்டதால் அவளை இச்சைக்கு ஆளாக்கி பெரும் இன்பத்தை அடைந்தான். அவனது தேவை அளவுக்கு மீறி இருந்ததால் காலமும் நேரமும் நீண்டு கொண்டே சென்றன.



வெள்ளைத் தீவுகளில் இருந்த மாற்றத்தைக் கண்ட ஆபுத்திரன் தனது அருகில் இருந்த கடல் வேந்தன், பீமசேனன் ஆகிய இருவரையும் பார்த்தான்.

"நாம் எதிர் பார்த்தபடி வெள்ளைத் தீவு இல்லை. உனக்கேதாவது தோன்றுகிறதா பீமசேனா?" என்று கேட்டான்.

"பங்களன் மட்டும் இருந்தால் என்னால் ஓரளவிற்கு சமாளிக்க முடியும். ஆனால் உதயணன் கூட இருப்பதால் என்னால் எதுவும் சொல்ல முடியவில்லை" என்றான் பீமசேனன்.

"உதயணன் இருக்கட்டும். நீ சிறந்த மாலுமி தானே? ஒவ்வொரு தீவின் முன்புறம் இரண்டிரண்டு மரக்கலங்களை நிறுத்தி வைப்பது சிறந்த ஏற்பாடு தானே? அப்படி மரக்கலங்கள் நிறுத்தி வைக்கப் படும்பட்சத்தில் நாம் போய் தாக்கினால் அவனது உதவிப் படைகள் நம்மைப் பின்னால் தாக்கலாம். இந்தப் போர்முறை சரியானது தானே? ஏன் மாற்றப்பட வேண்டும்?"

"ஒருவேளை உதவிப்படைகள் சரணடைந்து விட்டது உதயணனுக்குத் தெரிந்து போர்முறையில் மாற்றங்கள் செய்திருக்கலாம் அல்லவா?" என்று கேட்டான் பீமசேனன்.

"நீயும் உன் மரக்கலங்களும் சரணடைந்து ஒரு நாழிகை தான் ஆகியிருக்கும். அதற்குள் செய்தியறிந்து இருபது மரக்கலங்களையும் அகற்றுவது அசாத்தியம். பீமசேனா, எதற்கும் நீ முகப்புத் தீவுக்குப் போய் விஷயத்தை அறிந்து வா."

"சரி."

பீமசேனன் மரக்கலத்தை விட்டு இறங்கி நீந்திச் சென்று முகப்புத் தீவை அடைந்து மறைந்தான்.

"தீவைப் பற்றித் தெரிந்த ஒருவனையும் அனுப்பி விட்டீர்களே ஏன்? அவன் திரும்பி வந்து செய்தி சொல்லப் போகிறான் என்று நினைக்கிறீர்களா?" என்று கேட்டான் கடல்வேந்தன்.

"தீவைப் பற்றி அவனை விட எனக்கே நன்றாகத் தெரியும். இவனை திட்டங்களைப் பற்றித்தான் கேட்டேன்.



இப்பொழுது எதுவும் தெரியவில்லை. அல்லது தெரிந்தும் தெரியாதது போல நடிக்கிறானா என்பதும் தெரியவில்லை. பயனில்லாத அவன் நம்மோடு ஏன் இருக்க வேண்டும். அவனது தீவுக்கே போகட்டுமே" என்றான் ஆபுத்திரன்.

ஆபுத்திரனுக்கு ஒரு கணம் பூங்கொடியின் நினைவு வந்தது. 'பூங்கொடி இங்கே தானே இருப்பாள். தீவில் இறங்கித் தேடிப் பார்த்தால் என்ன?' என்று நினைத்தான். ஆனால் அடுத்த நினைவு அவனது ஆசையை அழித்து விட்டது. "என்ன நடக்கும் என்று சொல்ல முடியாத நிலையில் நான் என் சுயநலக் காரணத்திற்காக இறங்கிப் போகக் கூடாது. உபதளபதிகளின் தேவையற்ற சந்தேகத்திற்கு ஆளாக நேரும்" என்று தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டான்.

பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனாய் கடல்வேந்தனிடம் "கடல் வேந்தரே, பங்களனின் மரக்கலங்கள் எங்கே போயிருந்தாலும் இங்கே வந்து தான் ஆக வேண்டும். அதைப் பற்றி குழப்பிக் கொள்ள வேண்டாம். நம்முடன் இருக்கும் 18 மரக்கலங்களை வெள்ளைத் தீவைச் சுற்றி அகவட்டத்தில் நிறுத்தச் செய்யுங்கள்" என்று கூறியதும் அதற்கான அடையாளங்கள் காட்டப் பட்டு மரக்கலங்கள் மெதுவாக நடந்து வெள்ளைத் தீவுக் கூட்டங்களை வளைத்துக் கொண்டன.

இது நடந்த கொஞ்ச நேரத்தில் ஆபுத்திரனிடம் ஓடோடி வந்த மாலுமி ஒருவன் "உபதளபதி, வாயுத் தீவுக்கு முன்னால் நின்றிருந்த நம் மரக்கலத்தில் துடுப்புத் தள்ளும் மாலுமிகள் எல்லோரும் இறந்து கிடக்கிறார்கள்!" என்றான் மிகுந்த பரபரப்புடன்.



# அத்தியாயம் ஐம்பது



## கடற்போர்

**மா**லுமி பரபரப்புடன் கூறிய செய்தியைக் கேட்டதும் ஆபுத்திரன் கடல் வேந்தனை அழைத்துக் கொண்டு வாயுத் தீவுக்கு முன்னாலிருந்த மரக்கலத்திற்குச் சென்று துடுப்பு போடும் அடித்தளத்தை அடைந்தான். அங்கே துடுப்பு போடும் மாலுமிகள் தத்தம் இடங்களிலேயே கவிழ்ந்து கிடந்தார்கள். அவர்களைப் பிறர் தாக்கிய மாதிரியோ அதனால் காயம் பட்ட மாதிரியோ தெரியவில்லை. அதற்கு சாட்சியாக ஒரு துளி ரத்தம் கூடச் சிந்தப் படவில்லை.

"கடல் வேந்தரே, ஒரே சமயத்தில் இத்தனை பேரும் ரத்தம் சிந்தாமல் மாண்டு கிடப்பது விந்தையாக இல்லையா?" என்று கேட்டான் ஆபுத்திரன்.



"இது போல் ஒரு மரணத்தை நான் பார்த்தது மில்லை. கேள்விப் பட்டதுமில்லை" என்றான் கடல் வேந்தன் திகைப்புடன்.

பிறகு ஆபுத்திரன் ஒரு மாலுமியைத் தொட்டு புரட்டினான். அவனது உடல் நீல நிறமாக மாறியிருந்தது. சந்தேகத்துடன் மற்றொருவனது உடலையும் புரட்டினான். அதுவும் நீலநிறமாக இருந்தது. மாலுமிகளது அனைவரது உடலையும் பார்த்த போது எல்லோருமே நீல நிறமாக மாறியிருந்ததைக் கண்டதும் ஆபுத்திரன் இதர மாலுமிகளை அழைத்தான் "துடுப்பு தள்ளுவோர் அனைவருக்கும் விஷம் ஏறியிருக்க வேண்டும். அதனால் தான் உடல்கள் நீலநிறமாகியிருக்கிறது. இந்த உடல்களையெல்லாம் அப்புறப்படுத்தி இத்தீவைச் சுற்றியுள்ள அகழிகளில் எறியுங்கள். விஷமேறிய உடல்களைத் தின்று முதலைகள் இறக்கும். உடல்களை அப்புறப்படுத்திய பின் மரக்கலத்தைப் பின்னுக்கு இழுத்து விடுங்கள்" என்றான்.

"ஆபுத்திரன் அவ்வாறு கூறி முடித்ததும் வேறொரு மாலுமி வந்து "உபதளபதி, குபேரத் தீவின் முன்னே நின்றிருந்த மரக்கலத்தில் துடுப்புத் தள்ளும் மாலுமிகள் அனைவரும் இறந்து கிடக்கிறார்கள்" என்றான். ஆபுத்திரனும் கடல் வேந்தனும் படகில் ஏறி குபேரத் தீவு மரக்கலத்தை அடைந்து இறந்து கிடந்த மாலுமிகளைப் பார்த்த போது அவர்களது உடல்களும் நீலமாக மாறிக் கிடந்ததால் அவர்களது உடல்களையும் முதலைகளுக்கு இரையாக்கும் படி கூறிய ஆபுத்திரன் ஒரே நேரத்தில் மாலுமிகள் மர்மமான முறையில் இறந்து விட்டதால் மிகவும் குழம்பினான். பிற மரக்கலங்களில் இருக்கும் மாலுமிகளை எச்சரிக்கையாக இருக்கும் படி






செய்தியனுப்பி விட்டு தனது மரக்கலத்திற்கு வந்த போது அவனது காலடியில் வந்து விழுந்தது ஓர் அம்பு. அதில் இணைக்கப் பட்டிருந்த ஓலையை எடுத்துப் படித்தான்.

"ஆபுத்திரா, போரைக் கைவிட்டு சரணடைந்து விடு. இல்லையென்றால் மர்மச் சாவுகள் தொடரும் - உதயணன்" என்றிருந்தது.

அதே சமயம் மர்மச் சாவு செய்தியைத் தாங்கி சாரணன் தீவு முன் நின்ற மரக்கலத்திலிருந்து வந்தான் மாலுமி. அவனுக்கும் முன் போலவே கட்டளையிட்ட ஆபுத்திரன் சற்று நிதானத்திற்கு வந்தான். முன்னூறு மாலுமிகள் போரின்றி இறப்பதற்கு உதயணன் காரணம் என்பது ஓலைச் செய்தி மூலம் உறுதியானாலும் அது நடந்தது எப்படி என்பது புரியாததால் கடல் வேந்தனிடம் "தீயம்புகளை தீவுகளை நோக்கி வீசச் சொல்லுங்கள். வாணங்களைக் கொளுத்தி வீசுங்கள். தீவுகளில் உள்ள காடுகளும் வீடுகளும் பற்றி எரியட்டும்" என்று கூறியதும் அவனது ஆணை கொம்புகள் ஊதி தெரிவிக்கப் பட்டதும் அதையடுத்து சேரர் மரக் கலங்களிலிருந்து தீயம்புகளும் வாணங்களும் கணக்கற்று பறந்ததால் தீவுகளில் இருந்த காடுகள் தீப்பிடிக்கலாயின. அதே சமயம் தீவின் வடக்கு திசையிலிருந்து பெரும் பேரிகையொலிகள் எழுந்தன. அதையடுத்து கொள்ளையர் மரக்கலங்கள் வரிசையாக வரத் தொடங்கின. அவற்றைக் கண்டதும் தனது மரக்கலங்களுக்கு மஞ்சள் கொடியை ஆட்டச் செய்து வானை நோக்கி தீயம்பு ஒன்றை விடச் செய்தான்.

அந்த நேரத்தில் தன் தலை மீது ஏதோ ஒரு உருவம் பறக்கவே இமைக்கும் நேரத்தில வாளை எடுத்து தலைக்கு மேல் வீசினான் ஆபுத்திரன். குறி தவறாமல் அந்த வாள் வீச்சில் சிக்கி

கப்பலின் தளத்தில் விழுந்தது ரூபாரவளி என்னும் கோழிப்பாம்பு. அந்த விசித்திரமான விலங்கைப் பார்த்த கடல்வேந்தன், "ஆபுத்திரரே இது என்ன விசித்திரம் இப்படியொரு அபூர்வமான விலங்கை நான் பார்த்ததில்லையே! கோழி போன்ற உடலும் பாம்புத் தலையும் கொண்ட இது துடுப்புகளைத் தாக்க வந்தது நல்ல வேளையாக வீழ்த்தி விட்டீர்கள்!" என்றான் மலைப்புடன்.

"துடுப்பு தள்ளுவோர் இறந்தது எப்படி என்று இப்போது புரிகிறதா? பாம்புத் தலை கொண்ட இந்தக் கோழிப் பாம்புகளை நான் கண்டதில்லையே தவிர கேள்விப் பட்டிருக்கிறேன். சாதாரணப் பாம்புகளுக்குள்ள விஷத்தை விட கோழிப் பாம்புகளுக்கு விஷம் அதிகம். இவற்றை உதயணன் வைத்திருக்க வேண்டும். அவைகளை பழக்கி வைத்துக் கொண்டு நமது மரக்கலங்களுக்கு அனுப்பியிருக்கிறான். அவைகளும் கச்சிதமாக துடுப்பு தள்ளும் மாலுமிகளை இமைக்கும் நேரத்தில் கொத்தி விட்டு மறைந்து விட்டன. எதிரி எத்தனை ஆபத்தானவனாக இருக்கிறான் பார்த்தாயா?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"இது போர் முறையில் சேருமா? இது கோழைத்தனம் இல்லையா?" என்று கேட்டான் கடல் வேந்தன்.

"போர்களில் அசுரத் தன்மை கொண்ட போர் முறை இருந்து வந்திருக்கிறது. மாவீரரான அசோகச் சக்ரவர்த்தி கலிங்கத்தின் மீது படையெடுத்த போது அசுர போர் முறையைத் தான் கையாண்டார். எதிரிகளை எப்படியாவது வெல்ல வேண்டும் என்பதை விட கொல்ல வேண்டும் என்ற வெறி பிடித்தவர்களுக்கு இத்தகைய போர் முறைதான் சகஜம் கடல் வேந்தரே. அதுவும் பங்களான் வெறும் கொள்ளைக்



காரன். அவனுக்கு உதவ வருபவனும் தர்மவானாகவா இருப்பான்? ஒரு வகையில் நாம் ஏமாந்து விட்டோம். அநியாயமாக 300 மாலுமிகளை இழந்து விட்டோம். இப்போது தீவிலுள்ள காடுகளை நான் கொளுத்தச் சொல்லியதற்குக் காரணமே தீ ஜ்வாலையும் புகையும் பெருகும் போது இத்தகைய பறவைகள் பறக்காது. பறந்தாலும் உரிய இலக்கை அடைய முடியாது" என்றான் ஆபுத்திரன்.

"இது போன்ற பறவைகள் உதயணனிடம் இன்னும் எத்தனை இருக்கிறதோ?"

"அதிகமாக இருக்க வாய்ப்பில்லை. இவை மிகவும் அபூர்வமானவை. பார்ப்போம். இப்போதைக்கு இறந்து போன இப்பறவையையும் அகழியில் போடுங்கள். ஒரு வகையில் உதயணன் நமக்கு உதவியிருக்கிறான்."

"உதவியிருக்கிறானா?"

"விஷத்தால் சாகடிப்பட்ட 300 சடலங்களை நாம் அகழிகளில் வீசியிருக்கிறோம். இதனால் முதலைகள் எல்லாமே விஷ உடல்களை உண்டு இறந்து விடும்" என்று கூறிக் கொண்டே தற்செயலாக கோட்டையை உச்சியைக் கண்ட ஆபுத்திரன் "திறமையான ஒரு வில்லாளனை உடனே கூப்பிடு" என்றான்.

உடனடியாக அங்கு வரவழைக்கப் பட்ட வில் வீரனைக் கண்ட ஆபுத்திரன் "வீரனே, கோட்டையின் உச்சியை நன்றாக பார். அங்கிருக்கும் காவல் தூணின் மீது பாம்புத் தலையுடன் ஒரு பறவை அமர்ந்திருக்கிறது பார். அதைக் குறி பார்த்து உன் அம்பால் வீழ்த்த முடியுமா?" என்று கேட்டான்.

வில்வீரன் பதுங்கவும் கூடாமல் வெளியில் நின்று குறிபார்ப்பதற்கும் கோட்டை உச்சியில் இருந்த பறவை அந்த இடத்தை விட்டு விட்டு நேராக மரக்கலத்தை நோக்கி பறந்து வருவதற்கும் சரியாக இருந்தது. வெகுதூரத்திலிருந்து கண்டபாருதும் என்ற அந்தப் பறவை சமீபத்திற்கு வந்ததும், வில் வீரனின் அம்பு சரியாக அதன் கழுத்தில் போய் தைத்துக் கிழித்தது. பாம்புத் தலையும் கோழி உடலும் அறுபட்டு அகழியில விழுந்தன. வில் வீரனைப் பாராட்டி அனுப்பி விட்டு மரக்கலப் போரில் கவனம் செலுத்தினான் ஆபுத்திரன்.

பேரிகை ஒலியுடன் முன்னேறி வந்து கொண்டிருந்த பங்களனின் மரக்கலங்கள் தீவை நெருங்கியதுமே அம்பு மழையை ஆபுத்திரனின் கலங்கள் மீது பொழியத் தொடங்கின. வடக்கிலிருந்து வந்து கொண்டிருந்த அந்த மரக்கலங்கள் மேற்கில் பாதியுமாய் தெற்கில் பாதியுமாய் பிரிந்து முன்னேறின. சேரர் மரக்கலங்களுக்கு ஆபுத்திரன் ஏற்கனவே சமிக்ஞைகளை அனுப்பியிருந்தானாதலால், அவை பரபரப்பு அடையாமல் பங்களனின் கலங்கள் நன்றாக முன்னேறும் வரை அமைதியாக இருந்து, பிறகு அம்புகளை எய்யத் தொடங்கியதோடு மட்டுமில்லாமல், நான்கைந்து மரக்கலங்கள் சுக்கானைத் திருப்பி, முகப்புகளை பங்களன் மரக்கலங்களின் பக்கவாட்டத்திற்குத் திருப்பி, வேகமாகச் செலுத்தப் பட்டதால் அடிப்பாகத்தில் இருந்த இரும்புச் சலாகைகள் பங்களனின் மரக்கலங்களின் பக்கவாட்டப் பகுதியை பிளக்கவே 'மடார்' என்ற ஓசையுடன் அடுத்தடுத்து ஐந்து மரக்கலங்கள் உடைந்து மூழ்கலாயின. அவற்றிலிருந்த மாலுமிகள் மீதும் கொள்ளைக் காரர்கள் மீதும் சாதாரண அம்புகளையும் விஷ அம்புகளையும் எய்து வீழ்த்தினார்கள் சேரமாலுமிகள்.



## தீவுப்படம்

மரக்கலங்கள்

அரபிக்கடல்

இப்படி ஏககாலத்தில் ஐந்து மரக்கலங்கள் மூழ்கிப் போனதைக் கண்ட பங்களன் சேர மரக்கலங்களை அதிக நெருங்காமல் விலகியிருந்த படியே அம்புகளை எய்தான். அவனது பதினாறு மரக்கலங்களும் விலகியிருந்த படி போர் செய்ததைக் கவனித்த ஆபுத்திரன் அம்மரக்கலங்கள் மீது தீயம்புகளையும் வாணங்களையும் செலுத்தி வீசும்படி கட்டளையிட்டான். அதையடுத்து சரமாரியாக வாணங்களும் தீப்பந்தங்களும், தீயம்புகளும் வீசப்பட்டதால் பங்களனின் மரக்கலங்கள் பல ஆங்காங்கே பற்றி எரிந்தன. சேரமரக் கலங்கள் இதற்கிடையே பங்களனின் கலங்களை நெருங்கி இரண்டு மரக்கலங்களை மூழ்கச் செய்தன. வேறு சில சேர மரக்கலங்கள் பங்களனின் மரக்கலங்களை நெருங்கி கொக்கிகளை வீசி இழுக்கச் செய்தன. இழுக்கப்பட்ட மரக்கலங்களில் சேர வீரர்கள் குதித்தார்கள். வாட்களுக்கு பதிலாக உலக்கைகளை தூக்கி வந்த அவர்கள் எதிரிகளை உலக்கைகளால் 'மொடேர் மொடேர்' என்று தாக்கியதால் எதிரிகள் திருப்பித் தாக்கும் வாய்ப்பின்றி மடிந்தும் ஒடிந்தும் வீழ்ந்தார்கள். இந்த உலக்கை தாக்குதல் பலமரக் கலங்களிலும் நடந்ததால் பங்களனின் மாலுமிகள் பெருமளவில் மாண்டனர். அவர்களது மரக்கலங்கள் பிடிபட்டு போர்க்கள பகுதிகளுக்கு அப்பால் செலுத்த வைக்கப் பட்டு நங்கூரமிட செய்தார்கள் சேரமாலுமிகள்.

சேர வீரர்கள் உலக்கையை பயன்படுத்தியதை பற்றி பத்து செய்யுளில் பரணர் கூறியுள்ளார் * உலக்கையை போர்

* 'மிளகெறி வுலக்கையி னிருந்தலை மிடித்து'
பதிற்றுப் பத்து பாட்டு எண் 1 வரி 21



ஆயுதமாகப் பயன்படுத்தினார்கள் என்று பரணர் கூறுவதாக வரலாற்று ஆசிரியர் டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் கூறுகிறார் * ஆனால் பதிற்று பத்திற்கு உரையெழுதிய ஔவை சு துரைசாமிப் பிள்ளை அவர்கள் உலக்கையில் பட்ட மிளகு அரைபடுவது போல எதிரிகள் தாக்குதலில் அழிந்தார்கள் என்று கூறுகிறார். ** இக்கதையைப் பொருத்த வரை சேரவீரர்கள் உலக்கையை போராயுதமாகப் பயன்படுத்தினார்கள் என்று கருத்தே ஏற்கப்படுகிறது.

பங்களன் தனது மரக்கலநிலையை ஆராய்ந்தான். தொடக்கத்திலேயே ஐந்து மரக்கலங்கள் மூழ்கிய நிலையிலும், 4 மரக்கலங்களை சேரர்கள் போரிட்டு கைப்பற்றி விட்ட நிலையிலும், 11 மரக்கலங்களே அவனிடம் எஞ்சியிருந்தது. அதிலும் இரண்டு மரக்கலங்கள் தீயில் எரிந்து கொண்டிருந்தது. இந்த நிலையில் தீவுகளில் நிறுவப்பட்ட அம்புப்பொறிகள் ஏன் இயங்கவில்லை! அங்கிருக்கும் சகாக்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? கோட்டைச் சுவரின் துவாரங்களிலிருந்து விஷப்புகை ஏன் பாய்ச்சப் படவில்லை? அங்குள்ள தளத்திலிருந்து அம்புத் தாக்குதல் ஏன் நடைபெறவில்லை? இந்த உதயணன் கோட்டையில் இருந்து கொண்டு என்ன செய்கிறான்?" என்று தன்னை தானே கேட்டுக் கொண்டிருந்த போது அவனருகில் தோன்றினான் உதயணன்.

"பங்களா, இது தான் நீ போர் செய்யும் லட்சணமா?

* சேரன் வஞ்சி ... பக்கம் 133

** பதிற்று பத்து (கழக வெளியீடு 1995) பக்கம் 195

ஒன்பது மரக்கலங்களை காவு கொடுத்து விட்டு என்ன செய்து கொண்டிருக்கிறாய் நீ? சேரரது பதினெட்டு மரக்கலங்களும் முன்னைபோல் அப்படியே இருக்கின்றன!" என்று கேட்டான் உதயணன்.

பங்களனும் அசரவில்லை. "கோட்டையில் இருந்து கொண்டு நீ மட்டும் என்ன சாதித்து விட்டாய்?" என்று கேட்டான்.

"முதல் வெற்றியே எனக்குத் தான். என் நண்பர்களான கோழிப் பாம்புகளை சேரர்களது மூன்று மரக்கலங்களுக்கு அனுப்பி 300 மாலுமிகளைக் கொன்றிருக்கிறேன். அதைக் காட்டி ஆபுத்திரனைச் சரணடையும் படி மிரட்டினேன். அவனோ எனது இரண்டு கோழிப் பாம்புகளைக் கொன்று விட்டான். மீன் தீவுகளுக்குச் சென்ற மற்ற இரண்டு கோழிப் பாம்புகள் ஆபுத்திரன் வைத்த தீயில் மாண்டு போயிருக்க வேண்டும். தீவுகளெல்லாம் பற்றி எரிவதால் எனது காக்கைகள் பறக்கவே தயங்குகின்றன. அவை உயிரோடு இருக்கின்றனவா என்று தெரியவில்லை" என்றான் உதயணன.

"அது போகட்டும். கோட்டையின் துளை மாடங்களின் வழியாக விஷப் புகையை ஏன் பாய்ச்சவில்லை?"

"காற்றை நன்றாகப் பார். கடலிலிருந்து தீவை நோக்கி வீசுகிறது. இந்நிலையில் ஆபுத்திரன் தீவுகளை யெல்லாம் பற்ற வைத்து எல்லா இடங்களிலும் தீயும் புகையுமாய் இருக்கின்றன. இந்த சமயத்தில் விஷப் புகையை பாய்ச்சினால் அது தீப்புகையுடனும் கலந்து தீவுக்குள்ளேயே பரவும். தீவில் இருப்பவர்கள் தான் சாவார்கள்."



"தீவுகளில் கட்டிடங்களில் வைக்கப் பட்ட பொறிகள் ஏன் இயங்கவில்லை?"

"ஆபுத்திரன் வைத்த தீயில் பல கட்டிடங்கள் தீப்பற்றிக் கொண்டதால் பொறிகள் நாசமடைந்து விட்டன. தீவு வாசிகளை தீவுக்குள்ளேயே நடமாட விட்டால் தீவுகளைத் தாக்க ஆபுத்திரன் தயங்குவான் என்று பார்த்தேன். ஆனால் தீவு வாசிகளே நமக்கு எதிராக மாறிவிட்டார்கள். நான் கேள்விப் பட்டதில் உன் மகள் இங்கே வந்திருக்கிறாள். அவள் தான் தீவு வாசிகளை நமக்கு எதிராகத் திருப்பியிருக்கிறாள்"

"எதையும் சாதிக்காத நீ என்னை இகழுவதற்கு வந்து விட்டாயா?"

"பரஸ்பரம் இகழ்வதில் நமக்கு லாபமில்லை. நமது உதவிக் கப்பல்கள் நமக்கு உதவாமல் போனதால் தான் நமது நிலை மோசமாகி விட்டது. ஆனாலும் கவலைப் பட வேண்டியதில்லை. நமது மரக்கலங்களில் குவித்து வைத்திருக்கும் பாணங்களைக் கொளுத்தி சேர மரக்கலங்கள் மீது சரமாரியாக வீசுவோம். இதே சமயத்தில் கோட்டை உச்சிகளிலிருந்து தீயம்புகள் சேரர் கப்பல்கள் மீது பாயும். மரக்கலங்களில் நான் குவித்து வைக்கச் சொன்ன பாறாங்கற்களை சேரர்கள் மீது வீசுங்கள். அம்பு எய்பவர்கள் அடித்தளத்திற்குச் சென்று சேர மரக்கலங்களை துடுப்புகளால் இயக்கும் மாலுமிகள் மீது எய்யட்டும். என்ன ஆகிறது பார்!"

உதயணன் உபயோகமான முறைகளைக் கூறியிருந்தாலும் அவைகள் முழுவதுமாக நிறை வேற ஆபுத்திரன் இடந்தரவில்லை. கோட்டைச் சுவர்கள் மீதிருந்து தாக்குதல் வரும் என்பதை அவன் எதிர்பார்த்திருந்த படியால



சண்டைக்காட்சி



போரிட்டார்களாதலால் போர் உக்கிர நிலையில் அடைந்தது. போரிட முடியாத மாலுமிகள் கடலில் குதித்து விட்டதால் அந்த ஆறு மரக்கலங்களையும் கைப்பற்றினார்கள் சேர வீரர்கள். ஆபுத்திரன் கூறியிருந்தபடி அம்மரக்கலங்களையும் ஏற்கனவே கைப்பற்றியிருந்த நான்கு மரக்கலங்களுடன் சேர்த்து நிற்க வைத்து அதில் ஒருவர் கூட இல்லாமல் காலியாக்கி பாதுகாவலுக்கு நான்கு மரக்கலங்களை நிறுத்தி விட்டுத் திரும்பினான் கடல்வேந்தன்.

அவன் தீவுப் பக்கமாக திரும்பி வந்த போது அந்த மரக்கலத்திற்கு வந்து சேர்ந்த ஆபுத்திரன் கடல் வேந்தனின் செயல்பாடுகளைப் பாராட்டினான். சேரர்களது 15 கலங்கள் தற்போது முகப்புத் தீவருகே ஒன்று சேர்ந்தன

ஆபுத்திரன் தனது அடுத்த கட்ட நடவடிக்கையைப் பற்றி பேச முற்பட்ட போது " ஆபுத்திரரே, வடக்கே பாருங்கள், கடலில் ஏதோ பூதம் வருகிறது- இது என்ன அபூர்வம்" என்று பரபரப்புடன் கூறினான்.



## அத்தியாயம் ஐம்பத்தொன்று



# கடல்பிறகோட்டிய செங்குட்டுவன்

வெள்ளைத் தீவின் வடக்கேயிருந்து கடலில் வந்து கொண்டிருந்ததைக் கடல் வேந்தன் பூதம் என்று குறிப்பிட்ட அதே சமயம் அது ஒரு மரக்கலமாகத் தான் இருக்க வேண்டும் என்றும் உதயனனது அபூர்வ சிருஷ்டியாக இருக்க வேண்டும் என்றும் நினைத்தான் ஆபுத்திரன். அதில் பாய்மரங்களோ பாய்களோ எதுவும் காணப்படவில்லை. பல அடுக்குகள் கொண்ட கோட்டையைப் போல இருந்தது. நடுவில் உச்சியில் சுழலும் காற்றாடி போன்ற ஒரு அமைப்பு இருந்தது. மாலுமிகள் என்று ஒருவரைக் கூட அதில் காணப்படவில்லை. வடக்கிலிருந்து வந்த அந்த மொட்டை மரக்கலம் சற்று மேற்கே திரும்பி வெள்ளைத் தீவின் முகப்பில் நின்று கொண்டிருந்த சேரர்களது எட்டு மரக்கலங்களை நோக்கி வந்ததுமே





மர்ம மரக்கலம்

"ஆபுத்திரா, சரியான நேரத்தில் தான் வந்திருக்கிறாய். நான் யார் தெரியுமா? உதயணன். யாதவர்குல அரசன். உன்னைச் சரணடையும் படி தூண்டியனுப்பியவன் நான் தான். ஆனால் நீ சரணடையவில்லை. எங்களுக்குப் பெருத்த நஷ்டத்தை உண்டாக்கி விட்டாய். வெகு நன்று மரக்கலம் உங்களுக்கு அள்ளுமளவுக்கு உண்டாகும் என்ற நம்பிக்கையையும் தகர்த்து விட்டாய். இப்போதும் ஒன்றும் கெட்டு விடவில்லை. உன் காதலி பூங்கொடியை பணயக் கைதியாகப் பிடித்து வைத்திருக்கிறேன். அவள் உயிருடன் வேண்டுமென்றால் என்னிடம் நீ சரணடைந்து சேரமன்னனையும் சரணடையச் சொல். இல்லை என்றால் அவள் சாவாள்" என்றான்.

"பகைவனை தான் கோழை என்றிருந்தேன். ஆனால் யாதவர் குலத் தோன்றல் என்று சொல்லிக் கொள்ளும் நீ அவனை விடக் கோழையாக இருக்கிறாய். போருக்கு வா என்று கொடியை நாட்டிய நீ பேதைப் பெண்ணை பணயமாக வைத்துக் கொண்டு பேரம் நடத்துகிறாயே. இது உனக்கு வெட்கமாக இல்லை?" என்று ஆபுத்திரன் கூறியதும் ஆவேசத்திற்கு ஆளான உதயணன் தனது கதாயுதத்தை வேகமாக ஆபுத்திரன் மீது இறக்கினான். அதை எதிர்பார்த்திருந்த ஆபுத்திரன் வாளால் தடுக்க முற்பட்ட போது கதாயுதத்தின் இடி போன்ற தாக்குதலால் அவனது வாள் உடைபட்டதோடு ஆபுத்திரன் தூக்கி எறியப் பட்டான். அப்போது தான் அவனுக்கு கதாயுதத்தின் வலிமை புலப்பட்டது. கீழே விழுந்த அவன் எழுவதற்குள் பலமாகச் சிரித்துக் கொண்டு அவனை நெருங்கிய உதயணன் கதாயுதத்தை அவன் மீது வேகமாக இறக்க முற்பட்ட போது ஆபுத்திரன் விலகி விடவே கீழே பட்ட கதாயுதம் அங்கே



பிணமாய் விழுந்து கிடந்த கொள்ளையன் முகத்தில் அடித்து முகத்தைத் துவையலாக்கியது. இதற்கிடையில் எழுந்து கொண்ட ஆபுத்திரன் கீழே கிடந்த வாளை எடுத்துக் கொண்டு உதயணனை எதிர்கொண்டான். தன்னுடைய கதாயுதம் முதல் வீச்சிலேயே எதிரி யாராக இருந்தாலும் உயிரை வாங்கி விடுவது வழக்கமாக இருக்கையில் ஆபுத்திரன் விஷயத்தில் இரண்டு முறை பொய்த்து விட்டதால் பெரும் ஆத்திரத்திற்கு ஆளான உதயணன் அதிக ஆத்திரத்துடன் கதாயுதத்தை ஓங்கிய போது தானாகவே கீழே விழுந்த ஆபுத்திரன் உதயணனின் காலைத் தட்டி விட்டதால் பெரும் எடையுள்ள கதாயுதத்தைத் தாங்கியிருந்த உதயணன் நிற்க முடியாதவனாய் நிலை தடுமாறி விழுந்தான். கதாயுதமும் அவன் கைகளிலிருந்து விடுபட்டு விழுந்தது.

அதை மீண்டும் அவன் தொட விடாமல் அவனுடன் துவந்த யுத்தம் செய்தான் ஆபுத்திரன். இருவரும் ஒருவரையொருவர் தாக்கியும் கட்டிப் புரண்டுமாய் சண்டையிட்டார்கள். மல்யுத்தத்தில் உதயணனை விட ஒருபடி மேலோங்கிய ஆபுத்திரன் அவனது முகத்தில் பலமான குத்துகளை விட்டு அவனை பெரு மூச்செறிய வைத்தான். இரண்டு மூன்று முறை உதயணன் தாக்க வந்த போது ஆபுத்திரன் விலகி விட்டதால் உதயணன் கீழே விழ நேரிட்டது. நான்காவது முறையும் அப்படி நேர்ந்த போது அவனை எழவிடாமல் மார்பில் மீது அமர்ந்து கொண்டு முகத்தில் பலமான குத்துகளை விட்டான் ஆபுத்திரன். உதயணனுக்கு களைப்பு அதிகமாகியது. மயக்கமடையும் நிலையில் அவனது கண்கள் எதையோ பார்த்து விட இடியென சிரித்த அவன் "ஆபுத்திரா, நீ ஒழிந்தாய்" என்றான்.

ஆபுத்திரன் சற்றே மேலே பார்த்த போது கோழிப்பாம்பு ஒன்று பறந்து வந்ததைப் பார்த்தான். அதை வெட்டி வீழ்த்த அவனிடம் வாளும் இல்லை என்று எண்ணாமல் உதயனனை விட்டு விலகினான். ஆனால் புயல் என்றும் அந்தக் கோழிப் பாம்பு நேராக உதயனனின் மார்பில் அமர்ந்து பாம்புத் தலையால் உதயனனின் இரு கண்களிலும் குத்தியது. அது அடுத்த செயலில் ஈடுபடும் முன் அதன் கால்களைப் பிடித்துத் தூக்கித் தரையில் அடித்தான் ஆபுத்திரன். பலமாக அடிபட்டு விட்டதால் கீழே விழுந்த அக்கோழிப் பாம்பு துடி துடித்தது. உதயனனும் துடித்து "ஆபுத்திரா, ஆபுத்திரா" என்றான். ஆபுத்திரன் குனிந்து என்ன என்று கேட்ட போது "இந்தப் போரில் நீ வெல்வது உறுதி என்று தெரிந்தும் பணயக் கைதியாக இருந்த உன் காதலியைக் கொன்று விட்டேன். இறக்கும் வரை அவளை நினைத்து அழு!" என்றான் உதயனன். வேறு ஏதோ பேச முற்பட்ட போது வாயில் நுரை தள்ளியது. உடல் புரண்டு துடி த்து ஓய்ந்தது. பக்கத்தில் கோழிப் பாம்பும் செத்துக் கிடந்தது. ஒரே நேரத்தில் இரண்டு ஜீவன்கள் துடி துடித்து இறந்தாலும் பூங்கொடி இறந்து விட்டாள் என்ற செய்தி ஆபுத்திரனை சில நிமிடங்களுக்கு உலகையே மறக்கச் செய்தது. நினைவு திரும்பிய அவன் "பூங்கொடி" என்று உரக்கச் சத்தமிட்டு விட்டு அரண்மனையை நோக்கி ஓடினான். அரண்மனையின் பக்கப் பகுதிக்கு அவன் வந்தபோதே தலைவிரி கோலமாய் வந்து சேர்ந்த பங்களனின் மகள் சௌமியகுமாரி, "என்னை மன்னித்து விடுங்கள் ஆபுத்திரரே. நான் எவ்வளவோ முயன்றும் பூங்கொடியைக் காப்பாற்ற முடியவில்லை" என்று அரற்றியபடி அவனிருந்த இடத்திலிருந்து அவனை அழைத்துப் போனாள்.



சிறை வைக்கப் பட்ட அறையில் தரையில் சடலமாய் இருந்த பூங்கொடி தூங்குவது போலவே இருந்தாள். அவளது உடலைத் தொட்டுப் பார்த்த ஆபுத்திரன் அவளது கனிவான முகத்தை வெறித்துப் பார்த்தான். அவனது கண்களிலிருந்து நான்கைந்து கண்ணீர் துளிகள் அவளது முகத்தில் விழுந்தன. அவளுக்கு அஞ்சலி செலுத்துவது போல். அதற்கு மேல் அந்த மாவீரன் அழவில்லை. ஆண்டாண்டு காலம் அழுது புரண்டாலும் மாண்டார் இம் மாநிலத்தில் வருவதில்லை என்பதாலோ - மாவீரர்கள் எந்த நேரத்திலும் மனதைத் தளரவிடக் கூடாது என்பதாலோ - போர் இன்னும் முடியவில்லை தன் கடமை முற்றுப் பெறவில்லை என்பதாலோ - சேர மாமன்னர் போருக்கு வந்து விட்டார் என்பதாலோ அல்லது எல்லாவற்றின் காரணமாகவோ என்னவோ அவன் அழவில்லை. சௌமிய குமாரியோ அழுது புரண்டாள் துடித்தாள்.

ஆபுத்திரன் முகத்திலே உலகத்தில் எங்குமே காண முடியாத சாந்தி நிலவியது. சேர வீரர்கள் சிலரை அழைத்தான். அவர்களில் வில்லவனும் வந்தான். "மன்னரோடு மரக்கலத்தில் வந்தேன்" என்றான்.

"கழுகு மூக்கன்?"

"மன்னர் புறப்பட இருந்த போது மாண்டு விட்டார். நீங்கள் கூறிய விஷயங்களைச் சொன்னேன். காவலர்களை அழைத்து அவரை நல்லடக்கம் செய்யும் படிக் கூறி விட்டு புறப்பட்டார்." மரக்கலத்தில் கொண்டு வந்த யானையை இறக்கி அதன் மீது ஏறி கோட்டைக்குள் வந்தார். வேறு சிலரும் யானைகளில் வந்தார்கள். அவரது வரவு கோட்டைக்குள் பெரும் பரபரப்பை உண்டாக்கிவிட்டது. உக்கிரமான போர்

மூண்டது. அவரைத் தாக்க வந்த பங்களனை யானை மீதிருந்த படி வேலெறிந்து வீழ்த்தினார் மன்னர். சேரர்களது வெற்றி முழக்கம் கோட்டையை வலம் வருகிறது. கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனை * வீரர்கள் வாழ்த்துகிறார்கள். மன்னர் உங்களை உடனே வரச் சொன்னார் கோட்டை வாயிலுக்கு" என்றான் வில்லவன்.

"எனக்கொரு உதவி செய்ய வேண்டும் வில்லவா"

"சொல்லுங்கள் ஐயா"

ஆபுத்திரன் உள்ளே சென்று பூங்கொடியைத் தன் கைகளில் ஏந்தி வெளியே இருந்த தேரில் கிடத்தினான். தேரில் சௌமிய குமாரியும் ஏறினாள்.

"வில்லவா, இவர்களைப் பத்திரமாக என் மரக்கலத்திற்குக் கொண்டு போய் மரக்கலத் தலைவனின் அறையில் பத்திரமாக வைத்து காவலுக்கு ஏற்பாடு செய். மன்னருக்கு இது விவரம் எதுவும் தெரிய வேண்டாம்"

"அப்படியே ஆகட்டும் ஆபுத்திரரே"

ஆபுத்திரன் புறப்படவிருந்த போது கடலவேந்தன் வந்தான்.

* பல்செருக் கடந்தகொல் களிற்று யானைக்
கோடுநரல் பௌவம் கலங்க வேலிட்டு
உடைதிரைப் பரப்பில் படுகடல் ஓட்டிய
வேல் புகழ்க் குட்டுவன் ...

பதிற்றுப் பத்து (பரணர் பாடியது) 5ம் பத்து
பாடல் எண் 6 வரி 10 முதல் 13 வரை



"ஆபுத்திரரே, நடுக்கடலில் தப்பி ஓடிய பிரமேனனின் கப்பல்களை நம் கப்பல்கள் சிறைப் பிடித்து வஞ்சி மாநகருக்கு கொண்டு சென்று விட்டதாக செய்தி வந்திருக்கிறது" என்றான் அவன்.

"நல்லது கடலவேந்தரே நமது பணிகள் முடிந்து விட்டதா?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"பூரண வெற்றி பெற்று விட்டோம். பங்களனும் அவனது உபதளபதிகளும் மாண்டு விட்டார்கள். உதயணனும் இறந்து விட்டான். மன்னர் தங்களுக்காகக் காத்திருக்கிறார். வேறென்ன பணிகள் இருக்கின்றன?"

"இறந்தவர்களை அகற்றி அடக்கம் செய்ய வேண்டாமா? காயமடைந்தவர்களுக்கு சிகிச்சைக்கு ஏற்பாடு செய்ய வேண்டாமா?"

"அதற்கெல்லாம் ஏற்பாடாகி விட்டது. நமது உபதளபதிகளும் வீரர்களும் அப்பணியைத் துவக்கி விட்டார்கள். வாருங்கள் செல்வோம்."

அதற்குப் பின் எதுவும் பேசாமல் புறப்பட்டான் ஆபுத்திரன்.

கோட்டை முழுவதும் போரில் மாண்டவர்களின் உடல்கள் சிதறிக் கிடந்தன. கால் வைக்க இடமில்லாத வகையில் பூமியை மறைத்து விழுந்து கிடந்த உடல்களை அப்புறப்படுத்திக் கொண்டே சென்றான் ஆபுத்திரன். துறை முழுவதும் ரத்தம் பரவி பூமியை செம்பூமியாக்கியிருந்தது. மாலை நேரம் ஆகிவிட்ட படியால் மேற்குக் கடலில் இறங்கிய கதிரவனின் கதிர்கள் சுளீரென வீசி கோட்டைச் சுவர்களை தாக்கித் தகர்க்க

முற்பட்டுக் கொண்டிருந்தது. மரணச் செய்தி யாருக்கு எட்டுகிறதோ இல்லையோ கழுகுகளுக்கு எட்டி விட்டபடியால் வெள்ளைத் தீவுக்கு மேலே வட்டமிட்டுக் கொண்டிருந்தன. ஓரிரு கழுகுகள் கீழே வர முற்பட்டு சடலங்களின் எண்ணிக்கையைப் பார்த்து அசந்து போய் கோட்டைச் சுவர் மீது அரை மயக்கத்தில் அமர்ந்திருந்தன.

இதையெல்லாம் கண்டபடி கோட்டைவாசலுக்கு சென்ற ஆபுத்திரனை சேரமன்னன் மார்புறக் கட்டித் தழுவி "இக்கதையின் நாயகன் நீதான். நானல்ல. நீ போட்டுத் தந்தப் பாதையில் நான் வந்தேன். அவ்வளவு தான். மற்றபடி நீ இங்கே புரிந்திருக்கும் சாகசங்கள் ஏராளம். காலம் உள்ள வரை உன்னைச் சேரநாடு மறக்காது. வரலாறும் மறக்காது. நானிங்கே ஏன் காத்திருக்கிறேன் தெரியுமா? வெற்றித் திருமகனான உன்னோடு தான் அரண்மனைக்குள் நுழைய வேண்டும் என்று காத்திருக்கிறேன். வா, போகலாம்!" என்று கூற படைகளோடு வெள்ளைத் தீவின் அரண்மனைக்குச் சென்றார்.

போரிட்ட முறை பற்றியெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்ட சேரமன்னன் "அநேகமாக வெள்ளைத் தீவின் கொள்ளைக் காரர்கள் அனைவரும் மாண்டு போய் விட்டார்கள் என்று நினைக்கிறேன். என் விருப்பம் என்னவென்றால் இனியும் இத்தீவுக் கூட்டங்கள் கொள்ளைக்காரர்களின் கூடாரங்களாக இருக்கக் கூடாது" என்றார்.

எல்லோரும் அதை ஆமோதித்தார்கள்.

"நீ என்ன சொல்கிறாய் ஆபுத்திரா?"



"மன்னவா, இப்போரில் இத்தீவு வாசிகள் நமக்கு உதவியிருக்கிறார்கள். அவர்கள் வேறு இடத்திற்குப் போக முடியாது. வெள்ளைத் தீவை அவர்களுக்கே தந்து அவர்கள் நிம்மதியாக வாழ வழி செய்ய வேண்டும்" என்றான் ஆபுத்திரன்.

"இத்தீவு வாசிகள் நமக்கு ஏன் உதவினார்கள்?"

"பங்களனின் மகன் தீவுவாசிகளிடம் இருந்து வளர்க்கப் பட்டு அவர்களது அன்புக்குப் பாத்திரமானவன். அவர்களுக்குத் தலைவன் பங்களன் அல்ல. இவன் தான். இவனுக்காக எதையும் செய்யக் கூடியவர்கள். ஆகவே தான் இப்போரின் போது அவன் கூறியபடி பங்களனுக்கு எதிராகவும் நமக்கு ஆதரவாகவும் நடந்து கொண்டு உதவியிருக்கிறார்கள்."

"பங்களனின் மகன் இங்கேயா இருக்கிறான்?"

"ஆம் மன்னவா."

"அவனைக் கூப்பிடுங்கள்."

"முதலில் தீவு வாசிகளிடம் பேசி அனுப்பிவிட்டு அப்புறம் அவனைப் பார்க்கலாம். தீவு வாசிகள் தங்களைக் காண வெளியே காத்திருக்கிறார்கள்."

"அப்படியா! வாருங்கள் சந்திப்போம்" என்று கூறி மன்னன் அனைவரோடும் அரண்மனையை விட்டு வெளியே வந்தான்.

அரண்மனைக்கு வெளியே கண்ணுக்கெட்டிய தூரம் வரை தீவு வாசிகள் உட்கார்ந்திருந்தார்கள். இடையிடையே தரையில் பந்தங்களை நட்டு வைத்திருந்தார்கள்.

சேர மன்னனைக் கண்டதும் அவனை வாழ்த்தி கோஷமிட்டார்கள்.

அவர்களை அமைதிப் படுத்திய மன்னன் "வெள்ளைத் தீவின் வெள்ளையுள்ளம் கொண்ட குடி மக்களே, சேரர்களுக்குப் போரின் போது நீங்களெல்லாம் உதவியாக ஆபுத்திரன் சொன்னான். யாரும் எதிர் பார்க்க முடியாத நன்மைகளை நீங்கள் செய்திருக்கிறீர்கள். உங்கள் அனைவருக்கும் என் நன்றி" என்றான்.

"அப்படிச் சொல்லாதீர்கள் மகாராஜா. ஆபுத்திரர் எங்கள் தெய்வம். அராபிய கொள்ளையர்கள் எங்களைத் தாக்க முற்பட்ட போது, காக்க வேண்டிய பங்களர் தப்பிச் சென்று விட நினைத்தார். அந்த நேரத்தில் எங்கள் குழந்தை சௌமியகுமாரி கேட்டுக் கொண்டதற்கு இணங்க எங்களையெல்லாம் தன் குடிகளாகவே கருதி காப்பாற்றியவர் இவர். இவருக்கு ஒரு ஆபத்து என்றால் நாங்கள் உதவாமல் போவோமா? எங்களால் இயன்ற சிறு உதவியைச் செய்தோம். அது உதவியல்ல. கடமை" என்றார் தீவு வாசி ஒருவர்.

"தீவு மக்களே, இந்த வெள்ளைத் தீவு இனி எக்காலத்திலும் கொள்ளையர்கள் வாழும் பூமியாக இருக்கக் கூடாது என்பது என் எண்ணம். ஆகவே தான் கொள்ளையர்கள் அனைவரும் அழிக்கப்பட்டார்கள். இந்தக் கோட்டையை இடித்துத் தீவுகளையும் எதற்கும் பயன்படாத பூமியாக மாற்றி விலங்குகள் கூட இங்கு வாழ முடியாத படி செய்ய வேண்டும் என்று நினைத்தேன். அப்போது தான் உங்களைப் பற்றி ஆபுத்திரன் சொன்னான். இத்தீவை உங்கள் வாழ்விடமாக இருக்கும் படி விடக் கேட்டுக் கொண்டான்"



என்று மன்னன் கூறியதும் தீவு வாசிகள் ஆபுத்திரனை வாழ்த்திக் கோஷமிட்டார்கள்.

கோஷங்கள் அடங்கியதும் மன்னன் பேசத் தொடங்கி, "குடி மக்களே, நான் வேறு ஆபுத்திரன் வேறு அல்ல. அவன் சொல்லுக்கு மாற்றுச் சொல் என்னிடம் கிடையாது. எனவே இந்தத் தீவை உங்களிடமே ஒப்படைக்கிறேன். சேர நாட்டிலிருந்து கொஞ்ச நாளைக்கு - அதாவது இந்த பூமியை நீங்கள் சரி செய்து பக்குவப் படுத்தும் வரை - உங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்கள் வந்து கொண்டிருக்கும். எல்லோருமாய்ச் சேர்ந்து வெள்ளைத் தீவின் கறைகளை அகற்றுங்கள். இனி இது உங்கள் உள்ளங்களைப் போலவே வெள்ளைத் தீவாய் இருக்க வேண்டுமே தவிர கொள்ளையர் தீவாய் மாறக் கூடாது. அப்படி மாறாமல் பார்த்துக் கொள்வது உங்கள் பொறுப்பு. இப்போது எல்லோரும் கலைந்து செல்லுங்கள்" என்றான்.

தீவு வாசிகள் மன்னனையும் ஆபுத்திரனையும் வாழ்த்திய படி கலைந்து சென்றார்கள்.

"வா ஆபுத்திரா. பங்களன் மகளைப் போய் பார்க்கலாம். தந்தையை இழந்த துக்கத்தில் இருக்கும் அவளுக்கு நாம் ஆறுதல் கூற வேண்டும்" என்றான் மன்னன்.

"மன்னவா, இரவு நேரமதிகமாகி விட்டது. தாங்கள் ஓய்வெடுங்கள். காலையில் அவளைப் பார்ப்போம். அவள் மரக்கலத்தில் இருக்கிறாள்" - என்றான் ஆபுத்திரன்.

மன்னனும் ஒப்புக் கொண்டான்.

மறுநாள் காலையில் மன்னனும் ஆபுத்திரனும் மற்றவர்களும் வெளிப்பட்ட போது அவர்களையெல்லாம் அப்படியே நிற்கும் படி மிரட்டினான் ஒருவன்.

"ஆபுத்திரனை மட்டும் என்னோடு அனுப்புங்கள், அவனைச் சித்திரவதை செய்து கொல்ல வேண்டும்" என்றான் அவன்.

அவன் பக்கத்தில் ஒரு கோழிப் பாம்பு தலையை ஆட்டிக் கொண்டு நின்றிருந்தது.

வானில் தாழ்வாக 5 காக்கைகள் பறந்து கொண்டிருந்தன.







## அத்தியாயம் ஐம்பத்திரண்டு



# செங்குட்டுவன் மனம்

தனக்கு முன்னால் அதிகப் பிரசங்கித் தனமாகவும் ஆணவமாகவும் பேசிய மனிதனைப் பார்த்த சேர மன்னன் "யார் நீ?" - என்று கேட்டான்.

"சேர மன்னவா, அவன் தான் குண்டோதரன். உதயணனுக்கு வேண்டியவன். உதயணனை நான் கொன்று விட்டதாக எண்ணி என்னைக் கொல்ல இவன் வந்திருக்கிறான். தாங்கள் கவலைப்பட வேண்டாம். அமைதியாக இருங்கள். எனக்கு எதுவும் ஆகாது" என்று சொன்ன ஆபுத்திரன் "குண்டோதரா, நான் எங்கே வரவேண்டும்?" என்று கேட்டதும் "பின்னால் வா" என்று மட்டும் சொன்னான் குண்டோதரன்.

நீ என்னிடம் மன்னிப்பு கேட்க வேண்டும். அடுத்ததாக புதையல் இருக்கும் இடத்தை உடனடியாகச் சொல்ல வேண்டும்" - மிரட்டினான் குண்டோதரன்.

"உன் எஜமானனிடம் நான் போரிட்டது உண்மை. ஆனால் நான் கொல்லவில்லை. அவனைக் கொன்றது அவனது கோழிப் பாம்பு தான். நானே அவனைக் கொன்றதாக நீ கூறினாலும் அதற்காக நான் மன்னிப்பு கேட்க முடியாது. புதையல் இருக்கு மிடம் எனக்குத் தெரியாது. உன்னால் என்னை எதுவும் செய்ய முடியாது."

"ஏன்?"

"திரும்பிப் பார்."

திரும்பினான் குண்டோதரன். அங்கே நூற்றுக் கணக்கான தீவு வாசிகள் வில்லில் அம்பை பூட்டிய நிலையில் இருந்தார்கள். அவன் திரும்பியது தான் தாமதம். அவனை நோக்கியும் கோழிப் பாம்பை நோக்கியும் அம்புகள் பறந்தன. வானில் வட்டமிட்ட காக்கைகளையும் அம்புகள் வீழ்த்தின. ஆதிவாசிகளான தீவு வாசிகள் அம்பெய்வதில் கை தேர்ந்தவர்களாதலால் சில நிமிடங்களில் தங்கள் வேலையைக் கச்சிதமாக முடித்தார்கள். குண்டோதரனும் கோழிப் பாம்பும், காக்கைகளும் இறந்து கிடந்ததைக் கண்ட ஆபுத்திரன் பேராசையானது நிமிட நேரத்தில் அழிக்கப் பட்டதாகக் கருதினான். அப்போது குண்டோதரனிடமிருந்து ஏதோ முனகல் ஒலி கேட்கவே அவனருகில் சென்று "என்ன?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"முட்டாளைப் போலப் பேசு. புத்திசாலியாக நடந்து கொள் என்று சொல்வார் என் எஜமானர். அப்படி நடந்து



கொண்ட போதெல்லாம் நான் வெற்றி பெற்றிருக்கிறேன். தற்போது அப்படி நடந்து கொள்ளாமல் புத்திசாலி போல் பேசி முட்டாளாக நடந்து கொண்டேன். அதன் விளைவைப் பார்த்து விட்டேன்" என்று கூறினான். அவனது உயிர் பிரிந்தது.

"உங்களை இந்த மனிதன் தனியாக அழைத்துச் செல்வதைப் பார்த்தபோதே சந்தேகமாக இருந்தது. எனவே தான் பின் தொடர்ந்தோம். அவன் திரும்பினால் கொன்று விடுவது என்றிருந்தோம். திரும்பினான். கதையை முடித்து விட்டோம்" என்றார்கள் தீவுவாசிகள்.

"என்னைக் காப்பாற்றியதற்கு நன்றி. இவன் ஏதோ இங்கே புதையல் சுரங்கம் இருப்பதாகச் சொல்கிறான். முடிந்தால் தேடிப் பாருங்கள். நான் வருகிறேன்" என்று கூறிவிட்டு கோட்டைத் தீவை அடைந்து அரண்மனைக்குச் சென்றான். அவனைப் பார்த்த பின்பு தான் அனைவருக்குமே உயிர் வந்தது.

நடந்ததைச் சொன்ன ஆபுத்திரன் "உதயணனை நான் போரிட்டுக் கொல்ல முற்பட்டது உண்மை தான். அது நடந்தும் இருக்கும். ஆனால் அந்த நேரத்தில் அவனால் வளர்க்கப்பட்ட நண்பனான கோழிப் பாம்பு வந்து அவனைக் கொத்திக் கொன்று விட்டது. இது எனக்கு விளங்காத விஷயமாக இருக்கிறது மன்னவா" என்றான்.

"இது போன்ற அபூர்வ விலங்குகளை வளர்ப்பவர்கள் சுயகௌரவத்தை எளிதில் இழக்க மாட்டார்கள். மரணம் நெருங்கும் சமயத்தில் எதிரிகளால் மரணம் சம்பவிப்பதை விட தனது விலங்குகளாலேயே சாவதை கௌரவமாக நினைப்பார்கள். அந்த நினைப்பில் அவன் தான் அந்தப்

பறவை விலங்கை அனுப்பியிருப்பான். அல்லது பயிற்சி பெற்ற அக்கோழிப் பாம்பு தானாகவே அவனது நிலைமையைக் கண்டு செயல்பட்டிருக்கும்" என்றான் சேரமன்னன்.

பிறகு எல்லோருமே தீவு வாசிகளிடம் விடை பெற்றுக் கொண்டு தங்கள் மரக்கலங்களுக்குச் சென்றார்கள். ஆபுத்திரனின் மரக்கலத்தில் பரணரின் மகள் இருந்ததால் அங்கேயே சென்றான் சேரமன்னன். மன்னனைக் கண்டதும் தலைவிரி கோலமாய் அறையிலிருந்து ஓடி வந்த செண்பககுமாரி "என்னை மன்னித்து விடுங்கள் மன்னவா. நான் எவ்வளவோ முயன்றும் பூங்கொடியைக் காப்பாற்ற முடியவில்லை" என்று அலறியதும் பதறிப் போனான் சேரமன்னன்.

மரக்கலத்தலைவனின் அறையில் வைக்கப் பட்டிருந்த பூங்கொடியின் உயிரற்ற உடலைக் கண்டதும் ஒரு கணம் ஸ்தம்பித்துப் போனான் சேரமன்னன். பரணர் தன்னிடம் வெளியே சென்ற தன் மகள் நான்கு நாட்களாகியும் திரும்பவில்லை என்று கலங்கிய படி புகார் செய்ததும் உடனே அமைச்சர் முதலானவர்களைக் கூட்டி பூங்கொடியைக் கண்டு பிடிக்கும் படி உத்திரவிட்டதும் தற்போது தான் அவனுக்கு நினைவுக்கு வந்தன.

'ஆகா! உத்திர விட்ட கையோடு மறந்து விட்டோமே பிறகு என்னவாயிற்று ஏதாயிற்று என்று கேட்க கூட நினைவில்லையே! பூங்கொடி இப்படியெல்லாம் கடத்தப் பட்டிருக்கக் கூடும் என்று சிந்திக்க மறந்த நான் என்ன மன்னன்? ஒற்றர் பிரிவு, ஒற்றர் தலைவன், காவலர்கள் என்றெல்லாம் ஆயிரம் பேர் இருந்தும் புலவர் பெருமானின் மகளை அவர்களால் கண்டு பிடிக்க முடியவில்லையே!



சேரநாட்டிற்குள்ளேயே வளைய வளைய வந்து கொண்டிருந்தார்களா ஒற்றர்கள்! போர்க் காலங்களில் இப்படிப் பட்ட விபரீதங்கள் நடக்கக் கூடும் என்று ஒருவருக்குக் கூடத் தோன்றாமல் போய் விட்டது எப்படி? ஆயிரங் கண்ணனை வில்லவன் கோதைக்குக் கூட புத்தி மழுங்கி விட்டதா? ஆபுத்திரன் ஒருவேளை இதுபோன்ற விபரீதங்களை ஊகித்திருப்பான். அவனை நானே எங்கே சிந்திக்க விட்டேன்! போரைப் பற்றிய ஏற்பாடுகளில் அல்லவா இறக்கி விட்டேன்! அதோடு பூங்கொடி வீட்டிற்குத் திரும்பவில்லை என்ற விஷயம் அவனுக்கு எப்போது தெரிந்ததோ? ஒருவேளை அவள் இறந்த பின் தான் தெரிந்திருக்குமோ? இதென்ன வேதனை? இதை எப்படி அவன் தாங்கிக் கொண்டிருக்கிறான்?" என்றெல்லாம் தனக்குத் தானே கேட்டுக் கொண்டு நொந்து போன சேரமன்னன் அறைக்கு வெளியே ஆபுத்திரன் நின்றிருந்த கோலத்தைப் பார்த்து விட்டு "சிலையாகி விட்டாயா ஆபுத்திரா? மலை போன்ற காரியங்களை மலைக்கும் அளவிற்குச் செய்து விட்டு காயங்களைத் தாள முடியாமல் சிலையாகி விட்டாயா மகனே! நாட்டிற்காக என்றால் இதோ நான் என்று வந்து நிற்கும் உனக்காக இருந்த ஓர் உத்தமியை பறி கொடுத்து விட்டு இனி வாழ்வதற்கு எதற்காக என்று சிலையாகி விட்டாயா? உன் இதயத்திற்கு ஒப்பான ஒரு பேதைப் பெண்ணைக் காப்பாற்ற முடியாத நான் எப்படி மன்னனாவேன்? என்னைப் போய் அனைவரும் புகழ்ந்தார்களே- அதெல்லாம் எனக்கெப்படிப் பொருந்தும்? பல்வேறு வேதனைகளை அலட்சியமாகத் தாங்கி வந்த என்னாலேயே இவ்வேதனையைத் தாங்க முடியவில்லையே! நீ எப்படித் தாங்கிக் கொண்டிருக்கிறாய்? உனக்கு நான் என்ன ஆறுதல் கூறமுடியும்? அந்த வயதான புலவர் பெருமானின்

முகத்தில் எப்படி நான் விழிப்பேன்? போரிடுவதற்கு முன்பாகவே போரிட்டு வெற்றி பெற்றதாக இலச்சியம் பாடிய அச்செம்மலை நான் எப்படிச் சமாதானப் படுத்துவேன்?" என்று தன்னை மறந்தவனாகப் புலம்பினான்.

ஆபுத்திரன் அவனது கால்களைப் பற்றிக் கொண்டு "தாங்கள் மனமுடையலாமா மன்னவா! தங்களால் ஆயிரம் பேருக்கு ஆறுதல் சொல்ல முடியும்; தங்களுக்கு யாரால் ஆறுதல் சொல்ல முடியும்? மலை சாய்ந்து போனால் சிலையாக முடியும். மரம் சாய்ந்து போனால் விறகாக முடியும். மனம் சாய்ந்து விட்டால் தாங்குவது சிரமம் பிரபு. நடந்ததெல்லாம் விதிப்பயனேயன்றி வேறில்லை. ஆறுதலடையுங்கள்" என்றான்.

அவனைத் தூக்கி நிறுத்திய சேரமன்னன் "ஆகா! இந்த ஆபுத்திரன் தான் எப்பேர் பட்டவன்? அழுது புலம்ப வேண்டிய அவன் தன்னைச் சிலையாக்கிக் கொண்டு அழத் தேவையில்லாத என்னைப் பார்த்து ஆறுதல் சொல்கிறானே - இவன் மனிதனல்ல. மனிதருள் மாணிக்கம். இவர்களைப் போன்றவர்கள் எப்போதாவது தான் தோன்றுவார்கள். மாணிக்கமே இப்போது சொல். என்ன நடந்தது?" - என்று கேட்டான்.

இலங்கையில் திரும்பியதிலிருந்து பூங்கொடியைச் சந்திக்க அவளது இல்லத்திற்குச் சென்று ஏமாற்றத்துடன் வந்ததிலிருந்து சொன்னான் ஆபுத்திரன். பங்களன் மகள் ஓலைச் செய்தி அனுப்பியதைச் சொன்னான். அப்போது எதுவும் செய்ய முடியாமல் போனதையும், போருக்குப் புறப்பட்டதையும், பூங்கொடியை பணயப் பொருளாக



வைத்திருப்பதைச் சொல்லி தன்னைச் சரணடையும் படியும் போரைக் கைவிடும் படியும் பங்களனும் உதயனும் மிரட்டியதையும் சாகும் தறுவாயில் பூங்கொடியை தான கொன்று விட்டதாக உதயனன் கூறியதையும் கடைசியாக பூங்கொடியின் சடலத்தை மரக்கலத்திற்கு அனுப்பியதையும் சொல்லி முடித்தான்

சேரமன்னனின் மனம் பெரிதும் சங்கடப் பட்டது. நாட்டிற்காக எப்படிப் பட்ட இழப்பை இவன் தாங்கிக் கொண்டிருக்கிறான் என்பதை எண்ணிய போது இதயம் விம்மியது அவனுக்கு. அப்போதே அவனது மனம் ஒரு தீர்மானத்திற்கும் வந்தது. அது தான் சரி என்று முடிவும் செய்து கொண்டான். அதற்குப் பிறகு அவன் புலம்பவில்லை அவனது முகமும் இயல்பு நிலைக்குத் திரும்பியது.

படைகள் வஞ்சிக் கோட்டைக்குத் திரும்பிய போது துறைமுகத்தில் அதிகாரிகளும் மக்களும் பல்வகை வாத்தியங்களைக் கொட்டி வரவேற்ற போது சம்பிரதாயத்திற்கு தலையாட்டினானே தவிர பெரிதாக உற்சாகப் படவில்லை. வெற்றி விழா ஒன்றை வஞ்சிக் கோட்டையில் கொண்டாடும் வழக்கத்தை அமைச்சர் நினைவூட்டிய போது "தோற்றுப் போன எனக்கு வெற்றி விழாவா? எதுவும் தேவையில்லை" என்று கூறிய போது அவருக்கு ஒன்றுமே புரியவில்லை.

பூங்கொடியின் சடலத்தை அகற்றி பரணர் இல்லத்திற்கு கொண்டு சென்ற போது தான் மன்னரின் பேச்சைப் புரிந்து கொள்ள முடிந்தது அமைச்சரால். தன் இல்லத்தை விட்டுச் சென்ற இனிய மகள் பூங்கொடி அதே இல்லத்திற்கு சடலமாய் வருவதைக் கண்ட பரணர் மூர்ச்சையடைந்தார். புலவா

பெருமானின் மகள் இயற்கை எய்தியதை அரசு துக்கமாக இரண்டு நாட்களுக்கு கடை பிடிக்கும் படி மன்னன் ஆணையிட்டதால் வஞ்சி மாநகர் வெறிச் சோடிப் போயிற்று. பரணரின் இல்லத் தோட்டத்திலேயே பூங்கொடியின் மலர் போன்ற உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது. அழகும் காருண்யமும் அன்பும் கொண்டவள் பூங்கொடி. அந்த மூன்றுமே பூமிக்கடியில் அடக்கம் செய்யப்பட்டுவிட்டதாக நினைத்தான் ஆபுத்திரன். அவள் அடக்கமான இடத்தில் மலர்களை அள்ளிக் கொட்டினான். தனது மனத்தையும் அதிலிருந்த ஆசைகளையும் அள்ளிக் கொட்டியது போலிருந்தது அவனுக்கு. பரணரின் மகள் அந்த இடத்தில் புரண்டு அழுதான். எல்லாமே வறண்டு போனது போலிருந்தது அவனுக்கு.

மூன்றாவது நாள் அமைச்சரை அழைத்த மன்னன் "அமைச்சர் பெருமானே! நான் அரியணையை விட்டு இறங்கி எனது சகோதரருடன் துறவு மேற்கொள்ளப் போகிறேன். ஆபுத்திரன் மன்னனாக முடி சூடுவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்கள்" என்றதும் பூங்கொடி இறந்த வருத்தத்திலும் பரணர் மரணப் படுக்கையில் விழுந்து விட்ட சோகத்திலும் பேசுகிறார் என்று அமைச்சர் மன்னனின் வார்த்தைகளைப் பொருட் படுத்தவில்லை. ஆனால் தன் கட்டளை சம்மந்தமாக ஓர் அ கூட அசையாததைக் கண்ட மன்னன் மீண்டும் அமைச்சரை அழைத்து "ஏன், என் ஆணையை நிறைவேற்ற நீங்கள் தயாராக இல்லையா?" என்று சீற்றத்துடன் கேட்டதும் நடுங்கிப் போனார் அமைச்சர்.



"ஏதோ சோகத்தில் சொன்னீர்கள் என்று நினைத்து விட்டேன்" என்றார்.

"ஏன், சோகத்தில சொல்லப்படும் சொற்களுக்கு அர்த்தமிருக்காதா?" என்று கேட்டான் மன்னன்.

அமைச்சருக்கு பயமாகிவிட்டது. "பிரபு, தவறாக தாங்கள் எண்ணக் கூடாது. இது மிகப் பெரிய ராஜாங்க விஷயம். இதில் திடீரென இப்படியொரு முடிவைத் தாங்கள் எடுத்திருப்பது எனக்கு ஏன் என்று புரியவில்லை" என்றார்.

"புரிவது இருக்கட்டும். இப்படியொரு முடிவை எடுக்க நான் யாரைக் கேட்க வேண்டும்? யார் அனுமதியைப் பெற வேண்டும்? எனக்கு உரிமையில்லையா?"

"உரிமை பிரச்சனை இங்கே உங்களைப் பொறுத்தவரை எழவில்லை. ஆனால் அரியணை விஷயத்தில எழுகிறது. தங்கள் புதல்வர் குட்டுவர் இருக்கும் போது ஆபுத்திரனை மன்னனாக முடிசூட்டும் படி சொல்வதில் பிரச்சனை இருக்கிறது"

"ஆபுத்திரனை அயோக்கியன் என்று சொல்கிறீர்களா? தகுதியற்றவன் என்று சொல்கிறீர்களா?"

"பாவம். பாவம். அப்படிச் சொன்னால் எனக்கு நரகம் தான் கிடைக்கும். அவனைப் போன்ற ஒருவன் வேறு யாரும் இல்லை. சேர நாட்டின் ஒளிவிளக்கு அவன். தங்கள் வயிற்றில் பிறக்கவில்லையே தவிர அவன் தங்கள் மகனைப் போலத்தான்!"

"மகனைப் போல அல்ல அமைச்சரே. மகனே தான். என் மூத்த மகன் தான் ஆபுத்திரன். இது நான் வணங்கும் செஞ்சடைக் கடவுள் ஆணையாக உண்மை!"

"மன்னவா! மன்னவா" என்று பேச முடியாமல் தவித்தார் அமைச்சர்.

"பொறுமையாகக் கேளுங்கள், அமைச்சரே. பொறுமையாகக் கேளுங்கள்" என்று கூறி பெருமூச்செறிந்தான் சேரமன்னன்.







# அத்தியாயம் ஐம்பத்து மூன்று



## செங்குட்டுவன் கதை

என் தந்தை சேரலாதர் எனக்கு இளவரசு பட்டம் கட்டிய போது இலங்கையைச் சுற்றிப் பார்க்கும் ஆவலில் அங்கு சென்றேன். அப்போது எனக்கு வயது 20. இயற்கை வனப்பு மிகுந்த இலங்கைத் தீவின் மூலை முடுக்குகளிலெல்லாம் பயணம் செய்து இயற்கையின் ரசிகனாகவே மாறியிருந்தேன். அப்போது தான் இலங்கையின் ராஜகுமாரன் சுயவாகு எனக்கு நண்பனானான். அவனது உதவியால் எனது பயணம் சிரமமின்றி இருந்தது. அந்தப் பயணத்தில் மலைய நாட்டில் இருந்த சமந்த கூடம் என் மனதைக் கவர்ந்தது. அதனருகில் இருந்த புத்த விஹாரமும் எனக்குப் பிடித்திருந்தது. இரு

இடங்களுக்கும் திரிந்து இன்பமாய் காலம் கழித்தேன். அப்போது தான் விதி குறுக்கிட்டது.

சமந்த கூடக் காடுகளில் திரிந்து கொண்டிருந்த போது இளம்பெண் ஒருத்தியை மலைப்பாம்பு ஒன்று விழுங்க விருந்ததைக் கண்டு அப்பாம்பை வெட்டி வீழ்த்திக் காப்பாற்றினேன். அதிர்ச்சியில் அவள் மயக்கமானாள். மயக்கம் தெளிவித்து விசாரித்த போது தன் பெயர் விஜயவல்லி என்றும் தன் தாய் இறந்து விட்டதாகவும் தன் தந்தையின் பெயர் கழுகுமூக்கன் என்றும் தந்தையுடன் சமந்த கூடத்தில் வசிப்பதாகவும் கூறிய அவள் என்னைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்று தந்தைக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

"ஆனைக்கும் அடி சறுக்கும் என்பதை நிரூபித்து விட்டாள் விஜயவல்லி" என்றார் கழுகுமூக்கன்.

"விஜயவல்லி யானையா?" என்று கேட்டேன் நான்.

"ஆமாம். அவள் வீட்டில் வசித்த காலத்தை விட வனத்தில் வசித்த காலமே அதிகம். அவளை விஜயவல்லி என்று யாரும் அழைப்பதில்லை. வனதேவதை என்றே அழைப்பார்கள். அந்த அளவிற்கு வனாந்திரமும் வனவிலங்குகளும் அவளுக்கு அத்துப்படி. வாசனையை நுகர்ந்தே வனவிலங்குகளின் இருப்பிடத்தை அறிந்து கொள்வாள். அப்படிப் பட்டவள் தன்னை மலைப் பாம்பு விழுங்க வந்ததை அறியவில்லை என்றால் யானைக்கும் அடி சறுக்கியது மாதிரித் தானே?" என்று கேட்ட கழுகுமூக்கன் என்னைப் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டார். என்னை இரண்டொரு நாட்கள் தங்கி விட்டுச் செல்லும் படியும் கேட்டுக் கொண்டார்.



"அந்த இரண்டு நாட்களிலும் என்னை ஏகமாக உபசரித்தாள் விஜயவல்லி. அந்த இரண்டு நாட்களில் அவளது மனதில் காதல் பூ பூக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் பூத்திருப்பதைச் சொல்லி காதல் மனத்தை அவள் வெளிப்படுத்திய போது தான் திக்குமுக்காடிப் போனேன். மேலும் சில நாட்கள் அவள் என்னைத் தங்கும் படிக் கேட்டுக் கொண்டாள். கழுகுமூக்கன் ஏதோ வேலை நிமித்தமாக அனுராதபுரத்திற்குச் செல்வதாகவும் அதுவரை என்னைச் சமந்த கூடத்தில் இருக்கும்படியும் கூறிவிட்டுப் போனார்

"அப்போது இலங்கையில் மாரிக்காலம் தொடங்கி விட்ட படியால் அடாது மழை பெய்யத் துவங்கியது. அந்த மழையைப் பொருட் படுத்தாமல் நாங்கள் இருவரும் இளம் காதலர்களாய் வனத்தில் திரிந்து மகிழ்ந்தோம். அவள் என் மீது காட்டிய அன்பு என்னை நெகிழ வைத்ததோடு அளவுக்கு மீறி நெருங்கவும் வைத்தது. உள்ளத்தால் ஒன்றிப் போன நாங்கள் உடலாலும் ஒன்றிப் போனதை நினைத்த போது நான் மிகவும் பயந்தேன். அவளோ எனக்கு ஆறுதல் கூறித் தேற்றினாள். கழுகுமூக்கன் வந்ததும் உண்மையைச் சொல்லி இருவரும் திருமணம் செய்து கொள்ளலாம் என்று தீர்மானித்தோம். ஆனால் மாதம் ஒன்றாகியும் கழுகுமூக்கன் திரும்பவில்லை. இதற்கிடையில் என் தந்தையிடமிருந்து செய்தி வந்தது. அவர் இமயத்திற்குப் படையெடுத்துச் செல்ல இருப்பதால் சேர நாட்டைப் பாதுகாக்க என்னை உடனடியாக வந்திருக்கத் திரும்பும் படி கட்டளையிட்டிருந்தார். என் நிலை மிகவும் சங்கடமாக இருந்தது.

"விஜயவல்லி என்னைச் சமாதானப் படுத்தினாள். என்னை வந்திருக்கச் செல்லும் படியும் கழுகுமூக்கன்

திரும்பியதும் அவளை அழைத்துக் கொண்டு சேர நாட்டுக்கு தான் வருவதாகவும் அங்கே திருமணம் செய்து கொள்வதாகவும் கூறினாள். எனக்கு மனம் கேட்கவில்லை. உடனே இலங்கையை விட்டு திருமணம் செய்து கொள்ளாமல் ஒரு பெண்ணை விட்டு விட்டுப் போவது என்பது பின்னாளில் ஏமாற்றுவதற்கு வழி வகுக்கும் என்று நினைத்த நான் விஜயவல்லியை அங்கேயே திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தேன். சமந்த கூடத்தின் உச்சியில் இருந்த புத்தர் காலடி பதிந்த இடத்தில் அவரது பிடி வகையை சாட்சியாகக் கொண்டு அவளைத் திருமணம் செய்து கொண்டேன் நான். அதற்குப் பிறகு தான் எனக்கு தைரியமே வந்தது. அவள் கூறிய படியே கழுகுமூக்கனுடன் வரச் சொல்லி விட்டு வஞ்சிக்குப் புறப்பட்டேன் நான்.

"ஆனால் வஞ்சிக்கு வந்து மாதங்கள் பல ஆகியும் விஜயவல்லி வரவில்லை. என்னாலும் இலங்கைக்குப் போக முடியவில்லை. இந்நிலையில் திடீரென ஒருநாள் வஞ்சியின் மலை அடிவார யாதவர் குடியிருப்புப் பகுதியிலிருந்து எனக்கொரு செய்தி வந்தது. அச்செய்தியின் பேரில் அங்கு சென்றேன் நான். அங்கே விஜயவல்லி நிறைமாத கர்ப்பிணியாய் வந்திருந்தாள். கூடவே கழுகுமூக்கனும் வந்திருந்தார்கள். அவர்களை அரண்மனைக்கு வரும்படி அழைத்தேன்.

"யாதவர்களோ எந்த நேரத்திலும் பிரசவம் ஆகிவிடும் என்பதால் அரண்மனைக்குப் போக வேண்டாம் என்றும் பிரசவம் ஆனபிறகு அழைத்துச் செல்லலாம் என்றும் கூறினார்கள். கழுகுமூக்கன் அரை மனதோடு சம்மதித்தார். நான் அரண்மனைக்குத் திரும்பினேன். அன்றிரவே விஜயவல்லிக்கு பிரசவம் ஆகி ஆண்குழந்தை பிறந்



விட்டதாகவும் செய்தி வந்தது. நேரே போன பிறகு தான் ஆண்மகனைப் பெற்றெடுத்த என் ஆருயிர் காதலி மரணமடைந்து விட்டாள் என்ற அதிர்ச்சியைக் கண்டேன் துடிதுடித்துப் போனேன். யாதவர்கள அக்குழந்தையை எடுத்துக் கொஞ்சினார்கள். மாட்டுத்தொழுவத்தில் பிறந்ததால அக்குழந்தைக்கு ஆபுத்திரன் என்று பெயர் வைக்கலாம் என்றார்கள். என் நினைவெல்லாம் விஜயவல்லியின் பேரிலேயே மூழ்கியிருந்தன. யாதவர்கள் நல்லமுறையில் அவளது உடலை அங்கேயே அடக்கம் செய்தார்கள்

"அந்த நிலையில் கழுகுமூக்கன் உரிமை பிரச்சனையை எழுப்பினார். குழந்தையை அரண்மனைக்குக் கொண்டு போய் வளர்த்து அது வயதுக்கு வந்தவுடன் சேரநாட்டு இளவரசு பட்டம் கட்ட வேண்டும் என்று சொன்னார். அதில் மறுப்பதற்கு எதுவும் இல்லாததால் நான் ஒப்புக்கொண்டேன். ஆனால் யாதவர்கள் தாயற்ற குழந்தையை அரண்மனையில் வளர்ப்பது சிரமம் என்றும் தாங்களே வளர்ப்பதாகவும் வேண்டிக் கேட்டுக் கொண்டார்கள். கழுகுமூக்கன் இதற்கு முதலில் எதிர்ப்பு தெரிவித்தாலும் பிறகு சம்மதித்தார்

"செங்குட்டுவா! குழந்தை எங்கு வேண்டுமானாலும் வளரட்டும். ஆனால் வளர்ந்தபின் அவன் தான் சேரநாட்டின் இளவரசனாகி உனக்குப் பின் நாட்டை ஆள வேண்டும். உன்னை நம்பி நான் செல்கிறேன்" என்று கடுமையாகக் கூறிவிட்டு இலங்கைக்குத் திரும்பினார்.

"ஆபுத்திரன் யாதவரிடம் வளர்ந்தாலும் நான் நிறைய போது கவனித்துக் கொண்டு வேண்டிய வசதிகளைச் செய்தேன். இதற்கிடையில் தந்தை இமயத்தை வென்று சேரநாட்டிற்குத் திரும்பினார். அந்த வெற்றியின்

அடையாளமாகவும் சோழநாட்டு அரசியல் திட்டங்களின் காரணமாகவும் சோழ அரசகுமாரி வேண்மாளை எனக்குத் திருமணம் செய்து வைத்தார். என்னால் அந்த நிலையில் எதுவும் செய்ய முடியவில்லை. விஷயம் அறிந்த கழுகுமுக்கன் இலங்கையிலிருந்து வந்து என்னை மிரட்டினான். அவனைச் சமாதானம் செய்த நான் நீதி தவறமாட்டேன் என்று அவனுக்கு உறுதி கூறி அமைத்து வைத்தேன். இந்நிலையில் வேண்மாளுக்கும் எனக்கும் குட்டுவன் பிறந்தான். சேரநாட்டிற்கு ஆண்வாரிசு கிடைத்து விட்டதாக என் மனைவியும் தந்தை சேரலாதரும் மிகவும் மகிழ்ந்தார்கள். குட்டுவனை தந்தையே வளர்த்தார். அந்த நிலையிலும் ஆபுத்திரனைப் பற்றி என்னால் தந்தையிடம் பேசமுடியவில்லை. எனவே ஆபுத்திரனை நல்லபடி வளர்த்து அளவுக்கு அதிகமாகவே அன்பையும் அக்கறையும் காட்டி அவனை வீரனாக்கினேன். அவன் வீரனாகவும் விவேகியாகவும் வளர்ந்தான். ஆரம்பத்திலிருந்தே அவனிடம் நற்பண்புகள் இயல்பாகவே அமைந்திருந்தன. தன் தாயின் குணங்கள் அவனிடம் பொருந்தி அவனும் சிறப்பானவனாக வளர்ந்தான். என் மகன் என்று கூறிக்கொள்ளாமல் அவனுக்கு எல்லா செல்வாக்கையும் அளித்து எனக்கு அடுத்தபடி சேரநாட்டில் அவன் தான் என்ற நிலையை உருவாக்கினேன்.

"இந்த நிலையில் தந்தையின் அந்திம நேரம் நெருங்கி விடவே இனியும் அவருக்கு ஆபுத்திரன் விஷயம் தெரியாமல் இருக்கக் கூடாது என்று கருதிய நான் அவரிடம் எடுத்துரைத்து அவனுக்குள்ள அரசுரிமையைச் சுட்டிக் காட்டினேன். அதை அவ்வளவாக விரும்பவில்லை என்பதை அவரது முகமே புலப்படுத்தியது. எதுவுமே கூறாமல் அவர் கண்ணை



மூடினார். நான் சேர மன்னனாக முடி சூடினேன். ஆபுத்திரன் விஷயத்தில் நீதி செய்யவும் முடிவெடுக்கவும் நான் தான் செயல்பட வேண்டும் என்பதை உணர்ந்தேன். என் முயற்சிக்கு முதல் தடை என் மகன் குட்டுவன். ஊரறிய உலகறிய நடந்த திருமணத்தின் மூலம் பிறந்தவன் அவன். எனக்குப் பின் முடி சூடும் உரிமை அவனுக்கே என்று. அதை எப்படி மாற்றுவது என்று யோசித்தேன். முதலில் அரசி வேண்மாளிடம் என் முடிவைக் கூறினேன். சோழர் குலக் கொழுந்தான அந்த தயாநிதி "நீதியைச் செய்யுங்கள். அது தான் காலத்தை வெல்லும்!" என்றாள் பரந்த மனப்பான்மையுடன். அடுத்து குட்டுவனிடம் பேச நினைத்தேன். அவனோ குறுகிய மனப்பான்மை கொண்டவனாகவும் பதவிக்காக அலைபவனாகவும் இருந்தான். எனவே அவனிடம் பேசினால் தீர்வு கிடைக்காது என்று பேசாமல் இருந்து விட்டு அதற்கு மாறாக அவனை புலவர் பெருமான் பரணருக்குப் பரிசாக அளித்தேன். நீங்களும் சரி பரணரும் சரி எல்லோரும் சரி குட்டுவனை புலவருக்கு பரிசு என்ற பெயரில் மாணாக்கனாக அனுப்பியிருப்பதாகவே கருதினீர்கள். ஆனால் உண்மை அதுவல்ல. மூத்தமகன் ஆபுத்திரன் முடிசூட அவன் தடையாக இருக்கக் கூடாது என்று உண்மையிலேயே தானமாகக் கொடுத்தேன். தானமாகக் கொடுத்த எதையும் திரும்பப் பெறக் கூடாது என்பது உங்களுக்குத் தெரியும். எனவே பக்குவம் இல்லாத பதவி ஆசை கொண்ட குட்டுவனை அகற்றினேன்.

"இந்நிலையில் ஆபுத்திரன் வெள்ளைத் தீவுக்கு கடத்தப்பட்டு அங்கே மாட்டிக் கொண்டான். அவனை மீட்க இரா மனிதர்களை அனுப்பினால் பிரச்சனையாகிவிடும் என்பதால் உங்கள் யாரிடமும் சொல்லாமல் நானே வெள்ளைத் தீவுக்கு

நேரில் சென்று அவனை மீட்டேன். மீட்ட பிறகு ஐம்பெருங்குழுவின் மூலம் அவனுக்குப் பிரச்சனை இருப்பது எனக்குத் தெரிந்தது. குழு எப்படியும் அவனுக்குச் சிறைத் தண்டனை விதித்து விடும் அப்படி விதித்து விட்டால் அவன் முடி சூடுவது இயலாமல் போய் விடும் என்பதால் நாடகத்தைத் துவக்கினேன். கொடு மலைத்தில் போய் மறைந்து கொண்டு நான் காணாமல் போய்விட்டதாக பரபரப்பை உண்டாக்கினேன். யாராலும் என்னைக் கண்டுபிடிக்க முடியாது என்ற நிலையில் என்னை மறைத்துக் கொண்ட நான் ஆபுத்திரனால் மட்டுமே என்னைக் கண்டுபிடிக்க முடியும் என்ற சூழ்நிலையை உருவாக்கினேன். அவன் என்னைக் கண்டு பிடித்து விட்டால் தண்டனையிலிருந்து அவன் விடுபடவும் வழி செய்தேன். பிறகு ஆபுத்திரனை என் இடத்திற்கு வரச் செய்து அவன் என்னைக் கண்டுபிடித்ததாக எல்லோரையும் நம்ப வைத்தேன். அவன் தண்டனையிலிருந்து விடுபடவும் செய்தேன்.

"கழுகு மூக்கனும் பங்களனும் பழங்காலத்து நண்பர்கள். ஆபுத்திரனின் பிறப்பு குறித்து பங்களனிடம் கழுகுமூக்கன் அரைகுறையாக ஏதாவது கூறியிருக்க வேண்டும். ஆபுத்திரன் பங்களனிடம் சிக்கிய போது அவனது பிறப்பு ரகசியம் தனக்குத் தெரியும் என்று ஏதோ சொல்லி மனத்தை சலனப்படுத்தி விட்டான். ஆபுத்திரனுக்கு தன் பிறப்பு விஷயத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது என்ற சந்தேகம் உண்டாகி விடவே யாரிடமும் அது பற்றி பிரஸ்தாபிக்காமல் இலங்கைக்குச் சென்ற போது கழுகுமூக்கனைத் தேடிச் சென்றிருக்கிறான். அதே சமயத்தில் கழுகுமூக்கன் சேரநாடு வந்து விடவே ஏமாற்றத்துடன் திரும்பிய ஆபுத்திரன் வஞ்சியில் அவனைச்



சந்தித்திருக்கிறான். பிறப்பு ரகசியத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் அதை பகிரங்கப் படுத்தாமல் அதே சமயம் கழுகு மூக்கனால் பிரச்சனை எழாமல் அவனைச் சமாதானப் படுத்தி விட்டு போர் ஆயத்தங்களில் இறங்கியிருக்கிறான். என்னுடைய மகன் என்று தெரிந்த பின்பும் அதை அமைதியாகவே வைத்துக் கொண்ட அவன் தன் ஆருயிர் காதலி - பரணரின் மகள் பூங்கொடி வெள்ளைத் தீவுக்கு கடத்தப் பட்டாள் என்று அறிந்தும் அதையும் அமைதியாகவே வைத்துக் கொண்டு போரில் முழுமூச்சாய் இறங்கியிருக்கிறான். அங்கே பங்களனும் உதயணனும் பூங்கொடி பணயப் பொருளாக வைத்திருப்பதாகச் சொல்லி ஆபுத்திரனை சரணடையும் படியும் போரை கைவிடும் படியும் மிரட்டியிருக்கிறார்கள். அவனோ பூங்கொடியை கைவிட்டானே தவிர போரையோ என்னையோ கைவிடவில்லை. பூங்கொடியின் சடலத்தை வைத்துக் கொண்டு எனக்கு ஆறுதல் கூறினானே தவிர தன் சோகங்களையெல்லாம் தனக்குள்ளேயே அடக்கிக் கொண்டான். வெற்றியை நமக்குத் தந்து சோகத்துடன் சேரர் தலைநகருக்கு வந்து நாட்கள் மூன்று ஆகியும் பிறப்பு ரகசியம் பற்றி என்னிடம் பேசவில்லை. பதவி கோரி விண்ணப்பம் விடுக்கவில்லை. அமைச்சரே, நன்றாக யோசித்துப் பாரும். இந்தச் சேர அரியணையில் தொடர்ந்து அமர எனக்கு தகுதி இருக்கிறதா? ஆபுத்திரனை அரியணையில் அமர்த்தச் சொல்கிறேனே அதில் தவறு இருக்கிறதா? சொல்லுங்கள்"

மன்னனின் விவரங்களைக் கேட்டு மலைத்துப் போய் நின்ற அமைச்சர் சில நிமிடங்களுக்குப் பிறகே தெளிவடைந்து "மன்னர் மன்னா, தங்களைக் காட்டிலும் நீதிமான் வேறு யார் இருக்க முடியும்? மாவீரர்கள் எப்போதுமே நாட்டிற்காகத்தான்

வாழ்வார்களேயன்றி தனக்காக வாழ்வதில்லை. தாங்கள் காதல் மணம் புரிந்து இலங்கையில் இருந்தீர்கள். அப்போது நாட்டை ஆள அழைப்பு வந்த போது நாட்டை மதித்துத் தான் வந்திருக்கிறீர்கள். காதலை இரண்டாம் பட்சத்தில் தான் வைத்தீர்களே தவிர கழுகு மூக்கன் வாட்டும் என்று காத்திருக்கவில்லை. தங்கள் புதல்வரும் அப்படித் தான். நாட்டுக்காகப் போரிடும் போது காதலிக்காக அவர் கண்கலங்க வில்லை. எது தன் கடமையோ அதைச் செய்தார். தங்கள் மீது எந்த தவறும் இல்லை. தவறு என்று இருந்தால் அது என் மீது - சேனாதிபதி மீது - ஒற்றர்கள் மீது தான். பூங்கொடி காணவில்லை என்றால் தேடும் படித் தாங்கள் கட்டளை தான் இடமுடியுமே தவிர தாங்களே தேடுவதில் ஈடுபடமுடியாது. ஆகவே எப்படிப் பார்த்தாலும் தவறில்லாத நிலையில் தாங்கள் முடி துறக்க வேண்டாம். நீண்ட காலம் மன்னராய் இருந்து இந்த நாட்டைத் தாங்கள் மேன்மையுறச் செய்ய வேண்டும். ஆபுத்திரர் தங்களது மூத்த புதல்வராக இருக்கும் பட்சத்தில் அவருக்கு இளவரசர் பட்டம் கட்டுங்கள். தங்களுக்குப் பின்னால் அவர் முடி சூடட்டும். அதுவே முறை" என்றார்.

"நல்லது அமைச்சரே, அதற்கான ஏற்பாடுகளையாவது உடனே செய்யுங்கள்" என்றான் சேரமன்னன்.

ஆனால் ஏற்பாடுகள் சிறப்பாக நடந்தனவே தவிர ஆபுத்திரனைக் காணவில்லை.

மாறாக அவனது ஓலை மட்டும் வந்து சேர்ந்தது.

"சேரர் குலம் தழைக்க வந்த மாமன்னவா!

ஆபுத்திரனின் பணிவான வணக்கங்களை ஏற்றுக் கொள்ளுங்கள்.



தங்களைத் தந்தையாய் பெற்றது எழுபிறப்பிலும் எனக்கு கிடைக்காத பாக்கியம்.

இதை விட எனக்கு வேறு என்ன வேண்டும்?

பதவி எனக்கு எதற்கு?

பதவியில் இருப்பவர்களை விட பதவியில் இல்லாத எனக்கு எல்லா உரிமைகளையும் வழங்கியவர் தாங்கள்.

இது வேறு யாருக்குக் கிடைத்திருக்கிறது!

எந்த அளவிற்கு நீங்கள் எனக்கு நீதி செய்ய பாடுபட்டிருக்கிறீர்கள் என்பதை என்னால் உணர முடிகிறது.

எனக்கு எந்தப் பதவியையும் அளிக்க தங்களால் முடியும் என்பதால் தான் நான் தங்களை விட்டுப் போகிறேன்.

நான் அங்கிருந்தால் நல்ல காரியங்கள் தடைப்பட்டுக் கொண்டிருக்கும்.

நான் எப்போதும் தங்களுக்குச் சேவகனாய் பணிபுரிய வேண்டுமேயல்லாமல் ஒருபோதும் தொந்தரவாக இருந்து விடக்கூடாது.

எனக்காகத் தாங்கள் தங்கள் அருமைப் புதல்வன் குட்டுவனை புலவருக்கு தானம் செய்தீர்கள்.

அது உங்கள் நீதி.

சேர நாட்டிற்கு அது அநீதி.

அதோடு குட்டுவர் இப்போது இளவரசர் பட்டத்திற்கு உரியவராய் இருக்கிறார்.

தானமாக தரப்பட்ட அவரைப் புலவர் பெருமானிடம் யாசித்துப் பெற்று விடுங்கள்.

அது தான் நீதி. நியாயம்.

மலையுச்சியில் மலர்ந்த தங்கள் வாழ்வும் மாட்டுத் தொழுவத்தில் மலர்ந்த என் வாழ்வும் வரலாற்றில் இடம் பெறாமலேயே போகட்டும்.

அது சாத்தியமாக வேண்டுமென்றால் நான் சேரநாட்டை விட்டு மறைவதே சரி.

உடலால் நான் மறைந்து விட்டேனே தவிர உள்ளத்தால் அல்ல.

அது தங்களை என்றும் நினைக்கும்.

என் உள்ளமே உங்களுடையது தான். உங்கள் ரத்தத்தில் இருப்பது தான்.

எல்லோரும் ஏற்பாடு செய்திருக்கும் விழாவில் குட்டுவனுக்கு இளவரசர் பட்டத்தைச் சூட்டுங்கள்.

அது தான் தாங்கள் எனக்குச் செய்யும் நீதி.

- ஆபுத்திரன்



ஓலையைப் படித்த சேரமன்னன் அதை அமைச்சரிடம் கொடுத்தான். படித்த அவர் அதை சேனாதிபதியிடம் கொடுத்தார். அவன் அதை சஞ்சயனுக்கும் சஞ்சயன் அதை



நீலனுக்கும் கொடுத்தார். பிறகு அந்த ஓலை பரணருக்கு கொண்டு செல்லப்பட்டது.

"ஆபுத்திரனை தேடிப் பிடித்து விடலாம். தங்கள் விருப்பம் போல் முடி சூட்டி விடலாம்" என்றார்கள் அமைச்சர் முதலியோர்.

"ஆமாம். காணாமல் போன என்னைக் கண்டு பிடித்து விட்டீர்கள்: பூங்கொடியைக் கண்டு பிடித்து விட்டீர்கள். இப்போது ஆபுத்திரனைக் கண்டு பிடித்து விடப் போகிறீர்களாக்கும்" என்று நினைத்துக் கொண்டானோ என்னவோ -

சேரமாமன்னன் செங்குட்டுவனின் இதழ்களில் இகழ்ச்சி நகை உண்டாயிற்று.

"வேண்டாம். எல்லோரும் என் மகனின் வேண்டுகோளை நிறைவேற்றுங்கள்" என்று கூறிவிட்டு பரணர் இல்லம் நோக்கிச் சென்றான் சேரமன்னன்.



அராபியக் கடலில் மேற்கே சென்று கொண்டிருந்த அந்த வணிகர் கப்பலின் மேல் தளத்தில் பாய்மரத் தண்டில் சாய்ந்த படி தன்னை மறந்தவனாய் நின்றிருந்தான் வஞ்சிக் கோட்டை வாலிபனான ஆபுத்திரன். அவன் பார்வை கடலை நோக்கியிருந்தாலும் ஏதோ சூன்யத்தைப் பார்ப்பது போலவே இருந்தது. சேர நாட்டுச் சொந்தங்களை விட்டு விட்டு அனாதையைப் போல் போகிறாயே என்று கோபித்துக்

கொண்டது போல் கடல்காற்று சீறி என்று அவனது உடலை குத்துவது போல வீசியது.

"என்னை விட்டுவிட்டுப் போகிறீர்களா?" என்று கேட்டாள் பூங்கொடி.

"நீதானே பூங்கொடி என்னை விட்டுப் போய் விட்டாய்?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"உடல் தான் போய் விட்டது பிரபு. உள்ளம் எங்கும் போகவில்லை. அந்த உள்ளம் உருவாக்கியிருந்த உறவு எங்கும் போகவில்லை. அது உங்களுடன் தான் இருக்கிறது. உங்களுடன் தான் எப்போதும் இருக்கும்" என்று சொன்னாள் பூங்கொடி.

"உன் நினைவைச் சுமக்கத் தான் பிறவி எடுத்தேனா பூங்கொடி? உன்னை உண்மையாக நேசித்ததற்கு இதுதான் பரிசா?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"இது வருந்தக் கூடிய விஷயம் என்றா நினைக்கிறீர்கள்? அர்ப்பணித்து விட்ட பெண்ணோடு உடலால் வாழ்வதை விட உள்ளத்தில் நினைவாய் வாழ்வது தானே நிரந்தரம்?"

"உண்மை தான் பூங்கொடி. உன் நினைவு தான் இப்போது என் ஜீவனாகவே இருக்கிறது. அந்த நினைவு நீங்கி விட்டால் நானும் இந்த உடலை விட்டுப் போய் விடுவேன்"

"அப்படி நீங்கள் போய்விடக்கூடாது. நீங்கள் நெடுங்காலம் இருந்து சாதிக்க வேண்டியவை நிரம்ப உள்ளன. அவை ஈடேறும் வரை உங்கள் உள்ளத்தை விட்டு நீங்க மாட்டேன். உங்களது முயற்சிகளில் தான் தூண்டுகோலாய் இருப்பேன். எனக்காக நீங்கள் கண்கலங்குவது என் பாக்கியம்



என்றாலும் நீங்கள் கலங்குவதைத் தாங்க என்னால் இயலாது. எந்த நிலையிலும் கலக்கமின்றி தலை நிமிர்ந்து நீங்கள் வாழ வேண்டும். மாபெரும் சபைகளில் நீங்கள் நடக்க உங்கள் தோளில் மாலைகள் விழ வேண்டும். மாற்றுக் குறையாத மன்னவன் இவன் என்று எல்லோரும் போற்றிப் புகழ வேண்டும்" -

தனது மனத்தில் நடந்த இந்த உரையாடலின் போது ஆபுத்திரனின் கண்கள் கலங்கித் தான் இருந்தன. உரையாடல் முடிந்ததும் கண்களைத் துடைத்துக் கொண்ட அவன் தன் எதிரே வில்லவன் நிற்பதைக் கண்டு "நீயா?" என்று கேட்டான்

"ஐயா, தங்களுடன் இலங்கைப் பயணத்திற்குத் துணையாக வந்தேன். தங்கள் குணமும் செயலும் எனக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டன. இனி என் ஆயுட்காலம் வரை உங்களுக்குப் பணியாளாக இருக்க வேண்டும் என்ற தீர்மானத்துடன் நானும் இந்த மரக்கலத்தில் ஏறிவிட்டேன்" என்றான் வில்லவன்.

"மகிழ்ச்சி வில்லவா. எப்போதும் நீ என்னோடு இரு. பணியாளாக இல்லை. நண்பனாக" என்றான் ஆபுத்திரன்.

கண்கள் பனிக்க அவன் கைகளைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டு வில்லவன் கீழ் தளத்திற்குப் போனான்

"வில்லவன் போதுமா? நான் வேண்டாமா?" என்று கேட்டபடி அங்கே பிரவேசித்தாள் செளமியகுமாரி

பளிச்சென்ற நகைகளையும் அந்த நகைகளையே விலைமதிப்பில்லாத படிச் செய்து விடும் புன்னகையுடனும் வந்து அவன் முன்னே கைகளை முன்னே கோர்த்தபடி

## சௌமியகுமாரி





நின்றாள் சௌமியகுமாரி. அவளது வளையல்கள் அவளோடு சேர்ந்து புன்னகை செய்வது போல் கலகலத்தன.

அவளை கண்டு சிறிது நேரம் எதுவும் பேசாமல் அவளையே பார்த்தான் ஆபுத்திரன்.

அவன் பேசுவதை விட பேசாமல் இப்படி பார்த்த விதம் அவளுக்குப் பரமானந்தமாக இருந்தது.

"இன்னுமா என்னைத் தொடர்கிறாய்?" - என்று கேட்டான் ஆபுத்திரன் சாதாரணமான குரலில்.

"இன்னுமா என்றால்?" என்று சற்றே வியந்தவளாய் கேட்டாள் சௌமியகுமாரி.

"உனக்கு உண்மையிலேயே புரியவில்லையா சௌமியகுமாரி?"

"அரசகுமாரரே. வெள்ளைத் தீவில் நாம் சந்தித்த அந்த நாளை எண்ணிப் பாருங்கள். என்னை மணந்து கொள்ளும் படி நான் வற்புறுத்திய போது நீங்கள் மறுக்கவில்லை. எனக்கு காரணம் தெரியவில்லை. நீங்கள் வஞ்சிக்கு வந்து விட்ட பின் நானும் வந்தேன். உங்கள் மனத்தில் ஏற்கனவே பூங்கொடி இருக்கிறாள் என்பதை அறிந்தேன். உங்கள் மனத்திலிருந்து அவளை அகற்றி விட்டு நான் இடம் பிடிக்கிறேன் என்று உங்களிடமே சவாலிட்டேன். பூங்கொடியிடம் சென்று உங்களை மறந்து விடச் சொல்லி பலவகையில் அச்சுறுத்தினேன். அந்த உத்தமியோ கோபப்படவில்லை. உங்களுடன் வாழும் பிராப்தம் எனக்கிருந்தால் அது நிச்சயம் நடக்கும் என்று அப்பழுக்கில்லாத உள்ளத்துடன் சொன்னாள். அப்படிப் பட்ட ஒரு பெண்ணை - பெண் தெய்வத்தை நான்

அது வரை கண்டதுமில்லை. காணப் போவதுமில்லை. சொல்லப் போனால் பூங்கொடியோடு போட்டி போடும் எண்ணம் எனக்குக் குறைந்து கொண்டு வந்தது. ஆனால் அத்தெய்வத்தைப் பாதகி பவானி வெள்ளைத் தீவுக்கு கடத்திக் கொண்டு போனாள். நானோ எனது பாதை சீராகி விட்டது என்று மகிழவில்லை. எப்படியாவது அவளைக் காப்பாற்றி உங்களுடன் சேர்க்கவே வெள்ளைத் தீவுக்குச் சென்று தீவு வாசிகளின் துணையோடு பலவழிகளில் முயன்றேன். நம் இருவரது துரதிர்ஷ்டம், காப்பாற்ற முடியாமல் தெய்வங்களாலேயே கைவிடப் பட்டாள் என் சகோதரி. அவளும் இனி இல்லை என்ற நிலையில் சேரநாட்டின் உன்னத அரச பதவியையும் அன்புத் தந்தையான சேரமா மன்னரையும் மக்களையும் துறந்து விட்டு அனாதரவாய் இக்கொடிக்கம்பத்தில் நிற்கும் தங்களை நான் நாடுவது தவறா? இப்போது உங்களுக்கு துணை ஏது?" என்று நெகிழ்ந்த குரலில் கேட்டாள் சௌமியகுமாரி.

"சௌமியா, ஒருத்தி இறந்து விட்டால் அவளை மறந்து விட வேண்டுமா? அதுவும் பூங்கொடியை?" என்று கேட்டான் ஆபுத்திரன்.

"தங்களுக்குத் தெரியாதா? இறந்தவர்களை மறப்பது தானே இயற்கை நியதி? அப்படி மறந்தால் தானே வாழ்க்கை நடக்கும்? இறந்தவர்களை யெல்லாம் சம்மந்தப்பட்டவர்கள் மறக்காமலேயே இருந்தால் உலகம் என்னாகும்?" என்று கேட்டாள் சௌமியகுமாரி.

"சரியாகத் தான் சொன்னாய் அரசகுமாரி. ஆனால் உடலோடு இல்லாமல் போனாலும் பூங்கொடி என் உள்ளத்தோடு வாழ்ந்து கொண்டு தான் இருக்கிறாள்.



சொல்லப் போனால் அவள் என் ஜீவனாக இருக்கிறாள்! அந்த பவித்திரமான உறவை நான் எப்படித் துறக்க முடியும்?"

"இப்போது நிச்சயமாக முடியாது பிரபு. ஆனால் எப்போதும் முடியாது என்று சொல்ல முடியாது."

"சௌமியா, உன்னை நான் தாழ்வாக நினைக்கிறேன் என்று நினைக்காதே. நீயும் பூங்கொடிக்கு ஈடானவள் தான். அப்பழுக்கற்றவள் தான். அப்பூங்கொடி கூறியதையே உனக்கும் சொல்கிறேன். உனக்கும் எனக்கும் திருமண பந்தம் உண்டு என்று பிராப்தம் இருந்தால் அது நடக்காமல் போகாது. கனத்த இதயத்துடன் இருக்கும் என்னைக் கட்டாயப் படுத்தாதே."

"மிக்க மகிழ்ச்சி பிரபு. அப்படியொரு பிராப்தம் உண்டாக வேண்டும் என்று நான் தவமிருப்பேன்!" என்று கூறிவிட்டு மெதுவாக நடந்து மறைந்தாள் சௌமியகுமாரி.

"இறைவா, இந்தப் பெண்ணைக் காப்பாற்று" என்று வேண்டிக் கொண்டது ஆபுத்திரனின் இதயம்.

அதை ஆமோதிக்க வந்தது போல் வானத்தில் கணக்கற்ற நட்சத்திரங்கள் தோன்றலாயின.

**நிறைந்தது**

15

# முசிறியில் அகழ்வு ஆராய்ச்சி செய்தால் இலங்கையின் வரலாறு தெரியவரும்

## பகுஜன் சமாஜ் கட்சி தலைவர் நம்பிக்கை



# பின்கதை

செங்குட்டுவனுக்கு இளவரசு பட்டம் கட்டப் பட்டது.

செங்குட்டுவன் தான் கூறியது போல சீத்தலைச் சாத்தனார் தலைமையில் பரணரின் செய்யுளை அரங்கேற்றினான்.

அரங்கேற்றம் முடிந்த ஒருசில தினங்களில் பரணர் காலமானார்.

அப்போது மதுரையிலிருந்து வந்த மறையவனான மாடலன், தான் கோவலனின் நண்பன் என்று அறிமுகப் படுத்திக் கொண்டு கோவலன் மதுரையில் கொலை செய்யப்பட்டதையும் அச்செய்தி கேட்டு வெகுண்ட கற்புக் கரசியான அவனது மனைவி கண்ணகி தலைவிரி கோலமாக பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனிடம் வழக்குரைத்து வெற்றி பெற்றதாகவும் தன் மீது குற்றமிருந்ததால் பாண்டிய மன்னன் இறந்து விட்டதாகவும் அவனைத் தொடர்ந்து அரசி கோப்பெருந்தேவியும் உயிர் துறந்ததாகவும், கண்ணகி கோபாவேசப்பட்டு மதுரை மாநகரை 'பற்றி எரிக' என்று சொல்லி சொற்களாலேயே எரியூட்டியதாகவும் கூறினான்.

அன்றிரவு வானத்தில் அதுவரை தெரிந்த வால் நட்சத்திரம் மறைந்து போயிற்று.

ஒருவாரம் கழித்து மலைவளம் காண சேரமன்னனும் அரசியும் சென்ற போது குறவர்கள் அவனிடம் வந்து யாரோ ஒரு பெண்மணி தலைவிரி கோலமாக அங்கே வந்து

நின்றதாகவும் வானத்திலிருந்து புட்பக விமானம் ஒன்று வந்து அவனை ஏற்றிக் கொண்டுச் சென்றதாகவும் சொன்னார்கள்.

பிறகு தேவந்தி என்ற பெண் அருள் வாக்கு சொல்ல முற்பட்டு வானில் எழிச் சென்ற கற்புடைத் தெய்வம் கண்ணகியின் கதையைச் சொல்லி மறைந்ததும், பத்தினி தெய்வமான அக்கண்ணகிக்குச் சிலை எடுக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். சிலை அமைப்பதற்கான கல்லை இமயத்திலிருந்து எடுத்து வருவது சிறப்பு என்றான் செங்குட்டுவன்.

அச்சமயத்தில் சேனாதிபதியான வில்லவன் கோதை இமயமலைப் பகுதியில் அரசோச்சும் கனகன் விஜயன் ஆகிய இருவரும் சேரரையும் தமிழ் மன்னர்களை இகழ்ந்து பேசுவதாகக் குறிப்பிடவே இமயத்திற்கு படையோடு சென்று வட மன்னர்களை வென்று கண்ணகிச் சிலைக்கான கல்லை அவர்கள் தலையிலேயே வைத்து எடுத்து வர வேண்டும் என்று தீர்மானமாகியது.

அடுத்த சில தினங்களிலேயே சேரன் செங்குட்டுவன் பெரும் படையுடன் படையெடுத்துச் சென்று வடமன்னரை வென்று இமயமலையிலிருந்து கல்லெடுத்து வந்து சேரநாட்டில் கண்ணகிக்குச் சிலையும் கோயிலும் எடுத்தான். அந்த விழாவிற்கு இலங்கை வேந்தன் கயவாகுவும் வந்திருந்தான்.

இந்த விவரங்கள் இன்னும் விளக்கமாக சிலப்பதிகாரத்தில் வஞ்சிக் காண்டத்தில் தெரிவிக்கப் பட்டுள்ளன.



சங்க நூல்கள் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை என்ற இரு பிரிவுகளில் அடங்கும். அதில் எட்டுத் தொகை பிரிவில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்கள் அடங்கும்.

இந்த எட்டுத் தொகை நூல்களில் பதிற்று பத்து என்பது சங்க கால சேரமன்னர்களைப் பற்றி பல்வேறு புலவர்கள் எழுதிய செய்யுட்கள் ஆகும். பத்து சேரமன்னர்களைப பற்றிச் சொல்லும் நூல் என்பதால் இதற்கு 'பதிற்றுப் பத்து' என்று பெயர் வந்தாலும் முதல் இரண்டு மன்னர்களைப் பற்றிய பாடல்கள் கிடைக்கப் பெறாததால் மீதியுள்ள எட்டு மன்னர்களைப் பற்றிப பாடிய செய்யுட்களே கிடைக்கப் பெற்று பதிவு செய்யப் பட்டுள்ளன.

இதில் ஐந்தாம் பத்து சேரமாமன்னன் செங்குட்டுவனது ஆட்சியின் மாட்சிமை பற்றி எடுத்துரைக்கிறது. இந்தச் செய்யுளை இயற்றியவர் புலவர் பரணர் ஆவார்.

இரும்பனம் புடையல் ஈகை வான்கழல்
மீன்றேர் கொட்பிற் பனிக்கயம் மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசேர் உடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
யன்னோர் பெரும நன்னுதல் கணவ
அண்ணல் யானை அடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கைத்
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து
கோடியர் பெருங்கிளை வாழ ஆடியல்
உளையவிர் கலிமாப் பொழிந்தவை எண்ணின்
மன்பதை மருள அரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணியர்
ஒளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்த
நின், தேரொடு சுற்றம் உலகுடன் மூய
மாயிருந் தெண்கடன் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசிர் உடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே.



கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசன் மேவற் சேயிழை மகளிர்
உரல்போற் பெருங்கால் இலங்குவாள் மருப்பிற்
பெருங்கை மதமாப் புகுதரின் அவற்றுள்
விருந்தின் வீழ்பிடி எண்ணுமுறை பெறாஅக்
கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
இரும்பணை திரங்கப் பெரும்பெயல் ஒளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ
அருவி யற்ற பெருவறற் காலையும்
அருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடிஏர் பூட்டுநர் கடுக்கை மலைய
வரைவளி வதிர்ச் சினை முழங்கிப் பொலஞ்சிறந்
நார்சுவி வானம் துளிசொரிந் தாஅங்கு
குறுவ ரார ஓம்பா துண்டு
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி உழிஞை
வென்றி மேவல் உருகெழு சிறப்பிற்
கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டு களம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே என்றும்

இந்த நாவலைப் புனைவதற்கு உதவிய நூல்களின் பட்டியல்

அகநானூறு

புறநானூறு

பதிற்றுப் பத்து

சிலப்பதிகாரம்

மணிமேகலை

வஞ்சிக் காண்டம் by முனைவர். ந. பிச்சமுத்து சேரமன்னர் வரலாறு by ஒளவை துரைசாமிப் பிள்ளை 3000 ஆண்டுகள் தமிழனின் கடல்வழிவாணிகம் by ஆர். என். சாமி

சேரன் வஞ்சி - by டாக்டர் என். கிருஷ்ணசாமி ஐயங்கார்

தமிழர் வரலாறு - by பி. டி. சீனுவாச ஐயங்கார்

(தமிழில் புலவர். கா. கோவிந்தன்)

கொங்கு நாடும் துளு நாடும் by மயிலை சீனி. வேங்கடசாமி

1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் by கனகசபைபிள்ளை (தமிழில். கா. அப்பாதுரை)

தமிழகம் ஊரும் பேரும் by ரா. பி. சேதுப்பிள்ளை

சேரன் செங்குட்டுவன் by மயிலை. சீனி. வேங்கடசாமி

சமணமும் தமிழும் by மயிலை. சீனி. வேங்கடசாமி



தமிழர் வீரம் by ரா. பி. சேதுப் பிள்ளை

ஆற்றங்கரையினிலே by ரா. பி. சேதுபபிள்ளை

பாண்டியர் வரலாறு (முதல் பாகம்) by டி. ராசசேகர தங்கமணி

தென்னாட்டு போர்க்களங்கள் by கா. அப்பாதுரை சுத்திர நிதி

சேரன் செங்குட்டுவன் by கூர பத்மன்

குமரி முதல் இமயம் வரை by டாக்டர். புரட்சிதாசன்

சிலம்பின் காலக்கணிப்பு by முனைவர். இரா. மதிவாணன்

சங்ககால வரலாற்று ஆய்வுகள் by மயிலை. சீனி. வேங்கடசாமி

அபிதான சிந்தாமணி by ஆ. சிங்காரவேலு முதலியார்.

கடல்வழி வணிகம் by நரசய்யா

கடைக் கழக நூல்களின் காலமும் கருத்தும் by பேராசிரியர் முனைவர் இரா. மதிவாணன்

தொல்லியல் நோக்கில் சங்ககாலம் by முனைவர். கா. ராஜன்.

இந்தியாவில் நாகவழிபாடு by ஜி. ரவீந்திரன் நாயர்

பெரிப்ளுஸ் by வி. எஸ். வி. ராகவன்.

Kerala History and its makers (by) Prof. A. Sreedaran Menon

History of Kongu Part I pre Historic Period to 1300 AD

by V. Ramamurthy

Ilango Adigal by Mr. Varadarajan

South India and Srilanka by Dr. K. K. Pillai

Foreign Notice of South India by K. A. Nilankanta Sastri

Maritime History of South India by G. Victor Raja Manickam and V. S. Arul Raj







இறைவா! என்னிடமிருந்து
என்னைக் காப்பாற்று. மற்றவர்களை
நான் பார்த்துக் கொள்கிறேன்